ISBN : 81-7090-310-6

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 250

திருவள்ளுவராண்டு 2033 மார்கழி - திசம்பர் 2002

| | | |
|---|---|---|
| நூல் | : | சைவ சித்தாந்த சாத்திர வரலாறு |
| ஆசிரியர் | : | க. வெள்ளைவாரணனார் |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | சமயம் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு 2002 |
| பக்கம் | : | viii + 832 = 840 |
| தாள் | : | டி.என்.பி.எல்.மேப்லித்தோ |
| அளவு | : | டெம்மி 1/8 |
| நூற்கட்டுமானம் | : | சாதாக்கட்டு |
| விலை | : | உரூ. **200-00** |
| படிகள் | : | 1000 |
| அச்சு | : | தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி அச்சகம், தஞ்சாவூர். |



# தமிழ்ப் பல்கலைக்கழகம்

தஞ்சாவூர் - 613 005 - இந்தியா

முனைவர் இ. சுந்தரமூர்த்தி

துணைவேந்தர்

## அணிந்துரை

மக்களை மக்களாக வாழ்விக்கவே எல்லாச் சமயங்களும் முற்படுகின்றன. வாழ்வின் அருமை சமய நெறியினாலே முழுமையாக உணரப்பெறும் என்பதைப் பலரும் நம்புகின்றனர். எனவே, சமய தத்துவ ஆராய்ச்சி மக்கட்குப் பலவகைகளிலும் வேண்டப்படுவதொன்றாகிறது. மனிதனை மனிதனாக வாழச்செய்து தெய்வமாக உயர்த்தும் இப்பணியை மேற்கொள்ளுதல் அறிவுடைப் பெருமக்களின் தலையாய கடமையாகிறது.

தத்துவ உணர்வு வளர்ச்சியடையுமானால், நாட்டில் மக்களிடையே ஏற்படும் பல்வேறு குழப்பங்களும் தீரும். மனம் தெளிவு அடையும். நலங்கள் பல விளையும். இவ்வகையில் இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக எண்ணும் மனநிலையை மக்கள் பெற வேண்டும் என்பது திருவள்ளுவரின் கருத்தாகும்.

"இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன்."

என்றும்,

"இன்பத்துள் இன்பம் விழையாதான், துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்."

என்றும் இதனை விளக்குவர்.

இன்பத்தை விரும்பாமல் துன்பத்தை இயற்கையானது என்று தெளிந்தவன் துன்பம் அடைய மாட்டான் என்பதும், இன்பம் வந்தபோது அதை மனத்தான் விரும்பாதவன், துன்பம் வந்த காலத்திலும் அதற்காக மனம் வருந்தமாட்டான் என்பதும் குறட்கருத்துக்களாம். இவற்றை அடிப்படையாகக் கொண்டவையே நம் சமய நூல்கள்.

மெய்யுணர்வு தலைப்பட்டவர்கள் இன்பத்தையும் துன்பத்தையும் ஒன்றாகவே கருதுவர். அத்தகையவர் கடமை உணர்வுகளில் தவறாத வாழ்வினை உடையவராவர்; உரிமை என்ற உணர்வே இல்லாதவராயிருப்பர். அவர்களே என்றும் இன்பம் பெருகும் இயல்பினராய் விளங்குவர். 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' எனப் பாடிய அப்பரடிகள் போன்றோர் இந்நிலையில் வாழ்ந்து காட்டிய பெருமக்களாவர்.

இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக எண்ணும் இந்நிலை பெறுதல் எளிதல்ல. தத்துவ உணர்வுகளை நெறியாக வளர்ப்பதனாலேயே அதனை மக்களிடையே உண்டாக்க முடியும். இவ்வகையில், சிவனை வழிபடும் சிவநெறியான சைவமே மிகப் பழமையானது என்பதை மொகஞ்சதாரோ, ஹரப்பா போன்ற இடங்களில் காணக் கிடைத்த அகழ்வாய்வுப் பொருள்களாலும் அறிகிறோம்.

சிவநெறியிற் கொள்ளப்படும் அடிப்படை உண்மைகளையும் கொள்கைகளையும் முறைப்படுத்தி உணர்த்தும் நூல்கள் சாத்திரங்கள் எனப்பெறும். சாசனஞ் செய்வது சாத்திரம் என்பர். சாசனம் - ஒழுங்கு, ஆணை. பொருள்களை ஒழுங்குபடக் கூறுதல் பற்றியும், ஆசான் வடிவில் தோன்றி இறைவன் தன் ஆணையை இந்நூல்கள் வடிவில் வைத்தல் பற்றியும் இவை சாத்திரம் எனப்பெறும். இவ்வியல்புள்ள, ஞான மெய்ந்நெறி உணர்த்தும் தமிழ் நூல்களுள் முதன்மையான முழுநூல் திருமூலரின் திருமந்திரமாகும்.

எட்டாம் நூற்றாண்டு முதலாகவே நம் நாட்டில் சமயக் கொள்கைகளிலே குழப்பங்கள் பல மலிந்திருந்தன. அக்குழப்பங்களை நீக்கி மக்கள் தெளிவுணர்வு பெற்றுய்ய வேண்டுமென்னும் நற்சிந்தை கொண்ட சிவாநுபூதிச் செல்வர்கள் அருளிச்செய்த செந்தமிழ் நூல்கள் பதினான்கு ஆகும். அவை, திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞான சித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, உண்மை நெறி விளக்கம், கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, சங்கற்ப நிராகரணம் என்பனவாம்.

மக்கள் பொய்யை நீங்கி மெய்யில் நிற்குமாறு, மெய்யைக்கண்டு காட்டுதலால் 'மெய்கண்ட நூல்கள்' எனவும், மறைமுடிவின் சித்தாந்தம் கூறும் சிவாகம ஞானபோதப்பொருள் உணர்த்துதல் பற்றிச் 'சைவ சித்தாந்த சாத்திரங்கள்' எனவும் இந்நூல்கள் வழங்கப் பெறுகின்றன.

சைவ சமய மெய்ந்நூல்களாம் இப்பதினான்கின் பொருளமைப்பினை வரலாற்று நோக்கில் ஆராய்ந்து 'சைவ சித்தாந்த சாத்திர வரலாறு' என்னும் தலைப்பிலான இவ்வரிய நூலைப் படைத்துள்ளார், திருமுறைத் தமிழ்மணி, சித்தாந்தச் செம்மல், கலைமாமணி, பேராசிரியர் க.வெள்ளைவாரணனார் அவர்கள்.

தொல்காப்பியம், சங்க இலக்கியம், திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, திருமந்திரம், திருமுறைகள் ஆகிய பண்டைத் தமிழ் நூல்களில் பொதிந்துள்ள நுண்பொருள்களையெல்லாம் ஒப்புநோக்கியாராய்ந்து இந்நூலில் வெளிக்கொணர்ந்திருப்பதைக் கொண்டு இந்நூலாசிரியரின் பேருழைப்பையும் பெருஞ்சிந்தனையையும் நன்குணரலாம்.

சிவவழிபாட்டின் தொன்மையும் உலகளாவிய விரிவும் என்னும் முதற்பகுதியிலேயே பண்டைக்காலத்தில் சமய வேறுபாடில்லாத பொதுமை வாய்ந்த கடவுள் வழிபாடு நம்நாட்டில் இருந்தமையை இந்நூலாசிரியர் எடுத்துக்காட்டியுள்ளமை பாராட்டுக்குரியதாகும்.

தொல்காப்பியனார் காலம் முதலாக உள்ள வழிபாட்டு நெறிகளையும் தத்துவக் கொள்கைகளையும் வரலாற்றுச் சான்றுகளோடு நிரல்படத் தொகுத்துரைக்கும் ஓர் அரிய நூலாக இது அமைந்திருப்பது தமிழுலகத்திற்கும் சமய உலகிற்கும் மேலும் பெருமை சேர்ப்பதாகும்.

சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கும் பொதுவாக உலகப் பொதுமறையாகிய திருக்குறளின் கருத்துக்களைத் தழுவியுள்ளன என்பதும், சிறப்பாகச் சைவத் திருமுறைகளால் தெளிந்துணரப் பெற்ற தத்துவ உண்மைகளை விரித்துரைக்கும் செந்தமிழ் நூல்களே இப்பதினான்கு நூல்கள் என்பதும் இந்நூலாசிரியரின் முடிந்த முடிபாகும்.

சைவமும் தமிழும் தம்மிரு கண்ணெனப் போற்றிய திரு க.வெள்ளைவாரணனார் அவர்கள் எழுபது ஆண்டுகளுக்கு மேலாக (14-1-1917 - 13-6-1988) இந்நிலவுலகிலே வாழ்ந்திருந்த சைவப் பெருந்தகையாவார். இலக்கண இலக்கியப் பெரும்புலமையாளரான பேராசிரியர் க.வெள்ளைவாரணனார் படைத்த 'பன்னிரு திருமுறை வரலாறு' பயன்மிக்கதொரு நூலாகும். இவ்வகையில் இவருடைய மற்றொரு படைப்பான 'சைவ சித்தாந்த சாத்திர வரலாறு' என்னும் இப்பெருநூலினைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் இப்பொழுது பெருமையுடன் வெளியிடுகின்றது.

பல்லாண்டுகள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலும் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திலும் பணியாற்றிய இவர் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்திலும் மொழிப்புலத் தலைவராகப் பணியாற்றியவர் ஆவார்.

அரிய இலக்கண, சமய நூல்களை உருவாக்கியளித்த இந்நூலாசிரியரின் ஆராய்ச்சித் திறனை இப்புதிய நூல் மூலமாக மேலும் பலரும் உணர்வர் என நம்புகிறேன்.

இந்நூல் நன்முறையில் உருவாவதற்குப் பெருந்துணை புரிந்த பேராசிரியர் முனைவர் சோ.ந. கந்தசாமி அவர்களுக்கும், தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை இயக்குநர் (பொ.) முதுமுனைவர் ம.சா. அறிவுடைநம்பி அவர்களுக்கும் நன்றி.

இந்நூலை நன்முறையில் உருவாக்கிய பதிப்புத்துறையினருக்குப் பாராட்டுதல்கள்.

20-12-2002 இ. சுந்தரமூர்த்தி

# பொருளடக்கம்

# முன்னுரை

நாவலந் தீவில் தோன்றி வளர்ந்த சமயங்களுள் தொன்மையும் முதன்மையும் பெற்று விளங்குவது சைவசமயமாகும். சிந்தைக்கும் மொழிக்கும் எட்டாத நிலையில் விளங்கும் செம்பொருளாகிய சிவபரம்பொருளைச் சிவம் என வழங்குதல் தமிழ் மரபாகும். 'சிந்தனைக்கரிய சிவமே போற்றி' எனவரும் திருவாசகத் தொடர் இம்மரபினை வலியுறுத்தல் காணலாம். 'செம்பொருளாய சிவமெனலாமே' எனவருந் திருமந்திரத் தொடர் ஒரு நாமம் ஓருருவமின்றி மாற்ற மனங்கழிய நின்ற பரம்பொருளைச் செம்பொருள் எனவும் சிவம் எனவும் போற்றும் தொன்மை மரபினைச் சுட்டுவதாகும். செம்பொருளாகிய சிவ பரம்பொருளை நம் முன்னோர் திருவுருவில் எண்ணி அம்மையப்பனாக வழிபடும் நிலையில் அம்முதல்வனுக்கு அமைந்த திருப்பெயர் சிவன் என்பதாகும். செவ்வானன்ன திருமேனியின னாகத் திருவுருவமைத்து வழிபட்ட நிலையில் அமைந்த சிவன் என்னுந் திருப்பெயர் செம்மையென்னுந் தமிழ்ச் சொல்லின் அடியாகப் பிறந்த பெயராகும் என்பதனைச் '*செம்மேனிப் பேராளன் வானோர்பிரான்*' எனக் காரைக்காலம்மையாரும், '*சிவனெனுநாமந் தனக்கேயுடைய செம்மேனியம்மான்*' எனத் திருநாவுக்கரசரும் அருளிய மெய்ம்மொழிகளால் இனிதுணரலாம். எனவே முழுமுதற் கடவுளுக்கு வழங்கும் சிவம், சிவன் என்னும் இருபெயர்களுள் முன்னையது சிந்தனைக்கு அரிய உருவங்கடந்த நிலையினையும், பின்னையது அடியார்க்கு எளிவந்தருளுந் திருவுருவ நிலையினையும் குறித்து வழங்குதலும் இவ்விரு நிலைப்பெயர்க்கும் அடிப்படையாயமைந்தது செம்மையென்னும் பண்பென்பதும் நன்கு தெளியப்படும். இவ்வுண்மை, 'செம்பொருட்டுணிவே சிவபெருமானே' எனவருந் திருவாசகத் தொடரால் உய்த்துணரப்படும். செம்மேனிப் பேராளனாகிய சிவபெருமானை முழுமுதற்கடவுளாகக் கொண்டு போற்றும் வழிபாட்டு நெறியாதலின் இது சைவம் என்னும் பெயர்த்தாயிற்று.

எந்நாட்டவர்க்கும் இறைவனாகிய முதல்வனைத் தென்னாட்டவராகிய தமிழ்மக்கள் சிவன் என்ற திருப்பெயராற் போற்றி வழிபட்டனர் என்பது 'தென்னாடுடைய சிவனே போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' எனவரும் திருவாசகச் செழுமறையால் இனிதுபுலனாம். சிவபெருமானை வழிபட்டு அம் முதல்வனது திருவருட்டுணை கொண்டு உலகுயிர்கள் இயங்குந் திறத்தினைத் தமது வாழ்வியல் நுகர்ச்சியிற் கண்டு தெளிந்த தமிழ் மக்கள் தமது வாழ்வியலின் முடிந்த முடிவாகக் கண்டுணர்ந்த மெய்யுணர்வுக் கொள்கை இடைக்காலத்திற் சைவசித்தாந்தம் என்ற பெயரால் வழங்கப் பெறுவதாயிற்று.

குமரிமுதல் இமயம் வரை பரவி வாழ்ந்த தொன்மைக் குடியினராகிய தமிழ்மக்களின் அகவாழ்வாகிய குடும்ப வாழ்க்கையிலும், புறவாழ்வாகிய சமுதாய வாழ்க்கையிலும் முகிழ்த்துத் தோன்றிய சைவசித்தாந்தத் தத்துவக் கொள்கையானது வடநாட்டின் வழிவந்த வேத உபநிடதங்களுடன் தொடர்பு பெற்றுச் சிவாகமங்களின் சார்புடையதாய்ச் செழித்து வளர்ந்த காலம் திருமூலநாயனார் காலம் எனக் கொள்ளுதல் பொருந்தும். சைவசித்தாந்தம் பதி (கடவுள்), பசு (உயிர்), பாசம் (உலகு) என்னும் முப்பொருளுண்மையாகிய இம்முடிபு வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்தில் தொல்காப்பியனார் காலத்தும் அவர்க்குப்பின் கடைச்சங்க காலத்தும் தமிழகத்தில் வாழ்ந்த நாட்டு மக்கள் வாழ்க்கையொடு தொடர்புடையதாய் நிலைபெற்று வரும் பண்டைத் தமிழர் தத்துவக் கொள்கையாகும். இவ்வுண்மை இயற்றமிழ் நூலாகிய தொல்காப்பியத்தையும் சங்கச் செய்யுட்களையும் உலகப் பொது மறையாக நிலவும் திருக்குறளையும் சைவசித்தாந்த சாத்திரங்களோடு ஒப்புநோக்கி ஆராய்வார்க்கு இனிது விளங்கும்.

பழந்தமிழர் மேற்கொண்டொழுகிய தெய்வ வழிபாட்டு நெறியில் உருவாகிய சைவசித்தாந்தம் என்னும் முத்தி நெறி பற்றிய மெய்யுணர்வுக் கொள்கையினைச் சிறப்பாகப் பத்தி நெறியாகிய தெய்வ வழிபாட்டுடன் இயைத்துப் பேணி வளர்த்த அருளாசிரியர்கள் திருமூலநாயனார் முதல் சேக்கிழார் நாயனார் வரையுள்ள திருமுறையாசிரியர்களாவர். தோத்திர வடிவிலமைந்த

சைவத் திருமுறைகளாகிய செந்தமிழிலக்கியங்களிலிருந்து சைவசித்தாந்தச் சாத்திரமாகிய இலக்கண நூல்களை உருவாக்கிக் கொடுத்தவர்கள் திருவியலூர் உய்யவந்த தேவநாயனார், திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார், மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியார், திருவதிகை மனவாசகங்கடந்தார், உமாபதி சிவாசாரியார் ஆகிய திருவருட் சான்றோராவர். பன்னிரு திருமுறையாசிரியர்களில் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர், திருவாதவூரடிகள் ஆகிய நால்வரையும் சைவ சமயகுரவர் நால்வர் எனச் சிறந்தெடுத்துப் போற்றுவது போலவே சைவசித்தாந்த நூல்களை இயற்றியருளிய சான்றோர்களுள் மெய்யுணர்வுபதேச பரம்பரையைத் தோற்றுவித்து வளர்த்த மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாசாரியார் ஆகிய நால்வரையும் சைவசமய சந்தானகுரவர் நால்வர் எனப் போற்றுவது சைவமரபாகும்.

மெய்கண்ட நூல்களாகிய சித்தாந்த சாத்திரம் பதினான்கினையும் அருளிச் செய்த திருவருட் சான்றோர்களின் வரலாறுகளையும் அவர்களால் இயற்றப்பெற்ற திருவுந்தியார் முதல் சங்கற்பநிராகரணம் முடியவுள்ள சைவ சமய மெய்ந்நூல்கள் பதினான்கின் பொருளமைப்பினையும் இவற்றுக்கு நிலைக்கள மாகவுள்ள பன்னிரு திருமுறைகளிற் காணப்படும் சைவசித்தாந்தக் கொள்கையினையும் இவை எல்லாவற்றுக்குங் காலத்தால் முற்பட்ட சிலப்பதிகாரம், சங்கவிலக்கியம், திருக்குறள், தொல்காப்பியம் ஆகிய பண்டைத் தமிழ் நூல்களில் ஆங்காங்கே இடம்பெற்றுள்ள தத்துவ நுண்பொருள்களையும் ஒப்புநோக்கி யாராய்ந்து தமிழகத்தில் தொன்றுதொட்டு நிலவிவரும் சைவசித்தாந்த மெய்ந்நெறிக் கொள்கையினை வரலாற்று நெறியில் ஆராய்ந்து விளக்கும் முறையில் மெய்கண்ட நூல்களின் வரலாறாகிய இந்நூல் எழுதப் பெறுகின்றது. சைவசித்தாந்தத் தத்துவக் கொள்கை யினைச் சிறப்பாகத் தமிழகத்திலும் பொதுவாகப் பாரத நாட்டிலும் நிலைபெற்று வழங்கும் வைதிகம் வைணவம் முதலிய ஏனைச் சமயதத்துவக் கொள்கைகளோடும் நாட்டு மக்களின் வாழ்வியலோடும் ஒப்புநோக்கியுணரும் ஒப்பீடும் இந்நூலில் உரியவிடங்களில் மேற்கொள்ளப்பெறும்.

இந்நூலில் பின்வரும் தலைப்புக்கள் இடம்பெற்றுள்ளன.

(1) முன்னுரை

(2) சிவவழிபாட்டின் தொன்மையும் உலகளாவிய விரிவும்

(3) தொல்காப்பியனார் கூறும் வழிபாட்டு நெறிகளும் தத்துவக் கொள்கைகளும்

(4) சங்கச் செய்யுள்களில் இடம்பெற்றுள்ள தெய்வ வழிபாடும் தத்துவக் கொள்கைகளும்

(5) சங்கவிலக்கியத்திற் சிவன் வழிபாடும் சைவ சமயத் தத்துவ உண்மைகளும்

(6) திருவள்ளுவர் கூறும் வாழ்க்கை நெறிமுறைகளும் தத்துவ உண்மைகளும்

(7) சிலப்பதிகாரத்தில் காணப்பெறும் தெய்வ வழிபாடுகளும் சிவநெறிக் கோட்பாடுகளும்

(8) மணிமேகலையிற் காணப்படும் தெய்வ வழிபாடுகளும் சிவநெறிக் கொள்கையும்

(9) தமிழாகமம் எனப் போற்றப்பெறும் திருமூலர் திருமந்திரம் கூறும் சைவசித்தாந்தச் செந்நெறியும் தத்துவ உண்மைகளும்

(10) திருமுறைகளில் இடம்பெற்றுள்ள சைவ சித்தாந்த உண்மைகள்

(11) திருவாதவூரடிகள் மேற்கொண்டொழுகிய சிவநெறிக் கொள்கை

# சிவ வழிபாட்டின் தொன்மையும் உலகளாவிய விரிவும்

உலக மக்கள் அனைவரும் தத்தம் வாழ்க்கையில் மேற்கொண்டொழுகும் பொதுவான ஒழுகலாறுகளுள் தெய்வ வழிபாடும் ஒன்றாகும். மக்கட் கூட்டத்தார் தாம்தாம் பிறந்து வாழும் நாடுகளின் வெப்பதட்ப அமைப்புக்கும் பிற சூழ்நிலைகட்கும் ஏற்ப வடிவாலும் நிறத்தாலும் கலை நாகரிகம் முதலியவற்றாலும் அறிவின்திறத்தாலும் படிப்படியே வளர்ச்சி பெற்று வந்துள்ளனர். உலகமுழுவதும் ஒன்று என எண்ணும் விரிந்தவுள்ளத்தினராய் உலக மக்கள் அனைவரும் ஒரே குலத்தினர் எனக்கருதும் அளவு நாகரிகம் பரவியுள்ள இக்காலத்திலும் அறிவு முதிரா நிலையினராய் நாகரிக வளர்ச்சியின்றித் தனிமையுற்றுப் பல்வேறு குழுவினராய் வாழ்க்கை நிலைகளிற் கீழ்ப்பட்ட மக்கட் பிரிவினரும் ஆங்காங்கே காணப்படுகின்றனர்.

நாகரிகம் பெற்றார் பெறாதார் ஆகிய எல்லா மக்களிடையேயும் தம்மைப் பாதுகாத்து அருள்புரியும் தெய்வம் ஒன்று உண்டு என்னும் நம்பிக்கை நெடுங்காலமாக நிலைபெற்று வருகின்றது. ஆகவே தெய்வங்கொள்கை யென்பது நாடு மொழி இனம் என்னும் வேறுபாடின்றி மக்கட்குலத்தார் அனைவர்க்கும் இயல்பாகத் தோன்றுவ தோர் உணர்வு எனக்கொள்ள வேண்டியுளது. காணப்படும் இவ்வுலகில் எண்ணிறந்த அனைத்து உயிர்களும் தத்தமக்கேற்ற உடம்புடன் நிலைபெற்று வாழ்தற்கு இன்றியமையாதது உணவாகும். மன்னுயிர்கள் உடம்பொடு கூடி வாழ்தற்கு இன்றியமையாத உணவினும் சிறந்ததாக மக்கட்குலத்தாராற் கருதத்தகுவது தெய்வங் கொள்கையே யாகும். இந்நுட்பத்தினைத் தமிழ் முன்னோர் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தமது வாழ்க்கை யனுபவத்தால்

தெளியவுணர்ந்திருந்தார்கள். தமிழ்ப் பொருளிலக்கணம் கூறும் முதல் கரு உரி என்னும் மூவகைப் பொருள்களில் கருப்பொருளை வகைப்படுத்துணர்த்தக்கருதிய ஆசிரியர் தொல்காப்பியனார், "தெய்வம், உணா, மா, மரம், புள், பறை, செய்தி, யாழின் பகுதியொடு தொகைஇ, அவ்வகை பிறவும் கருஎன மொழிப"[1] எனத் தெய்வத்தினை உயிர்வாழ்வுக்கு இன்றியமையாத உணவினும் முதன்மையுடையதாகத் தமிழ் முன்னோர் எண்ணிய திறத்தினை நன்கு புலப்படுத்தி யுள்ளமை காணலாம்.

ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈறாக மன்னுயிர்கள் பல்வேறுடம்புகளைப் பெற்றுப் படிப்படியாக வளர்ச்சி நிலை யெய்திய தொன்மைக்காலத்தே வாழ்ந்த மக்கட் கூட்டத்தார் கடல்கோள் புயல் நிலநடுக்கம் முதலாக இயற்கைப் பொருள்களால் நேரும் இடையூறுகளையும் புலி முதலிய கொடிய விலங்கினங்களாலும் பாம்பு முதலிய நச்சுயிர்களாலும் நேரும் இடர்களையும் எண்ணிப் பெரிதும் அஞ்சினர். இவ்விடையூறு களைப் போக்குதற்குத் தம்பால் அன்புடைய ஆற்றலுடையார் யாரேனும் துணை செய்யமாட்டார்களா எனத் தம்மினும் மேலானதொரு பொருளின் துணையை நாடினர். இவ்வாறு மக்கள் உள்ளத்தே தோன்றிய அச்சத்தினாலும் உயிர்ப் பண்பாகிய அன்பினாலும் எல்லாவுயிர்கட்கும் துணைபுரியும் தெய்வம் என்பது ஒன்றுண்டு என்னும் உணர்வு மனவுணர்வினராகிய மக்களது மனத்தகத்தே அரும்பித் தோன்றியது. மக்களுள்ளத்தே கிளர்ந்தெழுந்த இத்தெய்வவுணர்வு, ஞாயிறும் திங்களும் விண்மீன்களும் சுடர்விட்டு விளங்குதற்கு இடமாகிய வானையும் கடல்சூழ்ந்த இவ்வுலகினையும் நிலமெங்கும் பரவி வாழும் எண்ணிறந்த உயிரினங்களையும் இயைத்து நோக்கும் பல்வேறு நம்பிக்கைகட்கும் நிலைக்களமாய் வளர்ந்தது; மக்கள் பெற்றுள்ள வாழ்வியலில் அழுந்தியறிதலாகிய அனுபவ அறிவின் பயனாகக் கிடைத்த உயர்ந்த தத்துவங்களோடு கூடிய பல்வேறு சமயங்களாக உலகெங்கும் விரிந்து

1. *தொல்காப்பியம், பொருளதிகாரம்*, அகத்திணையியல், 13.

பரவுவதாயிற்று. உலக மக்கள் காலந்தோறும் வளர்ச்சி பெற்று வரும் தம்முடைய வாழ்க்கை வளங்களுக்கேற்பத் தெய்வ வழிபாட்டிலும் அவ்வழிபாட்டினை அடியொற்றி யுருவாகிய தத்துவவுணர்விலும் படிப்படியாக வளர்ச்சி பெற்று வந்துள்ளார்கள். இவ்வாறு உலகெங்கும் பரவி வாழ்ந்த மக்கட்குலத்தாரது உணர்வுநிலைகட்கேற்ப அவர்களால் வழிபடப்பெறும் தெய்வங்களின் திருவுருவங்களும் அடையாளங்களும் வழிபாட்டுக்குரிய நிலையங்களாகிய திருக்கோயில்களும் பலவாக விரிவடைந்துள்ளன.

இங்ஙனம் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தமிழ் மக்களது வாழ்க்கையில் நிலவிவரும் தெய்வ வழிபாடுகள் சமய நெறியாகவும் அந்நெறிபற்றிய சிந்தனைகள் தத்துவங்களாகவும் வளர்ச்சி பெற்று வந்துள்ளன. இந்நாட்டிற் குடிபுகுந்த ஆரியர் முதலிய அயலவர் கலப்பினால் தமிழ்ச் சமயநெறிகளில் அயலவர் நடைமுறைகள் சில இடம்பெற்றன எனக்கருத இடமுண்டு. இந்திய நிலப்பரப்பில் வழங்கும் திராவிட மொழிகளின் தொன்மையையும் அமைப்பையும் புலப்படுத்தும் முறையில் தென்னாட்டில் தமிழ்மொழி முதன்மை பெற்று விளங்குகின்றது; அதுபோலவே இந்திய நாட்டில் வாழும் பழங்குடி மக்களாகிய திராவிட இனத்தவரின் தொன்மைச் சமய அமைப்புகளையும் அவற்றின் தத்துவவுண்மைகளையும் புலப்படுத்தும் முறையில் தென்னாட்டில் சைவசமயம் முதன்மை பெற்று விளங்குகின்றது.

சிந்துவெளியில் நிகழ்ந்துள்ள அகழ்வாராய்ச்சியினால் அறியப்படும் இந்திய நாகரிகம் என்பது இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தொன்மையுடையதாகும். அஃது இந்நாட்டில் ஆரியர் வருவதற்குமுன் நிலவிய திராவிட நாகரிகமே என்பது நடுநிலையுணர்வுடைய வரலாற்றாசிரியர் களால் உறுதி செய்யப்பெற்றுளது. இந்திய நாட்டின் வடபகுதியில் நிகழ்ந்த அகழ்வாராய்ச்சியாற் புலனாகும் சிந்துவெளி நாகரிகத்திற்கும் தென்னாட்டிற் சங்க இலக்கியங்களால் அறியப்படும் தமிழர் நாகரிகத்திற்கும் இடையேயுள்ள தொடர்பினை இணைக்கும் முறையில்

அமைந்தது, இவ்விரு நாகரிகங்களாலும் சிறப்பாகப் புலப்படுத்தப்படும் சைவசமய நெறியேயாகும். இதனால் இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்குமுன் சிந்துவெளி மக்களிடையே நிலவிய சிவ வழிபாடு தென்னாட்டில் வாழும் தமிழ் மக்களின் தொன்மை வரலாற்றொடு மிக நெருங்கிய தொடர்புடையதென்பது நன்கு துணியப்படும்.

சிந்துவெளியிற் பலவகையான வழிபாட்டு நெறிகள் காணப்படினும் அவற்றுட் சிறந்து விளங்குவது சிவ வழிபாடேயாகும். "மொகஞ்சதரோ, அரப்பா ஆகிய இடங்களில் அகழ்ந்தெடுக்கப்பட்ட புதைபொருள்களால் நமக்குப் புலனாகும் செய்திகள் பலவற்றுள் முதன்மை வாய்ந்ததும் நிகரற்றதும் ஆகத் திகழ்வது சைவ சமயத்தின் வரலாறெனின் அது மிகையாகாது. செம்புக் காலத்திற்கும் கற்காலத்திற்கும் முற்பட்ட தொல் பழங்காலத்தில் சைவசமயத்தின் வரலாறு தொடங்குவதும், உலகப் பழம்பெருஞ்சமயங்களுள் மிகப் பழைய சமயமாகச் சைவசமயம் வீறுடன் நின்று நிலவுவதும் குறிப்பிடத் தக்கனவாகும்" என்பர் சர் ஜான்மார்ஷல் துரைமகனார்.

சைவசமய வரலாற்றைக் காலமுறைப்படிக் கருதி நோக்குங்கால் கிறித்து பிறப்பதற்கு மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னரே சிந்துநதிப் பள்ளத்தாக்கிற் சிறந்து விளங்கிய மொகஞ்சதரோ, அரப்பா ஆகிய நகரங்களில் வாழ்ந்த மக்களின் சமய வழிபாடு இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத் தகுவதாகும். இக்காலத்தில் தமிழகத்தில் நிலவிவரும் இலிங்க வழிபாடு, சக்தி வழிபாடு, பசுபதி வழிபாடு முதலியன இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தொன்மையுடையதாகிய சிந்துவெளி நாகரிகத்திற் சிறப்புடைய சமய நெறிகளாகத் திகழ்ந்தன என்பது சர் ஜான்மார்ஷல், ஹீராஸ் பாதிரியார் முதலிய ஆராய்ச்சியாளர்களின் துணிபாகும். சிந்து வெளியிலே அகழ்ந்தெடுக்கப் பட்ட ஓவியங்கள், முத்திரைகள், களிமண் படிவங்கள் ஆகியவற்றைக் குறித்துச் சர் ஜான் மார்ஷல் பின்வருமாறு கூறியுள்ளார்.

"யோகிகட்கல்லாம் தலையாய யோகி சிவன்.

அதனாலேயே அவருக்கு மகாதவசி, மகாயோகி என்னும் பெயர்கள் அமைந்தன. ......... சைவத்தைப் போலவே யோகநெறியும் ஆரியருக்கு முற்பட்ட மக்களிடையே தோன்றியதாகும். சிவன் தலையாய யோகிமட்டும் அல்லர்; விலங்குகட்கெல்லாம் தலைவர் (பசுபதி); சிவனுக்குரிய இவ்வியல்பினையே சிவனைச் சுற்றி யானை புலி காண்டா மிருகம், எருது என்னும் நான்கு விலங்குகள் நிற்கும் தோற்றம் காட்டுகின்றது. சிந்துவெளிக் கடவுளின் தலையில் அமைந்துள்ள கொம்புகள் பிற்காலத்திற் சிவனது சிறப்புத் திருவுருவம் ஒன்றைக் குறிக்கும் நிலையில் மூவிலைச் சூலமாக மாறியது. இவற்றையெல்லாம் நோக்கும்போது பிற்காலத்திலே சிவனுக்கு அமைந்த பல அமைப்புக்களின் தோற்றநிலைகளே சிந்துவெளி முத்திரைகளிற் காணப்படுகின்றன என நாம் கருதலாம்".

அரப்பாவின் நாகரிகம் கி. மு. நாலாயிரத்திற்கும் மூவாயிரத்திற்கும் இடைப்பட்டது என்பர் தொல்பொருள் ஆராய்ச்சியாளர். கி. மு. 2500-க்கும் கி. மு. 1500-க்கும் இடைப்பட்டது சிந்துவெளி நாகரிகம் எனவும் அஃது ஆரியர்களால் அழிக்கப்பட்டது எனவும் ஆரியர் இந்தியாவிற் குடியேறிய காலம் கி. மு. 1500 எனவும் சர் மார்ட்டிமர் வீலர் கூறுவர். சிந்துவெளி நாகரிகத்தின் மொகஞ்சதரோவின் கூறுகள் அந்நாகரிகத்தின் தொடக்க காலத்ததன்று; மொகஞ்சதாரோ காலத்தைக் காட்டிலும், குறைந்தது ஆயிரம் ஆண்டுகளாவது முற்பட்டிருத்தல் வேண்டும் என்பர் பேராசிரியர் இராதாகுமுதமுகர்ஜி.

சிந்துவெளி மக்கள் கடவுள் வழிபாட்டிற் பயன்படுத்திய திருவுருவம் சிவலிங்கங்களே. அரப்பாவில் மட்டும் சிறியனவும் பெரியனவுமாக ஏறக்குறைய ஆயிரம் சிவலிங்கங்கள் கண்டெடுக்கப்பெற்றுள்ளன. சிறிய சிவலிங்கங்களை அக்கால மக்கள் இக்காலத்து வீர சைவர்களைப்போன்று தங்கள் கழுத்திலும் கையிலும் கட்டிக்கொண்டிருத்தல் கூடும். இதனால் சைவ சமயத்திற்கேயுரிய சிவலிங்க வழிபாடு ஐயாயிரம் ஆண்டுகட்குமுன் சிந்து வெளியிற் சிறந்து விளங்கியதெனபது நன்கு துணியப்படுதல் காணலாம்.

அரப்பாவிற் கிடைத்துள்ள ஆண்சிலையொன்று இடது காலைத்தூக்கி வலது காலையூன்றி நின்று நடம்புரியும் நிலையிற் காணப்படுகின்றது. இதனைச் சிவபெருமானுக் குரிய திருவுருவங்களில் ஒன்றான நடராசர் திருவுருவின் முதலுருவமாகக் கருதுவர் ஆராய்ச்சியாளர்.

மொகஞ்சதரோவிற் கிடைத்துள்ள பெண் வடிவங்களுள் குழந்தையை அணைத்தவண்ணம் உள்ள வடிவங்களும், அமைதியும் அருளும் பொலியும் நிலையில் அமைந்த அன்னை வடிவங்களும், காண்போர் அஞ்சத்தக்க முகத்தோற்றமுடைய பெண் வடிவங்களும் காணப்படு கின்றன. இவை முறையே பெண் தெய்வத்திற்குரிய ஆக்கல், அளித்தல், அழித்தல் என்னும் முத்தொழில்புரியும் சத்தியின் நிலையைக் குறிப்பன எனவும் பிற்காலத்தில் இந்து சமயத்தின் திராவிடக்கூறாக விளங்கும் சத்தி வழிபாட்டின் மூலக் கருவாகச் சிந்து வெளியின் தாய்த் தெய்வ வழிபாடு விளங்குகின்றதெனவும் மோனியர் வில்லியம் என்ற அறிஞர் கூறுவர்.

சிந்துவெளியிற் கண்டெடுக்கப்பெற்றுள்ள சில பொருள்களிற் காணப்படும் எழுத்துக்குறிகள் தமிழ் அமைப்புடையனவாகவுள்ளனவெனவும் அவை மழை மூன்(று) கண், நண்டூர், வேலூர், குரங்கர், மீனவர் முதலிய சொற்களைக் குறிக்கின்றன எனவும், பேரான்(ள்) எண்ணாள், மூன்(று) கண் என்பன சிவனைக் குறிக்கின்றன எனவும் கருதுவர் உறீராஸ்பாதிரியார்.

மொகஞ்சதரோவிற் கிடைத்துள்ள சுண்ணாம்புக்கல் முத்திரையொன்றில் யோகியின் உருவத்தின் இருமருங்கிலும் நாகர் இருவர் மண்டியிட்டு வணங்கும் உருவம் பொறிக்கப் பட்டிருத்தலால் மிகப்பழங்காலத்தில் சிவ வழிபாடு நாக வழிபாட்டுடன் தொடர்புடையதாய் உருவாகியதென்பது உய்த்துணரப்படும் என்பர் ஆராய்ச்சியாளர்.

சிந்து வெளியில் வாழ்ந்த மக்கள் வழிபட்ட தெய்வங்களாக முதற்கண் தாய்த்தெய்வத்தையும் அடுத்தபடியாக மும்முகமுடைய கடவுளையும்

மூன்றாவதாகச் சிவலிங்கத்தையும் சர் ஜான் மார்ஷல் என்பார் முறைப்படுத்திக் கூறியுள்ளார். பண்டைய திராவிட மக்களிற் பெரும்பாலோர் தாய்வழி யுரிமையாகிய தாயமுறையினையே கடைப்பிடித்தனர் எனவும் அது காரணமாகவே திராவிட மக்களிடையே தாய்த்தெய்வ வழிபாடு பெருவழக்கா யிருந்ததெனவும் கூறுவர் சமூகவியல் அறிஞர். பெற்றோர் வழியே பிள்ளைகள் பெறும் பொருளுரிமை 'தாயம்' என்ற சொல்லாற் சங்கச் செய்யுட்களில் வழங்கக் காண்கின்றோம். தாயம் என்ற இச்சொல் 'தாய்' என்ற சொல்லின் அடியாகப் பிறந்ததென்பது இங்குக் கருதத்தகுவதாகும்.

சங்ககாலத் தமிழர்நாகரிகத்திற்கும் சிந்துவெளியில் வாழ்ந்த மக்கள் நாகரிகத்திற்கும் இடையே சமய வழிபாடு பற்றிய தொடர்புகள் மிக நெருக்கமாகவுள்ளன. தமிழகத்தில் தொன்று தொட்டு நிலைபெற்றுவரும் சத்திவழிபாடும் இத்தொடர்பினை உறுதிப்படுத்துஞ் சான்றுகளாக அமைந்துள்ளன. சிந்து வெளியில் அகழ்ந்தெடுக்கப்பட்ட பொருள்களில் வரையப் பெற்றுள்ள எழுத்துக்குறிப்புக்கள் தமிழொடு தொடர்புடையனவாக ஆராய்ச்சியாளர்களாற் கருதப்படுகின்றன.

சிந்தனைக்கரிய சிவபரம்பொருளை மன்னுயிர்களின் சிந்தையிற் சுடர்விட்டு விளங்கும் சோதிப் பொருளாக வைத்து வழிபடும் நிலையில் முன்னைத் தவப்பெருஞ் செல்வர்களாற் பல்லாயிர ஆண்டுகட்குமுன் கண்டு வழிபடப்பெற்ற தொன்மை வாய்ந்தது, சிவலிங்கத் திருவுருவமாகும். சிவலிங்கத்தின் அடிப்பீடமாகிய வட்டக் கல் மன்னுயிர்களின் நெஞ்சத் தாமரையினையும் அதன் நடுவே நாட்டப்பெற்றுத் தூண்வடிவில் நிமிர்ந்து தோன்றும் பாணம் நெஞ்சத் தாமரையின் உள்ளிருந்தெழுஞ் சோதியாய்ச் சுடர்விட்டொளிரும் சிவ பரம்பொருளையும் குறிக்கும் அடையாளங்களாகும்.

"காண்பார்க்குச் சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே"[2]

---

2. காரைக்காலம்மையார், *அற்புதத் திருவந்தாதி*, 17.

"ஏதுக்களாலும் எடுத்த மொழியாலுமிக்குச்
சோதிக்கவேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி"[3]

"மனத்துள்மாயனை மாசறுசோதியை"[4]

"இரந்திரந்துருக என்மனத்துள்ளே எழுகின்ற சோதியே"[5]

எனவும் வரும் திருமுறைத் தொடர்கள், உலக முதல்வனாகிய இறைவன் மன்னுயிர்களின் மனத்தகத்தெழுஞ் சோதியாகத் திகழுமாண்பினை நன்கு வலியுறுத்தல் காணலாம். அலகில் சோதியனாகிய முதல்வனை அகத்தே ஒளியுருவிற்கண்டு வழிபடும் அகப்பூசை முறைமையினை,

"மாதினையோர் கூறுகந்தாய்......................
காதன்மையாற் றொழுமடியார் நெஞ்சினுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே"[6]

எனவரும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தில் திருநாவுக்கரசர் தெளிவாக அருளிச் செய்துள்ளார்.

உயிர்களின் நெஞ்சக்கமலத்தே கேழில் பரஞ்சோதி யாய்க் கிளர்ந்து தோன்றும் சிவபரம்பொருளைத் தம் மனத்தகத்தே கண்டு வழிபட்டு, மகிழ்ந்த தவப்பெருஞ் செல்வர்கள் தாம் கண்ட அத்தெய்வக்காட்சியை உலகமக்கள் எல்லோரும் புறத்தே கண்டு வழிபட்டு உய்திபெறுதல் வேண்டும் என்னும் உயர்ந்த குறிக்கோளுடன் புறத்தே அமைத்துக் கொண்ட திருவுருவமே சிவலிங்கத் திருமேனியாகும். சிவலிங்கத்தின் அடிப்பீடம் உயிர்களின் நெஞ்சத்தாமரையின் உருவாகவும் அதன் நடுவே சுடருருவில் நிமிர்ந்து தோன்றும் பாணம், காண்டற்கரிய கடவுள் தீவண்ணனாகச் சுடர்விட்டொளிரும் நிலையைப் புலப்படுத்தும் அருவமாகவும் திகழ்தலால் சிவலிங்கம் இறைவனுக்குரிய அருவுருவத் திருமேனியாயிற்று.

---

3. *திருஞானசம்பந்தர் தேவாரம்*, 3. 54. 3.
4. *திருநாவுக்கரசர். தேவாரம்*, 5. 15. 2.
5. மாணிக்கவாசகர், *திருவாசகம்*, 395.
6. திருநாவுக்கரசர், *தேவாரம்*, 6. 61. 1.

இந்நுட்பம்,

> "சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம் ஒருவனே"[7]

எனவரும் திருவாசகத் தொடரால் இனிது புலனாம். எத்தகையோரும் காணவொண்ணாத அருவநிலையிலுள்ள இறைவனை அன்புடையார் எல்லாரும் புறத்தே அடையாள வுருவில் அருட்குறியாகக் கொண்டு வழிபாடு செய்தற்கு ஏற்றவண்ணம் அருவமும் உருவமுமாகிய இருதிறமும் விரவிய நிலையில் அமைந்த அருவுருவத் திருமேனியாக உலகமக்கள் எல்லோராலும் போற்றி வழிபடப் பெறுவதாயிற்று. இன்னவுரு இன்னநிறம் என்று அறிய வொண்ணாத இறைவனை அகத்திலும் புறத்திலும் வழிபட்டு உய்திபெறுதற்குரிய அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கம், காணவொண்ணாத அருவினுக்கும் காணப்படும் உருவினுக்கும் காரணமாகத் திகழ்வது; காத்தற் றொழிலின னாகிய திருமாலும் படைத்தற்றொழிலினனாகிய நான்முகனும் தம்முள் மாறுகொண்டு இகலிய நிலையில் மனத்திற்கும் மாற்றத்திற்கும் முதல்வராகிய அவ்விருவரும் முறையே அடியும் முடியுந்தேடிக்காண வொண்ணாதவாறு நீண்ட தழற்பிழம்பாய்த் தோன்றியதும் அவ்விருவரும் தம் முனைப்படங்கி நாணி அன்புடையராய் வழிபட்டபோது அத்தழல் நடுவே 'இங்குற்றேன்' என்று இலிங்க வடிவில் தோன்றியதும் ஆகிய பழஞ்செய்திகள் இலிங்கபுராணத்தே கூறப்பட்டன.

> "செங்கணானும் பிரமனுந்தம்முளே
> எங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலார்
> 'இங்குற்றேன்' என் றிலிங்கத்தே தோன்றினான்
> பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே"[8]

எனவரும் இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை, அட்ட மூர்த்தியாகிய இறைவனை அழல்நிற வண்ணனாகக் கொண்டு போற்றும் சிவலிங்கத் திருவுருவ அமைப்பினை இனிது

---

7. மாணிக்கவாசகர், *திருவாசகம்*, 396.
8. திருநாவுக்கரசர், *தேவாரம்*, 5. 95. 11.

புலப்படுத்துவதாகும். இங்ஙனம் அருவுருவத்திருமேனியாகத் திகழும் சிவலிங்கத்தின்அமைப்பினையும் அதனை அகத்தும் புறத்தும் வழிபடுவார் அடையும் நற்பேற்றினையும் விளக்கும் நிலையில்,

> "காணாத அருவினுக்கும் உருவினுக்குங் காரணமாய்
> நீணாக மணிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்கம்
> நாணாது நேடியமால் நான்முகனுங்காண நடுச்
> சேணாருந் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய்"[9]

எனச் சேக்கிழார் நாயனார் தரும் விளக்கம் இங்கு மனங்கொளத்தகுவதாகும்.

உலகமுதல்வனாகிய இறைவனைத் தூண் வடிவில் நடுதறியாக நாட்டி வழிபடும் வழிபாடு சங்க காலத்திற்கு முன் தமிழ் மக்களால் மேற்கொள்ளப்பெற்ற தொன்மை வாய்ந்ததாகும். இன்னவுரு இன்னநிறம் என்றறிய வொண்ணாத இறைவனைச் சிற்றூர்களிலும் பேரூர்களிலும் மக்கள் எல்லோரும் ஒருங்கு கூடும் ஊர்ப்பொதுவிடங்களிற் பலரும் வழிபடும் நிலையில் தூண் வடிவில் நடுதறியாக நிறுத்தி வழிபடுதல் பண்டைத்தமிழர் மேற்கொண்ட முழுமுதற் கடவுள் வழிபாட்டு முறையாகும். ஒரு நாமம், ஒருருவம் ஒன்றுமில்லாத கடவுளைத் தூண்வடிவில் நிறுத்தி மக்கள் எல்லோரும் வேற்றுமையின்றி ஒன்றியிருந்து வழிபாடு செய்தற்குரிய தெய்வநிலையம் 'கந்துடைநிலை'[10] எனவும் 'பொதியில்'[11] எனவும் சங்கச் செய்யுட்களிற் குறிக்கப் பெற்றுளது. 'கந்து - தெய்வம் உறையும் தறி' என்பர் நச்சினார்க்கினியர்.[12] கந்து 'கந்தம்' எனவும் வழங்கும்.[13] எங்கும் நிறைந்த இறைவனைத் துளக்கமில்லாத கந்துருவில் (தூண் வடிவில்) நடுதறியாக நிறுத்தி வழிபட்டு வந்த இவ்வழிபாட்டு முறையே நாளடைவில் சிவலிங்க

9. சேக்கிழார், *பெரியபுராணம்*, சாக்கிய நாயனார் புராணம், 8.
10. *திருமுருகாற்றுப்படை*, 226.
11. *அகநானூறு*, 167.
12. நச்சினார்க்கினியர். தொல். பொருள். புறத். 33.
13. *புறநானூறு*, 52.

வழிபாடாக வளர்ச்சி பெற்றதெனத் தெரிகிறது. சிவபெருமானுக்குரியனவாக வழங்கும் சிறப்புப் பெயர்களுள் தாணு (தூண்), கம்பன் என்பன. இறைவனைத் தூண்வடிவில் நடுதறியாக நாட்டி வழிபடும் வழிபாட்டு முறையில் அமைந்த சிவலிங்க வழிபாட்டினை அடியொற்றிய காரணப்பெயர் களாகும்.

> **"நாணமுடைவேதியனும் நாரணனும் காண்பரிய தாணு"**[14]
>
> **"கன்றாப்பூர் நடுதறி"**[15]
>
> **"பொழிலேழுந் தாங்கி நின்ற கற்றூண்காண்"**[16]
>
> **"மனந்திருத்தும் மழபாடி வயிரத்தூணே"**[17]
>
> **"காலகாலனைக் கம்பன் எம்மானை"**[18]
>
> **"தனதன்நற்றோழா சங்கரா சூலபாணியே**
> **தாணுவேசிவனே"**[19]

என வரும் திருமுறைத்தொடர்கள் இக்கருத்தினை வலியுறுத்தும் சான்றாக அமைந்துள்ளமை இங்கு ஒப்புநோக்கி யுணர்தற் குரியதாகும்.

நாடு நலம்பெறப் பகைவரொடு பொருதுவென்று தம் இன்னுயிர் துறந்து தெய்வநிலைபெற்ற தறுகண்மறவருடைய பெயரும் பீடும் பொறித்து நடப்பெற்ற கல்லினைத் தெய்வமாக நட்டுப் போற்றி வழிபடும் நடுகல்வழிபாடு, எல்லாம் வல்ல முழுமுதற்கடவுளைக் கற்றூணாக (நடுதறியாக) நிறுத்திப் போற்றும் சிவலிங்க வழிபாட்டினை அடியொற்றித் தோன்றியதெனக் கருத இடமுண்டு. வீரர்களை நினைவு கூரும் நடுகல் வழிபாட்டில் அவ்வீரர் களுக்கு விருப்பமான தோப்பிக் கள்ளொடு ஆட்டினைப் பலியாகக் கொடுத்து வழிபடுதல் மரபு. கந்துடை நிலையாகிய

---

14. திருஞானசம்பந்தர், **தேவாரம்**, 1. 62. 9.
15. திருநாவுக்கரசர், **தேவாரம்**, 6. 61. 1.
16. **மேலது**, 6. 8. 1.
17. திருநாவுக்கரசர், **தேவாரம்**, 6. 40. 6.
18. சுந்தரர், **தேவாரம்**, 7. 61. 1.
19. ***திருவிசைப்பா*** 1. 7.

பொதியிலில் நிகழும் சிவலிங்க வழிபாட்டில் எவ்வுயிர்க்கும் உயிர்க்குயிராய் உள்நின்று அருள் சுரக்கும் பேரருளாளனும் அறவுருவினனும் ஆகிய இறைவனுக்கு ஒவ்வாத ஊனையும் கள்ளையும் விலக்கி எல்லாவுயிர்களிடத்தும் அன்புடையராய் அன்பே வடிவாகிய இறைவனை நினைவு கூர்ந்து போற்றும் நிலையில் அம்முதல்வனை நெல்லும் மலரும் தூவிப் போற்றும் தூய வழிபாட்டினை மேற்கொண்டொழுகுதல் தமிழகத்தில் தொன்றுதொட்டு நிலைபெற்று வரும் கடவுள் வழிபாட்டு நெறிமுறையாகும். தெய்வநிலை பெற்ற வீரர்க்கு ஊனும் கள்ளும் படைத்துப் போற்றும் நடுகல் வழிபாடும், உயிர்ப்பலியின்றி நறுமலர் தூவிப் போற்றும் கடவுள் வழிபாடும் ஆகிய இவ்விருதிற வழிபாடுகளும் நாட்டுப்புறங் களிலும் நகர் நடுவிலும் சங்ககாலத்திற் சிறப்பிடம் பெற்றிருந்தன என்பதும், மறக்குடியில் தோன்றிய மக்கள் தமக்குச் சிறப்புரிமையுடைய தெய்வ வழிபாடாக நடுகல் வழிபாட்டினை மேற்கொண்டனர் என்பதும்,

> "ஒன்னாத் தெய்வர் முன்னின்று விலங்கி .
> ஒளிறேந்து மருப்பிற்களிறெறிந்து வீழ்ந்தெனக்
> கல்லே பரவினல்லது
> நெல்லுகுத்துப் பரவுங் கடவுளும் இலமே"[20]

என மறக்குடியினர் தாம் அணியும் பூவும், உண்ணும் உணவும், தமக்குப் பணி செய்யும் குடியும், வணங்குந் தெய்வமும் பற்றிக் கூறுமுறையிலமைந்த புறநானூற்றுப் பாட்டால் இனிது புலனாகும். எனவே சங்க காலத்தில் மறமும் அறமும் பற்றிய மக்களது குடிநிலை வாழ்க்கைக்கு ஏற்ப வழிபடும் சிறு தெய்வ வழிபாடும் நெல்லும் மலரும் தூவி வழிபடும் பெருந்தெய்வ வழிபாடும் தமிழகத்தில் ஒப்ப நிகழ்ந்தன எனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

இருளிலும் குளிரிலும் கடுவெயிலிலும் அகப்பட்டு அல்லலுற்ற பண்டைக்கால மக்கள் இருள் நீங்க ஒளிவழங்கும் செஞ்ஞாயிற்றினையும் குளிர்நீக்கி வெம்மைதரும் தீயினையும்

---

20. *புறநானூறு*, 335.

உடல்வெம்மை நீங்கத் தண்ணிலவு பொழியும் வெண் திங்களையும் கண்கண்ட தெய்வங்களாகக் கொண்டு போற்றி வழிபடுவாராயினர். ஞாயிறு திங்கள் தீ என்னும் இயற்கைப் பொருள்களைத் தெய்வமாகக் கருதி வழிபடும் ஒளி வழிபாடுகளுள் முதற்கண்ணதாகிய ஞாயிற்று வழிபாடு என்பது உலகிற் பல சமயத்தாராலும் பன்னெடுங்காலமாக மேற்கொள்ளப்பட்டு வரும் பொதுமை வாய்ந்ததாகும். இவ்வுண்மை,

> "உலகம் உவப்ப வலனேர்பு திரிதரும்
> பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
> ஓவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி"[21]

எனச் செம்புலச் செல்வராகிய நக்கீரனார் தம்மாற் போற்றப் பெறும் முருகப் பெருமானது திருமேனியின் பேரொளிக்கு உவமையாக எடுத்தாளும் ஞாயிற்றினைப் 'பலர்புகழ் ஞாயிறு' என அடைகொடுத்து ஓதினமையால் இனிது புலனாகும். 'பலர் புகழ் ஞாயிறு' என்னும் இத்தொடர்க்கு 'எல்லாச் சமயத்தாரும் புகழும் ஞாயிறு' என நச்சினார்க்கினியர் பொருள் வரைந்துள்ளார்.[22] ஆசிரியர் தொல்காப்பியனாரும் தெய்வஞ்சுட்டிய பெயர்நிலைக் கிளவிகளுள் ஒன்றாக ஞாயிறு என்னும் பெயரைக் குறித்துள்ளார்.[23] எனவே ஞாயிற்று வழிபாடு என்பது உலக முழுவதும் பரவி வாழும் எல்லாச் சமயத்தாராலும் மேற்கொள்ளப் பெற்றுவரும் பொதுமை வாய்ந்ததாகப் பண்டைத் தமிழ் மக்களாற் கொள்ளப்பெற்றதென்பது நன்கு புலனாகும்.

பகல் செய்யும் ஞாயிற்றையும் இரவில் தண்ணொளி பரப்பும் திங்களையும் கடுங்குளிரை நீக்கி உணவினைப் பதஞ்செய்யும் தீயினையும் தெய்வமாகக் கருதிப் போற்றும் இயற்கைப் பொருள் வழிபாடு உலக மக்களிடையே முதன் முதல் தோன்றியிருத்தல் வேண்டும் என்பது உலகிற் பல

---

21. *திருமுருகாற்றுப்படை*, 1-3.
22. நச்சினார்க்கினியர் உரை, *திருமுருகாற்றுப்படை*, 2.
23. தொல்காப்பியர், *தொல்காப்பியம்*, சொல். கிளவியாக்கம், நூ. 57.

நாடுகளிலும் நிலவி வரும் தொன்மை வழிபாட்டு முறைகளால் நன்கு துணியப்படும். மன்னுயிர்களுக்கு ஆக்கமும், அழிவும் நல்கும் ஆற்றல் வாய்ந்த ஞாயிறு திங்கள் தீ வளி மழை முதலிய இயற்கைப் பொருள்களையே தெய்வமெனக் கொண்டு வழிபட்ட பண்டைக்கால மக்கள், உலக இயக்கத்தினைக் கூர்ந்துணரும் அறிவும் இயற்கைப் பொருள்களால் அவ்வப் பொழுது நேரும் இடர்களிலிருந்து தப்புதற்குரிய ஆற்றலும் தம்முள்ளத்துக் கிளர்ந்தெழுந்த நிலையில் இப்பொருள்களெல்லாவற்றையும் தன்னகத்தடக்கி யுள்ள அண்டத்தொகுதியினையும் உலகப்பரப்பில் வாழும் மன்னுயிர்த் தொகுதியினையும் இயக்கி நிற்பதொரு முழு முதற்பொருளாகிய தெய்வம் ஒன்றுண்டு எண்ணுந் தெளிவினைப் பெறுவாராயினர். இந்நிலையில் முன்னர் வழிபடப்பெற்ற ஞாயிறு திங்கள் தீ முதலிய இயற்கைப் பொருள்களனைத்தும் உலகுயிர்கள் எல்லாவற்றையும் உயிர்க்குயிராய் உள்நின்றியக்கும் பெருந் தெய்வத்தின் பேருருவத்தின் அங்கங்களாகக் கொண்டனர். ஞாயிறு திங்கள் தீ என்னும் முச்சுடர்களும் இறைவனுடைய கண்களாகவும் பல்லுயிர்களும் தங்கி வாழ்தற்கு ஆதாரமாகிய பெருநிலம் சேவடியாகவும் பரந்திடங்கொடுக்கும் விசும்பு மெய்யாகவும் கடலே உடையாகவும் அமைய இவ்வாறு எல்லாம் வல்ல இறைவன் உலகமேயுருவமாகக் கொண்டு திகழ்கின்றான் எனத்தெளிந்து அம்முதல்வனது பேருருவ அமைப்பினைத் தம் உள்ளத்துட்கொண்டு வழிபடுவாரா யினர். இத்தகைய பெருந்தெய்வத்தின் பேருருவ வழிபாட்டினை விளக்கும் நிலையில் அமைந்தது,

> "மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
> வளைநரல் பௌவம் உடுக்கை யாக
> விசும்பு மெய்யாகத் திசைகை யாக
> இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
> வேத முதல்வ னென்ப
> தீதற விளங்கிய திகிரி யோனே"[24]

எனவரும் நற்றிணைக் கடவுள் வாழ்த்துப் பாடலாகும்.

24. *நற்றிணை*, கடவுள் வாழ்த்து.

காண்டற்கு அரிய கடவுளை உயிர்களின் அகத்தும் உலகின் புறத்தும் ஒளியுருவில் வைத்து வணங்கும் வழிபாடு நம் நாட்டில் பன்னூறாண்டுகளாக நிலவி வருகின்றது. உலகின் புறத்தே ஒளிப்பிழம்பாகத் திகழும் ஞாயிற்றை இறைவன் திருமேனிகளுள் ஒன்றாகக் கொண்டு வழிபடும் வழிபாடு மிகவும் தொன்மை வாய்ந்ததாகும். எல்லாம் வல்ல சிவபெருமான் நிலம், நீர், நெருப்பு, வளி, விசும்பு, ஞாயிறு, திங்கள், ஆன்மா என்னும் எண்பொருள்களையும் தனக்குரிய திருமேனியாகக் கொண்டு திகழ்தலின் அம்முதல்வனுக்கு அட்டமூர்த்தி யென்னும் பெயர் வழங்குவதாயிற்று.

'அட்டமூர்த்தி அழகன்'[25]

'நிலம் நீர் நெருப்புயிர் நீள் விசும்பு நிலாப்பகலோன்
புலனாய அமைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து
நின்றான்'[26]

எனவரும் திருமுறைத் தொடர்கள் இறைவன் எண் பேருருவினனாகத் திகழுந் திறத்தினை நன்கு விளக்குவனவாகும். சிவபெருமானுக்குரிய எண்பேருருவங் களில் எல்லாருங்காண முதன்மை பெற்று உலகு விளங்கவிரொளியுடையதாய்த் திகழ்வது ஞாயிறொன்றே யாதலின் கதிரவன் வழிபாடு கற்றோர் கல்லாதார் ஆகிய எல்லா மக்களாலும் சிறப்பாக மேற்கொள்ளப் பெறுவ தாயிற்று. இது குறித்தே பகலவன் வணக்கத்தின் மேலதான காயத்திரி மந்திரமாகிய இதனையே வேதியர் பலரும் காலை நண்பகல் மாலை என்னும் மூன்று பொழுதுகளிலும் ஓதிச் சிறப்பாக வழிபாடு செய்யக் காண்கிறோம். காயத்திரி மந்திரத்திற் பர்க்கன் என்ற பெயராற் போற்றப் பெறுவோன் எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானே யென்பது மைத்திராயணீயோப நிடதத்திலும் வடமொழி அமரநிகண்டிலும் தெளிவுறுத்தப் பெற்றுள்ளது. இந்நுட்பம்,

"அருக்கன் பாதம் வணங்குவ ரந்தியில்
அருக்க னாவா னரனுரு வல்லனோ
இருக்கு நான்மறை யீசனை யேதொழும்

25. திருநாவுக்கரசர், தேவாரம்.
26. மாணிக்கவாசகர், திருவாசகம்.

கருத்தி னைநினை யார்கன் மனவரே"[27]

எனத் திருநாவுக்கரசர் அருளிய திருப்பாடலால் இனிது புலனாதல் காணலாம்.

இருக்கு வேதத்திலுள்ள பதிகங்கள் யாவும் ஆரிய மாந்தராலேயே இயற்றப்பெற்றன அல்ல. இந்திரன் வருணன் முதலான தம் படைத் தலைவர்களின் ஆவிகளின் மேல் ஆரியர் பாடிக் கொணர்ந்த பழம் பாடல்களோடு அவர்களை நன்னெறிப்படுத்தல் வேண்டி இங்குள்ள திராவிட முனிவர்கள் பாடிச் சேர்த்த பதிகங்களும் இருக்கு வேதத்தில் உள்ளன என்பதும், காயத்திரி மந்திரத்தை இயற்றி அதனை இருக்கு வேதத்திற் சேர்த்து அவ்வேதத்திற்கு உயிர்த் தன்மையும் உயர்வுங் கொடுத்தவர் விசுவாமித்திரர் என்னும் பரதகுல அரச முனிவரேயென்பதும் பொது நிலைக்கழக ஆசிரியர் மறைமலையடிகளார் முதலிய அறிஞர் பெருமக்கள் ஆராய்ந்து கண்ட உண்மைகளாகும்.[28]

வாழ்க்கைக்கு நலந்தரும் ஒளியும் வெம்மையும் வழங்கும் தீயினைத் தோற்றுவிக்க எண்ணிய பண்டைக்கால மக்கள், மரக்கட்டைகள் இரண்டினைக் கொண்டு ஒன்றோடொன்று உரசித் தேய்த்து நெருப்பினை உண்டாக்கி அதனாற் பச்சையுணவுப் பண்டங்களைப் பதமாக்கிச் சமைத்துண்ணவும் அதனொளியால் இருள் செறிந்த இராப் பொழுதில் நச்சுயிர்கட்கும் கொலை விலங்குகட்கும் அஞ்சாது விலகியொழுகவும் தெரிந்துகொண்டார்கள். அத்தகைய நெருப்பின் ஒளிப்பிழம்பினையே தமக்கு அண்மையில் வளர்த்து மனக்களிப்புடன் வணங்கத் தலைப்பட்டனர். பெரிய மரத்தின் நிழலில் வட்டமாகக் குழியினைத் தோண்டி அதன்கண் தீயினை வளர்த்து அதற்கு நெற்பொரியும் மலரும் தூவி வழிபட்டனர். நாட் செல்லச் செல்ல அத்தீயினைத் தொடுதற்கும் நீராட்டி வழிபடுதற்கும் ஏற்ப அத்தீச்சுடரையொத்து நீண்டு குவிந்ததோர் சுடருருவினைக் கருங்கல்லில் அமைத்து வேள்விக்

27. திருநாவுக்கரசர், *தேவாரம்*. 5. 100. 8.

28. மறைமலையடிகள், *தமிழர் மதம்*, ப. 141.

குண்டத்தைக் குறிக்கும் முறையில் வட்டவடிவில் அமைக்கப்பட்ட கருங்கற்பீடத்தில் சுடருருவாகிய அக்குழவியினை நிலைபெறச் செய்து நீராட்டி மலர்தூவி உணவுபடைத்து வழிபட்டனர் எனவும் அத்திருவுருவே சிவலிங்கம் என்ற பெயரால் வழங்கப் பெறுவதாயிற்று எனவும் கருதுவர் மறைமலையடிகளார்.[29]

வேள்விக்குண்டத்தில் தீயினை வளர்த்து வேத மந்திரங்கள் கூறித் தீக்கடவுள் மூலமாக இந்திரன் முதலிய தேவர்கட்கு ஆடு முதலிய உயிர்களை வேள்விற் பலியிட்டு வணங்கும் தீ வழிபாடு ஆரிய வினத்தார்க்குரியதொன்றாகும். இவ்வழிபாட்டில் தீயே தெய்வமாகப் போற்றப் பெறுகின்றது. வேதமந்திரங்களால் வேள்வி செய்வோர் வேள்விக் குண்டத்தில் வளர்த்த தீயினையே தெய்வமாகக் கொண்டு போற்றுதல் சிறப்புடைய வழிபாடன்று எனவும், தூய தீயினையே தனது திருமேனிகளுள் ஒன்றாகக் கொண்டு மன்னுயிர்களுக்கு அருள்புரியும் தெய்வமாவான் அட்ட மூர்த்தியாகிய சிவபரம்பொருளே யாதலின் வேள்விக் குண்டத்தில் வளர்க்கப்பெறும் தீ இறைவன் திருமேனிகளுள் ஒன்றெனக் கொண்டு வழிபடுதலே பொருத்தமுடையது எனவும் இவ்வுண்மையுணராது செய்யப்படும் வேதவேள்விச் சடங்குகள் பயனற்றன எனவும் அறிவுறுத்தும் முறையில் அமைந்தது.

> எரிபெ ருக்குவ ரவ்வெரி யீசன
> துருவ ருக்கம தாவ துணர்கிலார்
> அரிய யற்கரி யானை யயர்த்துபோய்
> நரிவி ருத்தம தாகுவர் நாடரே[30]

எனவரும் திருநாவுக்கரசர் அருளிய திருக்குறுந்தொகை யாகும்.

சிவலிங்க வழிபாடு வேதகாலத்திற்கு முற்பட்டதென்றும் சிந்து மக்களிடையே பரவியிருந்ததென்றும் 'வைணவ சைவ சமயங்களின் ஆராய்ச்சி' நூல்

---

29. மறைமலையடிகள், *தமிழர் மதம்*, ப. 142
30. திருநாவுக்கரசர், *தேவாரம்*. 5. 100. 7

தெரிவிக்கின்றது. கற்காலப் பொருள்களில் சிவலிங்கங்களும் கிடைத்துள்ளன என்பதால் வேதகாலத்திற்குமுற்பட்டது சிவலிங்க வழிபாடு என ஆர். ஜி. பந்தர்க்கரும் கருதுகின்றனர்.

மனித இனம் வாழ்ந்திருக்கக்கூடிய இப் பேரண்டத்தின் பெரும் பகுதியில் சிவலிங்க வழிபாடு சிறப்பாகப் பரவி இருந்திருக்கிறது. அது, எகிப்து, சிரியம், பாரசீகம், சிறிய ஆசியா, கிரேக்கம், இத்தாலி ஆகிய நாடுகளில் நெடுங்காலமாகத் தழைத்தோங்கியிருந்தது. அமெரிக்க நாட்டை முதன்முதலில் ஸ்பெயின் நாட்டவர் கண்டுபிடித்தபோது, தெய்வவழிபாட்டிற்கு மிகத் தூய்மையானதாகவும் சமய நெறிக்கு மிக உயர்ந்ததாகவும் உள்ள பொருளாகச் சிவலிங்க வழிபாட்டினை அவர்கள் அங்கே கண்டனர். இதன் பண்பாடு மனித இனத்தை உயர்த்தக் கூடுமெனக் கருதத்தக்க கொள்கையுடனும் தத்துவத்துடனும் இணைந்துள்ளது என மேனாட்டுப் பேராசிரியராகிய வெஸ்ட்ரோப் என்னும் அறிஞர் சிறப்பித்துக் கூறியுள்ளார். பண்டைநாளில் உலக முழுவதும் பரவியிருந்த இச்சிவலிங்க வழிபாடு இப்பொழுது இந்திய நாட்டளவிலும் தமிழர்கள் வாழும் அயல்நாடுகளிலும் ஆங்காங்கே நிலைபெற்றுள்ளது.

தென்னாட்டில் குடிமல்லம், குடுமியான்மலை முதலிய இடங்களிலுள்ள சிவலிங்கங்கள் கி. மு. இரண்டாம் நூற்றாண்டினவை என்பர் ஆராய்ச்சியாளர். அசோகர் கி. மு. 249ஆம் ஆண்டில் தம்மகள் சாருமதி என்பவளுடன் நேபாளத்திற்குச் சென்றபோது அங்குப் பசுபதிநாதர் என்னும் சிவபெருமான் பெயரால் பாசுபதச் சைவமடம் ஒன்று இருந்ததாகவும் சாருமதி அம்மடத்திற்சேர்ந்து துறவு நிலையை மேற்கொண்டதாகவும் வரலாறு கூறுகின்றது. நேபாளம் இக்காலத்திலும் சைவ சமயத்தைப் போற்றும் நாடாக விளங்குகின்றது. வடக்கே இமயம் முதல் தெற்கே குமரி வரையுள்ள இந்தியப் பெருநிலப்பரப்பினுள் பன்னிரண்டு சோதிலிங்கங்கள் இக்காலத்தும் இந்நாட்டு மக்களால் சிறப்பாக வழிபடப் பெற்றுவருதல், சிவலிங்க வழிபாடு நாடு முழுவதும் பரவியுள்ள திறத்தினையும் இந்திய

நாட்டில் உள்ள தெய்வ வழிபாடுகளுள் தொன்மையும் தலைமையும் வாய்ந்தது சிவலிங்க வழிபாடு என்பதனையும் நன்கு வலியுறுத்துவதாகும்.

இலிங்க அடையாளம் தீ மேனியனாகிய சிவபெருமானது ஒளிப்பிழம்பாகிய அருவுருவத் திருமேனியைக் குறிப்பது, தமிழகத்தில் தொடக்க காலத்தில் நடுதறியாகத் தூணுருவில் வழிபடப் பெற்றது, அண்டம் பிண்டம் அகண்டம் ஆகிய அனைத்திலும் அறியாமை இருளை நீக்கி ஞானவொளி பரப்பும் சோதிப் பிழம்பாகக் கருதி வழிபடப் பெறுவது. இவ்வுண்மை வடமொழியிலுள்ள இலிங்கபுராணத்தாலும் திருநாவுக்கரசர் அருளிய இலிங்கபுராணத் திருக்குறுந்தொகையாலும் இனிது விளங்கும்.

சைவ சமயத்திற் பிறந்து சிவபெருமனை வழிபட்டு வந்த தாய் தந்தை ஆகியோர்க்குத் தவப்புதல்வராகத் தோன்றியவர் ததாகதர் என்னும் சிறப்புப் பெயரினராகிய புத்தர் பெருமான். இவர் குழந்தையாயிருந்தபோது தம் தந்தையருடன் சிவபிரான் கோயிலுக்குச் சென்றதாகப் பழைய கல்வெட்டு ஒன்று கூறுகின்றது. கௌதமபுத்தராகிய இவர் தமது அரச வாழ்வினைத் துறந்து மன்னுயிர்கள்பால் அருளுடையராய் உலகம் உய்ய அறிவுரைகளை உபதேசித்து வந்தார். ஆரியப் பார்ப்பனர் வேட்டுவந்த உயிர்க்கொலை வேள்விகள் நிகழவொட்டாமல் தடுத்து அருளொழுக்க நெறியினை விரைந்து பரவச் செய்தார் என்பது வரலாறு.

புத்தசமயத்தினை இந்திய நாட்டிலும் கடல்கடந்த வெளிநாடுகளிலும் பரப்பிய வேந்தர் பெருமானாகிய அசோகன், சிவபெருமானையே வழிபட்டவன் என்பது வின்சன்ஸ்மித் என்னும் வரலாற்று ஆசிரியர் கூற்றால் இனிது விளங்கும்.

ஆரியர் இந்திய நாட்டிற் குடிபுகுதற்கு நெடுங் காலத்திற்கு முன்பே சிவலிங்க வழிபாடு சிறந்து விளங்கிய தென்பதற்குப் பஞ்சாப் மாநிலத்தில் அரப்பா, முகிஞ்தரோ ஆகிய இடங்களில் அகழ்ந்தெடுக்கப் பெற்றுள்ள

சிவலிங்கங்களே சான்றாக உள்ளன. இந்நாட்டிற் குடி புகுந்த ஆரியரின் முன்னோர்கள் தீ மின்னல் இடி மழை முதலிய அஞ்சத்தகும் இயற்கைப் பொருள்களையும் தம் குல முன்னோராகிய இந்திரன் முதலியோரையும் தெய்வமாகக் கொண்டு தம் முன்னோர் பாடிய பாடற்றொகுதியாகிய வேத மந்திரங்களாற் பலவகை வேள்விகளைச் செய்து அவ் வேளவிகளிற் பசு ஆடு முதலிய விலங்கினங்களைக் கொன்று பலியாக இட்டு வழிபட்டனர். வேதநெறிப்படி ஆரியர்கள் நிகழ்த்திய இவ்வேள்விகள் யாவும் உலகிற்கு முழுமுதற் கடவுள் ஒன்றே யென்னும் மெய்யுணர்வின் திறத்தாற் செய்யப்பட்டன அல்ல; பகைவர்காளல் தமக்கு நேரும் அச்சங்காரணமாகவும் தமது பகைவரையழித்து இவ்வுலகிற் பல்வேறு நுகர்ச்சிகளையும் தாமே பெற்று மகிழ்தல் வேண்டும் என்னும் ஆசை காரணமாகவும் செய்யப் பட்டனவே. ஆரியர் இந்நாட்டிற் குடியமர்ந்தநிலையில் மக்கள் தாம்தாம் பெறவேண்டிய பதவிகளை விரும்பிப் பசு ஆடு முதலியவற்றைக் கொன்று ஊனுங்கள்ளும் படைத்துச் செய்யப்படும் வேள்விகளை இந்நாட்டிற்றோன்றிய அருளாளர்களாகிய கௌதம புத்தர், மகாவீரர் முதலிய பெருமக்கள் கடுமையாக எதிர்த்தனர். அப்பெருமக்கள் கொலை வேள்விகளைக் கண்டித்து மக்களுள்ளத்தே மெய்யுணர்வும் எல்லாவுயிர்கட்கும் இன்னல் செய்யாமை யாகிய அருளொழுக்கமும் நிலைபெறச் செய்தனர். உயிர்க்கொலை சூழும் வேதவேள்விகளைக் கண்டிக்கும் நிலையில் அப்பெருமக்களால் வடநாட்டில் அறிவுறுத்தப் பெற்ற தத்துவக் கொள்கைகள் முறையே பௌத்தமும் சமணமும் ஆகும். வடநாட்டிற் புத்த சமண மதங்களின் தாக்குதலால் வலிவிழந்த ஆரியர்களிற் சிலர் தென்னாடு போந்து எழுதாக்கிளவியாகத் தாம் ஓதிவரும் வேத மந்திரங்களின் பயிற்சியினால் தமிழ் வேந்தர்களால் நன்கு மதிக்கப்பெற்று இராசசூயம் முதலிய வேள்விகளைத் தமிழகத்திலும் செய்யத் தொடங்கினர். அந்நிலையில் வடநாட்டிற்றோன்றிய புத்த மத்தினைப் பின்பற்றிய சான்றோர்களும் சமண மதங்களைப் பின்பற்றிய சான்றோர்களும் தமிழகத்திற் சிற்றூர்களிலும் பேரூர்களிலும் நிலைகொண்டு அருட்பண்புக்கு மாறாக ஆரியர்கள்

நிகழ்த்தும் வேத வேள்விகளைக் கண்டித்துரைப்பாராயினர். இவ்வாறு வடநாட்டிலும் தென்னாட்டிலும் வேத வேள்விகட்குக் கடுமையான எதிர்ப்புத் தோன்றுதலைக் கண்ட ஆரியர்கள் வேதநெறிப்படி வேள்விகளைச் செய்யும் வைதிக நெறியே தமக்குரியது எனக் கொண்ட தமது கோட்பாட்டினைச் சிறிது மாற்றிக் கொண்டு உலகுயிர்களை உள் நின்றியக்கும் முழுமுதற் பொருள் ஒன்று உண்டு என இந்நாட்டு முன்னோர் வலியுறுத்திய தெய்வங் கொள்கையினையும் உடன்பட்டு ஏற்றுக் கொண்டனர் எனத் தெரிகிறது.

வேதம் அநாதி எனவும் அதன்கண் விதிக்கப்பட்ட வேள்விச் சடங்குகளே இம்மை மறுமையின்பங்களைத் தரவல்லன எனவும் கூறிவந்த வைதிக சமயத்தார் புத்த சமண மதங்களால் வேத வேள்விச் சடங்குகள் கடுமையாக மறுக்கப்பட்ட நிலையில் வேள்வியிற் பசுக் கொலையைப் பெரிதுந் தவிர்க்க முயன்றனர்; வேதங்கள் சிவபெருமானால் அருளிச் செய்யப்பெற்றனவே எனவும் சிவபெருமானை முழுமுதற்கடவுளாகக் கொண்டு ஊன்பயிலாத தூய வேள்வி செய்தலே எல்லா நலங்களையும் தரும் எனவும் சிவனை முழுமுதற் பொருளாகக் கொண்டு செய்யப்படும் வேள்வி நெய்யினால் வேட்கப்பெறும் ஊன் பயிலாவேள்வியாய் அமைதல் நன்றெனவும் கொண்டனர். தம் கொள்கைகளை யெதிர்த்த புத்தர் சமணர்களைத் தருக்கநூல் முறையில் வென்று தமிழகத்தில் நிலவிய தெய்வங்கொள்கையாகிய சிவநெறியின் சார்பினைப் பெற்றுத் தமது வைதிக நெறியினையும் தமிழகத்தில் நிலைபெறச் செய்து கொண்டார்கள். இச்செய்தி,

> "நன்றாய்ந்த நீணிமிர்சடை
> முதுமுதல்வன் வாய் போகாது
> ஒன்று புரிந்த ஈரிரண்டின்
> ஆறுணர்ந்து ஒரு முதுநூல்
> இகல்கண்டோர் மிகல் சாய்மார்
> மெய்யன்ன பொய்யுணர்ந்து
> பொய்யோராது மெய்கொளீஇ

மூவேழ்துறையு முட்டின்றுபோகிய
உரைசால் சிறப்பின் உரவோர் மருக
நிலைக்கொத்த நின் துணைத் துணைவியர்
நீர் நாண நெய்வழங்கியும்
எண்ணாணப் பலவேட்டும்
மண்ணாணப் புகழ்பரப்பியும்
அருங்கடிப் பெருங்காலை
விருந்துற்ற நின் திருந்தேந்துநிலை
என்றுங் காண்கதில் யாமே"[31]

எனச் சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கவுணியன் விண்ணந்தாயனை ஆவூர்மூலங்கிழார் பாடிய புறநானூற்றுப் பாடலால் இனிது புலனாகும். இவ்வாறு வேதநெறியும் மிகுசைவத்துறையும் இணைந்து வளம்பெறவும் வைதிக சைவநெறியினைப் பழித்துரைக்கும் புத்தம் சமணம் முதலிய புறச்சமயங்கள் தலைமடங்கவும் தனது கல்வித் திறத்தாலும், தூய வேள்வியாலும் இறை வழிபாட்டினாலும் கடைச் சங்ககாலத்திற் புகழ் பரப்பி வாழ்ந்த அருமறையந்தணன் கவுணியர் கோத்திரத்திற் பிறந்த விண்ணந்தாயன் என்பதனை மேலே காட்டிய புறப்பாடலில் ஆவூர் மூலங்கிழார் தெளிவாக விளக்கியுள்ளமை காணலாம். இவ்வாறு தமிழகத்திலே பண்டைக் காலத்திலேயே வைதிக சைவ நெறியினை மேற்கொண்டு வாழ்ந்த அந்தணன் விண்ணந்தாயன் பிறந்தகௌணிய கோத்திரத்தில் வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கக் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் காழிப்பதியில் தோன்றிய அருளாசிரியர் திருஞானசம்பந்தப் பிள்ளையார் என்பது இங்கு ஒப்பு நோக்கியுணரத்தகுவதாகும்.

இந்திய நாட்டில் முதன்முதற் குடியேறிய பழைய ஆரியர்கள் ஆடு முதலிய விலங்கினங்களைக் கொன்று ஊனுங் கள்ளும் படைத்துச் செய்த வேள்விகட்கும் புத்த சமண மதங்கள் தோன்றிக் கொலை வேள்விகளைக் கண்டித்த நிலையில் இடைக்காலத்தில் வாழ்ந்த நான்மறை

31. *புறநானூறு* 166.

முனிவர்கள் எல்லாம் வல்ல இறைவனைத் தீயுருவினனாக அமைத்து நெய்யினைச் சொரிந்து நெல்லும் மலரும் தூவி வழிபட்ட முத்தீவேள்விகட்கும் இடையேயுள்ள வேறுபாடு பெரிதாகும். முன்னர்க் குறிக்கப்பட்ட பண்டை ஆரியர்களின் வேதவேள்வி கௌதமபுத்தர் மகாவீரர் முதலிய அருளாசிரியர்களால் வெறுத்தொதுக்கப்பட்ட கொலை வேள்வியாகும். பின்னர்க் குறித்த நான்மறை முனிவர் இயற்றிய முத்தீவேள்வி தீவண்ணனாகிய சிவபெருமானை முழுமுதற்கடவுளாகக் கொண்டு இயற்றப்பெறும் தூய வேள்வியாகும். இவை இவற்றிடையே யமைந்த அடிப்படையான வேறுபாடுகளாகும். ஆரியக் குழுவின னாகிய தக்கன் செய்த வேள்வி சிவபரம்பொருளை யுடன்படாத நிலையிற் சிதைவுற்ற வைதிக வேள்வியாதலும் சங்க காலத்தில் தமிழ்நாட்டிற் கவுணியன்விண்ணந்தாயன் செய்த வேள்வி சிவபெருமானைப் போற்றும் சைவவேள்வி யாதலும் இங்கு நோக்கத்தக்கன. இந்திய நாட்டில் ஆரியர் குடியேறுவதற்குமுன் நிலைபெற்ற கடவுட் கொள்கை முதலிய திராவிடருடைய வாழ்க்கை முறைகளும் ஆரியருடைய வைதிக ஒழுகலாறுகளும் சங்ககாலத்திலும் அதனையொட்டிய காலத்திலும் தம்முள் ஒன்றோடொன்று உறழ்ந்து கலப்புற்ற திறத்தினைத் தென்னகத்தில் தோன்றிய தொல்காப்பியம் சங்கவிலக்கியம் முதலிய தமிழ்த் தொன்னூல் களும் வடநாட்டில் தோன்றிய உபநிடதம் முதலிய வடமொழி மெய்ந்நூல்களும் நன்கு புலப்படுத்துகின்றன.

வேதத்திற்குப் புறம்பாக வடநாட்டிற் கிளைத் தெழுந்த புத்தம் சமணம் ஆகிய சமயங்கள் தமிழ்நாட்டிற் புகுந்து மெல்லமெல்லப் பெருவழக்குப் பெற்றதனைத் தொடர்ந்து ஆரியரது வைதிக சமயமும் தமிழ்நாட்டில் தொடர்ந்து நிலை பெறுதற்குரிய வழி வகைகளைக் காண்பதாயிற்று. வேத வழிப்பட்ட வேள்விச் சடங்கு களையே வற்புறுத்தி வந்த வைதிக சமயத்தார் தமது கொள்கை நாட்டில் தனித்து நிலைபெறுதற்குரிய வன்மையில்லாதது என்பதனைத் தெளிவாகவுணர்ந்து கொண்டு நெடுங்காலமாக இந்நாட்டு மக்களுள்ளத்திலே நிலைபெற்று வளர்ந்துள்ள சைவம், வைணவம் முதலிய

தெய்வங் கொள்கையின் சார்பினைப் பெற்று நாட்டில் நிலையாக வேரூன்றி நிலைபெறுவாராயினர். வேதநெறிக்கு மாறான பௌத்த சமண மதங்கள் தமிழ்நாட்டில் அரசியலாட்சியில் வேந்தர்களின் சார்பினைப் பெற்று வைதிக நெறியை மட்டுமன்றித் தமிழ் மக்களது தெய்வங்கொள்கை யினையும் கீழ்ப்படுத்த முயன்ற பிற்காலத்தில் வேதநெறிக்குப் புறம்பான புத்த சமண மதங்களுக்கும் வைதிகநெறியோ டிணைந்த சைவ வைணவ சமயங்கட்கும் நேரடியான போர் மூண்டது. அதன் பயனாகப் புத்தம் சமணம் ஆகிய சமயங்கள் வீழ்ச்சியடைவனவாயின.

இடைக்காலத்தில் வாழ்ந்த ஆரியர்கள் திராவிடச் சான்றோரையடுத்துப்பெற்ற மெய்ப்பொருளுணர்வினால் வேள்வியில் தாம் முன்னர்ச் செய்து போந்த பசுக்கொலை யை ஒழித்துத் தமது வேள்விச் சடங்கினைக் கடவுள் வழிபாட்டுடன் தொடர்புபடுத்துவாராயினர். அதன் பயனாக வேள்விக்குண்டத்திற்கும் அதன்கண் வளர்க்கப்பெற்ற தீச் சுடருக்கும் அறிகுறியாகச் சிவலிங்கத் திருமேனியையும் அதன் எதிரே இறைவனைச் சென்றணுகும் தூய உயிருக்கும் முன்னர் வேள்விக் களத்திலே வெட்டப்பட்ட மாட்டிற்கும் அதனைப் பலியிட்ட மேடைக்கும் அடையாளமாக நந்தியின் உருவையும், அதன் பின்னர்ப் பலிபீடத்தையும் கல்லிற் செய்து அமைத்தனர். ஆரியர் வருகைக்கு முன் பண்டைக் குடிமக்களால் மரநீழலிற் சிவலிங்கத் திருவுருவம் மட்டுமே வைத்து வழிபடப் பெற்றது. ஆரியக்குருமாரின் சேர்க்கையால் சிவலிங்கத்தின் முன் வேள்விக்குண்டமும் நந்தியும் பலிபீடமும் பிற்காலத்திற் சேர்த்தமைக்கப்பட்டன எனக் கருத வேண்டியுள்ளது.[32] தமிழகத்திற் சிவபெருமான் திருக்கோயிலிலுள்ள பலிபீட அமைப்பு குறிஞ்சித் திணையொழுகலாற்றில் முருகவேள் வழிபாட்டில் இடம் பெற்ற மறியறுத்தலும், புறத்திணை யொழுகலாற்றில் கொற்றவை வழிபாட்டில் இடம்பெற்ற அவிப்பலியும் ஆகியவற்றின் அடையாளமாகவும் அமைந்திருத்தல் கூடும்

32. மறைமலையடிகள், *தமிழர் மதம்*, ப. 149.

எனக் கருதுதற்கும் இடமுண்டு.

சிவபெருமானைச் சிவலிங்கமாகிய அருவுருவத் திருமேனியிற் பொதுவிடங்களில் வைத்து வழிபட்ட முன்னோர்கள், காலஞ்செல்லச் செல்ல அம்முதல்வனுக் கெனத் தனிக்கோயில் அமைத்த நிலையில் சிவலிங்கத் திருவுருவின் முன்னா நந்தியும் பலிபீடமும் இடம்பெறுவன வாயின. இவ்வழிபாட்டில் சிவலிங்கத் திருவுருவமானது எல்லாம்வல்ல முழுமுதற்கடவுளைக் குறிப்பது. பலிபீடம் அம்முழுமுதற்கடவுளின் திருவருளைப்பெற விழைந்து செல்லும் ஓர் உயிர் தன்னைத் தோற்றமில் காலமாகப் பிணித்துள்ள பசுத்தன்மையாகிய யான் எனது என்னுஞ் செருக்கையும் வெட்டி வீழ்த்தும் ஓர் உயர்ந்த இடத்திற்கு அறிகுறியாகவும், பலிபீடத்தைக் கடந்து சிவலிங்கத்தின் எதிரிலே வைக்கப்பட்டிருக்கும் நந்தி அறியாமையும் செருக்கும் அற்றுத் தூய்தாகிச் சிவத்தின் திருவருட் பேற்றை நாடி முற்பட்ட தூய உயிருக்கு அடையாளமாகவும் அமைக்கப் பெற்றனவாகும். இந்நுட்பம்,

> "ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
> ஆய பசுவும் அடலே றேனநிற்கும்
> ஆய பலிபீடம் ஆகுநற் பாசம்
> ஆய அரன்நிலை ஆய்ந்து கொள்வார்க்கே"[33]

எனவரும் திருமந்திரத்தால் நன்கு விளக்கப்பெற்றுள்ளது. சைவ சித்தாந்தம் கூறும் பதி பசு பாசம் என்னும் முப்பொரு ளிலக்கணங்களையே சிவாலய அமைப்பு உணர்த்துகின்றது என்பதும், சிவலிங்கம், நந்தி, பலிபீடம் அமைந்த சிவாலயங்கள் திருமூலநாயனார் காலத்திற்கு முற்பட்ட தொன்மையுடையன என்பதும் இத்திருமந்திரப் பாடலால் நன்கு புலனாதல் காணலாம்.

திருக்கோயிலில் மூலத்தானமென்னும் கருவறையில் நிறுத்தப்பெற்றுள்ள சிவலிங்கம் முழுமுதற் கடவுளாகிய பதியையும், அதன் எதிரேயுள்ள நந்தி பதியை நாடிச்

33. திருமூலர், *திருமந்திரம்*, 2411.

செல்லும் தூய உயிரான பசுவையும், அதன் பின்னேயுள்ள பலிபீடம் பசுவினால் தொடர்பறுத்துக் கழிக்கப்பட்ட ஆணவமலமாகிய பாசத்தையும் உயர்த்துவன என்பது மேற்குறித்த திருமந்திரத்தாற் புலனாகும்.

திருமூலநாயனார் காலத்துக்கு ஆயிரம் யாண்டு பிற்பட்ட காலப்பகுதியிலே சிவாகமங்களை வடமொழியில் எழுதிக் கோயிற் குருக்கள்மார் சிவபிரான் திருக்கோயில் களைச் சிவனடியார்களின் நெஞ்சத்தாமரையின் வடிவாகவும், அவர்களுடைய பருவுடம்பு, நுண்ணுடம்பு மூலவுடம்புகள் ஆகியவற்றின் அமைப்புடையதாகவும் அமைக்கும் முறைகளையும், அவற்றின்கண் வைகும் பரிவாரத் தெய்வங்களையும் அவற்றை வழிபடும் பூசனை முறை களையும் மேலும் மேலும் பெருக்கி வரையலாயினர். ஆதிசைவக்குருக்கள்மார் பிற்காலத்திற் பெருக்கி வளர்த்த சிவாகம முறைகளின்படி அமைக்கப்பெற்ற சிவபிரான் திருக்கோயில்கள் தென்றமிழ் நாட்டில் மிகுதியாக வுள்ளன. இம்முறையிலன்றி இடைக்கால முறைப்படி சிவலிங்கம் நந்தி பலிபீடம் என்னும் மூன்று மட்டுமே வைத்து அமைக்கப் பட்ட பழைய கோயில்களும் ஆங்காங்கே காணப்படு கின்றன. நந்தியும் பலிபீடமும் இல்லாமல் சிவலிங்கம் ஒன்று மட்டுமேயுள்ள மிகப் பழைய கோயில்கள் சிலவும் அருகிக் காணப்படுகின்றன என மறைமலை யடிகளார் கூறும் தமிழகக் கோயிலமைப்பு முறை நுணுகி ஆராயத்தகுவதாகும்.

“சுவேதாரணியத்தில் உருத்திரனால் எரிக்கப்பட்டு யமன் மாய்ந்தாற்போலக் கரன் இராமனுடைய எரியம்பினால் தாக்கப்பட்டு இறந்தான்” என்ற செய்தி வான்மீக இராமாயணத்திற் குறிக்கப்பெற்றது. இதற்கு உரைவரைந்த தீர்த்தர் என்பவர், ‘பழைய காவிரிப்பூம்பட்டினத்திற்கு அருகிலுள்ள திருவெண்காடே சுவேதாரணியம் என்பது’ என்று விளக்கம் தந்துள்ளார். இதனால் காவிரிப்பூம் பட்டினத்தின் அருகிலுள்ள திருவெண்காடு என்ற ஊர், வான்மீகர் காலத்திலேயே சிவபெருமானுக்குரிய திருக் கோயிலைப் பெற்று விளங்கியது என்பது நன்கு புலனாகின்றது.

"அருச்சுனன் தீர்த்தயாத்திரையாகத் தெற்கே வந்து காவிரியில் நீராடினான், பின்னர்க் கடற்கரை வழியே பல புண்ணியத் தீர்த்தங்களையும் திருக்கோயில்களையும் கண்டு வழிபட்டு மணலூரை யடைந்தான்" என்ற செய்தி வியாசபாரதத்திற் குறிக்கப் பெற்றுளது. பாண்டியன் தன் மகளை மணக்க விரும்பிய அருச்சுனனை நோக்கி "என் முன்னோர் சிவபெருமானை வழிபட்டு அவ்விறைவன் திருவருளால் ஒவ்வொரு பிள்ளையையே பெற்றனர். எனக்கும் ஒரே குழந்தைதான் பிறந்தது. அவளே நீ மணக்க விரும்பும் பெண்" எனக் கூறியதாகப் பாரதம் கூறுகின்றது. வடமொழியிலுள்ள ஆதி காவியமாகிய வான்மீக இராமாயணத்திலும் வியாசபாரதத்திலும் காவிரி முதலிய புண்ணிய தீர்த்தங்களும் திருவெண்காடு முதலிய சிவத்தலங்களும் காலகாலர் முதலிய சிவமூர்த்தங்களும் மக்களால் முறையே வழிபடப்பெற்றமையும், தமிழகத்திற் பலவூர்களிற் சிவபெருமானுக்குத் திருக்கோயில்கள் இருந்தமையும் பாண்டியர் முதலிய தமிழ் வேந்தர்களும் தமிழ்நாட்டு மக்களும் சிவபெருமானைப் பூசனைப் புரிந்து பிள்ளைப் பேறு முதலாகத் தம் உள்ளத்து விரும்பிய நற்பேறுகளை யெல்லாம் பெற்று மகிழ்ந்தனர் என்பது நன்கு புலனாதல் காணலாம்.

"சிந்துநதிப் பள்ளத்தாக்கில் அண்மைக் காலத்திற் கண்டுபிடிக்கப்பட்ட பொருள்கள் சிவலிங்க வழிபாடு பன்னெடுங்காலத்திற்கு முன் இவ்விந்தியப் பெருநிலத்தில் நடைமுறையில் இருந்திருக்க வேண்டும் என்பதனைத் தெளிவாகப் புலப்படுத்துகின்றன. இதுபற்றி மேனாட்டுப் பேராசிரியர் வெஸ்ட்ரோப் என்பவர் பின்வருமாறு கூறுவர் :-

மனித இனம் வாழ்ந்திருக்கக்கூடிய இப் பேரண்டத்தின் பெரும்பகுதியில் சிவலிங்க வழிபாடு பரவியிருந்திருக்கக்கூடிய அத்தகைய அளவில் பொதுவாகச் சிவலிங்க வழிபாடு நிலவியிருந்திருக்கிறது. ஏனெனில் அது, எகிப்து, சிரியம், பாரசீகம், சிறிய ஆசியா, கிரேக்கம், இத்தாலி ஆகிய இந்நாடுகளில் பலகாலங்களாகத் தழைத் தோங்கியிருந்தது. அமெரிக்க நாட்டை முதன் முதலில் ஸ்பெயின் நாட்டவர் கண்டு பிடித்தபோது, அவர்கள்

ஆங்கே தெய்வவழிபாட்டிற்கு மிகத் தூய்மையானதும் சமயத்திற்கு மிக உயர்ந்ததும் ஆகவும் உள்ள பொருளாகச் சிவலிங்க வழிபாட்டைக் கண்டனர். இதன் பண்பாடு மனித இனத்தை உயர்த்தக்கூடுமெனக் கருத்தக்க கொள்கை யுடனும் தத்துவத்துடனும் இணைந்துள்ளது என்பர் 'சிவலிங்க வழிபாடு' என்னும் நூலுடையார்.

சிவலிங்க வழிபாடு இந்திய நாட்டில் மட்டுமன்றி முன்னொரு காலத்தில் உலக முழுவதும் பரவியிருந்தமை யினை ஆராய்ச்சியறிஞர்கள் பலரும் தமது ஆய்வு நூல்களில் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளார்கள். சிவலிங்க வணக்கம் முற்காலத்தில் ஆசியா, ஐரோப்பா, எகிப்து நாடுகளில் பரவியிருந்தது. உரோமர் சிவலிங்கங்களைப் 'பிரியாபஸ்' எனப் பெயரிட்டு வழங்கினர். எகிப்தியரும் உரோமரும் கிரேக்கரும் 'பிரியாபஸ்' என்னும் சிவலிங்கங்களை நாட்டிக் கோயில்கள் அமைத்திருந்தனர். 'பிரியாபஸ்' என்பது இந்தியாவிற் சிவலிங்கங்கள் போன்றது. இஸ்ரவேலர் சிவலிங்கங்களை வைத்து வழிபட்டனர். அசா என்பவன் தன்னுடைய தாயைச் சிவலிங்கத்திற்குப் பலி செலுத்தாதபடி தடுத்து அவ்விலிங்கத்தை உடைத்தெறிந்தான் என்று விவிலிய மறை கூறுகின்றது. இலிங்கத்தின் முன்னால் பலிபீடத்தின் மீது சாம்பிராணி புகைக்கப்பட்டது. மாதத்தின் பதினைந்தாம் நாளில் பலி செலுத்தப்பட்டது. மாதத்தின் பதினைந்தாம் நாள் என்பது இந்து சமயத்தாரது அமாவாசை நாளாகும். இஸ்ரவேலர் வழிபட்ட இடபக்கன்று சைவர்கள் வழிபடும் நந்தியாகும். எகிப்தியரின் ஒசிரிஸ் கடவுளின் ஊர்தியாகிய 'அப்பிஸ்' என்னும் இடபமும் நந்தியேயாகும்.

கொலோனல் என்பார் இலிங்க வழிபாட்டினை அரேபியரின் லாட் அல்லது அல்ஹாட் வழிபாட்டோடு ஒன்றுபடுத்திக் கூறியுள்ளார்.

சிவலிங்க வழிபாடு உரோமருடன் பிரான்சுக்குச் சென்றது. அங்குள்ள கிறித்தவ ஆலயக் கட்டிடங்களில் இலிங்க வடிவங்களை இன்றும் காணலாம். அலக்சாந்திரியாவில் தாலமி நடத்திய திருவிழாவில் 129 முழவுயரமுடைய இலிங்கம் வீதிவலமாகக் கொண்டு

செல்லப்பட்டது. இஸ்ரவேலரது 'பால்' கடவுள் சிவலிங்கமே. விவிலியத்திற் கூறப்படும் 'சியன்' என்னும் தெய்வம் சிந்து நதிமக்கள் வழிபட்ட சிவனேயாவர்.

இந்திய மக்களது சிவலிங்க வழிபாடு உலகிற் பல நாடுகளிலும் பரவியிருந்தமைக்குரிய சான்றுகள் ஆங்காங்கே கிடைக்கின்றன. சீனா, சப்பான், இந்துக் கடலின் தீவுகள், பசிபிக் கடலின் தீவுகள் முதலிய இடங்களில் சிவலிங்க வழிபாடு இன்னும் முற்றிலும் மறைந்துவிடவில்லை. ஆப்பிரிக்க அமெரிக்க மக்களிடையிலேயும் இவ்வழிபாடு ஒரு காலத்திற் பரவியிருந்தது. அசீரிய, யூதேய, சிரிய, சின்ன ஆசிய பாபிலோனிய மக்களிடையிலும் இலிங்க வழிபாடு பரவியிருந்தமை விவிலியமறையால் அறியப்படுகின்றது. சில நாட்களுக்கு முன் பாபிலோன் நாட்டிற் சிவலிங்கங்கள் பல அகழ்ந்தெடுக்கப்பெற்றன. எகிப்தில் சிவலிங்கங்களுடன் புலிகளும் பாம்புகளும் வணங்கப்பட்டன. எகிப்திய சமாதிச் சுவர்களில் சிவலிங்கங்கள் இணைக்கப் பெற்றிருக்கின்றன. பழைய ஐரோப்பாவில் இலிங்க வணக்கம் எங்கும் பரவியிருந்தது. இவ்வணக்கத்தை ஒழிப்பதில் கிறித்தவக் குருமார் ஊக்கங் கொண்டிருந்தனர். கிரீசிலே விசா என்னுமிடத்தில் சிவலிங்கம் தொடர்பான கிரியைகள் இன்றும் நடைபெறுகின்றன. அயர்லாந்திற் கிறித்தவ ஆலயங்கள் பலவற்றுட் சிவலிங்கங்கள் காணப்படுகின்றன. அவை 'சீலநாகிக்' என வழங்குகின்றன. இப்பெயர் சிவலிங்கம் என்பதன் திரிபாகலாம். தொல்பொருள் ஆராய்ச்சியாளர் இங்கிலாந்திலும் ஸ்காட்லாந்திலும் சிவலிங்கங்கள் பலவற்றைக் கண்டுபிடித்தனர். இவை காணப்பட்ட இடங்கள் உரோமர் வாழ்ந்த இடங்களாகும். உரோமர் இலிங்க வழிபாட்டை இங்கிலாந்திற் பரப்பியிருத்தல் கூடும்.

லிதுவேனியமக்கள் 14ஆம் நூற்றாண்டுவரையில் இலிங்க வணக்கத்தை மேற்கொண்டிருந்தனர். பின்பு கிறித்தவ மதத்தைத் தழுவினர். திபேத்து, பூட்டான் என்னும் இடங்களில் சிவலிங்க வணக்கம் காணப்படுகிறது. நேபாளம் அசோகர்க்கு நெடுங்காலந்தொட்டே சிவலிங்க வழிபாட்டுக்குச் சிறப்புரிமையுடைய நாடாகத் திகழ்ந்து

வருகின்றது. இந்தோயிசம் என்னும் சப்பானிய மதத்தில் சிவலிங்கம் முதன்மையானதாக இருந்துள்ளது. அமெரிக்காவில் பேரு, கைத் தீவுகளில் சிவலிங்கம் வழிபடப் பெற்றது. இஸ்பானியர் முதன்முதல் அமெரிக்காவுக்குச் சென்றபோது அங்குச் சிவலிங்கங்கள் வைத்து வழிபடப் பெற்றதைக் கண்டனர். ஆப்பிரிக்காவில் தகோமி என்னுமிடத்தில் இலிங்கம் லெங்பா என்ற பெயருடன் வழிபடப்பட்டது.

'பக்கஸ் கெபன்' என்னும் கடவுள் கெபி என்னுந் தேவியுடன் வழிபடப்பட்டார். பக்கஸ் கடவுளுக்கு இடபமும் புலியும் உரியன. அவர் புலித்தோலையுடுத்துக் கையில் திரிசூலத்தைத் தாங்கியிருந்தார். அவருடன் இடபமும் புலியும் சென்றன. அவருடைய கையில் நீரருந்தும் கமண்டலம் இருந்தது. சின்ன ஆசியாவில் இலிங்கக் கடவுள் கெமோஸ், மெலோச், மொரதொக், ஆதோனியஸ், சிபா, சியஸ் என்னும் பெயர்களுடன் வழிபடப் பெற்றார். இதனால் கெபன் சிவன் எனவும் கெபி கௌரி எனவும் கருதலாம். ஆதோனியர் என்பது அர்த்தநாரீசுவரர் என்பர் வெஸ்ட்ரோப். துர்க்கம்மா எனப் பீடத்தில் எழுதப்பட்ட துர்க்கையின் வடிவம் ஒன்று சில நாட்களுக்கு முன் எகிப்திற் கண்டெடுக்கப்பெற்றது. யூதரது பெத்தெல் என்னும் கல் கடவுளாகக் கருதி வழிபடப் பெற்றது.

மெக்கா நகரின் கோயிலிலுள்ள காபா என்னும் கறுப்புக்கல் சிவலிங்க வடிவில் உள்ளது எனவும், அரேபியர் இதன்கண் பத்தியுடையராயிருந்தமையால் மகமது நபி இதனை அழிக்காது விட்டுவிட்டார் எனவும் கருத இடமுண்டு.

புத்த ஆலயங்களிலுள்ள தூபிகளும் தகோபாக்களும் சிவலிங்க வடிவிலேயே அமைந்துள்ளன. நாகரிகம் பெற்றோர் பெறாதார் ஆகிய எல்லா மக்களாலும் பண்டை நாளிற் சிவலிங்க வழிபாடு மேற்கொள்ளப் பெற்றுளது.

சிவபிரான் திருக்கோயில்களின் கருவறையிற்

சிவலிங்கத் திருவுருவம் ஒன்று மட்டுமே முதன்மையாக நிறுத்தப்படினும் அக்கருவறையை உள்ளடக்கிய விமானத்தின் வெளிப்புடைகளில் வலமிருந்து இடமாக ஆலமர்செல்வன் திருமால் நான்முகன் கொற்றவை முதலிய வேறுபல தெய்வப்படிமங்களும் இடம் பெற்றுள்ளன. கருவறையின் நடுவே அமைந்த சிவலிங்கம் அனற் கொழுந்தின் தோற்றமாகக் கொள்ளும் நிலையில் அமைந்துளது. 'திருவையாறகலாத செம்பொற் சோதீ' எனவும், 'திகழொளியே சிவனே' எனவும் வரும் திருமுறைத் தொடர்கள் இங்குக் கூர்ந்து நோக்கத்தக்கனவாகும். அனற்பிழம்பின் செவ்வொளியைச் சிவனாகவும் அனலில் அடங்கித் தோன்றும் நீலவொளியை இறைவியாகவும் கருதி வழிபட்டனர். இம்முறையில் சிவலிங்கத் திருவுருவத்தின் பின்புறத்தில் அம்மையப்பர் திருவுருவம் இடம் பெறுவ தாயிற்று. சிவலிங்கத் திருவுருவம் அமைக்கப் பெற்றதற்கு நெடுங்காலம் பிற்பட்டு அமைக்கப்பெற்றதே அம்மையப்பர் திருவுருவம் என்பதும், இற்றைக்கு ஏழாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தொன்மையுடையது சிவலிங்கத் திருவுருவம் என்பதும் அதற்கு ஆயிரம் ஆண்டுகள் பிற்பட்டு அமைக்கப்பெற்றது அம்மையப்பர் திருவுருவம் என்பதும் முகிஞ்சதரோ, அரப்பா முதலிய பண்டை நகரங்களை அகழ்ந்து அவற்றின்கண் இருந்த தெய்வத் திருவுருவங்களை எடுத்து வைத்துக் காட்டும் மேனாட்டாசிரியர் ஆய்வுரையினாலும் பண்டைத் தமிழ் நூலாராய்ச்சியாலும் நன்கு தெளியப்படும்.

சீர்காழித் திருக்கோயிலின் திருமலைமேல் அமைக்கப் பெற்றுள்ள திருத்தோணிச் சிகரத்தில் எழுந்தருளியுள்ள அம்மையப்பர் திருவுருவமும் பறம்புமலையாகிய திருக்கொடுங்குன்றத்தில் அமைந்துள்ள மங்கைபாகர் திருவுருவமும் எல்லாம்வல்ல இறைவனை அம்மையப்பர் திருவுருவில் அமைத்து வழிபடப்பெற்றுவரும் தொன்மை வாய்ந்தனவாகும். திருச்செங்கோடு என்னும் மலைமேல் வழிபடப்பெறும் அர்த்தநாரீசுவரர் திருவுருவம், உமையொருபாகர் வழிபாட்டின் தொன்மையினைப் புலப்படுத்துவதாகும்.

"தோலுந் துகிலுங் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையு முடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூ தாய் கோத்தும்பீ!"[34]

என மாணிக்கவாசகர் அருளிய திருப்பாடல் உமையொரு பாகர் திருக்கோலத்தின் எழில் நலத்தினையும் அதன் தொன்மையினையும் விரித்துப் போற்றுதல் காணலாம்.

தமிழகத்தில் மாயோன், சேயோன், கொற்றவை முதலாகப் பல்வேறு திருவுருவங்களில் வைத்து வழிபடப் பெறும், எல்லாத் தெய்வங்களும் முழுமுதற் கடவுளாகிய பரம்பொருள் தன்னை வழிபடும் அன்பர்களின் உள்ளத்திற் கேற்ப மேற்கொண்ட அருள்வெளித் தோற்றமே என்னும் மெய்ம்மையினைத் தெளிந்துணர்ந்தவர்கள் சங்ககாலத் தமிழ் மக்கள். எனவே பல்வேறு வடிவங்களிற் பலவிடங்களிலும் மக்களால் மேற்கொள்ளப்படும் எல்லா வழிபாடுகளும் முழுமுதற் கடவுளாகிய ஒரு பொருளையே சார்ந்து பயன்விளைக்கும் என்பது பண்டைத் தமிழ் மக்களது தெளிவான தெய்வங் கொள்கையாய் அமைந்திருந்தது. இவ்வுண்மையை,

'வேறுபல்லுருவிற் கடவுட்பேணியும்'[35]

எனவும்,

'ஆலமுங் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறுவேறு பெயரின்
எவ்வயினோயும் நீயே'[36]

எனவும் வரும் சங்க இலக்கியங்களால் நன்கு துணியப்படும்.

இறைவனைத் தாயுந் தந்தையுமாகக் கருதி வழிபடும் நிலையில் தந்தையினும் தாயினை முந்தி வழிபடுதல்

34. மாணிக்கவாசகர், *திருவாசகம்*, திருக்கோத்தும்பி, 18.
35. பத்துப்பாட்டு, *குறிஞ்சிப்பாட்டு*, 6.
36. *பரிபாடல்*, திருமால் 67 - 70.

வேண்டும் என்னும் ஆர்வமுடையோர் மிகுதியாக அம்மைக்குத் தனிக் கோயில்கள் சிவபெருமான் திருக்கோயிலின் அகத்தும் புறத்தும் அமைக்கப்பெற்றன. காடுறையுலகமாகிய முல்லை நிலத்தின் தெய்வமாக நீலமேனி நெடியோன் வழிபடப்பெற்றது போலவே காடுகிழாளாகிய கொற்றவையும் நீலநிறம் வாய்ந்த திருமேனியுடையவளாகவும் ஆழியும் சங்கும் ஏந்திய கையினளாகவும் திருவுருவமைக்கப் பெற்று மாயோன் தங்கையாக வழிபடப்பெற்றாள். போரில் வெற்றி நல்குங் கொற்றவையாகிய அன்னையை அமைதி யளிக்கும் நிலையில் சிவனது இடப்பாகத்தில் அமர்ந்தருளிய உமையம்மையாகவும் இயைத்துப் போற்றும் உறவுமுறை சங்க காலத்திற்கு முன்னிருந்தே வழங்கியிருத்தல் வேண்டும் எனக் கருத வேண்டியுள்ளது. சிவபெருமான் தனது சத்தியாகிய உமையம்மையினை ஒருருவிற்கொண்டு அர்த்தநாரீசுவரத் திருமேனியினராக மாதொருபாகராக அருள்புரிதல் போலவே உமையின் தமையன் எனப் போற்றப் பெறுந் திருமாலைத் தனது ஒரு பாகத்தடக்கிய நிலையில் சங்கரநாராயணன் எனச் சிவபெருமான் போற்றப் பெறுகிறார்.

சிவனும் திருமாலும் ஒருருவினராகப் (சங்கர நாராயணராகப்) போற்றப் பெறும் இவ்வழிபாடு, சைவத் திருமுறைகளிலும் நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்திலும் இடம் பெற்றுள்ளது.

> "வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து
> உருவுடனியைந்த தோற்றம் போல
> அந்தி வானமொடு கடலணி கொளாஅ
> வந்த மாலை"[37]

என வருந்தொடர் அந்திவானமும் கருங்கடலும் இயைந்த தோற்றத்திற்கு மாலொருபாகர் (சங்கர நாராயணர்) திருமேனியை மதுரைக் கண்ணத்தனார் உவமை கூறியுள்ளார். எனவே மாதொருபாகர் திருமேனி கடைச்சங்ககாலந் தொட்டுத் தமிழகத்தில் வழிபடப் பெற்று

37. அகநானூறு, 360.

வருகின்றதெனக் கருதவேண்டியுளது. சிவனும் திருமாலும் பொருளால் ஒன்றே என வலியுறுத்தும் முறையில் அமைந்த சங்கநாராயணர் திருவுருவம், அப்பனாகிய சிவனும் அம்மையாகிய சத்தியும் ஞாயிறும் அதன் கதிரும் போலப் பொருளால் ஒன்றேயென வற்புறுத்தும் உமையொருகூறர் (அர்த்தநாரீசுவரர்) திருவுருவ அமைப்பினை அடியொற்றிய தாகும். மாயோன் தங்கை மாயோள் எனவும் நாராயணன் தங்கை நாராயணி யெனவும் காத்தற் கடவுளாகிய திருமாலின் அமிசமாகக் கொண்டு போற்றப்பெறும் கொற்றவை சிவனுக்குரிய கொன்றையும் திருமாலுக்குரிய துளவமும் சேரத் தொடுத்த மலர் மாலையைச் சூடியவளாகவும் திருமால்போன்று ஆழியும் வளையும் ஏந்திய கையின ளாகவும் சிவபெருமானைப் போன்று நஞ்சுண்டு கறுத்த கண்டமுடையவளாகவும் சிவபெருமான் கூற்றிலும் திருமால் நிலையிலும் ஒருங்கு வைத்துச் சிலப்பதிகார வேட்டுவ வரியிற் போற்றப்பெற்றுள்ளமை காணலாம். சிவனும் உமையும் ஒருவராகத் திகழும் அர்த்தநாரீசுவரர் திருவுருவினைப் போன்றே சிவனுடன் திருமாலையொரு கூற்றினராகக் கொண்டு போற்றும் சங்கரநாராயணர் திருவுருவும் அன்பர்களால் ஓருருவாக இயைத்துப் போற்றப் பெறுவதாயிற்று. சிவ பரம்பொருள் ஒன்றே சத்தியும் சிவமும் என இருமைத்தன்மையில் வைத்து வணங்கப் பெறுதல் போன்று முழுமுதற் பொருள் ஒன்றே சிவனும் திருமாலும் என இருமை நிலையில் வைத்து வணங்கப் பெறுகின்றது என்னும் உண்மை மாதொருகூறர் (அர்த்தநாரீசுவரர்) மாலொருகூறர் (சங்கர நாராயணர்) ஆகிய திருவுருவ அமைப்புக்களால் இனிது புலனாகும்.

"கிழக்கே விடியற்காலையிலே இளஞ்செவ்வி யுடையதாய்ச் செஞ்சுடர் விரிந்து திகழக் கடலிடையே தோன்றும் ஞாயிறு, தன் கீழுள்ள கடல்நீர் நீலமும் பசுமையும் கலந்த நிறத்தினதாய்த் துலங்கா நிற்பக் காணப்படும் மிக அழகிய காட்சி, அழகேயுருவாகிய இறைவன் எழில்கிளர் தோகையினையுடைய நீலமயிலின்மேல் அமர்ந்து தோன்றினாற் போலும் தெய்வத் தோற்றத்தினைப் புலப்படுத்தி நிற்றலின், வைகறை விடியலில் மலர்தலையுலகின்

மாயிருள் நீங்கத் தோன்றும் பலர்புகழ் செஞ்ஞாயிறை மைவரையுலகின் தெய்வமாகிய சேயோனாகவும் கதிரவனுக்குக் கீழே என்றும் நீலநிறக் கடலே சேயோனது ஊர்தியாகிய மயிலாகவும் கருதிக் காலைக் கதிரவனைச் சேயோனாக எண்ணிப் போற்றுதல் தமிழ் ஞாலத்தவர் மரபாயிற்று. சேயோனாகிய முருகப் பெருமான் வைகறைப் பொழுதிலே மாயிருள் நீங்கத், தோன்றும் இளஞாயிற்றின் தோற்றமுடையவனாகத் திருமுருகாற்றுப்படையிற் போற்றப் பெற்றுள்ளமை அம்முதல்வன் என்றும் இளையோனாக உலக வாழ்க்கையிலீடுபடும் மக்கட் குலத்தார்க்கு மெய்யுணர்வென்னும் வேற்படையினால் அச்சமகற்றி அறிவும் ஆண்மையும் நல்கி அவர்தம் வாழ்வில் முன்னியது முடித்தருளும் பெற்றியனாகப் போற்றப்பெறும் செந்தமிழ்க் கடவுளாகத் திகழ்கின்றான்.

இனி, கதிர் சாயும் காலமாகிய மாலை வேளையில் மேற்கே காணப்படும் கதிரவனே தன் செவ்வொளி தோய்ந்த முகிற்குழாங்கள் வானமுகட்டின் நாற்புறத்தும் செக்கர்ச் சடையெனச் சிவந்துமிளிர அம்முகிற் குழாங்களின் இடையே தோன்றும் வெண்பிறையானது அவிர் சடைக்கற்றைமேல் நிவந்து தோன்றும் வெண்பிறையென விளங்கா நிற்கச் சிவனெனும் நாமந் தனக்கேயுடைய செம்மேனியம்மானை மனங்கொள்ளச் செய்யும் தெய்வத் தோற்றமுடையனாகத் திகழ்தலின் சிவநெறிச் செல்வர் களால் சிவன் எனவே வைத்து வழிபடப் பெறுவானாயினன். இவ்வுண்மை,

> "அருக்கன்பாதம் வணங்குவர் அந்தியில்
> அருக்கனாவான் அரனுருவல்லனோ"[38]

எனவரும் அப்பர் அருள்மொழியினால் நன்கு புலனாதல் காணலாம்.

காலையில் தோன்றும் இளஞாயிறு, இருளிற் றுயிலும் மன்னுயிர்களைத் தன் ஒளிக்கதிர்களால் இருள்நீக்கி

38. திருநாவுக்கரசர், தேவாரம்

யெழுப்பிப் பல்வேறு தொழில்களில் ஈடுபடுத்தி வாழ்க்கையில் அச்சமகற்றி வெற்றி நல்கி வையத்து வாழ்வாங்கு வாழ்தற்கு உதவுமாறு போலவே, என்றும் இளையோனாகிய சேயோனும் மக்கட்குலத்தார் குற்றமற்ற கோட்பாடுகளால் தாம் தாம் மேற்கொண்ட தொழில்கள் வெற்றி பெற முடித்து வையத்து வாழ்வாங்கு வாழும் வண்ணம் அவர்தம் மனத்தகத்தே இளஞாயிறாகத் தோன்றி அவர்தம் அறியாமையிருளை நீக்கி அச்சந்தவிர்த்து அவர்கள் உள்ளத்தே எண்ணியவனைத்தையும் இனிதே முடித்தருள் கின்றான் எனச் செந்தமிழ்ப்பனுவல்கள் போற்றுகின்றன. ஆதலால் காலைக் கதிரவனது தோற்றம் முன்னியது முடித்தருளும் முருகப் பெருமானது தோற்றப் பொலிவுக்கு உவமையாயிற்று. பகலெல்லாம் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டு உழைத்து இளைத்த மக்கட்குலத்தார் தம் உடல் இளைப்பும் உள்ளக் கவலையும் நீங்கி ஒய்வுபெறும் நிலையில் மாலைப் பொழுதில் ஞாயிற்றின் தோற்றம் அமைதி வழங்குமாறு போன்று, உலக வாழ்க்கையிற் பலப்பல பிறவிகளையெடுத்து அல்லலுற்ற மாந்தர் 'எம்பெருமானே எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தோம் எங்களது பிறவிப் பிணிப்பகற்றிப் பிறவாநெறியினை அளித்தருள்வாயாக' என ஐம்பொறிகளையடக்கிய செம்புலச் செல்வர்களாய் மனங்குவிந்து போற்றி ஒருமைநிலைபெற்று அமைதிபெறும் நிலையில் அமைந்தது சிவவழிபாடாகும். எனவே, காலை இளஞாயிற்றின் தோற்றம் என்றும் இளையோனாகிய சேயோன் திருமேனியையும், மாலை ஞாயிற்றின் முதிர்ந்த செவ்வித்தாவிய அந்தி வானத் தோற்றம் முது முதல்வனாகிய சிவபெருமானது செம்மேனியையும் குறிப்பனவாக இலக்கியங்களிற் குறிக்கப்பெறுதலின் காலையிளங்கதிரவனை என்றும் இளையோனாகிய முருகன் எனவும் மாலை முதிர் கதிரவனை முருகனுக்குத் தந்தையாகிய சிவபெருமான் எனவும் தமிழ் முன்னோர் கருதிப் போற்றினர் எனத் தெரிகிறது. காலை ஞாயிறும் மாலை ஞாயிறும் கால வேறுபாட்டால் இரு நிலையினதாகக் காணப்படினும் பொருளளவில் இரண்டும் ஒன்றேயாதல் போன்று சேயோனும் சிவனும் இருதெய்வங்களாக வைத்து வணங்கப்பட்டாலும் இருவரும் ஒருவரே யென்பது

சேயோன் சிவன் என வழங்கும் பெயரொற்றுமையாலும் இனிது புலனாகின்றது. முருகனுக்குரிய சேயோன் என்னும் பெயர் செம்மை நிறம் வாய்ந்த திருமேனியையுடையான் என்னும் பொருளது. சிவன் என்னும் பெயரும் சிவந்த நிறத்தினன் என்னும் பொருளையே தருகின்றது. எனவே சொல்லொற்றுமையாலும் பொருளொற்றுமையாலும் சேயோனாகிய முருகனும் சிவனாகிய இறைவனும் ஒரே முழுமுதற் கடவுளாகக் கருதப்பெற்றமை காணலாம். குமரனாகிய முருகனும் அவன் தந்தையாகிய சிவனும் முழுமுதற் கடவுளின் இருவேறு கோலங்களே என்னும் மெய்ம்மையினைப் புலப்படுத்தும் முறையில் அமைந்ததே கந்தபுராண வரலாறாகும். முருகப் பெருமானைக் குறித்து வழங்கும் திருப்பெயர்களுள் 'கந்தன்' என்பதனைத் தமிழ்ச் சொல்லாகக் கொண்டு கந்தன் - தூண்வடிவில் நிறுத்தப் பட்ட கந்தில் உறையும் தெய்வம் எனப் பொருள் கொள்ளுதற்கும் இடமுண்டு. **"வல்வேற் கந்தன் நல்லிசையுள்ளி"** எனவரும் தொடரைக் கூர்ந்து நோக்குங்கால் 'கந்தன்' என்பது சங்க காலத்திலேயே தெய்வப் பெயராக மக்களுக்கு இட்டு வழங்கப் பெற்ற தென்பது நன்கு உய்த்துணரப்படும்.

குறிஞ்சி நிலத் தெய்வமாகிய சேயோனை நிலங்கடந்த நிலையில் முழுமுதற் கடவுளாகப் போற்றப்பெறும் சிவபெருமானுடைய திருமகனாகக் கொண்டு வழிபடும் நிலையேற்பட்டபின் சிவபெருமான் திருக்கோயிலின் அகத்தும் புறத்தும் முருகப் பெருமானது திருவுருவம் இடம்பெறுவதாயிற்று. இவ்வாறே முருகப் பெருமான் திருக்கோயில்களிலும் அம்முதல்வனது தந்தை என்ற முறையில் சிவலிங்கத் திருவுருவமும் தாய் என்ற முறையில் கொற்றவை திருவுருவமும் தாய்மாமன் என்ற முறையில் திருமால் திருவுருவமும் இடம் பெறுவனவாயின. திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாயாகிய திருச்செந்தில், திருவாவினன்குடி, திருவேரகம், திருச்செங்கோடு முதலிய குன்றுகள் சங்க காலத்தில் முருகப் பெருமானுக்குரிய சிறப்புடைய திருக்கோயில்களாக வழிபடப்பெறும் தொன்மையுடையனவாகத் திகழ்கின்றன.

இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன் மதம் என்ற சொல் சமயக் கொள்கை என்ற பொருளில் வழங்கப் பெற்றிலது. கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியதாகக் கருதப்படும் மணிமேகலையில்தான் 'சமயம்' என்ற சொல் முதன்முதல் ஆளப்பெற்றுளது. கடவுளைப் பற்றியோ உலகத்தைப் பற்றியோ உயிர்களைப் பற்றியோ மக்கட் குழுவினர் கொண்ட கொள்கையினையும் தாம் தாம் மெய்யெனத் துணிந்துள்ள கொள்கை பற்றிய ஒழுகலாறு களையும் குறித்து வழங்கப் பெறுவதே சமயம் என்ற சொல்லாகும். பண்டைத் தமிழியல் நூலாகிய தொல் காப்பியத்திலும் அதன்பின்னர்த் தோன்றிய சங்கத் தொகை நூல்களிலும் மதம் என்ற சொல்லோ சமயம் என்ற சொல்லோ இடம்பெறவில்லை. பலவகைச் சமயங்களும் தோன்றி அவ்வச் சமயங்களின் பெயரால் தமிழ் மக்கள் தம்முள் தாம் பிரிவுபடுதற்கு முன்னரே இயற்றப்பெற்ற தொன்மையுடையன தொல்காப்பியமும் சங்கத் தொகை நூல்களும் என்பது நன்கு துணியப்படும்.

தொல்காப்பியனார் காலத்திலே மாயோன், சேயோன், இந்திரன், வருணன் ஆகிய நானிலத் தெய்வங்களின் வழிபாடும் கொற்றவை வழிபாடும் நில வெல்லையினைக் கடந்த பொதுமை நிலையிற் சிவ வழிபாடும் நிலைபெற்று வழங்கின என்பது முன்னர் விளக்கப்பெற்றது. இவ்வழிபாடுகள் யாவும் பலதிறமக்களும் தம் தம் சூழ்நிலைக்கும் தாம்தாம் உள்ளத்திற் கருதிய தெய்வத் தோற்றத்திற்கும் ஏற்ப மேற்கொண்டுள்ள தெய்வ வழிபாடுகள் என்ற பொதுமை நெறி என்ற அளவில் நிகழ்ந்தனவேயன்றிப் பிற்காலத்திற் போன்று குறிகளாலும் அடையாளங்களாலும் வேறுபட்ட தனிக் கொள்கையினை யுடைய சமயங்களாக அவை வழங்கப்பெறவில்லை. அதனால் மக்களின் ஒற்றுமையைக் குலைக்கும் நிலையில் அவை வேறுபட்டுக் காணப்படவில்லையென்பதும் இங்கு மனங்கொள்ளத்தகுவதாகும்.

இனி, கடைச் சங்க காலத்தையடுத்துத் தோன்றிய சிலப்பதிகாரம், மணிமேகலை என்னுங் காப்பியங்களில்தான்

சிவ வழிபாடு, திருமால் வழிபாடு, கொற்றவை வழிபாடு, செவ்வேள் வழிபாடு என்னும் இவ்வழிபாடுகளும் இவற்றின் வேறாகச் சமணமும் புத்தமும் வேதநெறிபற்றிய கொள்கைகளும் தத்துவ அளவில் தனித் தனிச் சமயங்களாக வேறுபடுத்துப் பேசப்படுகின்றன. சிவ வழிபாடு, திருமால் வழிபாடு, கொற்றவை வழிபாடு, செவ்வேள் வழிபாடு என்னும் நான்கும் தம்முள் உறவுமுறைத் தொடர்புடையன வாகவும் இவற்றுட் சிவவழிபாடொன்றுமே தலைமைச் சிறப்புடையதாகவும் திகழ்ந்தமை இவையன்றி ஞாயிற்று வழிபாடு, திங்கள் வழிபாடு, மழை வழிபாடு, இந்திரவிழா, காமவேள்விழா என்பன அக்காலத் தமிழ் மக்களால் கொண்டாடப் பெற்றன என்பதும் தெய்வச் சிறப்புடைய ஊரைப் போற்றுதலும் தீதுநீர் வையை கங்கை ஆறாட்டும் கடலாட்டும் ஆகிய வழிபாட்டுச் சடங்குகளும் அக்கால மக்களால் மேற்கொள்ளப்பெற்றன என்பதும் சங்கத் தொகை நூல்களாலும் சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் இவ்விருகாப்பியங்களாலும் நன்குணரப்படும்.

வடநாட்டில் வைதிக நெறிக்கு எதிராகத் தோன்றிய சமணபுத்த சமயங்கள், தத்தம் கொள்கைகளைப் பரப்பும் நோக்குடன் தமிழகத்தில் சங்ககாலத்தில் வேரூன்றின. வேரூன்றிய பின்னர்த் தம் சமயக் கொள்கையைப் பரப்பும் அளவில் அமைந்துவிடாது, இங்குள்ள தெய்வங் கொள்கையினையும் புறம்பழிக்கத் தொடங்கின என்பது, சிலப்பதிகாரத்தில் மாங்காட்டு மறையோன் கூற்றைப் புறக்கணித்துப் பேசிய கவுந்தியடிகள் கூற்றால் உய்த்துணரப்படும். சிலப்பதிகாரத்தையடுத்து மணிமேகலைக் காப்பியம் இயற்றப் பெற்ற காலத்தில், தமிழகத்திற் பல்வேறு சமயவாதிகளும் மக்கள் பேரவையிலே தத்தம் சமய வுண்மைகளைக் குறித்து உறழ்ந்து பேசுதற்கேற்ற வாய்ப்பு காவிரிப்பூம் பட்டினம் முதலிய தமிழகப் பேரூர்களில் நிகழும் இந்திரவிழா முதலிய திருவிழாக்காலங்களில் நாடாள் வேந்தரால் அளிக்கப்பெற்றதென்பது,

"ஒட்டிய சமயத்துறுபொருள் வாதிகள்
பட்டி மண்டபம் பாங்கறிந்தேறுமின்"[39]

எனவரும் மணிமேகலைத் தொடரால் இனிது புலனாகின்றது. கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து முன்னர் இல்லாத சமயப் பகுப்புக்களும் மத மாறுபாடுகளும் இத்தென்றமிழ் நாட்டிலே தோன்றித் தமிழ் மக்களது ஒற்றுமையுணர்வைச் சிதைத்து அவர்களை ஒருவரோ டொருவர் மாறுபடச் செய்து அலைக்கழிக்கலாயின.

அசோகவேந்தன் காலந்தொடங்கிக் கி. பி. முதல் நூற்றாண்டு வரையில் ஏறக்குறைய முந்நூறாண்டுகள் தமிழகத்தில் குடியேறி இந்நாட்டு மக்களோடு ஒன்றி அமைதியாய் வாழ்ந்த புத்த சமணத் துறவிகள், பாண்டிய நாட்டிலும் சோழ நாட்டிலும் தமிழ் வேந்தரது அரசுநிலை குலையத் தொடங்கிய நிலயில் தமிழ் நாட்டின்மேற் படையெடுத்துவந்த அயலவராகிய கருநட மன்னர் முதலியோரது துணைகொண்டு தம் சமயக்கொள்கைகளை மிக முயன்று தமிழகத்திற் பரப்பும பணியில் ஈடுபடலாயினர்; தமது கொள்கைக்கு இணங்காத தமிழ் மக்களையெல்லாம் தம்மதங்களில் திருப்புதற்கு அரசியற் சார்பு பெற்றுத் தீய முறைகளையெல்லாம் கையாள்வாராயினர். இதனால் தமிழாசிரியர்க்கும் சமண புத்த சமயத்தார்க்குமிடையே வழக்குகளும் எதிர் வழக்குகளும் அடுத்தடுத்து நிகழ்ந்தன. அதனால் ஒருசார் கொள்கையினையுடையார் பிறிதொரு கொள்கையாளரிடமிருந்து தம்மை வேறுபடுத்துத் தம்மை உயர்த்திக் கோடற்கும் தம் கொள்கையினை யுடன்படாத பிறரைத் தம்மினின்று வேறுபிரித்துக் காட்டுதற்கும் சைவர், வைணவர், புத்தர், சமணர், வைசேடிகர், நியாயவாதிகள், உலகாயதர், மாயாவாதிகள் என்றாங்கு வெவ்வேறு குழுவினர்க்கு வெவ்வேறு சமயப் பெயர் கொடுத்து வழங்கும் நிலை சமயவாதிகளிடையே நிலைபெற வேரூன்றலாயிற்று. சமயம், மதம் என்ற பெயர்களும் அப்பெயர்களாற் பகுத்துரைக்கப்படும் பிரிவினைகளும் இன்றி எல்லோரும்

39. மணிமேகலை, I 60 - 61.

ஒன்றுபட்ட பொதுமையுணர்வினராய் எல்லாம் வல்ல ஒரு முழுமுதற் கடவுளையே பல்வேறு வடிவிற் பல்வேறு பெயர்களில் வணங்கிக் கொண்டு அமைதி நிலையில் வாழ்ந்த தமிழ் மக்களிடையே வடக்கிருந்து வந்து நிலைபெற்ற சமண புத்த சமயத்தவர்களாலும் அவர்களோடு முரண்பட்டு வந்த வைதிகக் குழுவினராலுமே பல்வேறு மதங்களும் மதப் போர்களும் இந்நாட்டிற் கிளைத்து வளர்ந்தன. இவ்வாறு இந்நாட்டில் முரண்பட்டு வளர்ந்துள்ள பல்வேறு மதங்களும் வடக்கிருந்து தமிழகத்திற் குடியேறின. அயலவர்களாலேயே பல்கின என்பதற்கு, அம்மதங்கள் பலவும் வடமொழிப் பெயர் கொண்டு உலவுதலும், அம்மதங்களைப் பற்றிய நூல்களெல்லாம் வடமொழியில் எழுதப்பெற்றிருத்தலுமே உறுபெறுஞ்சான்றாகும். இதனை நன்குணர்ந்த சுவாமி விவேகானந்தர் மதச் சண்டைகளும் சாதி வேற்றுமைக் கலகங்களும் பல்குதற்கு ஒருபெருங் கருவியாய் அமைந்தது வடமொழியே எனவும், அம்மொழி நூல்கள் தொலைந்துபோகுமானால் இப்போராட்டங்களும் தொலைந்து போகும் எனவும் வருந்திக் கூறியுள்ளார்.[40] பழைய தமிழ் நூல்களிற் சமயப் போருக்காவது சாதிச் சண்டைக்காவது இடமில்லை என்பதனைச் சங்க இலக்கியங்களால் நன்குணரலாம்.

சிவலிங்க வழிபாடு இன்னவுரு இன்னநிறம் என்று அறிய வொண்ணாத இறைவனைத் தூணுருவில் நிறுத்தி வழிபடும் அருவுருவ வணக்கமாதலின், அவ்வணக்கம் பண்டைக்காலத்தில் சமய வேறுபாடில்லாத பொதுமை வாய்ந்த கடவுள் வழிபாடாகவே கருதப் பெற்றுவந்ததெனக் கருதவேண்டியுள்ளது.



40. மறைமலையடிகள், *தமிழர் மதம்*, ப. 22.

# தொல்காப்பியனார் கூறும் வழிபாட்டு நெறிகளும் தத்துவக் கொள்கைகளும்

உலக மக்களால் மதிக்கத்தகும் பொருள்கள் எல்லாவற்றையும் முதற்பொருள், கருப்பொருள், உரிப் பொருள் என மூவகைப் பொருள்களாகப் பண்டைத் தமிழாசிரியர்கள் பகுத்து ஆராய்ந்தனர். அவற்றுள் முதற் பொருள் என்றது மன்னுயிர்களின் வாழ்க்கைக்கு நிலைக் களமாகவுள்ள நிலமும் காலமும் ஆகிய இருதிறப் பொருள்களையும், கருப்பொருள் என்றது நிலமும் காலமுமாகிய அம்முதற்பொருள்களையிடமாகக் கொண்டு அவற்றின் சார்பிற் கருக்கொண்டு தோன்றும் புல் முதல் மக்கள் ஈறாகவுள்ள உயிர்ப் பொருள்களையும் உயிரல் பொருள்களையும். உயிர்ப் பொருளும் உயிரல் பொருளும் ஆகிய யாவும் நிலமும் காலமுமாகிய முதற்பொருளை நிலைக் களமாகப் பெற்றுக் கருக்கொண்டு தோன்றுவனவாதலின் கருப்பொருள் எனப்பட்டன. இவ்வுலகில் மெய்வாய் கண் மூக்குச் செவியென்னும் ஐம்பொறியறிவுடன் மனவுணர்வு எனப்படும் ஆறாவதறிவினையும் பெற்றுள்ள உயர்திணை மக்களுக்குரிய அகமும் புறமுமாகிய ஒழுகலாறுகளே உரிப்பொருள் என வழங்கப்படும். மக்கட் குலத்தார் வாழும் நிலத்திற்கும் காலத்திற்கும் ஏற்ப அவர்தம் உள்ளத்துணர்வு களும் செயல்முறைகளும் ஓரொழுங்குபெற அமைதல் இயல்பு. இந்நுட்பத்தினை ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்திற்கு முற்பட்ட தமிழ்ச் சான்றோர்கள் நன்குணர்ந்து வெளியிட்டுள்ளார்கள் என்பதினை மேற்கூறிய முதல்கரு உரி என்னும் மூவகைப் பொருட்பாகுபாட்டால் உய்த்துணர்ந்து கொள்ளலாம். மாந்தர் வாழும் நிலத்தியல்புக்கேற்ப அவர்தம் மனத்தியல்பாகிய தெய்வக் கொள்கையும் வழிபாட்டு நெறிகளும் அவற்றின் வழிப்பட்ட தத்துவக் கொள்கைகளுந்

தோன்றி நிலைபெறுவனவாதலின் தெய்வக் கொள்கையினை அவ்வந்நிலத்துக்குரிய கருப்பொருள் வகைகளுள் முதன்மையுடையதாகப் பண்டைத் தமிழியல் நூலாசிரியர்கள் பகுத்துரைத்துள்ளார்கள். ஆசிரியர் தொல்காப்பியனாரும்,

> தெய்வம் உணாவே மாமரம் புள் பறை
> செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
> அவ்வகை பிறவுங் கருவென மொழிப

எனவரும் நூற்பாவில் மக்கள் வாழ்வுக்கு இன்றியமையாத உணவுக்கு முன் உயிர்க்குயிராக வழிபடப்பெறுந் தெய்வத்தை முதலாவதாக வைத்து எண்ணியுள்ளமை இங்குக் கூர்ந்து நோக்கத்தகுவதாகும்.

தமிழகத்திற் பண்டைநாளிற் காடும் காடு சார்ந்த பகுதியுமாகிய முல்லை நிலத்தில் மாயோன் எனப் போற்றப்பெறும் திருமால் வழிபாடும், மலையும் மலை சார்ந்த பகுதியுமாகிய குறிஞ்சி நிலத்தில் சேயோன் எனப் போற்றப்பெறும் செவ்வேள்வழிபாடும், வயலும் வயல் சார்ந்த பகுதியுமாகிய மருதநிலத்தில் வேந்தன் (இந்திரன்) வழிபாடும், கடலும் கடல் சார்ந்த பகுதியுமாகிய நெய்தல் நிலத்தில் வருணன் வழிபாடும் தோன்றி வழங்கின. நானிலமக்களும் தாம் தாம் வாழும் நிலத்திற்கேற்ப அமைத்துக்கொண்ட இத்தெய்வ வழிபாடுகளை,

> "மாயோன் மேய காடுறை யுலகமும்
> சேயோன் மேய மைவரை யுலகமும்
> வேந்தன் மேய தீம்புன லுலகமும்
> வருணன் மேய பெருமண லுலகமும்
> முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
> சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"[1]

எனவரும் சூத்திரத்தில் தொல்காப்பியனார் வகுத்துக் கூறியுள்ளார். நானில மக்களும் தாம் தாம் வாழும் நிலத்தியல்புக்கேற்ப வகுத்தமைத்துக் கொண்டன

1. தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல் 5.

மேற்குறித்த தெய்வ வழிபாடுகள் என்பதும், இங்குக் குறிக்கப்பெற்ற தெய்வங்களுள் உயர்வு தாழ்வு கற்பித்தல் பண்டைத் தமிழ் நூலோர் கருத்தன்று என்பதும் மேல் எடுத்துக் காட்டிய தொல்காப்பியச் சூத்திரத்தால் நன்கு புலனாம். மேற்குறித்த தெய்வப் பெயர்களுள் மாயோன், சேயோன் என நிறப்பண்பு பற்றிய பெயர்களும் வழங்கப் பெறுதலாலும் நிறப்பண்பு வடிவினை நிலைக்களமாகக் கொண்டல்லது புலப்படாதாதலானும் இத்தெய்வங்களுக்குத் திருவுருவமைத்து வழிபடும் வழக்கம் தொல்காப்பியனார் காலத்துக்கு முற்பட்ட தொன்மையுடையதென்பது நன்கு துணியப்படும்.

காடுறையுலகமாகிய முல்லை நிலத்துக்கோவலர், தம்மால் மேய்க்கப் பெறும் ஆனிரைகள் நோயின்றி வளர்ந்து பாற்பயன் தருதல் வேண்டிக் காயாம் பூவண்ணனாகிய மாயோனைப் பரவிக் குரவைக் கூத்தாடுதலும், மைவரை யுலகமாகிய குறிஞ்சி நிலத்துக் குறவர்கள் மலரின் உள்ளிருந்தெழும் நறுமணம் போன்று உயிர்க்குயிராய் விளங்குந் தெய்வமணமாகிய வெறியினையறியுஞ் சிறப்புடைய வேலனையழைத்து வெறியாடல் நிகழ்த்திச் செங்காந்தள் நிற வண்ணனாகிய செவ்வேளை வழிபடுதலும், மருதநிலத்து வாழும் உழவர்கள் முறை செய்து காப்பாற்றும் இறைவனென மலர்தலையுலகிற்கு உயிரெனச் சிறந்த வேந்தனை வழிபடுதலும்,நெய்தல் நிலத்துப் பரதவர் தமது வலைவளஞ் சிறத்தல் வேண்டிக் கடற்றெய்வமாகிய வருணனை வழிபடுதலும் பண்டைநாளில் தமிழகத்து நானில மக்கள் மேற்கொண்டொழுகிய தெய்வ வழிபாடுகளாகும். இவ்வழிபாடுகளோடு அச்சமகற்றி வென்றி நல்கும் கொற்றவையாகிய பழையோள் வழிபாடும் தறுகண்மை மிக்க தமிழ் மறவர்களால் மேற்கொள்ளப்பெற்றது. குறிஞ்சிநிலத் தெய்வமாகக் கொண்டு போற்றப் பெறும் முருகவேள் வழிபாட்டின் சிறப்பினை அம்முதல்வனை வழிபடும் வேலன்மேல் ஏற்றி 'வெறியறிசிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டயர்ந்த காந்தள்' என்ற தொடராலும், காயாமலர்வண்ணனாகிய மாயோனது காத்தற் சிறப்பினை 'மாயோன் மேய மன்பெருஞ்சிறப்பின், தாவாவிழுப்புகழ்ப்

பூவை நிலை' என்ற தொடராலும், கொற்றவை வழிபாட்டின் பயனாகப் போர்மறவர்க்குளவாகும் தறுகண் உணர்வினைச் 'சிறந்த கொற்றவை நிலை' என்ற தொடராலும் தொல்காப்பியப் புறத்திணையியலில் ஆசிரியர் தொல் காப்பியினார் சிறப்பாக எடுத்துக் கூறியுள்ளார்.

தெய்வம் அவ்வந்நிலத்துக் கருப்பொருள்களுள் ஒன்றாகக் கூறப்படினும் எல்லாப்பொருள்களினும் சிறந்ததாக மக்களால் முதற்கண் போற்றத்தக்கது என்னும் மெய்ம்மை யினைப் பண்டைத் தமிழ்ச் சான்றோர் மறவாது பேணி வந்துள்ளார்கள். அதுபற்றியே ஆசிரியர் தொல்காப்பியனார் முதல் பொருள்வகையாகிய நானிலத்தினையெண்ணும் பொழுது மாயோன் மேய காடுறையுலகம் சேயோன் மேய மைவரையுலகம் என்றாங்கு அவ்வந்நிலத்திற்குரிய தெய்வத்தை முன்னிறுத்தியும், கருப்பொருள்களை எண்ணுமிடத்துத் தெய்வம் உணாவே என்றாங்குத் தெய்வத்தை முதற்கண் வைத்தும் மக்களால் வழிபடுதற்குரிய தெய்வத்தின் சிறப்பினை நன்கு வலியுறுத்தியுள்ளார்.

கருப்பொருள்பற்றிய நிகழ்ச்சியினைத் தலைவன் தலைவி முதலிய அகத்திணை மாந்தரது ஒழுகலாற்றிற்கு உவமையாகக் கொண்டு உய்த்துணரும்படிச் செய்யுள் செய்யும் புலவராற் கருதியமைக்கப் பெறுவது உள்ளுறை யுவமம் எனப்படும். 'யான் புலப்படக் கூறுகின்ற கருப்பொருள் நிகழ்ச்சியுடன் புலப்படக் கூறாத பொருளும் ஒத்துப் புலப்படுவதாக' எனக் கருதிய புலவன் தன்னுள்ளக் கருத்துப் படிப்போர்க்கு இனிது புலனாகும் வண்ணம் உணர்த்துதற்கு உறுப்பாகிய சொற்கள் அமையத் தான் பாடிய செய்யுளில் உய்த்துணர வைத்தல் உள்ளுறையுவமம் எனப்படும். கருப்பொருள்களை நிலைக்களனாகக் கொண்டு இவ்வுவமை பிறக்குங்கால் அக்கருப்பொருள்பாலமைந்த நன்றுந் தீதுமாகிய செயல்களை உள்ளுறையாற் புலப்படுத்தக் கருதிய அகத்திணை மாந்தர் செயல்களுக்கு ஒப்புமையினைக் கருதியுணரும் நிலையுண்டாகும். கருப்பொருள்களில் ஒன்றாகிய தெய்வத்தின் செயல்களை உவமையாக எடுத்துரைப்பின் மக்களால் நன்கு மதித்துப் போற்றப்பெறும் தெய்வத்தின்

மாண்புகள் இவ்வொப்புமை வாயிலாகச் சிதைவுறுதல் கூடும். இந்நுட்பத்தினை நன்குணர்ந்த முன்னைத் தமிழ்ச் சான்றோர் தெய்வமாகிய கருப்பொருளை நிலைக்களனாகக் கொண்டு உள்ளுறை கூறுதல் கூடாதென்றும் தெய்வம் நீங்கலாகவுள்ள ஏனைய கருப்பொருள்களையிடனாகக் கொண்டே உள்ளுறையுவமை கூறுதல் வேண்டுமென்றும் வரையறை செய்தார்கள். இவ்வரையறையினை,

"உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலமெனக்
கொள்ளு மென்ப குறியறிந் தோரே"[2]

என வரும் சூத்திரத்தில் தொல்காப்பியனார் தெளிவாகக் குறித்துள்ளார். இக்குறிப்பினைக் கூர்ந்து நோக்குங்கால் தொல்காப்பியனார்க்கு முற்பட்ட பண்டைத் தமிழ்மக்கள் தெய்வங் கொள்கையிற் கொண்டிருந்த நன் மதிப்பும் தொல்காப்பியனார் தெய்வங் கொண்டுள்ள உறுதிப்பாடும் நன்கு புலனாதல் காணலாம்.

தமது நாட்டில் உரிமை வாழ்வினைப் பேணிக் காக்கும் உயர்ந்த குறிக்கோளுடன் போர்க்களத்துப் பகைவரோடு பொருது உயிர் கொடுத்துப் புகழ் கொண்ட தறுகண் வீரரை நாட்டுமக்கள் தெய்வமாக எண்ணி வழிபடுதற் பொருட்டு அவர்தம் பெயரும் பீடும் பொறித்தற்குரிய கல்லினைத் தேர்ந்து காணுதலும் பின்னர் அங்ஙனம் பொறிக்கப் பெற்ற கல்லினை நீர்ப்படுத்தலும், நடுதலும், கோட்டம் செய்தலும், அதனை வாழ்த்துதலும் பண்டைத் தமிழர் கொண்டொழுகிய வீர வணக்கம் ஆகும்.

இன்னவுரு இன்னநிறம் என்றறிய வொண்ணாத நிலையில் உலகுயிர்களின் உள்ளும் புறம்பும் கலந்து நின்று இயக்கி நிற்கும் பேரறிவுப் பொருளாகிய இறைவனைக் 'கடவுள்' என்ற பெயரால் தொல்காப்பியனார் குறித்துள்ளார். கடவுதல் - செலுத்துதல். அணுமுதல் அண்டமீறாகிய பொருள்களையும் உயிர்த் தொகுதிகளையும் அகத்தும் புறத்தும் ஊடுருவி நின்று ஓர் ஒழுங்குமுறையிற் செலுத்துதல் பற்றி முழுமுதற் பொருளாகிய அது கடவுள் என்னும் பெயருடையதாயிற்று. இறைவன் இயவுள் என்னும் பெயரும்

2. *தொல்காப்பியம், பொருளதிகாரம்,* அகத்திணையியல், 50.

இப்பொருளில் வழங்கப்பெறுவதேயாகும். இவ்வாறே இறைவன் என்பதும் கடவுளைக் குறித்த பெயரேயாகும். யாண்டும் பொருள்கள்தோறும் நீக்கமற நிறைந்து விளங்குதல் கடவுளின் இயல்பேயாதலின் இறை என்பதும் கடவுளைக் குறித்து வழங்கும் பெயரேயாகும். இறை - யாண்டும் நீக்கமறத் தங்கிய பொருள். இறை - இறுத்தல்; தங்குதல், உயிர்ப்பொருள், உயிரல் பொருள் ஆகிய எல்லாப் பொருள்களிலும் நீக்கமறத் தங்கியிருந்து அவற்றை இயக்கி நிற்கும் முழுமுதற்பொருளையே கடவுள், இயவுள், இறை எனப் பல பெயர்களாலும் தமிழ் முன்னோர்கள் போற்றியுள்ளார்கள். கடவுளைக் குறித்து வழங்கும் காரணப் பெயர்களுள் ஒன்றாகிய 'இறை' என்பதன் அடியாகப் பிறந்தது இறைவன் என்பதாகும். இச்சொல் வேண்டுதல் வேண்டாமையிலானாகிய இறைவனைப் போன்று, யாவர்மாட்டும் விருப்பு வெறுப்பின்றி நடுநிலையுடையனாகி அறவோரை அளித்தும் அறமிலாதாரையொறுத்தும் ஆளவல்ல வேந்தனைக் குறித்த பெயராகவும் வழங்கப் பெறுவதாயிற்று. "செருவகத்திறைவன் வீழ்ந்தென" எனவரும் தொல்காப்பியத் தொடரில் இறைவன் என்ற சொல் நாடாளும் வேந்தனைக் குறித்து நிற்றல் காணலாம். இச்சொல் முதன்முதலிற் கடவுளைக் குறித்த பெயராயிருந்து பின்னர்க் கடவுள் நிலையில் மதிக்கத்தக்க வேந்தனைக் குறித்த பெயராகவும் வழங்கப் பெறுவதாயிற்று. இந்நுட்பம்,

> "முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
> கிறையென்று வைக்கப் பெறும்"[3]

எனவரும் திருக்குறளால் நன்கு புலனாதல் அறியத் தகுவதாகும். தான் அறநெறியிற் சிறிதும் பிறழாது நின்று தன் குடிமக்களைப் பிறர் நலியாமற் பாதுகாத்தலையும் செய்யும் அரசன், பிறப்பினால் மகனேயாயினும் அவனது செயலின் உயர்வினாலே கண்கண்ட கடவுள் என மக்கட் குலத்தாராற் சிறப்பித்துப் போற்றப்பெறுவான் என்பது இத்திருக்குறளின் பொருளாகும். இதனால் இறையெனப்படும் கடவுள் வேறு மன்னன் வேறு என்பதும் இறையென்பதும் கடவுளைக்

3. *திருக்குறள்*, 388.

குறித்த பெயர் என்பதும் இப்பெயர் மன்னனைக் குறித்து வழங்கப்பெறுதல் உபசார வழக்கேயென்பதும் இவ்வாறு மன்னனைக் கடவுளாக மதித்துப் போற்றும் வழக்கம் தொல்காப்பியனார் காலத்திலேயே நிலைபெற்று வழங்கிய தொன்மையுடையதென்பதும் இவ்வழக்கம் திருவள்ளுவர் காலத்திலும் தொடர்ந்து நிலைபெற்றிருந்ததென்பதும் நன்கு துணியப்படும்.

மக்களால் செய்யப்படும் உழவுக்கும் பிற தொழில் கட்கும் காவல் செய்யுங் கருத்தினால் நாளடைவில் உருவாகி நிலைபெற்ற குடும்பமே மன்னர் குடும்பமாகும். மன்னன் என்னும் சொல், நிலைபெறுதல் என்னும் பொருளுடைய 'மன்' என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த காரணப் பெயராகும். இந்நுட்பம் 'மன்னர்க்குமன்னுதல் செங்கோன்மை' எனவரும் திருக்குறளால் இனிது புலனாகும். மக்களது நல்வாழ்வு நிலை பெற அவர்கள் வாழும் நாட்டை நிலைபெறக் காக்குங் கடமை பூண்ட ஆட்சித் தலைவன், மன்னன் என நன்கு மதிக்கப்பெற்றான். அதனால் அவனது குடும்பமும் நாட்டில் வழிவழியாக நிலைபெற்று வருவதாயிற்று. "மக்கட் குலத்தாரது உடம்பை வளர்ப்பனவாகிய நெல் முதலிய உணவுப் பொருள்களோ அவை விளைதற்கு உறுதுணையாகிய நீரோ இவ்வுலகில் உயிர்வாழ்வினை நிலைபெறச் செய்யும் ஆற்றலுடையன அல்ல; மக்களை ஒரு நெறிப்படுத்தித் தம்முள் வேற்றுமை யின்றி அன்பினாற் கலந்து வாழ வழி வகுக்கும் ஆட்சித் திறனுடைய மன்னனே மலர்தலை யுலகிற்கு உயிராவான்" எனத் தமிழ் முன்னோர் எண்ணினார்கள். அவர்கள் எண்ணிய வண்ணமே அக்காலத் தமிழ் வேந்தர்களும் தம் நாட்டு மக்களின் இன்னுயிர் போன்று நாட்டிற்கு இன்றியமையாதவராய் முறை பிறழாது ஆட்சி புரிந்தார்கள். இங்ஙனம் அரசியல் நாகரிகம் உருப்பெறுதற் கிடனாகிய மருதநிலத்தில் வாழ்ந்த மக்கள் பசியும் பிணியும் பகையும் தோன்றாதவாறு தமது நாட்டினைப் பேணிக் காக்கும் கடமையினை மேற்கொண்ட மன்னனையே தெய்வம் என மதித்துப் போற்றினார்கள். அவர்கள் போற்றுதற்குரிய வகையில் அக்காலத் தமிழ் வேந்தர்களும் தாம் குடிமக்களின்

இன்னுயிர் என இன்றியமையாதவராய் முறை பிறழாது ஆட்சிபுரிந்தனர். நாகரிகம் உருப்பெற்று வளர்தற்குரிய மருதநில மக்கள் தம் நாட்டு வேந்தனையே தெய்வமென எண்ணி அவனது ஆணை வழி ஒழுகினமையால் 'வேந்தன் மேய தீம்புனலுலகம்' என்ற தொடரால் மருதநிலத்துக்குத் தெய்வமாவான் அந்நிலத்து வேந்தனே எனத் தொல்காப்பியனார் குறிப்பிடுவாராயினர். வேந்தனைக் காத்தற்கடவுளாகிய திருமாலாகக் கருதிப் போற்றும் மரபு தொல்காப்பியனார் காலத்திலேயே நிலைபெற்று வழங்கியுளது. இவ்வழிபாட்டு முறையினை,

> "மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்
> றாவா விழுப்புகழ்ப் பூவை நிலை"[4]

என்ற தொடரால் ஆசிரியர் தொல்காப்பியனார் உய்த்துணரவைத்தமை இங்குக் குறிப்பிடத்தகுவதாகும். ஆநிரையைக் காத்த நீலமேனிநெடியோனாகிய மாயவன் திருமேனியோடு உவமித்துக் காட்டிடத்து அலரும் காயாம்பூவினைப் புகழ்வது பூவைநிலையென்னுந் துறையாகும். மேற்குறித்த தொல்காப்பியத் தொடர்க்கு,

"மாயோனைப் பொருந்திய நிலைபெற்ற பெருஞ்சிறப்பினையுடைய கெடாத புகழைப் பொருந்திய பூவை நிலையைக் கூறுதல்" எனப் பொருள் கூறிய இளம்பூரண அடிகள், "பூவை (காயம்பூ) மலர்ச்சியைக் கண்டு மாயோன் நிறத்தையொத்ததெனப் புகழ்தல். நாடெல்லை காடாதலின் அக்காட்டிடைச் செல்வோர் அப்பூவையைக் கண்டு கூறுதல், உன்னங்கண்டு கூறினாற் போல இதுவும் ஓர் வழக்கு" என விளக்கமும் தருவர். "இஃது உரையன்று என்பார் மாயோன் முதலாகிய தேவர்களோடு உவமித்தலே பூவை நிலையென்ப. வேறுகடவுளரை நோக்கி உவமித்து வருபவையெல்லாம் பூவை நிலையாகக் கொள்க, என்னை?

4. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூ. 63.

'ஏற்றூர்தி யானும் இகல்வெம்போர் வானவனும்
ஆற்றலும் ஆள்வினையும் ஒத்தொன்றி னொவ்வாரே
கூற்றக் கணிச்சியான் கண்மூன் றிரண்டேயாம்
ஆற்றல்சால் வானவன் கண்'

என முத்தொள்ளாயிரத்து வந்தவாறு காண்க" என மற்றொருசாரார் கருத்தினையும் இளம்பூரண அடிகள் எடுத்துக் காட்டியுள்ளமை, திருமாலுடன் மன்னனை யுவமித்துக் கூறும் நிலையில் தொல்காப்பியனார் கூறிய பூவை நிலையென்னுந் துறை, திருமாலேயன்றி ஏனைத் தெய்வங்களையும் மன்னரோடு, உவமித்துக் கூறும் முறையிற் பிற்காலத்தில் வளர்ச்சி பெற்ற திறத்தைக் குறிப்பிடுவதாகும். மேற்குறித்த இளம்பூரணருரையினையும் அவர் பிறர் கூறுவதாகக் காட்டிய பிறிதோருரையினையும் மனத்திற் கொண்ட நச்சினார்க்கினியர், இவ்விரண்டுரைகளையும் தொல்காப்பியனார் கருத்தெனவே கொண்டு "மாயோன் விழுப்புகழ்,மேயபெருஞ்சிறப்பின் தாவா விழுப்புகழ் மன்பூவை நிலை" எனக் கொண்டு கூட்டி "மாயவனுடைய காத்தற் புகழையும் ஏனோர்க்கும் உரியவாய் மேவிய பெரிய தலைமையிற் கெடாத படைத்தல் அழித்தல் என்னுந் தொழில்களையும் மன்னர் தொழிலுக்கு உவமையாகக் கூறும் பூவைநிலை" என உரைவரைந்து "ஏற்றுவலனுயரிய" (புறம்-56) எனவரும் புறப்பாடலை இலக்கியமாக எடுத்துக் காட்டியுள்ளார்.

காடுறையுலகமாகிய முல்லைநிலத்து அலருங் காயம்பூ, நீலமேனி நெடியோனாகிய மாயோனது திருமேனியின் நிறத்தினை நினைவுபடுத்துவதாகலின், பூவையென்னும் அப்பூவினைப் புகழ்தல் மாயோனைப் புகழ்தலாய் அத்தெய்வத்தினது காத்தற்றொழிலைத் தனக்குரிய முறைமையாகக் கொண்ட மன்னனது பெருஞ்சிறப்பினை விரித்துரைக்கும் புறத்திணைத் துறையாயிற்று. மாயோனாகிய தெய்வத்தோடு மன்னனை யுவமித்தலே பூவைநிலை யென்னுந் துறையாமென்பது ஆசிரியர் தொல்காப்பியனாரது கருத்தாகும். இக்கருத்தினை யடியொற்றியே,

"கறவை காவலன் நிறனொடு பொரீஇப்
புறவலர் பூவைப் பூப்புகழ்ந் தன்று"

என ஐயனாரிதனார் இத்துறைக்கு விளக்கம் கூறியுள்ளமை இங்கு ஒப்புநோக்கி யுணரத்தகுவதாகும். தொல்காப்பியத் துக்குப் பின் தோன்றிய கடைச் சங்கத் தொகை நூல்களில் முக்கண்ணன், முருகன் முதலிய எல்லாத் தெய்வங்களையும் மன்னனுக்கு உவமையாக எடுத்துரைத்துச் சிறப்பிக்கும் வழக்கம் உளதாதலையுணர்ந்த இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் மாயோனை மன்னனுக்கு உவமித்தலேயன்றி ஏனைத் தெய்வங்களை அரசனுக்கு உவமித்தலும் பூவைநிலையேயாகும் என இலக்கியங் கண்டதற்கேற்ப இலக்கணமும் அமைத்துக் கொண்டார்கள். "மாயோன் நிறம் போலும் பூவைப்பூநிறம் என்று பொருவுதல் பூவைநிலையென்று கொண்டால் ஏனையோர் நிறத்தொடு பொருந்தும் பூக்களையும் பொருவுதல் கூறல் வேண்டும். ஆசிரியர் அவை கூறாமையின் அது புலனெறிவழக்க மன்மையுணர்க" என நச்சினார்க்கினியர் ஐயனாரிதனார் பூவைநிலையென்னுந்துறைக்குத் தந்த விளக்கம் குறையுடையதாதலை எடுத்துக்காட்டி மறுத்துள்ளமையும் இங்குக் கருதுதற்குரியதாகும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் தொல்காப்பியம் சொல்லதிகாரம் கிளவியாக்கத்தில் சொற்களை உயர்திணைச் சொல் அஃறிணைச் சொல் என இருதிணையாகப் பகுத்துக் கூறுகின்றார். அங்ஙனம் பகுத்துரைக்கப்படும் இருதிணை ஐம்பால்களுள் இன்னபால் என விளங்காதன சிலவற்றை யெடுத்துக் கூறி அவற்றை உயர்திணையுள் அடக்குவதாக அமைந்தது,

"காலம் உலகம் உயிரே உடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்
ஆயீரைந் தொடு பிறவு மன்ன
ஆவயின் வரூஉங் கிளவி யெல்லாம்

பால்பிரிந் திசையா புயர்திணை மேன"[5]

எனவரும் சூத்திரமாகும். "காலமும் உலகப்பகுதியும் உயிரும் உடம்பும் பால்வரை தெய்வமும் வினையும் பூதமும் ஞாயிறும் திங்களும் சொல்லும் என எண்ணப்பெற்ற இப் பத்துடனே இவைபோன்ற பொருள்களிற் பயின்று வருவன பிறவும் ஆகிய சொற்களெல்லாம் ஐம்பாலுள் இன்னபால் எனப் பிரிந்து இசைப்பன அல்ல; பொதுவாக உயர்திணைப் பொருள்மேல் நிகழ்வனவாம்" என்பது இந்நூற்பாவின் பொருளாகும்.

"இச்சூத்திரத்துக் கூறியவற்றுள் உலகமும் உயிரும் உடம்பும் ஒழிந்தனவெல்லாம் தெய்வத்தையே உணர்த்தின வாதலின் தெய்வம் என்பதனைத் 'தெய்வஞ் சுட்டிய பெயர் நிலைக்கிளவியும்' (தொல்-கிளவி-4) என்பதனான் உயர் திணையென்பது பெற்றாம். இவையெல்லாந் தெய்வ மென்னும் உயர்திணைப் பொருளையுணர்த்தினவேனுந் தெய்வம் என்னுஞ் சொல் அஃறிணை வாசகமாதலின் அதற்கேற்ப அஃறிணை முடிபே கொள்ளுமென்றார். இச் சொற்கள் கூறுகின்ற பொழுதே தத்தம் உயர் திணைப்பபாற் பொருளே தோற்றுவித்து நிற்றலின் ஆகுபெயரன்மை யுணர்க. காலம் என்றது காலக்கடவுளை. உலகம் என்றது உலகத்தாரை. அறஞ்செய்து துறக்கம் புக்கான், உயிர்நீத்து ஒரு மகன் கிடந்தான் என உயிரும் உடம்பும் அவரின் வேறன்றி அவராக வுணரப்பட்டு உயர்திணைக்கேற்ற முடிபு கோடலின் மக்களேயாயின. இன்ப துன்பத்திற்குக் காரணமாகிய இருவினையும் வகுத்தலின் பால்வரை தெய்வமென்றார். வினை - இருவினைத் தெய்வம். சொல்- நாமகளாகிய தெய்வம்" என நச்சினார்க்கினியர் இச் சூத்திரப் பொருளை விளக்கியுள்ளார். 'வினை என்பது அறத்தெய்வம்' என்பர் சேனாவரையர்.

"காலம் என்பது முன்னும் பின்னும் நடுவும் எ[illegible]றும் உள்ளதோர் பொருள். உலகம் என்பது கீழும் நடுவுமாகி எல்லாவுயிருந் தோற்றுதற்கு இடமா[illegible] பொருள். உயிர் என்பது சீவன். உடம்பு என்பது மனம் புத்தி

5. *தொல்காப்பியம், சொல்லதிகாரம்*, கிளவியாக்கம், 58.

ஆங்காரமும் பூத தன்மாத்திரையுமாகி வினையினாற் கட்டுப் பட்டு எல்லாப் பிறப்பிற்கும் உள்ளாகி நிற்பதோர் நுண்ணிய உடம்பு. இதனை மூலப்பகுதி எனினும் ஆம். பால்வரை தெய்வம் என்பது ஆணும் பெண்ணும் அலியுமாகிய தன்மையை வரைந்து நிற்கும் பரம்பொருள். வினையென்பது ஊழ். பூதம் என்பது நிலம் நீர் தீ வளி ஆகாயம் ஆகிய ஐம்பெரும் பூதம். ஞாயிறு என்பது தீத்திரளாய் உலகு விளக்குவது. திங்கள் என்பது நீர்த்திரளாய் உலகிற்கு அருள் செய்வது. சொல் என்பது எழுத்தினான் இயன்று பொருள் உணர்வது; அச்சொல்லினான் இயன்ற மந்திரம் விட முதலாயின தீர்த்தலின் தெய்வம் ஆயிற்று" என்பது தெய்வச்சிலையார் கூறும் பொருள் விளக்கமாகும்.

இவ்வுரையினைக் கூர்ந்து நோக்குங்கால் சாங்கியர் கூறும் இருபத்தைந்து தத்துவங்களுக்கு மேலாகச் சைவசித்தாந்தங் கூறும் தத்துவங்களிற் சில 'காலமுலகம்' எனத் தொடங்கும் இத்தொல்காப்பியச் சூத்திரத்தில் இடம்பெற்றுள்ளமை காணலாம். உலகத் தொகுதிக்கு முதற்காரணமாய் என்றும் நிலைபேறுடையதாய் அறிவில்லாத சடப்பொருளாய் வைப்பாற்றலாய் இறைவனது விரிவுக்குள் அடங்கியதாய் உள்பொருளாய் அருவாய் உள்ளது மாயை. மா என்பது ஒடுங்குதல்; யா என்பதுவருதல். இவ்வுலகம் ஒடுங்குதற்கும் மீளத் தோன்றுதற்கும் நிலைக்களமாயுள்ள பொருள் மாயையாதலின் அது மாயா என்னும் வடமொழிப்பெயராற் குறிக்கப்பட்டு ஆவீறு ஐயாதல் என்னும் தமிழிலக்கண மரபின்படி மாயை எனத் திரிந்து வழங்குவதாயிற்று. மாயா என்பதனைத் தமிழ்ச் சொல்லாகக் கொண்டு மாய் ஆ எனப் பிரித்து இவ்வுலகம் மாய்தற்கும் (ஒடுங்குதற்கும்) ஆதற்கும் (மீளத் தோன்றுதற்கும்) நிலைக்களமானது எனப் பொருள் விளக்கந் தருதலும் உண்டு.

உயிரறிவிற்குப் புலப்படும் பொருளின் புடை பெயர்ச்சிகள் யாவும் காலம் என்னும் அருவப் பொருளின் வரையறைக்கு உட்பட்டு நிகழ்தலின் காலம் என்பது ஒரு தத்துவமாக வழங்கப்பெற்று வருகிறது. காலம் என்பது

ஒன்றாய் நித்தமாய் உள்ளது என்பர் நையாயிகர் முதலியோர். அதனை மறுத்துப் பல வாய் ஏகதேசமாய் நிலையற்றதாய் உள்ளது காலம் என்பர் சைவசித்தாந்திகள். காலம் ஒன்றாயிருக்குமானால் நடத்தல் முதலிய தொழில்களும் இறப்பு நிகழ்வு முதலியவற்றால் வேறுபடுதலின்றி ஒன்றே யாதல் வேண்டும். அவ்வாறன்றி இறப்பு நிகழ்வு முதலியனவாய் நிகழுந் தொழிற் பாகுபாட்டிற்குக் காரணம் காலத்தினது பாகுபாடேயாதலின் காலம் பலவாதல் அறிக என விளக்கந்தருவர் சிவஞானமுனிவர். ஞாயிற்றின் செலவு முதலிய செயற்கையாலன்றித் தொழிலின் தொடக்கம் அதன் நிகழ்வு அதன் முடிவு ஆகிய இயற்கையால் இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் எனப் பலவகையாகப் பகுக்கப் படுதலின் காலம் ஒன்றெனக் கூறுதல் பொருந்தாது. ஆசிரியர் தொல்காப்பியனாரும்,

> "இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றச்
> சிறப்புடை மரபின் அம்முக் காலமும்"[6]

எனக் காலம் மூன்றெனக் குறித்துள்ளமை காணலாம். இவ்வாறு காலம் பலவேறு வகைப்படும் என்பது பெறப்படவே காலம் என்பது தம்முட் பலவுமாய்ச் சடமுமாகலின் அது தோன்றி நின்றழியும் நிலையில் பொருளே யென்பதும் அதுபற்றி விரிவின்றிச் சுருங்கிய ஏகதேசப் பொருள் என்பதும் தாமே பெறப்படும். இத்தகைய காலவரையறையின் அகப்படாது நிற்பதே நிலையுடைய பொருளாகும். காலம் நிலையில்பொருள் எனக் கொள்வது பற்றிக் காலங்கடந்த நிலையுடைய பொருள் உண்டெனக் கோடற்கு எத்தகைய தடையுமில்லை.

'காலம் உலகம்' எனவரும் இத்தொல்காப்பியச் சூத்திரத்தில் காலம் என்றது, உயர்திணைமருங்கிற் பால்பிரிந்திசைக்கும் உணர்வுடைப்பொருளாதலின் அஃது அழிதல் மாலைத்தாய் இறப்பு நிகழ்வு எதிர்வு என்னுப் பகுப்பினாற் பலவாய் அறிவில் பொருளாயுள்ள காலத்தினைக் குறியாது அதனை உலகுயிர்களின் நிகழ்ச்சிகளில் வைத்துத்

6. *தொல்காப்பியம், சொல்லதிகாரம்,* வினையியல், 3.

தொழிற்படுத்தும் உணர்வினதாகிய தெய்வ ஆற்றலையே குறிப்பதாகும். இந்நுட்பம் "காலம் என்றது காலக்கடவுளை" என நச்சினார்க்கினியரும், "காலம் என்பது முன்னும் பின்னும் நடுவுமாகி என்றும் உள்ளதோர் பொருள்" எனத் தெய்வச்சிலையாரும் தரும் உரைவிளக்கங்களால் இனிது புலனாம். இங்கு 'உலகம்' என்றது நிலம் தீ நீர் வளி விசும் போடைந்தும் கலந்த திரட்சியாகிய அறிவில்பொருளைக் குறியாது அத்திரட்சி மேலும் கீழும் நடுவுமாய்விரிந்து எல்லாவுயிருந்தோற்றுதற்கு இடந்தரும்வண்ணம் அதனை உள்ளும் புறம்பும் உடனிருந்து இயக்கும் உணர்வுடைய தெய்வ ஆற்றலைக் குறித்ததென்பது தெய்வச்சிலையார் உரைவிளக்கத்தால் நன்கு புலனாம். இங்கு உயிர் என்றது உயிர்களின் அறிவு விளக்கத்தைச் சுட்டி நிற்றலின் உயர்திணையாயிற்று. ஈண்டு 'உடம்பு' என்பது இவ்வுலகில் நிலையிலதாய் அழியுந்தன்மையாதாகிய ஐம்பூதச் சேர்க்கையாலாகிய அறிவில்லாத தூலவுடம்பினைக் குறியாது மனம் புத்தி அகங்காரம் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் எண்வகைப் பொருள்களால் இயன்று வினையினாற் கட்டுப்பட்டு நுண்ணிதாய் ஓர் உயிர் மேற்கொள்ளுதற்குரிய எல்லாப்பிறப்பிற்கும் உள்ளாகி நிற்கும் நுண்ணுடம்பினைக் குறித்த இச்சொல் ஆகுபெயராய் அவ்வுடம்பினை உள்நின்றியக்கும் உணர்வாற்றலைக் குறித்ததெனக் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும்.

'காலம் உலகம்' எனவரும் தொல்காப்பியச் சூத்திரத்தில் 'பால்வரை தெய்வம்' என்பதும் 'வினை' என்பதும் தனித்தனியே எண்ணப்பெற்றிருத்தலால் பால்வரை தெய்வம் என்பது வேறு 'வினை' என்பது வேறு என்பது நன்கு துணியப்படும். "பால்வரை தெய்வம் என்பது ஆணும் பெண்ணும் அலியுமாகிய நிலைமையை வரைந்து நிற்கும் பரம்பொருள்" எனத் தெய்வச்சிலையாரும், "எல்லோர்க்கும் இன்பத்துன்பத்திற்குக் காரணமாக இரு வினையையும் வகுப்பது" எனச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் பொருள் வரைந்துள்ளார்கள். எனவே இச்சொல், கடவுளாகிய முழுமுதற்பொருளையே குறித்து நின்ற தென்பது தொல்காப்பியவுரையாசிரியர் அனைவர்க்கும்

உடன்பாடாதல் தெளிவு. இதனையடுத்து 'வினை'யெனச் சுட்டப்பட்டது 'ஊழ்' என்பது எல்லாவுரையாசிரியர்க்கும் ஒத்த முடிபாதலால், முன்னுள்ள 'பால்வரை தெய்வம்' என்பதற்கு ஊழ்வினை எனப்பொருள் கூறுதல் பொருந்தாதென்பது நன்கு துணியப்படும்.

> "ஒன்றே வேறே யென்றிரு பால்வயின்
> ஒன்றி யுயர்ந்த பால தாணையின்
> ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப
> மிக்கோ னாயினுங் கடிவரை யின்றே"
>
> (தொல். பொருள். நூ. 90)

என வருஞ் சூத்திரத்தில் ஊழ்முறையாகிய பாலின் இயல்பினையும் அதன் வகையினையும் அதனையிடமாகக் கொண்டு நிகழும் தெய்வத்தின் ஆணையினையும் ஆசிரியர் தொல்காப்பியனார் விரித்துக் கூறியுள்ளார். உயிர்களை அன்புடையாரோடும் இன்ப நுகர்ச்சிகளோடும் ஒன்றுவிப்பதுவும் வேறுபடுத்துவதும் எனப் பால் (ஊழ்) இருவகைப்படுமென்றும், அவற்றுள் ஒன்றுவித்தலால் மேன்மேல் உயர்த்தும் நல்லூழ் 'உயர்ந்தபால்' எனச் சிறப்பித்துரைக்கப்படும் என்றும் அத்தகைய உயர்ந்த பாலினை இடமாகக் கொண்டு நிகழும் இறைவனது ஆணையினால் உருவுந் திருவு முதலிய நலங்களால் தம்முள் ஒப்புடையாராகிய தலைவனுந் தலைவியும் ஓரிடத்து எதிர்ப்பட்டுக் காண்பர் என்றும் மேற்காட்டிய களவியற் சூத்திரம் அறிவுறுத்துகின்றது. இங்குக் கூறப்பட்ட இருவகைப் பாலினும் ஒன்றுவிக்கும் பாலினை ஆகூழ் எனவும் வேறுபடுத்தும் பாலினைப் போகூழ் எனவும் ஊழ் என்னும் அதிகாரத்துள் திருவள்ளுவர் குறிப்பிட்டு விளக்கியுள்ளார். திருக்குறள் ஊழ் என்னும் அதிகாரத்திலும் இத்தொல்காப்பியச் சூத்திரத்திலும் இடம் பெற்றுள்ள குறிப்புக்களை ஒப்பிட்டு நோக்குங்கால் இச்சூத்திரத்தில் 'ஒன்றே வேறேயென்று இருபால்' என்றது ஆகூழ், போகூழ் என்னும் இருவகையூழினையே யென்பது நன்கு விளங்கும். எனவே 'பால்வரை தெய்வம்' என்ற தொடர்க்கு 'எல்லார்க்கும் இன்பத் துன்பத்திற்குக் காரணமாகிய இருவினையையும் வகுப்பது' எனச் சேனாவரையரும்

நச்சினார்க்கினியரும் வரைந்துள்ள பொருள் விளக்கமே தொல்காப்பியனார் கருத்தினைப் பிறழாது புலப்படுத்துவ தாகும். இத்தொடரில் 'பாலது ஆணை' என்றது, உயிர்கள் செய்த நன்றுந்தீதுமாகிய வினைப்பயனை வினைசெய்த உயிர்களே தப்பாது நுகரும்படி நுகர்விக்கும் இறைவனது ஆணையாகிய நியதியினை. இதனால் உயிர்கள் செய்யும் நலந்தீங்குகளாகிய இருவினைகளும் இன்பம் துன்பம் என்னும் பயனை விளைப்பன என்பதும் அவ்விருவகைப் பயன்களையும் வினை செய்த உயிர்களே தப்பாமல் நுகரும்படி நுகர்விக்கும் முதல்வன் ஒருவன் உளன் என்பதும் அங்ஙனம் முதல்வனால் வகுக்கப்பட்ட நியதியே பாலது ஆணை எனப்படும் என்பதும் நன்கு புலனாதல் காணலாம். பன்னெடுங்காலத்திற்கு முன் ஆசிரியர் தொல்காப்பியனார் அறிவுறுத்திய இத்தத்துவவுண்மைகளை,

> "செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனுஞ் சேர்ப்பானும்
> மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள்"[7]

எனவரும் பாடலிற் சேக்கிழார் நாயனார் வகைப்பட விரித்துரைத்துள்ளமை இங்கு ஒப்பு நோக்கியுணரத் தகுவதாகும்.

தொல்காப்பியனார் குறித்த 'பால்வரை தெய்வம்' என்ற தொடர், 'பால்' எனப்படும் ஊழ் வேறு, அதனை வினை செய்த உயிர்களே நுகரும்படி செய்யும் தெய்வம் வேறு என்னும் மெய்ம்மையினை விளக்குவதாகும். இங்குத் தெய்வம் என்றது இறைவனை. தெய்வத்தால் வகுக்கப் பெறும் முறைமையே பால் எனவும் வகை எனவும் ஊழ் எனவும் வழங்கப்படும். இந்நுட்பத்தினை,

> "வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
> தொகுத்தார்க்குந் துய்த்த லரிது"[8]

என வருந் திருக்குறளில் தெய்வப்புலவர் தெளிவாக அறிவுறுத்தியுள்ளமை காணலாம். ஊழ்வினை தானேயுருக்

7. சேக்கிழார், *பெரியபுராணம்*, சாக்கியநாயனார் புராணம் 5.
8. *திருக்குறள்*, 377.

கொண்டுவந்து வினை செய்தாரைத் தொடர்ந்து பற்றி நுகர்விக்கும் உணர்வும் ஆற்றலும் உடையதன்று எனவும், எல்லாப் பொருள்களையும் ஒழுங்கு பெற இயக்கியருளும் இறைவன் வகுத்த முறைமையே ஊழ் எனப்படும் எனவும் தெளிவுபடுத்தக் கருதிய திருவள்ளுவர் 'வகுத்தான் வகுத்தவகை' என்ற தொடரால் ஊழ்வினையாவது இதுவென விளக்கியுள்ளார். இத்தொடரில் 'வகுத்தான்' என்னுஞ்சொல் இறைவனைக் குறிப்பதாகும்; 'வகுத்த வகை'யென்றது அம்முதல்வனால் வகுக்கப்பட்ட நியதியாகிய ஊழைக் குறிப்பதாகும். பகுத்தது பால் என வழங்கினாற் போன்று வகுத்தது வகையென்றாயிற்று.

தெய்வத்தின் இயல்பினை விரித்துரைக்கக் கருதிய தொல்காப்பியனார். 'பால்வரை தெய்வம்' என்ற தொடரால் தெய்வத்தினைக் குறித்தார். அவ்வாசிரியர் குறிப்பின் வண்ணம் ஊழின் இயல்பினை விளக்கக் கருதிய திருவள்ளுவர் 'வகுத்தான் வகுத்த வகை' என அதனை விரித்துரைத்தார். எனவே 'பால்வரை தெய்வம்' எனத் தொல்காப்பியனார் கூறியதும் 'வகுத்தான்' எனத் திருவள்ளுவர் கூறியதும் இறைவனேயே என்பது நன்கு புலனாம். ஒருயிர் செய்த வினையின் பயன் பிறிதோருயிரின்கட் செல்லாமல் வினை செய்தவுயிரையே வினையின் பயன் சென்று சேரும்படி வகுத்து நுகர்வித்தல், வேண்டுதல் வேண்டாமையிலானாகிய இறைவன் செய்யும் முறைமை யாதலின் 'வகுத்தான்' என்ற பெயராற் கடவுளைக் குறித்தார். இத்தொடரில் 'வகை'யென்றது கடவுளால் வகுத்து நுகர்விக்கப்படும் வினைப்பயனாகிய ஊழினை. ஊழைப் பற்றிய இக்கொள்கையினை,

> "யாழின் மொழிமங்கை பங்கன்சிற் றம்பலத் தானமைத்த
> ஊழின் வலியதொன் றென்னை"[9]

என வருந்தொடரால் திருவாதவூரடிகள் விளக்கியதிறம் இங்கு ஒப்பு நோக்கியுணரத்தகுவதாகும்.

---

9. மாணிக்கவாசகர், *திருக்கோவையார்*, 350.

விருப்பம் அறிவு செயல் என்னும் மூவகை ஆற்றலும் ஓரளவு விளங்கப்பெற்று உலக நுகர்ச்சியில் ஈடுபடும் மக்கட்குலத்தாரிற் பெரும்பாலார் இன்ப நுகர்ச்சியில் விருப்பும் துன்ப நுகர்ச்சியில் வெறுப்பும் உடையராய்ப் பிறர் செய்த நல்வினைப்பயனைத் தாம் நுகரவும் தாம் செய்த தீவினைப் பயன்கள் தம்மைத் தொடராதவாறு விலகி யொழுகவும் முயலுதலை இவ்வுலகியல் நிகழ்ச்சிகளில் ஆங்காங்கே காண்கின்றோம். இங்ஙனம் ஒருவர் செய்த நல்வினைப் பயனாகிய இன்பத்தை வேறொருவர் கவர்ந்து கொள்ளாதவாறும் தாம் நுகர்தற்குரிய தீவினைப் பயனாகிய துன்பத்தை நெகிழ விட்டுத் தப்பியோடாதவாறும் அவரவர் செய்த இருவினைகளின் பயன்களை அவரவரே நுகரும்படி அரசன் ஆணைபோல் வரையறுத்துச் செலுத்துவது இறைவனது ஆணையாகும். இறைவனது முறைசெய்தற் றன்மையாகிய ஆணை அந்தந்த உயிர்கள் செய்த இருவினைப் பயன்களை முன்னிட்டு அவ்வச் செயல்களைச் செய்வ தாகலின், ஊழினைத் துணையாகக் கொண்டு செயல்புரியும் இறைவனது ஆற்றலைப் 'பாலது ஆணை' என்றார் தொல்காப்பியனார். பால் ஊழ் வகை நியதி விதி என்பன ஒருபொருட் கிளவி. ஒருபாற்கோடாது நடுநின்று ஆட்சிபுரியும் அரசனது ஆணை நிகழாதாயின் எளியோர் பொருளை வலியோர் கவர்ந்து கொள்வர். அதுபோல எல்லாப் பொருளையும் வகுத்து இயக்குபவனாகிய முதல்வனது ஆணையாகிய முறை நிகழாக்கால் ஒருவர் செய்த நல்வினைப் பயனை வேறொருவர் கவர்ந்து கொள்ளவும் தாம் செய்த தீவினைப் பயனைப் பிறர் மேற்சுமத்தவும் இடமுண்டாகும். இருவினையும் உணர்வற்றனவாதலின் அவை உயிர்கட்கு நுகர்ச்சியைத் தருதல் மாத்திரமேயன்றி அந்நுகர்ச்சிவினை செய்தானையே சென்றடையும்படிச் செய்விக்கும் ஆற்றலுடையன அல்ல. எனவே உயிர்களுக்கு இருவினைப் பயன் முதல்வனது ஆணையினால் வரும் என்பதே பொருத்தமுடையதாகும். அரசன் தன் ஆணையை ஏனை அதிகாரிகள் பால் வைத்து அவர்களைக் கொண்டு அவ்வத்தொழில் செய்விக்குமாறு போல இறைவனும் தனது ஆணையை இருவினையின் மேல் வைத்து அது கருவியாக இருவினைப் பயன்களை உயிர்கட்கு

அருத்துவன். இக்கருத்தினை மனத்துட்கொண்டே 'பால்வரை தெய்வம்' என்ற தொடரால் தொல்காப்பியர் இறைவனைக் குறித்துள்ளார். உழவர் செய்யுந் தொழிலுக்குத் தக்க பயனை அத்தொழில் நிகழ்ச்சிக்கு ஆதாரமாகிய விளைநிலம் விளைவிப்பதன்றி அவ்வுழவுத் தொழில் தானே விளைவிக்கமாட்டாது. அது போலவே உணவும் வித்துமாகத் தொன்று தொட்டு வரும் வினைப் பயன்களை உயிர்கட்குக் கூட்டுவிப்பவன் முதல்வனேயன்றி வினைதானே கூட்டுவிக்கும் ஆற்றலுடையதன்று என்பதே தமிழ் முன்னோர் நுனித்துணர்ந்த தத்துவக் கொள்கையாகும். தெய்வத்தைக் குறித்தும் வினையினைக் குறித்தும் தொல்காப்பியனார் காலத் தமிழ் மக்கள் கொண்ட இத்துணிவினைப் 'பால்வரை தெய்வம்' எனவரும் தொல்காப்பியத் தொடர் நன்கு புலப்படுத்தல் காணலாம்.

உலகுயிர்களை இயக்கும் முழுமுதற்பொருளாகிய கடவுளை வழிபட்டுப் போற்றுதல் மக்களது தலையாய கடமையென்பதும் வழிபடுதெய்வத்தின் திருவருளால் குறைவற்றபெருஞ் செல்வத்துடன் தம் குடும்பம் வாழையடி வாழையென இவ்வுலகில் நெடுங்காலம் நிலைபெற்று வளர இனிது வாழலாம் என்பதும் ஆகியவுண்மையினை முன்னைத்தமிழ்ச் சான்றோர் மக்களுக்கு அறிவுறுத்தி யுள்ளார்கள். 'நினக்குத் தொழுகுலமாகிய தெய்வம் நின்னைப் புறங்காப்ப இல்லற முதலிய நல்லறங்களாற் பழியின்றிப் புகழுடன் பூத்த செல்வமொடு புதல்வரைப் பெற்றுப் புதல்வரும் இத்தன்மையராகி நீடு வாழ்மின்' என்று தம்பால் அன்புடையாரைத் தெய்வத்தின் திருவருளைத் துணைக் கொண்டு வாழ்த்தினார்கள். இவ்வாறு தெய்வத்தைப் பாதுகாவலாகப் புறத்தே நிலை பெறச் செய்து அத் தெய்வத்தின் திருவருளால் நீடுவாழ்மின் என வாழ்த்தும் வாழ்த்தியல் புறநிலைவாழ்த்து என வழங்கப் பெற்றது. எடுத்துக் கொண்ட செயல் இனிது நிறைவேறுதற்குக் காரணமாகிய கடவுள் தோன்றாத்துணையாய் நின்று நின்னைத் துன்பந் தொடராதவாறு நின்னைப் புறங்காப்பப் பழிதீர்ந்த செல்வத்தோடு வழிபவழியாகச் சிறந்து பொலிமின் என வாழ்த்துதலால் இது புறநிலை வாழ்த்து என்னும்

பெயர்த்தாயிற்று. இவ்வாழ்த்தியல் துள்ளலோசைத்தாகிய கலிப்பாவிலும் தூங்கலோசைத்தாகிய வஞ்சிப்பாவினும் பாடப் பெறாது. இவையொழிந்த பாவினுள் வரும் என்பதனை,

"வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறா"[10]

என வருஞ் சூத்திரத்தால் ஆசிரியர் தொல்காப்பியனார் வரையறுத்துள்ளார். எனவே இப்புறநிலைவாழ்த்துப் பொருண்மை வெண்பாவினும் ஆசிரியப்பாவினும் இவையிரண்டும் கலந்த மருட்பாவினும் தொல்காப்பியனார் காலத்திற் பாடப்பெற்றதென்பது நன்கு தெளியப்படும். இச்சூத்திரத்தில் வாழ்த்தப் பெறுவோனை 'நிற்புறங்காப்ப' என முன்னியொருமையிற்கூறி வாழ்த்தியல் முடிபில் 'பொலிமின்' என முன்னிலைப் பன்மையாற் கூறியதன் நோக்கம், வாழ்த்தப் பெறுவோனது வாழ்வின் சிறப்பியல்பு அவனுடைய சுற்றத்துடன் நெருங்கிய தொடர்புடைய தாதலின் அவனை மட்டும் வாழ்த்துமளவில் நின்று விடாது அவனுடைய மனைவி மக்கள் முதலிய நெருங்கிய சுற்றத்தாரொடுங்கூட்டி 'நீடுவாழ்மின்' எனப் பன்மை நிலையில் வாழ்த்திப் பாடுதல் வேண்டும் என்னும் புலமை நெறியினை அறிவுறுத்தல் கருதியதாகும். இவ்வாறு புறநிலைவாழ்த்தின் இலக்கணங்கூறுமுகமாகக் கடவுள் வழிபாட்டால் மக்கட் குலத்தார்க்கு உளவாகும் நற்பயன்களைத் தொல்காப்பியினார் அறிவுறுத்திய திறம் உளங்கொளற்பாலதாகும்.

வழிபடுதெய்வத்திற்குத் திருவுருவமைத்து அத்திரு வுருவத்தின் முன்னின்று பொருள்சேர் புகழ்த்திறங்களைச் செழும்பாடல்களாற் போற்றிப் பரவுதல் தமிழ் முன்னோர் மேற்கொண்டொழுகிய வழிபாட்டு முறையாகும். அங்ஙனம் முன்னிலைக்கண் நின்று தெய்வத்தைப் பரவிப் போற்றுதற்கு வாய்ப்பாகிய யாப்பமைதியுடைய செய்யுள் கலிப்பாவகை

10. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், 106.

நான்கனுள் ஒத்தாழிசைக் கலியுள் ஒன்றாக அடங்கும். அவ்வாறு தெய்வத்தை முன்னிலைப் படுத்துப்பரவும் ஒத்தாழிசைக்கலி வண்ணகம் எனவும் ஒருபோகு எனவும் இருவகைப்படும். தெய்வத்தைப் பரவிப் போற்றும் இத்தகைய செய்யுளின் அமைப்பினை,

> "அவற்றுள்
> ஒத்தா ழிசைக்கலி இருவகைத் தாகும்"[11]

> "ஏனையொன்றே
> தேவர்ப் பராவுதல் முன்னிலைக் கண்ணே"[12]

> "அதுவே
> வண்ணகம் ஒருபோ கெனவிரு வகைத்தே"[13]

எனவரும் சூத்திரங்களால் தொல்காப்பியனார் குறித்துள்ளார். தெய்வத்தைப் பரவுதற்குரிய வண்ணகம் ஒருபோகு ஆகியவற்றுள் வண்ணகத்தில் இடம் பெறும் தரவு, தாழிசை எண், வாரம் (சுரிதம்) என்னும் உறுப்புக்கள் பற்றியும் ஒருபோகின் வகையாகிய கொச்சகவொருபோகு அம்போதரங்கவொருபோகு ஆகியவற்றின் அமைப்புப் பற்றியும் செய்யுளியல் 135 முதல் 146 முடியவுள்ள சூத்திரங்களில் விரித்துக் கூறியுள்ளார்.

இனி, தெய்வநம்பிக்கை காரணமாக மக்களிடையே நிகழுஞ் செயல் முறைகள் பற்றியும் தொல்காப்பியனார் தமது நூலில் ஆங்காங்கே குறிப்பிட்டுள்ளார். மக்கள் தம் உள்ளக் கருத்தைப் பிறர்க்கு வற்புறுத்தி உறுதிமொழி கூறுமுகமாக வழிபடு தெய்வத்தின் முன்னிலையிற் சூளுறவு செய்து தெளிவுபடுத்தல் நெடுங்காலமாக நிலைபெற்று வரும் உலகியல் நடைமுறையாகும். இம்முறையினை 'முன்தேற்று' (சொல்லதிகாரம்-383) என்ற சொல்லால் ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார். இவ்வாறு தெய்வத்தின் முன்னிலையில்

11. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், 127.
12. மேலது, 133.
13. மேலது, 134.

நின்று சூளுறுவோர் தாம் சொல்லிய உறுதிமொழியிலிருந்து தவறுவராயின் அவர் செய்த சூளுறவே அவர்க்குத் துன்பம் விளைக்கும் என்பதனை 'இன்னாத் தொல்சூள்' (தொல்-கற்பியல்-6) என்ற தொடரால் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். நல்லூழின் ஆணையால் ஒத்த அன்பினராகிய ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டுக் கூடிய இயற்கைப் புணர்ச்சியிலே தலைவன், தெய்வத்தின் முன்னிலையில் தலைவியை நோக்கி 'நின்னைப்பிரியேன்' எனச் சொல்லிய உறுதிமொழியில் தவறினானாக, அதனை எண்ணிய தலைவி தன் தலைவனது தவறினால் பெருந்தீங்கு விளையும் என வருந்திய காலத்துத் தோழி தலைவனை அணுகி 'நீ சூளுறவில் தவறியதால் உளவாம் ஏதத்திற்கு அஞ்சி யாம் பெரிதும் வருந்துகின்றோம்' எனத் தலைமகளின் துயரத்தை எடுத்துக் கூறி வருந்துதலும் உண்டு. தோழி கூற்று நிகழ்த்தும் இடங்களைத் தொகுத்துரைக்குமிடத்து 'சூள்வயிற்றிறத்தாள் சோர்வு கண்டழியினும்' எனவரும் தொடரால் தொல்காப்பியனார் இச்செய்தியினைக் குறித்துள்ளமை காணலாம்.

நற்றாய் தன்மகள் தலைமகனோடு உடன்போகிய காலத்துத் தன் மகளது பிரிவினால் வருந்தித் தன்னையும் தன்மகளாகிய தலைவியையும் அவள் காதலனாகிய தலைவனையும் குறித்துத் தனக்கும் அவ்விருவர்க்கும் உளவாகும் நன்மையும் தீமையும் அச்சமும் அவ்விருவரும் தன்னை வந்து சார்தலும் ஆகிய நிகழ்ச்சிகளை நிலைபெற்ற நிமித்தம், நற்சொல், தெய்வம் என்பவற்றோடு பொருத்திப் பார்த்து "இதற்கு முன் இன்ன தன்மையராய் இருந்தார், இப்பொழுது இன்னநிலையில் இருக்கிறார்கள், இனிமேல் இன்னநிலையினர் ஆவர்'' எனத் தலைவியின் ஆருயிர்த் தோழியை நோக்கியும் கண்டோரை நோக்கியும் புலம்புதல் உலகியலிற் காலந்தோறும் காணப்படும் நிகழ்ச்சியாகும். இச்செய்தியினை,

> "தன்னும் அவனும் அவளுஞ் சுட்டி
> மன்னு நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்
> நன்மை தீமை அச்சஞ் சார்தலென்
> றன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ

முன்னிய காலம் மூன்றொடு விளக்கித்
தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும்
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியும் அவ்வழி யுரிய"[14]

எனவரும் நூற்பாவில் ஆசிரியர் விரித்துக் கூறியுள்ளார். குடும்ப வாழ்க்கையில் துன்பம் நேர்ந்தபோது தமது மக்கள் தெய்வத்தை எண்ணிப் புலம்புதல் உண்டு என்பது இச்சூத்திரத்தால் நன்கு புலனாதல் காணலாம்.

குறிஞ்சி நிலத்தில் வாழும் மக்கள் தம் வாழ்க்கையில் நேரும் துன்பத்தை நீக்கவும் விரும்பிய நன்மைகளைப் பெறவும் வேண்டி, நெல்லினாற் கட்டுப்பார்த்தும் கழங்கு பார்த்தும் முருகப் பெருமானை வழிபாடு செய்யும் பூசகனாகிய வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்த்தி அவ்விழாவில் வேலன்மேல் தெய்வம் உற்று நிகழ்ந்தனவும் நிகழ்வனவும் உரைத்தருள உற்றன அறியும் முறை மலைவாணர் வழக்கமாகும். வெறியென்பது மணம் என்னும் பொருளுடைய சொல்லாகும். அச்சொல் தெய்வமணமாகிய முருகு என்னும் சிறப்புப் பொருளில் தமிழ்த் தொன்னூல் களில் வழங்கப் பெற்றுளது. மலரின்கண் உள்ளிருந்து தோன்றும் நறுமணம் போன்று வழிபடுவாருள்ளத்திலிருந்து தோன்றும் தெய்வவுணர்வாகிய முருகு வழிபடும் அவர்தம் மெய்யினும் வெளிப்பட்டு விளங்கும் இயல்பினை 'வெறி' என வழங்குதல் பழைய தமிழ் மரபாகும். தம் தொழுகுலமாக வழிபடப்பெறும் முருகப் பெருமான் வேலேந்தியாடும் பூசகனாகிய வேலன்மேல் ஆவேசித்து நின்று தம் குடும்ப வாழ்க்கையிலும் சமுதாய வாழ்க்கையிலும் நிகழ்வனவற்றை அறிவித்தருளல் வேண்டும் என்னும் விருப்பத்துடன் முருகப் பெருமானுக்குச் செய்யப்படும் வழிபாடு 'வெறியாட்டு' என வழங்கப்பெறும். இவ்வழிபாட்டின் பயனாக ஒத்த அன்பினராகிய காதலரிருவரிடையே மறைவில் நிகழ்ந்தனவும் தெய்வத்தால் வெளியாகி விடுதல் உண்டு. இவ்வாறு தெய்வ வழிபாட்டின் பயனாக நிகழும் நிகழ்வுகளை,

14. தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், 39.

"கட்டினுங் கழங்கினும் வெறியென விருவரும்
ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்"[15]

எனவும்,

"வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்"[16]

எனவும் வரும் தொடர்களால் தொல்காப்பியனார் குறிப்பிடுகின்றார்.

தெய்வங்கொள்கை என்பது, வாழ்க்கையில் நிறைந்த அனுபவமுடைய முதியோருள்ளத்தில் மட்டுமன்றி வாழ்க்கையினைத் தொடங்குதற்குரிய இளம் பருவத்தினராய தலைவி, தோழி முதலியோருள்ளத்திலும் ஒப்பத் தோன்றும் இயல்பினதாகும். இன்னது விளையும் என்று அறியாது அஞ்சுதலையுடைய களவுக் காலத்தே ஒருவனும் ஒருத்தியு மாகிய அன்புடையார் இருவர் நண்பு செய்தொழுகுங்கால், அவர்கள் வருந்தாவண்ணம் அவ்விருவர்க்குந் தோன்றாத் துணையாய் நின்று அருள் புரிவதோர் முழுமுதற் பொருளாகிய கடவுள் உண்டு எனவுணர்ந்த தோழி அவ்விருவர்க்குந் திருமணம் விரைவில் நிறைவேறுமாறு அருள்புரிதல் வேண்டும் எனக் கடவுளை ஏத்தி வழிபடுதல் இயல்பு. இங்ஙனம் தலைவியின் வாழ்வோடு ஒன்றிய உள்ளத்தினளாகிய தோழியின் அன்புரிமை பற்றிய இவ்வழிபாட்டினை விளக்குவது,

"நாமக் காலத் துண்டெனத் தோழி
ஏமுறு கடவுள் ஏத்திய மருங்கினும்"

என வரும் தொல்காப்பியத் தொடராகும்.

மனைமாட்சியிற் சோர்வில்லாத தலைவியைத் தலைவன் மணஞ் செய்து கொள்ளுதல் வேண்டிக் கடவுளைப் பரவிப் போற்றிய தோழி, தான் வேண்டிய வண்ணமே அவ்விருவர்க்கும் திருமணம் நிறைவேறிய நிலையில் தனது வேண்டுகோளினை ஏற்று அருள் புரிந்த

15. *தொல்காப்பியம், பொருளதிகாரம்*, களவியல், 25.
16. *மேலது*, 2.

தெய்வத்திற்குப் பரவுக்கடன் கொடுத்தல் வேண்டும் என விரும்புதல் இயல்பு. இவ்விருப்பத்தினை,

> "அற்றமில்லாக்
> கிழவோட் சுட்டிய தெய்வக் கடத்தினும்"

எனவருந்தொடரில் ஆசிரியர் தொல்காப்பியனார் குறிப்பிடுவர்.

தலைவனை மணந்து கொண்டு கற்புக்கடம் பூண்ட தலைமகள் தன் கணவற்குத் தொழுகுலமாகிய தெய்வத்தின் பால் அச்சமுடையளாய் அன்பினாற் பணிந்தொழுகுதல் முறையாகும். இவ்வழிபாட்டு முறையினைத் 'தெய்வம் அஞ்சல்' என்னும் மெய்ப்பாடாக மெய்ப்பாட்டியலில் தொல்காப்பியனார் குறித்துள்ளார்.

தலைவன் தலைவியைப் பெற்றோரறியாதவாறு உடன்போக்கில் அழைத்துச் சென்றபோது தலைவியின் பிரிவால் வருந்திய செவிலித்தாய், தலைவனுடன் போகிய தலைமகட்கு வழியில் எத்தகைய தீங்கும் நேராதவாறு அருள்புரிதல் வேண்டும் எனத் தான் வழிபடு தெய்வத்தை இறைஞ்சிப் போற்றுதல் இயல்பு. இவ்வாறு செவிலித்தாய் தெய்வத்தை வழிபடுந்திறத்தினைத் 'தெய்வம் வாழ்த்தல்' (களவு - 25) என வருந்தொடரில் ஆசிரியர் குறித்துள்ளார். இங்கு எடுத்துக் காட்டிய குறிப்புக்களால் ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்துத் தமிழ் மக்களது குடும்ப வாழ்க்கையில் தெய்வ வழிபாட்டுணர்வு சிறப்பிடம் பெற்று விளங்கினமை நன்கு புலனாதல் காணலாம்.

இனி, ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்தில் அரசியல் வாழ்வில் தெய்வ வழிபாட்டிற்கமைந்த சிறப்பும் இங்கு நினைக்கத்ததகுவதாகும். வேந்தனது வெற்றிக்கு அடையாளமாகிய கொடியானது ஏனை வேந்தர் கொடியினும் மேற்பட்டு விளங்குதலும் அரசன் பகைவரது அரணையழித்தலும் மன்னன் தன்னையடைந்தோர் அனைவர்க்கும் வரையாது வழங்குதலும் எனக் குற்றமற்ற சிறப்பினால் முற்படப் புகழ்தற்குரிய புறத்திணைத் துறைகள்

மூன்றையுங் குறித்து நல்லிசைப் புலவர்கள் பாடுதற்குரிய பாடாண் திணை பற்றிய பாடல்கள் எல்லாவுயிர்கட்குந் தோன்றாத் துணையாய் நின்று இன்னருள் சுரக்கும் முழுமுதற்கடவுளை வாழ்த்திய குறிப்புடன் கலந்து வருவனவாகும். முறை செய்து காப்பாற்றும் மன்னனைப் புகழ்ந்து பாடும் இப்பாடல்களில் அரசனது முறைமைக்கு உறுதுணையாகிய இறைவனை வாழ்த்திப் போற்றும் பகுதியும் இடம்பெறும் என்பதனை,

> "கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
> வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
> கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"[17]

எனவரும் சூத்திரத்தால் தொல்காப்பியனார் குறிப்பிடுவர். ஒரு நாட்டின் அரசியல் வாழ்வில் வேந்தர்கட்கு உளவாகும் வெற்றிகட்கெல்லாம் உயிர்க்குயிராய் விளங்கும் கடவுளின் திருவருளே உறுதுணையாய் நின்று உதவுந்திறத்தைப் புலத்துறைமுற்றிய சான்றோர் வேந்தர் முதலியோர்க்கு நன்கணம் அறிவுறுத்தி அவர்களுடைய உள்ளத்தைத் திருத்துதல் வேண்டும் என்பது தொல்காப்பியனார் கருத்தாகும் என்பதனை இச்சூத்திரத்தால் நன்குணரலாம்,

இனி, எல்லாம் வல்ல கடவுளைத் தன் ஆருயிர்த் தலைவனாகவும் உயிராகிய தன்னை அவனையடைய விரும்பிய தலைவியாகவும் எண்ணி இன்றியமையாத அன்புரிமையினால் கடவுளைக் காதற்கேண்மையிற் போற்றி வழிபடும் மரபு தொல்காப்பியனார் காலத்திலேயே தமிழகத்தில் நிலை பெற்று வழங்கியதெனத் தெரிகிறது. இச்செய்தி,

> "காமப் பகுதி கடவுளும் வரையார்
> ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்"[18]

எனவரும் தொல்காப்பியச் சூத்திரத்தால் உய்த்துணரப்படும்.

---

17. தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், 27.
18. மேலது, 23.

இத்துறைப் பொருளாகக் கடவுள் மாட்டுத் தெய்வப் பெண்டிர் நயந்த பக்கமும் மானிடப் பெண்டிர் நயந்த பக்கமும் பாடப்பெறும் என்பது புறப்பொருள் வெண்பா மாலையாலும் தொல்காப்பிய இளம்பூரணருரையாலும் நன்கு தெளியப்படும்.

உயிர்வாழ்க்கைக்கு நிலைக்களமாகக் காணப்படும் இவ்வுலகம் நிலம் நீர், தீ, வளி, ஆகாயம் என்னும் ஐம்பெரும் பூதங்களின் சேர்க்கையாலாகியது என்பதனை

> **"நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்**
> **கலந்த மயக்கம் உலக மாதலின்"[19]**

எனவரும் தொடரிற் குறிப்பிடுவர் தொல்காப்பியர். பலவேறு அவயவப் பகுப்புடையதாய் ஐம்பொறி வாயிலாகச் சுட்டியறியப்படும் தன்மை இவ்வுலகின்பாற் காணப்படுதலின் இவ்வுலகம் என்றும் ஓரியல்பினதாய் விளங்கும் நிலை பேறுடையதன்று என்பர் அறிவர். இதன் இயல்பினை

> **"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே**
> **பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானும்**
> **நில்லா வுலகம் புல்லிய நெறித்தே"[20]**

எனவரும் நூற்பாவில் 'நில்லாவுலகம்' என்ற தொடரால் தொல்காப்பியனார் அறிவுறுத்தியுள்ளார். பருப்பொருளாகக் காணப்படும் இவ்வுலகம் ஞாயிறு திங்கள் விண்மீன் முதலியவற்றைத் தன்னகத்தே யடக்கியுள்ள அண்டங்கள் ஆகிய காரியப் பொருள்கள் அனைத்திற்கும் மூலமாய்க் காரணமாகிய நுண்பொருளை உலகம் எனவும் உலக இயக்கத்திற்கு உறுதுணையாகிய காலம் என்னும் தத்துவத்தைக் 'காலம்' எனவும் 'காலம் உலகம்' என்னும் முதற்குறிப்புடைய சொல்லதிகாரச் சூத்திரத்தில் ஆசிரியர் குறித்துள்ளமை முன்னர் விளக்கப்பெற்றது. நிலமும் காலமும் ஆகிய தத்துவங்கள் இரண்டும் மன்னுயிர்களின் வாழ்க்கைக்கு நிலைக்களமாதலால் இவற்றை 'முதற்பொருள்' என்று

19. *தொல்காப்பியம், பொருளதிகாரம்,* மரபியல், 86.
20. *தொல்காப்பியம், பொருளதிகாரம்,* புறத்திணையியல், 18.

பெயரால் தமிழ் முன்னோர் வழங்குவாராயினர். இப்பெயர் வழக்கின் தொன்மையினை,

> "முதலெனப் படுவது நிலம்பொழுதி திரண்டின்
> இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே"[21]

எனவரும் தொல்காப்பியச் சூத்திரத்தால் நன்குணரலாம். இங்கு எடுத்துக்காட்டப்பெற்ற தொல்காப்பியத் தொடர்களின் பொருளைக் கூர்ந்து நோக்குங்கால், உலகம் என்பது இல்பொருளன்று, காலம் என்னும் பொருளுடன் தொடர்புடையதாய் அடிக்கடி நிலைமாறுமியல்பினதாகிய உள்பொருளே என்பது தொல்காப்பியனார் கொள்கையாதல் நன்கு புலனாகும்.

இவ்வாறு கடவுள் உலகம் என்னும் இருவேறு பொருளுண்மையைச் சுட்டிய தொல்காப்பியனார் இவற்றின் வேறாக உயிர் என்பதனைத் தனித்தன்மையுடைய பொருளாகக் கொண்டு அவ்வுயிர்கள் பலவெனத் தம் நூலுள் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளார். உயிர்கள் தோற்றமில் காலமாக நிலைபெற்று வரும் தொன்மையுடையன என்பதும் எக்காலத்தும் அழிவில்லன என்பதும் அவைதாம் பெற்றுள்ள பொறிகளின் குறைவு மிகுதிகட்கேற்ப, குறைந்தும் மிக்கும் தோன்றும் பல்வேறு அறிவு நிலைகளையுடையன என்பதும் அழிவில்லன என்பதும் பண்டைத்தமிழர் கொள்கையாகும். உயிர்கள் ஒரு காலத்திற் படைக்கப்பெறாது தோற்றமில் காலமாக (அநாதியாக) உள்ள உள்பொருள் என்பதனைத் 'தொல்லுயிர்' (தொல். புறத். 17) எனவரும் தொடரில் தொல்காப்பியனார் தெளிவாகக் குறித்துள்ளார். உயிர்கள் அழிவின்றி என்றும் நிலைபேறுடையனவாதலின் அவற்றை 'மன்னுயிர்' என வழங்குதல் தமிழ் வழக்கு. உயிர்களை ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈறாக அறிவின் திறத்தால் அறுவகையாகப் பகுத்துரைப்பர் தொல்காப்பியனார். எனவே உயிர் என்பது அறிவு என்னும் வெறும் பண்பன்று; அறிதற்பண்பினையுடைய குணிப்பொருளாம் என்பது

---

21. தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், 4.

தொல்காப்பியனார் கொள்கையாதல் உய்த்துணரப்படும். "உயிர் எத்தன்மைத்து? என்று வினாய வழி, 'உணர்தற் றன்மைத்து' என்றல் செவ்வன் இறையாம்" என்பர் சேனாவரையர். உணருந்தன்மையுடையது எதுவோ அதுவே உயிர் என வழங்கப்பெறும் என்பது இவ்வுரைவிளக்கத்தால் நன்கு விளங்கும். பொறிகளால் மிக்கும் குறைந்தும் காணப்படும் பல்வேறு உடம்புகளைப் பெற்று வாழும் எல்லாவுயிர்கட்கும் அறியுந்தன்மையென்பது பொது வியல்பாகும். உயிர்கள் தாந்தாம் பெற்றுள்ள உடம்பின்கண் அமைந்த கண் செவி முதலிய அறிதற் கருவிகளின் குறைவுமிகுதிகட்கேற்ப அவற்றின் உணர்ச்சி வாயில்கள் வேறுபடும் நீர்மையனவாம். இவ்வுலகிற் புல் முதல் மக்கள் ஈறாகவுள்ள அறிவுடைப் பொருள்கள் யாவும் உயிர்களே யாம். எனினும் அவற்றின் அறிவு அவை பெற்றுள்ள பொறிகளின் குறைவுமிகுதிகட் கேற்பக் குறைந்தும் வளர்ந்தும் அமைந்த இயல்பினைத் தொல்காப்பிய னார்க்குமுன் வாழ்ந்த தமிழ்ச் சான்றோர்கள் நுணுகி யாராய்ந்து கண்டார்கள். அவ்வாராய்ச்சியின் பயனாக எல்லாவுயிர்களையும் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈறாக அறுவகையாகப் பகுத்துள்ளனர்.

காணாமரபினவாகிய உயிர்களைக் காணப்படும் நிலையில் அவை பெற்றுள்ள உடம்பினாற் கருதியுணர்ந்து உடம்பின்கண் அமைந்த அறிகருவிகளாகிய ஐம்பொறிகள் பற்றியும் அகக்கருவியாகிய மனம் பற்றியும் அறுவகை யுயிர்களாகத் தமிழ் முன்னோர் பகுத்த முறையினை ஆசிரியர் தொல்காப்பியனார் மரபியலில் 'ஒன்றறிவதுவே உற்றறிவது' என்பது முதலாகவுள்ள ஏழு சூத்திரங்களில் விரித்துக் கூறியுள்ளார். புல் மரம் எனப்படும் தாவரங்கள் தொட்டால் உணரும் ஊற்றுணர்வு ஒன்றேயுடையன. ஆதலின் அவை ஓரறிவுயிர்கள். நத்தை சங்கு இப்பி முதலியன பிறிதொன்று தம்மைத்தாக்கிய போது உடம்பினால் உற்றறியும் ஊற்றுணர்வும் உணவினைச் சுவைத்தறியும் நாவுணர்வும் உடைமையின் அவை ஈரறிவுயிர்களாகும். கரையான் எறும்பு முதலியன முற்குறித்த ஊற்றுணர்வு சுவையுணர்வு என்னும் இரண்டுடன் மோந்தறிதலாகிய மூக்குணர்வும் உடைமையின்

மூவறிவுயிர்கள் எனப்படும். நண்டு, தும்பி யென்பன முற்குறித்த மூவறிவுடன் கண்ணுணர்வும் ஒருங்குடையன வாதலின் நாலறிவுயிர்கள் எனப்படும். நாற்கால் விலங்கும் பறவையுட் முன்னர்க்கூறிய நாலறிவுடன் ஓசையறிதலாகிய செவியுணர்வும் ஒருங்கு பெற்றமையின் ஐயறிவுயிர்கள் எனப்படும். முற்குறித்த ஐம்பொறியுணர்வுகளோடு நன்றுந் தீதும் பகுத்துணரும் ஆறாவதறிவாகிய மனவுணர்வு மக்களுயிர்க்கே சிறப்புரிமையுடையதாதலின் மக்கள் ஆறறிவுயிர் எனப்படுவர். இங்கு வகைப்படுத்துணர்த்திய அறுவகை யுயிர்ப்பாகுபாடுகளுள் எடுத்துரைக்கப் பட்டனவேயன்றி அவற்றின் நிலையினவாகவும் ஒத்த பிறப்பினவாகவும் வருவன பிறவும் உள்ளன என்பார் ‘பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே’ என்றார். இங்ஙனம் உயிர்த்தொகுதியினை அறுவகையாகப் பகுத்துரைக்கும் பகுப்பு முறை தமக்கு நெடுங்காலத்திற்கு முன்னரே தமிழ் முன்னோர்களால் நெறிப்படுத்தப்பட்ட தொன்மை வாய்ந்தது என அறிவுறுத்துவார் ‘நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே’ என்றார்.

இவ்வாறு அறிவின் திறம்பற்றி அறுவகையாகப் பகுத்துரைக்கப்படும் எல்லாவுயிர்கட்கும் இன்பத்தின்பால் வேட்கை நிகழ்தல் இயல்பு என்பதனை,

> “எல்லா வுயிர்க்கும் இன்பம் என்பது
> தானமர்ந்து வரூஉ மேவற் றாகும்”[22]

எனவரும் சூத்திரத்தாற் குறிப்பிட்டுள்ளார். எனவே அறிவும் விருப்பமும் அவைபற்றிய செயல்வகையும் ஆகிய மூவகையாற்றல்களும் ஒருங்குடையன உயிர்கள் என்பதும் உயிர்கட்கமைந்த ஆற்றல்கள் அவை பெற்றுள்ள கருவிகரணங்களின் எல்லையுட்பட்டு அடங்கும் குறைவுடையன என்பதும் ஒருவாற்றால் ஆசிரியர் உய்த்துணர வைத்தாராயிற்று.

அறியும் ஆற்றல் வாய்ந்த உயிரும் அறியும் தன்மை

---

22. *தொல்காப்பியம், பொருளதிகாரம்,* பொருளியல், 28.

யில்லாத உடம்பும் தம்முள் வேறுபட்ட இருவேறு பொருள்களே என்பதனை, 'காலம் உலகம் உயிரே உடம்பே' எனவும் 'உடம்பும் உயிரும் வாடியக்காலும்' எனவும் எனவரும் தொடர்களால் தொல்காப்பியனார் தெளிவுபடுத்தி யுள்ளமை உயிரியல்பு பற்றிய ஆய்வுக்கு அரண் செய்வதாகும். எழுத்திலக்கண முணர்த்தக்கருதிய தொல்லாசிரியர்கள் உயிர்போல தானே இயங்குந்தன்மையது உயிரெழுத்து எனவும் மெய்போல் உயிராலன்றி இயக்கமில்லாத தன்மையது மெய்யெழுத்து எனவும் மெய்போல் உயிராலன்றி இயக்கமில்லாத தன்மையது மெய்யெழுத்து எனவும் எழுத்துக்களுக்குப் பெயர் கூறிய பெற்றியினை உற்று நோக்குங்கால் தொல்காப்பியனார் காலத்துக்கு முற்பட்ட ..மிழ் முன்னோரது மெய்யுணர்வின் திட்பமும் நுட்பமும் இனிது புலனாதல் காணலாம்.

உயிர், தான் நின்றவுடம்பினை விட்டுப் பிரிந்து செல்லும் இயல்பினதென்பதனைச் 'சென்ற வுயிரின் நின்ற யாக்கை' என்னுந் தொடராலும், கால வரையறையுட்பட்ட உடம்பினின்றும் உயிரைப் பிரிப்பதொரு தெய்வ ஆற்றல் உண்டென்பதும் அதனை மாற்றும் ஆற்றல் உயிர்கட்கு இல்லையென்பதும் ஆகியவுண்மையினை 'மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமை' என்ற தொடராலும் இவ்வுலகிற் பலரும் மாய்ந்தொழியத் தான்மட்டும் மாயாதிருந்து யாக்கை நிலையாமையை விளக்கும் அடையாளமாக எஞ்சி நிற்பது ஈமப் புறங்காடுமட்டுமே யென்பதனை, 'மலர்தலை யுலகத்து மரபுநன் கறியப் பலர்செலச் சொல்லாக் காடு வாழ்த்து' எனவரும் துறைப் பொருளாலும் தொல்காப்பியனார் தெளிவுபடுத்தியுள்ளார். இவ்வாறே 'மன்னாப் பொருட் பிணி' என்பதனால் செல்வ நிலையாமையையும் 'இளமையதருமை' என்பதனால் இளமை நிலையாமை யையும் தொல்காப்பியனார் அறிவுறுத்தியுள்ளமை உளங்கொளத் தகுவதாகும்.

இவ்வுலகம், இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை எனப் பல்லாற்றானும் நிலையாதென்பதனை நன்குணர்ந்தவர் இவ்வுலகியல்

வாழ்வினை நிலையற்றதெனக் கருதி விலகியொழுகுதல் கூடாதென்பதும், இவ்வாறு ஒருநிலையில் நில்லாத உலகியற் கூறுகளைப் பற்றுக்கோடாகப் பற்றி நின்றே உயிர்க்கு உறுதிபயக்கும் நிலையுடைய நற்பொருள்களைத் தேடிக் கொள்ளுதல் வேண்டுமென்பதும் தொல்காப்பியர் கொள்கையாகும். இங்ஙனம் உலக வாழ்க்கையில் நேரும் பலவகைத் தடைகளை யெதிர்த்துநின்று நிலையாத பொருள்களைச் சாதனமாகக் கொண்டு நிலையுடையன வற்றை யெய்துதலே காஞ்சித் திணையென்னும் ஒழுகலாறாகும். இதனியல்பினை,

> **"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே**
> **பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானும்**
> **நில்லா வுலகம் புல்லிய நெறித்தே"[23]**

எனவரும் சூத்திரத்தால் ஆசிரியர் விளக்கியுள்ளார். 'எதிரூன்றல் காஞ்சி' என்னும் பன்னிருபடல நூலாசிரியர் கொள்கையும் இவ்வாசிரியரது கருத்தினை அடியொற்றி யமைந்ததேயாகும்.

மக்கட்குலத்தாரை உயர்திணையாக உயர்த்துவது மனவுணர்வின் பாற்பட்ட நல்லொழுக்கமேயாகும். தெய்வவழிபாட்டிற்கு அடிப்படையாக அமைந்தது வாழ்வியலறங்களிற் பிறழாத நல்லொழுக்கமேயாதலின் கடவுள் வழிபாட்டுநெறியினைப் 'பொய்தீர் ஒழுக்க நெறி' எனக் குறித்தார் தெய்வப்புலவர். உயர்திணைமாந்தர் வாழ்க்கையில் மேன்மேலும் உயர்வினைப் பெறுதற்கு உறுதுணையாவது ஒழுக்கமேயாதலின் அதனைத் தம் உயிரினுஞ் சிறந்ததாகத் தமிழ் முன்னோர் கடைப்பிடித் தொழுகினர். ஒழுக்கநெறியினை அடிப்படையாகக் கொண்டே தமிழ்மக்களின் குடும்ப வாழ்வும் அரசியல் வாழ்வும் உருப்பெற்று வளர்ந்தன. இவ்வுலக வாழ்க்கையினை வரம்பு அமைத்து வளர்ப்பதே ஒழுக்கநெறியாதலின் அது 'கட்டமையொழுக்கம்' எனப் பெற்றது. ஒழுக்க நெறியிற் சிறிதும் வழுவாது வாழுஞ் சான்றோர்களின் சால்பினது

23. *தொல்காப்பியம், பொருளதிகாரம்,* புறத்திணையியல், 18.

வெற்றி உலகமக்கள் எல்லாராலும் பாராட்டிப் போற்றுதற்குரிய நல்லறிவின் தோற்றமாதலின் அது 'கட்டமை யொழுக்கத்துக் கண்ணுமை' எனப்பட்டது. கண்ணுமை என்றது கண்ணின் தன்மையாகிய காட்சியினை; அஃது ஈண்டு நல்லறிவின் தோற்றமாகிய செயற்பாட்டினைக் குறித்து நின்றது. ஒழுக்கத்தால் உயர்ந்த பெருமக்களைச் சார்ந்து அவர்கள் அறிவுறுத்திய நன்னெறியினைக் கடைப்பிடித்தொழுகலும் தெய்வ வழிபாட்டின் சார்புடையதேயாகும். அறவோராகிய அந்தணர்பாலும் சான்றோர் கண்ணும் அழியாச் சிறப்புடைய பெரியோரிடத்தும் இவ்வாறு ஒழுகுதல் வேண்டும் என ஒருவர் ஒருவர்க்கு அறிவுறுத்தும் முறைமையினை 'அந்தணர் திறத்தும் சான்றோர்திறத்தும் அந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும் ஒழுக்கம் காட்டிய குறிப்பு' என்பர் தொல்காப்பியனார்.

ஒழுக்கத்தைப் பேணாது தலைவன் வழுவியது கண்ட தலைவி, தன் கணவனது பழிநிலைக்கு நாணுந் திறத்தினைப் 'பேணா ஒழுக்கம் நாணிய பொருளினும்' என்ற தொடராலும், பெரியோர்க்கு 'ஒழுக்கமே பெரியது' என்பதனைத் தோழி அறிவுறுத்துமியல்பினைப் 'பெரியோ ரொழுக்கம் பெரிது எனக்கிளந்து' என்ற தொடராலும் ஆசிரியர் அறிவுறுத்தியுள்ளார். ஆகவே ஒழுக்கம் உயிரினுஞ் சிறந்ததென்பது தொல்காப்பியனார் துணிபாகும். இத்தகைய நல்லொழுக்க நெறியினைக் குறிக்கொண்டு போற்றாது ஒருவர் பிறர்க்குச் செய்த கொடுஞ்செயல் செய்த அவரையே பற்றி வருத்தும் என்பது உலகவாழ்க்கையிற் பலரும் தெளிந்து கூறும் வினையுணர்வு பற்றிய நம்பிக்கையாகும். ஒருவர் செய்த கொடுஞ் செயல் செய்த அவரையே பற்றி வருத்தும் என்னும் இவ்வுண்மையினைக் 'கொடியோர் கொடுமை சுடும்' எனத் தம் காலத்து வழங்கிய பழமொழியின் வாயிலாகத் தொல்காப்பியனார் தெளிவுபடுத்தியுள்ளார்.

நாட்டில் வாழும் நன்மக்களால் அறிவுறுத்தப்பெறும் வாழ்வியல் முறைகளை நிலைக்களமாகக் கொண்டு அந்நாட்டுமக்கள் தம் வாழ்க்கையனுபவத்திற் கண்டுணர்ந்த

தத்துவவுண்மைகள் இவையென அறிந்து கொள்ளுதல் எளிதாகும். மக்கள் தம் வாழ்க்கையின் உறதிப்பொருள் களாகக் கொள்ளுதற்குரியன அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றுமேயாகும். இவ்வுறுதிப்பொருள்களை 'அறமுதலாகிய மும்முதற்பொருள்' எனவும் 'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு' எனவும் குறிப்பிடுவர் தொல்காப்பியர். அவற்றுள் இன்பம் என்பது எல்லா வுயிர்களாலும் விரும்பப்பெறும் நுகர்தல் வேட்கையாகும். பொருள் என்பது முற்குறித்த இன்பத்திற்குக் காரணமாக அறிவுடைய நன்மக்களால் ஈட்டப்பெறுவதாகும். அறம் என்பது, வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களை ஈட்டுந்திறத்திற் பிறர்க்குத் தீங்கு நேராதவாறு மாசற்ற மனமொழிமெய்களாற் செய்யப்பெறுஞ் செயல்முறையாகும். நுகர்தல் வேட்கை முறைபற்றி 'இன்பமும் பொருளும் அறனும்' எனவும் செய்கை முறைபற்றி அறம் பொருள் இன்பம் எனவும் எண்ணுதல் மரபு.

> "இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
> அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற்
> காமக் கூட்டம்"[24]

என நுகர்தல் முறை பற்றியும்

> "அந்நிலை மருங்கின் அறமுத லாகிய
> மும்முதற் பொருட்கும் உரிய என்ப"[25]

எனச் செய்கை முறை பற்றியும் மும்முதற்பொருள்களாகிய உறுதிப்பொருள்களை எண்ணியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும். அறம் பொருள் இன்பம் என்னும் இம்மூன்றைத் தவிர அறிவுடைய் மக்களால் விரும்பி மதித்தற்குரியன பிற இன்மையின் இம்மூன்றையும் 'மும்முதற்பொருள்' எனச் சிறப்பித்துரைத்தார். அறத்தினாற் பொருளையீட்டி அப்பொருளால் இன்பம் நுகர்தலே மக்களது நல்வாழ்க்கை முறையாகும். இவ்வாறு மூன்று பகுதியாக நிகழும் இவ்வுலக

24. தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், 1.
25. தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், 105.

வாழ்க்கையின் அமைப்பினை 'மூன்றன் பகுதி' எனத் தொகுத்துரைப்பர் தொல்காப்பியர். உலகப் பொதுமறை யாசிரியராகிய தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும் ஆசிரியர் தொல்காப்பியனார் வகுத்த முறையே அறம் பொருள் இன்பம் என்னும் முப்பால்களாகத் திருக்குறளை வகுத்தருளிச் செய்தமை இங்கு ஒப்பு நோக்கற்பாலதாகும்.

இயற்றமிழிலக்கண நூலாகிய தொல்காப்பியம் தமிழ்மக்களது குடும்ப வாழ்க்கையினையும் சமுதாய வாழ்க்கையினையும் புலப்படுத்தும் வாழ்க்கை நூலாகவும் திகழ்கின்றது. தொல்காப்பியனார் காலத்து வாழ்ந்த தமிழ் முன்னோர் தம் வாழ்க்கையிற் கண்டுணர்ந்து கடைப் பிடித்தொழுகிய தத்துவவுண்மைகளும் செயல்முறைகளும் தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன. இப்பிறப்பிற் குரியனவாகிய இம்மைச் செல்வமும், வரும் பிறப்புக்களிலும் தொடர்ந்து துணைபுரிவனவாகிய அறச்செயல்களும் பிறப்பறமுயலும் பெருநெறியாகிய துறவு நிலையும் ஆகிய இம்மூன்று நிலைகளும் மக்கள் வாழ்க்கையின் கூறுகள் என முன்னைத் தமிழ்ச் சான்றோர் ஆராய்ந்து வெளியிட்டுள் ளார்கள். அன்பிற் சிறந்த கணவனும் மனைவியுமாக வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து மக்களொடு மகிழ்ந்து மனையறங்காத்துச் சுற்றத்தாரைப்பேணி விருந்தோம்பி எல்லோர்க்கும் ஆதரவாக வாழ்வதே இம்மை வாழ்வாகும். இவ்வாறு கணவனும் மனைவியுமாக இல்லின்கண் இருந்து மனையறம் நிகழ்த்தினோர் தாம் நுகரவேண்டிய இன்பங்களையெல்லாம் நுகர்ந்து மனநிறைவுடையராய் முதுமைப் பருவந் தொடங்கிய நிலையிலே மிக்க காமத்து வேட்கை நீங்குதல் இயல்பு. இங்ஙனம் ஐம்புல நுகர்ச்சியிற் பற்றுத்தீர்தலாகிய இத்தூய ஒழுகலாற்றினைக் 'காமம் நீத்த பால்' என வாகைத்திணைக்குரிய துறைகளுள் ஒன்றாக வைத்துரைப்பர் தொல்காப்பியர். 'காமம் நீத்த பால்' என்றது, உரன் என்னும் அங்குசத்தால் ஐம்புலக்களிறுகளை வென்றடக்கிய வீரத்தினைப் புலப்படுத்தும் வெற்றிச் செயலாதலின் வாகைத் திணைக்குரிய துறைகளுள் எண்ணப்பெறுவதாயிற்று. இளமையும் யாக்கையும் செல்வமும் நிலையாதன எனத் தெளிந்து எல்லா

வுயிர்களிடத்தும் இரக்கமுடையராய் செம்பொருளாகிய முழுமுதற்பொருளின் அருளையே சார்பாகப் பற்றிக் கொண்டு உலகப்பற்றினைத் துறந்து ஒழுகுதல் துறவுநிலை யாகும். இத்துறவினை வாகைத்திணைக்குரிய துறைகளுள் ‘அருளொடு புணர்ந்த அகற்சி’ என்ற துறையாகக் குறிப்பிடுவர் தொல்காப்பியர்.

குற்றமும் குணமும் விரவிய நிலையில் நிகழ்வதே உலகியல் வாழ்வு. வாழ்க்கையில் நேரும் குற்றங்களை நீக்கிக் குணங்களால் உயர்ந்து வாழ்க்கையிற் பெறும் மேதகவே வாழ்க்கையின் வெற்றியாகும். செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண்பிறந்த மானம், மாணாவுவகை என்பன மக்களிடத்தே காணப்படும் அறுவகைக் குற்றங்களாகும். வெல்லுதற்கு அரிய உட்பகையாயிருந்து வாழ்க்கையில் துன்பம் விளைப்பன இக்குற்றங்களாகும். இவ்வறுவகைக் குற்றங்களையும் சான்றோர் தம் உள்ளத்துறுதியாலும் அறிவின் திண்மையாலும் வென்று மேம்படுந்திறத்தினை ‘அரும்பகை தாங்கும் ஆற்றல்’ என்னும் துறையாகக் குறிப்பிடுவர் தொல்காப்பியர். உட்பகையாகிய இக் குற்றங்களை ‘அரும்பகை’ எனத் தொல்காப்பியனார் கூறியது போலவே ‘குற்றமே அற்றந்தரூஉம் பகை’ எனத் திருவள்ளுவரும் தெளிவாக அறிவுறுத்தியுள்ளமை காணலாம். மக்களது நல்வாழ்வினைச் சிதைப்பன மனத்தின்கண் தோன்றும் தீயநினைவுகளேயென்பதும் அத்தகைய மனமாசுகளைக் களைய வல்ல நல்லுணர் வுடையவர்களே ஆற்றல் மிக்க நன்மக்கள் என்பதும் ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தென்பது, ‘அரும்பகை தாங்கும் ஆற்றலானும்’ எனவரும் இத்தொல்காப்பியத் தொடரால் நன்கு துணியப்படும்.

உலக வாழ்க்கையில் ஒருவனும் ஒருத்தியும் மணந்து மனையறம் நிகழ்த்தி அன்பிற்சிறந்து வாழ்ந்ததன் பயனாக அவ்விருவரையும் அடுத்து வரும் பிறவியிலும் கணவனும் மனைவியுமாகப் பொருந்தி வாழும் வண்ணம் ஒன்று சேர்ப்பதும் அன்பின்மை காரணமாக அவ்விருவரையும் பிரித்து வேறாக்குவதும் என ஊழ் இருவகைப்படும். கணவன்

மனைவியென்னும் அவ்விருவர் உள்ளமும் அன்பினாற் சிறந்து பிறப்புத்தோறும் நல்வினைக்கண்ணே ஒற்றித்து நிற்றலால் உயர்ந்ததன் மேற்செல்லும் மன நிகழ்ச்சி அவ்விருவர்க்கும் உண்டாகிய மறுபிறப்பினும் அவ்விருவரை யும் ஒன்று சேர்க்கும் பாலாய் ஆகூழ் எனப்படும். இப்பிறப்பிற் கணவனும் மனைவியுமாகக் கலந்துவாழ்வோர் தம்முள் அன்பின்றிப் பிணங்கியொழுகுவராயின், அவரிடையே தோன்றிய மனவேறுவாடு, அவ்விருவரையும் மறுபிறப்பிற் கூடாதவாறு பிரிக்கும் பாலாய் வேறுபடுத்துவதாகும். இது போகூழ் எனப்படும். அன்புடையார் இருவருள்ளமும் பிறப்புத்தோறும் ஒன்றிய நல்வினையின் உயர்ச்சியினாலே அவ்விருவரையும் மறுபிறவியிலும் கூட்டுவதாகிய உயர்ந்த நல்லூழின் ஆணையினாலே ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் இயற்கைப் புணர்ச்சியில் எதிர்ப்படுவர் என்பது தமிழ் முன்னோர் துணிபாகும். இவ்வுண்மையினை,

> "ஒன்றே வேறே யென்றிரு பால்வயின்
> ஒன்றி யுயர்ந்த பால தாணையின்
> ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப"

எனவரும் சூத்திரத்தினாலும், 'பொறியின் யாத்தபுணர்ச்சி' என்ற தொடராலும் ஆசிரியர் தெளிவாகக் குறித்துள்ளார். இவ்வாறு தொல்காப்பியனார் ஊழின்திறத்தை விரித்துரைத்த லால் அவ்வூழ் முதிர்ந்து பயனளித்தற்குரிய மறுபிறப்புண் டென்பதும் அவர்தமக் குடன்பாடாதல் நன்கு தெளியப்படும்.

கணவனும் மனைவியுமாக மனையின்கண் இருந்து இல்லறமென்னும் நல்லறத்தினைச் சிறப்புற நிகழ்த்தும் கடமையினை மேற்கொண்ட காதலர் இருவரும் ஐம்புல வின்பங்களை ஆரத்துய்த்து மனவமைதிபெற்ற நிலைமைக்கண் மனையறத்திற்குப் பாதுகாவலாகிய மக்களால் நிறைவு பெற்ற அறத்தையே விரும்பிய சுற்றத்தாருடன் உயிரினுஞ் சிறந்த முழுமுதற்பொருளாகிய செம்பொருளின் அருளியல்பினை உணர்ந்தோர்பாற் கேட்டுணர்ந்து, ஒருநெறிய மனத்திற்கொண்டு போற்றி

மகிழ்தலே அவ்விருவரும் இதுகாறும் அன்பினால் நிகழ்த்திய மனைவாழ்க்கையின் முடிந்த பயனாகும் என்பது ஆசிரியர் தொல்காப்பியனார் அறிவுறுத்தியருளிய மெய்யுணர்வுக் கொள்கையாகும். தமிழ் முன்னோர் வீடு பேற்று நெறிபற்றிய இக்கொள்கை,

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"[26]

எனவரும் தொல்காப்பியனார் வாய்மொழியால் இனிது புலனாதல் காணலாம். எல்லாவுயிர்க்கும் உயிர்க்குயிராய்ச் சிறந்து விளங்குதல் தனக்குவமையில்லாத இறைவனது இயல்பாதலின் உயிர்கட்குத் தோன்றாத்துணையாய் நின்று அருள்புரியும் கடவுளைச் 'சிறந்தது' என்ற பெயரால் தொல்காப்பியனார் குறித்தார். தனக்குத் தோற்றக்கேடுக ளின்றி என்றும் உள்ளதாய்த் தன்பால் ஒன்றும் ஊடுருவ இயலாமையால் தூயதாய்த் தனக்கு எத்தகைய விகாரமும் இன்றி என்றும் ஒருபெற்றியதாய் உலகுயிர்கள் தோறும் செறிந்து நிற்றல் முழுமுதற் கடவுளின் இயல்பாதல் கருதி அதனைச் 'செம்பொருள்' என்ற சொல்லால் திருவள்ளுவர் குறிப்பிடுவர். 'சிறந்தது' எனத் தொல்காப்பியனார் குறித்ததனையே திருவள்ளுவரும் செம்பொருள் என்ற சொல்லாற் குறித்துள்ளார் என்பதற்கு,

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காணப தறிவு"[27]

என்புழிச் 'சிறப்பென்னுஞ் செம்பொருள்' என அடைபுணர்த் தோதியதே சான்றாகும். தொல்காப்பியனார் முதலிய முன்னைச் சான்றோர்களாற் சிறந்தது எனப் போற்றி யுரைக்கப்படும் முழுமுதற் பொருள் என்பார் 'சிறப்பென்னுஞ் செம்பொருள்' என்றார் வள்ளுவர். இல்லறவாழ்வில்

26. *தொல்காப்பியம், பொருளதிகாரம்*, கற்பியல், 51.
27. *திருக்குறள்*, 358.

நுகரவேண்டிய இன்பங்களையெல்லாம் எஞ்சாமல் நுகர்ந்து உள்ளத்தமைதியுற்ற நன்மக்கள் என்றும் அழியாத பேரின்பப் பொருளாய்ச் சிறந்து விளங்கும் செம்பொருளை இடைவிடாது சிந்தித்து மீண்டும் பிறவிச் சூழலிற் றிரும்பி வாராமைக்கு ஏதுவாகிய நன்னெறியினைத் தலைப்படுதலே அன்பின் ஐந்திணையொழுகலாற்றின் முடிந்த பயனாகும் என்பது மேற்குறித்த தொல்காப்பியச் சூத்திரத்தின் கருத்தாகும்.

ஒத்த அன்பினராய் மனையறம் நிகழ்த்தி வாழ்ந்தவர்கள் பிறவிப்பிணிப்பினை நீங்கி வீடுபெறுங் கருத்துடையராய் இவ்வுலகிற் பற்றினை விட்டொழித்து எல்லாவுயிர்களிடத்தும் இரக்கமுடையராய்த் துறவற நெறியாகிய அருள் வாழ்வினை மேற்கொள்ளுதல் பண்டைத் தமிழர் வாழ்வியலிற் கண்ட சிறப்பியல்பாகும். இதனை 'அருளொடுபுணர்ந்த அகற்சி' என்ற தொடரால் ஆசிரியர் தொல்காப்பியனார் குறித்துள்ளமை முன்னர்க் கூறப்பட்டது. இத்தகைய அருள் வாழ்வினை விரும்பி நாடாள் வேந்தர்களும் தங்கள் அரச பதவியினைத் துறத்தலுண்டு. இவ்வாறு முடிமன்னர்கள் வீடுபேற்றினை விரும்பித் தமது அரச பதவியினைத் துறக்கும் நிகழ்ச்சியினைக் 'கட்டில் நீத்த பால்' என வாகைத்திணையுள் ஒரு துறையாகக் கூறுவர் தொல்காப்பியனார். இமயவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழுகுட்டுவன் என்னும் வேந்தர் பெருமான் தன் அரச பதவியினைத் துறந்து காடு போந்த வரலாறு பதிற்றுப்பத்தின் மூன்றாம்பத்தின் பதிகத்துட் குறிக்கப்பெற்றுள்ளமை இங்கு ஒப்புநோக்கற்பாலதாகும்.

நீராடல், நிலத்திடைக்கிடத்தல், தோலுடுத்தல், சடை புனைதல், எரியோம்பல், ஊரடையாமை, கடவுள் வழிபாடு, விருந்தோம்பல் எனத் தவஞ்செய்வார்க்குரிய இயல்புகள் எண்வகையாகச் சொல்லப்பட்டன. தவஞ்செய்வார்க்குரிய எண்வகைச் செயல்முறைகளை 'நாலிரு வழக்கிற் றாபதப்பக்கம்' என்பர் தொல்காப்பியர். 'நாலிரு வழக்கிற் றாபதப்பக்கம்' என்பது யோகியர்க்குரிய இயமம், நியமம்,

ஆசனம், வளிநிலை, தொகைநிலை, பொறைநிலை, நினைதல், சமாதி என்னும் எண்வகையோக வுறுப்புக்களைக் குறித்ததாகக் கொள்வதும் உண்டு.



# சங்கச் செய்யுட்களில் இடம்பெற்றுள்ள தெய்வ வழிபாடும் தத்துவக் கொள்கைகளும்

தமிழ் வளர்ச்சியிற் பேரார்வமுடைய பாண்டிய மன்னர்கள் தமிழிற் சிறந்த புலவர் பெருமக்களை ஒருங்கு கூட்டிச் சங்கம் நிறுவிக் கல்விப் பணிபுரிந்த காலம் சங்ககாலம் என வழங்கப்பெறும். கடல்கொண்ட தென் மதுரையிலும் கபாடபுரத்திலும் இப்பொழுதுள்ள கூடல் மாநகரமாகிய மதுரையிலும் அடுத்தடுத்துப் பாண்டியர் களால் நிறுவப்பெற்ற மூன்று சங்கங்களும் முறையே தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என வழங்கப்பெறும். இவற்றுள் மூன்றாவதாகிய கடைச்சங்கம் இன்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னே நிலவியதாகும். கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த செந்தமிழ்ப் புலமைச் சான்றோர்களாற் பாடப்பெற்ற செழும் பாடல்களுள் அடிவரவு பற்றியும் திணைவகை பற்றியும் தேர்ந்து தொகுக்கப்பெற்ற பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்னும் பனுவல்களே சங்க இலக்கியங்களாகும். தம்முள் ஒத்த அன்பினராகிய ஆடவரும் மகளிரும் நல்லூழின் தூண்டுதலால் ஒருவரையொருவர் எதிர்ப்பட்ட முதற்காட்சியிலேயே உள்ளங்கலந்த பெருங்கேண்மையின ராய் உலகத்தாரறியத் திருமணம் புரிந்து வாழும் அகத்திணை யொழுகலாறாகிய குடும்ப வாழ்வு பற்றியும், இவ்வாறு பல்லாயிரங் குடும்பங்கள் தம்முட் பகையின்றி அன்பும் அறமும் வளர ஒத்து வாழ்தற்கு அரணாக அமைந்த அரசியல், குடியியல் அமைப்புக்களாகிய புறத்திணையொழுகலாறு பற்றியும் விரித்து விளக்கும் வாழ்வியல் இலக்கியங்களாக இவை திகழ்கின்றன.

மனனுணர்வுடையராய மக்கட்குலத்தார்க்கே

யுரியனவாக முன்னைத் தமிழ்ச் சான்றோரால் வரையறுக்கப் பட்ட அகத்திணை புறத்திணை யொழுகலாறுகளாகிய வாழ்க்கை நெறி முறைகளை வரம்பாகக் கொண்டு பாடப்பெற்ற சங்கப் பனுவல்களிலே பண்டைக் காலத்தில் வாழ்ந்த தமிழ் மக்களது வாழ்வியலிற் காணப்படும், உள்ளத்துணர்வு மொழித்திட்பம் செயற்றிறம் என்பனவும் இவற்றின் பயனாக அவர்களது உள்ளத்திலே தோன்றி நிலைபெற்ற உலகு, உயிர் பற்றிய எண்ணங்களும் நம்பிக்கை களும் அவற்றின் பயனாக அவர்களது உள்ளத்திற் குடிகொண்ட கடவுட் கொள்கையும் அன்னோர் மேற் கொண்ட தெய்வ வழிபாட்டு நெறி முறைகளும் தத்துவக் கோட்பாடுகளும் ஆகிய இவை அகமும் புறமுமாகிய அவர்தம் வாழ்க்கை நிகழ்ச்சிகளுடன் பிரிவின்றிக் கலந்து காணப்படுகின்றன. சங்க இலக்கியங்களிற் கூறப்படும் பண்டைத் தமிழ் மக்களது குடும்ப வாழ்க்கையிலும் சமுதாய வாழ்க்கையிலும் பொதுவாக இடம்பெற்றுள்ள பல்வேறு தெய்வ வழிபாடுகளையும் அவற்றுட் சிறப்பாகத் திகழும் சிவ வழிபாட்டினையும் சிவநெறி பற்றிய மெய்யுணர்வுக் கோட்பாடுகளாகிய சைவ சமயத்துத் தத்துவ வுண்மை களையும் ஒருங்கே தொகுத்து ஆராய்தல் இன்றியமையாத தாகும்.

ஓரறிவுடைய புல் முதலாக ஆறறிவு படைத்த மக்களீறாக இவ்வுலகிற் காணப்படும் மன்னுயிர்த் தொகுதிகளில் மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறியுணர்வுடன் ஆறாவதாகிய மனவுணவர்வும் ஒருங்குபெற்றுக் கல்வியறிவொழுக்கங்களால் வாழ்க்கையில் மேன்மேலும் உயர்ச்சி பெறுதற்குரிய விழைவு அறிவு செயல் என்னும் மூவகையாற்றலும் மக்கட்குலத்தார்க்கேயுரிய சிறப்பியல்புகளாக அமைந்துள்ளன. எனவே உணர் வொழுக்கங்களால் உயர்ச்சி பெறுதற்குரிய மனவுணர்வுடைய மக்கட்குலத்தாரை உயர்திணையெனவும் அவ்வுணர்வு வாய்க்கப் பெறாத விலங்கு முதலிய உயிர்த் தொகுதிகளையும் உயிரல் பொருளாகிய உலகப் பொருள்களையும் அஃறிணையெனவும் இருதிறமாகப் பகுத்துரைத்தனர் பண்டைத் தமிழ்ச்சான்றோர். பொருள் வகை பற்றிய

இவ்வுணர்வு இவற்றை யுணர்தற்குக் கருவியாகிய சொற்களிலும் இனிது புலப்படும்படி தாம் பேசும் மொழியிலமைந்த பெயர்ச் சொற்களையும் வினைச் சொற்களையும் உயர்திணைச் சொல், அஃறிணைச் சொல், இரு திணைக்கும் உரிய பொதுச்சொல் எனப் பகுத்துரைத் தனர். இவ்வாறு பொருள்களும் அவற்றை யுணர்தற்குக் கருவியாகிய சொற்களும் இயைந்து பொருள் இனிது புலனாகுமாறு தமது தாய்மொழியாகிய தமிழை உருவாக்கிய பெருமை தமிழ் முன்னோர்க்குரிய தனிச்சிறப்பாகும். இவ்வாறே தமிழ் எழுத்துக்களுள் தனித்தியங்கும் இயல்பின வற்றை உயிர் எனவும் அவ்வுயிரெழுத்துக்களுடன் இயைந் தன்றி இயங்காதன வற்றை மெய் எனவும் பெயரிட்டு வழங்கிய பண்டைத் தமிழிலக்கண நூலாரது தத்துவ வுணர்வு அறிஞர் களால் வியந்து பாராட்டுதற்குரியதாகும்.

மாக்கள் எனப்படும் விலங்கினின்றும் மக்களை வேறுபடுத்து உயர்த்துவது கல்வி. கல்விப் பயிற்சிக்கு நிலைக்களமாகத் திகழ்வது மக்களாற் பேசப்படும் மொழியாகும். இத்தகைய மொழிகள் உருப்பெறாத தொன்மைக் காலத்தே வாழ்ந்த மக்கள், உண்ணுதற்கேற்ற சுவையான உணவும் உடுத்தற்கேற்ற உடையும் தங்குதற்குரிய உறையுளும் பெறாது காடுகளிலும் மலைகளிலும் புதர்களிலும் புலி முதலிய கொடிய விலங்கினங்களோடும் பாம்பு முதலிய நச்சுயிர்களோடும் உடனுறைய வேண்டிய இடர் நிலையினராய், இடி மின்னல் மழை புயல் கடல்கோள் நில நடுக்கம் எரிமலை காட்டுத்தீ முதலிய இயற்கை யிடையூறுகளாலும் மக்கள் கூட்டத்திற் பகைவர்களாலும் பெரிதும் அல்லலுற்று இடம்பெயர்ந்து அலைந்து திரிந்தனர். பின்னர்த் தமக்குரியதாக ஓரிடத்தினைத் தேர்ந்துகொண்டு அங்கு இயல்பாக வளர்ந்த தாவரங்களிலிருந்து கிடைத்த காய்கனி முதலியவற்றையும் விலங்குகளையும் பறவை களையும் வேட்டைத் தொழிலாற் கொன்று பெற்ற இறைச்சியையும் தின்று தமது பசியைத் தணித்துக் கொண்டனர். புயல், பெருவெள்ளம், கொள்ளை நோய் முதலிய இயற்கையிடையூறுகளில் அகப்பட்டுத் தம் உயிரையும் உடைமைகளையும் பாதுகாத்துக் கொள்ளும்

வழியறியாது திகைப்புற்று வருந்தினர். ஐம்பெரும் பூதங்களால் உளவாகும் இத்தகைய இடையூறுகளுக்கு மக்களினத்துக்கு மேற்பட்ட மறைவாக தெய்வங்களே காரணம் எனவும் தெய்வங்களின் சீற்றத்தாலேயே இத்தகைய துன்பங்கள் உலகிற் பலவிடங்களிலும் நேர்கின்றன எனவும் நம்பினர். இருளடர்ந்த காடுகளிலும் மலைகளிலும் பிறவிடங்களிலும் இருந்து மக்களை வருத்துவனவாகப் பேய், பூதம், சூரரமகளிர், நீரரமகளிர் முதலிய அணங்குகள் உள்ளனவாக நம்பியதனால் அவர்தம் முள்ளத்தே அச்சம் மிகுவதாயிற்று. இங்ஙனம் தொன்மை மக்களுள்ளத்திற் குடிகொண்ட அச்சவுணர்வே பேய்பூதம் பாம்பு முதலிய எல்லாவற்றையும் தெய்வமாகக்கொண்டு அவற்றால் விளையுந் தீங்கினின்றும் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளும் நோக்குடன் அவற்றுக்குக் கள்ளும் ஊனும் படைத்து வழிபடும் சிறு தெய்வ வழிபாடுகளைத் தோற்றுவிப்பதாயிற்று.

இவ்வாறு மிகப் பழங்காலத்தே நாகரிகம்பெறாத மக்கட் குலத்தாரிடையே அச்சவுணர்வு காரணமாக நிகழ்ந்த தெய்வ வழிபாடு சிறு தெய்வ வழிபாடு எனப்படும். தமக்குப் பகையாயினார் தரும் துன்பத்தினின்றும் தம்மினமக்களைப் பாதுகாத்தல் வேண்டிப் பகைவரொடு பொருது வெற்றி தந்து மாய்ந்த தம்மினத்துத் தலைவர்களை அச்சம் நீக்கி ஆற்றல் நல்கும் தம்குல தெய்வமாகக் கொண்டு வணங்கும் வழிபாடு வீரர் வழிபாடெனப்படும். தம்மை யீன்றெடுத்து அன்பினாற் பாலூட்டி வளர்த்த தாயையும் அறிவும் ஆண்மையும் நல்கிச் சான்றோனாக்கிய தந்தையையும் உலக வாழ்க்கையில் நேரும்இடையூறுகள் இன்னவெனவும் அவற்றைக்களைந்து இன்பம் நுகர்தற்குரிய நெறி முறைகள் இவையெனவும் அறிவுறுத்தி நல்லறிவு கொளுத்திய அறிவர்களையும் தன் நாட்டுக்குடி மக்களின் பசியும் பிணியும் பகையும் நீக்கி முறை செய்து காப்பாற்றும் வேந்தனையும் கண் கண்ட தெய்வமெனக் கருதிப் போற்றும் வழிபாடுகள் நாகரிகம் பெற்ற மக்கட் குலத்தாரிடையே அன்பு காரணமாக நிகழ்வனவாதலின் இவை அன்பு வழிபாடு எனக் கூறத்தக்கனவாகும்.

மக்களை வருத்தும் இயல்புடையனவாகக் கருதப்படும் பேய் பூதம் முதலிய சிறு தெய்வங்களை அணங்கு எனவும், தம்மை அன்பினால் வழிபடுவார்க்கு அருள் சுரந்து துன்பத்தை நீக்கி நலம் புரியும் இறைமைப் பண்புடைய பெருந்தெய்வத்தை இறை, தெய்வம் எனவும் வழங்குதல் மரபு. அறிவியல் நாகரிகம் முதிர்ந்துள்ள இக்காலத்தும் மக்களிற் பெரும்பாலோர் தமக்கும் தம் உறவினர்க்கும் இம்மையிலும் மறுமையிலும் நேரக்கூடிய துன்பங்களுக்கு அஞ்சியே தெய்வத்தை வழிபடக் காண்கின்றோம். இவ்வாறு அச்சங் காரணமாக நிகழும் வழிபாடுகள் அனைத்தும் மக்கள் தமக்கு நேரும் தீமைகளை விலக்குதலைக் குறிக்கோளாகக் கொண்டனவே என்பது உலகிற்பலரும் அறிந்த உண்மையாகும்.

> "அச்சமே கீழ்கள தாசாரம் எச்சம்
> அவாவுண்டேல் உண்டாஞ் சிறிது" (குறள். 1075)

எனவரும் தெய்வப் புலவர் வாய்மொழி இங்கு நினைக்கத் தக்கதாகும்

அச்சத்தினால் வழிபடுதற்குரிய சிறுதெய்வங்கள் அணங்கு எனவும் அச்சத்துடனும் அன்புடனும் வழிபடுதற்குரியவை தெய்வமெனவும் கொள்ளுதல் ஏற்புடையதாகும். இந்நுட்பம்,

> "அணங்கே விலங்கே கள்வர் தம் இறையெனப்
> பிணங்கல் சாலா அச்சம் நான்கே"

எனவும், 'தெய்வம் அஞ்சல் புரையறந்தெளிதல்' எனவும் வரும் தொல்காப்பிய நூற்பாக்களால் இனிது புலனாதல் காணலாம். உலகிற் பண்டைக்காலம் முதல் இன்றுவரை நிலவி வரும் தெய்வ வழிபாடுகள் யாவும் மக்களுள்ளத்தே தோன்றிய அச்சங்காரணமாகவும் அன்பு காரணமாகவும் நிகழ்வனவேயாகும்.

> "அஞ்சியாகிலும் அன்புப்பட்டாகிலும்
> நெஞ்சம் வாழிநினை நின்றியூரை நீ"

எனவரும் அருளிச் செயல் தெய்வ வழிபாட்டிற்குக்

காரணமாய் உடன் நிகழ்வன அச்சமும் அன்பும் என்னும் இருவகையுணர்வுகளே என்னும் உண்மையினைத் தெளிவு படுத்துதல் காணலாம்.

நாகரிகமின்றி நாடோடிகளாகத் திரிந்துஅல்லலுற்ற மக்கட் கூட்டத்தார் ஓரிடத்தே நிலையாகத் தங்கி வாழும் வாய்ப்பினைப் பெற்றபின் தமக்கு ஆதாரமாயமைந்த நிலத்தையும் வானையும் கூர்ந்து நோக்கினர். நிலத்தினைச் சூழ்ந்த விண்வெளியிலே தவழ்ந்து கதிரொளி பரப்பிக் காரிருள் கடிந்து மண்ணுலகில் வாழும் உயிர்களுக்கு ஒளி வழங்கும் ஞாயிறு திங்கள் என்னும் இருசுடர்களையும் குளிராலும் பசியாலும் வருந்தும் மக்கள் குளிர் நீங்கவும் உணவினைப் பதஞ்செய்து கொள்ளவும் உதவும் தீயினையும் தெய்வமாகக் கருதிப் போற்றுவாராயினர். இருளிற் பொருள் புலனாகாது, பல்வகைத் தொல்லைகட்கும் உட்பட்ட பல்லுயிர்களும் இருள் நீங்கிப் பொருளுணரவும் வெயில் வெம்மை நீங்கித் தண்ணொளி பெறவும் குளிர் நீங்கி உணவினைத் தேடிப் பதஞ் செய்து கொள்ளவும் கதிரவனையும் திங்களையும் தீயையும் தெய்வங்களாகக் கொண்டு போற்றும் வழிபாடுகள் உலகிற் பலவிடங்களிலும் பரவி வாழும் எல்லாவினத்து மக்களாலும் மேற்கொள்ளப் பெற்ற இயற்கைத் தெய்வ வழிபாடுகளாகும். உயிர்கள் யாவும் தமக்கு இன்றியமையாத உணவாகிய நல்ல நீரைப் பெற்று உயிர்வாழவும் பயிர்கள் வளர்ந்து நன்கு விளைவு பெறவும் கைம்மாறு கருதாது மழை பொழியும் முகிலையும், விண் முகில் பொழிந்த நன்னீர் பலவிடங்களிலும் நிலையாகப் பாய்ந்து நிலவளம் சுரக்கவுதவும் கங்கை காவிரி முதலிய பேராறுகளையும் உண்ணுதற்கினிய கனிகளையும் தண்ணிழலையும் தரும் தாவரங்களையும் பாற்பயனளிக்கும் ஆனினங்களையும் தெய்வத்தன்மையுடையனவாகக் கருதி வழிபடும் இயற்கைப் பொருள் வழிபாடுகள் மக்கட் குலத்தாரது நுகர்ச்சி வேட்கை காரணமாகவும் அவ்வேட்கை நிறைவேறப்பெற்ற நிலையில் தோன்றும் நன்றியுணர்வு காரணமாகவும் நிகழ்வனவாம்.

தமமினத்தார் அச்சமின்றி இனிது வாழ்தல் வேண்டும்

என்னும் உயர்ந்த குளிக்கோளுடன் பகைவரைப் பொருது வீழ்த்தி வெற்றிதந்து மாய்ந்த தறுகண் மறவர்களையும் தாம் மேற்கொண்ட மனைவாழ்க்கை மாண்புடையதாகக் கற்பென்னுந் திண்மையுடையராய்த் தம் கொழுநனையே தெய்வமெனக் கொண்டு உடனுயிர் துறந்த பத்தினிப் பெண்டிரையும் தெய்வமாக்கி வழிபடும் வழிபாடுகள் உலகில் அறமும் அன்பும் நிலை பெறத் தம் இன்னுயிர் துறந்த ஆடவரது வீரத்தையும் பெண்டிரது கற்பின் திண்மையையும் மதித்து மக்களைத் தெய்வநிலைக்கு உயர்த்தும் திறத்தினவாகும்.

மேற்குறித்த வழிபாடுகள் தாமும் தம் சுற்றத்தாரும் தீமையின் நீங்கி நலம் பெறுதல் வேண்டும் என்னும் தன்னலவுணர்வில் தோன்றியன. மக்கள் அறிவு முதிர்ந்து நாகரிக நிலையையடைந்த பின்னர் உருவாகியதே மன்னுயிரனைத்தும் வாழ உலக முதல்வனாகிய இறைவனை மனமொழி மெய்களாற் போற்றும் முழுமுதற் கடவுள் வழிபாடாகும். உலகுயிர்களில் நீக்கமறக் கலந்து இயக்கி யருளும் முழுமுதற் பொருளாகிய கடவுள் ஒன்றேயெனவும் அது விருப்பு வெறுப்பின்றி எல்லா உயிர்கட்கும் அருள் நல்கும் இயல்பினதெனவும் உணர்ந்து உயிர்க்குயிராய் மன்னுயிர்களின் நெஞ்சத் தாமரையில் எழுந்தருளிய மெய்ப்பொருளைப் புறத்தே பல்வேறு திருவுருவமைத்துத் திமை நிங்கவும் நன்மை பெருகவும் மலர் தூவி வழிபடுதல் உலக நலங்குறித்த வழிபாடாகும். அச்சங்காரணமாக நிகழும் சிறுதெய்வ வழிபாடுகளில் சிற்றுயிர்களைப் பலியிட்டு ஊனையும் கள்ளையும் உணவாகப் படைத்தல் என்பது மக்கள் நாகரிகம் பெறாத காலத்தில் நிகழ்த்திய வழிபாட்டு முறையாகும். மக்கள் அறிவு முதிர்ந்து நாகரிகம் பெற்ற நிலையில் உலகிற்கு முழுமுதற் கடவுள் ஒன்றே என்னுந் தெளிவுபெற்று, வாழ்த்த வாயும் நினைக்க் நெஞ்சும் தாழ்த்தச் சென்னியும் தந்தருளிய அம் முதற் கடவுளை மலர் தூவித் தொழும் தூய வழிபாட்டினை மேற்கொள்வாராயினர். பிறவுயிருந் தம்முயிர் போற் பேணிப் பாதுகாக்குந் தூய வழிபாட்டினை மேற்கொள்வாராயினர். பிறவுயிருந் தம்முயிர்போற் பேணிப் பாதுகாக்குந் தூய நன்னெஞ்சின

ராய்த் தாவரங்கள் தரும் காய்கனிகளையும் தினை முதலிய விளைபொருளையும் இறைவனுக்குத் திருவமுதாகப் படைத்து நெல்லும் மலருந்தூவி வழிபடும் இவ்வழிபாடு, ஆருயிர் முதல்வனாகிய இறைவனது இனிய அருளின் நீர்மையுணர்ந்து அம்முதல்வன்பால் இடையறாப் பேரன்பின் பயனாக நிகழ்வதாகும். இவ்வழிபாட்டில் ஈடுபட்டோர் யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடை இறைவனது பெருமையினையும் பாசப்பிணிப்பில் அகப்பட்ட தமது சிறுமையினையும் எண்ணியெண்ணி நெஞ்சம் நெக்குருகிக் கைகளைத் தலைமேற் குவித்துக் கண்ணீர் சொரியும் இயல்பினராவர்.

தொல்பழங்காலத்தில் அறியாமையிருளிற் சிக்குண்ட மக்கள் அச்சத்தால் மேற்கொண்ட பல்வேறு சிறுதெய்வ வழிபாடுகளும் அறிவு வளர்ச்சி பெற்று நனிநாகரிக முடையராய் வாழ்ந்தகாலத்து அன்பினால் மேற்கொண்ட பெருந்தெய்வ வழிபாடுகளும் சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. உலகெங்கும் அச்சத்தால் அரும்பி அன்பினால் மலர்ந்து அறிவினால் விரிந்து பரவிய தெய்வ வழிபாடுகளிற் பெரும்பாலான மக்கள் முதிர்ந்த நாகரிகமுடையராய்த் திகழும் இக்காலத்திலும் பலதிற மக்களால் மேற்கொள்ளப்பெறும் பரப்புடையனவாகக் காணப்படுகின்றன. அச்சத்தினைக் காரணமாகவுடைய சிறு தெய்வ வழிபாடுகளும் அன்பினைக் காரணமாகவுடைய பெருந்தெய்வ வழிபாடுகளும் ஊர்தோறும் ஒருங்கு நிகழக் காண்கின்றோம். இவ்வாறே கடைச் சங்க காலத்திலும் ஊனுங் கள்ளும் படைத்து வணங்கும் சிறு தெய்வ வழிபாடு களும் நெல்லும் மலருந்தூவி வணங்கும் பெருந்தெய்வ வழிபாடுகளும் ஆகிய இருவகை வழிபாடுகளும் தமிழக மக்களால் மேற்கொள்ளப் பெற்றுள்ளன. எனவே இவ்வழிபாடுகள் அனைத்தும் அவ்வக்காலத்தில் அவ்வவ் வூர்களில் வாழ்ந்த மக்கள் பெற்றுள்ள அறிவு நிலைகட்கும் வாழ்க்கை யனுபவங்கட்கும் ஏற்ப ஆங்காங்கே நிகழ்ந்தன எனக் கொள்வதல்லது, இவ்வழிபாடுகளுள் இன்னின்னவை இன்னின்ன காலத்தில் இன்னின்ன இடத்தில் வாழ்ந்த மக்களால் மேற்கொள்ளப் பெற்றன எனக் காலம் பற்றியும்

இடம் பற்றியும் இவ் வழிபாடுகளே வரையறுத்து வகைப்படுத்துரைத்தற்கு இயலவில்லை.

மக்கள் வாழும் நிலத்தியல்புக்கு ஏற்ப அவர்தம் மனத்தியல்பாகிய தெய்வங்கொள்கையும் வழிபாட்டு முறைகளும் தோன்றி நிலை பெறுவன என்பதும் தெய்வங் கொள்கையினை அவ்வந்நிலத்துக் கருப்பொருள்களும் முதற்கண் வைத்தெண்ணுதல் தமிழ்ப் பொருளிலக்கண மரபென்பதும் முன்னர் விளக்கப்பெற்றன. முல்லை நிலத் தெய்வம் மாயோன். மாயோன்மேயகாடுறையுலகம் என்றார் தொல்காப்பியர். முல்லை நிலத்துக் கோவலர், தம்மால் மேய்க்கப் பெறும் ஆனிரைகள் பாற் பயன் தருதல் வேண்டி அந்நிலத்துக் காயாம்பூவண்ணனாகிய திருமாலைப் பரவிக் குரவைக் கூத்தாடுதலும் தம் மகளிரைத் தக்கவனுக்கு மணஞ் செய்து கொடுத்தல் வேண்டிக் கொல்லுந் தன்மையனவாகிய எருதுகளை வளர்த்து அக்காளையினை வளைத்துப்பிடித்த தறுகணாளனுக்கே தம் மகளை மணஞ்செய்து தருதலும் ஆகிய ஒழுகலாறுகளையுடையராய் வாழ்ந்தனர் என்பது முல்லைக் கலிப்பாடல்களால் இனிது விளங்கும்.

மைவரையுலகமாகிய குறிஞ்சி நிலத்திற்குச் சேயோனாகிய முருகனே தெய்வம் என்பது முன்னர்க் கூறப்பட்டது. குறிஞ்சி நிலத்துக் குறவர்கள் தெய்வ மணமாகிய வெறியினையறியுஞ் சிறப்பினையுடைய வேலன் என்னும் முருக பூசாரியை யழைத்து வெறியாடச் செய்து முருகனை வழிபட்டுப் பசியும் பிணியும் பகையும் நீங்க மழைவளஞ் சுரந்தருள்க என வாழ்த்தி வரம்பல பெற்று மகிழ்ந்தனர் என்பது சங்க இலக்கியங்களிலுள்ள குறிஞ்சித் திணைப் பாடல்களாலும் பத்துப்பாட்டின் முதற்கண் அமைந்த திருமுருகாற்றுப்படையினாலும் பரிபாடலிற் செவ்வேளைப் போற்றிய பாடல்களாலும் நன்கு புலனாகும்.

வயலும் வயல் சார்ந்த இடமும் ஆகிய மருத நிலத்திற்குத் தெய்வம் மழைவளந்தரும் இந்திரனாகிய வேந்தன். மருதநிலத்து உழவர்கள் மலர்தலையுலகிற்கு உயிரெனச் சிறந்த மன்னனை வாழ்த்தி வானோர்

தலைவனாகிய இந்திரனைப் பன்னிறமலர்களைத் தூவி வழிபட்டு இந்திர விழா நிகழ்த்தினர். இச்செய்தி 'இந்திரவிழவிற்பூவின் அன்ன' (ஐங்குறு. 62) எனவரும் ஐங்குறுநூற்றுத் தொடராலும் சிலப்பதிகாரம் இந்திர விழவூரெடுத்த காதை, மணிமேகலை விழாவறை காதை முதலிய பிற இலக்கியங்களாலும் நன்கு தெளியப்படும்.

பெருமணலுலகமெனப்படும் நெய்தல் நிலத் தெய்வம் வருணன். அந்நிலத்துப் பரதவர்கள் கடலில் மீன் பிடித்தலைத் தொழிலாகக் கொண்டவர்கள். தமக்கு வலைவளஞ்சுரத்தல் வேண்டித்தமது மனையின்கண் சுறாமீனின் கொம்பினை நட்டுக் கடற்றெய்வமாகிய வருணனை வழிபட்டனர். இச்செய்தி,

> "**சினைச்சுறவின் கோடுநட்டு**
> **மனைச் சேர்த்திய வல்லணங்கின்**"

எனவரும் பட்டினப்பாலையடிகளாலும் நெய்தற்றிணைபற்றிய சங்கப் பாடல்களாலும் நன்கு புலனாம்.

நானிலத் தெய்வங்களாக இங்குக் குறிக்கப்பெற்ற தெய்வ வழிபாடுகளேயன்றிப் போரின் சிறந்த வெற்றியினை விளைக்கும் தாய்க் கடவுளாகிய கொற்றவை வழிபாடும் தறுகண் மறவர்களால் மேற்கொள்ளப்பெற்றது. 'சிறந்த கொற்றவை' எனத் தொல்காப்பியனாராற் குறிப்பிடப்பெற்ற இத்தாய்த்தெய்வம் (1114) 'கானமர் செல்வி' (1268). 'விறல்கெழுசூலி' எனவும் (1636) 'அருந்திறன் மரபிற் கடவுள்' (பதிற்று.) எனவும் சங்கவிலக்கியங்களிற் போற்றப் பெறுகின்றது. அயிரைமலையிற் கோயில் கொண்ட இத் தெய்வத்தினை 'உருகெழு மரபின் அயிரை' எனவும், இத் தெய்வம் எழுந்தருளிய காட்டினைக் 'கடவுட் பெயரிய கானம்' எனவும் பெருங்குன்றூர்கிழார் குறித்துள்ளார். ஆசிரியர் தொல்காப்பியனார் கொற்றவை என்னும் தெய்வத்திற்கு நிலம் வகுத்திலர். காடும் மலையும் கூடிய நிலப்பகுதியிலே கொற்றவைவழிபாடு நிகழ்ந்தமை கடைச் சங்கச் செய்யுட்களில் குறிக்கப்பெற்றுளது. எனவே முல்லையும் குறிஞ்சியும் வேனில் வெப்பத்தால் வளம் குன்றிய

வழியாகிய சுரத்திலே வாழும் மறவர்கள் தம் குல தெய்வமாகக் கொற்றவையை வழிபட்டமையால் நடுவு நிலைத் திணையாகிய பாலைக்குத் தெய்வம் கொற்றவை என்னும் பொருளிலக்கணமரபு கடைச் சங்க காலத்தில் உருவாகியதெனக் கருத வேண்டியுள்ளது.

காடுறையுலகம், மைவரையுலகம், தீம்புனலுலகம், பெருமணலுலகம் என்னும் நானிலங்களுக்கும் அன்பின் ஐந்திணைகளுள் இருத்தல் புணர்தல் ஊடல் இரங்கல் என்னும் நால்வகை யொழுக்கங்களையும் முறையே உரிமை செய்துணர்த்திய தொல்காப்பியனார், நிலமில்லாத பாலைத்திணைக்கு

"நடுவுநிலைத்திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே" (அகத். 11)

எனவரும் நூற்பாவில் இடமும் காலமும் வகுத்துக் கூறியுள்ளார். "முல்லை குறிஞ்சி பாலை மருதம் நெய்தல் என எண்ணப்பெறும் ஐந்திணைகளுள் நடுவண் நிற்பதாகிய பாலைத் திணையாகிய பிரிவொழுக்கம் நண்பகலாகிய சிறுபொழுது வேனில் என்னும் பெரும்பொழுதுடன் கூடிய நிலையிற் (காதலர்) கருதிச் செல்லும் வழியினை இடமாக வுடையது" என்பது இந்நூற்பாவின் பொருளாகும். இந்நூற்பாவின் பொருளைக் கூர்ந்து நோக்குங்கால் தமிழகத்திற் பாலையென்பதோர் தனிநிலம் எக்காலத்தும் இருந்ததில்லையென்பதும் வேனிற் காலத்திலே கதிரவனது வெம்மையால் வளங்குன்றிய வெவ்விய நெறியாகிய சுரமே பாலைத்திணைக்குரிய இடமென்பதும் தொல்காப்பியனார் கருத்தென்பது பெறப்படும்.

"வானமூர்ந்த வயங்கொளிமண்டிலம்
நெருப்பெனச் சிவந்த உருப்பவிரங்காட்
டிலையில மலர்ந்த முகையிலிலவம்" (அகநா. 11)

எனவரும் அகப்பாடல் காடுறையுலகமாகிய முல்லை நிலம் வேனிற்காலத்துக் கதிரவன் கடுவெயிலால் தன்னியல்வு திரிந்து பாலையாயின செய்தியைப் புலப்படுத்துகின்றது.

"முக்கண்ணான் மூவெயிலும்
உடன்றக்கால் முகம்போல ஒண்கதிர் தெறுதலிற்
சீறருங்கணிச்சியோன் சினவலின் அவ்வெயில்
ஏறுபெற்றுதிர்வனபோல் வரைபிளந்து இயங்குநர்
ஆறுகெடவிலங்கிய அழலவிர்ஆரிடை" (பாலைக்கலி 1)

என்பது மைவரையுலகமாகிய குறிஞ்சி நிலம் வேனிற் பொழுதிற் கதிரவன் வெம்மையால் தன்னியல்புதிரிந்து பாலையாயின செய்தியைப் புலப்படுத்துகின்றது. இவ்வாறு முல்லையுங் குறிஞ்சியும் வேனில் வெம்மையால் தம்மியல்பு திரிந்து பாலையாயினவாறுணர்ந்த இளங்கோவடிகள்,

"வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்
தானலந் திருகத் தன்மையிற் குன்றி
முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்கு துய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளுங்
காலை" (சிலப். காடுகாண். 62-7)

என வேனிற் பருவத்தே நண்பகற் பொழுதிற் கதிரவன் வெம்மையால் திரிந்து வளங்குன்றி நடத்தற்கு இயலாத அரிய வழியாகிய சுரத்தினைப் பாலையென்ற பெயராற் குறித்துள்ளார்.

"குறிஞ்சியும் முல்லையும் அடுத்த நிலமே காலம் பற்றிப் பாலையாகும் ...... தொல்காப்பியனார் பாலைக்கு நிலம் வேண்டிற்றிலர். வேண்டாமையின் தெய்வமும் வேண்டிற்றிலர். பிறர் பகவதியையும் ஆதித்தனையும் தெய்வம் என்று வேண்டுவர்" என்பர் இறையனார் களவியலுரையாசிரியர். அவ்வாசிரியர் குறித்த வண்ணம் பகவதியாகிய கொற்றவையைப் பாலைநிலத் தெய்வமாக இளங்கோவடிகள் சிலப்பதிகார வேட்டுவ வரியிற் போற்றியுள்ளமையும், முல்லைநிலத் தெய்வமாகிய மாயோனுக்குத் தங்கையும் குறிஞ்சிநிலத் தெய்வமாகிய சேயோனுக்குத் தாயும் ஆகிய உறவின்முறைத் தொடர் புடைய கொற்றவை முல்லையுங் குறிஞ்சியும் திரிந்து

பாலையாகிய சுரத்திற்குத் தெய்வமாதல் பெரிதும் பொருத்தமுடைமையும் எண்ணிய சேக்கிழாரடிகள் பாலைநிலத் தெய்வம் கொற்றவை என்னும் இளங்கோ வடிகள் கருத்தினை அடியொற்றி,

> "கோலமுல்லையுங் குறிஞ்சியுந் திரிந்த சில்லிடங்கள்
> நீலவாட்படை நீலி கோட்டங்களும் நிரந்து
> காலவேனிலிற் கடும் பகற் பொழுதினைப் பற்றிப்
> பாலையுஞ் சொலலாவனவுள பரன்முரம்பு"

எனவரும் பாடலிற் குறிப்பிட்டு விளக்கியுள்ளார். "கதிரவன் வெம்மையினாற் கடும் பகற்பொழுதில் அழகிய முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் திரிந்து வளங்குறைந்த சில இடங்கள் நீலமேனியளாகிய கொற்றவை வீற்றிருக்கும் கோயில்களைத் தன்னகத்தே கொண்டு பாலையென்று பெயர் சொல்லுதற்குரியனவும் தொண்டைநாட்டில் உள்ளன" என்பது மேற்குறித்த பெரியபுராணச் செய்யுலில் இடம் பெற்ற செய்தியாகும்.

உலகிற் காலந்தோறும் ஏற்படும் கடல்கோள், புயல், வெள்ளம், நிலநடுக்கம் முதலிய இயற்கை மாற்றங்களாகிய இடையூறுகளையும் மக்களுக்குத் தீங்குபயக்கும் கொடிய உயிரினங்களால் நேரும் இடர்களையும் எதிர்ந்து முன்னேறும் இன்றியமையாமையுடைய மக்கட் குலத்தார் தமது வாழ்க்கை நுகர்ச்சிகளின் பயனாகத் தமக்கு நாள்தோறும் அச்சந் தவிர்த்து தம்முள்ளத்தேயிருந்து ஆண்மையும் அறிவாற்றலும் வழங்கித் தோன்றாத் துணையாய் உடனிருந்து அருள்புரியும் பேரருளும் முற்றுணர்வும் பேராற்றலும் வாய்ந்த முழுமுதற் கடவுளாகிய தெய்வம் ஒன்று உண்டு என்னும் உணர்வினைப் பெறுவாராயினர். யாக்கை, இளமை, செல்வம் முதலிய வற்றால் நிலை பேறில்லாத இவ்வுலக வாழ்க்கையிற் பல்லாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து வாழ்ந்துவரும் பயிற்சியினைப் பெற்ற மக்கள் அறியாமையிருளிலகப்பட்டு அணங்குபேய் முதலியவற்றால் அஞ்சிவருந்திய அச்சத்தினை யகற்றித் தம் உள்ளுணர்வின் தூண்டுதலால் ஆண்மையும் அறிவும் பெற்றுத் திகழ்ந்த காலம் தமக்கு உயிர்க்குயிராய்த்

தோன்றாத்துணையாய் உடனிருந்தருளும் தெய்வமென்பது ஒன்று உண்டு எனத் தெளிவுடைய சிந்தையினைப் பெற்ற காலமேயாகும். மக்கள்தெய்வமுண்டு என்னும் இத்தகைய தெளிவு பெறாது இருந்த காலமும் உண்டு என்பதனை,

"தேசம் உமை யறிவதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே"

எனவரும் திருநாவுக்கரசர் வாய்மொழியால் நன்குணரலாம்.

இயற்றமிழ் நூலாகிய தொல்காப்பியத்தை இலக்கணமாகக் கொண்டு பாடப்பெற்றனவே சங்க விலக்கியங்கள். எனவே இவற்றின் முன்னூலகிய தொல்காப்பியங் கூறும் தெய்வ வழிபாடுகளும் சமயத்தத்துவ வுண்மைகளும் சங்க இலக்கியங்களிலும் இடம்பெற்றிருத்தல் இயல்பேயாகும்.

இனி, அகமும் புறமுமாகிய உலகியலொழுக லாறுகளை விரித்துரைப்பனவே சங்கச் செய்யுட்கள் எனவும், இவ்விலக்கியங்களிற் கடவுட் கொள்கைக்குச் சிறப்பிட மில்லை எனவும் பத்துப்பாட்டுள் முதற் பாட்டாகிய திருமுருகாற்றுப்படையும் எட்டுத்தொகை நூல்களின் முன்னர் அமைந்த கடவுள் வாழ்த்துப் பாடல்களும் கடைச் சங்க காலத்தன அன்றிப் பிற்காலத்திற் பாடிச் சேர்க்கப் பெற்றன எனவும் கருதுவாரும் உளர். திருமுருகாற்றுப் படையில் விரித்துக் கூறப்படும் செவ்வேள் வழிபாடும் எட்டுத்தொகைக் கடவுள் வாழ்த்துப்பாடல்களில் இடம் பெற்றுள்ள சிவபெருமான் திருமால் ஆகிய இருபெருந் தெய்வங்களின் வழிபாடுகளும் சங்கத் தொகைகளின் புறத்தேயுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்களில் மட்டுமன்றி அத்தொகைகளின் அகத்தேயுள்ள செய்யுட்கள் பலவற்றிலும் சிறப்பிடம் பெற்றுள்ளன. சங்கச் செய்யுட்களில் நக்கீரனாரும் சங்கப்புலவர் பிறரும் பாடியனவாக அமைந்த பாடல்களில் உள்ள தொடர்களும் கருத்துக்களும் திருமுருகாற்றுப்படையிலுள்ள தொடர்களும் கருத்துக் களும் தம்முள் ஒத்துக் காணப்படுகின்றன. பத்துப்பாட்டுள் முதற் பாட்டாக வைத்து எண்ணப்படும் திருமுருகாற்றுட்

படையைச் சங்க காலத்தது அன்று என நீக்கிவிடுவோமாயின் 'பத்துப்பாட்டு' என வழங்கும் தொகைப்பெயர் வழக்கிற்கு இடமில்லாது போய்விடும். மாறாக ஒன்பான் பாட்டு என வழங்கவேண்டிய நிலையேற்படும். எனவே திருமுருகாற்றுப் படை கடைச் சங்கப் புலவர் நக்கீரனாராற் பாடப்பெற்ற சங்கப் பாடலே என்பது தேற்றம்.

இனி, எட்டுத்தொகையுள் ஒன்றாகிய கலித்தொகை யுள் நெய்தற்கலியை இயற்றியுள்ள நல்லந்துவனாரே கலித்தொகைக் கடவுள் வாழ்த்தினையும் பாடியுள்ளார். இனி புறனானூற்றின் முதற்கண் அமைந்த 'கண்ணிகார் நறுங் கொன்றை' என்னுங் கடவுள் வாழ்த்துப் பாடலையும் சேர்த்து எண்ணினால்தான் அத்தொகை நூல் இறையனார் களவியலுரையாசிரியர் கூறுமாறு 'புறநானூறு' என்னும் பெயருக்குப் பொருத்தமுடையதாகும். எட்டுத்தொகை நூல்களில் பதிற்றுப்பத்து கலித்தொகை தவிர ஏனைய ஆறு தொகைகட்கும் கடவுள் வாழ்த்துப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனாராவர். கடைச் சங்கப் புலவராகிய இப் பெருந்தேவனார் வடமொழியிலுள்ள பாரதக் கதையினை அகவல் நடையிற் பாடினமைபற்றிப் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்று அழைக்கப் பெற்றார் எனத் தெரிகிறது.

வடமொழி இதிகாசங்களாகிய இராமாயணம் மகாபாரதம் என்னும் நூல்களிற் கூறப்படும் செய்திகள் சங்க காலத்தில் தமிழ் நாட்டிற் பரவி வழங்கின என்பது சங்கச் செய்யுட்களில் அவை எடுத்தாளப் பெற்றுள்ளமையால் இனிது விளங்கும். இரண்டாஞ் சங்கமிருந்த கபாடபுரம் கடல் கோளால் அழிவுற்றபின் பாண்டியர்கள் மதுரையில் மீண்டும் சங்கத்தினை நிறுவித் தமிழ் வளர்த்தனர். வடமொழியிலுள்ள மகாபாரதத்தைத் தமிழில் மொழி பெயர்க்கச் செய்தனர். இச்செய்திகள் "மாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச்சங்கம் வைத்தும்" எனச் சின்னமனூர்ச் செப்பேட்டிற் குறிக்கப் பெற்றிருத்தல் காணலாம். இங்ஙனம் சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்த பாண்டியரது ஆட்சியில் மகாபாரதக் கதையை ஆசிரியப்பா

நடையில் மொழி பெயர்த்தவர் பெருந்தேவனார் என்னும் சங்கப் புலவராவர். எனவே பாரதம் பாடிய பெருந்தேவனார் எனக் கருதுதல் பொருத்தமுடையதாகும். தொல்காப்பியப் பொருளதிகாரப் புறத்திணையியலுரையில் நச்சினார்க்கினியர் மேற்கோளாகக் காட்டியுள்ள பாரத நிகழ்ச்சி பற்றிய ஆசிரியப் பாக்கள்சங்கப் புலவர் பெருந்தேவனார் பாடிய பாரதத்தைச் சார்ந்தன எனக் கொள்ளுதல் பொருந்தும்.

இனி, கி.பி. எட்டாம் நூற்றாண்டினையொட்டி வாழ்ந்த பெருந்தேவனார் என்ற புலவர் வெண்பாவும் உரை நடையும் விரவிய நிலையில் பாரதக் கதையினைத் தமிழில் மொழிபெயர்த்தமைத்துள்ளார். பெயரொப்புமையாலும் பாரதத்தை மொழி பெயர்த்துப் பாடினமையாலும் இவரையும் பாரதம் பாடிய பெருந்தேவனார் என வழங்குதலுண்டு. பெயரொற்றுமை யொன்றே பற்றி இவ்விருவரையும் ஒருவரேயெனக் கொள்வாருமுளர். கடைச் சங்கப் புலவர் பெருந்தேவனார் பாடிய பாரதம் அகவல் நடையால் இயன்றது. பிற்காலத்தவராகிய பெருந்தேவனார் பாடிய பாரதம் வெண்பாவும் உரை நடையும் விரவியமைந்தது. எனவே காலத்தாலும் யாப்பாலும் வேறுபட்ட இருநூற்களின் ஆசிரியர்களையும் ஒருவரெனத் துணிந்து கூறுதற்கு இடமில்லையென்பது இங்கு உளங்கொளத்தகுவதாகும்.

சோழன் செங்கணான் திருப்போர்ப்புறத்துச் சேரமான் கணைக்காலிரும்பொறையொடு பொருது குடவாயிற் கோட்டத்துச் சிறைப்படுத்தியவன் என்பது, சேரமான் கணைக்காலிரும்பொறை பாடிய 'குழவி யிறப்பினும்' என்னும் முதற் குறிப்புடைய புறப்பாடலின் அடிக்குறிப்பினாற் புலனாம். கணைக்காலிரும் பொறையைச் சிறையினின்றும் விடுவித்தற் பொருட்டுப் பொய்கையார் என்னும் புலவர் சோழன் செங்கணானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு அவனது போர்க் களத்தைச் சிறப்பித்துக் 'களவழி நாற்பது' என்ற பனுவலைப் பாடினார் என்ற செய்தி கலிங்கத்துப்பரணியில் இடம் பெற்றுளது. சோழன் செங்கணானுக்கு நல்லடி என்ற பெயருடைய

மைந்தன் இருந்தான் என்ற செய்தி திருவாலங்காட்டுச் செப்பேட்டில் குறிக்கப்பெற்றுளது. நல்லடி என்னும் பெயருடைய வேந்தன்,

> "கடும் பகட்டியானைச் சோழர் மருகன்
> நெடுங்கதில் நெல்லின் வல்லங்கிழவோன்
> நல்லடியுள்ளானாகவும்" (அகநானூறு 367)

எனப் பரணாற் பாராட்டப் பெற்றுள்ளான். இங்ஙனம் அகநானூற்றிற் பாராட்டப்பெறும் சோழன் நல்லடி என்பானுக்குத் தந்தையாகச் சோழன் செங்கணான் திருவாலங்காட்டுச் செப்பேட்டிற் குறிக்கப்பெற்றுள்ளான். இவ்வேந்தன் சோழநாட்டின் உட்பகுதிகளாகிய அக நாடுகள் தோறும் சிவபெருமானுக்கு மாடக்கோயில்களைக் கட்டியுள்ளான் எனத் தேவார ஆசிரியர்களும் சிவபெருமானுக்கு எழுபது மாடக் கோயில்களைக் கட்டிய இவ் வேந்தனே திருமாலுக்குத் திருநறையூரில் மணிமாட மாகிய திருக்கோயிலையும் கட்டினான் எனத் திருமங்கை யாழ்வாரும் குறித்துப் போற்றியுள்ளார்கள். இக்குறிப்புக் களால் கடைச் சங்க காலத்திலேயே சிவபெருமான் திருமால் முதலிய தெய்வங்களுக்குப் பெருங்கோயில் கட்டும் திருப்பணிகள் தொடர்ந்து நிகழ்ந்தன என்பது உய்த்துணரப்படும்.

> "பணியியரத்தை நின்குடையே, முனிவர்
> முக்கட் செல்வர் நகர் வலஞ்செயற்கே" (புறம். 6)

எனப் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரி கிழார் பாடிய பாடல் கடைச்சங்க காலத்திற் பாண்டி நாட்டிற் சிவபெருமானுக்குத் திருக் கோயில் அமைந்திருந்த செய்தியை நன்கு வலியுறுத்தல் காணலாம்.

தமிழ் மக்களது மெய்யுணர்வுக் கொள்கையினை உள்ளவாறு உணர்தற்கு அவர்களால் வழிபடப் பெற்ற தெய்வ அமைப்புக்களையும் வழிபாட்டு முறைகளையும் உலக வாழ்க்கையில் தமிழ் முன்னோர் கொண்டிருந்த பல்வேறு

நம்பிக்கைகளையும் அறிந்து கொள்ளுதல் இன்றியமையாத தாகும்.

மக்களது வாழ்க்கையில் அவ்வப்போது ஏற்படும் இயற்கை மாற்றங்கள் காரணமாகவும் உலக நிகழ்ச்சிகளிற் கட்புலனாகாதவண்ணம் செயற்படும் அரிய சில ஆற்றல்கள் காரணமாகவும் பல்வேறு இடையூறுகளும் இன்னல்களும் உளவாதல் இயல்பு. அந்நிலையில் ஏற்படும் பல்வேறு துன்பங்களினின்றும் தப்பியுய்தற்குரிய பாதுகாப்பினைத் தேடிக் கொள்ளுதல் மனவுணர்வு படைத்த மக்களது கடமையாயிற்று. மழை தவழும் மலைப்பக்கங்களிலும் மரங்கள் செறிந்த காடுகளிலும் மக்கள் தனித்தனிக் கூட்டத்தினராகி வாழும் நிலையினராகிய பண்டைக் காலத்தில் தம்முடைய உடைமைகளையும் உயிரையும் பேணிக் கொள்ளும் பொருட்டு ஆற்றல் மிக்க ஊர்க் காவலரும் நாடாளும் தலைவர்களும் மக்கட்குழுவினரால் தேர்ந்துகொள்ளப் பெற்றனர். வெயில், மழை, பனியென்னும் பருவநிலைகளையுணர்ந்து மக்கள் தங்களுக்கு இன்றியமை யாத உணவு, உடை, உறையுள் முதலிய வாழ்க்கை வசதிகளை அமைத்துக்கொள்ளும் அறிவு திரு ஆற்றல்களால் காலந்தோறும் வளர்ச்சிபெற்று வருவாராயினர். எனினும் உலக வாழ்க்கையில் எதிர்பாராத நிலையில் ஏற்படும் புயல், கடல்கோள், பெருவெள்ளம், நில நடுக்கம் முதலிய பேரிடையூறுகளாலும், வெப்பு (சுரம்) குரு (அம்மை) முதலாக அவ்வப்பொழுது தொடரும் நோய்களாலும் பெரிதுந் துன்புறுவாராயினர்.

இவ்வாறு உலக வாழ்க்கையில் நேரும் பலவேறு இடையூறுகளால் நலிவுற்று அஞ்சிய பண்டைக்கால மக்கள், அவ்விடையூறுகளை யெதிர்த்து முன்னேறும் முயற்சியில் தோல்வி கண்டவர்களாய்த் தம்முடைய முயற்சிக்கும் ஆற்றலுக்குந் தடை விளைப்பனவாகத் தம்மை அச்சுறுத்தும் அணங்குபேய் பூதம் முதலாகப் பல்வேறு தெய்வங்கள் இவ்வுலகில் இருக்கின்றன எனவும் அவற்றின் சீற்றத்தினா லேயே உலகில் தமக்குப் பல்வேறு இன்னல்கள் அடிக்கடி ஏற்படுகின்றன எனவும் உறுதியாக நம்பினார்கள். அச்சுறுத்துவனவாகிய அத்தெய்வங்களை எண்ணுந்தோறும் உள்ளந் துணுக்குற்று உடல் நடுக்கமுற்றனர். இவ்விடத்தில்

வருத்துந் தெய்வமாகிய அணங்கு உள்ளது என்று ஐயுற்று அஞ்சி நடுங்கியவர்கள் சொல்ல, அதனைக் கேட்டவர்களுக்கும் அவ்வச்சவுணர்வே அணங்கெனத் தோன்றி அவர்களையும் நடுக்கமுறச் செய்யும் என்பது மனவியல் புணர்ந்தோர் கண்ட உண்மையாகும். இவ்வுண்மையினை

> "நெஞ்சுநடுக்குறக் கேட்டுங் கடுத்துந் தான்
> அஞ்சியது ஆங்கே அணங்காகும் என்னுஞ்சொல்
> இன்றீங் கிளவியாய் வாய்மன்ற" (கலித். 24)

எனவரும் பாலைக்கலித் தொடரிற் பெருங்கடுங்கோ என்னும் புலவர் பெருமான் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளமை காணலாம். "நெஞ்சம் நடுக்கம் உறும்படி பலகாலும் கேட்டும், கேட்ட அதனை உண்டோ இல்லையோ என்று ஐயுற்றும் தாம் அஞ்சியிருந்த பொருள் மெய்யாய் வருத்துந் தன்மையதாகும் என்ற பழமொழி இனிய மொழியினை யுடைய தோழியே நிச்சயமாக உண்மை" என்பது இத்தொடரின் பொருளாகும். 'நெஞ்சுநடுக்குறக் கேட்டது' என்றது 'இவ்வாலமரத்திலே பேய் உள்ளது' என்று பிறர் சொல்லக் கேட்டது. அச்சொல்லைக் கேட்டவர்கள் இவ்வாலமரத்திற் பேய் இருக்குமோ? என்று முதலில் ஐயுற்று அஞ்சியவர்கள் எதிர்பாராத நிலையில் இருளில் அவ்வாலமரத்தின் அருகே தனித்துச் சென்றபோது அவர்கள் உள்ளத்திற் கொண்ட அச்சவுணர்வே பேய் வடிவிற்றோன்றி அவர்களை வருத்துதல் உறுதி' என்பதனைப் புலப்படுத்துவது 'நெஞ்சு நடுக்குறக் கேட்டுங் கடுத்துந்தான் அஞ்சிய ஆங்கே அணங்காகும்' என்னும் இப் பழமொழியாகும் சங்ககாலத்தில் வழங்கிய இப்பழமொழியினை அடியொற்றியதே 'அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என இக்காலத்து வழங்கும் பழமொழியாகும். இத்தொடரைக் கூர்ந்து நோக்குங்கால் மக்களை அச்சுறுத்துந் தன்மையதாகிய அணங்கு உண்டு என்பதும் அத்தகைய அணங்கு அவ்விடத்தில் இல்லாதிருந்தாலும் உண்டு என மற்றவர் சொல்லக் கேட்டு அஞ்சிய அச்சவுணர்வே அணங்குருவில் தோன்றி அஞ்சியவர்களை வருத்துதலும் உண்டு என்பதும் அச்சத்தினையகற்றிய

உள்ளத்துரனுடையவர்களை அணங்கு வருத்தமாட்டாது என்பதும் சங்ககாலத்து மக்கள் உளங்கொண்ட வாழ்விய லுண்மையாதல் நன்கு புலனாம்.

மக்களை வருத்தும் இயல்புடையனவாகிய அணங்கு பேய் பூதம் முதலியவற்றுக்கு அவை வேண்டிய உணவாகிய பலிப்பொருள்களைக் கொடுத்து வழிபட்டால் அவற்றால் உண்டாகும் இடையூறுகளிலிருந்து தாம் தப்பி உய்தி பெறலாம் என்ற நம்பிக்கை பண்டைக்கால மக்கள் உள்ளத்தே நிலைபெறுவதாயிற்று. எனவே அவர்கள் அணங்குபேய் முதலியவற்றுக்கு ஆடு கோழி முதலிய சிற்றுயிர்களைப் பலியிட்டு அவற்றால் வரும் இன்னல்களி னின்றும் தாம் நீங்கியதாக எண்ணி அவற்றைத் தெய்வமெனக் கொண்டு வழிபடுவாராயினர். இவ்வாறு பண்டைக்கால மக்கள் பேய் பூதம் முதலாக அச்சுறுத்தும் தெய்வங்கள் உள்ளன எனக் கொண்ட நம்பிக்கையின் விளைவாகவும் தம் உள்ளத்தில் இயல்பாகத் தோன்றிய அச்சத்தின் காரணமாகவும் உலகிற் பலவிடங்களிலும் சிறு தெய்வ வழிபாடுகள் பன்னெடுங்காலமாகத் தோன்றி நடைபெற்று வருகின்றன. இந்நிலவுலக முதலாகவுள்ள பலவேறு அண்டப் பரப்பினையும் உலகியற் பொருள்களையும் நுனித்துணர்ந்து தமது வாழ்க்கையினை இடர்நேராது இனிய முறையில் அமைத்துக்கொண்டு எல்லா வசதிகளும் உடையராய் நெடுநாள் வாழ்தற்கேற்ற நுண்ணறிவும் எண்ணிய எண்ணியாங்கு இயற்றவல்ல ஆற்றலும் தொழில் நுட்பமும் ஒருங்கே கைவரப்பெற்று மக்கட் சமுதாயம் காலந்தோறும் வளர்ச்சிபெற்று வருவதனை அறிஞருலகம் நன்குணரும். இங்ஙனம் மக்கட்குலத்தார் முதிர்ந்த நாகரிக நிலையினராய் வாழும் இக்காலத்திலும் இவ்வுலகவாழ்க்கையில் எதிர்பாராதவகையில் நேரவிருக்கும் துன்பங்களை யெண்ணித் தாம் தாம் விரும்பிய தெய்வங்களைக் குறித்துத் தாம் உய்தி பெறுதல் வேண்டி அச்சத்தால் வழிபாடு செய்வதே பலவேறு மதங்களின் ஒழுகலாறுகளாகப் பெரும்பான்மையும் நிகழ்ந்து வருவதனைக் காண்கின்றோம். நுண்ணறிவின் பயனாக அச்சம் தீர்ந்த மக்களும் தாம் மட்டும் சிறப்பாக வாழ்ந்தாற்போதும் என்னுந் தன்னலவுணர்வினராய்

ஏனையோரைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாது தன்னலம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு தாம் விரும்பிய தெய்வத்தை வழிபட்டு வருவதனையும் உலகியலிற் காண்கின்றோம். தமக்கு மாறாயினார் அழிந்தொழிதல் வேண்டும் எனத் தெய்வத்தினைக் குறித்து மந்திரச் சடங்குகளைச் செய்யும் தீய எண்ணமுடையவர்களும் சிலருளர். இவ்வாறு தம்மைப் போன்று தம்மால் வழிபடப் பெறுந் தெய்வங்களும் விருப்பு வெறுப்புடையனவாய்ச் சிறுமையுடையனவாக வைத்து வழிபடப் பெறும் தெய்வங்கள் யாவும் சிறு தெய்வங்களாகவே கருதப்படுவன வாயின.

நிலத்தின் வளத்தால் இயல்பாகத் தோன்றி வளர்ந்த தாவரங்களின் காய்கனி முதலியவற்றையும் விலங்கு பறவை முதலியவற்றை வேட்டைத் தொழிலாற் கொன்று பெற்ற இறைச்சியையும் உணவாகக் கொண்டு நாகரிகமின்றி வாழ்ந்த பண்டைக்கால மாந்தர்கள், மழை இடி மின்னல் சூறைக் காற்று கடல்கோள் காட்டுத்தீ நிலநடுக்கம் முதலிய ஐம்பூத நிகழ்ச்சிகளுக்கும், புலி சிங்கம் முதலிய கொடிய விலங்குகட்கும் பாம்பு தேள் முதலிய நச்சுயிர்கட்கும் இறந்தோர் ஆவிகட்கும் அச்சுறுத்துமியல்பினவாகத் தாம் நம்பிய பேய் பூதம் முதலியவற்றிற்கும் அஞ்சிய நிலையில் அவ்வச்சத்தின் விளைவாகஅவற்றைத் தெய்வமெனக் கொண்டு நிகழ்த்திய வழிபாடுகள் சிறு தெய்வ வணக்க மெனப்படும். கொல்லுந் தன்மையவாகிய எல்லாவற்றையும் தெய்வமெனக் கொண்டு அவை தம்மை வருத்திக் கொல்லாத வாறு அவற்றுக்கு ஆடு கோழி முதலிய சிற்றுயிர்களைப் பலியிட்டு ஊனும் கள்ளும் படைத்து வழிபடும் முறையில் நிகழ்த்தப்பெறும் இவ்வழிபாடுகள் சிறு தெய்வ வழிபாடுக ளெனப்படும்.

எங்கும் நிறைந்துள்ள மெய்ப்பொருளாகிய கடவுள், உலகுயிர்கள்தோறும் நீக்கமற நிறைந்துள்ள நிறைவு நிலையினையும் எல்லாப்பொருள்களையுந் தன்னகத்து அடக்கிக் கொண்டு எல்லாப் பொருட்கும் பரவியுள்ள விரிவு நிலையினையும் எண்ணி எவ்வுயிரும் நீங்காதுறையும்

முழுமுதற்பொருள் ஒன்றேயென்னுந் தெளிவுடையராய் அதனை அன்பினால் வழிபடுதல் மெய்யுணர்வுடையார் மேற்கொள்ளும் பெருந்தெய்வ வழிபாடெனப்பெறும்.

தெய்வம் ஒன்றே என்னுந் தெளிவுநிலை மக்கட் சமுதாயத்தில் உருவாவதற்குமுன் அணங்கு, பேய், பூதம் முதலாக அஞ்சுதற்குரியன எல்லாவற்றையும் தெய்வமெனக் கொண்டு வழிபடும் பொதுநிலையே உலகிற் பலவிடங் களிலும் பரவியிருந்தது. இயற்கைப் பொருள்களின் வழியாகவும் ஏனையுயிர்த்தொகுதிகளின் வழியாகவும் உலகத்து நிகழும் பல்வேறு நிகழ்வுகளை மட்டும் கண்டு அந்நிகழ்வுகளுக்குரிய உண்மையான காரணங்கள் இவையென உய்த்துணரும் உணர்வு நிரம்பப் பெறாத நிலையில், கட்புலனாக நிகழும் இயற்கையிடையூறுகளை வெவ்வேறு தெய்வங்களின் விளைவுகளாகக் கருதித் தம் உள்ளத்தே தோன்றிய அச்சங் காரணமாகவும் அத் தெய்வங்களின் அருளால் தீமைகளைப் போக்கி விரும்பிய நலங்களைப் பெறுதல் வேண்டும் என்னும் ஆசை காரணமாகவும் தொல் பழங்காலத்தில் வாழ்ந்த மக்கட் குழுவினர் தாம் தாம் வாழ்ந்த இயற்கைச் சூழல்கட் கேற்பவும் ஒளிபெறாத நள்ளிருட் காலத்துத் தாம் கொண்ட மனநிலைக்கேற்பவும் அணங்கு, பேய், பூதம், வரையரமகளிர், வானரமகளிர், நீரரமகளிர், சூர் முதலியனவாகப் பல்வேறு தெங்வங்கள் உண்டென நம்பி அவற்றுக்கு அஞ்சி வாழ வேண்டிய நிலையினராயினர்.

மக்கள் மனவறிவு நிரம்பப் பெறாத தொல் பழங் காலத்தில், வேண்டுதல் வேண்டாமைல்லாத செம்பொருள் ஒன்றே யென்னுந் தெளிவு பெறாது நெஞ்சம் நடுங்கும்படி தாம் கண்ட வெளித் தோற்றங்களையும் அவற்றைக் குறித்துப் பிறர் சொல்லக் கேட்டவற்றையும் தெய்வமென எண்ணி அவற்றால் வரும் துன்பங்களை விலக்குதற் பொருட்டுச் சிற்றுயிர்களைக் கொன்று அவற்றின் ஊனையும் கள்ளையும் அவற்றுக்குப் படைத்து வணங்கும் சிறுமை நிலையிற் செய்யப்படுதலின் இத்தகைய வழிபாடுகள் ‘சிறு தெய்வ வணக்கம்’ என வழங்கப்பெறுவனவாயின. இனி, சங்கத்

தொகை நூல்களில் இடம் பெற்றுள்ள சிறு தெய்வ வழிபாடுகள் இவையெனக் காண்போம்.

## அணங்கு, பேய், பூதம், சூர்

'அணங்கு' என்ற சொல், 'வருத்தும் தெய்வம்' என்ற பொருளிற் சங்கச் செய்யுட்களில் ஆளப் பெற்றுளது. அணங்குதல் - வருத்துதல்.

> "அணங்கே விலங்கே கள்வர் தம் இறையெனப்
> பிணங்கல் சாலா அச்சம் நான்கே" (தொல். மெய்ப். நூ. 252)

எனவரும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்தில், அச்சச் சுவைக்குரிய பொருள்களாக அணங்கு, விலங்கு, கள்வர், தம் தலைவன் என்னும் நான்கினைக் குறிப்பிடுவர் தொல்காப்பியனார். இங்கு அணங்கு என்றது, கண்டார்க்கு அச்சத்தினைத் தரும் பேய், பூதம் முதலிய சிறு தெய்வங்களை அறிவு நிரம்பாத மக்களை வருத்தும் இயல்பினவாதல் பற்றி அவற்றிற்கு 'அணங்கு' என்பதும் ஒரு பெயராயிற்று, அணங்கு என்னும் இச் சொல் அச்சுறுத்துவதாகிய பேய் என்ற பொருளிலும் ஆளப்பெற்றுள்ளது.

> "வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற
> பைம்பூட் சேஎய் பயந்த மா மோட்டுத்
> துணங்கையஞ் செல்விக்கு அணங்கு நொடித்தா அங்கு"
> (பெரும்பாண். 457-459)

எனவரும் பெரும்பாணாற்றுப்படைத் தொடர்க்கு, "வெள்ளிய திரையினையுடைய கடலிலே சென்று கடிய சூரனைக் கொன்ற பசிய பூணினையுடைய முருகனைப் பெற்ற பெருமையையுடைய வயிற்றினையும் பேய்கள் ஆடுந் துணங்கைக் கூத்தினையும் அழகினையும் உடைய இறைவிக்குப் பேய்மகள் சில நொடி சொன்னாற் போல" என நச்சினார்க்கினியர் உரை வரைந்துள்ளார். இத்தொடரில் துணங்கையஞ் செல்வி என்றது, கானகம் உகந்த காளியாகிய தெய்வத்தை. அணங்கு என்றது, அத்தெய்வத்தின் கூளிச் சுற்றமாகிய பேய்மகளை. மேற்குறித்த பெரும்பாணாற்றுப்

படைத் தொடரைக் கூர்ந்து நோக்குங்கால் காளிகோயிலில் அவ்விறைவிக்குப் பணிபுரியும் பேய்மகளிர் இருப்பர் என்னும் நம்பிக்கை சங்ககால மக்களுள்ளத்தே நிலை பெற்றிருந்தமை நன்கு புலனாகும். பிற்காலப் பரணி இலக்கியங்களில் வரும் பேய் பாடியது, கோயில் பாடியது, காளிக்குக் கூளி கூறியது முதலிய செய்திகள் பண்டைக் காலத்து நிலவிய நம்பிக்கையின் தொடர்பாக வளர்ந்து வந்த இலக்கிய மரபுகளாயின. பூதங்கள் வாசலிலே காத்து நிற்றலால் புகுதற்கரிய அச்சத்தை விளைப்பது காளிகோயில் என்பதனைப் 'பூதங்காக்கும் புகலருங்கடி நகர்' (பட்டினப். 57) என்ற பட்டினப்பாலைத் தொடர் புலப்படுத்துகின்றது. போர்க்களத்து இறந்துபட்ட வீரர்களின் உடல்களாகிய பிணத்தினைத் தின்று வாழும் இயல்புடைய மகளிர் முற்காலத்து இருந்தனர் என்ற நம்பிக்கை சங்கத்தொகை நூல்களாற் புலனாகின்றது. அவர்கள் அழகில்லாத உருவத்தினராகவும் கண்டோரஞ்சத்தக்க தோற்றத்தினராக வும் இருந்தமையால் 'பேய்' எனப்பட்டனர். தறுகண் மறவர் போர்க்களத்திற் பகைவரோடு பொருது உயிர் துறந்த நிலையிற் பிணந்தின்னுமியல்பினராகிய பேய் மகளிர் தமக்கு ஊனுணவு கிடைத்ததென்னும் பெருங்களிப்புடையராய்க் கால் பெயர்த்து ஆடுவதனை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இங்ஙனம் பிணந்தின்னும் பெண்ணினத்தைப் பேய் எனவும் அவ்வினத்தின் ஆணினைக் கூளி எனவும் வழங்குதல் மரபு. பேயும் கூளியும் முறையே பெண்ணும் ஆணும் ஆகிப் பிணந்தின்று வாழ்வன என்பது,

> "கணங்கொள் கூளியொடு கதுப்பிகுத் தசைஇப்
> பிணந்தின் யாக்கைப் பேய்மகள் துவன்றவும்"
>
> (பட்டினப். 24,25)

எனவரும் பட்டினப்பாலைத் தொடராற் புலனாம். "திரட்சி கொண்ட ஆண்பேய்களுடனே மயிரைத் தாழ்த்து இளைத்துப் பிணத்தைத் தின்னும் வடிவையுடைய பேய்மகள் நெருங்கும்படி" என இத்தொடர்க்கு நச்சினார்க்கினியர் வரைந்துள்ள உரை பேய்களுள் ஆண் பேய்க்குக் கூளி என்பது பெயராதலை நன்கு புலப்படுத்தல் காணலாம்.

"பிணங் கோட்ட களிறு குழும்பின்
நிணம் வாய்ப் பெய்த பேய் மகளிர்" (மதுரைக். 24,25)

எனவரும் மதுரைக் காஞ்சித் தொடர் பிணந்தின் மகளிரைப் பேய் எனக் குறித்தல் இங்குக் கூர்ந்து நோக்குதற்குரியதாகும்.

எண்ணெய் தடவப் பெறாது வறண்ட மயிரினையும் வரிசையொவ்வாது பிறழ்ச்சியுற்ற பற்களையும் பெரிய வயிற்றினையும் சினத்தாற் சுழலும் விழியினையுடைய பசிய கண்களையும் கொடுமை செய்யும் பார்வையினையும் பிதுங்கிய கண்ணையுடைய கோட்டான் என்னும் பறவையுடன் கடிய பாம்பு தன்னிடத்தே தொங்குதலால் பெரிய கொங்கையினை வருத்துகின்ற காதினையும் சொர சொரப்புடைய பெரியவுடம்பினையும் காண்போர்க்கு நடுக்கந் தரும் நடையினையும் அச்சந்தரும் தோற்றத்தினை யும் உடைய உருவத்தினளாகிய பேய்மகள் உதிரத்தை யளைந்த கூரிய நகங்களையுடைய கொடிய விரலாலே கண்களைத் தோண்டி உண்ணப்பட்ட மிக்க முடைநாற்ற முடைய தலையை ஒள்ளிய தொடியணிந்த பெரியகையிலே ஏந்தியவளாய்த் தோளையசைத்துத் துணங்கைக் கூத்தாட முருகப்பெருமான் அவுணரை வென்றடக்கிய செய்தி திருமுருக ற்றுப்படையிற் கூறப்பட்டது. செவ்வேள் சூர்மாவைத் தடிந்த போர்க்களத்தில் துணங்கைக் கூத்தாடிய பேய்மகள் மக்கள் யாக்கையினும் மிகப் பெரிய வடிவினளாகக் கூறப்படுகின்றாள்.

மேல்நோக்கிச் சுடர்விட்டெரியும் இயல்புடைய நெருப்புச் சாய்ந்தெரிந்தாலொத்த நாவினையும் வெள் யாட்டுக் குட்டிகளையணிந்த காதினையும் பிளவுபட்ட பாதங்களையும் உடைய பேய்மகள் நிணத்தைத் தின்று சிரிக்கும் தோற்றம் சிறுபாணாற்றுப்படையில் உவமையாகக் குறிக்கப்பெற்றுள்ளது. வேந்தர்கள் பகைவர்களை வென்று போர்க்களத்தின் கண்ணே வெற்றித் தெய்வமாகிய கொற்றவையை வணங்கிப் பேய் முதலியவற்றுக்குப் பலியிடுதல் வேண்டி மறக்களவேள்வி செய்வர். பேய்களில் சமைத்தற்றொழிலில் வல்லனாய்ப் பரிமாறும் முறைதெரிந்த

ஆண்பேயாகிய சமையற்காரன் போரிற் புறங்கொடாது இறந்த மறவர்களின் வீரவளையினையுடையவாகிய தோளையுடைய கைகளையே துடுப்பாகக் கொண்டு துழாவிச் சமைத்த ஊன் சோற்றைப் பகைவராற் கோபித்தற்கரிய கடிய வாயினையும் சீரிய தொழிலினையு முடையராய் முன்வைத்த அடி பின்னிடாதபடி போர்செய்த படைவீரர்க்கு விருந்தாகப்படைக்கும் முறையில் மறக்கள வேள்வி நடந்தது. இச்செய்தி,

"தெறலருங் கடுந்துப்பின்
விறல்விளங்கிய விழச்சூர்ப்பின்
தொடித்தோட்கை துடுப்பாக
வாடுற்ற வூன்சோறு
நெறியறிந்த கடிவாலுவன்
அடியொதுங்கிப் பிற்பெயராப்
படையோர்க்கு முருகயர" (மதுரைக்காஞ்சி 32 - 38)

எனவரும் மதுரைக்காஞ்சித் தொடர்களாற் புலனாம்.

சங்கவிலக்கியப் புறத்திணைப் பாடல்களுட் பேய் மகளிர் செயல்கள் புனைந்துரைக்கப் பெற்றுள்ளன. இவர்கள் மக்களினத்திற்றோன்றிப் பிணந்தின்னும் பழக்க முடையராய் மக்களினத்தின் வேறுபட்டு அழகிலா வுருவினராய்க் கண்டோர் வெருவி ஓடும்படி அச்சந் தரும் வடிவினராதலின் பேய் என்னும் பெயர் பெற்றனர் என எண்ணத் தோன்றுகின்றது. அச்சம் என்னும் பொருளுடைய பேம் என்னும் உரிச்சொல்லின் அடியாகப் பிறந்தது பேய் என்னும் பெயராகும்.

மக்கள் வடிவிற்காணப்படும் இவர்களேயன்றி இவர்கட்கு வேறாக மக்களை அச்சுறுத்தும் அணங்காகிய பேய்கள் உள்ளன என்பதும் அவற்றுக்குப் பலி கொடுத்துப் பரவு செய்தால் அவை அப்பலியினைப் பெற்றுத் தம்மைக் குறித்துப் பலியிட்டவர்களுக்கு எத்தகைய தீங்குஞ் செய்யாது திரும்பி விடும் என்பதும் பண்டைக் காலத்து மக்கள் கொண்ட நம்பிக்கையாகும். இக்குறிப்பு,

"மெய்பனிகூரத அணங்கெனப் பராவலிற்
பலிகொண்டு பெயரும் பாசம் போலத்
திறைகொண்டு பெயர்தி" (பதிற். 71)

எனத் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையை நோக்கி அரிசில் கிழார் பாடிய பாடலில் வரும் உவமையில் எடுத்தாளப் பெற்றுள்ளமை காணலாம். "மெய்ந்நடுக்கம் மிக்கு அணங்கெனக் கருதிப் பரவுதலால், பேயானது தன்னைப் பற்றினாருயிரை வௌவாது அவர் அஞ்சித் தரும் பலிப்பொரு ளேற்றுக்கொண்டு அவர்க்குத் தீங்கு செய்யாமல் திரும்புமாறுபோல வேந்தனாகிய நீயும் நின்னையஞ்சித் தொழும் பகைவரது உயிரை வௌவாது அவர்தந்த திறைப் பொருளையேற்றுக்கொண்டு திரும்புகின்றாய்" என்பது மேற்குறித்த தொடரின் பொருளாகும். இத்தொடரில் வந்துள்ள பாசம் என்னும் சொல்லுக்குப் பேய் என்பது பொருள். அஞ்சினாருயிரைப் பிணித்து வருத்துதலின் பாசம் என்பது பேய்க்குப் பெயராயிற்று.

"ஏனைப் பசாசு அருள், என்னை நலிதரின்
இவ்வூர்ப் பலிநீ பெறாஅமற் கொள்வேன்" (கலித். 65 :17-18)

எனக் கலித்தொகையிற் பார்ப்பானொருவன் கூறியதாகக் தோழி படைத்து மொழியும் தொடர், அச்சுறுத்தும் பேய்கள் ஊர் மக்கள் தரும் பலிப் பொருளை இரவில் எதிர்பார்த்து வாழும் இயல்புடையன என்பதனையும் அத்தகைய பேய்களுக்குப் பலியிடுதலை ஊர் மக்கள் வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதனையும் நன்கு புலப்படுத்தல் காணலாம்.

பகைவரது படையெடுப்பினாற் சிதைந்து பாழ் பட்டமையால் மக்கள் செல்லாத பாழிடங்களிலும் இருள் செறிந்த இரவுப் பொழுதிலும் இறந்தோர் உடம்பினை யடக்கஞ் செய்யும் ஈமப்புறங்களிலும் காளி கோட்டங் களிலும் மக்களை வருத்தும் பேய்கள் அலைந்து திரிவன என்பது பண்டைக்கால மக்களிடையே நிலவிய நம்பிக்கையாகும்.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன்

நெடுஞ்செழியனுடைய படை வீரர்களாற் பகைவர் நாடு பாழாயின செய்தியை விரித்துரைப்பதாக அமைந்தது,

> "அவையிருந்த பெரும்பொதியிற்
> கவையடிக் கடுநோக்கத்துப்
> பேய்மகளிர் பெயர்பாட
> அணங்குவழங்கும் அகலாங்கண்
> நிலத்தாற்றுங் குழூப்புதவின்
> அரந்தைப்பெண்டிர் இணைந்தனர் அகவ" (மதுரைக். 161-6)

எனவரும் மதுரைக் காஞ்சித் தொடராகும். "சான்றோர் இருந்த அம்பலங்களிலே இரட்டையான அடிகளையும் கடிய பார்வையினையும் உடைய பேயாகிய மகளிர் அடிபெயர்த்து ஆட, இல்லுறை தெய்வங்கள் உலாவும் அகன்ற ஊரிடத்தே நிலத்திலுள்ளாரையெல்லாம் அனுப்பும் வாயில் காவலரையுடைய வாயிலின்கண்ணேயிருந்து மனக்கவற்சியினையுடைய மகளிர் வருந்தி அரற்ற" என்பது மேற்குறித்த தொடரின் பொருளாகும்.

'வருத்துதல்' என்னும் பொருளுடைய 'அணங்கு' என்னுஞ்சொல் 'வருத்துதலையுடைய தெய்வம்' என்ற பொருளிற் சங்கச் செய்யுட்களிற் பலவிடங்களிலும் ஆளப்பெற்றுள்ளது. ஒத்த அன்பினராகிய ஒருவனும் ஒருத்தியும் உலகத்தாரறியாது மறைந்தொழுகும் களவு வாழ்க்கையில் தலைவன் தன்னால் தலையளிக்கப்பெறும் தலைவியை நோக்கி, 'நின்னைவிட்டு ஒரு காலத்தும் பிரிய மாட்டேன்' எனத் தான் வழிபடும் தெய்வத்தின் முன்னிலையிற் சூளுரைத்து அவளுள்ளத்தே தன்னைப் பற்றிய நம்பிக்கை தோன்றும்படி உறுதிமொழி கூறுதல் இயல்பு. இவ்வாறு தெய்வத்தின் முன்னிலையில் உறுதி கூறுதலை 'முன்தேற்று' என்பர் தொல்காப்பியர். இவ்வாறு தெய்வத்தின் முன்னிலையில் உறுதி செய்தார் அவ்வுறுதி மொழியில் தவறுவராயின் அவர் செய்த சூளுறவே அவரை வருத்தும் என்பதும், தன் முன்னிலையிற் செய்த சூளுறவினின்றும் தவறிய கொடியோரைத் தெய்வம் வருத்தும் என்பதும் பண்டைத் தமிழர் வாழ்வியலிற்

காணப்படும் நம்பிக்கையுணர்வாகும். எனவே தெய்வத்தின் முன்னிலையிற் சூளுறவு செய்யப்புகுவோர் அதிலிருந்து தவறினால் தமக்கு வரும் துன்பத்தினையும் எண்ணியே சூள்செய்தல் வேண்டும். தெய்வத்தின் முன்னர்ச் செய்த சூளுறவிற் பிழைத்தோர் துன்புறுவர் என்பதனை வற்புறுத்தும் கருத்திலேயே 'இன்னாத்தொல்சூள்' எனவும் 'அணங்குடை யருஞ்சூள்' (நற். 386) எனவும் அடைகொடுத்தோதுவர் பண்டைத் தமிழ்ச் சான்றோர்.

ஒத்த அன்புடைய ஒருவன் ஒருத்தியாகிய காதலர்களது காதலுணர்வினையும் பகைவரால் நாட்டிற்கு நேரும் தீமைகளைப் போக்கும் குறிக்கோளுடையராய்த் தம்முயிரைப் பொருட்படுத்தாது பகைவரோடு பொருது வெல்லும் போர் மறவர்களது வெற்றித் திறத்தையும் விரித்துரைக்கும் முறையிற் பாடப் பெற்ற சங்கச் செய்யுட்கள் காதலும் வீரமும் ஆகிய இவ்விருவகையுணர்வுகளுக்கு அரண் செய்யும் தெய்வ வழிபாட்டினையும் சிறப்பாக வலியுறுத்தியுள்ளமை இங்கு நோக்கத்தகுவதாகும்.

பல பிறப்புக்களிலும் கணவனும் மனைவியுமாக அன்பினாற் கூடி வாழ்ந்த ஒருவனும் ஒருத்தியுமாகிய இருவர், அடுத்துவரும் பிறவியிலும் நம்பியும் நங்கையுமாய் வளர்ந்த இளம்பருவத்தே நல்லூழின் செயலால் ஒருவரையொருவர் எதிர்ப்பட்டு உலகத்தார் அறியாதவாறு மறைவிற் கூடி மகிழும் கேண்மை தமிழ் மக்களது அகத்திணை யொழுகலாற்றில் இயற்கைப் புணர்ச்சியெனப்படும். இவ்வாறு நல்லூழின் திறத்தால் தலைமகளை எதிர்ப்பட்டு அன்பினால் அளவளாவிய நிலையில் தலைமகன் தன்னைப் பிரிந்து சென்று விடுவானோ என்ற அச்சம் தலைமகள் உள்ளத்தே தோன்றுதல் இயல்பு. இங்ஙனம் ஐயுற்றுவருந்திய தலைமகளது அச்சவுணர்வினைப் போக்கி அவளைத் தெளிவித்தல் வேண்டித் தலைமகளை நோக்கி, 'நின்னை ஒருபொழுதும் பிரியமாட்டேன்' எனத் தலைவன் தெய்வத்தின் திருமுன் சூளுறவு (சபதம்) செய்து கொடுத்தல் முறையாகும். இவ்வாறு தெய்வத்தின் திருமுன் சூளுறவு செய்து தலைமகளைத் தேற்றும் முறை 'முன்தேற்று'

எனப்படும் என்பது முன்னர் விளக்கப்பெற்றது. தலைமகளைத் தேற்றுதல் வேண்டித் தலைவன் தெய்வத்தின் முன்னிலையிற் செய்யும் இச் சூளுறவு தலைவியையின்றித் தன் வாழ்வு நடவாது என்னும் உண்மையினைத் தலைமகள் மனங்கொள்ளும் தலைமகனைத் தெரிவிப்பதாகலின் 'முன்தேற்று' என வழங்கப் பெறுவதாயிற்று.

இயற்கைப் புணர்ச்சியில் தலைமகளைக் கூடிய தலைவன், தலைமகளது உள்ளக்கருத்து தன்னை மணந்து கொண்டு இல்லறம் நிகழ்த்துதலாக இருக்கும் என நினைந்து "பலரும் வந்து உண்ணும்படி கதவு திறந்துகிடக்கும் வாசலையுடையதும், மிடாவிற்சமைத்த சோற்றை வருவார்க்கெல்லாம் வரையாமல் இடுதலால் விழாக் கொண்டாடினாற் போன்ற செல்வத்தையுடையதும் ஆகிய வளமனை பொலிவு பெறும்படி பசுத்த நிணம் ஒழுகிய நெய்மிக்க அடிசிலைச் சுற்றத்தார்க்கும் விருந்தினர்க்கும் நீ இடுகையினாலே அவர்கள் உண்டு மிகுந்த எஞ்சிய உணவினை நீ எனக்கு இடுதலினாலேயான் நின்னுடன் இருந்து உண்ணுதலும் எனக்கு உயர்வு விளைப்பதாகும்" என்று சொல்லி இவ்வாறு திருமணஞ் செய்து கொண்டு வாழும் மனையறமே தங்களைப் பிறவிக்கடலினின்றும் இன்பக்கரையேற்றுவதாகத் தெளிவித்து, பெரியமலையில் மிகவுயர்ந்த இடத்தேயுறைகின்ற முருகப் பெருமானையும் வாழ்த்தி வணங்கி அவ்விறைவன் முன்னே தலைமகள் பாதுகாவலுறைதற்குக் காரணமாகிய வஞ்சினத்தை உண்மையாகவே தெளிவித்து அதற்கு அடையாளமாக அம்மலையில் ஒழுகும் அழகிய இனிய தெள்ளிய நீரைக் குடித்துச் சூளுறவு செய்தனன் என்ற இச் செய்தியைக் கபிலர் பாடிய குறிஞ்சிப் பாட்டு விரித்துரைக்கின்றது.

"குன்றுகெழுநாடன் எம் விழைதகு பெருவிறல்
உள்ளத்தன்மை உள்ளினன் கொண்டு
சாறயர்ந்தன்ன மிடாச் சொன்றி
வருநர்க்கு வரையாவளநகர் பொற்ப
மலரத்திறந்த வாயில் பலருணப்
பைந்நிண மொழுகிய நெய்ம் மலியடிசில்
வசையில் வான்திணைப்புரையோர் கடும்பொடு

விருந்துண்டு எஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னோடுண்டலும் புரைவதென்றாங்கு
அறம்புணையாகத் தேற்றிப் பிறங்குமலை
மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது
ஏமுறு வஞ்சினம் வாய்மையிற் றேற்றி
அந்தீந் தெண்ணீர் குடித்தலின்" (குறிஞ்சிப். 199-210)

எனவரும் இப்பகுதியில், தலைவன் தலைவி இருவரும் திருமணம் செய்து கொண்டு சுற்றத்தாரையும் விருந்தினரையும் பேணி மனையறம் நிகழ்த்தும் முறைமையும் இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவன் தெய்வத்தை வாழ்த்தி வணங்கித் தெய்வத்தின் திரு முன்னர்த் தலைவிக்குச் சூளுறவு செய்து தண்ணீர் குடித்துத் தெளிவிக்கும் திறமும் நன்கு வற்புறுத்தப்பெற்றுள்ளமை காணலாம்.

களவு வெளிப்பட்டபிறகு தலைவியை மணஞ் செய்யாது தலைவன் பொருள் தேடப் பிரிந்த காலத்து 'இவள் ஆற்றாளாயினாள், இவளை யிழந்தேன்' எனக் கவலையுற்ற தோழி தலைமகளை நோக்கிக் கூறுவதாக அமைந்தது,

"பெருந்தோள் நெகிழ அவ்வரி வாடச்
சிறுமெல்லாகம் பெரும்பசப்பூர
இன்னேமாக எற்கண்டு நாணி
நின்னொடு தெளித்தனராயினும் என்னதூ உம்
அணங்கலோம்புமதி வாழிய நீயெனக்
கணங்கெழு கடவுட் குயர்பலி தூ உய்ப்
பரவினம் வருகஞ் சென்மோதோழி
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
அரும்பெறலாய் கவின்தொலையப்
பிரிந்தாண்டுறைதல் வல்லியோரே" (நற்றிணை 358)

எனவரும் நற்றிணைப் பாடலாகும். "பெரியதோள் நெகிழவும் வனப்புடைய கோலம் வாடவும் சிறிய மெல்லிய நின் மார்பகத்தே பசலைபடரவும் யாம் இங்ஙனம் தமது பிரிவால் வருந்தவும் என்னைக் கண்டு நாணமுற்று 'நின்னைப் பிரியேன்' என நின்னொடு சூளுறவு செய்து தெளிவித்தா

ராயினும் பொருள்தேடச் சென்ற அவர் நின்னைப் பிரிந்து வேற்று நாட்டகத்தே தங்கியிருக்கும் வன்மையுடையராக வுள்ளார். ஆகவே இங்ஙனம் சூளுறவில் தவறிய அத் தலைவரை வருத்துதலைத் தவிர்வாயாக; தெய்வமாகிய நீ அத்தலைவர்க்கு அருள்சுரந்து வாழ்க' என்று வேண்டிக் கூளிச் சுற்றத்தொடு பொருந்திய கடவுளுக்கு உயர்ந்த பூப்பலியினைத் தூவிப் பரவி வழிபட்டு வருதற்குச் செல்வோமாக" என்பது இப்பாடற் பகுதியின் பொருளாகும். இதன்கண் தலைவன் தான் தெய்வத்தின் முன்னிலையிற் செய்த சபதத்தில் தப்பி ஒழுகுதலால் தெய்வம் அவனை ஒறுத்துவருத்தும் என்று அஞ்சிய தோழி அங்ஙனம் வருத்துதலைத் தவிர்த்தருள்க எனக் கடவுளைப் பரவி வழிபடுதற் பொருட்டுத் தலைமகளை அழைத்தாள் என்ற செய்தி இப்பாடலில் இடம் பெற்றுள்ளமை அறியத் தகுவதாகும்.

தான் தவறு செய்யவில்லை என்பதனை உறதிசெய்யும் முறையில் தெய்வத்தின் முன்னிலையிற் சூளுறவு செய்யும் பழக்கமும் தமிழகத்தில் நெடுங்காலமாக நிலைபெற்று வருகின்றதென்பதும் தெய்வத்தின் முன்னிலையிற் பொய் கூறுதல் அடாதென்பதனை யறிந்திருந்தும் உலக வாழ்க்கையில் தாம் செய்த தவறுகளை மறைத்தல் வேண்டித் தெய்வத்தின் முன்னிலையிற் பொய்ச் சூள் செய்பவர்கள் இந்நாட்டில் தொடர்ந்து இருந்து வருகின்றார்கள் என்பதனை எடுத்துக்காட்டி நகைக்கும் முறையிற் பாடப் பெற்றது அகநானூறு 166ஆம் பாடலாகும். காவிரியாற்றிற் பரத்தையொடு புனலாடி மகிழ்ந்த தலைவன், அது கேட்டுத் தன் மனைவி புலந்தாளாக, யான் 'பரத்தையொடு புனலாடினேனல்லேன்' என அவட்குப் பொய்ச் சூள் செய்தான். அச்செய்தியைக் கேள்வியுற்ற பரத்தை தன் பக்கத்திலுள்ளார் கேட்ப நகையாடிக் கூறுவதாக அமைந்தது அவ்வகப்பாடலாகும்.

"பழம்பன் னெல்லின் வேளூர் வாயில்
நறுவிரை தெளித்தநாறிணர் மாலைப்
பொறிவரியினவண் டூதலகழியும்
உயர்பலி பெறூஉம் உருகெழுதெய்வம்

புனையிருங்கதுப்பின் நீகடுத்தோள்வயின்
அனையேனாயின் அணங்குக என் என
மனையோட் டேற்றும் மகிழ்ந நனாயின்
யார் சொல் வாழி தோழி நெருநல்
தார்பூண் களிற்றின் தலைப்புணைதழீஇ
வதுவை யீரணிப் பொலிந்து நம்மொடு
புதுவது வந்தகாவிரிக்
கோடுதோய் மலிர்நிறை ஆடியோரே" (அகம். 166)

"பழைய பல்வகை நெல்வளத்தையுடைய வேளூர் வாயிலின்கண்ணே நறுமணநீர் தெளிக்கப்பெற்ற மணம் வீசும் பூங்கொத்துக்களால் ஆகிய மாலையினைப் புள்ளிகள் நிறைந்த வரிகளோடு கூடிய வண்டு தெய்வத்திற்குரிய மாலையென்று அஞ்சித் தேனுண்ணாது ஒழிவதற்குக் காரணமான உயர்ந்த பலிகளைப் பெறும் அச்சந்தரும் தெய்வம், அணிசெய்த கரிய கூந்தலையுடையளாய் நின்னால் ஐயுறப் பெற்றாளாகிய பரத்தையுடன் புனலாடிய அத்தன்மை யுடையேனாயின் என்னை வருத்துவதாகுக என்று சூளுரைத்துத் தலைவன் தன் மனைவியைத் தெளியக் கூறுவானாயின் நேற்று இருகரையும் பெருகப் புதிதாக வந்த காவிரியின் நீர்ப்பெருக்கிலே தாரணிந்த களிற்றினைப் போன்று புணையின் தலையிடத்தைத் தழுவியிருந்து வதுவைக்குரிய பெரிய அணியாற் பொலிவுபெற்ற நம்முடன் கூடிப் புனலாடினோர் அத்தலைவரன்றிப் பிறர் யாரோ?" என்பது மேற்குறித்த பாடற் பகுதியின் பொருளாகும்.

இங்ஙனம் அகத்திணையொழுகலாறாகிய களவிலும் கற்பிலும் தெய்வத்தின் திருமுன்னர்ச் சூளுறவு செய்தலாகிய இந்நிகழ்ச்சி, மக்களது குடும்பவாழ்வுக்கு உறுதுணையாகத் தெய்வத்தை முன்னிறுத்தி அதன் திருவருள் வழி அடங்கி யொழுகிய மக்களது தெய்வங்கொள்கையினை நன்கு வலியுறுத்தும் முறையில் அமைந்துள்ளமை இங்கு மனங்கொளற் பாலதாகும்.

இவ்வாறு தன் முன்னிலையில் அன்புடையார்க்குச் சொன்ன உறுதிமொழியிலிருந்து தவறுதல் முதலிய

கொடுமை செய்தவர்களை ஒறுத்து அடக்குதலும் அன்புடைய நல்லோர்களைப் பாதுகாத்தலும் தெய்வத்தின் இயல்பாகும் என்பதும் தவறு செய்தோரைத் தெய்வம் ஒறுத்து அடக்கும் என்பதனை உணர்ந்தவர்கள் தெய்வத்தின் முன்னர்த் தாம் செய்த சூளுறவினின்றும் தவறமாட்டார்கள் என்பதும் ஆகிய எண்ணங்கள் மக்கட் சமுதாயத்தில் வேரூன்றியிருந்தால் தெய்வத்தின் முன்னிலையில் தலைவன் முதலியோர் சூளுறவு செய்தலும் அச்சூளுறவினைத் தலைவி முதலியோர் நம்பி யொழுகுதலும் ஆகிய உலகிய லொழுகலாறுகள் செவ்வனே நிகழ்தல் கூடும். உலகில் பிறவுயிர்கட்குத் துன்பஞ் செய்யுமியல்பினராகிய கொடியோர் களை ஒறுத்து வருத்துதலும் பிறவுயிர்க்கு ஒருசிறிதும் தீங்கு எண்ணாத நல்லியல்புடையவர்களை இடர்நீக்கிக் காத்தலும் தெய்வத்தின் இயல்பு என்னும் மெய்ம்மையினைச் சங்க காலத் தமிழ் மக்கள் நன்குணர்ந்து தமது வாழ்க்கையினை நன்முறையில் அமைத்துக் கொண்டனர். தெய்வ நம்பிக்கையின் விளைவாக அமைந்த இவ்வாழ்வியல் நெறிமுறை,

> "மன்ற மரா அத்த பேஎ முதிர் கடவுள்
> கொடியோர்த் தெறூஉம் என்ப
> கொடியரல்லர் எம் குன்று கெழு நாடர்" (குறுந். 87)

எனத் தலைவியொருத்தி தன் ஆருயிர்த் தலைவனைப் பொறுத்தருளும்படி தெய்வத்தை அன்பினாற் பரவுவதாக அமைந்த குறுந்தொகைப்பாடலால் இனிது புலனாம்.

அலைகள் கிளர்ந்தெழும் கடற்றுறையிலும் வானுற வோங்கிய மலையடுக்கங்களிலும் மரங்கள் செறிந்த காடுகளிலும் நீர்த்துறைகளிலும் முதிர்ந்த பெரிய ஆல் வேம்பு கடம்பு முதலிய மரங்களின் அடிகளிலும் பலவழிகள் ஒன்று கூடும் சந்திகளிலும் தெய்வம் உறையும் என்று பண்டையோர் நம்பினார்கள். அந் நம்பிக்கையின் விளைவாகஅவ்விடங்கள் பலவும் மக்கள் அச்சத்துடன் அணுகி வழிபடுதற்குரிய தெய்வ நிலையங்களாயின. இச்செய்தி, 'அணங்குடைப் பனித்துறை' (ஐங். 174), 'அணங்குடை நெடுங்கோடு' (புறம். 52), 'அணங்குடை முருகன் கோட்டம்' (புறம். 299) எனவரும்

தொடர்களாற் புலனாம். மக்கள் தமக்கென அமைத்துக் கொண்டுள்ள இல்லங்களிலும் மனைவாயில் நிலைகளிலும் தங்களை இடர் நீக்கிக் காக்கும் தெய்வம் உறைகின்றது என்னும் நம்பிக்கையுடையராய்த் தம் மனைக்கண் தெய்வத்தினை வழிபட்டு வந்தனர். இக்குறிப்பு 'அணங்குடை நல்லில்' (மதுரைக். 578) எனவும், 'அணங்குடை நெடுநிலை' (மதுரைக். 578) எனவும், 'அணங்குடை நெடுநிலை' (மதுரைக். 535) எனவும் வரும் மதுரைக் காஞ்சித் தொடர்களால் இனிது புலனாதல் காணலாம். இவ்வாறு மனைக்கண் உறைந்து மக்களைக் காக்கும் தெய்வத்தினை 'இல்லுறை தெய்வம்' (மதுரைக். நச். உரை) 'இல்லுறை கடவுள்' (அகம். 282) எனப் போற்றுதல் மரபு. வீட்டுத் தெய்வத்திற்குப் படைத்தல் என்னும் இவ்வழக்கம் தமிழகத்தில் இக்காலத்திலும் தொடர்ந்து நிலைபெற்றமை இங்கு நினைத்தற்குரியதாகும். 'அணங்கு' என்னும் சொல் தெய்வத்தின் எல்லையற்ற பேருருவினையும் பேராற்றலையும் குறிக்கும் பொருளினதாக நக்கீரனாரால் ஆளப்பெற்றுள்ளது. குறிஞ்சி நிலத் தெய்வமாகிய முருகன் மக்களது கட்புலனுக்கு அடங்காத தனது பேரொளி வாய்ந்த பேருருவமாகிய உயர்ந்த பெருந் தோற்றம் காண்போர்க்கு அச்சந்தரும் இயல்பின தாதலின் அப்பெருந்தோற்றத்தினைத் தன்னுள் அடக்கிக் கொண்டு பண்டைக்காலத்து வள்ளியை மணத்தற் பொருட்டு எளிவந்தருளிய மணங்கமழ் தோற்றத்து இளையோனாகக் கண்முன் தோன்றி அச்சமகற்றி அருள் புரியும் திறத்தினன் என்பதனை,

> "அணங்குசால் உயர்நிலைதழீஇ பண்டைத் தன்
> மணங்கமழ் தெய்வத்து இளநலங்காட்டி"
>
> (திருமுருகு. 289-290)

எனவரும் தொடரில் நக்கீரனார் விளக்கியுள்ளமை இங்கு அறியத்தகுவதாகும். 'அணங்கு' என்னும் சொற்போன்றே 'சூர்' என்ற சொல்லும் 'வருத்துவது' என்ற பொருளிலும் 'தெய்வம்' என்ற பொருளிலும் சங்கச் செய்யுட்களில் ஆளப்பெற்றுளது. 'சூருறுமஞ்ஞையின் நடுங்க' (குறிஞ்சிப். 169) என்ற தொடர்க்குத் 'தெய்வம் ஏறின மயில்போல

நடுங்காநிற்க' எனப் பொருள் வரைந்தார் நச்சினார்க்கினியர். தெய்வம் உயிர்கள்மேல் ஆவேசித்தல் உண்டு என்பதும் அவ்வாறு தெய்வம் ஏறப்பெற்ற உயிர்களின் உடம்பு நடுக்கமுற்று ஆடாநிற்கும் என்பதும் 'சூரமை நுடக்கத்து .......... ஆடினை' (ஐங். 71) 'சூர்நசைந்தனையாய் நடுங்கல் கண்டே' (குறுந். 52) எனவரும் சங்க இலக்கியத் தொடராலும் நன்குபுலனாம்.

நிலத்தில் வாழும் மானுட மகளிரின் வேறாக வானிலும் வரையிலும் நீர்ப்பரப்பிலும் வாழும் தெய்வத் தன்மை வாய்ந்த மகளிர் உள்ளார்கள் என்பது பண்டைத் தமிழ் மக்களின் நம்பிக்கையாகும். 'சூர் அரமகளிர்' (திருமுருகு. 41), 'வான் அரமகளிர்' (திருமுருகு. 117), 'வரையரமகளிர்' (குறிஞ்சி. 195, மலைபடு. 190, ஐங். 191, 204, அகம். 342) எனச் சங்கச் செய்யுட்களிற் குறிக்கப் பெற்றுள்ளமை காணலாம். வானுலகில் வாழும் தேவ மகளிர் 'வானவமகளிர்' (மதுரைக். 382) எனப்பட்டனர். சூர் என்னும் தெய்வம் விரும்பிய காந்தள் மலரில் வண்டு மொய்த்தல் இல்லை. அறியாது அதன் மேல் மொய்த்த வண்டினம் தம் பறத்தல் வன்மை கெட்டுவருந்தும் என்பது,

> "மலர்ந்த காந்தள் மாறாதூ திய
> கடும் பறைத்தும்பி சூர் நசைத்தா அய்ப்
> பறைபண்ணழியும்" (பதிற். 67)

எனவரும் தொடராற்புலனாம். "மலர்ந்த காந்தளினது மலரை இது தெய்வத்திற்கு உரியது என்று அறிந்தும் அதனை விட்டு நீங்காது ஊதிய விரைந்து பறத்தலையுடைய தும்பியென்னும் சாதிவண்டு தன் பறத்தல் வன்மை சீர் கெட்டழியும். 'சூர்நசைத்தாஅய்' என்றதனைச் சூர்நசைத் தாகவெனத்திரித்து, சூரானது நச்சுதலையுடைத்து ஆகலானேயென வுரைக்க" என்பர் பதிற்றுப்பத்தின் பழைய உரையாசிரியர். சூர்-தெய்வம் என்ற பொருளில் இங்கு ஆளப்பெற்றது. காந்தள் மலரை விரும்பும் தெய்வம் என்றது மைவரையுலகிற்குரிய சேயோனாகிய முருகப் பெருமானை.

> "சுரும்புமூசாச் சுடர்ப்பூங்காந்தட்
> பெருந்தண் கண்ணிமிலைந்த சென்னியன்" (திருமுருகு 44-45)

"வெறியறிசிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தள்" (தொல். புறத். நூ. 63)

என்பன இங்கு ஒப்பு நோக்கியுணரத்தக்கனவாகும்.

பண்டைநாளில் வாழ்ந்த மக்கள், காக்கை,பல்லி முதலிய அஃறிணையுயிர்களின் இயக்கங்களையும் குரல்களையும் தமது வாழ்க்கை நிகழ்ச்சிகளில் தொடர்புடையனவாகக் கூர்ந்து உணர்ந்திருந்தனர். காக்கை கரைதல், கரிக்குருவி முதலிய அஃறிணையுயிர்களின் செயல்களைத் தமக்கு எதிர்காலத்தில் நேரவிருக்கும் நற்செயல் தீச்செயல்களின் நிமித்தமாகக் கொண்டனர். தாம் எண்ணிய செயலைத் தொடங்குதற்கும் தவிர்தற்கும் மக்கட் கூட்டத்தாரிடையே இயல்பாகத் தோன்றும் நற்சொல்லையும் தீச் சொல்லையும் நிமித்தமாக எண்ணினர். முருக பூசை பண்ணும் வேலன் முதலியோரைக் கொண்டு நிகழ்த்தும் வெறியாடல், கட்டுவிச்சி யென்னும் கணிமகளைக்கொண்டு கட்டும் கழங்கும் இட்டுரைத்தல் முதலிய தெய்வக் குறிப்புக்களால் சென்ற காலத்தில் நிகழ்ந்தது, நிகழ்காலத்தில் நிகழ்வது, எதிர்காலத்தில் நிகழவிருப்பது ஆகிய முக்கால நிகழ்ச்சிகளை யறிந்துகொள்ளுதலும் வானின்கட் காணப்படும் விண் மீன்கள் கோள்கள் ஆகியவற்றால் இவ்வுலகில் நிகழவிருக்கும் இயற்கைமாற்றங்களை முன்னரே உய்த்துணர்ந்துரைத்தலும் ஆகிய ஆற்றல் படைத்தவர்களாக வாழ்ந்தார்கள். இச்செய்தி,

"தன்னும் அவனும் அவளுஞ் சுட்டி
மன்னும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்
நன்மை தீமை அச்சஞ்சார்தலென்று
அன்னபிறவும் அவற்றொடு தொகைஇ
முன்னிய காலம் மூன்றொடுவிளக்கி" (தொல். அகத். 40)

எனவும், 'பக்கத்துவிரிச்சி' (தொல். புறத்.3) எனவும், 'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்', (ஷை.5) எனவும், 'குடையும் வாளும் நாள்கோள்' (ஷை. 11) எனவும், 'மறுவில் செய்தி மூவகைக் காலமும், நெறியின்ஆற்றிய அறிவன் தேயமும்' (ஷை 36) எனவும், 'கட்டினுங் கழங்கினும் வெறியென இருவரும், ஒட்டியதிறத்தாற் செய்திக் கண்ணும்' (ஷை களவியல் 25)

எனவும் வரும் தொல்காப்பியத் தொடர்களாலும், 'நாளன்று போகிப் புள்ளிடை தட்ப' (புறம். 124), 'புள்ளும் பொழுதும் பழித்தலல்லதை, உள்ளிச் சென்றோர்ப் பழியலர்' (ஷை.24) 'புட்பகைக்கு ஏவானாகலிற் சாவோம் யாம்' (ஷை.68) என வரும் புறநானூற்றுத் தொடர்களாலும் நன்கு புலனாம்.

மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியதாக அமைந்த 195 ஆம் அகப்பாடலில்,

> "அறுவைதோயும் ஒரு பெருங்குடுமிச்
> சிறுபை நாற்றி பல்தலைக் கொடுங்கோல்
> ஆகுவதறியும் முதுவாய்வேல
> கூறுகமாதோ நின்கழங்கின்திட்பம் . . . . .
> எம்மனைமுந்துறத்தருமோ
> தன்மனையுய்க்குமோ யாதவன் குறிப்பே"

எனவரும் பகுதியில் வேலன் கழங்குபார்த்து நிகழ்வனகூறும் வழக்கம் விளக்கப்பெற்றுள்ளமை காணலாம்.

மனைக்கண் நெடுஞ்சுவரிடத்தே பொருந்தி வாழும் பல்லியின் சொற்களைப் பலமுறை கேட்டு அதன்பின்னர் நிகழ்ந்த இன்பதுன்ப நிகழ்ச்சிகளுடன் இயைத்து எண்ணிய பண்டைக்காலமக்கள், பல்லிசொல்லும் சொற்களைப் பின்னர் நிகழ்வனவற்றை முன்னர்ப் புலப்படுத்தும் நிமித்தமாகக் கொண்டனர் என்பது சங்கச் செய்யுட்களால் நன்கு புலனாகின்றது. பல்லி இன்ன திசையிற் சொன்னால் நற்சொல் எனவும் இன்னதிசையிற் சொன்னால் தீச்சொல் எனவும் பல்லியின் சொல்லுக்குத் திசைவகையாற் பயன் கற்பித்துக் கொண்டார்கள் என்பது 'பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவி' (அகம். 9) எனவும், 'பல்லியும் பாங்கொத்திசைத்தன' (கலித். 11) எனவும் வரும் தொடர்களாற் புலனாம்.

பின்வரக்கடவ இன்பதுன்ப நிகழ்ச்சிகளைப் பல்லி தன் சொற்களாற் புலப்படுத்தும் தன்மையதென்பதும், மக்கள் வாழும் மனையகத்துமட்டுமன்றி அவர்கள் செல்லும் காட்டகத்து வழிகளிலும் சோதிடரைப் போன்று

நேரவிருக்கும் இடையூறுகளைத் தம் சொற்களாற் புலப்படுத்தும் திறன் பல்லியின் சொற்களுக்கு உண்டென்பதும் பண்டைக்கால மக்களது வாழ்வியலிற் காணப்படும் நம்பிக்கையாகும். இந்நுட்பம்,

> "கள்ளிமுள்ளரைப் பொருந்திச் செல்லுநர்க்கு
> உறுவது கூறுஞ் சிறுசெந்நாவின்
> மணியோர்த்தன்ன தெண்குரல்
> கணிவாய்ப் பல்லிய காடு" (அகம். 151)

எனவரும் அகநானூற்றுத் தொடரால் நன்கு புலனாதல் காணலாம்.

ஆறலை கள்வர் வாழும் கொடிய பாலைநில வழியே செல்வோர் யானைப்படையுடைய பெருவேந்தராயினும் போரின்கண்ணே உயிர்துறந்து புகழ்நிறுவிய வீரர்களை வழிபடுதற்கென அங்கு வரிசையாக நடப்பெற்றுள்ள நடுகற்களைப் பொருந்தியிருந்து இரைபெறாது வருந்தும் முதிய பல்லி, பின்வரும் துன்ப நிகழ்ச்சியினைப் புலப்படுத்தும் இன்னாச்சொற்களை இடையிட்டுரைப்பதாயின், அச்சொற்களைக் கேட்ட அளவிலேயே அவ்வழியில் மேலும் செல்லுதலை நிறுத்தித் தாம் வழியே விரைந்து திரும்புவர் என்பதனை,

> "நல்லிசை நிறுத்த நாணுடை மறவர்
> நிரைநிலை நடுகற் பொருந்தி இமையாது
> இரைநசைஇக் கிடந்த முதுவாய்ப் பல்லி
> சிறிய தெற்றுவதாயிற் பெரிய
> ஓடையானை உயர்ந்தோராயினும்
> நின்றாங்குப் பெயரும் கானம்" (அகம். 387)

எனவரும் அகப்பாடலில் மருதன் இளநாகனார் புனைந்து கூறிய திறம் பல்லி சொல்லில் அக்காலமக்கள் கொண்டிருந்த நம்பிக்கையினை நன்கு புலப்படுத்தல் காணலாம்.

வருவதுணர்த்தும் பல்லியின் சொல்லைப் பகுத்துணர்வுடைய உயர்திணை மாந்தர் நிமித்தமாகக் கொண்டது போலவே, அஃறிணையுயிர்களாகிய பன்றி

முதலிய விலங்குகளும் நியித்தமாகக் கொண்டன என்பது,

> "முதைச் சுவற்கலித்த மூரிச் செந்தினை
> ஓங்குவரைப் பெருங்குரல் உணீஇய பாங்கர்ப்
> பகுவாய்ப் பல்லிபாடோர்த்துக் குறுகும்
> புருவைப்பன்றி" (அகம். 88)

எனவும்,

> "எய்ம்முள் அன்ன பரூஉமயிர் எருத்திற்
> செய்ம் மேவற் சிறுகட் பன்றி
> ஓங்குமனை வியன்புனம் படீஇயர் வீங்குபொறி
> நூழை நுழையும் பொழுதிற் றாழாது
> பாங்கர்ப் பக்கத்துப் பல்லிபட்டென
> மெல்ல மெல்ல பிறக்கே பெயர்ந்துதன்
> கல்லளைப் பள்ளி வதியும் நாடன்" (நற். 98)

எனவும் வரும் சங்க விலக்கியப் பகுதிகளில் விரித்துரைக்கப் பட்டது. உயர்ந்த மலைப்பகுதியில் ஓங்கி வளர்ந்த முற்றிய செந்தினையின் பெருங்கதிர்களை உண்ணுதற்கு விரும்பிய பன்றியானது தினைப்புனங்காவலராகிய குறவர்களால் தனக்கு இடர் நேராமை கருதிப் பல்லியின் நற்சொல்லினை ஓர்த்துக் கேட்டு அதனையே நன்னிமித்தமாக நம்பித் தினைப்புனத்தை அணுகியது என்ற செய்தி 88ஆம் அகப்பாடலிலும், இரவில் தினைப்புனத்திற் குறுகித் தினைக் கதிர்களைத் தின்றழிக்கும் பன்றியைப் பிடித்தற்கெனக் குறவர்கள் புனத்தின் முகப்பில் இயந்திரப் பொறி வைத்துள்ளமை யறியாது அப்பொறி வாயிலில் நுழையும் பன்றி அப்பொழுது பக்கத்தே பல்லி சொல்லிய சொல்லினைக் கேட்டுத் தனக்கு நேரவிருக்கும் தீங்கினை யுணர்ந்து அப்பொறியினின்னும் தப்பி மெல்ல மெல்லப் பின்வாங்கித் தான் வாழும் கல் முழையில் வந்து தங்கியது என்ற செய்தி நற்றிணை 98ஆம் பாடலிலும் புனைந்துரை வகையால் இடம் பெற்றுள்ளமை பல்லி சொல்லுக்குப் பயன் உண்டு என்னும் பண்டைக்கால மக்களது நம்பிக்கையினை நன்கு வற்புறுத்தல் காணலாம்.

தலைமகன் பிரிவினால் வருந்தும் தலைமகள் பகுவாய்ப் பல்லி சொல்லுந்தோறும் நல்ல சொற்களே கூறுக என நடுங்கிப் பரவினாள் என்பது,

"மையல்கொண்ட மதனழியிருக்கையள்
பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி
நல்ல கூறெனநடுங்கி" (அகம். 289)

எனவும்,

"வருந்து தோட்பூசல்களையு மருந்தென
உள்ளுதொறு படூஉம் பல்லி
புள்ளுத்தொழு துறைவி" (அகம். 351)

என வரும் தொடர்களால் புலனாம்.

வினைமுற்றி மீள்கின்ற தலைவன் தன்னைப் பிரிந்துறையும் தலைமகளது வருத்தத்தை எண்ணித் தன்னெஞ்சினை நோக்கி, நாம் கருதிய வினையினை முடித்துத் திரும்புகின்றோம். ஆதலால் நமது வருகையினை எதிர்பார்த்திருக்கும் தலைமகளது துன்பந்தீர மாலைப் பொழுதில் நம்மனையகத்தே நீண்ட சுவரிடத்தே பொருந்தி வாழும் பல்லி நற்சொற் சொல்லுமா? என வினைவுவதாக அமைந்தது,

"முன்னியது முடித்தனமாயின் நன்னுதல்
வருவம் என்னும் பருவரல் தீரப்
படுங்கொல் வாழி நெடுஞ்சுவர்ப் பல்லி
........................................மாலைச்
சிறுகுடிப் பாக்கத் தெம்பெரு நகரானே" (நற். 169)

எனவரும் நற்றிணைப் பாடலாகும்.

தலைவன் பொருளீட்டி வருதற்குப் பிரிந்தானாக, பிரிவாற்றாது வருந்தும் தலைமகளை நோக்கி ஆறுதல் கூறும் தோழி, மிகவுயர்ந்த புகழ்வாய்ந்த நல்ல மனையின் கண்ணே சுவரிடத்தே பொருந்தியிருக்கும் விரும்பத்தக்க குரலை யுடைய பல்லி அவரை நினைக்குந்தொறும் நள்ளிரவிலும்

நற்சொல் சொல்லுகின்றது; எனவே, அரிய பொருள் கருதிப் பிரிந்த நின் தலைவர் நினது இழையணிந்த தோளை அணையவிரும்பி இங்குவந்து சேர்வர். எனவே நின் மனக்கவலை நீங்குவதாக எனத் தலைமகளை வற்புறுத்துவதாக அமைந்தது முற்சுட்டிய நற்றிணைப் பாடலாகும்.

தலைவன் பொருளீட்டி வருதற்குப் பிரிந்தானாக, பிரிவாற்றாது வருந்தும் தலைமகளை நோக்கி ஆறுதல் கூறும் தோழி, மிகவுயர்ந்த புகழ்வாய்ந்த நல்ல மனையின்கண்ணே சுவரிடத்தே பொருந்தியிருக்கும் விரும்பத்தக்க குரலையுடைய பல்லி அவரை நினைக்குந்தொறும் நள்ளிரவிலும் நற்சொற் சொல்கின்றது; திருந்திய எனவே, அரிய பொருள் கருதிப் பிரிந்த நின்தலைவர் நினது இழையணிந்த தோளை அணைய விரும்பி இங்குவந்து சேர்வர். எனவே நின் மனக் கவலை நீங்குவதாக எனத் தலைமகளை வற்பறுத்துவதாக அமைந்தது,

"அரும்பொருட்கு அகன்ற காதலர் முயக்கெதிர்ந்து
திருந்திழைப் பணைத்தோள் பெறுநர்போலும்
நீங்குகமாதோ நின் அவலம் ஓங்குமிசை
உயர்புகழ் நல்லில் ஒண்சுவர்ப் பொருந்தி
நயவரு குரல பல்லி
நள்ளென் யாமத்துள்ளு தொறும்படுமே" (நற். 333)

எனவரும் நற்றிணைப் பாடற் பகுதியாகும். இங்கெடுத்துக் காட்டிய குறிப்புக்களால் சங்ககாலத் தமிழ் மக்கள் பல்லி சொல்லினை நிமித்தமாகக் கொண்டிருந்தார்கள் என்பது நன்கு புலனாதல் காணலாம்.

வீட்டில் காக்கை கரைந்தால் அன்புடைய விருந்தினர் வருவர் என்பது, தமிழகத்தில் தொன்றுதொட்டு நிலவிவரும் நம்பிக்கையாகும். தன்னால் வளர்க்கப்பெற்ற தலைமகள் தான் விரும்பிய காதலனுடன் உடன் போக்கிற் சென்றாளாக அவளது பிரிவாற்றாது வருந்திய செவிலி, அவள் தன்னுடைய காதலுடன் மீண்டுவருதல் வேண்டும் எனக் காக்கைக்குப் பலிக்கடன் நேர்வதாக உரைப்பது,

"மறுவில் தூவிச் சிறுகருங்காக்கை
அன்புடை மரபின் நின்கிளையொடு ஆரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனை கலத்தின் தருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையொடு
அஞ்சி லோதியை வரக் கரைந்தீமே" (ஐங். 391)

எனவரும் பாடலாகும். "குற்றமற்ற சிறகினையுடைய சிறிய கரிய காக்கையே! வெவ்விய சினத்துடன் பொருது வெல்லும் ஆற்றல்மிக்க வேற்படையினையுடைய வீரனோடு உடன் சென்ற என்மகள் இங்கு மீண்டு வருமாறு அழைப்பாயாக! அவ்வாறு அழைத்தால் பசிய ஊன்பெய்த நிணத்தொடு கலந்த சோற்றினை நின் அன்புடைய சுற்றத்துடன் நீ நிறைய உண்டு மகிழும்படி பொன்னாற் செய்த உண்கலத்திற் பலியாகத் தருவேன்" எனச் செவிலி காக்கையை நோக்கிக் கூறுவதாக அமைந்தது, மேற்காட்டிய ஐங்குறுநூற்றுப் பாடலாகும்.

தலைமகனது பிரிவினால் வருந்திய தலைவியை ஆற்றுவிக்கும் தோழி நம் வீட்டிற் காக்கை கரைதலால் தலைவர் வந்துவிடுவார் எனக் கூறித் தலைவியைத் தேற்றினாள். அந்நிலையிற் பிரிந்த தலைவனும் விரைந்து வந்தான். தனது பிரிவினால் வருந்திய தலைமகளை ஆறுதல் கூறித் தேற்றிய தோழியை நோக்கி 'நீ தலைமகளை நன்கு ஆற்றுவித்தாய்' எனக் கூறிப் பாராட்டினான். அதுகேட்ட தோழி, நின்னை இங்கு வரும்படி அழைத்த காக்கையின் உதவியே பெரிதும் பாராட்டுதற்குரியது என மறுமொழி கூறுவதாக அமைந்தது,

"திண்தேர் நள்ளிகானத்து அண்டர்
பல்லா பயந்த நெய்யிற் றொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெண்சோறு
எழுகலத் தேந்தினும் சிறிது, என் தோழி
பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு
விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே (குறுந். 210)

எனவரும் பாடலாகும். "என்னுடைய ஆருயிர்த்தோழியாகிய

தலைமகளுடைய தோளினை நெகிழ்வித்து வாட்டமுறும்படி செய்த பிரிவுத் துன்பத்தினைப் போக்குதற் பொருட்டு விருந்தாக வந்து சேரும் வண்ணம் தன் குரலால் நின்னை அழைத்த காக்கைக்குப் பலியுணவு தருதல் வேண்டித் திண்ணிய தேரையுடைய நள்ளியென்னும் வள்ளலுக்குரிய கானத்திலே ஆயர்கள் மேய்க்கும் பலவாகிய பசுக்கள் தந்த பாலின் நெய்யினோடு தொண்டியென்னும் ஊர்ப்பக்க முழுவதும் விளைந்த வெண்ணெல்லால் ஆகிய வெண்சோற்றினை ஏழுகலங்களில் வைத்துப் படைத்தாலும் காக்கை செய்த நன்றியை நோக்க அது சிறிய பலியுணவாகவே கருதப்படும்" என்பது இக்குறுந்தொகைப்பாடலின் பொருளாகும். எடுத்துக்காட்டிய இருபாடல்களும், மனைப்பக்கத்தில் உறையும் காக்கை கரைந்தால் அவ் வீட்டிற்கு அன்புடையவர்கள் விருந்தாக வந்து சேர்வார்கள் எனவும் மனையறக் கடமைகளுள் ஒன்றாகிய விருந்தோம்புந் திறத்தில் விருந்தினர் வருவர் என்பதனை முன்னறிந்து அறிவிக்கும் திறம் காக்கைக்கு உண்டெனவும் தனக்குக் கிடைத்த உணவினைத் தான் மட்டும் உண்ணாது, தன் இனத்தையும் அழைத்து உண்ணும் பண்புடைய காக்கைக்குத் தாம் உண்பதன் முன் பலியாக உணவு அளித்தல் வேண்டும் எனவும் தமிழ் முன்னோர் கொண்டிருந்த நம்பிக்கையினை நன்கு புலப்படுத்தல் காணலாம்.

தெய்வம் உறையும் பொதுவிடங்களில் நிகழும் வழிபாட்டில் தரப்படும் பலியுணவினையேற்று உண்ணுதற் குரியது காக்கை யென்பதும் ஊர் மக்கள் தெய்வத்திற்கெனத் தரும் பலியுணவினையுண்ணும் விருப்புடன் தெய்வம் உறையும் ஆல் முதலிய மரங்களின் கிளைகளில் தங்கிய காக்கைகள் பகற்காலத்தில் அங்கு இடப்படும் பலி யுணவினையுண்டு அந்திக் காலத்தில் தத்தம் இருப்பிடங் களைச் சேர்ந்து தம் இனத்தொடுதங்கும் என்பதும்,

> "நெடுவீழிட்ட கடவுளாலத்து
> உகுபலி யருந்திய தொகுவிரற் காக்கை
> புன்கண் அந்திக் கிளையிற் செறியப்
> படையொடுவந்த புன்கண் மாலை" (நற். 343)

எனவரும் நற்றிணைப் பாடற் றொடரால் அறியப்படும்.

கொடிய கண்ணினையும் கூரிய வாயினையும் உடைய பெண்காக்கைகள் பறக்கும் ஆற்றல் பெறாது நடுங்குகின்ற சிறகினையுடைய தம் குஞ்சுகளைத் தழுவிக்கொண்டு தன் இனத்தையழைத்துக் கருங்கண்ணாகிய ஊன்கலந்த பொரிக் கறியுடன் கூடிய செந்நெல்லரிசியாற் சமைக்கப்பெற்ற வெண்ணிறச் சோற்றினைத் தெய்வத்திற்கு இடப் பெறும் பலியுணவுடன் விரும்பியுண்ணுதற் பொருட்டுக் கொழுவி உணவுவளமுடைய நல்ல மனையினருகே கூடியிருக்கும் சிறப்புடையது முதுகுடியிற் பிறந்த அருமன் என்பானுக்குரிய பெருபுகழ் வாய்ந்த சிறுகுடி என்னும் ஊர் என்பது,

"கொடுங்கட் காக்கைக் கூர்வாய்ப்பேடை
நடுங்குசிறைப் பிள்ளை தழீ இக்கிளை பயிர்ந்து
கருங்கட் கருனைச் செந்நெல் வெண்சோறு
சூருடைப் பலியொடு கவரிய குறுங்காற்
கூழுடை நன்மனைக் குழுவின இருக்கும்
மூதில் அருமன் பேரிசைச் சிறுகுடி (நற். 367)

எனவரும் நக்கீரனார் பாடலில் விரித்துரைக்கப் பெற்றது.

குற்றமற்ற கடவுளுறையும் மரத்தில் தங்கிப் பலியுண்டு வாழுமியல்புடைய காக்கை பெருங்காற்றால் மோதப்படும் நீண்ட சினையிடத்தே மழைத்துளி பட ஒடுங்கியுறங்கி வெல்லும் போர் வலிமிக்க சோழர்க்குரிய கழார் என்னும் ஊரிடத்தே தெய்வம் கொள்ளுதற்குரிய நல்ல கூறுபாடுடைய மிக்க பலிக் கொடையோடு சொரியப்படும் அளவில்லாத உணவாகிய அழகிய பல பலபுதுமையுடைய ஊனொடு விரவிய பெருஞ்சோற்றைப் பகற்பொழுதில் உண்ணலாம் என்னும் நினைவுடன் இருந்தன என்பது,

"மாசில் மரத்த பலியுண்காக்கை
வளிபொரு நெஞ்சினை தளியொடு தூங்கி
வெல்போர்ச் சோழர் கழார்க் கொள்ளும்
நல்வகைமிகு பலிக்கொடையொடு உருக்கும்
அடங்காச் சொன்றி யம்பல் யாணர்
விடக்குடைப் பெருஞ்சினையுள்ளுவன விருப்ப
மழைமைந்துற்ற மாலிருள் நடுநாள்" (நற். 281)

எனவரும் பாடலிற் குறிக்கப்பெற்றது.

பலியுணவாகிய சோற்றினை விழுங்கிய கருங்காக்கை மனையைச் சேர்ந்து வளர்ந்துள்ள நொச்சியின் நிழலிடத்தே கிடந்த யாமைப்பார்ப்பினைத் தான் தின்னுதலை வெறுத்து அதனைப் பின் காலத்துத் தின்னுதற்காகப் பாதுகாத்து வைத்தது என்ற செய்தியினை,

> "செஞ்சோற்ற பலிமாந்திய
> கருங்காக்கை கவவு முனையின்
> மனைநொச்சி நிழலாங்கண்
> ஈற்றியாமைதன்பார்ப்போம்பவும்" (பொருந. 184-6)

எனவரும் பகுதியில் முடத்தாமக்கண்ணியார் என்னும் புலவர் தாம் பாடிய பொருநராற்றுப்படையிற் குறித்துள்ளார்.

முரசுடைய முடிவேந்தரும் வேளிராகிய குறுநில மன்னரும் ஒருவர் துணிந்ததே காரியமாக அனைவரும் துணிந்து கடலிலுள்ளனவும் காட்டிலுள்ளனவுமாகிய தம்முடைய அரண்களாற் பாதுகாப்புப் பெறாது நடுங்கும் வண்ணம் மிக்க வலிமிக்கக் கடிய போர் ஆரவாரம் விசும்பு அதிரும்படி சினத்தையெழுப்பி முழுங்கும் மந்திரத்தாலே பொறுத்தற்கரிய பேராற்றலையுடைய அயிரையென்னும் கொற்றவையாகிய கடவுளைப் பேணி வழிபடுதற் பொருட்டு உயர்ச்சியுடையோனாகிய பூசகன்கரிய கண்களையுடைய பேய்மகளும் கைபுடைத்து நடுங்கும்படி தன்கையில் ஏந்திய பெறுதற்கரிய சோற்றுத் திரளையும் எறும்பு மொய்க்காத வியக்கத்தக்க இயல்புடைய குருதியொடு கலந்த நிறைந்த கள்ளொடு பொருந்திய பலியுணவையும் காக்கையும் பருந்தும் இருந்து உண்ணும்படி போர்க்களத்திற் பெருஞ்சோறு உகுத்தற்குப் பல்யானைச் செல்கெழு குட்டுவனது வீரமுரசு போரை விரும்பிய வீரர்களின் இடியோசை போன்ற குரலுடன் பொருந்தி முழங்கப்பெற்றது. இச்செய்தி,

> "பணைகெழு வேந்தரும் வேளிரும் ஒன்றுமொழிந்து
> கடலவுங் காட்டவும் அரண்வலியார் நடுங்க

கடுஞ்சினங் கடாஅய் முழங்கு மந்திரத்து
அருந்திறல் மரபிற் கடவுட் பேணியர்
உயர்ந்தோன் ஏந்திய அரும்பெறற் பிண்டம்
கருங்கட் பேய்மகள் கைபுடையூஉ நடுங்க
நெய்த்தோர் தூஉய நிறைமகிழ் இரும்பலி
எறும்பு மூசா இறும்பூது மரபிற்
கடுங்கட் காக்கையொடு பருந்திருந்து ஆர
ஓடாப் பூட்கை யொண்பொறிக் கழற்கால்
பெருஞ்சமந் ததைந்த செருப்புகல் மறவர்
உருமு நிலனதிர்க்குங் குரலொடு கொளைபுணர்ந்து
பெருஞ்சோறு உகுத்தற்கு எறியும்
கடுஞ்சின வேந்தேநின் தழங்குகுரல் முரசே" (பதிற். 30)

எனப் பாலைக் கௌதமனார் பாடிய பாடலிற் குறிக்கப் பெற்றது. வெற்றிவெல்போர்க் கொற்றவையாகிய அருந்திறற் கடவுள் தனது ஆணையால் தன் பலிகளைப் பேய் தன் கைகளால் தொடாது அஞ்சி நடுங்கும்படியும் எறும்பு மொய்க்காதபடியும் செய்து மேல் தன் அருளாலே போரில் வெற்றியுண்டாவது உறுதியென்பதனை அறிவித்தற்கு நிமித்தமாகக் காக்கையும் பருந்தும் உண்ணும்படி செய்தது என்னும் குறிப்பு இப்பாடலில் இடம் பெற்றிருத்தலைக் கூர்ந்து நோக்குங்கால் பின் விளையவிருப்பதனை முன்னரே அறிவிக்கும் நிமித்தங்களுள் காக்கையும் ஒன்றாகத் தமிழ் முன்னோர் கருதினர் என்பது நன்கு தெளியப்படும்.

ஊர் முனையில் அமைந்த நீர்த்துறையிலே வளர்ந்து வழிப் போவார்க்குத் தடையாகவுள்ள முதிய மரமாகிய கடவுள் மரத்திலே உடன் உறைதலைப் பயின்ற கூகை; இரவுப் பொழுதிலே கூவும் கடுங்குரலோசை கேட்டார்க்கு அச்சந் தருவதாகவும் நள்ளிரவில் உறங்குவோரை நடுங்கியெழும்படி செய்வதாகவும் களவொழுக்கம் ஒழுகும் தலைவனது வருகைக்குத் தடை செய்வதாகவும் அமைந்துள்ள செய்தியினை இரவுக் குறியில் வந்து சிறைப்புறத்தானாகவுள்ள தலைவன் கேட்குமாறு தோழி கூகையை நோக்கிக் கூறும் முறையில் அமைந்தது,

"எம்மூர் வாயில் உண்டுறைத் தடைஇய

கடவுள் முதுமரத் துடனுறை பழகிய
தேயா வளைவாய்த் தெண்கட் கூருகிர்
வாய்ப்பறை யசாஅம் வலிமுந்து கூகை
மையூன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்
எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும்
எஞ்சாக் கொள்கையெங் காதலர் வரல் நசைஇத்
துஞ்சாதலமரு பொழுதின்
அஞ்சுவரக் கடுங்குரல் பயிற்றா தீமே" (நற். 83)

எனவரும் நற்றிணைப் பாடலாகும். இதனைக் கூர்ந்து நோக்குங்கால் ஊனொடு நெய்விரவிச் சமைத்த சோற்றினை எலிக்கறியுடன் கடவுள் மரத்தில் உடனுறையும் கூகை முதலியவற்றிற்குப் பலியாக இட்டுப் படைக்கும் வழக்கம் பண்டைக்காலத்திருந்தமையும் கூகையின் குரல் நன்னிமித்தமாகக் கொள்ளப்பட்டமையும் நன்கு புலனாகும்.

வெட்சி

வேந்தனொருவன் மற்றொரு வேந்தனொடு இகல் கருதிப் போர் செய்ய எண்ணிய காலத்தில் பகைவனது நாட்டில் வாழும் அந்தணர், பெண்டிர், பிணியுடையோர் முதலிய வலியற்றோரை அந்நாட்டினின்றும் அப்புறப் படுத்தல் வேண்டியும் போரால் நேரும் துன்பங்களிலிருந்து தப்பிப் புறத்தே செல்லும் உணர்வில்லாத பசு நிரைகளைத் தன் நாட்டில் கொணர்ந்து காத்தல் வேண்டியும் தன் படைத் தலைவர்களைப் பகைவர் நாடுபுக்கு அந்நாட்டிலுள்ள பசுக் கூட்டங்களை இரவிற் களவிற் கவர்ந்து வருமாறு செய்தல் அறத்தின் வழிப்பட்ட போர்த் தொடக்கமாகக் கருதப் பட்டது. அந்நிலையில் அரசனால் ஏவப்பட்ட படை வீரர்கள் நகரத்தினின்றும் போய் ஒரு சிற்றூரில் தங்கித் தம் வேந்தனுக்கு எதிர்காலத்தில் உளவாகும் ஆக்கத்தை அறிந்துவருதற்பொருட்டு ஊர்ப்புறத்தே இயல்பாகப்

பேசப்படும் நற் சொல்லினைக் கேட்டறிவர். இது விரிச்சியோர்த்தல் எனப்படும். இச்செய்தி 'படையியங்கரவம் பாக்கத்து விரிச்சி' (தொல். புறத். 3) எனவரும் தொல்காப்பியச் சூத்திரத்தில் கூறப்பட்டது. விரிச்சி யோர்த்தல் என்பது பெருமுது பெண்டிராகிய மங்கலமகளிர் நெல்லும் மலரும் தூவித் தெய்வத்தை வழிபட்டு நின்றாராக அந்நிலையில் அவ்வூர்ப் புறத்தே வாழும் மக்கள் தம்மியல்பில் உரையாடும் போது தோன்றிய நற்சொற்களைத் தங்களுடைய வினை முடித்தற்குரிய நன்னிமித்தமாகக் கேட்டறிதலாகும். மங்கல மடந்தையராகிய பெருமுது பெண்டிர் மாலைக் காலத்தே நறுமணம் வாய்ந்த முல்லையின் அரும்பவிழ்ந்த பூக்களை நாழி எனப்படும் முகத்தலளவையாகிய படியிற் கொண்ட நெல்லுடனே தூவித் தாம் வழிபடும் தெய்வத்தை வணங்கி நற்சொல்லை எதிர்பார்த்து நின்றனராக, அந்நிலையில் அங்கு வாழும் ஆயர்குலப் பெண்ணொருத்தி, சிறிய தாம்பிற் கட்டப்பட்ட இளங்கன்று, மேயச் சென்ற தன் தாய்ப் பசு வாராமையால் பாலுண்ணாது பசியாற் சுழல்கின்ற வருத்தத்தைக் கண்டு அக்கன்றினை நோக்கி 'நும்முடைய தாயர் நிரம்பப் புல்லை மேய்ந்து கோல் தாங்கிய கோவலர் பின்னின்று செலுத்த இப்பொழுதே வந்து சேர்வர் எனக் கூறினாள். அச்சொல்லை நற்சொல்லாகக் கேட்டோம். அதனால் நின்னைப் பிரிந்து வினைமேற் சென்ற தலைவர் பகைவரை வென்று வினைமுடித்து விரைவில் வந்து சேர்வார். ஆகவே நின் மனத்தடுமாற்றமாகிய வருத்தத்தைப் போக்குவாயாக' எனத் தலைவனது பிரிவால் இல்லின்கண் இருந்து வருந்தும் தலைமகளை ஆயத்தார் ஆற்றுவித்தனர். இச் செய்தி,

> "......................நெல்லொடு
> நாழி கொண்ட நறுவீ முல்லை
> அரும்பவிழ் அலரி தூஉய்க்கை தொழுது
> பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்
> சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
> உறுதுயர் அலமரல் நோக்கி ஆய்மகள்
> நடுங்குசுவ லசைத்த கையள் கைய
> கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர

இன்னே வருகுவர் தாயர் என்போள்
நன்னர் நன்மொழி கேட்டனம் அதனால்
நல்ல நல்லோர் வாய்ப்புள் தெவ்வர்
முனைகவர்ந்து வருதல் வாய்வது நீநின்
பருவரல் எவ்வம் களை மாயோய்" (முல்லைப். 8-21)

எனவரும் முல்லைப் பாட்டடிகளில் விரித்துரைக்கப் பெற்றது. இவ்வாறு விரிச்சி யோர்த்தலாகிய நம்பிக்கை கடைச் சங்க காலத்தில் நிலைபெற்றிருந்தது என்பது,

'திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப' (நற். 40)

எனவரும் நற்றிணைத் தொடராலும் நன்கு புலனாகும்.

வானத்தில் உள்ள நாள்மீன் கோள் மீன் ஆகியவற்றின் மாறுதல்களால் நாடாள் வேந்தர்க்கும் குடிமக்களுக்கும் நேரவிருக்கும் இன்ப துன்பங்களை முன்னரே கூர்ந்துணர்ந்து இவை நல்லநாள் இவை தீய நாள் எனக் கண்டு முக்கால நிகழ்ச்சிகளையும் முன்னறிந்தறிவிக்கும் சோதிட நூலிலும் ஆந்தை முதலிய புட்களின் குரல், இயக்கம் என்பவற்றிலும் பலகறை முதலியவற்றைக் கொண்டு வருவது உணர்த்தும் பிற நிமித்தங்களிலும் இங்ஙனம் நனவில் நிகழும் நிகழ்ச்சிகளே யன்றிக் கனவில் நிகழும் நிகழ்ச்சிகளிலும் பண்டைக் காலத் தமிழ் மக்கள் அழுந்திய நம்பிக்கை கொண்டிருந்தனர். அத்தகைய நம்பிக்கைகளின் விளைவாக நாட்டுக்கு நேர விருக்கும் இடையூறுகளை முன்னுணர்ந்த புலமைச் சான்றோர் தம் பாட்டின் திறத்தாலே விலக்க முயன்றனர்.

கூடலூர் கிழார் என்னும் புலவர், யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்ற சேர மன்னன் காலத்தில் வாழ்ந்தவர். இவர் காலத்தில் பங்குனித் திங்களின் முதற் பதினைந்தில் கார்த்திகை நாளில் உத்தரம் என்னும் விண்மீன் உச்சியிலிருந்து சாய மூல மீன் எழ மிருகசீரிடம் மறைய விண்ணில் விண்மீன் ஒன்று வடக்கும் கிடக்கும் போகாமல் இடை நடுவே எரிந்து வீழ்ந்தது. அங்ஙனம் வானத்தில் ஒரு மீன் எரிந்து வீழ்தலைக் கண்ட கூடலூர் கிழார் தம் அரசனாகிய யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரல்

இரும்பொறைக்குத் தீங்கு விளையும் என்று தெரிந்து உளந்திடுக்குற்றார். புலவர் அஞ்சியதற்கேற்பவே அற்றைக்கு ஏழாம் நாளில் அவ்வேந்தன் உயிர் நீத்தான். இச் செய்தி கூடலூர் கிழார் பாடிய 226ஆம் புறப்பாடலால் புலனாகின்றது.

நாள், புள் முதலியவற்றின் இயக்கம், குரல் முதலிய நிமித்தங்களை அடிப்படையாகக் கொண்டு எதிர்காலத்தில் நிகழவிருக்கும் செய்திகளை முன்னரே அறிந்து அவற்றுக்குத் தக நடந்து கொள்ளும் சோதிட உணர்வும் அது பற்றிய நம்பிக்கையும் தொல்காப்பியனார் காலம் முதல் தமிழகத்தில் நிலைபெற்று வருகின்றதென்பது,

"அச்சமும் உவகையும் எச்ச மின்றி
நாளும் புள்ளும் பிறவற்றி னிமித்தமும்
காலங் கண்ணிய வோம்படை யுளப்பட
ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பிற்
கால மூன்றொடு கண்ணிய வருமே" (தொல். புறத். 30)

எனவரும் புறத்திணையியற் சூத்திரப்பகுதியாலும்;

"புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற லறியா ஏமக்காப்பினை" (புறம். 20)

எனப் புள்ளைக் குறித்தும்,

"திசையிரு நான்கும் உற்கம் உற்கவும்
பெருமரத், திலையில் நெடுங்கோடு வற்றல் பற்றவும்
வெங்கதிர்க் கனவி துற்றவும் பிறவும்
அஞ்சுவரத் தகுந புள்ளுக்குர லியம்பவும்
எயிறு நிலத்து வீழவும் எண்ணெ யாடவும்
களிறுமேல் கொள்ளவும் காழகம் நீப்பவும்
வெள்ளி நோன்படை கட்டிலொடு கவிழவும்
கனவின் அரிய காணா நனவிற்
செருச் செய் முன்பநின் வருதிறன் நோக்கி
மையல் கொண்ட ஏமமில் இருக்கையர்" (புறம். 41)

எனக் கனவு முதலிய பிற நிமித்தங்கள் பற்றியும் வரும்

புறப்பாடற் பகுதிகளாலும் நன்கு புலனாம். எட்டுத் திசைகளிலும் விண்மீன்கள் எரிந்து வீழ்தலும், பெரிய மரத்தின் கண்ணே இலையில்லாது கிளைகள் பட்டுப் போதலும், கதிரவன் தனக்குரிய திசையியக்கத்திற் பிறழ்ந்து தோன்றுதலும், அஞ்சத் தகுவனவாகிய பறவைகள் குரலெழுப்புதலும் நனவு நிலையிலே தோன்றும் நிமித்தங்கள் எனவும், நிலத்திற் பல் வீழவும் எண்ணெய் தேய்த்துக் கொள்ளவும், பன்றியை வாகனமாகக் கொள்ளவும், உடுத்த ஆடை அவிழவும் படைக்கலம் தானிருந்த கட்டிலுடனே முறிந்து வீழவும் கனாக் காண்டல், கனவில் நிகழும் தீ நிமித்தங்கள் எனவும் மேற்காட்டிய 41ஆம் புறப்பாடலிற் கோவூர் கிழார் குறித்துள்ளமை அவர்கால மக்களது நம்பிக்கைக்கு எடுத்துக் காட்டாக அமைந்துள்ளமை காணலாம்.

நாம் வாழும் உலகினை நடுவாகக் கொண்டு, இதன்மேலும் கீழும் உள்ள உலகங்களைக் கூட்டி மூவகை யுலகம் என வழங்கும் மரபு சங்ககாலத்தில் நிலவியது. நாம் வாழும் நிலையில் நடுநிலைக் கண்ணதாகிய இவ்வுலகின் மேலும் கீழும் எவ்வேழுலகங்கள் உள்ளன எனவும் இவ்வுலகினைச் சேர்த்து ஏழுலகங்கள் நடுவேயுள்ளன எனவும் அக்கால மக்கள் நம்பினர். என்பது,

> "வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
> தெனாஅ துருகெழு குமரியின் தெற்கும்
> குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்
> கீழது, முப்புண ரடுக்கிய முறைமுதற்கட்டில்
> நீர்நிலை நிவப்பின் கீழும், மேலது
> ஆனிலை யுலகத்தானும்" (புறம். 6)

எனவரும் புறப்பாடலாலும் 'வடக்கின் கண்ணது பனிதங்கிய நெடிய இமய மலையின் வடக்கும், தெற்கின் கண்ணது உட்குந் திறம் பொருந்திய கன்னியாற்றின் தெற்கும், கீழ்க்கண்ணது கரையைப் பொருகின்ற, சகரரால் தோண்டப்பட்ட சாகரத்தின் கிழக்கும், மேல் கண்ணது பழைதாய் முதிர்ந்த கடலின் மேற்கும் கீழதாகிய நிலமும் ஆகாயமும் சுவர்க்கமும் என மூன்றுங் கூடிய புணர்ச்சியாக

அடுக்கப்பட்ட அடைவின்கண் முதற் கட்டாகிய நீர் நிலைக்கண் ஓங்கிய நிலத்தின் கீழும், மேலதாகிய கோலோகத்தின் கண்ணும்' எனவரும் அதன் உரையாலும் இனிது புலனாகும். இவ்வாறு நடுவும் கீழும் மேலும் ஒரோவென்று எழுவகைப்பட்ட மூன்றுலகம் உண்மை,

> "மூவே ழுலகம் உலகினுள் மன்பதும்
> ஆயோய்" (மூன்றாம் பரிபாடல் 9. 10 அடிகள்)

எனவும்,

> "இருநிழல் படாமை மூவேழுலகம்
> ஒருநிழலாககிய ஏமத்தை மாதோ" (மேலது. 75, 76)

எனவும்,

> "நின்மருங்கின்று மூவேழுலகமும்" (பரி. 13 : 23)

எனவும் வரும் பரிபாடற் பகுதிகளால் இனிது விளங்கும்.

## கூற்றம்

சங்கச் செய்யுட்களில் கூற்றுவனைக் குறிக்கும் பாடல்கள் மிகதியாக உள்ளன. காலன், மடங்கல், ஞமன், மறலி ஆகிய சொற்கள் கூற்றத்தைக் குறித்து வழங்குகின்றன. உடம்பையும் உயிரையும் கூறுபடுத்துப் பிரித்துவைக்கும் தெய்வ ஆற்றல் கூற்றம் என்னும் பெயரால் வழங்கப்படுவதாயிற்று. இவ்வுலகில் உடம்பும் உயிரும் வேறு வேறு தன்மையன எனவும் ஐம்பெரும் பூதங்களாலாகிய இவ்வுலகத்துப் புல் முதல் மக்களீறாகவுள்ள பல்வேறு உயிர்த்தொகுதிகளும் யாக்கை, இளமை, நுகர்ச்சி முதலிய பல திறத்தானும் நிலையாமை உடையனவாக இவ்வுலகம் அமைந்துள்ளது எனவும் தமிழ் முன்னோர் தம் வாழ்வியல் அனுபவத்தில் கண்டுணர்ந்தனர். 'பல்லாற்றானும் நில்லாவுலகம்' என்றார் தொல்காப்பியனார். அறிதற்றன்மையும் நிலைபேறும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற உயிர்த்தொகுதியும் அவ்வுயிர்களின் நிலைக்களமாய் அறிவின்மையும் நிலையாமையும் உடையனவாகிய பல்வேறு உடம்புகளும் தம்முள் வேறுபட்ட இயல்பினவாகும். எல்லாக் காலத்தும் உயிர்கள்தாம் பெற்றுள்ள ஒரே உடம்புடன் தொடர்ந்து

நிலைத்திருத்தல் இல்லை. உயிர்கள் தம் வாழ்க்கை நுகர்ச்சிக்கெனப் பெற்றுள்ள உடம்புகளினின்றும் அவற்றின் நுகர்ச்சிக்காலம் முடிந்த பின்னர் அவ்வுயிர்களைக் கூறுபடுத்துப் பிரிக்கும் தெய்வ ஆற்றலே கூற்றம் எனப்படும். இத்தகைய கூற்றத்தின் ஆற்றலைத் தடுத்து நிறுத்தும் ஆற்றலுடையோர் மன்னுயிர்த் தொகுதியில் ஒருவரும் இலர். இதுபற்றியே 'மாற்றருங் கூற்றம்' என அடை புணர்த்தினார் தொல்காப்பியர். மாற்றருங் கூற்றம் உயிர்கவருந்தனது தொழிலை யாவராலும் மாற்றுதற்கு அரிய ஆற்றலுடையது என்பதாம். உடம்பையும் உயிரையும் கூறு படுத்துதலால் கூற்றம் எனவும் உயிர்களது வினை நுகர்ச்சியின் முடிவாகிய காலம் அறிந்து செயல்படுதலால் காலன் எனவும் உடம்பொடு கூடி வாழ்வியலில் படரும் உயிரை அதன் ஆற்றல் ஒடுங்குமாறு உடம்பினின்றும் பிரித்துத் தொழிலின்றி மடங்கியொடுங்கச் செய்தலால் மடங்கல் எனவும் உயிர்கள்பால் விருப்பு வெறுப்பின்றி நடுநிலையில் நின்று உடம்பினின்றும் உயிரைப் பிரித்தலாகிய தன் தொழிலைச் செய்தலால் ஞமன் எனவும் எத்தகைய ஆற்றல் உடையராயினும் அவர்களொடு முரண்பட்டு அவர் உயிரைப் பிரித்தலின் மறலி எனவும் சங்க இலக்கியங்களில் கூற்றம் குறிக்கப்பெற்றுள்ளது.

உயிர் தான் பெற்றுள்ள உடம்பினின்றும் பிரியுங் காலத்தைச் சாதல் எனவும் மற்றோர் புது உடம்பிற் புகும் நிலையைப் பிறத்தல் எனவும் இங்ஙனம் சாதற்கும் பிறத்தற்கும் காரணமாயமைந்தது அவ்வுயிர்கள் உடம்பொடு கூடி நின்ற காலத்துச் செய்த நல்லனவும் தீயனவுமாகிய வினைத் தொகுதி எனவும் தமிழ் முன்னோர் உயிர்களின் வாழ்வியல் நுட்பங்களை நுனித்து உணர்ந்தனர். அவ்வுணர்வின் பயனாக ஓர் உயிர் தான் பெற்றுள்ள உடம்போடு உலகம் உள்ளவரை நிலைத்திருத்தல் இயலாது என்பதும் வினைப்பயனுக்குத்தக அவ்வுயிரை உடம்பினின்றும் வேறுபடுத்தும் கூற்றம் உண்மை பொய்யன்று என்பதும் ஆகிய உண்மையினைத் தம் உள்ளத்துத் தெளிந்தனர். இவ்வுண்மை,

"வீயாது உடம்பொடு நின்ற உயிரும் இல்லை
மடங்கல் உண்மை மாயமோ அன்றே" (புறம். 363)

எனவரும் ஐயாதிச் சிறுவெண் டேரையார் வாய்மொழியால் நன்குணரப்படும்.

இவ்வாறு உயிர்கள் செய்த வினையின்மேலிட்டு நடுநிலையில் நின்று அவ்வுயிரை உடம்பினின்றும் பிரிக்கும் கூற்றத்தின் செயலைத் தடுக்கவல்லார் எவரும் இலர் என்பது,

"மாற்றருஞ் சீற்றத்து மாயிருங் கூற்றம்" (பதிற். 51)

"கூற்றத் தன்ன மாற்றரு முன்பின்" (புறம். 362)

எனவரும் தொடர்களால் வலியுறுத்தப்பெற்றமை காணலாம்.

மேற்குறித்த கூற்றத்தின் செயலை மாற்றுதற்குரிய மருந்து வேறில்லை என்பது,

"மருந்தில் கூற்றத்து அருந்தொழில்" (புறம். 3)

எனவரும் தொடரால் புலனாம்.

கணிச்சி என்னும் கூரிய மழுப்படை கொண்டு உயிர்களைக் கவரும் திறத்தில் கண்ணோட்டமோ, நயமோ காட்டுதலின்றி வெம்மை மிக்க சினத்துடன் காலம் பார்த்துத் தன் தொழிலை நிறைவேற்றுதல் கூற்றத்தின் இயல்பு. இவ்வுண்மை,

"கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்
பிணிக்குங் காலை இரங்குவிர்" (புறம். 195)

"காலன் என்னும் கண்ணிலி" (புறம். 240)

"நயனில் கூற்றம்" (புறம். 227)

"வெந்திறற் கூற்றம்" (புறம். 238)

"காலனும் காலம் பார்க்கும்" (புறம். 41)

எனவரும் தொடர்களால் புலப்படுத்தப் பெற்றுள்ளமை

காணலாம்.

உடம்பினின்றும் உயிரைப் பிரிக்கும் ஆற்றலைக் கூற்றம் என்ற பெயரால் தொல்காப்பியனார் குறித்தார். அவர் குறித்த கூற்றத்தை அவருக்குப் பின் வந்த சான்றோர், காலன், மடங்கல், ஞமன், மறலி எனப் பல்வேறு காரணப் பெயரிட்டு வழங்கினர். இங்ஙனம் கூற்றுக்குப் பல பெயர்கள் வழங்கிய நிலையில் தலைமையுடையதும் அதன் ஏவல் செய்வதும் எனக் கூற்றத்தின் ஆற்றலை இருவகையாகப் பகுத்துரைக்கும் மரபு இடம் பெறுவதாயிற்று.

'தாமா இருவரும் தருமனும் மடங்கலும்' எனவரும் பரிபாடல் (3) அடியில் குறிக்கப்பெற்ற தருமன் என்பானைத் தலைமையுடைய யமன் எனவும் மடங்கல் என்பதனை அவனது ஏவல் செய்யும் கூற்றம் எனவும் கொள்வர் பரிமேலழகர்.

'மடங்கல் போற் சினைஇ மாயஞ் செய்யவுணரை' எனவரும் தொடரில் உள்ள மடங்கல் என்னும் சொல்லுக்குக் கூற்று எனப் பொருள் கொண்டார் நச்சினார்க்கினியர். ஒடுக்கம் என்ற பொருளில் உள்ள மடங்கல் என்னும் இச்சொல் யமனுக்கு ஏவல் செய்யும் கூற்றம் என்ற பொருளினும் கலித்தொகையில் (150 ஆம் பாடல்) ஆளப் பெற்றுள்ளது. தருமனாகிய இயமனுக்கும் அவனது ஏவல் செய்யும் கூற்றத்திற்கும் இடையேயுள்ள இத்தொடர்பினை,

> "சாற்று நாளற்றதென்று தருமராசற்காய் வந்த
> கூற்றினை" (4 . 49. 2)

எனவரும் திருநாவுக்கரசர் திருநேரிசைத் தொடரால் இனிதுணரலாம். உடம்பினின்றும் உயிரைப் பிரிக்கும் தெய்வ ஆற்றலைக் கூற்று எனவும் காலத்தால் தூண்டப்பட்டுக் கூற்றுவனது ஏவல் செய்யும் துணையாற்றலைக் காலன் எனவும் கொள்ளுதல் தகும். இங்ஙனம் உடம்பினின்றும் உயிரைப் பிரித்தற்குத் துணை செய்வது, காலக் கடவுளாகிய இறைவன் கையின் கண்ணதாய் ஊழி முடிவின்கண் அவன் ஏவலால் உயிர்த்திறமேல் திரியும் கணிச்சியாகும். இந்நுட்பம்,

"மடங்கலும் கணிச்சியும் காலனுங்கூற்றும்
தொடர்ந்து செல்லமையத்துத் துவன்றுயிருணீஇய
உடங்கு கொட்பனபோல்" (கலி. 105)

எனவரும் கலித்தொகைத் தொடராலும், "சால நிறைகின்ற பல்லுயிர்களை உண்ண வேண்டி ஊழித்தீயும் கணிச்சியும் காலனும் கூற்றுவனும் அவ்வுயிர்களை விடாமற் செல்கின்ற ஊழி முடிவாகிய காலத்தே அவை தேயச் சுழன்று திரியுமாறு போல" எனவும் "முன் இறைவன் கையதாய் ஊழி முடிவின்கண் அவன் ஏவலால் உயிர்த்திற மேற்செல்லும் கணிச்சி, காலன், கூற்றுவன் ஏவலாளன்" எனவும் இத்தொடர்க்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை விளக்கத்தாலும் நன்கு புலனாதல் காணலாம்.

உயிர்கள் வினைப்பயன்களாகிய இன்ப துன்பங்களைப் பொருந்துதல் முறைமையாகிய ஊழின்வழி புறத்தே நின்று உயிரைக் கொண்டு போதல் கூற்றத்தின் செயலாகும். இச்செய்தி,

"உறுமுறை மரபிற் புறநின்றுய்க்கும்
கூற்றத் தனையை" (புறம். 98)

எனவரும் புறப்பாட்டுத்தொடரால் உய்த்துணரப்படும். இதன்கண் 'உறுமுறை மரபு' என்றது, உயிர்கள் தாம் செய்த நன்றும் தீதுமாகிய இருவினை காரணமாக இன்பமும் துன்பமுமாகிய பயன்களை நுகர்ந்து கழிக்குமாறு செய்யும் முறைமையாகிய ஊழினை. இவ்வூழின் வழி நின்றே கூற்றம் தன் தொழிலை நிகழ்த்தும் என்பது 'உறுமுறை மரபிற் புறனின் றுய்க்கும் கூற்றம்' என அடை கொடுத்தோதிய அதனால் இனிது புலனாதல் காணலாம்.

உடம்பொடு கூடிவாழும் உயிர் தனக்கு நிலைக்களமாயிருந்த உடம்பைவிட்டு நீங்குமாறு செய்தல் கூற்றத்தின் தொழிலாகும். இவ்வுலகில் உடம்பைவிட்டு உயிர் நீங்குதலாகிய சாதலைக் காட்டிலும் உயிர்க்குத் துன்பந்தரும் நிகழ்ச்சி பிறிதொன்றில்லையென்பது 'சாதலின் இன்னாதது இல்லை' எனவரும் தெய்வப் புலவர் வாய்மொழியால் நன்கு

தெளியப்படும். அத்தகைய பெருந்துன்பத்தை விளைவிப்பது கூற்றுவனின் தொழிலாதலின் உலகில் நல்லறஞ் செய்தோரது உயிரைக் கூற்றங்கவர்ந்த நிலையில் நல்லோர் பிரிவால் அல்லலுற்ற சான்றோர்கள் தம்முள்ளத்தெழுந்த துன்ப மிகுதியால் 'அறனில் கூற்றம்' (புறம். 237), 'நனிபேதையே நயனில் கூற்றம்' (புறம். 227) என்றாங்குக் கூற்றத்தின் செயலை இகழ்ந்துரைத்தலும் உண்டு.

கூற்றத்தினைக் குறித்து வழங்கும் பெயர்களுள் ஒன்றாகிய மடங்கல் என்னுஞ் சொல் புறத்தே தோன்றிய பொருள் மீண்டும் அகத்தே ஒடுங்குதல் என்ற பொருளில் இறைவன் செய்யும் ஒடுக்கம் என்னும் தொழிலைச் சுட்டிய இயற்பெயராய் அவ்வொடுக்கத்தின் ஒரு பகுதியாய் உடம்பினின்றும் உயிரைப் பிரித்தலாகிய தொழிலை நிகழ்த்தும் கூற்றத்திற்கு ஆகுபெயராயிற்று. முதலாம் பரிபாடலில்,

> "ஐந்தலை யுயரிய அணங்குடை யருந்திறல்
> மைந்துடை யொருவனுமடங்கலும் நீ"

எனவரும் தொடரில் 'மடங்கல்' என்னும் சொல் சிவபெருமான் செய்தருளும் தொழில்களுள் ஒடுக்கமாகிய அழித்தற்றொழிலைக் குறித்து நின்றது. இத்தொடரில் 'ஐந்தலையுயரிய அணங்குடையருந்திறல் மைந்துடை ஒருவன்' என்பதற்கு 'ஐந்துதலையைத் தோற்றுவித்த அருந்திறலையுடைய ............ஈசன்' எனவும் 'மடங்கல்' என்பதற்கு 'அவனினாகிய உலகுயிர்களின் ஒடுக்கம்' எனவும் பரிமேலழகர் விளக்கம் தந்துள்ளார். இதனைக் கூர்ந்து நோக்குங்கால் மடங்கல் என்னும் சொல், உலகினைத் தோற்றுவித்துப் பல்லுயிர்க்கும் ஏற்ற உடம்பினைப் படைத்தளித்த இறைவன், உலகுயிர்களாகிய அவற்றை மீளவுந் தன்கண் ஒடுங்கச் செய்தலாகிய ஒடுக்கத்தைக் குறித்து நின்றதென்பது நன்கு விளங்கும். எனவே உலகுயிர்களை முற்ற ஒடுக்குதலாகிய மகா சங்காரத் தொழிலை நிகழ்த்து பவன் ஐம்முகக் கடவுளாகிய சிவபெருமானே என்னும் கொள்கை திருமாலடியார்களாலும் ஏற்றுக் கொள்ளப்

பெற்றுத் தமிழகத்தில் நிலவிய பொதுமையுடையதென்பது நன்கு புலனாதல் காணலாம்.

கணிச்சியென்னும் மழுப்படை சிவபெருமானுக் குரியது எனவும் அப்படையினால் நிகழ்த்தப்படும் ஒடுக்கத்தின் உயிர்களது வினைநுகர்ச்சி முடிவு பெறும் காலம் வந்துழி அம்முறையின் வழி நின்று உடம்பினின்றும் உயிரைப் பிரிக்கும் தெய்வ ஆற்றலைக் காலன் எனவும் முழுமுதற் கடவுளாகிய இறைவனுக்குரிய கணிச்சிப்படை காலனது தொழிற்கும் உறுதுணையாய் நிற்கும் எனவும் தமிழ் முன்னோர் கருதினர். உலகுயிர்கள் அனைத்தையும் பேரூழிக் காலத்தில் தன்கண் ஒடுக்கிக் கொள்ளுதலால் மகா சங்காரணன் எனப்படும் சிவபெருமான் பதிற்றுப்பத்துக் கடவுள் வாழ்த்துப் பாடலிற் 'காலக்கடவுள்' எனப் போற்றப் பெற்றுள்ளமையும் இக்கருத்துப் பற்றியே யாகும்.

## வினைக் கொள்கையும் மறுபிறப்பும்

உலகில் உடம்புடன் கூடிவாழும் உயிர்கள் கூற்றுவனால் உடம்பினின்றும் நீங்கிய நிலையில், அவ் வுயிர்கள் முன் உடம்பொடு கூடியிருந்த காலத்திற் செய்த நன்றும் தீதுமாகிய வினைகாரணமாகப் பிறிதோ ருடம்பினைப் பெற்று மீளவும் பிறக்கும் என்பது தென்குமரி வடவிமயமாகிய எல்லையுட் பட்ட பாரத நாட்டில் வாழும் அனைவரும் தொன்றுதொட்டு உடன்பட்டுத் தம் வாழ்வியலிற் கடைப்பிடித்து வரும் பொதுக் கருத்தாகும். உடம்பொடு கூடி வாழும் மக்கட் குலத்தார் தாம் பெற்ற மனவுணர்வின் பயனாக எல்லாவுயிர்க்கும் நல்லனவே செய்தல் வேண்டும் என்பதும் எவ்வுயிர்க்குந் தீங்கு செய்தல் ஆகாது என்பதும் இவ்வுலகில் நல்லன செய்தோர் அதன் பயனாக வானுலகில் இந்திரன் முதலிய இமயவர் பதங்களைப் பெற்று இன்பம் நுகர்வர் என்பதும் அல்லன செய்தோர் அதன் பயனாக மீளுதற்கரிய நரகமாகிய நிரயத்தினை யடைந்து துன்பம் நுகர்வர் என்பதும் வினைப்பயனாகிய அந்நுகர்ச்சி முடிந்தபின்னர் எஞ்சிய வினையின் காரணமாக உலகில் மீளப்பிறப்பர் என்பதும் சங்ககாலத் தமிழ் மக்கள்

தெளிந்துணர்த்திய வாழ்வியற் கோட்பாடுகளாகும். உயிர்கள் இப்பிறப்பிற் செய்த நல்லதன் நலனும் தீயதன் தீமையும் ஆகிய வினைப் பயன்களை இப்பிறப்பில் நுகராது போனால் இனி வரும் பிறப்புக்களிலாயினும் நுகர்ந்தே கழித்தல் வேண்டும் என்னும் வினைக் கொள்கையினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியதே மறுபிறப்புண்மை யென்னும் கோட்பாடாகும். இக்கொள்கை சங்ககாலத்தில் வாழ்ந்த தமிழக மக்கள் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளக் கூடிய பொதுக் கொள்கையாய் நிலவியது. எனினும் இக் கொள்கையினையுடன்படாது முரணிய கோட்பாடுடையார் சிலரும் அக்காலத்திருந்தனர். இங்ஙனம் மறுபிறப்புண்மை யினை யுடன்படாமையினைச் சங்ககாலச் சான்றோர்கள் ஒரு பெருங் குற்றமாகக் கருதவில்லை. ஆனால் உலக வாழ்க்கையில் ஒருவர்தாம் நல்வினைகாரணமாக இன்பத்தையும் தீவினை காரணமாகத் துன்பத்தையும் உறுதியாக நுகர்ந்தே தீர்வர் என்னும் வாழ்க்கை நியதியாகிய வினைக் கொள்கையினை மறுத்துத் தம் மனம் போனவாறு விரும்பியன செய்து திரிவாராயின் அவரது ஒழுகலாற்றினால் மக்கள் வாழ்க்கையின் கட்டுக்கோப்புக் குலையும். அதனால் அரசியல் நெறிமுறையும் நாட்டு மக்களது நல்வாழ்வும் சிதைந்து கெடும். எனவே வினைக் கொள்கையாகிய வாழ்வியல் முறைமையினை மறுத்துத் தம் மனம்போனவாறு ஒழுகும் தீயோராகிய சிற்றினத்தாரைச் சேர்ந்தொழுகுதல் கூடாது எனவும் தீவினை புரிந்தோரை ஒறுத்தலும் நல்லறம் புரிவோரைப் பாதுகாத்தலும் ஆகிய நெறிமுறைமையிற் சோர்வுபடாது ஆட்சி புரிதல் வேண்டும் எனவும் சங்ககாலத் தமிழ்ச் சான்றோர் வேந்தர்க்கு அறிவுறுத்தி வந்தனர். இச்செய்தி,

> "கொடியோர்த் தெறுதலும் செவ்வியோர்க் களித்தலும்
> ஒடியாமுறைமையின் மடிவிலையாகி
> நல்லதன் நலனுந் தீயதன் தீமையும்
> இல்லையென்போர்க்கினனாகிலியர்" (புறம். 29)

எனச் சோழன் நலங்கிள்ளியை நோக்கி உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடிய புறப்பாடற் பகுதியில் இடம் பெற்றுள்ளமை காண்க.

உலக வாழ்க்கையினை வெறுத்து உயர்ந்த நற்பொருளையே சிந்தித்து வடக்கிருந்த வேந்தர் பெருமானாகிய கோப்பெருஞ்சோழன் தன் வாழ்க்கையின் பயனாகத் தெளிந்துணர்ந்த நற் பொருள்களை உலக மக்களுக்கு உணர்த்துவதாக அமைந்தது,

"செய்குவங் கொல்லோ நல்வினை யெனவே
ஐய மறாஅர் கசடீண்டு காட்சி
நீங்கா நெஞ்சத் துணிவில் லோரே
யானை வேட்டுவன் யானையும் பெறுமே
குறும்பூழ் வேட்டுவன் வறுங்கையும் வருமே
அதனால், உயர்ந்த வேட்டத் துயர்ந்தி சினோர்க்குச்
செய்வினை மருங்கி னெய்த லுண்டெனிற்
றொய்யா வுலகத்து நுகர்ச்சியுங் கூடும்
தொய்யா வுலகத்து நுகர்ச்சி இல்லெனின்
மாறிப் பிறப்பினின்மையும் கூடும்
மாறிப் பிறவா ராயினும் இமயத்துக்
கோடுயர்ந் தன்ன தம்மிசை நட்டுத்
தீதில் யாக்கையொடு மாய்தறவத் தலையே" (புறம். 214)

எனவரும் புறப்பாடலாகும்.

உலகியல் வாழ்வில் சிறியனசிந்தியாது உயர்ந்த குறிக்கோளுடையராய் நல்லறம் செய்தலே மனனுணர்விற் சிறந்த உயர்திணை மாந்தர்க்குரிய வாழ்வியல் நோக்கமாக வேண்டும் என வற்புறுத்தும் நிலையில் இப்புறப்பாடல் அமைந்துள்ளமை அறியத்தகுவதாகும்.

அழுக்குச் செறிந்த புல்லறிவு நீங்காத உள்ளத்தினை யுடைய தெளிவில்லாத மக்கள் அறவினையைச் செய்வோமோ அன்றிச் செய்யாது விடுவோமோ என்று கருதி அறத்தின் பயன் விளைவில் தாம் கொண்ட ஐயப்பாட்டின் நீங்காதவராய்க் குறிக்கோளின்றித் தம் வாழ்நாளை வீணாக்குவர். உயர்ந்த குறிக்கோளுடையனாய் யானை வேட்டைக்குப் போவோன் யானையையும் எளிதாகப் பெறுவான். அங்ஙனம் வேட்டத்தில் உயர்ந்த நோக்கமின்றிக்

காடை வேட்டைக்குச் செல்வோன் அதனைப் பெறாது வறுங்கையினனாயும் திரும்புவான். அதனால் உயர்ந்த விருப்பத்தை உடைய பெரியோர்க்குத் தம்மாற் செய்யப்படும் நல்வினைப் பகுதியில் அதனை அனுபவித்தல் உண்டாயின் அவருக்கு இருவினையும் செய்யப்படாத தேவர் உலகத்தின் கண் இன்பம் நுகர்தலும் கூடும். அவ்வுலகத்தின்கண் நுகர வேண்டிய வினைப்பயன் தீர்ந்து இல்லாது ஒழியுமானால் அதனினும் மேலாக மீண்டும் பிறவாமையாகிய பேரின்பம் பெறுதலும் கூடும். உயிர்கள் இவ்வுலகில் எடுத்துள்ள இவ்வொரு பிறவியேயன்றி மீளப் பிறத்தல் இல்லை என மறுபிறப்பினை உடன்படாதவர் கூறினும் அன்னோர் அறத்தின்பயன் இதுவென்று நேரிற் கண்டுதெளியுமாறு இமயமலையின் சிகரம் போன்ற தமது புகழை இவ்வுலகில் நிலைபெறுத்திப் பழியில்லா உடம்பொடு கூடிநின்று சாதல் மிகவும் சிறப்புடையதாகும். ஆகவே, எந்தவகையால் ஆராய்ந்து பார்ப்பினும் நல்லறங்களைச் செய்தல் ஒருவர்க்குப் பொலிவினைத் தருதல் உறுதி என்பது இப்புறப்பாடலிற் பொதிந்துள்ள உண்மையாகும்.

இதனால் இவ்வுலகில் உயிர்கள் செய்த நல்வினை அவ்வுயிர்களைத் தொடர்ந்து மறபிறப்பினும் சென்று பயனளிக்கும் எனவும் மறுபிறவி இல்லையென்பார் உளராயினும் அவர்களும் அறத்தின் பயனை இப்பிறவி ஒன்றில் வைத்து அறத்தின் பயனை உணரும்படி அறவினை தன்னைச் செய்தோர்க்குப் பயன் அளிக்கும் எனவும் வேந்தர் பெருமானாகிய கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து தன் உயிர் துறக்குங்காலத்து உலக மக்களுக்கு அறிவுறுத்திய மெய்யுணர்வுத் திறம் சான்றோர்களால் வியந்து பாராட்டத் தகுவதாம்.

மறுபிறப்பு உண்டு என்னும் கொள்கை தமிழ் மக்களது மாறாத நம்பிக்கையாகும் என்பதனை வற்புறுத்தும் சங்கப் பாடல்கள் பலவுள்ளன.

“இம்மைச் செய்தது மறுமைக்காம்”        (புறம். 134)

எனவும்,

"சாதல் அஞ்சேன், அஞ்சுவல் சாவிற்
பிறப்புப் பிறிதாகுவதாயின்
மறக்கு வென்கொல் என் காதலன் எனவே" (நற். 397)

எனவும்,

"இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியாரன் கணவனை
யானா கியர்நின் நெஞ்சநேர் பவளே" (குறு. 49)

எனவும் வரும் சங்கப் பனுவற் பகுதிகள் மறுப்பிறப்பு உண்டு என்பதில் பண்டைத் தமிழ் மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையை நன்கு புலப்படுத்தல் காணலாம்.

## நடுகல் வழிபாடு

தாம் வாழும் நாட்டின் அரசியல் ஆட்சிமுறையினைப் பாதுகாக்கும் உயர்ந்த குறிக்கோளுடன் தமது இனியவுயிரையும் பொருட்படுத்தாமல் பகைவரொடு பொருது உயிர்துறந்த நறுகண் மறவர்களைத் தெய்வமாகப் பேணி அவர்தம் பெயரையும் பெருமையையும் இல்லிற் பொறித்து, அக்கல்லினைத் தெய்வமாக நிறுத்தி வழிபடும் நடுகல் வழிபாடு ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்திலேயே தமிழகத்திற் சிறந்து விளங்கியதென்பது முன்னர்க் குறிக்கப் பெற்றது. இவ்வழிபாடு சங்கச் செய்யுட்களிற் பலவிடங்களில் விரித்துரைக்கப் பெற்றுள்ளது. நடுகல் வழிபாடு பற்றிய நிகழ்ச்சிகளைக் கூர்ந்து நோக்குங்கால் சங்கத் தொகை நூல்கள் இயற்றப்பெற்ற காலம், தமிழகத்திற் பலவிடங் களிலும் மிகுதியாகப் போர்கள் நிகழ்ந்த காலம் என்பது உய்த்துணரப்படும்.

தம்முடன் முரண்பட்டாரொடு போர்நிகழ்த்த எண்ணிய மன்னர்கள் அவர் நாட்டின் மேற் படையெடுத்துச் செல்வதற்கு முன், அந்நாட்டில் வாழும் பசுநிரைகளுக்கும் பெண்டிர் பிணியாளர் அந்தணர் முதலிய எளியோர்க்கும் போரினால் தீங்கு நேராத வண்ணம், அவர்களை அந்

நாட்டினை விட்டு அப்புறப்படுத்துதற்குரிய முன்னறிவிப் பாகப் பகைவர் நாட்டிலுள்ள பசுக் கூட்டங்களை நள்ளிரவிற் கவர்ந்து வரும்படி, தம் படைவீரர்களை ஏவுதல் அறத்தின் வழிப்பட்ட போர்த் தொடக்கமாகத் தமிழ் மக்களாற் கொள்ளப்பட்டது. இவ்வாறு வேந்தனால் ஏவப்பட்ட படைவீரர்கள் தமது ஒழுகலாற்றுக்கு அடையாளமாக வெட்சிப் பூவினைச் சூடிக்கொண்டு நள்ளிரவிற் பகைவர் நாட்டின் எல்லையுட் புகுந்து அங்குள்ள பசுநிரைகளைக் களவினாற் கவர்ந்துகொண்டு வருதல் போர்த்தொடக்க மாகிய வெட்சித் திணையாகக் கொள்ளப்பட்டது. இங்ஙனம் நாடாளும் வேந்தனது ஆணையின்றிச் சுரத்திடையே வாழும் ஆறலை கள்வர்கள் நள்ளிரவில் ஊருட் புகுந்து பசுநிரை களைக் கொள்ளையடித்துச் செல்லுதலும் உண்டு.

இவ்வாறு ஊர் மக்கள் சோர்வுற்று உறங்கும் நள்ளிரவிலே பகைவருடைய படைவீரர்களாலும் ஆறலை கள்வர்களாலும் தம்மூரிலுள்ள பசுநிரைகள் களவிற் கவரப்பட்டுச் செல்லும்போது அவர்களை வழிமறித்துப் பசுநிரைகளை விரைந்து மீட்டுக் கொணர்தல் அந்நாட்டில் வாழும் தறுகண் வீரரது தலையாய கடமையாயிற்று. தம் ஊரவர் உடைமையாகிய பசுக்களைப் பகைவரிடமிருந்து மீட்டுக் கொணர்தற்குச் செல்லும் வீரர்கள் கரந்தைப் பூவினை அடையாளமாகச் சூடிச்செல்வர். அதுபற்றி அவர்கள் ‘கரந்தை மறவர்’ என அழைக்கப்பட்டனர். தம் நாட்டுப் பசுக்கூட்டத்தினை மீட்டுக் கொணர்தற் பொருட்டுப் பகைவரொடு பொருது உயிர் துறந்த மறவரது பெயரும் பீடும் பொறித்து நடப்பட்ட நடுகல்லின்மேல், அந்நாட்டு வீரர் அனைவரும் மாலையும் மயிற் பீலியும் அணிந்து தோப்பி நெல்லாற் செய்த கள்ளுடன் துரு வென்னும் ஆட்டினையும் பலிகொடுத்துத் தெய்வமாக்கி வழிபடுவர். இச்செய்தி,

> “முன்னூர்ப் பூசலிற் றோன்றித் தன்னூர்
> நெடுநிரை தழீஇய மீளி யாளர்
> விடுகணை நீத்தந் துடிபுணையாக
> வென்றி தந்து கொன்றுகோள் விடுத்து

வையகம் புலம்ப வளைஇய பாம்பின்
வையெயிற் றுய்ந்த மதியின் மறவர்
கையகத் துய்ந்த கன்றுடைப் பல்லான்
நிரையொடு வந்த வுரைய னாகி
உரிகளை யரவ மானத்தானே
அரிதுசெல் லுலகிற் சென்றனன்; உடம்பே
கானச் சிற்றியாற் றருங்கரை காலுற்றுக்
கம்பமொடு துளங்கிய இலக்கம் போல
அம்பொடு துளங்கி யாண்டொழிந் தன்றே;
உயரிசை வெறுப்பத் தோன்றிய பெயரே
மடஞ்சால் மஞ்ஞை யணிமயிர் சூட்டி
இடம்பிறர் கொள்ளாச் சிறுவழிப்
படஞ் செய் பந்தர்க்கள் மிசையதுவே" (புறம். 260)

எனவும்,

"நாகு முலையன்ன நறும்பூங் கரந்தை
விரகறியாளர் மரபிற் சூட்ட
நிரையிவட் டந்து நடுகல் லாகிய
வென்வேல் விடலை" (புறம். 261)

எனவும் வரும் புறப்பாடல்களால் இனிது புலனாம்.

மிக்க அணிமையையுடைய ஊர் முன்னாகச் செய்யப் பட்ட போரின் கண்ணே தோன்றித் தன்னுடைய ஊரின்கண் மிக்க பசுநிரையைக் கவர்ந்து கொண்ட வெட்சி மறவர் எய்த அம்பு வெள்ளத்தைத் தன்னுடைய துடியே புணையாகக் கொண்டு கடந்து பகைவரைக் கொன்று அவர்கொண்ட ஆனிரையை மீட்டு, உலகம் ஒளியின்றிப் புலம்பப் பாம்பின் வாய்ப்பாட்டுப் பின்னர் அப்பாம்பின் கரிய எயிற்றினின்றும் பிழைத்துப் போந்த திங்களைப் போல வெட்சி மறவர் கையினின்றும் பிழைத்துப் போந்த கன்றையுடைய பலவாகிய பசுக் கூட்டத்துடனே மீண்ட புகழையுடையனாகிச் சட்டை கழற்றிய பாம்புபோலச் செல்லுதற்கரிய உயர்ந்த தேவ ருலகத்தின்கண் போயினான்; அவனது உடம்பு காட்டிலே

சிறிய ஆற்றங்கரையிற் பெருங்காற்றால் நடுங்கிச் சாய்ந்த இலக்கமாகிய மரக்கம்பத்தினையொப்ப அம்புகளால் துளைக்கப்பட்டு வீழ்ந்தது; உயர்ந்த புகழ வடிவினனாகிய அவ்வீரனது பெயரோ, புடவையாற் செய்யப்பட்ட பந்தர்க் கீழ் மயிற்பீலி சூட்டப்பட்ட நடுகல்லின் மேலது என்பதும், "நாகினது முலையன்ன நறிய பூவினையுடைய கரந்தையை அறிவுடையோர் சூட்டும் முறையிலே சூட்டப் பசுநிரையை இவ்வூரில் மீட்டுத் தந்து நடப்பட்ட கல்லாகிய வென்றி வேலையுடைய தலைவன்" என்பதும் மேற்குறித்த புறப்பாடற் றொடர்களின் பொருளாகும்.

இங்ஙனம் நிரை மீட்டற் பொருட்டுப் பகைவரொடு பொருது உயிர் துறந்த வீரர்களது பெயரும் பீடும் பொறித்து நடப்பட்ட கல்லினைத் தெய்வமாகக் கொண்டு வழிபடும் வழிபாடு தமிழக மெங்கும் பரவித் தொன்றுதொட்டு நிலைபெற்று வருவதாகும். வீரர்களுக்கு நடப்படும் இந்நடுகல் பலரும் செல்லும் வழியினையொட்டி நடப் பெறும் என்பதும், அங்ஙனம் நடப்பட்ட கல்லினைப் பாணர் முதலிய வழிச் செல்வோர் பலரும் வழிபட்டுச் செல்லுதல் கடனென்பதும், அங்ஙனம் நடுகல்லைத் தொழுதுபோகவே நடத்தற்கியலாத கொடுங்கானம் மழைபெய்தலாற் குளிரும் என்பதும்,

> "பெருங்களிற் றடியிற் றோன்றும் ஒருகண்
> இரும்பொறை யிரவல சேறியாயின்
> தொழாதனை கழித லோம்புமதி வழாது
> வண்டுமேம்படூஉம் இவ் வறநிலையாறே
> பல்லாத் திரணிரை பெயர்தரப் பெயர்தந்து
> கல்லா விளையர் நீங்க நீங்கான்
> வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்
> கொல்புனற் சிறையின் விலங்கியோன் கல்லே"
>
> (புறம். 263)

எனவரும் புறப்பாடலாற் புலனாம். நடுகல்லைத் தெய்வமாகக் கொண்டு தொழுதல் வேண்டும் என்னும் இப்புறப்பாடலை யடியொற்றியமைந்தது "கைவண் குருசில்

கற்கை தொழூஉச் செல் பாண, தெய்வமாய் நின்றான் திசைக்கு" (பு. வெ. மா. 252) எனவரும் புறப்பொருள் வெண்பாமாலைத் தொடராகும்.

பருக்கைக் கற்கள் நிரம்பிய வழியிடத்தே வீரருடம்பை யடக்கஞ் செய்து அங்கே அவர்தம் பெயர் பொறித்த கல்லை நட்டு மரல் நாரால் தொடுக்கப்பட்ட சிவந்த பூவையுடைய கண்ணியுடனே அழகிய மயிலினது பீலியையும் சூட்டி வழிபடுவர் (புறம். 264). மறக்குடியிற் பிறந்த மகளிர் தம் குடியிற்றோன்றிப் போரிற் பகைவரைப் புறங்கண்டு இறந்துபட்ட வீரர்களுக்கென நடப்பட்ட நடுகல்லினைத் தெய்வமாகக் கொண்டு வழிபட்டு விருந்தினரை ஓம்பும் நிலையில் தம்மனை வாழ்க்கை பெறவும், தம் கணவன் பகைவரை வென்று சிறக்கவும் அத் தெய்வத்தினை வேண்டிக் கொள்ளுதல் உண்டு. இச் செய்தி,

> "களிறு பொரக்கலங்கு கழன்முள் வேலி
> அரிதுண் கூவல் அங்குடிச் சீறூர்
> ஒலிமென் கூந்தல் ஒண்ணுதல் அரிவை
> நடுகற் கை தொழுதுபரவும் ஒடியாது
> விருந்தெதிற் பெருகதில் யானே என்னையும்
> . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . வேந்தனோடு
> நாடுதரு விழுப்பகை யெய்துக வெனவே" (புறம். 306)

எனவரும் புறப்பாடலில் இடம் பெற்றுள்ளமை காணலாம். போர் மறவர்கள் வாழும் சிற்றூர்களில் ஊர்ப்புறத்தே நடப்பெற்ற நடுகற்களுக்கு நாள்தோறும் நன்னீராட்டி நாட்பலியூட்டி நறும்புகை காட்டிச் செய்யும் வழிபாட்டின்கண் நெய்யுடன் கலந்து புகைத்து நறும்புகை வானிற் பரவி ஊரின் தெருக்களெல்லாம் கமழும்படி சிறப்பாக நிகழ்த்தப் பெற்றது. இச்செய்தி,

> "இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
> புடைநடு கல்லின் நாட்பலியூட்டி
> நன்னீராட்டி நெய்ந் நறைக் கொளீஇய
> மங்குல் மாப்புகை மறுகுடன் கமழும்

அருமுனை யிருக்கை" (புறம்.329)

எனவரும் புறப்பாட்டடிகளாற் புலனாகின்றது. மறக்குடியிற் பிறந்தார் அனைவரும் இத்தகைய நடுகல் வழிபாடு ஒன்றினையே தமக்குச் சிறந்த தெய்வ வழிபாடாகக் கொண்டு வாழ்ந்தனர் என்பது,

"ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவினல்லது
நெல்லுகுத்துப் பரவும் கடவுளும் இலமே" (புறம். 335)

எனவரும் புறப்பாட்டடிகளால் நன்கு தெளியப்படும்.

போரில் உயிர்கொடுத்துப் புகழ்கொண்ட தறுகண் மறவர்களின் பெயரும் பெருமையும் கல்லிற் பொறித்து அக்கல்லினை நட்டுத் தெய்வமாக நிறுத்தி அவ்வீரனுக்குரிய கிடுகினையும், வேலினையும் அக்கல்லின் பக்கத்தே ஊன்றி, நடுகல்லின்மேல் மயிற்பீலியைச் சூட்டி, துடியென்னும் சிறுபறையினை முழக்கித் தோப்பி நெல்லாற் செய்த கள்ளினையும் ஆட்டுக் குட்டியினையும் பலியாகக் கொடுத்து அதிரல் பூக்களைத் தூ வி மறவர்கள் வழிபடுவரென்பது,

"வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும்
போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரம்" (அகம். 35)

எனவும்,

"கிடுகுநிரைத் தெஃகூன்றி
நடுகல்லின் அரண்போல" (பட்டினப். 78, 79)

எனவும் வரும் தொடர்களாலும் நன்கு விளங்கும்.

இங்ஙனம் வீரர்களைத் தெய்வமாகக் குறித்த நடுகற்கள் போர்நிகழ்ந்த இடங்களிலும், சிற்றூர்ப்

புறத்தேயும், சுரங்களிலும், காடுகளிலும் பலரும் போக்கு வரவு புரியும் சிறுவழிகளிலும், பெருவழிகளிலும் வழிச் செல்வார்க்கு நிழல்தரும் நிலையில் நெடுங்கல்லாக நடப்பெற்றன என்பது,

> "விழுத் தொடை மறவர் வில்லிட வீழ்ந்தோர்
> அழுத்துடை நடுகல்" (ஐங். 352)

எனவும்,

> "பலர்க்கு நிழலாகி யுலகமீக் கூறுாத்
> தலைப் போகன்மையிற் சிறுவழி மடங்கி
> நிலைபெறு நடுகல்லாகிய கண்ணும்" (புறம். 223)

எனவும்,

> "எழுத்துடை நடுகல் இன்னிழல் வதியும்
> அருஞ்சுரக் கவலை" (அகம். 53)

எனவும்,

> "நடுகற் பிறங்கிய உவலிடு பறந்தலை" (புறம். 314)

எனவும்,

> ' பெயரும் பீடும் எழுதி யதர் தொறும்
> பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்
> வேலூ ன்றுபலகை வேற்றுமுனை கடுக்கும்
> வெருவரு தகுந கானம்" (அகம். 131)

எனவும் வரும் சங்கச் செய்யுட் பகுதிகளால் இனிது விளங்கும்.

வீரர்களின் பெயரும் பெருமையும் பொறித்துத் தெய்வமாக நடப்பட்ட நடுகல்லின் பெருமையுணராத ஆறலைகள்வர் தம்முடைய அம்புகளை அந்நடுகல்லின் மேல் வைத்துத் தீட்டுவதால் அக்கல்லும் தேய்ந்து அதன்கண் பொறிக்கப்பட்ட எழுத்துக்களும் தேய்ந்தொழிதல் உண்டு. அந்நிலையின் வழிச் செல்வோர் நடுகல்லிற் பொறிக்கப் பெற்ற எழுத்துக்களைப் படித்து நடுகல்லாகிய ,வீரனது

பெருமையை அறிய முயல்வர். அங்கு அமைதியாக நின்று படித்துணர விரும்புவோர் தாம் செல்லும் சுரத்தில் ஆறலை கள்வரால் தமக்கு நேரும் துன்பத்தையெண்ணிக் கல்லெழுத்தினைப் படித்துணரும் தம் முயற்சியைக் கைவிட்டு விரைந்து செல்லுதலும் உண்டு. இச்செய்தி,

"கடுங்கண் மறவர் பகழி மாய்ந் தென
மருங்குல் நுணுகிய பேஎமுதிர் நடுகற்
பெயர் பயம் படரத் தோன்று குயிலெழுத்து
இயைபுடன் நோக்கல் செல்லா தசைவுடன்
ஆறுசெல் வம்பலர் விட்டனர் கழியும்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
வெருவரு கானம்" (அகம். 297)

எனவரும் அகப்பாடற் பகுதியால் உய்த்துணரப்படும்.

நடுகல்லாகிய வீரர்களின் மனைவியர் தம் கணவரது பிரிவாற்றாமையால் நெஞ்சங் கலங்கிப் புலம்பி கூந்தல் களைந்து அணிகலன்களைக் கழித்துத் தம் கணவரைத் தெய்வமாகக் கொண்டு கைம்மை நோன்பு நோற்பர் என்பது,

"நிரையிவட் டந்து நடுகல்லாகிய
வெல்வேல் விடலையின்மையிற் புலம்பிக்
கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய
கழிகல மகடூஉப் போல" (புறம். 261)

எனவரும் புறப்பாடற் பகுதியாற் புலனாம்.

காட்டில் வாழும் யானை வழியிடையே நெடிதாக நடப்பெற்ற நடுகல்லினை ஆளென மயங்கித் தன் கால்களால் உதைத்து நகங்கள் சிதையுற்ற செய்தி,

"அத்த நடுகல் ஆளென வுதைத்த
கான யானை கதுவாய் வள்ளுகிர்
இரும்பனை யிதக்கையின் ஒடியும்" (அகம். 365)

எனவரும் அகப்பாடற் பகுதியிற் குறிக்கப்பட்டது.

நடுகல்லில் வீரனைத் தெய்வமாக நிறுத்தி நீராட்டுதலின், அந்நீர், தெய்வத்திருவுருவத்திற்கு ஆட்டிய திருமஞ்சன நீர்போலத் தீர்த்தநீராகக் கருதப்பெற்றது. இச் செய்தி,

"பல்லா பெயர்த்து நல்வழிப் படர்ந்தோன்
கல்சொரிந் தாட்டிய நீரே தொல்லை
வான் வழங்கு நீரினுந் தூய்தே யதனாற்
கண்ணீ ரருவியுங் கழீஇத்
தெண்ணீ ராடுமின் தீர்த்தமா மதுவே"

(தொல். புறத். சூ. 5)

எனவரும் நச்சினார்க்கினியர் உரை மேற்கோளால் நன்கு விரித்துரைக்கப் பெற்றமை காணலாம்.

இவ்வாறு தம்மூர்ப் பசுநிரையை மீட்டற் பொருட்டும் தம் நாடுகாத்தற் பொருட்டும் பகைவரோடு பொருது உயிர் துறந்த வீரர்களுக்கு நடுகல் அமைக்கப்பட்டமை போன்று, உலகத்து மக்கட்பண்பு நிலைபெற்று வளர்தல் வேண்டும் என்னும் உணர்ந்த குறிக்கோளுடன் உண்ணா நோன்பினை மேற்கொண்டு வடக்கிருந்து உயிர் துறந்த சான்றோர் களுக்கும் நடுகல் நிறுத்தி தெய்வமாகக் கொண்டு வழிபடும் வழக்கமும் சங்ககாலத்தில் நிலை பெற்றிருந்தது. உண்ணா நோன்பினை மேற்கொண்டு வடக்கிருந்து உயிர் துறந்த கோப் பெருஞ் சோழனுக்கு நடுகல் அமைக்கப் பெற்றிருந்தமையும், அவருடைய ஆருயிர் நண்பராகிய பொத்தியார் நடுகல்லாகி யும் தமக்கு இடங்கொடுத்த கோப்பெருஞ்சோழனை நெஞ்சம் நெகிழ்ந்து போற்றிய செய்தியும்.

"கெடுவில் நல்லிசை சூடி
நடுகல்லாயினன் புரவலன்" (புறம். 221)

எனவும்,

"பலர்க்கு நிழலாகியுலக மீக் கூறித்
தலைப் போகன்மையிற் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுகல்லாகியக் கண்ணும்
இடங்கொடுத்தளிப்ப மன்ற வுடம்போ

டின்னுயிர் விரும்புங் கிழமைத்
தொன்னட்புடையோர் தம்முழைச் செலினே"
(புறம். 223)

எனவும் வரும் பொத்தியார் வாய்மொழிகளால் நன்கு விளங்கும். வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து தம்புகழ் நிறுவி உயிர்துறந்த சான்றோராகிய ஆடவர்க்குப் போலவே கற்புக் கடம் பூண்டு உயிர்துறந்த பத்தினிப் பெண்டிராகிய மகளிர்க்கும் நடுகல் நிறுத்தி வழிபடும் மரபு பண்டைக் காலத்தில் நிலைபெற்றிருத்தல் வேண்டும் எனக் கருத வேண்டியுளது. சேரமன்னனாகிய செங்குட்டுவன் கற்புடைத் தெய்வமாகிய கண்ணகிக்கு இமயமலையிற் கல்லெடுத்துத் கங்கையாற்றில் நீர்ப்படை செய்து அக்கல்லிற் படிமம் அமைத்து வஞ்சி நகரத்திற் பத்தினிக் கோட்டம் அமைத்துக் கடவுள் மங்கலம் செய்தமை இளங்கோவடிகளால் சிலப்பதிகாரம் வஞ்சிக் காண்டத்தில் விரித்துரைக்கப் பெற்றது. இந்நிகழ்ச்சி வையத்து வாழ்வாங்கு வாழ்ந்தோர் உலக மக்களால் கல்வடிவில் தெய்வமாக நிறுத்தி வழிபடப் பெறும் மெய்ம்மையினை விளக்குவதாகும்.

தொல்காப்பியனார் காலத்தில் இறந்தோர் பெயரும் பீடும் கல்லிற் பொறித்து அக்கல்லினைத் தெய்வமாகக் கொண்டு வழிபடும் நிலையிலிருந்த நடுகல் வழிபாடு கடைச் சங்க காலத்தில் பெரும் பொருளை நினைந்து வடக்கிருந்து உயிர்துறந்த வேந்தர்க்கும் புலமைச் சான்றோர்க்கும் உரியதாயிற்று. இக்காலத்திலேயே கணவனுடன் உயிர்துறந்த கற்புடை மகளிர்க்கும் கல்நட்டு வழிபடும் முறையும் தோன்றி நிலைபெற்றது. இவ்வாறு தறுகண் வீரர்க்குரியதாய்த் தோன்றிய நடுகல் வழிபாடு முறையே வேந்தர்க்கும் சான்றோர்க்கும் பத்தினிப் பெண்டிர்க்கும் துறவியர்க்கும் உரியதாக வளர்ச்சி பெற்றது.

சோழ மன்னர்களில் அரிஞ்சயன் முதலியோர்க்கு அமைக்கப்பட்டுள்ள பள்ளிப்படைக் கோயில்கள் பண்டைக் கால நடுகல் வழிபாட்டினை அடியொற்றியமைந்தனவாகவே கொள்ளத்தக்கன. இக்கோயில்களில் நிறுவப்பெற்ற

சிவலிங்கங்கள், வையத்துப் புகழுடன் வாழ்ந்த மனிதன் இவன் என அவனுடைய பெயரும் பெருமையும் கூறும் நடுகல் என்ற அளவில் அமையாது, மனிதனாக வாழ்ந்தவன் சிவபரம்பொருளுடன் இரண்டறக் கலந்து தெய்வமாகத் திகழ்கின்றான் என்ற சமயத்தத்துவ வுண்மையைப் புலப்படுத்தும் முறையில் வளர்ச்சி பெற்றுள்ள திறம் இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத்தகுவதாகும்.

தமிழின மக்களிடையே இறந்தோர்க்குச் செய்யும் இறுதிச் சடங்குகளில் நெடுங்காலமாக நிலைபெற்று வருவது கரும முடிவிற் கல்நிறுத்தி நீர்ப்படை செய்யும் இறுதிச் சடங்காகும். இது தமிழ் முன்னோர் மேற்கொண்டு நிகழ்த்திய நடுகல் வழிபாட்டினைப் பின்வரும் வழிமுறை யினர்க்கும் நினைவுபடுத்தும் முறையில் தொடர்ந்து நிகழ்ந்து வருகின்றதென்பதனைத் தமிழகத்தின் தொன்மை வரலாற்றின் தொடர்புணர்ந்தோர் அனைவரும் ஏற்றுக் கொள்வர் என்பது திண்ணம்.

தறுகண் வீரர்களுக்குக் கல் நிறுத்தி வழிபடும் வீரர் வழிபாடு சிற்றூர்கள் தோறும் நிலைபெற்றிருந்தமை சங்க இலக்கியங்களால் நன்கு புலனாகின்றது. இவ்வீரர் வழிபாட்டினைத் தவிரப் பிற்காலத்தில் ஊர்தோறும் நிலைபெற்றுள்ள கிராம தேவதையெனப்படும் சிறுதெய்வ வழிபாடுகளைப் பற்றிய குறிப்புக்கள் எவையும் சங்கச் செய்யுட்களிற் காணப்படவில்லை.

தம் குடியில் இறந்த வீரர்களைத் தெய்வமாகக் கொண்டு கல்நிறுத்தி வழிபடும் முறையிற் பொதுவாகக் குறிக்கப்படும் வீரர் வழிபாடே பிற்காலத்தில் தோன்றி அருஞ்செயல் புரிந்து ஆங்காங்கே புகழுருவில் நிலவிய மதுரைவீரன் முதலிய வீரர் பலருடைய சிறப்புப் பெயர்களால் பலவாக விரிவு பெற்றது.

தமிழ் மறவர்கள் வீரம் வேண்டி வழிபட்ட தாய்த் தெய்வமாகிய கொற்றவை வழிபாடே, தீயோரை ஒறுக்கும் பேயினைச் சுற்றமாகக் கொண்ட காளி, ஊரெல்லையைக் காக்கும் பிடாரி எனப் பல்வேறு பெயர்களாற் குறிக்கப்

பெறுவதாயிற்று. அருமழை தரல் வேண்டில் தரவல்ல ஆற்றல் வாய்ந்த பத்தினிப் பெண்டிர் வழிபாடு பிற்காலத்தில் எழுவர் நங்கையர் (சத்தமாதர்) வழிபாடாகவும்,மாரியம்மை முதலிய அன்னை வழிபாடாகவும் பல்வே வழிபாடுகளாக விரிவுபெற்றது.

சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் சிறப்பிடம் பெற்றுள்ள சாத்தன் வழிபாடு சங்கச் செய்யுட்களிற் காணப்படவில்லை. சாத்தன் என்ற சொல் முற்காலத்தில் பிறநாடுகளிற் சென்று வணிகம் புரிவார்க்கு உதவியாக வேந்தர்களால் அனுப்பப்பெற்ற வீரர்திரளின் தலைவனைக் குறித்து வழங்கும் பெயராகும். நாட்டில் வணிகர் கூட்டத்தார் மன்னனால் நன்கு மதிக்கப்பெற்ற காலத்திலே வீரர் வழிபட்டினையடுத்துச் சிறப்பாக வணிகச் சாத்தின் தலைவனாகிய வீரனைப் பிடாரி முதலிய ஊர்க்காவற் றெய்வங்களுள் ஒன்றாகக் கொண்டு கோயிலமைத்து வழிபடும் வழக்கம் நாளடைவில் தோன்றி நிலைபெறுவதாயிற்று.

தொடக்க காலத்தில் சமய வேறுபாடின்றிச் சமணர் புத்தர் முதலியோராலும் வேத வழிப் பட்டோராலும் வழிபடப் பெற்ற சாத்தன் என்னுந் தெய்வம் வேத முதலிய மகா சாத்திரங்களை யுணர்ந்தோன் என்ற முறையில் சைவ வைணவ சமயத்திற்குரியதாகிப் பிற்காலத்தில் திருமாலையும் சிவனையும் தாயுந் தந்தையுமாகக் கொண்டு பிறந்தருளியவன் (அரிகரபுத்திரன்) ஐயனார் என்னும் புராணக் கதையினையும் பெற்றுச் சிற்றூர்கள் தோறும் நிலைத்த இடத்தினைப் பெற்றுவிட்டது.

> "*சாத்தன் என்ற தெய்வம் சங்க காலத்தில் இந்துமத தெய்வமாக இருந்திருக்கவில்லை. பிடவூரிலிருந்த அறச்சாத்தன் என்ற தெய்வம் சேக்கிழார் காலத்தில் சைவர்களின் தெய்வமாக இந்து மத தெய்வ வரிசையில் இணைக்கப்பட்டது*"[1]

என்பாரும் உளர். 395ஆம் புறப்பாடலிற் கூறப்படும் பிடவூர்

1. பி. எல். சாமி, *தமிழிலக்கியத்தில் தாய்த் தெய்வ வழிபாடு*, ப. 13.

அறப் பெயர்ச் சாத்தன் என்பவன் வள்ளலாவன். சாத்தன், கொற்றன், சாத்தி, கொற்றி என்பன, தமிழகத்தில் பொதுப் பெயர்களாக வழங்கப் பெறுவன. இவற்றுள் சாத்தன் என்ற பெயர் ஒரு தெய்வத்தைக் குறித்த பெயராகச் சங்க இலக்கியத்தில் இடம்பெறவில்லை. வணிகச் சாத்தின் தலைவனாக வீரச் செயல் புரிந்து நாட்டினைக் காத்தமையால் போரில் உயிர்துறந்த சாத்தன் என்னும் தலைவனைத் தெய்வ நிலையில் வைத்து மக்கள் வழிபடும் நிலை யேற்பட்டது. அதனால் சாத்தன் என்னும் தெய்வம் ஊர் காவல் தெய்வங்களுள் ஒன்றாக மதிக்கப்பெற்று எல்லைத் தெய்வமாக ஆயிற்று. சாத்தன் என்னும் இப்பெயர் மக்கட்குரிய இயற்பெயராகவும், தெய்வப் பெயர்களை மக்களுக்கு இட்டு வழங்கும் நிலையில் அமைந்த தெய்வப் பெயராகவும் வழங்கப் பெறுவதாயிற்று. எனவே 395ஆம் புறப்பாடலிற் குறிக்கப்பட்ட பிடவூர் அறப்பெயர்ச் சாத்தனாகிய சங்ககால வள்ளலும், கி.பி. 8ஆம் நூற்றாண்டினராகிய சேரர் காவலர் விண்ணப்பஞ்செய்த திருவுலாப் புறத்தைக் கயிலையிற் கேட்டுப் பாரில் வேதியர் திருப்பிடவூரில் வெளிப்படப் பகர்ந்த மாசாத்தனார் ஆகிய தெய்வமும், காலத்தாலும் பிற சூழ்நிலையாலும் தம்முள் வேறுபட்டவர்கள் என்பது தெளிவு.

தொன்று தொட்டு ஊர்காவற்றெய்வமாகப் போற்றப் பெறும் ஐயனாருக்குப் பொதுவாக, அமைக்கப்பட்ட கோயிலே புறம்பணையான் வாழ்கோட்டம் எனச் சிலப்பதிகாரத்திற் குறிக்கப்பட்டது. இனி ஊரையொட்டிய பலவேறு தெய்வக் கோட்டங்கட்கு இடையே புகாரில் அமைக்கப்பெற்ற சிறப்புடைத் தனிக் கோயிலே பாசண்டச் சாத்தன் கோயிலாகும். பாசண்டம் என்பதற்குப் 'பலசமயத் தருக்கக் கோவை' எனப் பொருளுரைப்பர் சிலப்பதிகார உரையாசிரியர். பாசண்டச் சாத்தன் மகாசாத்திரன். மகாசாத்திரனை 'மகா சாத்தா' எனவும் வழங்குவர். பாசண்டம் என்பதற்குப் 'பாஷாண்டம்' எனப் பொருள் கொள்ளுதல் தவறு. சிலப்பதிகாரத்திற் கூறப்படும் பாசண்டச் சாத்தன் மறையவர் குடியிற் பிள்ளையாய் வளர்ந்து தேவந்தி என்னும் மங்கையை மணந்து அவளால் வழிபடப் பெற்ற

வைதிக சமயத் தெய்வம் எனக் கொள்ளுதலே பொருத்த முடையதாகும். ஊர் காவற்றெய்வமாகிய சாத்தன் முதலாக சிற்றூர் மக்களால் வழிபடப் பெறும் சிறு தெய்வ வழிபாடுகள் அனைத்தையும் ஒருங்கிணைத்து 'ஒன்றே குலனும் ஒருவனே தேவனும்' என்னும் பெருந்தெய்வ வழிபாட்டினை உருவாக்கும் நிலையில், காடு கிழாள் (காடுகாள்) முதலிய தாய்த் தெய்வங்களை இறைவனுக்குச் சத்தியாகவும் சாத்தன் முதலிய காவற்றெய்வங்களை இறைவனுக்கு மக்களாகவும் இணைத்த நிலையில், அவை முழுமுதற் பொருளைச் சார்த்தி வழிபடப்பெறும் சார்புநிலைத் தெய்வங்களாயின எனக் கருத வேண்டியுளது.

> *"இன்று கிராமங்களிற் காணப்பெறும் ஐயனார் வழிபாட்டில் பழங்குடி மக்களின் சாதவாகனன் வழிபாடும் பௌத்த சைனரின் சாத்தன் வழிபாடும், சைவரின் சிவபெருமான் மகனின் வழிபாடும் கலந்திருப்பதைக் காண்கின்றோம்"*[2]

என்பர். இவ்வாறு கூறுவதை விடத் தமிழ்நாட்டில் முற்காலத்தில் எல்லைத் தெய்வமாக அமைக்கப் பெற்ற சாத்தன் வழிபாடு சமய வேறுபாடின்றிப் புத்தர் சமணர் முதலிய எல்லா மக்களாலும் மேற்கொள்ளப்பெற்றதெனவும், அது கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்குப் பின் தமிழகத்தின் பெருந்தெய்வ வழிபாடுகளாகிய சிவ வழிபாட்டுடனும், திருமால் வழிபாட்டுடனும் இணைக்கப் பெற்றதெனவும் கொள்ளுதலே ஏற்புடையதாகும்.

சிவபெருமானுக்கு மூத்த புதல்வராகிய யானைமுகப் பிள்ளையார் வழிபாடு சங்கச் செய்யுட்களில் இடம் பெறவில்லை. அதனைப் போன்றே எல்லைத் தெய்வமாகிய சாத்தனார் வழிபாடும் இடம்பெறவில்லை. சங்ககாலத்தில் உயிர்ப்பலியிட்டு வணங்கும் முறையில் நிலவிய காளி யென்னும் அன்னை வழிபாட்டையும் கற்புடைத் தெய்வ மாகிய பத்தினி வழிபாட்டையும் நடுகல் நிலையில் வழிபடப் பெற்ற வீரர் வழிபாடுகளையும் மூலமாகக் கொண்டே

2. பி. எல். சாமி, *தமிழிலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு*, ப. 37.

தமிழகத்தில் சிற்றூர்கள் தோறும் பிடாரி, மாரி, மாடன், வீரன் முதலிய சிறு தெய்வ வழிபாடுகள் காலந்தோறும் பலவாக விரிந்து தத்துவ வுணர்வு நிரம்பாத பொதுமக்கள் பலராலும் போற்றப்பெறும் பொதுமை நிலையினை எய்தியிருத்தல் வேண்டுமெனத் தெரிகிறது.

பத்துப்பாட்டு எட்டுத் தொகையாகிய சங்க இலக்கியங்கள் மக்களது வாழ்வியலில் அகமும் புறமும் ஆகிய ஒழுகலாற்றைக் குறித்துப் பாடப்பெற்றனவாயினும், மக்கள் வாழ்விற்கு இன்றியமையாத தெய்வ உணர்வையும், வழிபாட்டு நெறிகளையும் ஆங்காங்கே குறித்துச் செல்லக் காண்கின்றோம். பத்துப்பாட்டின் முதற் கண்ணதாகிய திருமுருகாற்றுப்படை குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகப் பொருமானிடத்து அன்பர்களை ஆற்றுப்படுத்தும் நிலையில் அமைந்தது. இதனைப் பாடிய மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் இப்பாடலில் கடவுள், உயிர், உலகம் என்னும் முப்பொருள் பற்றிய உண்மைகளைக் குறிப்பிற் புலப்படுத்தியுள்ளமை கூர்ந்து உணரத் தகுவதாகும். பத்துப்பாட்டின் ஏனைய ஒன்பது பாடல்களிலும் தெய்வ வழிபாடு பற்றிய குறிப்புக்கள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. எட்டுத்தொகையுள் நற்றிணை, குறுந் தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு ஆகிய வற்றின் கடவுள் வாழ்த்தாக அமைந்த பெருந்தேவனார் பாடல்களும், கலித்தொகைக் கடவுள் வாழ்த்தாக நல்லந்துவனார் பாடிய பாடலும், பதிற்றுப்பத்துக் கடவுள் வாழ்த்தாகத் தொல்காப்பிய உரையிற் காணப்படும் பாடலும் சிவன், முருகன், திருமால் ஆகிய தெய்வங்களைப் போற்றிப் பரவுவனவாக அமைந்துள்ளன. மேற்குறித்த கடவுள் வாழ்த்துப் பாடல்களையன்றி அகத்திணை, புறத்திணை ஒழுகலாறுகளை விரித்துரைக்கும் இத்தொகைநூற் செய்யுட்களிலே பண்டைக் காலத் தமிழ் மக்கள் மேற் கொண்டொழுகிய தெய்வ வழிபாடுகள் பற்றிய குறிப்புக்கள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

முக்கட் செல்வனாகிய இறைவன், சேயோனாகிய முருகன், கண்ணனும் பலதேவனும் என இரு பெருந்

தெய்வமாக வைத்தெண்ணப்படும் மாயோன், அவனது உந்தித் தாமரையில் தோன்றிய நான்முகன், மாயோன் மகனாகிய காமன், ஆயிரம் கண்ணோனாகிய இந்திரன் ஆகிய தெய்வங்களின் திருமேனி வண்ணமும், அவர்தம் ஊர்தியும், கொடியும், படையும், தாரும் முதலியன பற்றிய குறிப்புக்கள் புறநானூறு, கலித்தொகை ஆகிய தொகை நூல்களில் உவமை வாயிலாக விரித்துரைக்கப்பெற்றுள்ளன. சிவனுடைய ஆற்றலாகிய உமை, கொற்றவை, திருமாலின் தேவியாகிய திருமகள், முருகன் தேவியராகிய வள்ளி, தெய்வயானை ஆகிய தெய்வங்களைப் பற்றிய குறிப்புக்களும் சங்கச் செய்யுட்களில் இடம் பெற்றுள்ளன.

எட்டுத் தொகை நூல்களுள் ஒன்றாகிய பரிபாடல் "இன்னியல் மாண்தேர்ச்சி இசைப் பரிபாடல்" எனக் குறித்தவண்ணம் இயலிசைப் பாடல்களாகப் பாடப்பெற்று இசை வல்லோரால் பண்ணமைக்கப்பெற்ற இசைத் தமிழ் இலக்கியமாகும். எழுபது பரிபாடல்களால் இயன்ற இத்தொகை நூலில் திருமாலைப் போற்றிப் பாடிய பாடல்கள் எட்டும், செவ்வேளைப் போற்றிப் பாடிய பாடல்கள் முப்பத்தொன்றும், காடுகிழாளாகிய கொற்றவையைப் போற்றிப் பாடிய பாடல் ஒன்றும் தமிழ் வையைப் புனலாடல் விழாவினைப் புனைந்து போற்றும் பாடல்கள் இருபத்தாறும், தமிழ் நிலைபெற்ற மதுரையம் பதியினைப் போற்றும் பாடல்கள் நான்கும் அமைந்திருந்தன. இச்செய்தி,

> "திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
> தொருபாட்டுக் காடுகாட் கொன்று - மருவினிய
> வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
> செய்யபரி பாடற் றிறம்"

எனவரும் பழைய வெண்பாவாற் புலனாகும். தெய்வத்திறம் போற்றும் தோத்திரப் பனுவலாகக் கடைச் சங்கத்தார் தொகுத்த எழுபது பரிபாடல்களில் இக்காலத்தில் முழுமையாகக் கிடைப்பன இருபத்திரண்டு முழுப் பாடல்களும், உறுப்புக்களாகக் கிடைத்த சில பாடல்களின் பகுதிகளுமே யாகும்.

திருமாலிருஞ்சோலையிற் கோயில் கொண்டருளிய காத்தற் கடவுளாகிய திருமால், திருப்பரங்குன்றத்திற் கோயில் கொண்டருளிய குறிஞ்சிக் கடவுளாகிய முருகப் பெருமான் ஆகிய தெய்வங்களின் அருள் நலங்களை இசையுடன் பரவிப் போற்றும் பண்சுமந்த பாடல்களின் தொகுதியாக அமைந்தது பரிபாடல் என்னும் இத்தொகை நூலாகும். இயற்கை வனப்பும், இயற்கைப் பொருள்களின் வாயிலாகத் தோன்றும் தெய்வ வனப்பும் ஆகிய இருவகை வனப்புக்களே இசைப் பாடற்குரிய பொருள்வகை என்பர் சான்றோர். இவ்விருவகை வனப்புக்களையும் தன்னகத்தே கொண்டு மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் வகையில் சங்ககாலத் தமிழ் மக்கள் மேற்கொண்டொழுகிய தெய்வ வழிபாட்டு முறைகளை விரித்துரைப்பது பரிபாடல் என்னும் இத்தொகை நூலாகும். கடைச் சங்க காலத்திற்குப் பின் தோன்றிய தேவாரம், திருவாசகம் முதலிய சைவத் திருமுறைகள், ஆழ்வார்களின் அருளிச் செயலாகிய நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் முதலிய பத்திமைப் பனுவல்களுக்கு அடிப்படையாக விளங்குவது இப்பரிபாடல் தொகுதியே யாகும். திருமால், செவ்வேள் ஆகிய தெய்வங்களை இசையுடன் பரவிப் போற்றும் பரிபாடலாகிய இத்தொகை நூல், திருமாலடியார்கள் தெளிந்துணர்த்திய மெய்ந்நெறிக் கொள்கையினையும், சிவனடியார்கள் தெளிந்துணர்த்திய மெய்ந்நெறிக் கொள்கையினையும் சங்க காலத்தில் தமிழகத்தில் பரவி இருந்த வைதிக நெறியையும் புலப்படுத்தும் முறையில் அமைந்துள்ளது. இதன்கண் இடம் பெற்றுள்ள தெய்வ வழிபாடும், தத்துவ விளக்கமும் நுணுகி ஆராயத் தக்கனவாகும்.

திருமால் வழிபாடு :- திருவாவினன்குடியில் முருகப் பெருமானைக் காணவந்த தெய்வங்களைப் பற்றிக் கூறுமிடத்து,

> "கடுவொ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்று
> அழலென உயிர்க்கும் அஞ்சுவரு சுடுந்திறற்
> பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
> புள்ளணி நீள்கொடிச் செல்வனும்" (திருமுருகு. 148-151)

எனத் திருமால் போற்றப் பெற்றுள்ளார். நஞ்சு பொருந்திய துளைவாய்ந்த எயிற்றினையுடைய அஞ்சத்தக்க பாம்பு இறக்கும்படியாகப் புடைக்கும் சிறகுகளையுடைய கருடனைக் கொடியாகக் கொண்டோன் திருமால் என்பது இத்தொடரிற் புலப்படுத்தப்பட்டது.

திருமாலின் உந்தித் தாமரையில் படைத்தற் கடவுளாகிய நான்முகன் தோன்றினான் என்ற செய்தி,

> "ஏமுறு ஞாலந் தன்னிற் றோன்றித்
> தாமரை பயந்த தாவில் ஊழி
> நான்முக வொருவற் சுட்டி" (திருமுருகு. 163-165)

எனத் திருமுருகாற்றுப்படையிலும்,

> "நீனிற உருவின் நெறியோன் கொப்பூழ்
> நான்முக வொருவற் பயந்த பல்லிதழ்த்
> தாமரப் பொகுட்டிற் காண்வரத் தோன்றி"
> (பெரும்பாண். 402-404)

எனப் பெரும்பாணாற்றுப்படையிலும் குறிக்கப்பெற்றது.

திருமகள் தங்கும் மார்பினை உடைய நெடியோ னாகிய திருமால் மாவலி என்னும் அவுணன்பால் குறளனாக (வாமனனாக)ச் சென்று மூவடி மண் வேண்டி ஈரடியால் மூவுலகும் அளந்த வரலாறு,

> "இருநிலங் கடந்த திருமறு மார்பின்
> முந்நீர் வண்ணன்" (பெரும்பாண். 29-30)

எனவும்,

> "ஞால மூன் றடித் தாய" (கலி. 124)

எனவும்,

> "நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு
> வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
> நீர் செல நிமிர்ந்த மாஅல்" (முல்லை. 1-3)

எனவும் வரும் தொடர்களிற் குறிக்கப்பெற்றது.

சக்கரப் படையினையும் வலம்புரிச் சங்கினையும் தாங்கும் பெரிய கைகளை உடைய மார்பினனாகிய மாயோன் மாவலி வார்த்த நீர் தன்கையிலே சென்ற அளவிலே நெடியோனாக உயர்ந்து மூவுலகினையும் தன் ஈரடிகளால் தாவி அளந்த செய்தி மேற்குறித்த முல்லைப்பாட்டுத் தொடரில் குறிக்கப்பெற்றுள்ளமை காணலாம்.

"அகலத்தை இடத்தே உடைய உலகத்தை வளைத்துச் சக்கரத்தோடே வலம்புரியைத் தாங்கும் பெரிய கைகளை உடைய திருமார்பிடத்தே திருமகளை வைத்தமால், மாவலிவார்த்த நீர் தன்கையிலே சென்றதாக உயர்ந்த திருமால்" எனப் பொருள் வரைந்த நச்சினார்க்கினியர், 'இதனானே முல்லைக்குரிய தெய்வம் கூறினார்' எனக் கருத்துரைப்பர். மால் நீர் செல நிமிர்ந்தாற் போல மேகமும் நீர் செலநிமிர்ந்தது என்பதாம்.

முல்லைத்திணை ஒழுகலாற்றைக் குறித்த இப் பாடலில் முல்லை நிலத் தெய்வமாகிய திருமால் ஞாலமளந்த செய்தியை முகிலொடு புணர்த்துக் கூறிய திறம் கூர்ந்து உணர்வதற்குரியதாகும்.

திருமால் பாம்பணையிற் பள்ளி கொண்டருளிய திறத்தை உவமை வாயிலாகப் புனைந்துரைப்பது,

> "நீடுகுலைக், காந்தளஞ்சிலம்பிற் களிறு படிந்தாங்கு
> பாம்பணைப்பள்ளி அமர்ந்தோன் ஆங்கண்"
>
> (பெரும்பாண். 371-373)

எனவரும் பெரும்பாணாற்றுத் தொடராகும்.

"நீண்ட பூங்கொத்துக்களை உடைய காந்தட் பூக்கள் மலர்ந்த அழகிய பக்கமலையிலே யானை கிடந்தாற்போல, பாம்பணையாகிய படுக்கையிலே அறிதுயில் கொண்டோனாகிய திருமாலின் திருக்கோயில் காஞ்சியி லுள்ள திருவெஃகாவாகிய அவ்விடத்தின்கண் அமைந் திருந்தது" என்பது இத் தொடராற் புலனாம். திருமால் அலைமறியும் பாற்கடலில் ஆதி சேடனாகிய பாம்பினை

அணையாகக் கொண்டு அறிதுயில் அமர்ந்துள்ள தோற்றத்தினை,

"பாடிமிழ் பரப்பகத் தரவணை அசைஇய
ஆடுகொள் நேமியாற் பரவுதும்" (கலி. 105)

எனச் சோழன் நல்லுருத்திரனார் பரவிப் போற்றயுள்ளமை இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும்.

திருமால் மார்பில் அம்முதல்வனது தேவியாகிய திருமகள் அமர்ந்திருக்கும் திறத்தை,

"திருமறு மார்பின் முந்நீர் வண்ணன்"
(பெரும்பாண். 29-30)

எனப் பெரும்பாணாற்றுப்படையும்,

"திருவார் மார்பன்" (மலைபடு. 355)

என மலைபடுகடாமும் குறிப்பிடும். இச்செய்தி,

"மாயவன் மார்பில் திருப்போல் அவள் சேர" (கலி. 145)

எனவும்,

"பொருமுரண்மேம்பட்ட பொலம்புகழ் நேமித்
திருமறு மார்பன்" (கலி. 104)

எனவும் வரும் தொடர்களிலும் குறிக்கப்பெற்றுள்ளமை காணலாம்.

காத்தற் கடவுளாகிய திருமால், திருவோண நாளில் அவதரித்தமையால் திருவோண நாளைத் திருமாலுக்குரிய நாளாகப் போற்றுதல் மரபு. இம்மரபு,

"கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓண நன்னாள்"
(மதுரைக் காஞ்சி 590-591)

என மதுரைக் காஞ்சியில் இடம் பெற்றுள்ளமை காணலாம்.

'திரட்சியைக் கொண்ட அவுணரை வென்ற பொன்னாற் செய்த மாலையினை உடைய திருமால் பிறந்த ஓணமாகிய நன்னாள்' என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும். திருமாலுக்குரிய திருவோணத்திருநாளில் மதுரை மாநகரிற் போரில் பெருவிருப்புடைய வீரர்கள் பலருங் காணத் தம்மில் தாம் மாறாய்ப் பொருது நிற்கும் சேரிப்போர் மறவரது விளையாட்டாக நிகழ்ந்தது என்ற செய்தி,

> "மறங்கொள் சேரி மாறுபொரு செருவின்
> மாறா துற்ற வடுப்படு நெற்றிச்
> சுரும்பார் கண்ணிப் பெரும்புகல் மறவர்"
>
> (மதுரை. 594-596)

எனவரும் மதுரைக் காஞ்சியாற் புலனாம்.

திருமாலுக்குரிய திருவோணத் திருநாளில் மதுரையிற் சேரிப் போர் நிகழ்ந்தது போலவே சிவனுக்குரிய திருவாதிரைத் திருநாளில் திருமயிலையில் வீரர்களது சேரிப்போர் நிகழ்ந்த திறத்தை,

> "**ஊர்திரை வேலை உலாவும் உயர்மயிலைக்**
> **கூர்தரு வேல்வல்லார் கொற்றம்கொள் சேரிதன்னில்**
> **கார்தரு சோலைக் கபாலீச் சரம் அமர்ந்தான்**
> **ஆதிரை நாள் காணாதே போதியோ பூம்பாவாய்"**

என ஆளுடைய பிள்ளையார் குறித்துள்ளமை இங்கு ஒப்புநோக்குதற்குரியதாகும்.

> "நிலந்தரு திருவின் நெடியோன் போல" (மதுரைக். 763)

எனவரும் தொடர்க்கு "எல்லாநிலங்களையும் தன்னிடத்தே காட்டின பெருஞ்செல்வத்தை உடைய மாயோனைப்போல; என்றது கண்ணன் எப்பொருளும் தானாய் இருக்கின்ற படியைக் காட்டி ஸ்ரீ கீதை அருளிச் செய்து எல்லாரையும் போதித்தாற்போல" என நச்சினார்க்கினியர் தரும் உரையும் விளக்கமும் இங்கு நினைக்கத் தக்கனவாகும்.

முறை செய்து காப்பாற்றும் மன்னனைக் காத்தற் கடவுளாகிய திருமாலெனக் கொண்டு போற்றும் மரபு தொல்காப்பியனார் காலம் தொட்டுத் தமிழகத்தே நிலை பெற்று வருவதென்பது,

"மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்
றாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்"

எனவரும் தொல்காப்பியத் தொடராற் புலனாகும். இம்மரபு

"இருநிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் பிறங்கிடை அந்நீர்த்
திரைதரு மரபின் உரவோன் உம்பல்"

எனவரும் பெரும்பாணாற்றுப்படையில் இடம் பெற்றுள்ளமை காணலாம். "பெரிய நிலத்தை அளந்த திருவாகிய மறுவை அணிந்த மார்பினை உடைய கடல் போலும் நிறத்தை உடைய திருமாலின் வழியிற்றோன்றிய உரவோன்" என்பது இத்தொடரின் பொருளாகும்.

பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்துப் பாடல்களுள் நற்றிணைக்குரிய கடவுள் வாழ்த்துப் பாடலாக அமைந்தது

"மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்
வளைநரல் பௌவம் உடுக்கை யாக
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வன் என்ப
தீதற விளங்கிய திகிரி யோனே"

என்பதாகும்.

மிகப் பெரிய நிலப்பரப்பு தன் சிவந்த திருவடி களாகவும், தூயநீரையுடைய சங்குகள் முரலும் கடல் தான் உடுக்கும் ஆடையாகவும், ஆகாயம் தன் திருமேனியாச

திசைகள் கைகளாகவும், குளிர்ந்த கைகளை உடைய திங்களோடு ஞாயிறும் தன் கண்களாகவும், பேருருக் கொண்டு இயலும் எல்லா உயிர்களிடத்திலும் தாம் உயிர்க்குயிராய்ப் பொருந்தி எல்லாப் பொருள்களையும் தனது விரிவிற்குள்ளே அடக்கிய வேதத்தாற் போற்றப்படும் முதற் கடவுள் குற்றமற விளங்கிய சக்கரப் படையை ஏந்திய திருமால் என்று போற்றுவர் சான்றோர் என்பது இதன் பொருளாகும்.

இப்பாடலில் திகிரியோனாகிய திருமாலது உலகளாவிய பேருருவின் தோற்றமும், அம்முதல்வன் உயிர்க்குயிராய்ப் பொருள்கள் தோறும் ஊடுருவி நிற்கும் நுண்ணியல்பும், உலகுயிர்கள் எல்லாவற்றையும் தன் விரிவிற்குள்ளே அடங்கத் திகழும் விரிவுநிலையும் விரித்துரைக்கப் பெற்றுள்ளமை காணலாம்.

"இயன்றவெல்லாம் பயின்றகத்தடக்கிய
வேத முதல்வன்"

என இப்பாடலில் வந்துள்ள தொடர், திருமாலுக்குரிய நாராயணன் என்னும் திருப்பெயர்ப் பொருளைப் புலப்படுத்தி நிற்றல் நுணுகி நோக்கற் பாலதாகும்.

மேகம் தவழும் கரிய மலையையும், அம்மலை முகட்டினின்று இழியும் வெள்ளிய அருவி நீரையும் விளக்கப் போந்த கபிலர், கரிய மலைக்குக் கண்ணனையும், வெள்ளிய அருவிக்கு அவன் தமையனாகிய பலதேவனையும் உவமையாக எடுத்துக் காட்டும் நிலையில்,

"மாயோன் அன்ன மால்வரைக் கவாஅன்
வாலியோன் அன்ன வயங்கு வெள்ளருவி" (நற். 32)

எனப் புனைந்துரைத்துள்ளார். இதனால் கரிய மலையையும் அதன் பக்கத்து வீழும் வெள்ளிய அருவியையும் காண்போர் உள்ளத்திலே கண்ணனது கரிய திருமேனியும், பலதேவனது வெளிய திருமேனியும் ஆகிய தெய்வத் தோற்றமும் திகழுமாறு சொல்லோவியம் செய்த கபிலரது புலமைத்திறம்

நினைந்து போற்றத் தகுவதாகும்.

குன்றுகளைத் தன்னிடத்தே கொண்டு கடலாற் சூழப்பட்ட மண்ணுலகிலே வாழும் மக்கள் பலரும் ஒருங்கு கூடி உண்ணா நோன்புடையராய்த் திருவனந்தபுரத்திலுள்ள திருமால் கோயிலுள் திருவமர் மார்பனாகிய அலங்கற் செல்வன் திருவடிகளைப் பரவிப் பாடுகிடத்தலும், அன்னோர் கோயிலின் தெளிந்த மணி ஓசையினைக் கேட்டுத் தீர்த்தம் ஆடித் திருமாலை வழிபட்டு மனம் நிறைந்த மகிழ்ச்சி உடையராய்த் தாம் தாம் வாழும் ஊரை நோக்கி மீண்டு செல்லுதலும் சங்ககாலத்தில் நிகழ்ந்த திருமால் வழிபாட்டு நிகழ்ச்சிகளாகும். இச்செய்தி,

> "குன்றுதலை மணந்து குழூஉக்கட லுடுத்த
> மன்கெழு ஞாலத்து மாந்த ரோராங்குக்
> கைசுமந் தலமரும் பூசன் மாதிரத்து
> நால்வேறு நனந்தலை யொருங்கெழுந் தொலிப்பத்
> தெள்ளுயர் வடிமணி யெறியுநர் கல்லென
> உண்ணாப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி
> வண்டூது பொலந்தார்த் திருஞெம ரகலத்துக்
> கன்பொரு திகிரிக் கமழ்குரற் றுழாஅய்
> அலங்கற் செல்வன் சேவடி பரவி
> நெஞ்சுமலி உவகையர் துஞ்சுபதிப் பெயர" (பதிற். 31)

எனவரும் பதிற்றுப்பத்துப் பாடற்பகுதியில் விரித்துரைக்கப் பெற்றது. இப்பகுதியில் 'அலங்கற்செல்வன் என்றது திருவனந்தபுரத்துத் திருமாலை' என்பர் பழைய உரை ஆசிரியர்.

'செல்வக்கடுங்கோ வாழியாதன்' ஏத்தல் சான்ற வேள்வியினைச் செய்து அறத்துறையில் சிறந்தவனாய் மாய வண்ணனாகிய திருமாலைத் தன் நெஞ்சிற்கொண்டு அத்தெய்வத்திற்கு வழிபாடு செய்தற்குரிய நெல்லின் விளைவை உடைய 'ஒகந்தூர்' எனும் ஊரைத் திருவிடையாட்டமாகக் கொடுத்துள்ளான். இச்செய்தி,

> "ஏத்தல் சான்ற இடனுடை வேள்வி

ஆக்கிய பொழுதின் அறத்துறை போகி
மாய வண்ணனை மனனுறப் பெற்று அவற்கு
ஒத்திற நெல்லின் ஒகந்தூர் ஈத்துப்
..................... மல்லலுள்ளமொடு மாசறவிளங்கிய
செல்வக் கடுங்கோ வாழியாதனை”

எனவரும் ஏழாம் பத்துப் பதிகத் தொடரால் விளக்கப் பெற்றது.

இசைத் தமிழ்ச் தெய்வத் தோத்திரப் பனுவலாகத் தொகுக்கப்பெற்ற எழுபது பரிபாடல்களுள் இக்காலத்தில் முழுமையாகக் கிடைப்பன இருபத்திரண்டு பரிபாடல்களும், பரிபாடலுறுப்புக்களாகக் கிடைத்த சில பகுதிகளுமேயாகும். இத்தொகை நூலில் இடம்பெற்ற தத்துவ விளக்கம் பிற்காலத்தில் இராமாநுசரது விசிட்டாத்துவிதக் கொள்கைக்கு அடிப்படையாக அமைந்துள்ளமை காணலாம். தொல்காப்பியனார் காலத்தில் முல்லைநிலத் தெய்வமாக நிலவகையாற் போற்றப் பெற்ற திருமால் வழிபாடு அவர் காலத்திற்குப் பின் நிலங்கடந்த தெய்வ வழிபாடாக யாண்டும் பரவுவதாயிற்று.

“மாயோன் மேய மன்பெருஞ்சிறப்பின் தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்” எனவரும் தொல்காப்பியத் தொடரால் காயாம் பூவினையொத்த கரிய நிறம் வாய்ந்த திருமேனியையுடைய முல்லை நிலத்தெய்வமாகப் போற்றப்பட்ட திருமால், சங்கத்தொகை நூல்களில் கரிய திருமேனியினை உடைய கண்ணபிரான் எனவும், வெளிய திருமேனியினை உடைய பலதேவன் எனவும் இரு தெய்வமாகவும் தம்முட் பிரிவின்றியியலும் ஒருமை நிலையினராகவும் இயைத்துப் போற்றப் பெற்றுள்ளார்.

“கல்லறை கடலுங் கானலும் போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
வேறுவேறுருவின் ஒருதொழி லிருவர்த்
தாங்கு நீணிலைய ஓங்கிருங் குன்றம்” (பரிபாடல் 15)

எனவரும் பரிபாடல் திருமாலிருஞ் சோலையில் எழுந்தருளிய

மாயோனைப் பெரும்பெயர் இருவராகப் பரவிப் போற்றுகின்றது.

கல்லென ஒலிக்கும் கருங்கடலும் வெண்மணற் பரப்பாகிய கடற்கானலும் போல வேறுவேறாகிய நிறத்தினையும் பிரிவில்லாத சொல்லும் பொருளும் போல வேறுபடாத (காத்தல்) தொழிலினையும் உடைய மாயோனையும், அவனுக்குத் தமையனாகிய பலதேவனையும் தாங்கும் நீண்ட நிலைமையினை உடைய புகழால் உயர்ந்த திருமாலிருஞ்சோலையாகிய பெரிய குன்றம் என்பது மேற்குறித்த பரிபாடற் றொடரின் பொருளாகும். திருமாலாகிய ஒரு தெய்வமே பலதேவனும், கண்ணனும் எனத் தமையனும், தம்பியுமாக இருவேறுருவிற் சங்க காலத்தில் வழிபடப்பட்ட செய்தி மேற்குறித்த பரிபாடற் றொடரால் நன்கு தெளியப்படும். அன்றியும் முல்லை நிலத் தெய்வமாகிய திருமால் சங்க காலத்தில் வாசுதேவன் சங்கருடணன், பிரத்யும்நன், அநிருத்தன் என நால்வகை வியூகமாகவும் போற்றப் பெற்றுள்ளார்.

> "செங்கட் காரி கருங்கண் வெள்ளை
> பொன்கட் பச்சை பைங்கண்மால்" (பரிபாடல் 3 : 81-82)

எனவரும் பரிபாடற்றொடரில் நால்வகை வியூகமும் குறிக்கப் பெற்றன. செங்கட் காரி - வாசுதேவன், கருங்கண் வெள்ளை- சங்கருடணன், பொன்கட் பச்சை - சிவந்த உடம்பினை யுடைய காமன், பச்சை என்பது பிரத்யும்நன் என்றும் வடமொழித் திரிபு என்பர் பரிமேலழகர். பைங்கண்மால்- பசியவுடம்பினையுடையய அநிருத்தன் - என இவ்வாறு திருமாலுக்குரிய நால்வகை வியூகமும் பரிபாடலிற் கூறப்பெற்றுள்ளமை அறியத் தகுவதாகும்.

ஆயிரம் முடியையுடைய ஆதிசேடன், தன் திருமுடி மேல் கவிக்கப்பெற்ற திருமால், திருமகள் தங்கும் மார்பினனாகவும் சங்கைப் போன்ற திருமேனியையும், பனைக் கொடியையும் கலப்பையாகிய படையையும் ஒற்றைக் குழையையும்*உடைய பலதேவனாகவும் விளங்குகின்றான்

என்பது,

> "ஆயிரம் விரித்த வணங்குடை யருந்தலை
> தீயுமிழ் திறனொடு முடிமிசை யணவர
> மாயுடைய மலர்மார்பின் மையில் வால்வளைமேனிச்
> சேயுயர் பனைமிசை யெழில்வேழ மேந்திய
> வாய்வாங்கும் வளை நாஞ்சி லொருகுழை
> யொருவனை" (பரி. 1)

எனவரும் பரிபாடற்றொடரால் விரித்துரைக்கப்பெற்றது.

செந்தாமரை மலர்போலும் கண்ணையும் காயாம் பூவினையொத்த திருமேனியினையும், திருமகள் விரும்பி வீற்றிருக்கும் மார்பினையும், அம்மார்பில் விளங்கும் கௌத்துவ மணியினையும் பொன்னாடையாகிய யுடையினையும், கருடச்சேவற் கொடியினையும் உடையவ ராக முதலாம் பரிபாடலில் திருமால் போற்றப்படுகிறார் (பரி. 1).

மண்ணுலகமும், பசும் பொன்னுலகமும் பாழ்பட ஒன்றற்கொன்று மாறிவருதலாகிய பழைய இயல்பினை யுடைய திங்களும், ஞாயிறும் கெடுதலால். அழகிழந்த இயல்பினதாக விசும்பு அழிந்த ஊழிகள் முறை முறையாகக் கழிய, தன் குணமாகிய ஒலியுடனே தோன்றி உருவு காணப்படாத வளி முதலாய பூதங்களின் பரமாணுக்கள் வளருதற்கிடமாகிய விசும்பு என்னும் முதற் பூதத்தின் ஊழியும், அவ்வானத்தினின்று எல்லாப் பொருள்களையும் திரட்டுகின்ற காற்றுத் தோன்றிய ஊழியும், அக்காற்றினின்றும் தீத்தோன்றிய ஊழியும், அத்தீயினின்றுந் தோன்றிய பனியும் மழையும் பெய்த ஊழிகளும், அவற்றிற்குப் பின்பு புனலினின்றும் தோன்றுதலால் மீண்டும் வெள்ளத்தினுட் கிடந்து முன் தோன்றிய நான்கு பூதங்கட்கும் உள்ளீடாகிய இருநிலத்தின் ஊழியும் என்று இவ்வூழிகளாலே நெய்தல், குவளை, ஆம்பல், சங்கம், கமலம், வெள்ளம் என எண் குறித்திட்ட பெயர்களது அளவினதாகிய காலத்தின் நீட்சி கழிந்த பிறகு மீண்டும் உயிர்கள் உளவாதற்பொருட்டு அந்நிலத்தினை வெள்ளைப் பன்றியின் உருவு கொண்டு

எடுத்திட்ட கேழற்கோலத்தால் பெயர் பெற்ற வராககற்பம் எனும் இவ்வூழி, நின் அருட் செயல்களுள் ஒரு செயலின் பெயராதலை உணர்த்துதலின் அச்செயல்கள் பலவற்றையும் செய்கின்ற நின்னுடைய முதுமைக்குள்ள கற்பங்கள் யாவரானும் அறியப்படாதன. அவ்வாறு முதுமையை உடையவனாக விளங்குகின்ற நீ தூவெள்ளை நிறத்தனாய பலதேவனுக்கு இளையன் என்று கூறுவார்க்குப் பிறப்பு முறையால் தம்பியாகத் திகழ்கின்றாய். எல்லாப் பொருள் களையும் மறைக்கும் இருள்போலும் உடையினை யணிந்த பனைக் கொடியோனாகிய அப்பலதேவனுக்கு வாசுதேவ மூர்த்தியாகிய நீ தமையனாகத் திகழ்கின்றாய்.

வழுவாத விரதங்களையுடைய ஞானிகள் ஆராய்ந்த வேதத்தால் தெரிந்துணரின், உயிர்தோறும் உயிர்தோறும் உயிர்க்குயிராய் (அந்தரியாமியாய்) நிலைபெற்றுள்ளாய். இந்நிலைமைகள் நின்னிடத்தே தோன்றும் தொன்மை நிலைபோல நினக்கேயமைந்த சிறப்புக்களாகும். அழகிய மதிக்கு மறுவென்னும்படி திருமகள் தங்கிய நின் மார்பம், நீரிற் கிடந்த நிலமகளை ஆதிவராக உருவின் மருப்பில் ஏந்திக் கொண்டு நீ மணந்தமையால் புள்ளியளவாகிய நிலனும் வெள்ளத்தால் வருந்திற்றில்லையென்று வேதப் பொருளையுட் கொண்டு கூறுவோர் கூற்றோடு மாறுபடு கின்றது. ஒருத்தியொடுமணம் புணரும் வழி பிறள் ஒருத்தியின் மார்பினைச்சேர்தல் கூடாமையின் உரையொடு பொருந்திற்றில்லை என்றார்.

நின்னை எதிர்த்த அவுணர் கொடிகள் அற்று இற்று, செவி செவிடுபட்டு, முடிகள் அதிர, உலகுகள் நிலைதளர மிக்கு முழங்கும் நின்கையிற் சங்கம் இடியினை யொப்ப தாகும். நீ ஏந்திய ஆழிப்படை, நீண்ட கரிய பனைமரத்தில் பல பதினாயிரம் குலைகள் அதன் தலையினீங்கித் தரைக்கண் விழுவன போல அவுணர் தலைகள் உடல்மிசை நில்லாமல் கொத்தாக வீழ்ந்து சிதறி நிலத்தின்கண் சேர்ந்து புரளும்படி அவுணர்களின் உயிரைச் செகுக்கும். அவ்வாழிப் படையின் உடல் கூற்றுவனை ஒக்கும்; அதன் நிறம் சுடுகின்ற பொன்னோடு எழுந்து விளங்குகின்ற தீயின் நுடக்கத்தை

யொக்கும். நின் திருமேனியினொளி இருண்ட நீலமணியை யொக்கும். நின் கண், தாமரை மலரிரண்டினைப் பிணைத்தாற் போற் றோன்றும். நின் வாய்மை, தட்பாது வருகின்ற நாளை யொக்கும். நினது பொறை, நிலத்தை யொக்கும். நின்னருள், மேகத்தையொக்கும் என அருமறைப் பொருள் நின்னியல்பினையுணர்த்தும். மேற்சொல்லிய பொருட்களையும் பிறவற்றையும் பண்புகளாலும், தொழில் களாலும், ஒத்தும் ஒப்பின்றி எப்பொருளினகத்திலும் நீ எழுந்தருளியுள்ளாய். வேதத்துட் சொல்லப்பட்ட வேள்வி யாசானது உரையும், ஒன்றற் கொன்று உயர்ந்த பலவகை வேள்விகளுள் வேள்வித் தூணாய் அமைந்து பசுவைப் பற்றிக் கொள்ளுதலும், மந்திரங்களாலுயர்ந்த தீயினை முறையாற் கடைந்து அத்திகழ் ஒளியையுடைய எரியின் பெருக்கத்தை யுண்டாக்கிக் கொள்ளுதலும் ஆகிய இவை முறையே நின் திருவுருவும், உணவும், நின் வெளிப்பாடும் ஆகும்.

"திருமாலாகிய நீ, அமரர்க்குணவாகிய அமிழ்தத்தைக் கடைந்து கொடுப்பதாக நின்மனத்தின்கண் நினைந்த அளவிலேயே அதன் பயனாகிய மூவாத்தன்மையும் ஒழியா வன்மையும் சாவா மரபும்போல அமரர்க்குரியவாயின. அதனால் நின் பல்புகழ் பரந்தன. அத்தன்மைத்தாகிய இயல்பினையுடையாய் நின் அடியை யாமும் துளக்கமில்லாத நெஞ்சினேமாய்ச் சுற்றத்தோடும் வணங்கிப் பல்காலும் ஏத்தி வாழ்த்தி எம்மறிவு வளைவின்றி மெய்யுணர்வினை உடைய தாகுக என வேண்டிக் கொள்கிறோம்!" எனத் திருமாலைப் போற்றும் நிலையில் கீரந்தையார் பாடிய பாடல் இரண்டாம் பரிபாடலாகும்.

இதன்கண், வேள்வியில் ஆசான் கூறும் மந்திரச் சொல்லே கடவுட்குருவாம் எனவும், வேள்வித்தூணாக அமைந்து, அங்குப் பிரிக்கப்பெறும் பசுக்களை ஏற்றலே அவனுக்குரிய உண்டி எனவும், அந்தணர்க்கு வேள்வித் தீயினும், யோகியர்க்கு உள்ளத்திலும், ஞானியர்க்கு எவ்விடத்திலும் இறைவன் வெளிப்படுதலால் வேள்வியில் வளர்க்கப் பெறும் ஒண்சுடர்த்தோற்றமே அந்தணர் காணும் வரவு எனவும் குறிக்கப் பெற்றுள்ளமை நோக்கத்தகுவதாகும்.

மாயோயே! தீ. வளி, விசும்பு, நீர், நிலம் என்னும் பூதங்கள் ஐந்தும் ஞாயிறும் திங்களும் வேள்வி ஆசானும் ஆக எண்பேருருவினனாக விளங்குகின்றாய். வேட்கின்ற வடிவாகிய அறமும், கோள்கள் எழுவருள் முற்கூறிய ஞாயிறு திங்கள் அல்லாத ஏனைய ஐவரும், திதிமைந்தராய அசுரரும், விதியின் மக்களாகிய ஆதித்தர் பன்னிருவரும், வசுக்கள் எண்மரும், பதினொரு உருத்திரரும், மருத்துவராகிய இருவரும், தருமனாகிய எமனும், அவனது ஏவல் செய்யும் மடங்கலாகிய கூற்றமும், ஒரோவொன்று எழுவகைப்பட்ட மூவகையுலகுகளும், அங்கு வாழும் உயிர்த் தொகுதியும் ஆகிய இவையெல்லாம் நின்கண் தோன்றிப் பரவியுள்ளனவாக வேதம் சொல்லுதலால் யாமும் அவ்வாறே தொடுத்துக் கூறினோம். தாமரைமலரில் தோன்றிய நான்முகனும் அவனுக்குத் தந்தையும் நீயே என்று அந்தணரருமறை கூறும். தேவர்களிடமிருந்து அமுதத்தினைக் கொணர்ந்து தன் தாயின் இடுக்கணைத்தவிர்த்த கருடனை ஊர்தியாக உடையாய். அக்கருடனையே கொடியாகவுமுடையாய். மாவலிபால் மூவடிமண்வேண்டி அளக்கின்ற காலத்து மேற் சொல்லிய மூவேழுலகினுள் கீழுள்ளனவாகிய ஏழுலகத்தினையும் எஞ்சாமற்பரவிய அடியினையுடையாய். எல்லாம் கருகி நீறாதற்குக் காரணமாகிய தீயும், காற்றும், எமனும், ஞாயிறு பன்னிரண்டும் ஒருங்கு கூடும் ஊழி முடிவிலே எழுகடல்களும் ஒன்றாகிய ஆழிக்கண்ணே அமிழ்கின்ற நிலமகளை அழகிய வராகமாகிப் பெயர்த்தெடுத்தாய் எனவும், புட்கலம் முதலிய மேகங்கள் பொழிய விசும்பினின்றும் வீழும் நீரை அன்னச் சேவலாகி நின் சிறகினாலே வறளும்படிச் செய்தாய் எனவும் முனிவரும், தேவரும் நின்னை விரும்பிப் புகழ்வர். அம்முறையே யாமும் புகழ்கின்றோம். குதிரையுருவினனாகிய கேசி எனும் அசுரனைக் கொன்றவனே! நின் கைகள் எண்ணிறந்தமையால் நின் புகழைப் போன்றன. மோகினியாகிய நின் வடிவினைக்கண்டு மகிழ்ந்த மகிழ்ச்சியே அவுணர்க்கு அச்சமாய் முடிய அமரர்க்கு நல்லமிர்தினைப் பகுத்திடுதலால் நடுவு நிலைமையில் தப்பிய நலமில்லாத ஒருகையினையுடையனாயினை.

எல்லையறியப்படாத வடிவினையுடைய நின்னை உயர்வு கூறக்கருதின் அது நீயே உணரின் அல்லது பிறரால் உணரப்படுவாயல்லை. அநாதியாய் வருகின்ற வேதத்திற்கு முதல்வனே! விரிந்தகன்ற ஆகமங்கள் அனைத்தாலும், அகங்காரத்தாலும், மனத்தாலும், உணர்வினாலும் மற்றும் எல்லாவற்றாலும் நினக்கு வனப்பும் எல்லையும் அறியப்படாத மரபினையுடையவன் நீ. மதியின் கலைக்கதிர்களை உணவாக உடைய அமரர்க்குத் தலைவனாகிய நீ மயங்கி நினக்குப் பிழை செய்து நீ நிலவுலகினையளக்க நின் பெருமைகண்டு அஞ்சிப் போய்க் கடலிற் பாய்ந்த அவுணர்க்கும் பிழை செய்யாது நின்ற ஏனை அவுணர்க்கும் முதல்வனாக வுள்ளாய். இவ்வாறு இருதிறத்தார்க்கும் ஒத்திருத்தலால் நின் இயல்பினை யறிவார்க்கு இவர்பகைவர், இவர் நட்டோர் என்ற வேற்றுமை நின்கண் இல்லை என்பது புலனாம். ஆயிரமாகிய கிளர்ந்த தலையினை உடைய பாம்பினை வாயிற் கௌவிய நின் ஊர்தியாகிய கருடச் சேவலும் நின்னைத் தாங்கலாற்றாது வருந்தி, செங்கண் மாலே! ஓ! என அலறும் கால முதல்வன் நீ. தீயினுள் வெம்மையும், பூவினுள் மணமும், கல்லினுள் மணியும், சொல்லினுள் வாய்மையும் அறத்தினுள் அன்பும் (மென்மை) மறத்தினுள் மைந்தும் (வன்மை) வேதத்துள் மறையும் (உபநிடதங்களும்) ஐம்பெரும் பூதத்துள் ஆகாயமும், ஞாயிற்றுள் ஒளியும், திங்களுள் தண்மையும் ஆகத் திகழ்கின்றாய். இங்குச் சொல்லப்படாத எல்லாப் பொருளும் நீ, அவற்றிள் உட்பொருளும் நீ. ஆதலால் நீ ஓரிடத்து உறைதலுமில்லை. நினக்கு ஆதாரமாகக் கொண்டு நின்னைத் தாங்கும் இடத்தினையுடையையல்லை. மேற் சொல்லிய இறைமையுடையையாதலின் மறதியுடையார் மறதியில் சிறப்புப் பெறுதல் காரணமாக அவை நினக்கு உளவாம் தன்மையும் பொய். உலகில் முதலினும் இடையினும், இறுதியினும் படைத்தல், காத்தல், அழித்தல் எனும் தொழில் வேற்றுமை பற்றி நீ பிறவாத பிறப்பு எதுவுமில்லை. அவ்வாறு பிறந்து வைத்தும் நின்னைப் பிறப்பித்தோரையுடையையில்லை, காயாம்பூவின் நிறமுடையோய்! அருளே குடையாக, அறமே கோலாக மூவேழுலகங்களையும் இருநிழல்படாது நின் அருள் நிழலாகிய முழுநிழற்கண்ணதாகப் பொதுக் கடிந்து தனியே

காக்கும் காத்தற் றொழிலையுடையாய். புருட தத்துவம் ஒன்றும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், ஆகாயத்தின் பண்பாகிய ஓசையும், காற்றின் பண்பாகிய ஊறும், தீயின் பண்பாகிய உருவும், நீரின் பண்பாகிய சுவையும், நிலத்தின் பண்பாகிய நாற்றமும், செவி, தோல், கண், நாக்கு, மூக்கு எனும் ஐம்பொறிகளும், மனமும் அகங்காரமும், மானும், மூலப்பகுதியும் என இருபத்தைந்து தத்துவங்களாலும் ஆராயப்படும் பெருமையை யுடையாய், வாசுதேவன், சங்கருடணன், காமன், பிரத்யும்நன், அநிருத்தன் என நால்வகை வியூகங்களிலும் மேற் கூறியவாறு கூறப்படும் சிறப்பினை யுடையாய். ஆய்ச்சியரொடு கூடிக் குரவைக் கூத்தாடும்போது அவர்க்கு இடமும், வலமும் ஆகத் திகழ்வோய். கூத்தாடுதற்கெடுத்த குடத்தினையும், பகைவரைக் கொல்லுதற்கெடுத்த அலப்படையினையு முடையாய். அழகிய நீல மணியும், கருங்கடலும், கார் மேகமும் ஆகிய இவற்றையொக்கும் கரிய திருமேனியொடு நிறத்தால் மாறுபடும் பொன்னாடையினைப் புனைந்தாய். பகைவர் உயிரொடு முரண்பட்ட சக்கரப் படையினை யுடையாய். வெகுளியாலன்றி இயல்பாகவே சிவந்த கண்ணினையுடையாய். யாவராலும் அறியப்படாத இயல்பினை உடையாய். எனினும், நின் அன்பரது இடைவிடாத நினைவின்கண் நீக்கமின்றி உள்ளாய். நிறைந்த வெள்ளத்து நடுவு மாநிலம் தோற்றாத முதற்காலத்துப் பிரமனைக் கொண்டு உந்திக்கண் மலர்ந்த பொகுட்டுத் தாமரையினை உடைய நின் ஆழிப் படையே உலகிற்கு நிழல் தருவது என மூன்றாம் பரிபாடலால் கடுவனிள வெயினனார் திருமாலைப் பரவிப் போற்றுகிறார்.

"நின்பால் அன்பு செலுத்திய பிருகலாதன் வருந்தாமல் அவன் நெஞ்சிற் பொருந்தி, இரணியனது மார்பின் பகைவலிகெடத் தூணினின்றும் நீ புறப்பட்டு அவனுடைய மார்பினைப் பிளந்த நகத்தினையுடையாய். பூமியானது வெள்ளத்திலழுந்தியபோது வராகமாகி அதனைக் கழுத்தால் தாங்கி வெள்ளத்தினின்றும் எடுத்த நினது செயல் மேருவின் தொழிலையொக்கும். நினது வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றின்கண்ணே காணப்படாநின்றன. தண்மையும்

மென்மையும் திங்களிடத்தே உள்ளன. கொடுக்கக் கொடுக்கப் பொருள் வளர்தலும் கொடையும் மழையின் கண்ணேயுள்ளன. மன்னுயிர்களைத் தாங்குதலும் அவை செய்த பிழைகளைப் பொறுத்தலுமாகிய நின் தன்மைகள் நிலத்திடத்தே அமைந்தன. நின் மணமும், ஒளியும், காயாம் பூவிடத்தே யமைந்தன. நீ வெளிப்படுதலும் நினது பெருமையும் நீரின்கண்ணே காணப்படுகின்றன. ஞானக்கண்ணாற் காணப்படும் நினதுருவமும், ஒலியும் ஆகாயத்துள்ளன. நீ அவதரித்தலும் மீண்டுசென் றடங்குதலும் காற்றினிடத்தேயுள்ளன. இவ்வாறு நின்னிடத்திலிருந்து பிரிந்து நின்னால் பாதுகாக்கப் பட்டனவெல்லாம் பின்னும் நின்னொடு பொருந்துதல் அமைந்தன. செவி முதலிய பொறிகள் ஐந்தினையும் அவற்றின் செயல்களையும் மயக்கமற நீக்கி மைத்திரி, கருணை, முதிதை, மகிழ்ச்சி எனும் நான்கினாலும் மனமாசு கழுவி, நொசிப்பு என்னும் சமாதி நிலையிலே தம்மை நிறுத்திய நின் அன்பர்கள் நின் புகழ்த்திறங்களையெல்லாம் விரித்துப் போற்றினர். அப்புகழ்களெல்லாம் நினக்கு இயல்பாவன அல்லது வியக்கப்படுவன அல்ல. அவற்றுட் சிலவற்றை இங்குமங்குமாக நாங்கள் மாறுபடக் கூறும் எமது அறியாமை கண்டு நீ நகைத்தலுமியல்பே. கருடச் சேவற் கொடியினையுடைய நின் உயர்கொடிகளுள் ஒன்று பனை, மற்றொன்று கலப்பை, பிறிதொன்று யானை. இவ்வாறு நினக்குப் பல கொடிகள் உளவேனும் நினது ஒருதலையாக உயர்ந்த கொடியாகிய கருடக் கொடியினை அக்கொடிகள் ஒத்தலில்லை. நஞ்சுடைய பாம்பின் விடத்தையும், உடலையும், உயிரையும் உண்ணும் கருடனாகிய அவனது வயிற்றின்மேல் உதரபந்தனமாகச் சுற்றிக் கொண்டிருப்பது பாம்பு. அப்பாம்பே அவனுக்குக் கைவளை. முடிமேல் அணியும் கண்ணிகளும் பாம்பே. கழுத்திற் பூணும் பூணாகவும், தலைமேலணியும் சூட்டாகவும் அமைந்தன பாம்புகளே. பாம்புகளே அவன் சிறகுகளிடத்தனவுமாகும். கொடி மேலுள்ள அக்கருடன் எறிந்தெடுக்கும் இரையாக அமைந்தனவும் பாம்புகளே.

நினக்குப் பகைவரும் நண்பரும் இலராதலால் குற்றமும் மறமும் உடையாரிடத்து வெகுளியும் கோட்டமும் அவையில்லாரிடத்து இல்லையாதலும் உடையையாய், குணமாகிய அறமுடையாரிடத்து அருளும், செம்மையும் உடையையாய் அவை இல்லாரிடத்து இல்லையாதலுமல்லது நினக்குப் பகையாயினார் உயிரின்கண் அதனை மாற்றுதற் றொழிலும் நினக்கு நண்பராயினார் உயிரின்கண் அதற்கு ஏமஞ் செய்யுந் தொழிலும் உடையையல்லை. உயிர்க ளதியல்பால் நினக்குப் பகையும் நட்பும் உளபோலத் தோன்றுவதல்லது நின்னியல்பால் அவை நினக்குள்ளவை யல்ல. அன்பர் மனத்திற் கொண்ட வடிவன்றி நினக்கென வேறுவடிவு உடையையல்ல.

நீலமணி போலும் திருமேனிக்கண் நறுமணம் வீசும் துழாய் மாலையை யணிந்தாய். திருமகளாகிய மறுவை யுடைய மார்பனே! நின்னுந்தியிற் றோன்றிய தாமரை மலர் போலும் கண்களையுடையாய். அளத்தற்கரியனாகிய நீ அன்பர்க்கு வீடளிக்குங்கால் நின்னினும் சிறந்த நின் திருவடியினை யுடையாய், நிறைந்த கடவுட்டன்மையினையுடையாய்.

அழல்போலும் தளிரினையும் நிழல்தரும் கிளைகளையும் உடைய, ஆலமரமும், கடப்பமரமும், யாற்றிடைக் குறையும், காற்று வழங்காக்குன்றமும் பிறவு மாகிய அவ்விடங்களைப் பொருந்திய பல தெய்வங்களாகப் பகுத்துரைக்கப்படும் பெயர்களை யுடையோய், நின் அன்பர் தொழுத கையினது தாழ்ச்சிக்கண் அகப்பட்டோயும் நீயே. அன்பர் நினைத்தன முடித்தலால் அவரவர் ஏவல் செய்வோனும் நீயே. அவரவர் செய்த அறம்பொருட்குக் காவலாக விளங்குவோனும் நீயே!"- எனக் கடுவனிள வெயினனார் திருமாலைப் பரவிப் போற்றுவதாக அமைந்தது, நான்காம் பரிபாடல் ஆகும்.

நீல மலையின்கண் பரந்த இளஞாயிற்றின் கதிர் போலும் அழகமைந்த பொன்னாடையினையும், நீல மலையின் மேல் தோன்றும் இளஞாயிற்றினை ஒத்த முடியினையும் அம்மலையினின்றிழியும் அருவியின்

நிறத்தோடு மாறுகொள்ளும் பக்கமாலைகளையும் கருடப் புள்ளினை எழுதிய கொடியினையும் விண்ணின்கண் தோன்றும் நிறைமதியினது குளிர்ச்சியினையும் உடையனாய், அளித்தற்றொழிலை மேற்கொண்ட தெய்வம் திருமால் எனவும், கார்ப்பருவ மேகத்தின் இரண்டு பக்கங்களிலும் ஞாயிறும், திங்களுமாகிய இரு சுடர்கள் விளங்கித் தோன்றுமாறு போன்று விளங்கும் ஆழியையும் சங்கினையும் ஏந்திய கைகளையுடையவன் அம்முதல்வன் எனவும், சுவை முதலிய ஐம்புலன்களாகவும் அவற்றை நுகரும் பொறிகளாகவும் அவற்றாலுணரப்படும் தன்மையினை யுடைய பூதங்களாகவும் விளங்குவோன் அவ்விறைவன் எனவும் மூலப்பகுதியும் அறனும், அநாதியான் காலமும், ஆகாயமும், காற்றொடு பொருந்திய தீயும் கூடிய இம்மூவேழுலகத்து உயிர்களெல்லாம் அம்முதல்வனிடத்தே உளவாயின எனவும், உயிர்களின் பொருட்டுப் பாற்கடல் நடுவே ஆயிரம் தலைகளையுடைய பாம்பணையின்கண் அறிதுயிலமர்ந்தருளிய துளவஞ்சூடிய திருமால் தானும் மிக்க ஒலியினையுடைய மறமிக்க பகைவரைக் கொல்லும் படையுடனே பகைவருயிரையகற்றும் விறல்மிகு வலியும், ஒளியும் பொருந்தி அவர் மார்பினை உழும் நாஞ்சிற்படை யுடையோனாகிய பலதேவனும் பூமியினது நடுக்கமற அதனை எடுத்து நிறுத்தற்குரிய கொம்பினையுடைய ஆதிவராகம் எனும் பன்றியும் என மூன்று திருவுருவங்களாகப் பிரிந்த ஒரு தெய்வம்" எனவும் பதின்மூன்றாம் பரிபாடலில் நல்லெழினியார் திருமாலின் இயல்புகளை வகுத்துரைக்கின்றார்.

அறிவெல்லையால் அறியப்படாத புகழுடனே பொலிந்து நிலவெல்லையைத் தாங்கிய தம் நிலை கெடாத சக்கரவாள மலை முதலாகப் பண்டைப் புலவர் ஆராய்ந் துரைத்த நெடிய குன்றங்கள் பலவற்றுள்ளும் நிலத்தில் வாழும் மக்களின் பசி வெம்மையை நீக்கி நிறைபயன்கள் எல்லாவற்றையும் எப்பொழுதும் மக்கள் பெற்று மகிழப் பயன்தரும் குன்றங்கள் சிலவே. அச்சிலவற்றுள்ளும் தெய்வங்கள் தாமாக விரும்பும் மலர்த்தடங்களும் மழை தவழும் சிகரங்களும் உடையனவாகிய குலமலைகள் சில

சிறந்தன. அச்சிலவற்றிலும் கல்லென ஒலிக்கும் கடலும், கடற்கரைப் பரப்பும் போல வேறு வேறாகிய நிறத்தினையும் பிரிவில்லாத சொல்லும் பொருளும் போல வேறுபடாத தொழிலினையும் உடைய மாயோனையும் அவன் தமையனாகிய பலதேவனையும் தாங்கும் உயர்ந்த திருமாலிருங்குன்றம் சிறப்புடையதாகும். மணம் வீசும் கொத்துக்களையுடைய துழாய் மாலையை அணிந்த திருமால் தன்னருளால் வெளிப்பட்டுக் கொடுத்தாலல்லது அரிதிற் பெறு துறக்கத்தை எளிதிற் பெறுதற்குரிய நிலையில் விளங்கும் மாலிருங்குன்றத்தை எல்லோரும் கேட்க ஏத்தக் கடவோம்! என இளம்பெரு வழுதியார் தாம் பாடிய பதினைந்தாம் பரிபாடலில் திருமாலிருஞ்சோலை மலையின் சிறப்பினை முதற்கண் குறித்துப் போற்றியுள்ளார். அசையும் அருவி மிகவும் ஆரவாரித்து விழுதலால் சிலம்பாறு அழகு செய்யும் திரு என்னும் சொல்லோடும் சோலை எனும் சொல்லோடும் மாலிருங்குன்றமெனும் சொல் தொடர்ந்த மொழியாகிய திருமாலிருஞ்சோலை மலை என்னும் இத்திருப்பெயரினது பெருந்தன்மை பூமியின்கண் நன்றாகப் பரவுக.

நிலைபெற்ற குளிர்ச்சியையுடைய இளவெயில் சூழ அதனடுவே இருள் வளர்தலை யொக்கப் பொன்னாடையை யுடைய திருமால் தம்முன்னோனாகிய பலதேவனோடு கூடி அமர்ந்து நிற்கும் நிலையை மாந்தர்களே நினைந்து போற்றுமின்! அவுணரை நேரே பொருது கொன்றானது நிறத்தையுடைய குன்றத்தினை நும் மனைவியரோடும் இருமுதுகுரவரோடும், குழவிகளோடும் சுற்றத்தோடும்கூடத் தெய்வமாக மதித்துத் திசைநோக்கித் தொழுது சென்மின். தன் உந்தித் தாமரையினை யொக்கும் கண்களையுடையனாய் நீரைக் கொண்ட மழை மேகமும் இருளும் நீலமணியும் போலும் மேனியனாய் எல்லா வுலகிலும் வெளிப்பட்டுள்ள அவ்விடத்து உயிர்த்தொகுதிகளின் பிறவித் துன்பத்தினைக் களைவோன் ஆகிய திருமால் அன்புடையனாய் இருங் குன்றத்தின்கண் எழுந்தருளியுள்ளான். ஆதலால் அம் முதல்வனைக் கூர்மையணிந்த வளைந்த நாஞ்சிற் படையினை யுடையவனே! கோபம் மிக்க தண்டினை ஏந்தியவனே! வலம்புரிச் சங்குடன் சக்கரப் படையினை உடையவனே!

வில்லுடன் அம்பினை ஏந்தியவனே! சுழலும் படையாகிய பாராவளையினை (வட்டப்படை) யுடையவனே! வாட்படையினையுடையோனே! என இவ்வாறு அழகிய சீரையும், அஞ்சப்படுதலையும் உடைய வேதம் தனக்கு நன்மையை விரும்பி அவ்விரு பெருந்தெய்வப் பெருமை ஈதென்று சொல்லுதலால் யாமும் மனம் விரும்பி அச்சொற்களுள் அறிந்தவற்றைக் கூட்டி உரைத்தேமாய்ப் பெரும் புகழை யுடைய அவ்விருவரையும் தொழுது எமக்கு இவ்விருங் குன்றத்தின் அடியின்கண் உறைதல் எய்துக என்று வேண்டு கின்றோம்" என இளம்பெருவழுதியார் பெரும்பெய ரிருவரையும் பரவிப் போற்றுகின்றார்.

மேகங்கள் மழை பொழிய அந்நீர் மலைகளினின்றும் இழிந்து மதுரையிலுள்ளார் எதிர்கொள்ளும்படி வருகின்ற துறையினிடத்தே யமைந்தது இருந்தையூர் ஆகும். இவ்வூரில் எழுந்தருளியிருக்கும் திருமால் இருந்தவளமுடையார் எனப் போற்றப்படுகின்றார்.

ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேடனைப் 'பூமுடிநாகர்' எனப் பரிபாடல் போற்றுகின்றது. மதுரையின் அருகே இருந்தையூரிற் கோயில் கொண்டருளிய திருமாலின் கோயிலையடுத்து ஆதிசேடனுக்குக் கோயில் அமைந் திருந்தது. பூமுடிநாகராகிய ஆதிசேடன் கோயில் பெருங் குளத்துக்குப் புனல்புகும் வாயிலையடுத்து அமைந்திருந்தமை யால் அது 'குளவாயமர்ந்தான் நகர்' எனப் பரிபாடலிற் குறிக்கப் பெறுவதாயிற்று. நிறம் வாய்ந்த புள்ளிகளையுடைய பெரிய படமாகிய எருத்தின்கண்ணே மலையினைத் தாங்கிய செல்வனாகிய ஆதிசேடனுக்கென அமைக்கப்பெற்ற அத் திருக்கோயிலே இளையோர் முதல் முதியோர் வரையுள்ள இருபாலாரும் படைத்தற்குரிய அவியாகிய உணவு, குடை, நறும்புகைப்பொருள், நறுமலர்கள் ஆகியவற்றை ஏந்தியவர் களாய் நெருங்கி இன்னியம் முழங்க இயலிசைப் பாடல் களைப் பாடியும் ஆடல்களை நிகழ்த்தியும் இடைவிடாது வழிபட்டு மகிழ்ந்துறைகின்றனர். அதனால் அத்திருக்கோயில் நல்வினைப் பயன்களை நுகர்ந்து மகிழ்தற்கிடனாகிய துறக்கவுலகம் போன்று விளங்கியது.

அமுதத்தினை விரும்பித் தேவரும், அவுணரும் கடலைக் கடைந்த காலத்தில் ஆழிப்படையினையுடைய திருமால் மந்தரமலையாகிய மத்தொடு பிணித்து இருமருங்கும் பற்றியிழுத்தற்குரிய கடைகயிறாக அமைந்தவரும் ஆதிசேடனாகிய இவரே. இங்ஙனம் திருமால் ஒரு தோழங்காலம் கயிறாகக் கொண்டு இருமருங்கும் இழுத்துக் கடைந்த நிலையிலும் அறாத வன்மை யுடையவரும் இவரே. மலைகள் நிறைந்த நிலவுலகினைத் தம் தலையின் அணிகலன்போற் சுமந்தாரும் இவரே. ஏற்றூர்தி யானாகிய சிவபெருமான் அவுணர்க்குரிய மூவெயில்களை யழித்த காலத்தில் மேருமலையாகிய வில்லுக்குரிய நாணாக இருந்து தொன்றுதொட்டு நிலைபெற்று வரும் புகழைத் தந்தவரும் ஆதிசேடனாகிய இவரே. பகைவரை வருத்துதலையுடைய ஆயிரந்தலைகளை விரித்துள்ள தேவகணங்களைச் சுற்றமாகக் கொண்ட அண்ணலாகிய ஆதிசேடனை வணங்கி விளக்கமுடையோமாய் நின்னைப் பிரியாதிருத்தல் வேண்டும் என இருந்தையூரமர்ந்த செல்வனாகிய நின் திருவடியை வணங்கிப் பரவுகின்றோம் எனப் போற்றும் முறையில் அமைந்தது, தொல்காப்பியம் செய்யுளியல் 121ஆம் சூத்திரவுரையிற் பேராசிரியர் மேற்கோளாக எடுத்துக்காட்டிய பரிபாடலாகும்.

இதனால் மதுரையையடுத்துள்ள இருந்தையூரில் அமைந்த திருமால் கோயிலில் பூமுடிநாகராகிய ஆதி சேடனுக்கும் கோயில் அமைந்திருந்ததென்பதும் அங்குத் திருமாலை வழிபட வந்த மக்கள் அம்முதல்வனுக்கு அணையாய் அமைந்த பூமுடிநாகராகிய ஆதிசேடனையும் புகை, பூ, அவி என்பன கொண்டு வழிபட்டார்கள் என்பதும் பூமுடிநாகர் திருமால் கடல் கடைந்தபொழுது மந்தரமலை யாகிய மத்தோடு பிணைத்த கடைகயிறாகவும், சிவன் திரிபுரமெரித்தபொழுது மேருமலையாகிய வில்லிற் பூட்டிய நாணாகவும் இருந்து துணைபுரிந்தமையால் பாம்பு வழிபாடு சிவன், திருமால் என்னும் இருபெருந்தெய்வ வழிபாடு களுடன் நெருங்கிய தொடர்புடையதாகக் கொள்ளப்பெற்ற தென்பதும் நன்கு துணியப்படும்.

திருமாலின் உந்தித் தாமரையிலிருந்து தோன்றி உலகினைப் படைக்கும் படைப்புக் கடவுளாகிய நான்முகனும், உயிர்களின் உள்ளத்தே ஆணும் பெண்ணு மாய்க் கூடி வாழும் காமவுணர்வினைத் தூண்டும் தெய்வமாய காமனும் ஆகிய இருவரும் திருமாலின் புதல்வர் களாகப் போற்றப் பெறுகின்றனர். இச்செய்தி,

"இருவர் தாதை இலங்குபூண் மாஅல்" (பரி. 1:28)

எனவரும் பரிபாடல் தொடரால் இனிது புலனாகும்.

தொல்காப்பியனார் காலத்து மாயோன் என ஒன்றாகக் குறிக்கப்பெற்ற தெய்வம், கடைச்சங்க காலத்தில் கண்ணன், பலதேவன் என்னும் இரு திருவுருவங்களில் வைத்து ஒரு பெரும் தெய்வமாக வழிபடப்பெற்ற செய்தி முன்னர்க் குறிக்கப்பெற்றது.

வேத முதல்வன், தீதற விளங்கிய திகிரியோன், நாவலந்தணரருமறைப் பொருள், மனத்தாலும், நூல்களாலும் அறியப்பெறாதவன், ஐம்பெரும் பூதங்களும், ஞாயிறு திங்கள் முதலிய கோள்களும் தேவர் அசுரர் முதலியோரும் மூவேழுலகவுயிர்களும் மாயோனாகிய முதல்வனிடத்தே தோன்றி, அவனிடத்தே யொடுங்குகின்றன எனவும் எல்லாப் பொருள்களினுள்ளும் அவன் உயிர்க்குயிராயுள்ளான் எனவும், படைத்தற் கடவுளாகிய நான்முகனைத் தன்னுந்திக் கமலத்துத் தோற்றுவித்தவன் எனவும் காமனும், சாமனும் அவன் புதல்வர்கள் எனவும் பரிபாடல் திருமாலைப் போற்றிப் பரவுகின்றது.

ஆயிரந்தலையுடைய ஆதிசேடனை வாயிற் கௌவிக் கொண்டும், பாம்புகளை அணிகலனாக அணிந்து கொண்டும் உள்ள கருடனைத் தனக்கு ஊர்தியாகவும், கொடியாகவும் கொண்ட தெய்வம் திருமால். அவனது இயல்பினையறிதல் மயக்கம் நீங்கிய ஞானியர்க்கும் அரிது. அவ்வாறாகவும் அவன் இன்ன தன்மையன் என்று கூறுதல் ஏனையோர்க்கு எங்ஙனம் எளிதாகும்? இங்ஙனம் இறைவன் அறிதற்கரியனாயினும் அவனையறிதல் வேண்டுமென்ற ஆர்வம் மக்களுள்ளத்தே

தோன்றலியல்பு. அந்தணர்களாற் காக்கப்படும் அறமாகவும், அடியார்களிடத்தே தோன்றும் அன்பாகவும், நெறியின் வழீஇயினாரைத் திருத்தியாட்கொள்ளும் மறக்கருணை யாகவும் பகைவர்களிடத்தே செலுத்தும் வருத்துந் தொழிலாகவும் திகழுவோன் திருமாலே. வானத்தில் விளங்கும் திங்களாகவும், கதிரவனாகவும் திகழ்வோன் அவன். ஐந்து திருமுகங்களையுடைய இறைவனாகவும் அவனாற் செய்யப்பெறும் உலகவுயிர்களின் ஒடுக்கமாகவும் நற்பொருட் களைத் தன்னகத்தே கொண்ட குற்றமற்ற அறிவினைத் தரும் வேதமாகவும் நான்முகனாகவும் அவனாலாகிய உலகவுயிர் களின் தோற்றமாகவும் திகழ்வோன் திருமாலே. வானத்து வலமாக எழும் மேகமும், வானமும், நிலமும், இமயமலையும் என இங்ஙனம் எல்லாப் பொருள்களாகவும் தோற்ற மளிப்பவன் அவனே. அம்முதல்வன் தனக்குவமை யில்லாதவன்; அழிவற்ற புகழோன்; பொன்னாடை யணிந்தோன்; கருடக்கொடியுடையோன். சங்கு, பகைவரை யழிக்கும் சக்கரப் படையினை ஆகியவற்றை ஏந்தியவன். நீலமணி போலும் திருமேனியுடையோன். புகழினையும், அழகிய மார்பினையும் உடையவன் எனப் பரிபாடல் திருமாலைப் போற்றுகின்றது.

முழுமையாகக் கிடைத்துள்ள பரிபாடல்களில் 1, 2, 3, 4, 13, 15 ஆகிய ஆறு பாடல்கள் திருமாலைப் போற்றுவனவாக அமைந்துள்ளன. அவற்றுள் முதற்பாடலை இயற்றிய ஆசிரியர் பெயரும், இசையமைத்தோர் பெயரும் காணப்படவில்லை. கீரந்தையாரால் பாடப்பெற்ற நன்னாகனாரால் இசை யமைக்கப்பெற்றது இரண்டாம் பரிபாடல். அது பாலையாழ் என்னும் பண்ணமைந்ததாகும். கடுவன் இளவெயினனாராற் பாடப்பெற்றுப் பெட்ட நாகனாரால் இசையமைக்கப் பெற்றவை மூன்றாம் பரிபாடலும், நான்காம் பரிபாடலு மாகும். இவ்விரண்டும் பாலையாழ்ப் பண்ணில் அமைந்தனவே. நல்லெழினியாராற் பாடப்பெற்றது 13ஆம் பரிபாடல். அதற்கு இசையமைத்தோர் இன்னார் என்பது தெரியவில்லை. இதற்குப் பண் நோதிறம் எனச் சுவடிகளில் காணப்பெறுகிறது. இளம்பெருவழுதி யாராற் பாடப்பெற்று மருத்துவன் நல்லச்சுதனாரால்

இசையமைக்கப்பெற்றது 15ஆம் பரிபாடலாகும். இதற்குரிய பண்ணும் சுவடிகளில் பண் நோதிறம் எனக் குறிக்கப் பெற்றுள்ளது.

"செய்யோள் சேர்ந்த நின்மாசில் அகலம்" (பரி. 2:31)

"திருவரையகலம் தொழுவோர்க்கு
உரிதமர் துறக்கமும் உரிமைநன் குடைத்து"
(பரி. 13:12,13)

எனவரும் பரிபாடற் றொடர்கள், திருமாலின் தேவியாகிய திருமகளது அருள் பெற்றே திருமாலை அடைதல் வேண்டும் என்னும் வைணவ நெறிமுறையினைப் புலப்படுத்தும் குறிப்புடையவாதல் நுணுகி நோக்கத்தக்கது.

திருமால் பாம்பணையில் பள்ளி கொண்டருளுதல் பற்றிச் சார்த்து வகையால் ஆதிசேடன் வழிபாடும் திருமால் வழிபாட்டோடும் பரிபாடலில் இணைத்துரைக்கப் பெற்றுள்ளது. மதுரையை அடுத்துள்ள குளவாய் அமைந்தான் நகரில் பூமுடிநாகராகிய ஆதிசேடனுக்காகத் தனிக்கோயில் அமைந்துள்ளமை முன்னர்க் கூறப்பட்டது. பாம்பு வழிபாடு பாரத நாட்டின் பலபகுதிகளிலும் நெடுங்காலமாக நிலைபெற்று வருவதாகும். சிவபெருமான் பாம்புகளை அணிகலனாக அணிந்து கொண்டமையும், திருமால் பாம்பணையில் பள்ளிகொண்டருளினமையும் நாகவழிபாட்டின் தொன்மையினையும் அவ்வழிபாடு சிவன் வழிபாட்டோடும், திருமால் வழிபாட்டோடும் சார்புடையதாய் இணைந்து தொடர்ந்து வருதலையும் புலப்படுத்தல் காணலாம்.

பால்போலும் மதியை (இராகு என்னும்) பாம்பு மறைத்ததாக, நீனிறவண்ணனாகிய திருமால் அம் மறைப்பினை நீக்கி மதியை விடுவித்த செய்தி, 'பான்மதி சேர்ந்த அரவினைக் கோள்விடுக்கும் நீனிற வண்ணனும் போன்ம்' எனவரும் முல்லைக்கலித் தொடரிற் குறிக்கப் பெற்றது. யாவராலும் பெறுதற்கரிய பெரும் பொருளாகிய முறையையுடைய திருமால், அன்பர் பாடும் இசைப்

பாட்டுடன் யாழிசையினையும் கேட்டுப் பள்ளி கொள்ளும் தோற்றம் "அரும்பொருள் மரபின் மால் யாழ்கேளாக் கிடந்தான்போல் பெருங்கடல் துயில் கொள்ளும் வண்டிமிர் நறுங்கானல்" என ஒலியவிந்தடங்கிய கடலுக்கு உவமையாகக் கூறப்பட்டது.

கண்ணனாகிய திருமால், தன்னை அகப்படுத்தற் பொருட்டுப் பகைவரால் அனுப்பப் பெற்ற மல்லர்களின் வீரத்தைக் கெடுத்து, அழித்துத் தன் நண்பர் குழாத்தில் கலந்து மகிழ்ந்த செய்தி,

> "நீள் மருப்பு எழில் யானை
> மல்லரை மறஞ்சாய்த்த மால்போல் தன்கிளை நாப்பண்
> கல்லுயர் நனஞ்சாரல் கலந்தியலும் . . . ." (கலி. 52)

என்ற தொடரிலும்,

> "மல்லரை மறஞ்சாய்த்த மலர்த்தண்டார்" (கலி. 134)

என்ற தொடரிலும் குறிக்கப்பட்டுள்ளது.

பண்டைக் காலத்தில் இளங்குழந்தைகட்குப் பாதுகாப்பாகத் திருமாலுடைய வாட்படையினையும், சிவபெருமானுடைய மழுப்படையினையும் பொன்னாற் செய்து காப்பாகக் கட்டுதல் மரபு. இச்செய்தி,

> "பொலஞ்செய் மழுவொடு வாளணி கொண்ட
> நலங்கிளர் ஒண்பூண்" (கலி. 86)

எனவருந் தொடராற் புலனாகும். "பொன்னாற் செய்த மழுவோடே வாளும் அணிதலைக் கொண்ட நன்றே விளங்குகின்ற ஒள்ளிய பூண்" என்பது இத்தொடரின் பொருள். இவ்வாறு பண்டை நாளில் குழந்தைகளுக்கு நோய் முதலியன வாராது காக்கும் அணிகளாக அறிவிக்கப் பட்டவை, வெட்டாத வாளும் எறியாத மழுவும் இரு புறத்தினும் நெருங்கக் கட்டிப் பவளத்தாற் செய்த இடபத்தினையுடையதாய் விளங்குகின்ற பூண்களாகும். இச்செய்தி,

"எறியா வாளும் எற்றா மழுவும்
செறியக் கட்டி யீரிடைத் தாழ்ந்த
பெய்புல மூதாஅய்ப் புகர்நிறத் துகிரின்
மையற விளங்கிய ஆனேற் றவிர்பூண்"

எனவரும் கலித்தொகைத் தொடரால் அறியப்படும். "பூணப்பட்டவை வெட்டாத வாளும், வெட்டாத மழுவும் நெருங்கக் கட்டி இரண்டு புறத்திலும், தங்கின மழை பெய்த புலத்து ஈயல் மூதாயினது (பட்டுப்பூச்சி, இந்திரகோபப் பூச்சி) புகரையுடைத்தாய நிறத்தையுடைய அழுக்கறவிளங்கிய இடபத்தையுடைய விளங்குகின்ற பூண்" என்பது மேற்குறித்த தொடரின் பொருள்.

திருமாலும் சிவபெருமானுமாகிய இருபெருந் தெய்வங்கட்குரிய வாளும், மழுவுமாகிய இருபடைகளையும் அவற்றுடன் சிவபெருமானது ஊர்தியாகிய இடபத்தினையும் பொன்னாலும், பவளத்தாலும் செய்து அமைத்த பூணினை வளருங் குழந்தைகட்கு அணிகலனாக அணியும் பழக்கம் சங்ககாலத்தில் நிலவியிருந்தமை மேற்குறித்த கலித்தொகைத் தொடராற் புலனாகும். இவ்வழக்கத்தினை அடியொற்றி யமைந்ததே காத்தற் கடவுளாகிய திருமாலுக்குரிய ஐம்படைகளைக் குழந்தைகட்கு ஐம்படைத்தாலியாக அணியும் வழக்கமெனக் கருத வேண்டியுள்ளது.

முல்லை நிலமக்களாகிய கோவலர்களால் ஏறு தழுவுதற்பொருட்டுச் செலுத்தப்பட்ட காளைகளின் நிறங்களைக் குறித்து,

"வானுற வோங்கிய வயங்கொளிர்பனைக் கொடிப்
பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளையும்
பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ் நேமித்
திருமறு மார்பன்போற் றிறல்சான்ற காரியும் . . . . ."
(கலி. 104)

எனவும்,

"வள்ளருள் நேமியான் வாய்வைத்த வளை போலத்
தெள்ளிதின் விளங்குஞ் சுரிநெற்றிக் காரியும்

ஒருகுழை யவன்மார்பில் ஒண்டார்போல் ஒளிமிகும்
பொருவறப் பொருந்திய செம்மறு வெள்ளையும்"
(கலி. 105)

எனவும் வரும் முல்லைக் கலித்தொடர்களில் திருமால், பலதேவன் ஆகிய இருவரது தோற்றமும் உவமையாக எடுத்தாளப்பட்டுள்ளமை காணலாம்.

ஆயர்களால் ஏறுதழுவுவதற்கென விடப்பட்ட எருதுகளுள் கரிய எருதிற்குத் திருமாலையும் அதன் தெளிந்த நெற்றியில் விளங்கும் சுட்டிக்குத் திருமால் கையிலுள்ள சங்கினையும் செந்நிறப்புகர் நீண்டு பொருந்திய வெள்ளை எருதிற்குச் சிவந்த மாலையினை மார்பிலணிந்த நம்பி மூத்தபிரான் ஆகிய பலதேவனையும் உவமையாக நல்லுருத்திரனார் குறிப்பிடுவர்.

முல்லைநிலத்துக் கோவலர் தம்மால் மேய்க்கப் பெறும் ஆநிரைகள் பாற்பயன் தருதல் வேண்டித் திருமாலைப் பரதவிப் போற்றுதலும், தம்மகளிரைத் தகுதியுடைய தலைவருக்கு மணம் செய்து கொடுத்தல் வேண்டி வலிய காளைகளை வளர்த்துக் கொல்லேறு களாகிய அவற்றை அடக்கிப் பிடிக்கும் தறுகண்மை மிக்க ஆடவனுக்குத் தம் மகளை மணம் செய்து கொடுத்தலும் ஆகிய ஒழுகலாறு உடையராய் மாயோனைத் தெய்வமாக வழிபட்டு வாழ்ந்தனர். முல்லை நிலத்து மகளிராகிய ஆய்ச்சியர் குரவைக் கூத்தாடி மாயோனை வழிபடு கடவுளாகக் கொண்டு போற்றினர். இச்செய்தி,

"குரவை தழீஇ யாம் மரபுளிபாடித்
தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்
மாசில்வான் முந்நீர்ப் பரந்த தொன்னிலம்
ஆளுங் கிழமையொடு புணர்ந்த
எங்கோ வாழியரிம் மலர்தலையுலகே" (கலி. 103)

எனவும்,

"ஆங்குத்
தொல்கதிர் திகிரியாற் பரவுதும் ஒல்கா

உருமுறழ் முரசிற் றென்னவற்
கொருமொழி கொள்க விவ்வுலகுட னெனவே"

(கலி. 104)

எனவும்,

"பாடிமிழ் பரப்பகத் தரவணை, யசைஇய
ஆடுகொள் நேமியாற் பரவுதும் நாடுகொண்
டின்னிசை முரசிற் பொருப்பன் மன்னி
அமைவர லருவி யார்க்கும்
இமையத் தும்பரும் விளங்குக வெனவே" (கலி. 105)

எனவும்,

"அருந்தலை ஏற்றொடு காதலர்ப் பேணிச்
சுரும்பிமிர் கானம் நாம் பாடினம் பரவுதும்
ஏற்றவர் புலங்கெடத் திறை கொண்டு
மாற்றாரைக் கடக்க வெம்மறங் கெழு கோவே"

(கலி. 106)

எனவும்,

தம் வழிபடு தெய்வம் புறங்காப்பதாம் எனவும் நாடாள் வேந்தனாகிய பாண்டியன் வெற்றியும் புகழும் உடையனாய் நீடு வாழ்தல் வேண்டும் எனவும் வாழ்த்துதலால் இனிது விளங்கும்.

ஆயர்மகளிர் தொழுநையாற்றில் நீராடுங்கால் தம்முடைகளைக் களைந்து கரையில் வைத்துவிட்டு நீராடினர். அந்நிலையில் அங்குவந்த கண்ணபிரான் விளையாட்டாக அவர்தம் உடைகளைக் கவர்ந்து கொண்டு குருந்த மரத்தில் ஏறியமர்ந்தான். அப்பொழுது அங்குப் பலதேவன் வரக் கண்டு அவ்வாயர் மகளிர் தம் நாணினைக் காக்கவியலாது பெரிதும் வருந்தினர். அந்நிலையில் அம்மகளிர் பொருட்டுக் குருந்த மரக்கிளைகளின் தழைகளைத் தாழ்த்திக் கொடுத்து அம்மகளிர் தழை யுடையில் தம் அற்றமறைத்துத் தம் உயிரினும் சிறந்த நாணினைப் பாதுகாத்துக் கொள்ளுமாறு செய்தருளினன் என்பது கண்ணன் விளையாடல் பற்றிய செய்தியாகும். இது,

"வடாஅது
வன்புனல் தொழுநை வார்மண லகன்றுறை
அண்டர் மகளிர் தண்டழை யுடீஇயர்
மரஞ்செல மிதித்த மாஅல் போல" (அகம். 59)

எனவரும் அகநானூற்றுப் பாடலிற் குறிக்கப்பெற்றது. இச்செய்தியினை,

"நீனிற வண்ணனன்று நெடுந்துகில் கவர்ந்து தம்முன்
பானிற வண்ணன் நோக்கிற் பழியுடைத் தென்றுகண்டாய்
வேனிறத் தானைவேந்தே விரிபுனற் றொழுநை யாற்றுட்
கோனிற வளையினார்க்குக் குருந்தவ ணொசித்த
தென்றான்" (சிந்தாமணி. 209)

எனவரும் பாடலில் திருத்தக்க தேவர் விரித்துரைத்துள்ளமை காணலாம். காத்தற் கடவுளாகிய திருமால், ஆழியாகிய சக்கரப் படையினை ஏந்தியமையின் ஆழி முதல்வன், ஆழியான், திகிரிச் செல்வன், திகிரியோன், நேமியான், நேமியோன் எனவும், கரிய திருமேனியுடைமை பற்றி மாயோன், முந்நீர்வண்ணன், அஞ்சனவுருவன், நீல்நிற வண்ணன் எனவும், கருடனைக் கொடியாகக் கொண்டமை பற்றிச் சேவலோங்குயர் கொடியோன், புட்கொடி விறல்வெய்யோன், புள்மிசைக் கொடியோன், புள்ளின் நீள்கொடிச் செல்வன் எனவும், திருமகளை மார்பிற் கொண்டமை பற்றித் திருமறுமார்பின் திருவமர்ச் செல்வன் எனவும், துழாய் மாலையை அணிந்தமை பற்றித் துழாயோன், துழாய்ச் செல்வன், துழாய் மார்பினோன் எனவும், பாம்பணையில் பள்ளி கொண்டமை பற்றி அரவணை அசைஇய நேமியோன், பாம்பணைப் பள்ளியமர்ந்தோன் எனவும், பாற்கடலில் அரவணை மிசை யோகநித்திரை கொள்ளும் நிலைகுறித்து அறிதுயிலோன் எனவும், குறளனாகச் சென்று மூவடி மண்வேண்டி மூவுலகும் ஈரடியால் அளந்தமை பற்றி 'ஞாலமூன்றடித்தாய முதல்வன்' எனவும், பொன்னாடையுடுத்தருளல் பற்றிப் பொன்புனை யுடுக்கையோன் எனவும், வியக்கத்தக்க தோற்றமும் செயல்களுமுடைமைபற்றி மாயவன் எனவும், வேதங்களாற் போற்றப்படும் முழுமுதற் பொருளாதல் பற்றி வேதமுதல்வன்

வாய்மொழிப் புலவன் எனவும் சங்க இலக்கியங்களில் போற்றப் பெறுகின்றார். திருமாலின் அவதாரமாகிய இராமபிரான் தன் தேவியை வவ்விய தூர்த்தனாகிய இராவணனைக் கொல்லுதற் பொருட்டுக் கோடிக்கரையி லுள்ள ஆலமரத்தினடியில் தன் நண்பர்களுடன் அமர்ந்து போரில் வெற்றி பெறும் திறத்தினைச் சூழ்ந்து உரையாடிக் கொண்டிருந்தார். அந்நிலையில் அம்மரத்தில் உள்ள பறவைகளின் ஆர்ப்பொலிகள் மிக்கன. அதுகண்ட இராமபிரான் தம் கையினை அமர்த்திப் பறவைகளின் ஆரவாரம் உடனே யடங்கும்படி செய்தார். இராமாயணம் பற்றிய இச்செய்தி தமிழக மக்களாற் பேசப்பட்டு வருகிறது. இது

"வென் வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிடும் பௌவ மிரங்கு முன்றுறை
வெல்போ ரிராமன் அருமறைக் கவிந்த
பல்வீ ழாலம் போல
ஒலியவிந்தன்றிவ் வழுங்க லூரே" (அகம். 70)

எனவரும் அகநானூற்றுப் பாடற் றொடரில் இடம் பெற்றுள்ளமை காணலாம்.

திருமால் அமிசமாகிப் பிறந்த பரசுராமன் மன்னர் மரபினை வேரறக் கொன்று 'செல்லூர்' எனும் ஊரிலே களவேள்வி செய்தான் என்ற செய்தி,

"கெடாஅத் தீயின் உருகெழு செல்லூர்க்
கடாஅ யானைக் குழூஉச்ச மந்தகைய
மன் மறுங் கறுத்த மழுவாள் நெடியோன்
முன் முயன் றரிதினின் முடித்த வேள்விக்
கயிறரை யாத்த காண்டகு வனப்பின்
அருங்கடி நெடுந்தூண் போல" (அகம். 220)

என்ற தொடரால் அறியப்படும்.

சிவபெருமானும், திருமாலும் சங்கரநாராயணர் என ஒருவராகத் திகழும் தோற்றம், அந்திவானும், கடலும் சேர்ந்த

தோற்றத்திற்கு உவமையாக அகநானூறு 360ஆம் பாடலில் எடுத்தாளப்பெற்றுள்ளது.

"வெருவரு கருந்திறல் இருபெருந் தெய்வத்து
உருவுட னியைந்த தோற்றம் போல
அந்தி வானமொடு கடலணி கொளாஅ
வந்த மாலை" (அகம். 360)

என்பது அப்பாடற் பகுதியாகும்.

பிறரை வருத்தும் அச்சத்தினையுடைய அசுரர்கள் உலகத்திற்கு ஒளிவழங்கும் ஞாயிற்றைக் கவர்ந்து கொண்டு போய் மறைத்தார்களாக, வானத்தே ஒளிதரும் அஞ்ஞாயிற்றைக் காணாமையால் இருளானது உலகத்துயிர் களின் கண்களை மறைக்க, உலகம் துயருற்றது. உலகில் ஒளியின்மையால் அவ்வுயிர்கட்கேற்பட்ட துன்பத்தை நீக்கும் பொருட்டு, மை போலும் நிறம் வாய்ந்த திருமேனியை யுடைய திருமால், அஞ்ஞாயிற்றை மீட்டுக் கொணர்ந்து இவ்வுலகின்கண் இருள் நீங்கும்படி வானகத்து நிலை நிறுத்தினார் என்பது புராண வரலாறாகும். இதனை,

"அணங்குடை யவுணர் கணக்கொண் டொளித் தெனச்
சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது
இருள்கண் கெடுத்த பருதி ஞாலத்து
இடும்பைகொள் பருவரல் தீரக் கடுந்திறல்
அஞ்சன வுருவன் றந்து நிறுத்தாங்கு . . . ." (புறம். 374)

எனவரும் புறப்பாடலில் மாறோக்கத்து நற்பசலையார் எனும் புலவர் உவமையாக எடுத்தாண்டுள்ளமை இங்கு நோக்கத்தகுவதாகும்.

திருமால் இராமபிரானாக அவதரித்துத் தாதை ஏவலால் சீதையுடன் காட்டின்கண் தங்கியிருந்தபோது இராவணன் வஞ்சனையால் வேற்றுருக்கொண்டு சீதையைக் கவர்ந்து வான்வழி விமானத்தில் செல்லும்போது சீதா பிராட்டி தான் அயலானாற் கவரப்பட்டுச் செல்லும் வழியைத் தன்னைப் பிரிந்து வருந்தும் இராமபிரான் கண்டு

கொள்ளும்படித் தான் அணிந்த அணிகலன்களைக் கழற்றி விமானம் செல்லும் வழியே நிலத்திற்போட்டுச் சென்றாள் எனவும், அவ்வணிகலன்களைக் கண்டெடுத்த கிட்கிந்தையி லுள்ள குரங்குகள் அவ்வணிகலன்களை அணியும் முறைமை யறியாது கண்டோர் நகைக்கும்படி மாறி அணிந்து கொண்டன என்ற செய்தி,

> "கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை
> வலித்தகை யரக்கன் வவ்விய ஞான்றை
> நிலஞ்சேர் மதரணிக் கண்ட குரங்கின்
> செம்முகப் பெருங்கிளை இழைப்பொலிந் தாங்கு
> அராஅ அருநகை இனிது பெற்றிகுமே" (புறம். 378)

எனவரும் புறப்பாடலில் குறிக்கப்பெற்றுள்ளமை காண்க.

> "கருவளர் வானத் திசையிற் றோன்றி
> உருவறி வாரா வொன்ற னூழியும்
> உந்துவளி கிளர்ந்த வூழூ ழூழியும்
> செந்தீச் சுடரிய வூழியும் பனியொடு
> தண்பெய றலைஇய வூழியு மவைவயிற்
> றுண்முறை வெள்ள மூழ்கி யார்தருபு
> மீண்டும் பீடுயர் பீண்டி யவற்றிற்கும்
> உள்ளீ டாகிய விருநிலத் தூழியும்" (பரி. 2 : 5-12)

எனவரும் பரிபாடற்றொடர் உலகின் தோற்றவொடுக்கம் உரைப்பதாய் ஐம்பெரும் பூதங்களின் தோற்ற வொடுக்கத் தையும் புலப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது. இத் தொடரில் வானத்து உருவறிவாரா ஒன்றனூழி, உந்துவளி கிளர்ந்த ஊழூழூழி, செந்தீச் சுடரியவூழி, தண்பெயல் தலைஇயவூழி, மீண்டும் வெள்ளம் மூழ்கி உள்ளீடாகிய இருநிலத்தூழி, கேழல் திகழ்வரக்கோலமொடு பெயரியவூழி என ஏழூழிகள் குறிக்கப்பெற்றன. ஊழிகள் ஏழு வகையின என்னும் இக்குறிப்பு,

> "ஊழியேழான ஒருவா போற்றி"

எனவும்,

"ஏழு கொலாமவர் ஊழி படைத்தன"

எனவும் வரும் திருநாவுக்கரசர் தேவாரத்திலும் இடம் பெற்றுள்ளமை காணலாம்.

"பரம்பொருளினின்றும் ஆகாயம் தோன்றி, அதனின்றும் காற்றுத் தோன்றி, அதனின்றும் தீத் தோன்றி, அதனின்றும் நீர்தோன்றி, அதனின்றும் நிலம் தோன்றிற்று என்று வேதத்துள்ளும் கூறப்பட்டது" என இத்தொடருக்கு வேதநெறிபற்றிப் பரிமேலழகர் தரும் விளக்கம் சங்ககாலத்தில் வாழ்ந்த திருமால் நெறியினர் பின்பற்றிய தத்துவக் கொள்கையினை ஒருவாறு புலப்படுத்தல் காணலாம். வைணவ சமயத்தினர் உலகு, உயிர், கடவுள் என்னும் முப்பொருள்களை முறையே சகசீவபரம் எனப் பகுத்துணரும் நிலையில் பல்பொருட் கொள்கையினராகக் காணப்படு கின்றனர் எனினும், அம்மூன்றனுள் உலகு, உயிர்களை முறையே பரம்பொருளுக்கு உடைமையாகவும், அடிமையாக வும் அடக்கிய நிலையில் முடிந்த முடிபாகப் பரம்பொருள் ஒன்றே பொருள் என்னும் ஒருபொருட் கொள்கையினை உடன்படும் நிலையிலும் அவர்தம் தோத்திரப் பனுவல்கள் அமைந்துள்ளன. இறைவன் உலகுயிர்கட்கு நிமித்த காரணனாதலேயன்றி முதற்காரணமாகவும் உள்ளான் என்பது வைணவர் தத்துவக் கொள்கையாகும்.

மன்னுயிர்களும், உலகமும் மாயோனாகிய பரம்பொருளிடத்தே தோன்றி அவனிடத்திலேயே ஒடுங்குவன என்னும் இக்கொள்கை,

"தீவளி விசும்பு நிலனீ ரைந்து
ஞாயிறுந் திங்களு மறனு மைவரும்
திதியின் சிறாரும் விதியின் மக்களும்
மாசி லெண்மரும் பதினொரு கபிலரும்
தாமா விருவருந் தருமனு மடங்கலும்
மூவே ழுலகமு முலகினுண் மன்பதும்
மாயோய் நின்வயிற் பரந்தவை யுரைத்தேம்

மாயா வாய்மொழி யுரைதர வலந்து" (பரி. 3 : 4 - 11)

எனவரும் பரிபாடற்பகுதியில் இடம் பெற்றுள்ளது.

நித்தியமாகிய வேதம் தேவரும், மூவகை உலகுகளும், உயிர்ப் பன்மையும் நின்கட் டோன்றியவாறு அறிந்து கூறும். சிற்றறிவினேமாகிய யாம் அவற்றுட் சிலவற்றை முறை பிறழக் கூறுவதல்லது அவ்வாறு எல்லாம் கூறுதற்கு உரியம் அல்லம் என்பார், 'வலந்துரைத்தேம் என்றார்' என இத்தொடரின் கருத்தினைப் புலப்படுத்துவர் பரிமேலழகர். எனவே சடமும், சித்துமாகிய எல்லாம் வாசுதேவன் பரிணாமமே ஆம் என்னும் பாஞ்சராததிரர் கொள்கைக்கு மூலமாக விளங்குவது மேற்காட்டிய பரிபாடல் பகுதி என்பது நன்கு புலனாம்.

சாங்கியர் கூறுமாறு தத்துவங்கள் இருபத்தைந்தெனக் கொள்ளுங் கொள்கை சங்க நூல்களில் இடம் பெற்றுள்ளது

"பாழெனக் காலெனப் பாகென வொன்றென
இரண்டென மூன்றென நான்கென வைந்தென
ஆறென வேழென வெட்டெனத் தொண்டென,
நால்வகை யூழியெண் ணவிற்றும் சிறப்பினை" (பரி. 3)

எனவரும் தொடரில் பாழ் என்றது புருடனை. புருடத்துவம் பிறிதொரு தத்துவம் பிறத்தற்கிடனாகாது என்பது சாங்கியர் கொள்கை. அவர் மதம் பற்றிப் புருட தத்துவம் பாழ் எனப் பெயர் பெற்றது. கால் என்றது ஆகாயம் முதற் பூதங்கள் ஐந்தினையும். இவை தாம் பிறவற்றினின்றும் தோன்றுத லானும், தம்மிடத்திலிருந்து பிற தோன்றுதற் கிடனாத லானும் கால் எனப் பெயர் பெற்றன. காலுதல் ஒன்றினின்று வெளிப்படுதல் அன்றி, தன்னிலிருந்து ஒன்றை வெளிப் படுத்துதல் என்ற இவ்விருபொருளில் ஈண்டு வழங்கப் பெற்றது.

பாகு என்றது சொல்லல், இயங்கல், கொடுத்தல், விடுத்தல், இன்புறுதல் என்னும் தொழிலால் பாகுபாடுடைய வாக்கு, கால், கை, எருவாய், கருவாய் ஆகிய தொழிற் கருவி

(கன்மேந்திரியம்) ஐந்தனையும் குறித்தபெயர்.

> *"ஒன்று என்றது ஆகாயத்தின் பண்பாகிய ஓசையினை 'எல்லாப் பண்பிற்கும் முற்றோன்றுதலால் ஒன்றெனப் பட்டது' என்பர் பரிமேலழகர். இரண்டு என்றது காற்றின் சிறப்புப் பண்பாகிய ஊறு. மூன்று என்றது தீயின் சிறப்புப் பண்பாகிய ஒளியினை. நான்கு என்றது நிலத்தின் சிறப்புப் பண்பாகிய சுவையினை. ஐந்து என்றது நிலத்தின் சிறப்புப் பண்பாகிய நாற்றத்தினை. ஆறு என்பன செவி, மெய், கண், நா, மூக்கு என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் மனமும். ஏழு என்றது அகங்காரம். எட்டு என்றது மான். அஃதாவது புத்தி. தொண்டு என்றது மூலப் பகுதி. நால்வகை யுகங்களிலும் இவ்வெண்களால் நவிலப்படும் சிறப்பினையுடையாய்"*

என இவ்வாசிரியர் திருமாலைப் பரவியதன் கருத்து, பூதங்கள் ஐந்தும் கன்மேந்திரியங்கள் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும் புலன்கள் ஐந்தும், மனம் முதலிய அந்தக்கரணங்கள் மூன்றும் மூலப்பகுதியும் எனக் கூறப்பட்ட தத்துவங்கள் இருபத்தைந்தினாலும் எக்காலத்தும் ஆராயப்படும் பெருமையையுடையோன் திருமால். என்றவாறு, ஈண்டுத் தொண்டு எனப்பட்ட மூலப்பகுதி என்றும் நிலையுடையதாய், எல்லாவற்றையும் அடக்கும் விரிவுடைய தாய், அறிவிலதாய், எல்லாப் பொருட்கும் காரணமாய், சத்துவம் இராசதம் தாமதம் என்னும் முக்குணங்களும் ஒப்ப நின்ற நிலையினதாய் அருவாய் உள்ளதாகும். இஃது இருபத்து நாலாம் தத்துவம். இதன்கண் தோன்றும் காரியம் புத்தி (மான்) முதல் நிலம் ஈறாக இருபத்து மூன்று தத்துவங்களாகும். இங்குக் கூறப்பட்ட தத்துவம் இருபத்து நான்கிற்கும் வேறாய், நிலைபேறும் விரிவும் உடையதாய், அருவாய், பலவாய், அறிவதும் செய்வதுமின்றி வெறும் அறிவு மாத்திரமாய் ஒன்றற்குக் காரணமாதலும் காரியமாதலுமின்றி நிற்கும் ஆன்மாக்கள் இருபத்தைந்தாம் தத்துவம் எனப்படும். இவ்விருபத்தைந்தாம் தத்துவமாகிய புருடன் வீட்டு

நிலையிலும், கட்டு நிலையிலும் ஒரு தன்மையனேயாம். புருடனுக்கு மலினம் என்பது இல்லை. தாமரை இலை நீர் போல் ஒட்டற்று நிற்பன். தோற்றமில் காலமாகப் புத்தியைச் சார்ந்த அவிச்சைவயத்தால் பாசங்களாற் பிணிப்புடையோன் எனப்பட்டு இவன்பால் இன்பதுன்ப உணர்வு தோன்றா நின்றது. புத்தி என்றது மூலப்பகுதியின் பரிணாமம் (திரிபு). அதுவே மான் என்றும் கூறப்படும். புத்தியாகிய அது பொறிவாயிலாக ஞானமாய்ப் பரிணமித்து உலகப் பொருள்களிற் செல்லும். புருடன் ஒன்றைச் செய்வான் என்பதும் புத்தி ஒன்றை அறியும் என்பதும் இவற்றிடையே உள்ள வேற்றுமை உணராமையால் கூறப்படும் கூற்றாகும். அறிவில் பொருளாகிய மூலப்பகுதியையும் அறிவுடைய புருடனையும் பகுத்து உணரவே அவிச்சை நீங்கும். அதுவே முத்தியாகும் என்பர் சாங்கியர்.

சாங்கியர் கூறும் இருபத்து நாலாம் தத்துவமாகிய குணதத்துவத்தின்மேல் இருபத்தைந்தாம் தத்துவம் வாசுதேவன் என்று ஒருவன் உளன். அவனே பரம்பொருள். அவனிடத்தினின்றும் கண்ணனும், அநிருத்தனும், மகரத்துவசனும் இரௌகிணேயனும் என நால்வர் உலகங்களைப் படைத்தற்கெனத் தோன்றினர். இந்த நால்வகை வியூகங்களால் சடமும் சித்தும் ஆகிய எல்லா உலகமும் படைக்கப்பட்டன. ஆதலால் எல்லாப் பொருள் களும் வாசுதேவனது பரிணாமமே ஆம். ஆதலால் பரம் பொருளாகிய வாசுதேவனை வழிபட்டு வாசுதேவன் உருவில் இலயமாதலே முத்தி என்பதாம் என்பது வைணவ சமயத் தாருள் ஒருபகுதியாகிய பாஞ்சாரத்திரர் கொள்கையாகும்.

> "சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
> வகைதெரிவான் கட்டே யுலகு" (குறள். 27)

எனவரும் திருக்குறளுக்கு, "சுவையும் ஒளியும் ஊறும் ஓசையும் நாற்றமும் என்று சொல்லப்பட்ட தன்மாத்திரைகள் ஐந்தனது கூறுபாட்டையும் ஆராய்வான் அறிவின்கண்ணதே உலகம்" என உரைவரைந்த பரிமேலழகர்,

"அவற்றின் கூறுபாடாவன பூதங்கட்கு முதலாகிய

அவைதாம் ஐந்தும், அவற்றின்கண் தோன்றிய அப் பூதங்கள் ஐந்தும், அவற்றின் (பூதங்களின்) கூறாகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும் ஆக இருபதுமாம். வகை தெரிவான்கட்டு என உடம்பொடு புணர்த்ததனால், தெரிகின்ற புருடனும் அவன் தெரிதற்கருவியாகிய மான் அகங்கார மனங்களும் அவற்றிற்கு முதலாகிய மூலப்பகுதியும் பெற்றாம். தத்துவம் இருபத்தைந்தனையும் தெரிதலாவது மூலப்பகுதி ஒன்றிற்றோன்றியது அன்மையின், பகுதியே யாவதல்லது விகுதியாகாதெனவும், அதன்கண் (மூலப்பகுதி யின்கண்) தோன்றியமானும், அதன்கண் (மானின்கண்) தோன்றிய அகங்காரமும், அதன்கண் (அகங்காரத்தின்கண்) தோன்றிய தன்மாத்திரைகளும் ஆகிய ஏழும் தத்தமக்கு முதலாயதனை நோக்க விகுதியாதலும், தங்கட்டோன்று வனவற்றை நோக்கப் பகுதியாதலும் உடையவெனவும், அவற்றின்கண் (தன்மாத்திரையின்கண்) தோன்றிய மனமும் ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களுப் பூதங்களுமாகிய பதினாறும் தங்கட் டோன்றுவன வின்மையின் விகுதியேயாவ தல்லது பகுதியாகாவெனவும், புருடன் தானொன்றிற் றோன்றாமை யானும் தன்கட் டோன்றுவன இன்மையானும் இரண்டும் அல்லன் எனவும் சாங்கிய நூலுள் ஓதியவாற்றான் ஆராய்தல். இவ்விருபத்தைந்துமல்லது உலகெனப் பிறிதொன்றில்லையென உலகினதுண்மை யறிதலின், அவனறிவின் கண்ணணதாயிற்று" எனச் சாங்கியர் கூறும் இருபத்தைந்து தத்துவங்களை வகைப்படுத்துரைக்கின்றார். அவர் கூற்றுப்படி தத்துவத் தோற்றம் பின்வருமாறு அமையும்.



இவை பதினாறும் விகுதியேயாவன.

விசும்பினின்று வளியும், வளியினின்று தீயும், தீயினின்று நீரும், நீரினின்று நிலமும்தோன்றின என்னும் வேதநூற் கொள்கையை அடியொற்றிய நிலையில் ஐம்பெரும் பூதங்கள் கால் என்ற பெயரால் 3 ஆம் பரிபாடல் 77ஆம் அடியில் குறிக்கப்பெற்றன என்பது பரிமேலழகர் தரும் விளக்கமாகும். சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் தன்மாத்திரையினின்றும் முறையே ஐம்பெரும் பூதங்களும் தோன்றின என்னும் சாங்கியர் கொள்கையொடு இங்கு எடுத்துக் காட்டிய வேதநூற் கொள்கை வேறுபடுதல் காணலாம். பிரமத்தினின்று ஆகாயமும், ஆகாயத்தினின்று வளியும், வளியினின்று தீயும், தீயினின்று நீரும், நீரினின்று நிலமும் தோன்றின என்னும் வேதநூற்கொள்கை சாங்கியர்க்கு உடன்பாடன்று. சாங்கியர் கூறும் இருபத்தைந்து தத்துவப் பாகுபாடு வைதிகர்க்கு உடன் பாடன்று. சங்ககாலத்து வைணவ சமயத்தினர் எல்லா வற்றிற்கும் அடிப்படையாகத் தத்துவம் இருப்தைந் தென்றும் சாங்கியர் கொள்கையைப் பொதுவாக உடன் பட்டனர் எனினும் ஐம்பெரும் பூதங்களின் தோற்றம் பற்றிக் கூறும் பொழுது விசும்பு முதலாகிய அவை ஐந்தும் ஒன்றினொன்று தோன்றின என்னும் வைதிக நூல் கொள்கையே தழுவினர் என்பது,

"பாழ்எனக் காலெனப் பாகென"

எனவரும் பரிபாடற் றொடராலும் கால் என்னும் சொற்குப் பரிமேலழகர் தரும் உரைவிளக்கத்தாலும் உய்த்துணரப்படும்.

"இந்நிலைத் தெரிபொரு டேரி னிந்நிலை
நின்னிலைத் தோன்றுநின் றொன்னிலைச் சிறப்பே"
(பரி. 2; 26-27)

எனவரும் பரிபாடற் றொடரில் "தெரிபொருள் என்றது உலகப் பெருள்களைத் தெரிந்துணரும் தன்மையினதாகிய உயிர்த் தொகுதியை. தெரிபொருள் என்னும் வினைத் தொகை தெரியும் பொருள் என நிகழ்காலத்தான்

விரிக்கப்படும், உயிர்ப்பொருட்கு உணர்தற் பண்பு இயற்கை யாதலின்" எனப் பரிமேலழகர் தரும் விளக்கம் பரிபாடலிற் காணப்படும் ஆன்மாவின் இலக்கணத்தை நன்கு புலப்படுத்தல் காணலாம். 'உயிர் எத்தன்மைத் தெனின் உணர்தல் தன்மைத்து' எனவரும் சேனாவரையர் உரைத் தொடரும் இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும்.

> "நின்னடி
> தலையுற வணங்கினேம் பன்மாண் யாமும்
> கலியி னெஞ்சினே மேத்தினேம் வாழ்த்திநே...
> கடும்பொடும் கடும்பொடும் பரவுதும்
> கொடும்பா டறியற்க வெம்மறி வெனவே"
>
> (பரி. 2 : 72-76)

எனக் கீரந்தையார் என்னும் புலவர் திருமாலைப் பரவி வேண்டுகின்றார். இறைவனாகிய நின்னடியைத் துளக்க மில்லாத நெஞ்சினேமாய் வணங்கிப் பலகாலும் எம் சுற்றத்தோடும் சுற்றத்தோடும் ஏத்தி வாழ்த்தி எம் அறிவு தவறான நெறியில் வளைதலை அறியாதொழிக! என வேண்டிக் கொள்கின்றோம்" என்பது இத்தொடரின் பொருளாகும். கடும்பு : சுற்றம்; கடும்பொடும் கடும்பொடும் என்னும் அடுக்கு பன்மை குறித்து வந்தது. 'எம் அறிவு தவறான நெறியில் வளையாதொழிக' எனப் புலவர் வேண்டுத லால், உயிர்களின் அறிவு பொறிவழியே கோட்டமடையும் சிறுமையுடைத்து எனவும், எம்மறிவு அங்ஙனம் கோடுதலை அறியாதொழிக! என இறைவனை வேண்டவே, அம் முதல்வனதருளால் தமக்கு வீடுபெறுதற்குச் சாதனமாகிய மெய்யுணர்வு கிடைத்தல் வேண்டும் எனவும் வேண்டினார் ஆயிற்று. எனவே, சிற்றறிவுடைய உயிர்களுக்கு மெய்யுணர் வளித்துப் பிறவிப் பிணிப்பினின்றும் நீக்கி வீடுபேற்றின்பம் வழங்கவல்ல தகுதி இறைவன் ஒருவனுக்கே உரியது என்பதும் கூறினாராயிற்று. 'எம்மறிவு கொடும்பாடறியற்கவென மெய்யுணர்வினையே வேண்டினார். வீடு அதனாலல்லது எய்தப்படாமையின்' எனவரும் பரிமேலழகர் உரைவிளக்கம் இங்கு மனம்கொளத்தக்கதாகும்.

சிவபெருமான் நிலம், நீர், நெருப்பு, வளி , வான்,

ஞாயிறு, திங்கள், வேள்வி முதல்வனாகிய ஆன்மா என எண்பேருருவினனாக (அட்டமூர்த்தியாக) விளங்குகின்றான் என்பது சைவ சமயக் கோட்பாடாகும்.

> "தீவளி விசும்புநிலன்நீர் ஐந்து
> ஞயிறுந் திங்களு மறனும்" (பரி. 3 வரி. 4, 5)

எனவரும் பரிபாடலடிகளில் இக்கொள்கை இடம் பெற்றிருத்தல் காணலாம். "மாயோயே! மாயோயே!! மறுபிறப்பறுக்கும் மாசில் சேவடி, மணிதிகழ் உருவின் மாயோயே!" என அம்முதல்வனது சேவடி பெறுதற்குப் பலகாலும் எதிர்முகமாக்கிப் போற்றுகின்ற கடுவன் இளவெயினனார், அவன்கண் தோன்றிய பொருள்களைக் கூறத் தொடங்கி முதற்கண் ஈசற்கு (சிவனுக்கு) வடிவாகிய அட்டமூர்த்தங்கள் கூறுகின்றார். அவை தீ, வளி, விசும்பு, நிலம், நீர் என்னும் பூதங்களைந்தும் ஞாயிறும், திங்களும், வேள்வி முதல்வனும் என இவை வேட்கின்ற வடிவு தருமம் ஆதலின் அஃது அறன் எனப்பட்டது" எனப் பரிமேலழகர் தரும் விளக்கம் சைவ சமயக் கோட்பாட்டினை உளம் கொண்டு கூறப்பட்டதாகும்.

அனாதியாய் வருகின்ற மரபினை உடைய வேதமுதல்வனாகிய திருமால் விரிந்து அகன்ற ஆகமங்கள் எல்லாவற்றாலும், அகங்காரத்தாலும், மனத்தாலும், புத்தியினாலும், மற்றும் எல்லாவற்றாலும் வனப்பும் எல்லையும் அறியப்படாதவன் என்பது,

> "முன்னை மரபின் முதுமொழி முதல்வ
> நினக்குவிரிந் தகன்ற கேள்வி அனைத்தினும்
> வலியினு மனத்தினு முணர்வினு மெல்லாம்
> வனப்புவரம் பறியா மரபி னோயே"
> (பரி. 3 : 47 - 50)

எனவரும் பரிபாடலடிகளால் புலப்படுத்தப்பட்டது. வலியினும், மனத்தினும், உணர்வினும் என எண்ணப் பட்டவை முறையே அகங்காரம், மனம், புத்தி என்னும் அந்தக்கரணங்கள் மூன்றும் ஆகும். இப்பொருளை யான்

அறிவேன் எனமேற்பட்டுச் செல்லும் வன்மையுடையது அகங்கார மாதலின் அது வலி எனப்பட்டது. 'வலியுடையதனை வலி என்றார்' எனப் பரிமேலழகர் தரும் விளக்கம் இவ்வகக்கருவியின் இயல்பினை நன்கு புலபடுத்தல் காண்க. இங்கு உணர்வு என்றது உணருங் கருவியாகிய புத்தியினை. ஒரு பொருளைப் பற்றும் அகக்கருவி மனம் எனவும், இதனையான் அறிவேன் எனமேற்கொண்டெழும் கருவி அகங்காரம் எனவும், நிச்சயிக்கும் கருவி புத்தி எனவும் கூறுப. அகக்கருவிகளாகிய இவற்றின் இயல்பினை உய்த்துணரும் நிலையில் 'வலியினும் மனத்தினும் உணர்வினும்' எனவரும் இத்தொடர் அமைந்திருத்தல் கூர்ந்து நோக்கற்பாலதாகும். மனம், சித்தம், அகங்காரம், புத்தி என்னும் உட்கருவிகள் நான்கு. இவை அந்தக்கரணம் எனப்படும். இவற்றுள் மனம் என்பது ஐம்பொறிகளால் அறியப்பட்ட பொருள்களில் இது யாதாகற்பாலது என நினைத்தற்கும், இதுவோ, அதுவோ என ஐயுறுதற்கும், கருவியாய் நிற்பது. ஒன்றனைப்பற்றி இஃது எத்தன்மையது என நினைக்கும் நிலையில் மனம் எனவும், இதுவோ அதுவோ என விகற்பித்துணரும் நிலையில் சித்தம் எனவும், பெயர் பெறும் என மனத்தின் விருத்தியாகிய சித்தத்தை மனத்துள் அடக்கி அந்தக்கரணம் மூன்று எனவும் எண்ணுதல் மரபு.

இறைவனது இயல்பினை உள்ளவாறு அறிவார்க்கும் இவர் பகைவர் இவர் நட்டோர் என்னும் வேறுபாடு அம் முதல்வனுக்கில்லை என்பது தெளிவாகப் புலனாகும். இந்நுட்பம்,

"பகைவ ரிவரிவர் நட்டோ ரென்னும்
வகையு முண்டோநின் மரபறி வோர்க்கே"

(பரி. 3 : 57, 58)

எனவரும் பரிபாடற் றொடரால் உணர்த்தப் பெற்றமை காணலாம். இத்தொடர் 'வேண்டுதல் வேண்டாமையிலான்' எனவரும் தெய்வப்புலவர் வாய்மொழியினை அடியொற்றி அமைந்துள்ளமை காணலாம்.

எல்லாம் வல்ல இறைவன் உயிரறிவினாற் காண்டற்

கரியனாயினும் தன்னை அன்போடு தியானிக்கும் அடியார்களுடைய நெஞ்சத்தை விட்டு நீங்காத நிலைமையனாய் அவர்தம் உணர்விற்கு எழுந்தருளியுள்ளான் என்பது,

"காணாமரப, நீயாநினைவ" (பரி. 3. 84)

எனவரும் தொடரில் இடம் பெற்றுள்ளமை காண்க.

"காண்டற் கரிய கடவுள் கண்டாய்
கருதுவார்க் காற்ற வெளியன் கண்டாய்"

எனவும்,

"கருதுவார் இதயத்துக் கமலத்தூறும் தேனவனை"

எனவும் வரும் அப்பர் அருள் மொழிகள் இங்கு ஒப்பு நோக்கத்தக்கன.

செவிமுதலாகிய பொறிகள் ஐந்தின்வழிச் செல்லும் அவா ஐந்தினையும் மயக்கமற நீக்கி மைத்திரி, கருணை, முதிதை, இகழ்ச்சி என்னும் நான்கினாலும் சித்தத்தை மாசறுத்துத் தம்மைச் சமாதியாகிய ஒருநெறிக் கண்ணே செலுத்திய ஆர்வலராகிய யோகிகள் இறைவனை வணங்கி அவனது பொருள்சேர் புகழ்த் தரங்களை விரித்து விளக்கும் இயல்பினர் என்பது,

"ஐந்து இருளற நீக்கி நான்கினுள் துடைத்துத்தம்
ஒன்றாற்றுப் படுத்தநின் ஆர்வலர் தொழுதேத்தி
நின்புகழ் விரித்தனர்" (பரி. 4, 1 - 3)

எனவரும் தொடரால் புலப்படுத்தப் பெற்றது.

உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாத உலகப் பொருள்களில் காணப்படும் பண்புநலன்கள் அனைத்திற்கும் ஊற்றாக அமைந்தன உலக முதல்வனாகிய கடவுளின் இறைமைப் பண்புகள் என்பதனையும், உலகப் பொருள்களனைத்தும் திருமாலாகிய முதல்வனிடத்தே தோன்றி அவனிடத்தேயே ஒடுங்குவன என்பதனையும் விரித்து விளக்கும் நிலையிலமைந்தது,

"நின், வெம்மையும் விளக்கமு ஞாயிற்றுள
நின், தண்மையும் சாயலும் திங்களுள
நின், சுரத்தலும் வண்மையு மாரியுள
நின், புரத்தலு நோன்மையு ஞாலத்துள
நின், நாற்றமு மொண்மையும் பூவையுள
நின், தோற்றமு மகலமு நீரினுள
நின் உருவமு மொலியுமா காயத்துள
நின், வருதலு மொடுக்கமு மருத்தினுள
அதனால், இவ்வு முவ்வு மவ்வும் பிறவும்
ஏம மார்ந்த நிற்பிரிந்து
மேவல் சான்றன வெல்லாம்" (பரி. 4, 25 - 35)

எனவரும் பரிபாடல் பகுதியாகும். உலகுயிர்களின் தோற்றமும் நிலைபேறும் ஒடுக்கமும் திருமாலாகிய முதல்வன்கண்ணே அமைந்தன என்பது மேற்காட்டிய தொடரின் கருத்தாகும்.

அறவாழி அந்தணனாகிய இறைவனது திருவருளை அம்முதல்வனுடைய திருவடியாக உபசரித்துக் கூறுதல் பழந்தமிழ் மரபு. இம்மரபு,

"அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்த லரிது" (குறள். 8)

எனவும்,

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்" (குறள். 3)

எனவும் வரும் தமிழ் மறையால் புலனாகும். உயிர்களைப் பிறவிக் கடலினின்றும் கரையேற்றும் புணையாகவும், பேரின்பமாகிய வீடு பேற்றிற்கு நிலைக்களமாகவும் விளங்குவது இறைவன் திருவருளாகிய திருவடியே யென்பது திருவள்ளுவர் துணிபு. எனவே இறைவன் திருவடியே வீடு பேறாய் இருக்கும் என்பது தமிழ் மக்களது கோட்பாடாதல் புலனாம். இக்கொள்கை,

"நின்னிற் சிறந்த நின்தா விணையவை" (பரி. 4, 62)

எனவரும் பரிபாடல் தொடரில் இடம் பெற்றுள்ளது. 'வீடளிக்குங்கால் நின்னினும் சிறந்த நின் தாளிணையை உடையை' என இத்தொடருக்குப் பரிமேலழகர் எழுதிய உரை விளக்கம் இக்கருத்தினைப் புலப்படுத்தல் காணலாம்.

> "சேவடி படரும் செம்ம லுள்ளமொடு
> நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும்
> செலவுநீ நயந்தனை யாயின்"

எனவரும் திருமுருகாற்றுப்படைத் தொடரும், இதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை விளக்கமும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கன.

சங்க காலத் தமிழ் மக்கள் மாயோன், சேயோன், சிவன் என வேறுவேறு பெயரும், வேறுவேறு உருவும் உடைய நிலையில் பல்வேறு தெய்வ வழிபாடுகளை மேற் கொண்டிருந்தனராயினும், அங்ஙனம் வழிபடப்பெறும் எல்லாத் திருவுருவங்களும் முழுமுதற் பொருளாகிய ஒரு பொருளுக்குரியனவே என்னும் உண்மையினைத் தெளிந்திருந்தனர். இந்நுட்பம்,

> "அழல்புரை குழைகொழு நிழறரும் பலசினை
> ஆலமுங் கடம்பு நல்யாற்று நடுவும்
> கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
> அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்
> எவ்வயி னோயு நீயே" (பரி. 4, 66 - 70)

எனத் திருமாலை முன்னிலைப்படுத்திக் கடுவன் இளவெயினனார் போற்றிப் பரவிய பரிபாடற் பகுதியால் இனிது புலனாகும். இங்ஙனம் பல்வேறு திருவுருவங்களில் வைத்து வழிபடப் பெறும் வழிபாடுகள், எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளாகிய ஒரு பொருளையே சென்று சாரும் என்பது,

> "வேறு பல்லுருவில் கடவுள் பேணி"

எனவரும் குறிஞ்சிப் பாட்டடிகளானும் உய்த்துணரப்படும்.

"சுவை முதலாகிய புலன்களும் அவற்றை நுகரும் கருவியாகிய ஐம்பொறிகளும் நீயே. ஓசை ஒன்றினால் உணரப்படும் விசும்பும், ஓசையும் ஊறுமாகிய இரண்டினால் உணரப்படும் காற்றும், ஓசை ஒளி ஊறு என மூன்றினால் உணரப்படும் தீயும், ஓசை ஒளி ஊறு சுவை என்னும் நான்கினால் உணரப்படும் நீரும், ஓசை ஒளி ஊறு சுவை நாற்றம் என ஐந்தினால் உணரப்படும் நிலமும் ஆகிய ஐம்பெரும் பூதங்களுமாக விளங்குவோன் திருமாலாகிய நீயே. ஆதலால், மூலப்பகுதியும், அறனும், அநாதியான காலமும், ஆகாயமும், காற்றோடு கனலும் கூடிய இம்மூவேழுலகத்து உயிர்க ளெல்லாம் நின்னிடத்தனவாயின" எனத் திருமாலை முன்னிலைப்படுத்திப் போற்றும்நிலையில் அமைந்தது,

"சுவைமை இசைமை தோற்றம் நாற்றம் ஊறு
அவையும் நீயே அடுபோ ரண்ணால்
அவையவை கொள்ளுங் கருவியும் நீயே
முந்தியாங் கூறிய ஐந்த னுள்ளும்
ஒன்றனிற் போற்றிய விசும்பு நீயே
இரண்டின் உணரும் நீரும் நீயே
ஐந்துடன் முற்றிய நிலனும் நீயே
அதனால, நின்மருங் கின்று மூவே ழுலகமும்
மூலமும் அறமும் முதன்மையி னிகந்த
காலமும் விசும்புங் காற்றொடு கனலும்"

(பரி. 13 : 14 - 25)

எனவரும் பரிபாடற்பகுதியாகும்.

"பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி"

(போற்றித் திருவகவல்)

எனவரும் திருவாசகப் பகுதி இங்கு ஒப்புநோக்கற் பாலதாகும்.

மேற்குறித்த பரிபாடற் பகுதியில் மூலம் என்றது "மூலப்பகுதியை. மூலப்பகுதியாவது, சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் குணங்கள் மூன்றும் தம்முள் ஒத்த நிலைமையது; ஆதலால், அது (மூலப்பகுதி) கூறவே, அறிவு அறியாமைகள் இன்பதுன்பங்கள் என்னும் உயிர்க் குணங்களும் அடங்கின. அறமாகிய சிறப்புடைக்குணம் கூறவே சிறப்பில் குணமாகிய பாவமும் அடங்கின்று. இதனால் ஈண்டு எண்ணப்பட்டவற்றது கூட்டம் உயிர் என்பது உணர்த்தப் பட்டது" என இப்பகுதிக்குப் பரிமேலழகர் தரும் தத்துவ விளக்கம் சிந்தனைக்குரியதாகும். சாங்கியநூலார், முக் குணங்கள் மிக்கும் குறைந்தும் நில்லாது தம்முட் சமமாய் நின்றநிலையே மூலப்பகுதியென்றும், அதுவே காரியங்கள் எல்லாவற்றிற்கும்முதற்காரணமாய் நிற்பதன்றி மூலப்பகுதி யாகிய அஃது ஒன்றன் காரியமாதல் இல்லையென்றும் கூறுவர். உணருந்தன்மையதாகிய உயிர் போகநுகர்ச்சிக்கு ஏதுவாகிய அவிச்சை, ஆங்காரம், அவா, ஆசை, கோபம் ஆகிய பஞ்சக்கிலேசமென்னும் பும்ஸ்த்துவ மலமுடையனாய்ப் புருடதத்துவம் எனப் பெயர் பெற்று நிற்றலின், ஈண்டு மூலப்பகுதி முதலாக எண்ணப்பட்டவற்றது கூட்டம் உயிர் என்பது உணர்த்தப்பட்டது" என்றார் பரிமேலழகர். இங்கு மூலப்பகுதியொடு 'முதன்மையின் இகந்தகாலமும்' எனத் தத்துவம் இருபத்தைந்தின் மேலாகக் காலம் என்னும் தத்துவம் எண்ணப்பெற்றுள்ளமை காணலாம். இதனால் தத்துவம் இருபத்தைந்து என்னும் சாங்கியர் கொள்கைக்கு வேறாகக் காலதத்துவம் உண்டெனக் கருதும் தத்துவக் கோட்பாடும் தமிழகத்தில் நிலவினமை உய்த்துணரப்படும். 'காலம் உலகம் உயிரே யுடம்பே' (தொல்-சொல்-கிளவி) எனவரும் தொல்காப்பியச் சூத்திரத்திற் காலம் என்பது ஒருண்மைப் பொருட் கூறாகக் குறிக்கப்பெற்றுள்ளமை முன்னர் விளக்கப் பெற்றுள்ளமையும் இங்கு ஒப்பு நோக்கற் பாலதாகும். தொழில் நிகழ்ச்சியினை இறப்பு நிகழ்வு எதிர்வு என வரையறுப்பதாகிய கால தத்துவத்திற்கு அப்பாற்பட்டு எவ்வகை மாற்றமுமின்றி என்றும் ஒரு பெற்றியதாய் விளங்குவது முழுமுதற் பொருளாகிய கடவுள் என்னும் உண்மையினை

"முடிந்ததும் முடிவதும் முகிழ்ப்பதும் அவை மூன்றும்
கடந்தவை யமைந்த கழனிழலவை" (பரி. 13 ; 46-47)

எனத் திருமாலைக் குறித்து நல்லெழுநியார் போற்றுவதாக அமைந்த தொடர் நன்கு புலப்படுத்துவதாகும். "தோன்றியதும் தோன்றுவதும் தோன்றா நின்றதுமாகிய காலக் கூறுபாடுகளைக் கடந்து அவை தாம் பொருந்திய தாள் நிழலையுடையை" என இத்தொடர்க்குப் பொருள் வரைந்தார் பரிமேலழகர். 'கடந்து அவை அமைந்த' என்புழி 'அவை' என்றது, எக்காலத்தும் அழியாது நிலைபேறுடைய உயிர்த்தொகுதியினை, 'இருமை வினையும் இல ஏத்தும் அவை' என அடுத்துவரும் அடிக்கு 'நின்னையேத்தும் அன்பர் இருவினையும் உடையரல்லர்' எனப் பரிமேலழகர் எழுதிய உரையால் இந்நுட்பம் இனிது புலனாதல் அறியற்பாலதாகும்.

மணங்கமழுந்துழாய் மாலையை யணிந்த மாயோனாகிய இறைவன் அருளால் வெளிப்பட்டுக் கொடுப்பினல்லது பிறிதொன்றிற்கில்லாத சிறப்பினையுடைய துறக்கவுலகம் உயிர்களது அறிவுமுயற்சியாற் சென்றடைதற் குரிய எளிமையுடையதன்று; அங்ஙனம் அரிதிற்பெறு துறக்கத்தை அன்பராயினார் எளிதிற் பெற்று இன்புறும் நிலையில் திருமால் எழுந்தருளிய மாலிருங்குன்றத்தை எல்லாருங் கேட்க ஏத்தக்கடவோம் என்று அறிவுறுத்தும் முறையில் அமைந்தது,

> "நாறிணர்த் துழாயோன் நல்கினல்லதை
> ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம்
> அரிது பெறுதுறக்க மாலிருங் குன்றம்
> எளிதிற் பெறலுரிமை யேத்துகம் சிலம்ப"
>
> (பரி. 15 : 15-18)

எனவரும் பரிபாடற் பகுதியாகும்.

> "அவனருளாலே அவன்தாள் வணங்கி" (சிவபுராணம்)

எனவரும் மணிவார்த்தை இங்கு ஒப்புநோக்கி யுணரத் தக்கதாகும்.

அசையும் அருவி மிக ஆரவாரித்து இழிதலாற்

சிலம்பாறு அழகு செய்த வியக்கத்தக்க தன்மையது, திருவென்னுஞ் சொல்லோடும் மாலிருங்குன்றம் என்னுஞ் சொல் தொடர்ந்த மொழியாகிய திருமாலிருஞ்சோலை மலையெனவும், அதன் பெயரது பெருந்தன்மை நன்றாகப் பூமியின்கண் பரக்க எனவும், நிலைபெற்ற குளிர்ச்சியை யுடைய இளவெயில்சூழ அதனிடையே இருள் வளர்தலை யொக்கப் பொன்னாடையுடுத்தோனாகிய திருமால் தன் தமையனாகிய பலதேவனோடும் அமர்ந்து நிற்கும் நிலையை மக்களே நினைந்து போற்றுமின் எனவும், சுனையிட மெங்கும் நீலமலர் மலர்ந்து தோன்ற அச்சுனை யினைச் சூழ்ந்த அசோகமரங்கள் மலர்தலாலும் காய்கனிகளோடு நிறம் மாறுபட வேங்கை மலர்தலாலும் மாயோனை யொத்த இனிய தெய்வத்தோற்றத்தையுடையது அம்மலை யெனவும், அது காண மயக்கமுதலிய குற்றங்களைஅறுப்பதாகிய வழிபடு தெய்வம் எனவும் திருமாலைச் சென்று தொழ மாட்டாதீர் அம்மலையினைக் கண்டு பணிமின்; அதனை நும் மனைவிய ரோடும் இருமுது குரவரோடும் குழந்தைகளோடும் சுற்றத் தாரோடும்கூட அம்மலையைத் தெய்வமாக மதித்துத் திசைநோக்கித் தொழுமின் எனவும் பதினைந்தாம் பரிபாட லில் இளம் பெருவழுதியார் உலக மக்களை நோக்கிக் கூறும் நிலையில் அமைந்த அறிவுரை, சங்ககாலத் தெய்வ வழி பாட்டில் மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூவகை வழிபாடும் இடம்பெற்றிருந்தமையை இனிது புலப்படுத்தல் காணலாம்.

அவுணரை நேரே பொருது கொன்றானாகிய திருமால் வீற்றிருக்கும் அம்மலையின்கண் மரக்கிளைகளின் இடத்தவாகிய மயில்கள் அகவவும், குருக்கத்தி இலையுதிர அதன்கண் இருந்து குயிலினம் கூவவும் முழைக்கண் சிலம்புகின்ற இசை சுருதியையுணர்த்துகின்ற குழலொழியும் மிடற்றுப்பாடலும் முழவோசையும் எதிர்ந்தாற் போன்றன.

“பகர்குழல் பாண்டில் இயம்ப அகவுநர்
நாநவில் பாடல் முழவெதிர்ந்தன்ன, சிலம்பின்”

[15 : 42-4]

என்று உவமை கூறினமையால் தெய்வ வழிபாட்டில்

குழலொலியும் தாளமும் மிடற்றுப் பாடலும் முழவோசையும் இடம் பெறுவன என்பது பெறப்படும்.

தனது உந்தித் தாமரையொக்கும் கண்ணை யுடையனாய் நீர் கொண்ட கார்முகிலும் இருளும் நீல மணியும்போலும் திருமேனியனாய் எல்லாவுலகினும் வெளிப்பட்டு அவ்விடத்து வாழும் உயிர்த்தொகுதிகளின் மயக்கத்தைச் செய்யும் பிறவித் துன்பத்தைக் களைவோன் அன்பினால்இருங்குன்றத்தின்கண் எழுந்தருளியுள்ளான் என்பதனை விளக்குவது,

> "பூவத் தாமரைபுரையுங் கண்ணன்
> வெளவற்காரிருள் வயங்குமணி மேனியன்
> எவ்வயினுலகத்துந் தோன்றியவ்வயின்
> மன்பது மறுக்கத் துன்பங்களைவோன்
> அன்பது மேஎய் இருங்குன்றத்தான்" (பரி. 15 : 49 - 53)

எனவரும் பரிபாடற் பகுதியாகும். திருமாலின் அர்ச்சாவ தாரத்தை விரித்துரைப்பதாகிய இப்பகுதியில் 'எவ்வயி னுலகத்தும்' எனச் சகமாகிய உலகமும் 'மன்பது' எனச் சீவனாகிய உயிர்த் தொகுதியும், 'மன்பது மறுக்கத் துன்பங்களைவோன்' எனப் பரமாகிய இறைவனும் ஆக முப்பொருளுண்மை குறிக்கப் பெற்றுள்ளமை காணலாம்.

திருமால் முழுமுதற் பொருள் என்னும் தன் இறைமை நிலையில் இருந்து கொண்டே உலகில் முதலினும் இடையினும் இறுதியினும் படைப்பு, அளிப்பு, அழிப்பு என்னும் தொழில் வேற்றுமை பற்றி உயிர்களை உய்வித்தற் பொருட்டுப் பல்வேறு பிறப்புக்களை யுடையனாக இவ்வுலகிற் பிறந்தருளுதலாகிய அவதாரங்களை மேற் கொள்கின்றான் என்பதும் அங்ஙனம் அருள் காரணமாக இவ்வுலகிற் பிறப்பினும் அவ் அவதாரங்கள் அனைத்தும் அவனது இச்சை வயத்தால் கொள்ளப்படுவனவேயன்றி ஏனையுயிர்களைப் போன்று தன்னைப் பிறப்பிப்பார் ஒருவருமில்லாத் தனிமுதல்வன் திருமால் என்பதும் வைணவ சமயக் கோட்பாடாகும்.

"முதன்முறை இடைமுறை கடைமுறை உலகத்துப்
பிறவாப் பிறப்பிலை பிறப்பித் தோரிலையே"

(பரி. 3 : 71, 72)

எனவரும் பரிபாடலடிகளும், 'உலகில் முதலினும் இடையினும் இறுதியினும் படைப்பு அளிப்பு அழிப்பு என்னுந் தொழில் வேற்றுமைபற்றிப் பிறவாப் பிறப்புடையையல்லை; அங்ஙனம் பிறந்து வைத்தும் பிறப்பித்தோரை உடையை யல்லை" எனவரும் பரிமேலழகருரையும் இக்கொள்கை யினை விளக்குதல் அறியத்தகுவதாகும்.

உயர்வறவுயர்ந்த முழுமுதற் பொருளாற் பெறும் வீடுபேற்றினைப் பெரும்பெயர் எனவழங்குதல் தமிழ் மரபு. 'அரும்பெறல் மரபிற் பெரும் பெயர் முருக' (269) என்பது திருமுருகாற்றுப்படை. 'பிறர்க்குப் பெறலரிய பெரும் பொருளையுடையமுருக' என்பது இவ்வடியின் பொருள். பெயர்-பொருள். பெரும் பெயர் - பெரும்பொருள். 'பெரும்பொருள்' என்றது வீடுபேற்றினை என்பர் நச்சினார்க்கினியர். திருமாலிருஞ்சோலை மலையில் காத்தற் கடவுளாகிய திருமால் கண்ணனும், நம்பி மூத்தபிரான் ஆகிய பலதேவனும் என இருவராக எழுந்தருளி பெறுதற்கு அரிய வீடுபேற்றினைத் தன்னடியார்க்கு வழங்க வல்ல பேரருளாள ராகத் திகழ்தலின் பெரும் பெயர் இருவராகிய அவ்விரு வரையும் வழிபட்டு இக்குன்றத்து அடியின்கண் உறைதல் எமக்கு எய்துக வென்று தொழுதுவேண்டுதும் என்பார், 'இருங்குன்றத் தடியுறையியைகெனப், பெரும் பெயரிரு வரைப் பரவுதுந் தொழுதே' (பரி : 15 : 65-66) எனப் போற்று வர் இளம் பெருவழுதியார்.

சங்கச் செய்யுட்களில் திருமாலைக்குறித்தனவாக அஞ்சன உருவன், அரவணை அசைஇய நேமியான், ஆழி முதல்வன், ஆழியான், ஆலமர் கடவுள், சேவலோங்கு உயர் கொடியோன், ஞால மூன்றடித்தாய முதல்வன், திகிரிச் செல்வன், திகிரியோன், திருமறுமார்பன், துழாய்ச் செல்வன், துழாய் மார்பினன், துழாயோன், துளபஞ்சூடிய அறிதுயி லோன், நிலந்தரு திருவின் நொடியோன், நீனிற வண்ணன்,

நெடியோன், நேமியான், பாம்பணைப் பள்ளியமர்ந்தோன், புட்கொடி வெய்யோன், புள்மிசைக் கொடியோன், புள்ளணிநீள் கொடிச் செல்வன், பொன்புனை உடுக்கையோன், மாஅல், மால், மாயவண்ணன், மாயவன், மாயோன், மீயோன், முந்நீர்வண்ணன், வள்ளுருள் நேமியான், வாய்மொழிப்புலவன், வேதமுதல்வன் என்ற தொடர்கள் காணப்படுகின்றன.

கருமை நிறமும், நீலமணிபோலும் ஒளியும்வாய்ந்த திருமேனியை உடையவர் திருமால் என்பதும், சக்கரப் படையினையும், சங்கினையும் திருக்கைகளில் ஏந்தியவர் என்பதும், பொன்னாடை உடுத்தவர் என்பதும், துழாய் மாலை அணிந்தவர் என்பதும், திருமகள் அமர்ந்த மார்பினை உடையவர் என்பதும், துளபமாலை அணிந்தவர் என்பதும், பாம்புக்குப் பகையாகிய கருடனை ஊர்தியாகவும் கொடியாகவும் உடையவர் என்பதும், பாற்கடலில் பாம்பணையிற் பள்ளி கொண்டுள்ளார் என்பதும் புலனாகும்.

படைத்தற் கடவுளாகிய நான்முகனைத் தன் உந்திக் கமலத்திலிருந்து தோற்றுவித்ததும், குறள் வடிவு கொண்டு மாவலிபால் மூவடி மண்வேண்டி நெடியோனாய் மூவுலகும் ஈரடியால்அளந்ததும், அவுணர்களை அழித்ததும், கேசி (கூந்தல்) என்னும் குதிரைவடிவாகிய அவுணனைக் கொன்றதும், பாம்பால் விழுங்கப்பட்ட திங்களை விடுவித்ததும், அவுணர் ஏறிவந்த களிற்றின் நுதலில் ஆழியை அழுத்தி அதனை ஓடச் செய்ததும், அவுணர்களால் மறைக்கப்பட்ட ஞாயிற்றை மீண்டும் விசும்பில் நிலைநிறுத்தி மன்னுயிர்களின் துன்பம் துடைத்ததும் திருமால் பன்றி உருக்கொண்டு தோன்றி நிலமகளைத் தனது கோட்டில் ஏந்திக் காத்ததும், பிரகலாதன் பொருட்டுத் தூணில் நரசிங்க வடிவாய்த் தோன்றியதும் இராமனாக அவதரித்துத் தன் தேவியைக் கவர்ந்த இராவணனைக் கொன்றழித்தற் பொருட்டுத் தனுக்கோடியில் ஓராலமரத்தின் நிழலில் தன் நண்பர்களுடன் அமர்ந்து ஆழ்ந்து சிந்தித்ததும் கண்ணனாக அவதரித்த நிலையில் கண்ணனும் அவனுடைய தமையனாகிய பலதேவனும் என இரு பெருந் தெய்வமாகப்

போற்றப்பெற்றமையும் ஆகிய திருமாலின் அவதார நிகழ்ச்சிகள் பரிபாடலில் இடம் பெற்றுள்ளன. கண்ணன் தொழுநை ஆற்றில் நீராடும் ஆய மகளிருடைய ஆடையைக் கவர்ந்து குருந்தில் மேல் ஏறி அமர்ந்தபோது அங்கே பலதேவன் வரக்கண்டு அக்குருந்தின் கிளைகளைத் தாழ்த்தி ஆயமகளிர்தழை உடையால் தம் அற்றம் மறைக்குமாறு செய்ததும், தன் ஊர்தியாகிய கருடன் செங்கண்மாலே எனக் கதறும்படி அவனைத் தன் கால் விரலாலே அழுத்தியதும், திருமாலின் அவதாரமாகக் கருதப்படும் பரசுராமனாகிய மழுவாள் நெடியோன் மன்னர் மரபினரைக் குலமறக் கொன்று வேள்வி செய்ததும் ஆகிய செய்திகள் சங்கச் செய்யுட்களில் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். உலகம் எல்லாவற்றையும் தோற்றி ஒடுக்கும் முழுமுதற் பொருளாகிய சிவபெருமானும், காத்தற் கடவுளாகிய திருமாலும் ஒருவரே என உணர்த்தும் முறையில் பண்டையோரால் வழிபடப்பெற்ற சங்கர நாராயணர் திருமேனி, செந்நிற அந்திவானமும், கருநிறக் கடலும் ஒருங்குசேர்ந்த இயற்கைத் தோற்றத்திற்கு உவமையாக அகம். 360-ஆம் பாடலில் ஆளப்பெற்றுள்ள குறிப்பினைக் கூர்ந்து நோக்குங்கால் சிவபெருமான் திருமேனியும் திருமால் திருமேனியும் அவற்றிடையே பொருளால் வேறுபாடில்லை என்னும் ஒருமைத் தன்மை இனிது புலனாதல் காணலாம்.

## திருமகள்

திருமால் வழிபாட்டில் திருமாலின் தேவியாகிய திருமகளும், திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றிய நான்முகனும், திருமாலின் மக்களாகக் காமன், சாமன் என்பவர்களும் சார்பு நிலைத் தெய்வங்களாக இடம் பெற்றுள்ளனர். திருமாலின் தேவியாகிய திருமகள் அம்முதல்வனது மார்பில் அமர்ந்துள்ளமை

"செய்யோள் சேர்ந்த நின் மார்பின் அகலம்" (பரி.)

எனவும்,

"மாயவன் மார்பில் திருப் போல" (கலி.)

எனவும் வரும் சங்க இலக்கியத் தொடர்களில் குறிக்கப் பெற்றது. திருமகளாகிய தேவியைத் தன் மார்பகத்துக் கொண்டமை பற்றித் 'திருவமர் மார்பன்' எனவும் 'திருமறு மார்பன்' எனவும் திருமால் போற்றப் பெற்றுள்ளார்.

திருமகள் தன் இரு மருங்கும் இரண்டு யானைகள் நின்று பூநீர் மேற்சொரியச் செந்தாமரை மலர்மேல் எழுந்தருளியிருக்கும் தோற்றம்,

> "கதிர்விரி கனை சுடர்க் கவின்கொண்ட கடுஞ்சாரல்
> எதிர்எதிர் ஓங்கிய மால்வரை யடுக்கத்து
> அதிர்இசை யருவிதன் அஞ்சினை மிசைவீழ
> முதிரிணர் ஊழ்கொண்ட முழவுத்தாள் எரிவேங்கை
> புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறெய்தித்
> திருநயந் திருந்தன்ன தேங்கமழ் விறல் வெற்ப"
>
> (கலி. 44)

எனவரும் குறிஞ்சிக் கலியில் உவமையாக [illegible]தாளப் பெற்றுள்ளது. 'எதிரெதிரே ஓங்கிய பெருமையையுடைய மலையினது அகற்சியையுடைய சாரலில் இள ஞாயிற்றினது விரிகின்ற கதிர்களையுடைய அழகிய மாணிக்கப் பாறையிலே வளர்ந்து நிற்கப்பட்டு முழங்குகின்ற ஓசையினை உடையவாய் இருபக்கத்து மலைகளினின்றும் வீழ்கின்ற அருவி தன் அழகிய கிளைகளிலே வீழ்தலாலே முதிர்ந்த பூங் கொத்துக்கள் அலர்தல் கொண்ட முழவு போலும் அடியினையும் நெருப்புப் போலும் பூக்களையும் உடைய வேங்கைமரம் புள்ளி பொருந்திய மத்தகத்தினையும் அழகினையும் உடைய இரண்டு யானைகள் இரு மருங்கும் நின்று பூவொடு கூடிய நீரைச் சொரியா நிற்க, எக்காலமும் முறுக் கவிழ்ந்து மலர்ந்துள்ள செந்தாமரை மலரினது அழகிய அகவிதழிலே வீறு பெறத் திருமகள் விரும்பி எழுந்தருளி யிருந்தாலொத்த தேனாரும் வெற்றியினையுடைய வெற்பனே' என்பது மேற்குறித்த தொடரின் பொருளாகும். மாணிக்கப் பாறைக்குச் செந்தாமரை மலரும், அதன் நடுவே பொன்மலர்பூத்த தோற்றமுடைய வேங்கை மரத்துக்குத் திருமகளும், அம்மரத்தின் இருபுறத்தும் அருவி நீரைச்

சொரியும் நிலையில் உயர்ந்து தோன்றும் மலைகள் இரண்டிற்கும், திருமகளின் இருமருங்கு நின்றும் பூநீர் மேற் சொரியும் இரண்டு யானைகளும் உவமையாகக் கூறப் பட்டன. இங்ஙனம் இருமலைகளினிடையே யமைந்த மாணிக்கப் பாறையின் நடுவே பொற்பூக்களுடன் தோன்றும் வேங்கை மரத்திற்கு இரு வேழங்கள் பூநீர் மேற் சொரியச் செந்தாமரை மலரில் எழுந்தருளிய வேழத்திருமகளை (கஜலட்சுமியை) உவமையாகக் கபிலர் எடுத்துக் கூறுதலால் வேழத்திருமகள் திருமேனி சங்க காலத்திற் பலராலும் வழிபடப் பெற்ற தொன்மையுடையதென்பது நன்கு துணியப்படும். செந்தாமரை மலர் தன்கண் திருமகள் வீற்றிருத்தல் பற்றித் தெய்வத்தாமரை எனச் சிறப்பிக்கப் படுவதாயிற்று. திருமகள் செந்தாமரை மலரில் வீற்றிருத்தலால் அத்தெய்வத்திற்கு மலர் மகள் என்பதும் பெயராயிற்று. தாமரையினாள் எனப் போற்றுவர் திருவள்ளுவர். திருமகளுக்குச் செந்நிறத்திருமேனி உடைமை பற்றிச் செய்யோள் எனவும் அழைத்தலுண்டு.

"செய்யோள் சேர்ந்த நின்மாசிலகலம்" என்பது பரிபாடல். பொருளுடைமைக்குத் தெய்வமாக விளங்குபவள் திருமகள். எனவே திருமகளது அருள் நோக்கு மக்களுக்குத் திருவுடைமையாகக் கருதப் பெற்றது.

## நான்முகன்

எல்லாம்வல்ல இறைவன் துணையால் உலகைப் படைக்கும் தொழிலுடையவன் நான்முகன் ஆவான். உலகில் உயிர்கள் உடம்பொடு படைக்கப் படுவதற்கு முன்னே திருமாலுடைய உந்தித் தாமரையில்முதற்கண் தோன்றியவன் நான்முகன். இச்செய்தி,

> "நீல்நிற உருவின் நெடியோன் கொப்பூழ்
> நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்
> தாமரைப் பொகுட்டின்" (பெரும்பாண். 402 - 404)

எனவரும் தொடரால் புலனாகும். உலகப் படைப்பிற்கு முன் தோன்றியவன் நான்முகன் ஆதலின், அத்தெய்வத்தைத்

"தொடங்கற்கண் தோன்றிய முதியவன்" (பாலைக்கலி 1)

எனவும்,

"ஆதியந்தணன்" (பரிபாடல் 5)

எனவும் சங்கச் செய்யுட்கள் கூறும். இவன் திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றினமையால், இத்தெய்வத்தைத் திருமாலின் மைந்தனாகப் போற்றுதல் மரபு. நான்முகனின் தந்தை திருமால் என்னும் இம்மரபு,

"வாய்மொழி ஓடை மலர்ந்த தாமரைப்
பூவினுள் பிறந்தோனும் தாதையும்
நீ யென மொழியுமால் அந்தணர் அருமறை"
(பரி. 3 : 12 - 14)

எனவரும் பரிபாடற் பகுதியால் புலனாதல் காணலாம்.

தாமரைப் பூவினிற் பிறந்தமையால் 'மலர் மிசை முதல்வன்' எனவும், 'பூவன்' எனவும் பரிபாடல் கூறும். 'புலமும் பூவனும் நாற்றமும் நீ' எனவரும் பரிபாடற் றொடரில் பூவினிற் றோன்றிய நான்முகன் பூவன் என்ற பெயரால் குறிக்கப் பெற்றுள்ளமை காண்க. நான்முகன் என்பது நான்கு முகங்கள் உடையனாதல் பற்றிய காரணப் பெயர்.

அசுரரைத் தடிந்து அமரரைக் காத்த முருகப் பெருமான் படைத்தற் கடவுளாகிய நான்முகனை வெகுண்டு தண்டித்தானாக, அந்நிலையில் அம்முதல்வனது வெகுளியைத் தணித்து நான்முகனை மீண்டும் படைப்புத் தொழிற்கு உரியனாக்குதல் வேண்டிக் கருடக் கொடியோனாகிய திருமாலும், உமையொருபாகனாகிய இறைவனும், தேவர் முப்பத்துமூவரும், பதினெண்கணங்களும் முருகப் பெருமானைக் காண வான் வழியே வந்தனர் என்ற செய்தி திருமுருகாற்றுப்படையில் (திருவாவினன்குடி பற்றிய பகுதியில்) விரித்துரைக்கப்பெற்றது. முருகப்பெருமான் நான்முகனை வெகுண்டமை பற்றிய செய்தி புராணங்களில் வேறு வேறாகக் கூறப் பெற்றுள்ளது. திருக்கயிலாய மலையில்

எழுந்தருளிய சிவபெருமானை வணங்கச் செல்லும் நான்முகன் அங்கு எழுந்தருளிய இளங்குழந்தையாகிய முருகப் பெருமானை வணங்காது சென்றானாக, அந்நிலையில் முருகப் பெருமான் நான்முகனை அழைத்துப் பிரணவத்தின் பொருள் யாதென வினவ, நான்முகன் பொருள்கூற அறியாது மயங்கியநிலையில் அவனைச் சிறையிலடைத்து அவனுக்குரிய படைத்தற் றொழிலைத் தானே மேற்கொண்டருளினான் எனக் கந்தபுரணாம் கூறும். முருகப் பெருமான் அவுணரை அழித்துத் தேவரைக் காத்தருளிய நிலையில் விண்ணோர்க்கரசனாகிய இந்திரன் தன்மகள் தெய்வயானையாரை முருகனுக்குத் திருமணம் செய்து கொடுத்தவிடத்தே, முருகன் தன் கையிலுள்ள வேலை நோக்கி நமக்கு எல்லாம் தந்தது இவ்வேல்' என்று கூறியருள, அருகே இருந்த நான்முகன் 'இவ்வேலிற்கு இந்நிலை என்னால் வந்ததன்றோ?' என்றானாக, அதனைக் கேட்ட முருகன் 'நம்கையில் வேலுக்கு நீ கொடுப்பதொரு சக்தி உண்டோ?' என்று சினந்து 'இவ்வாறு கூறிய நீ மண்ணிடைச் செல்வாய்' எனச் சபித்தனன் எனவும், அயனது சாபத்தை நீக்கியருள வேண்டும் என முருகப் பெருமானை வேண்டிக் கொள்ளுதற் பொருட்டே திருமால் முதலிய தேவர்கள் ஆவினன்குடியை அடைந்தனர் எனவும் நச்சினார்க்கினியர் ஒரு கதையினைக் குறிப்பிடுகின்றார், இக்கதைக்குரிய ஆதாரம் இன்னதென்று அறிந்துகொள்ள இயலவில்லை. அது எவ்வாறாயினும் திருமால் முதலியோர் முருகப் பெருமான் எழுந்தருளிய திருவாவினன்குடிக்கு வந்ததன் நோக்கம் நான்முகனிடத்தே முருகப்பெருமான் கொண்டுள்ள வெகுளியைத் தணித்தற்பொருட்டே என்பது 'நான்முக ஒருவற் சுட்டி' என்ற தொடரால் நன்கு துணியப்படும்.

சிவபெருமான் முப்புரங்களை அழித்தற்கு வைய மாகிய தேரினை ஊர்ந்து புறப்பட்டபோது நான்முகன் தேர்ப்பாகனாக இருந்து அத்தேரைச் செலுத்தினான் என்ற செய்தி,

"ஆதியந்தணன் அறிந்து பரி கொளுவ
வேத மாபூண் வையத் தேர் ஊர்ந்து" (பரி. 5)

எனவரும் தொடரில் விரித்துரைக்கப்பெற்றது. படைத்தற் கடவுளாகவும் திருமாலின் மைந்தனாகவும் நான்முகன் சங்க இலக்கியங்களில் குறிக்கப்பட்டிருப்பினும், அத் தெய்வத்திற் கெனத் தனி வழிபாடு தமிழகத்தில் நிலவியதாகத் தெரிய வில்லை. புறநானூறு 56ஆம் பாடலில் மணிமிடற்றோனாகிய சிவனும், பனைக் கொடியோனாகிய பலதேவனும், கருடக் கொடியோனாகிய திருமாலும், செவ்வேளாகிய முருகப் பெருமானும்

"ஞாலங் காக்குங் கால முன்பிற்
றோலா நல்லிசை நால்வர்"

எனப் போற்றப் பெற்றுள்ளனர். ஒரு குழை ஒரு தேவனாகிய பலதேவன் பரிதியஞ் செல்வனாகிய ஞாயிறு, மீனேற்றுக் கொடியோனாகிய காமவேள், அவன் தம்பியாகிய சாமன், ஆனேற்றுக் கொடியோனாகிய சிவன் ஆகிய ஐந்து தெய்வங்களுடைய நிறத்தின் தன்மை போலப் பூங் கொத்துக்கள் பொருந்திய வெண்கடம்பும், அரும்புகள் அலர்ந்த செருந்தியும், ஞிமிறுகள் ஆரவாரிக்கும் காஞ்சியும், பூக்கள் நெருங்கிய ஞாழலும், பூக்கும் காலத்து எதிர் கொண்ட அரும்புகளை உடைய இலவமும் அழகுபெற்று விளங்க, இளவேனில் வந்த தோற்றம் பாலைக்கலி 25ஆம் பாடலில் உவமை வாயிலாக விரித்துரைக்கப்பெற்றது. இப்பாடலில் மீனேற்றுக்கொடியோன் நிறத்தை ஒத்துப் பூப்பது காஞ்சி எனவும், அவனுடைய தம்பி சாமன் நிறத்தை ஒத்துப் பூத்தது ஞாழல் எனவும் குறிக்கப் பெற்றமையால் உடன் பிறந்தாராகிய காமன், சாமன் என்ற இருவரும் மேனியின் நிறத்தால் வேறுபடுவர் என்பது புலப்படுத்தப் பெற்றது. காமவேள் தம்பியின் பெயர் சாமன் என்பது,

"கவர்கணைச் சாமனார் தம்முன்" (கலி. 29 : 34)

எனக் காமன் குறிக்கப் பெற்றிருத்தலால் புலனாகும். காமன், சாமன் என்னும் இவ்விருவர்க்கும் தந்தையாவான் திருமால் என்பது

"இருவர் தாதை இலங்கு பூண்மால்"

எனவரும் பரிபாடலடியினல் அறியப்படும்.மாலின் மைந்தராகிய இவ்விருவருள் கருவேளாகிய காமனுக்குச் சங்க காலத்தில் தனிக் கோயில் அமைந்திருந்தது என்பதும், மணமாகாத இளமகளிர் அக்கோயிலை அடைந்து பால் மடைகொடுத்துக் காமனை வழிபடுவர் என்பதும்,

"படையிடுவான் மற்கண்டீர் காமன்
மடையடும் பாலொடு கோட்டம்புகின்"
(முல்லைக்கலி 9)

எனவரும் கலித்தொகைத் தொடரால் அறியப்படும். "இவள் தெய்வத்திற்குப் பலியாகச் சமைக்கும் பாலோடே காமன் கோயிலிலே செல்லின், அக்காமனும் நெஞ்சழிந்து தன்கையிற் படையை மிகவும் போகடுவன்" (கீழே எறிவான்). காமன் மாயோன் மகனாதலின் அவனும் அந்நிலத்திற்குத் தெய்வமாதல் 'அவ்வகை பிறவும்' (தொல். அகம் : 18) என்றவழி 'வகை' என்பதனாற் கொள்ளப்பட்டது" என மேற்காட்டிய தொடர்க்கு நச்சினார்க்கினியர் உரையும் விளக்கமும் தருவர். முல்லை நிலத்திற்குத் தெய்வமாக மாயோன் கூறப்பட்டதனை அடுத்து அவன் மகனாகிய காமன் முல்லை நிலத்தின் தெய்வ வகையாகக் கருதி வழிபடப் பெற்றனன் என்பது நச்சினார்க்கினியர் உரை விளக்கத்தால் உய்த்துணரப்படும். இளவேனிற் காலத்திலே காமவேளுக்குத் தமிழகத்தில் விழா எடுக்கப் பெற்றது என்ற செய்தி,

"காமவேள் விழவாயின்" (கலி. 22)

எனவும்,

"உயர்ந்தவன் விழவினுள்" (கலி. 30)

எனவும்,

"வில்லவன் விழவினுள்" (கலி. 35)

எனவும் வரும் கலித்தொகைத் தொடரால் இனிது புலனாகும். காமவேள் மகர மீன் எழுதிய கொடியை உடையவன் என்பது,

"மீனேற்றுக் கொடியோன்"

எனவும்,

"சுறாக் கொடியோன்" (கலி. 144)

எனவும் வரும் தொடர்களால் குறிக்கப்பெற்றது. பிரிந்த காதலர் உள்ளத்தே காம உணர்வினைத் தோற்றுவித்து அவர்களை ஒருங்கு கூட்டுதல் காமனது தொழில். ஆதலின் காமன் கரும்பு வில்லிற் றொடுத்து எய்யும் மலரம்பு பிரிந்தாரை வருத்தும் தன்மையதாகும். இந்நுட்பம்,

"தன்னெஞ் சொருவற் கினைவித்தல் யாவர்க்கும்
அன்னவோ காம நின் அம்பு" (கலி. 147)

எனவரும் தொடராலும் "காமா! நின்னுடைய அம்புகள் தனக்கு உரியதாகிய நெஞ்சினைத் தன்மேல் அன்பிலாதான் ஒருவன் பொருட்டு வருந்துவித்தல் சிலர்க்கேயன்றி எல்லார்க்கும் ஆம் தன்மையை உடையவோ? அல்லவோ?" எனவரும் நச்சினார்க்கினியர் உரையாலும் புலப்படுத்தப் பெற்றது. காமனுக்கு வில் கரும்பாகும். இச்செய்தி,

"நெடுமென்றோள்
பெய் கரும்பு ஈர்க்கவும் வல்லன்" (கலி. 142-143)

எனவரும் தொடராலும் "நெடிதாகிய மென்தோளிலே காமன் சிலையாகிய எழுதுகரும்பை எழுதவும் வல்லன்" எனவரும் உரையாலும் உய்த்துணரப்படும்.

## இரதி

காமவேளின் மனைவியின் பெயர் இரதி என்பதாகும்.

"இரதி காமன் இவள் இவன் எனா" (பரி. 19 : 48)

எனவரும் பரிபாடலடிகளில் காமனும், அவன் தேவியாகிய இரதியும் குறிக்கப் பெற்றுள்ளமை காணலாம். குறிஞ்சிக் கடவுளாகிய முருகப் பெருமான் மாலின் தங்கையாகிய கொற்றவைக்கு மகனாதலின் திருமாலுக்கு மருகன் என்றும்

உறவு முறையில் வைத்துப் போற்றப் பெற்றுள்ளான்.

"மாஅல் மருகன்" (பரி. 19 : 57)

எனவரும் பரிபாடற்றொடர் இவ்வுறவுமுறையினைப் புலப்படுத்தல் காண்க.

## முருகன் வழிபாடு

மைவரை உலகமாகிய குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வமாகத் தொல்காப்பியம் கூறும் சேயோன் வழிபாடு முருகமர் மாமலைகள் எல்லாவற்றிலும் குன்றுதோறாடல் என்ற முறையில் பொதுவாக நிகழ்வதாயினும், கடைச் சங்ககாலத்தில் மதுரையை அடுத்துள்ள திருப்பரங்குன்றம், கடற்கரை ஊராகிய திருச்சீரலைவாய், மலையைச் சார்ந்த ஊராகிய திருவாவினன்குடி, திருவேரகம், மலைப்பகுதியாகிய பழமுதிர்சோலை என்னும் திருப்பதிகளே மிகவும் சிறப்பு முறையில் நிகழ்ந்து வந்தது. இச் செய்தி, பத்துப்பாட்டுள் முதலாவதாகிய திருமுருகாற்றுப்படையிலும், எட்டுத் தொகையுள் ஒன்றாகிய பரிபாடலிலும் நன்கு விரித்துரைக்கப் பெற்றுள்ளது.

தொல்காப்பியனார் காலத்தில் வள்ளிநாச்சியார்க் குரிய கணவனாகப் போற்றப்பெற்ற முருகப் பெருமான் கடல் நடுவே இருபேருருவினனாய் எதிர்த்து நின்ற அவுணர் தலைவனாகிய சூர்மாவைத் தன் திருக்கையில் ஏந்திய வேற்படையால் தடிந்தும், குருகொடு பெயர்பெற்ற குன்றமாகிய கிரௌஞ்ச மலையைப் பிளந்தும், தேவர்களது துயரைத் துடைத்து வானோர் தலைவனாகிய இந்திரன் மகள் தெய்வயானையைத் திருமணம் புரிந்து வள்ளி, தெய்வயானை என்னும் இருவர்க்கும் உரிய கணவனாகவும், ஆலின்கீழ் அமர்ந்து முனிவர்க்கு அறம் உரைத்தருளிய சிவபெரு மானுக்கும், அம்முதல்வனோடு பிரிவின்றி இணைந்த ஆற்றலாய்

"இழையணி சிறப்பிற் பழையோள்"

எனவும்,

"வெற்றி வெல்போர்க் கொற்றவை"

எனவும்,

"மலைமகள்"

எனவும் போற்றப்பெறும் உமையம்மையார்க்கும் உரிய மைந்தனாகவும் இயைத்துப் போற்றப் பெறுகின்றான். தொல்காப்பியனாரால் நிலங்கடந்த நிலையிற் பொதுவாகக் குறிக்கப்பட்ட கொற்றவை என்னும் தாய்த் தெய்வம் கடவுள் எனப் போற்றப் பெறும் சிவபெருமானுக்குரிய சக்தியாகவும், முல்லை நிலத் தெய்வமாகிய மாயோனுக்குத் தங்கையாகவும், குறிஞ்சி நிலத் தெய்வமாகிய சேயோனுக்குத் தாயாகவும் எண்ணி வழிபடப் பெறும் உறவுநிலையைப் பெற்றுக் காடுகிழாளாகவும், முல்லையும் குறிஞ்சியும் திரிந்த பாலை நிலத் தெய்வமாகவும் வழிபடப்பெறுவதாயிற்று. கொற்றவை மைந்தனாகிய முருகன் அவள் தமையனாகிய திருமாலுக்கு மருகனாகப் போற்றப் பெறும் உறவுமுறை பரிபாடலில் இடம் பெற்றுள்ளமை முன்னர்க் குறிப்பிடப்பெற்றது. குறிஞ்சிக் கடவுளாகிய முருகப்பெருமான் சேயோன், செவ்வேள், நெடுவேள் என்ற பெயர்களால் சங்கச் செய்யுட்களிற் குறிக்கப் பெற்றுள்ளான். செந்நிறம் வாய்ந்த திருமேனியுடைமை பற்றிச் சேயோன் என்பதும், யாவராலும் விரும்பப்படும் அழகிய நெடிய திருமேனியை உடையனாதல் பற்றிச் செவ்வேள் - நெடுவேள் என்பதும் முருகப்பெருமானுக்குரிய திருப்பெயர்களாயின. இப்பெயர்கள் எல்லாவற்றினும் தலைமை வாய்ந்ததாகவும், மக்கள் எல்லோராலும் வழங்கப்பெறும் பொதுமையுடையதாகவும் திகழ்வது முருகன் என்னும் திருப்பெயரேயாகும். முருகு : தெய்வத் தன்மை, தெய்வத்தன்மை நிரம்பப் பெற்றவன் என்ற பொருளில் முருகன் என்ற பெயர் அம்முதல்வனுக்கு உரியதாயிற்று. முருகு என்னும் சொல் அழகு, இளமை, நறுமணம் எனப் பொருள் தரும் ஒரு சொல்லாகும். மாறாத பேரழகும், என்றும் குன்றா இளமையும், மலரின்கண் மணம் போன்று உயிர்க்குயிராய் உள்நின்று தோன்றும் தெய்வ மணமும் உடைய முழுமுதற் பொருளாகச் செவ்வேள் விளங்குதலால், குறிஞ்சிக் கிழவனாகிய அம்முதல்வனை முருகன் என்ற பெயரால் பண்டைத் தமிழ்ச் சான்றோர்

போற்றி வழிபடுவாராயினர்.

குறிஞ்சி நிலத் தெய்வமாகிய முருகனுக்குப் பூசனை புரிவோன் அம்முதல்வனது படைக்கலமாகிய வேலினை ஏந்தி ஆடுதலின் வேலன் என்று அழைக்கப்பட்டான். வேலன் ஆடும் ஆடலில் மலரின் உள்ளிருந்து எழும் மணம் போன்று அவனது உயிருணர்வின் வாயிலாகத் தெய்வம் வெளிப்பட்டுத் தோன்றுதலின், தெய்வத்தன்மை வாய்ந்த அவனது ஆடல் வெறி எனப் பெயர் பெறுவதாயிற்று. வெறி: மணம்; ஈண்டுத் தெய்வ மணத்தினைக் குறித்து நின்றது. இவ்வாறு தெய்வம் தன்மேல் ஆவேசிக்கப்பெறும் நிலையில் முருகனை வழிபடும் முறையினை அறிந்து வெறியாடல் நிகழ்த்தும் சிறப்பு முருகபூசை செய்யும் வேலவனுக்கு உரியதாதல் பற்றி,

"வெறியறி சிறப்பின் வேலன்"

எனவும், மக்களது நோய் நீங்கத் தெய்வத்திற்குப் பலியிடுதல் வேண்டும் என உயிர்க் கொலை புரிதலின் வெம்மைதரும் வாய்மையுடைமைபற்றி,

"வெவ்வாய் வேலன்"

எனவும் அடைபுணர்த்து ஓதினார் தொல்காப்பியனார். மலைநிலமக்கள் தம் குடியில் மணமாகாத இளமகளிர் மனஞ்சோர்வுற்று உடல் வாட்டமுற்ற நிலையில், அவ்வாட்டத்திற்குக் காரணம் தம் குல தெய்வமான முருகப்பெருமானது மணங்கமழ் தெய்வத் தோற்றத்தால் தாக்கப்பட்டு அஞ்சினமையே எனவும், முருகபூசை செய்யும் வேலனை அழைத்து வெறியாடல் நிகழ்த்தி முருகப் பெருமானை வழிபட்டால், அம்முதல்வனது திருவருளால் தம் மகளிர் வாட்டம் தீர்ந்து தெளிவு பெறுதல் திண்ணம் எனவும் எண்ணி வேலனைக் கொண்டு கட்டினாலும் கழங்கினாலும் நோயின் காரணமுணர்ந்து வெறியாடல் நிகழ்த்துவர். இந்நிகழ்ச்சி மலைநிலமக்களது அகவியல் வாழ்க்கையில் காணப்படும் மரபாகச் சங்கச் செய்யுட்களில் குறிக்கப்பெற்றுள்ளது. முருகப்பெருமானை வழிபட்டு

நிகழ்த்தும் இவ்வெறியாடலில் மணங்கமழ் தெய்வமாகிய செவ்வேள் தன்னை வழிபடும் வேலன் மேல் விரவித் தோன்றி (ஆவேசித்து) வேலனது வாய்மொழி வழியாக முன்நிகழ்ந்த தனையும், பின்னர் நிகழ இருப்பதனையும் அறிவுறுத்தி அருள்வான் என்பது மலைவாழ்நர் வாழ்வியலிற் காணப்படும் நம்பிக்கையாகும்.

ஒத்த அன்பினராகிய ஒருவனும் ஒருத்தியும் மேற்கொண்டொழுகும் களவொழுக்கத்துள்ளே தலைமகள் தன் ஆருயிர்த் தலைவனை அடையப் பெறாது தனிமையுற்று வருந்திய நிலையில் அவளது வாட்டத்திற்குரிய காரணம் அறியப்பெறாது வருந்திய செவிலி இவளுக்கு நேர்ந்துள்ள வாட்டம் எதனால் ஆயிற்று என ஐயுற்றுத் தலைமகளது வாட்டத்தைத் தணித்தற்பொருட்டு முன் நிகழ்ந்ததனையும், பின் நிகழ்வதனையும் கட்டினாலும் கழங்கினாலும் எண்ணி அறிவாரை அழைத்துக் கேட்ட பொழுது, அவர்கள் தெய்வத்தால் வந்த வருத்தம் என்று கூறினமையால், முருகபூசனை பண்ணும் வேலனை அழைத்துத் தம்மனைக்கண் வெறியாடல் நிகழ்த்துதலும், அதன்பயனாக முருகப் பெருமான் அருளால் தலைமகள் நோய் தணியப்பெறும் என நம்புதலும் இயல்பு. கட்டினால் எண்ணி அறிபவள் கட்டுவிச்சி. கட்டு என்பது சிறு முறத்தில் பரப்பிய நெல்லைக் கொண்டு முன் நிகழ்ந்ததனையும், இனி நிகழ்வதனையும் எண்ணிப் பார்த்துச் சொல்லும் ஒருவகைக் குறி. இக்குறி பார்ப்பவர் கட்டுவித்தி என அழைக்கப்படுவாள்.

> "கட்டுவிச்சி கட்டேறி
> சீரார் சுளகிற் சிலநெல் பிடித்தெறியா
> வேரா விதிர்விதிரா மெய்சிலிராக் கைமோவாப்
> பேரா யிரமுடையான் என்றாள்"

எனவரும் சிறிய திருமடலும், திருக்கோவையார் 285ஆம் பாடல் உரையும் கட்டுப்பார்த்தலின் இயல்பைப் புலப்படுத்தும். கழங்கு கழற்சிக்காய், கழங்கினை எண்ணிக் குறி சொல்பவன் வேலன். தன் நோய் தணிவித்தல் காரணமாகத் தன் மனைக்கண் வெறியாட்டு நிகழ

இருப்பதனை அறிந்த தலைவி தன் மெலிவிற்குக் காரணம் தன் ஆருயிர்த்தலைவனை அணுகப் பெறாமையே என்பதனை உணராது, முருகனால் ஏற்பட்ட வருத்த மென்றெண்ணி இவ்வெறியாட்டினைத் தொடங்கு கிறார்களே; இவ்வெறியாட்டில் முருகப்பெருமான் தோன்றி வேலன் வாயிலாக உண்மையை உணர்த்தின் நம் களவு வெளிப்படுமே எனவும், ஒருகால் தெய்வத்தின் திருவருளால் எனது மெலிவு தீரப்பெறுமாயின் என் மெலிவிற்குக் காரணம் தம்முடைய பிரிவன்று எனத் தலைவர் பிறழவுணர்ந்தால் என்னாவது எனவும், அஞ்சுதல் இயல்பு. தலைமகள் உள்ளத்தே தோன்றும் இவ்வச்சம்,

"வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்"

(தொல். களவு. 21)

எனவரும் தொல்காப்பியத் தொடரில் குறிக்கப் பெற்றமை காணலாம். "தலைவி வேறுபாடு எற்றினான் ஆயிற்று எனச் செவிலி வெறியாட்டுவிக்கவரும் அச்சத்தினானும் தலைவி குறிவழிச் செல்லாளாம்" என்பது இத் தொடர்க்கு இளம்பூரணர் தரும் உரையாகும். 'தலைவி வேறுபாடு எற்றினான் ஆயிற்று என்று வேலனை வினாவி வெறியாட்டு எடுத்தபொழுது தலைவி அஞ்சும் அச்சத்தின் கண்ணும்'- என்பது அத் தொடரின் பொருளாம். வெருவுதல் : அஞ்சுதல்; அஃதாவது முன்னமேயே தனது அயன்மையால் கடைப்பிடி இன்றி நெகிழ்ந்து களவொழுக்கத்தின் இன்பமே கருதி ஒழுகும் தலைமகன் இப்பொழுது நமது ஆற்றாமையைத் தணித்தற்கு முருகனை வழிபட்டு வெறியாடுதலாகிய பிறிதொரு மருந்தும் உண்டு என்று அறிவானானால், அவன் நம்மைத் திருமணம் செய்து கொள்ளும் காலம் மேலும் நீளுமே என்று தலைமகள் அஞ்சுவள். இங்ஙனம் தலைமகள் வெறியாட்டிடத்தே கொண்ட அச்சம்,

"பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅற்
றுனியில் கொள்கையொடு அவர்நமக் குவந்த
இனிய வுள்ளம் இன்னா வாக

முனிதக நிறுத்த நல்க லெவ்வம்
சூருறை வெற்பன் மார்புறத் தணிதல்
அறிந்தன ளல்லள் அன்னை வார்கோற்
செறிந்திலங் கெல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்
பொய்வல் பெண்டிர் பிரப்புளர்பு இரீஇ
முருகன் ஆரணங் கென்றலின் அதுசெத்து
ஓவத் தன்ன வினைபுனை நல்லிற்
பாவை யன்ன பலராய் மாண்கவின்
பண்டையிற் சிறக்கஎன் மகட்கெனப் பரைஇக்
கூடுகொள் இன்னியங் கறங்கக் களனிழைத்து
ஆடணி யயர்ந்த அகன்பெரும் பந்தர்
வெண்போழ் கடம்பொடு சூடி இன்சீர்
ஐதமை பாணி யிரீஇக் கைபெயராச்
செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்
வெறியயர் வியன்களம் பொற்ப வல்லோன்
பொறியமை பாவையின் தூங்கல் வேண்டின்
என்னாம் கொல்லோ தோழி மயங்கிய
மையற் பெண்டிர்க்கு நொவ்வ லாக
ஆடிய பின்னும் வாடிய மேனி
பண்டையிற் சிறவா தாயின் இம்மறை
அலரா காமையோ அரிதே அஃதான்று
அறிவர் உறுவிய அல்லல்கண் டருளி
வெறிகமழ் நெடுவேள் நல்குவ னெனினே
செறிதொடி யுற்ற செல்லலும் பிறிதெனக்
கான்கெழு நாடன் கேட்பின்
யானுயிர் வாழ்தல் அதனினு மரிதே" (அகம். 98)

எனத் தலைமகள் தோழியை நோக்கிக் கூறும் அகப்பாடலில் நன்கு புலப்படுத்தப்பெற்றுள்ளமை காணலாம். குளிர்ந்த மலைப்பக்கத்தே நம் தலைவர் நமக்கு வந்தளித்த அவரது இனியவுள்ளம் இன்னாவாயினமையின், அத்தலைவர் மார்பு உறுவது ஒன்றினாலேயே தணியும் என்றதனை நம் அன்னை

அறியாதவளாகிச் செயலற்ற வுள்ளத்தினளாய் வினவுதலாலே முதுமை வாய்ந்த கட்டுவிச்சியராகிய பெண்டிர் பிரப்பரிசியைப் பரப்பிவைத்துக் கட்டுப்பார்த்து இது முருகனது செயலால் வந்த வருத்தம் என்று கூறுதலால், அதனை உண்மையாகக் கருதி என் மகள் வாட்டம் தவிர்ந்து முன்போல் பொலிவு பெறுவாளாக! என்று தெய்வத்தைப் பரவி மனையிலே இனிய வாத்தியங்கள் ஒலிக்க வெறியாடு களத்தே இயற்றி, அதைச் செய்த பந்தலிலே வெள்ளிய பனந்தோட்டினைக் கடப்பமலரோடு சூடி இனிய தாளத்தோடு முருகக் கடவுளின் பெரும்புகழினைக் குறித்து வேலன் வெறியாடுதலை விரும்பினால் என்ன ஆகுமோ! அங்ஙனம் வேலன் வெறியாடிய பின்னும் எனது வாடிய மேனி வாட்டம் தீர்ந்து முன்புபோற் பொலிவு பெறாதாயின் இக்களவொழுக்கம் பலரும் தூற்றுமாறு வெளிப்படா திருத்தல் அரிது. அஃதன்றியும் என்பொருட்டு அறிவுடைய பெரியோர்கள் தாம் கொண்ட துன்பத்தைக் கண்டு உளமிறங்கி மனம் கமழ் வெற்பனாகிய முருகன் ஒருகால் எனது வாட்டத்தை நீக்கி முன்னைய அழகினைத் தந்தருள்வான் ஆயின், வளையலை அணிந்த நம் தலைவி உற்ற துன்பமும் என்னான் அன்றிப் பிறிதொன்றான் எய்தியது என நம் தலைவர் கேட்டறியின், யான் உயிர்தாங்கி வாழ்தல் அவ்வலர் வெளிப்பாட்டினும் இன்னாதாகும்" என்பது இவ்வகப்பாடலின் கருத்தாகும். இதன்கண் தெய்வத்தை நினைந்து குறிசொல்லும் கட்டுவிச்சியராகிய மகளிர் தமது குறியாற் புலப்படும் உண்மையினை வெளிப்படக் கூறாது சிலசமயம் மறைத்துப் பொய் கூறும் நிலையும் உண்டென்பது,

> "முதுவாய்
> பொய்வல் பெண்டிர் பிரப்புளர்பு இரீஇ
> முருகன் ஆரணங் கென்றலின்"

எனவரும் தொடரால் புலனாகும். தலைவியின் மெலிவிற்குத் தலைமகனை அடையப் பெறாமை காரணமாகவும், அவ்வுண்மையை மறைத்து முருகனது அணங்கே தலைவியின் மெலிவிற்குக் காரணம் என்றலின் 'பொய்வல்

பெண்டிர்' எனப்பட்டனர். களவொழுக்கத்தில்

"கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்
ஒட்டிய திறத்தால் செய்திக் கண்ணும்
ஆடிய சென்றுழி அழிவு தலைவரினும்" (தொல். கள. 25)

செவிலிக்குக் கூற்றாக நிகழும் என்றார் தொல்காப்பியனார். "தலைவியின் மெலிவிற்குரிய காரணங்களைக் கட்டு வைப்பித்தும், கழங்கு பார்த்தும் கண்டறிந்து அவளது மெலிவு தீர வேலனைக் கொண்டு வெறியாடுவித்தல் வேண்டும் என இருவரும் பொருந்திய பக்கத்துச் செய்திக்கண்ணும், அவ்வாறு வெறியாட்டு நிகழ்த்தத் தொடங்கிய காலத்துத் தோழி தடுத்து நிறுத்திய நிலையிலும் செவிலிக்குரிய கூற்று நிகழும்" என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும். இக்கூற்றுக்கள் செவிலி தானே கூறும் தன்கூற்றாகவும், தலைவியும் தோழியும் செவிலி கூற்றாகக் கொண்டெடுத்து மொழியப்படுவனவாகவும் சங்கச் செய்யுட்களில் இடம் பெற்றுள்ளன.

"அணங்குடை நெடுவரை" (அகம். 22)

என்னும் அகப்பாட்டினுள் கட்டுப்பார்த்து வெறிஎடுத்தமை கூறப்பட்டுள்ளது.

"பணிவரை நிமிர்ந்த" (அகம். 98)

என்னும் அகப்பாட்டினுள் 'பிரப்புளர்பு இரீஇ' எனக் கட்டுவிச்சியைக் கேட்டவாறும், 'என்மகட்கு' எனச் செவிலி கூற்று நிகழ்ந்தவாறும் காணலாம். 'கடவுட் கற்சுனை' (நற். 34) எனத் தொடங்கும் நற்றிணைப்பாட்டில்,

"நின்னணங் கன்மை அறிந்தும் அண்ணாந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோர்
கடவு ளாயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே"

எனத் தோழி வெறியட்டிடத்து வேலன்மேல் ஆவேசித்துத்

தோன்றிய முருகப் பெருமானை நோக்கிக் கூறும் கூற்று குறிஞ்சி நிலத் தெய்வமாகிய அம்முதல்வனது முற்றுணர்வுத் தன்மையையும், எத்திறத் தோராயினும் தன்னை அன்பினால் வேண்டி வழிபடுவார் பொருட்டு எளிவந்தருளும் அவ்விறைவனது பேரருட்டிறத்தையும் ஒருங்கு புலப்படுத்துதல் உணரத்தகுவதாகும். எங்கள் தலைவிக்கு நேர்ந்த மெலிவு நினது அணங்குதலால் வந்தது அன்று என்பதனை அறிந்து வைத்தும் நின்னை அன்பினால் வழிபடும் வேலன் வேண்டிக் கொள்ளுதலால் கார்காலத்து மலரும் நறிய கடப்ப மலர் மாலையாகிய முடிமாலையை அணிந்து தலைநிமிர்ந்து வெறியாடும் மனையிடத்தே எழுந்தருளிய முருகப்பெருமானே! நீ முற்றறிவினனாகிய கடவுளாயினும் ஆக! நிச்சயமாக அறியாமை உடையாய் ஆயினை! வாழ்வாயாக!" என வெறியாடு களத்தே வேலன் மேல் ஆவேசித்த முருகப் பெருமானை நோக்கித் தோழி கூறுவதாக அமைந்தது இந்நற்றிணைப்பாடல். இறைவனாகிய முருகன் எல்லாவற்றையும் தானே அறியும் முற்றுணர்வுடையன் என்பதனை அறிவுறுத்துவது,

"நின்னணங் கன்மை அறிந்தும்"

என்ற தொடராகும். தன்னை அன்பினால் வழிபடுவோர் பொய்மையாளராயினும் அவர்தம் வேண்டுகோளையும் பொருளென ஏற்று எளிவந்து அருள் புரிதல் அம்முதல்வனது பெருங்கருணைத் திறம் என்பதனைப் புலப்படுத்துவது,

"வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்"

என்ற தொடராகும். பேரறிவுப் பொருளாய்ச் சிந்தைக்கும் மொழிக்கும் எட்டாத கடவுளாயிருந்தும் நினது வாய்மைக்கு மாறாக வெறியாடுகளத்தில் வேலன் மேல் நீ ஆவேசித்துத் தோன்றியது முற்றுணர்வினன் என்னும் நின் இயல்புக்கு மாறான பேதைமைச் செயலாம் என்பாள்,

"கடவுளாயினு மாக மடவை மன்ற"

என்றாள். தலைவியின் மெலிவுக்கு உண்மையான காரணம் இதுவென உணர வொண்ணாதவாறு நீ இங்கு

எழுந்தருளினமை குறித்து எங்களைப் போன்ற பேதை யோரால் இகழப்படும் நிலையினை அடைந்தாலும் மன்னுயிர்த் தொகுதிகள் அனைத்தையும் வாழ்விக்கும் முழு முதல் கடவுளாகிய நின்னை வாழ்த்துவதே என்போல் வார்க்கும் வாழ்வளிக்கும் நற்செயலாம் என்பாள்,

"வாழிய முருகே"

என உளமுவந்து வாழ்த்தினாள். தோழியின் கூற்றாக அமைந்த இவ்வகப்பாடல் முருகக் கடவுளது முற்றுணர் வுடைமையினையும், அன்பர்க்கு எளிவந்தருளும் பேரருளுடைமையினையும் பரவிப் போற்றும் நிலையில் அமைந்துள்ளமை காணலாம்.

குறிஞ்சிநில மக்கள் தம்குல முதல்வனாகிய முருகப் பெருமான் மணங்கமழ் தோற்றத்து இளநலனுடையனாய்க் கடப்ப மலர்மாலையைச் சூடிக் கையில் வேலினை ஏந்தி வழிபடும் அன்பர்கள் முன்னே காட்சிதருதல் உண்டு என்பதனை உறுதியாக நம்பினார்கள். இவர்தம் வாழ்க்கையில் நிலைபெற்றுள்ள கடவுள் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு புனைந்துரை வகையாகக் கொண்டு பாடப்பெற்ற செய்யுட்கள் சங்கத் தொகை நூல்க ளெனப்படுகின்றன. களவொழுக்கம் ஒழுகும் தலைவன் நறுமலர் மாலையைச் சூடிக் கையில் வேலேந்தி இரவுக் குறியில் தலைமகள் மனையை நாடிச் சொன்றானாக, அந்நிலையில் அவனைக் கண்ட செவிலி, அவனை முருக னெனப் பிறழவுணர்ந்து வரவேற்றுப் பரவுதல் செய்தாள் எனத் தோழி சிறைப்புறத்தானாகிய தலைவன் கேட்கப் படைத்து மொழிவதாக அமைந்தது 272ஆம் அகப் பாடலாகும்.

"மின்னொளிர் எஃகம் சென்னெறி விளக்கத்
தனியன் வந்து பனியலை முனியான்
நீரிழி மருங்கின் ஆரிடத் தமன்ற
குளவியொடு மிடைந்த கூதளங் கண்ணி
அசையா நாற்றம் அசைவளி பகரத்
துறுகல் நண்ணிய கறியிவர் படப்பைக்

குறியிறைக் குரம்பைநம் மனைவயிற் புகுதரும்
மெய்ம்மலி உவகையன் அந்நிலை கண்டு
முருகென உணர்ந்து முகமன் கூறி
உருவச் செந்தினை நீரொடு தூஉய்
நெடுவேட் பரவும் அன்னை" (அகம். 272)

எனவரும் இப்பாடற் பகுதியில் இரவுக் குறியில் வந்தொழுகும் தலைமகனை எதிர்ப்பட்ட செவிலி இளையோனாகிய அவனது எழில் நலத்தைக் கண்டு அவனைத் தன் தெய்வத் தோற்றத்தைப் புலப்படுத்த எழுந்தருளிய முருகப் பெருமான் எனவே பிறழவுணர்ந்து வழிபட்டாள் என்ற செய்தி தோழியாற் படைத்துக் கூறப்பட்டுள்ளமை காணலாம். முருகன் தன்னை வழிபடும் அன்பர்க்கு அவரவர் நினைந்த திருமேனி கொண்டு அவர்முன் காட்சி நல்குதல்,

"சூருடைச் சிலம்பிற் சுடர்ப்பூ வேய்ந்து
தாம்வேண் டுருவின் அணங்குமார் வருமே"
(அகம். 158)

என்பதனாற் புலனாகும். ஐம்புலன்கள் வழியே செல்லும் உள்ளச் சிதைவின்றி எல்லாம் வல்ல இறைவனை ஒரு நெறிய மனம் வைத்து உணர்ந்து போற்றவல்ல பேரார்வமுடைய அன்பர்கள் தம்மால் வழிபடப் பெறும் தெய்வத்தைக் கண்ணாரக் கண்டு மகிழும் பெற்றியராதல் தொன்று தொட்டு இத்தமிழகத்தே நிலை பெற்று வரும் அனுபவ உண்மையாகும்.

"அழிவிலர் முயலும் ஆர்வ மாக்கள்
வழிபடு தெய்வம் கட்கண் டாங்கு" (நற். 9)

எனவரும் நற்றிணைத் தொடர் மேற்காட்டிய உண்மையை உவமையாக எடுத்துக் காட்டியுள்ளமை பண்டைத் தமிழ் மக்கள் காண்டற்கரிய கடவுளின் தெய்வத் தோற்றத்தைக் கண்களாற் கண்டு மகிழ்ந்த செய்தியினை நன்கு புலப்படுத்தல் காணலாம். அழகே உருவாகிய தெய்வம் முருகன். தன்னேரில்லாத் தலைமகனது எழில் நலத்தினை உவமை காட்டி விளக்கவந்த கபிலர்,

"இயல் முருகு ஒப்பினை" (அகம். 128)

என அவனுக்கு முருகப் பெருமானை ஒப்புக் கூறுகின்றார். யாவராலும் எதிர்த்து நிற்கலாற்றாத பெருவன்மையும், தீயோரை அழிக்கும் திறத்தில் பெருஞ்சினமும், அன்பர்கள் முன்னியது முடித்தருளும் பேரருளும் படைத்த பெருந் தெய்வமாக முருகப்பெருமான் திகழ்தலால் அப் பெருமானைப் பேரழகும் பேராற்றலும் செயல் வன்மையும் ஒருங்கு வாய்க்கப்பெற்ற அரசர் முதலியோர்க்கு உவமையாக எடுத்தாளும் மரபு தமிழிலக்கியத்தில் தொன்றுதொட்டு நிலைபெறுவதாயிற்று.

"முருகற் சீற்றத்து உருகெழு குருசில்" (பொருந. 131)

"கடம்பமர் நெடுவே ளன்ன மீளி" (பெரும்பாண். 75)

"முருகுடன்று கறுத்த கலியழி மூதூர்" (பதிற்றுப். 26)

"முருகொத்தீயே முன்னியது முடித்தலின்" (புறம். 56)

"முருகுறழ் முன்பொடு" (நற். 225) (அகம். 181)

"முருகற் சீற்றத் துருகெழு குருசில்" (புறம். 16)

"ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறல்
போல வரும் என் உயிர்" (கலி. 81)

"முருகுறழப் பகைத் தலைச் சென்று"
(மதுரைக் காஞ்சி 181)

"முருகன் நற்போர் நெடுவேளாவி" (அகம். 1)

எனவரும் தொடர்கள் இம்மரபினை அடியொற்றியமைந்தன. தீயோரை ஒறுத்தலில் தடுத்தற்கரிய சீற்றமுடையோன் முருகன் என்பது,

"முருகன் அன்ன சீற்றத்துக் கடுந்திறல் எந்தையும்"
(அகம். 158)

எனவரும் பாடலால் அறியப்படும்.

குறிஞ்சிநிலத் தெய்வமாகிய முருகப் பெருமானது

தெய்வமணம், விளையாடும் பருவத்து இளமகளிரை வருத்துதல் உண்டென்பது பண்டைத் தமிழர் வாழ்வியலிற் காணப்பட்ட நம்பிக்கையாகும். இத்தகைய நம்பிக்கை

"முருகன் ஆரணங்கு என்றலின்" (அகம். 98)

"அன்னைக்கு முருகென மொழியும் வேலன்"

"கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
அறியா வேலன் வெறியெனக் கூறும்" (ஐங்குறு. 243)

"நெடுவேள் அணங்குறு மகளிரின் ஆடுகளம் கடுப்ப"
(குறிஞ்சிப்பாட்டு)

என உடன்பாட்டானும்,

"அருந்திறல் கடவுளல்லன்
பெருந்துறைக் கண்டிவள் அணங்கியோனே" (ஐங். 182)

"விறல்வேள் அல்லன் இவள் அணங்கியோனே"
(ஐங். 250)

என எதிர்மறை முகத்தானும் வலியுறுத்தப் பெற்றுள்ளமை காண்க. அகத்திணை ஒழுகலாற்றில் தலைமகளது வருத்தம் தீர முருகனை வழிபட்டு நிகழ்த்தப்பெறும் இவ்வெறியாடல் தலைவியின் மனையகத்தே நிகழும் என்பது,

"உருகெழு சிறப்பின் முருகு மனைத் தரீஇக்
கடம்பும் களிறும் பாடி நுடங்குபு
தோடும் தொடலையும் கைக் கொண்டு அல்கலும்
ஆடினர் ஆதல் நன்றோ" (அகம். 138)

"கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்" (நற். 34)

எனவரும் தொடர்களாற் புலனாம். தலைமகளது நோயின் காரணம் இதுவெனவுணராத செவிலி முருகபூசை பண்ணுபவனும் அம்முதல்வனதருளால் நிகழ்ந்ததனை உணர்ந்து கூறவல்ல முதுவாய்மை படைத்தவனும் ஆகிய வேலனை வினவ, அவன் அந்நோய்க்குரிய காரணத்தைக்

கட்டுவைப்பித்தும், கழங்குபார்த்தும், தெரிந்து கொண்டு அந்நோய்க்குக் காரணம் முருகன் என்று அறிந்த பின்னரே அம்முதல்வனைப் போற்றி வெறியாடத் தொடங்குவான் என்பது,

> "..........................................................முதுவாய்ப்
> பொய்வல் பெண்டிர் பிரப்புளர்பிரீஇ
> முருகன் ஆரணங் கென்றலின்
> செல்வன் பெரும்பெயர் ஏற்றி வேலன்
> வெறியயர் வியன்களம்" (அகம். 98)

> "வேலன் கழங்கினால் அறிகுவ தென்றான்" (ஐங். 248)

> "பொய்யா மரபின் ஊர்முது வேலன்
> கழங்கு மெய்ப்படுத்திக் கன்னந்தூக்கி
> முருகென மொழியுமாயின்"

எனவருந் தொடர்களாற் புலனாகும்.

முருகப் பெருமானை வழிபட்டு வெறியாடுமிடம் பலநிற மலர்களால் அணி செய்யப் பெற்றிருக்கும். முருகனுக் குரிய வாத்தியமாகிய தொண்டகப் பறை முதலியன முழங்க தெய்வ உருவினைத் தாங்கி வேலன் வேலேந்தி ஆடுவான். இங்ஙனம் நிகழ்த்தப்பெறும் வெறியாடல் நள்ளிரவில் நிகழ்த்தப்பெறும் என்பதும், இவ்வாடலில் ஆட்டுக் குட்டியாகிய மறியினை யறுத்துக் குருதிப்பலியும் செந்தினை யும் படைத்து வழிபடுதல் இயல்பு என்பதும் முருகனைக் குறித்து நிகழும் இவ்வெறியாடல் முருகெனவும் வழங்கும் என்பதும்,

> "படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
> நெடுவேள் பேணத் தணிகுவள் இவளென
> முதுவாய்ப் பெண்டிர் அதுவாய் கூற
> களநன் கிழைத்துக் கண்ணி சூட்டி
> வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்து
> உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
> முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்" (அகம். 22:5-11)

எனவும்,

> "அணங்கறி கழங்கிற் கோட்டங் காட்டி
> வெறியென வுணர்ந்த வுள்ளமொடு மறியறுத்து
> அன்னை அயரும் முருகுநின்
> பொன்னேர் சுணங்கிற் குதவாமாறே" (நற். 47)

எனவும் வரும் தொடர்களால் அறியப்படும்.

முருகன் வழிபாட்டில் உறைத்துநின்று அப்பெருமானருளால் உறுவது கூறும் வேலன் சில சமயங்களில் முருகன் அருளைச் சிந்திக்காமலும், தன் அறியாமையாலும் தலைமகளுக்குத் தலைமகனால் நேர்ந்த மெலிவினை முருகனால் வந்ததெனப் பிறழவுணர்ந்து வெறியாடலில் தலைப்படுதல் உண்டு.

> "கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
> அறியா வேலன் வெறியெனக் கூறும்" (ஐங். 243)

எனவும்,

> "மறிகொலைப் படுத்தல்வேண்டி வெறிபுரி
> ஏதில் வேலன்" (அகம். 292)

எனவும் வரும் தொடர்களால் அறியப்படும்.

முருகனைப் பூசித்து அவன் அருள்வழி நின்று தான் கூறும் வாய்மொழியால் ஊர்மக்களுக்கு நலம் புரிதலையே தனது வாழ்க்கை நோக்கமாகக் கொண்டு வாழும் வேலன் கூறும் மொழிகள் மெய்ம்மை உடையனவே என ஊர்மக்கள் நம்பினர் என்பது,

> "பொய்யாமரபின் ஊர் முதுவேலன்
> கழங்கு மெய்ப்படுத்துக் கன்னந் தூக்கி
> முருகென மொழியு மாயின்" (ஐங். 245)

என்பதனால் புலனாகும்.

இங்ஙனம் மனையகத்தே வேலனைக் கொண்டு நிகழ்த்தும் வெறியாடலில் வேலன் கூறிய மாற்றத்தை மெய்யெனக் கொண்ட தாய்க்கு அதன் பொய்ம்மையைப் புலப்படுத்தும் நிலையில் அகத்திணைச் செய்யுட்கள் காணப்படுகின்றன.

"கறிவளர் சிலம்பிற் கடவுட் பேணி
அறியா வேலன் வெறியெனக் கூறும்
அதுமனங் கொள்குவை யன்னையிவள்
புதுமலர் மழைக்கண் புலம்பிய நோய்க்கே" (ஐங். 243)

எனவரும்பாடல் வேலன் கூற்றினை மெய்யென நம்பிய தாயை நோக்கி அவளது அறியாமை கூறி தோழி வெறி விலக்கும் வகையில் அமைந்ததாகும். வெறியாடல் துணிந்துழி அதனை விலக்க எண்ணிய தோழி செவிலி கேட்குமாறு தலைமகட்குச் சொல்வதாக அமைந்த பாடல்களும் உள்ளன.

"அம்ம வாழி தோழி பன்மலர்
நறுந்தண் சோலை நாடுகெழு நெடுந்தகை
குன்றம் பாடா னாயின்
என்பயன் செயுமோ வேலர்க்கு வெளியே" (ஐங். 244)

எனவரும் இப்பாடல் முருகனைப் போற்றி வெறியாடல் நிகிழும் வழி தலைமகளது மெலிவுக்குக் காரணமாகிய தலைவனது மலையையும் வேலன் சிறப்பித்துப் பாடுவானாயின் இவ்வெறியாடலாற் பயனுண்டு என்னும் கருத்தினைப் புலப்படுத்துவதால் வெறிவிலக்கல் என்னும் துறைக்கு இலக்கியமாயிற்று.

"பெய்ம்மணல் வரைப்பிற் கழங்குபடுத் தன்னைக்கு
முருகென மொழியும் வேலன் மற்றவன்
வாழிய விலங்கு மருவிச்
சூர்மலை நாடனை யறியாதோனே" (ஐங். 249)

எனவரும் பாடல், வேலன் கூறிய மாற்றத்தை உண்மை என நம்பிய தாய் கேட்கும்படித் தலைமகளுக்குத் தோழி

சொல்லியதாகும். மணல் பரப்பிய மனையின் எல்லைக் கண்ணே கழங்குபார்த்து இந்நோய் முருகனால் வந்ததென்று வேலன் அன்னைக்குக் கூறுகிறான். அவன் நின் மெலிவிற்குக் காரணமாகிய தலைவனை அறியாதவனாயினான். அதனால் நினது களவொழுக்கம் அவனுக்குப் புலனாகாதாயிற்று; அத்தகைய வேலன் நீடு வாழ்வானாக என வேலனை வாழ்த்துவது போன்று வெறிவிலக்கிய குறிப்பினது ஆதல் காணலாம். இவ்வாறு வெறிவிலக்கல் என்னும் துறையி லமைந்த பாடல்கள் தலைவியின் மெலிவிற்குக் காரணம் முருகனது அணங்கன்று என வற்புறுத்தும் நிலையில் அமைந்தனவே அன்றி முருகவேளுக்குச் செய்யும் வழிபாட்டை விலக்கும் குறிப்பினவல்ல வென்பதை மனங் கொளல் வேண்டும். குறிஞ்சி நில மக்கள் தம் குல முதலாகிய முருகன் மலை மேலெழுந்தருளி நின்று தாம் படைக்கும் படைப்புப் பொருளை ஏற்றுக்கொள்வான் என அன்பு நீங்கா அச்சமுடன் அம்முதல்வனை வழிபட்டார்கள் :

> "மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉம்
> அணங்கென அஞ்சுவர் சிறுகுடி யோரே" (கலி. 52)

தலைவியின் மெலிவகற்றல் வேண்டி மனை வரைப்பில் நள்ளிரவில் நிகழும் அகத்திணை ஒழுகலாறாகிய இவ்வெறியாடலேயன்றி உலக நலங்குறித்துப் பலரும் காண நிகழும் புறத்திணை பற்றிய வெறியாடல்களும் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன.

> "வெறிய றி சிறப்பின் வெவ்வாய் வேலன்
> வெறியாட்டயர்ந்த காந்தளும்" (தொல். புறம். 5)

'வெறியாடுதலையறியும் சிறப்பினையுடைய செவ்விய வாயினை உடைய வேலன்' எனப் பொருள் வரைந்த இளம்பூரணர், "காந்தள் என்பதனை மடலேறுதற்குப் பெயராகக் கூறுவார் உளராகலின், வெறியட்டயர்ந்த காந்தளென்றார். அன்றியும், காந்தளென்பது மடலேறுத லான் அத்துணை ஆற்றலாகிய பெண்பால்மாட்டு நிகழும் வெறி 'காந்தள்' எனவும் பெயராம். இதனானே காம வேட்கையின் ஆற்றாளாய பெண்பாற் பக்கமாகிய

வெறியும், அந்நிலத்துள்ளார் வென்றி வேண்டி ஆடும் வெறியும் கொள்ளப்படும். இவ்வெறி இந்நிலத்திற்குச் சிறந்தமை அறிக" என விளக்குவர். காந்தள் எனபதனைத் தலைவன் மடலேறுதற்குப் பெயராக வழங்குவார் கருத்தை ஏற்று அங்ஙனம் மடலேறும் அளவிற்கும் ஆற்றாளாய தலைவி மாட்டுத் தோன்றும் வெறியும் காந்தள் எனப் பெயர்பெறும் என்பதும் இதனால் காமவேட்கையின் ஆற்றாளாகிய பெண்பாற் பக்கமாகிய அகத்திணைபற்றிய வெறியாடலும் அக்குறிஞ்சி நிலத்துள்ளார் அரசனது வெற்றியை விரும்பி நிகழ்த்தும் புறத்திணைபற்றிய வெறியாடலும் உடன்கொள்ளப்படும் என்பதும் புறத்திணைபற்றிய வெறியாடல் குறிஞ்சி நிலத்திற்குச் சிறந்ததென்பதும் இளம்பூரணர் கருத்தாதல் மேற்குறித்த அவரது உரைத்தொடராற் புலனாம்.

செவ்வேள் வேலைத் தான் ஏந்தி நிற்றலின் வேலன் என்றார். காந்தள் தான் சூடுதலிற் காந்தள் என்றார். வேலனைக் கூறினமையின் கணிகாரிகையும் கொள்க. காந்தளை உடைமையானும் பனந்தோடுடைமையானும் மகளிரை வருத்துதலானும் வேலன் வெறியாட்டயர்ந்த என்றதானானும் வேலன் ஆடுதலே பெரும்பான்மை; ஒழிந்தோராடுதல் சிறுபான்மை என்றுணர்க. 'இது சிறப்பறியா மகளிர் ஆடுதலிற் புறனாயிற்று. வேலன் ஆடுதல் அகத்திணைக்குச் சிறந்தது' என்பர் நச்சினார்க்கினியர். கணிகாரிகையாவாள் வேலன் ஆடும் வெறிக்கூத்தினை யாடுபவள். சிறப்பறியா மகளிர் என்றது, வெறியறி சிறப்பின் வேலனைப் போன்று தெய்வத்திற்குச் செய்யும் கடன்களாகிய பூசை முறையினை அறியாத மகளிரை, மகளிர் ஆடும் வெறியாடல் புறனாம் என்பதும் வேலன் ஆடும் வெறியாடல் அகனாம் என்பதும் நச்சினார்க்கினியர் கருத்து. 'வேலன் தைஇய வெறியயர் களனும்' (திருமுருகு. 10) என்றாற் போலச் சிறப்பறியும் வேலன் தானேயாடுதலும் சிறுபான்மை புறத்திற்கும் உரித்தெனக் கொள்வர் நச்சினார்க்கினியர்.

"குறிஞ்சித் திணையில் தன் களவை மறைத்துத் தனிமையாற்றாது தளரும் தலைவியின் மெலிவு கண்ட

தாயார், உண்மையுணர வேண்டிக் குறிசொல்ல விரும்பி யழைக்கும் வேலனது வெறியாட்டு அகத்தைச் சார்ந்தது. அதனின்வேறாய் வெட்சியில் வரும் துறையான வேலன் வெறியாட்டு, வேலன் விரும்பிச் சூடும் பூவின் பெயரால் காந்தள் எனக் குறிக்கப்பட்டது. எனவே வேலன் வெறியாட்டு குறிஞ்சிக்கும் வெட்சிக்கும் பொதுவாயினும் வெட்சியில் வரும் வெறியாட்டில் வேலன் காந்தள் சூடி ஆடுவன். குறிஞ்சித் திணையில் வரும் வெறியாட்டில் வேலன் குறிஞ்சிப்பூச் சூடுதல் மரபு" என்பர் நாவலர் பாரதியார்.

> "அங்கடி வேலன் முருகொடு வளைஇ
> அரிக்கூ டின்னியம் கறங்க நேர்நிறுத்துக்
> கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
> சீர்மிகு நெடுவேட் பேணி தழூஉப் பிணையூஉ
> மன்றுதொறு நின்ற குரவை" (மதுரைக். 611-615)

என மதுரைக் காஞ்சியில் குறிக்கப்பெறும் வெறியாடல் அகத்தைச் சார்ந்தது என்பது அவர் கருத்து. இவ்வாறு அகத்திலும் புறத்திலும் வெறியாட்டு நிகழ்த்துவோன் வேலனாயினும் அகமாகிய குறிஞ்சித்திணை வெறியாட்டில் சூடும்பூ குறிஞ்சிமலர் எனவும் புறமாகிய வெட்சித்திணை வெறியாட்டில் சூடும்பூ காந்தள் எனவும் பகுத்துணர்த்துவர் பாரதியார்.

> "அறுவை தோயும் ஒரு பெருங் குடுமி
> சிறுபை நாற்றிய பஃறலைக் கொடுங்கோல்
> ஆகுவ தறியும் முதுவாய் வேல,
> கூறுக மாதோநின் கழங்கின் திட்பம்" (அகம். 195)

எனவரும் தொடர், கட்டினாலும் கழங்கினாலும் குறி பார்த்துத் தலைமகள் மெலிவிற்குக் காரணம் முருகனது அணங்கே என்பதனைத் தெளிவாகத் தெரிந்து கொண்ட பின்னரே வேலனைக் கொண்டு வெறியாடுதல் மரபு என்பதனை வற்புறுத்தும்.

முருகனை வழிபடும் நிலையில் ஆடப்பெறும்

வெறியாடல் மலைவாணர்குடியில் மனை முதிர் மகளிரால் புறத்தேயாவரும் காண ஆடப்பெறும் பொதுவிழாவாகவும் மனையத்தே வேலனைக் கொண்டு நிகழ்த்தப்பெறும் மனைவிழாவாகவும் நிகழும் இச்செய்தி,

> "..................................................குறவர்
> மனைமுதிர் மகளிரொடு குறவை தூங்கும்
> ஆர்கலி விழவுக் களங்கடுப்ப நாளும்
> விரவுப்பூம் பலியொடு விரைஇ யன்னை
> முருகென வேலற் றரூஉம்
> பருவ மாகப் பயந்தன்றால் நமக்கே" (அகம். 232)

எனவும்,

> "செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்
> வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்"
> (பட்டி. 154-155)

எனவும் வரும் பாடற் பகுதிகளால் அறியலாம். இத்தகைய வெறியாட்டில் முருகப் பெருமான் தனக்குப் பூசை செய்யும் வேலன்மேல் ஆவேசித்தல்போலக் கணிகாரிகையாகிய குறத்திமேல் ஆவேசித்தலுமுண்டு. இச் செய்தி,

> "ஆடுமகள் வெறியுறு நுடக்கம் போல" (பதிற். 51).

எனவரும் பகுதியாலறியலாம்.

> "........................................நெடுவேள்
> அணங்குறு மகளிர் ஆடுகளங் கடுப்பத்
> திணிநிலைக் கடம்பின் திரளரை வளைஇய
> துணையறை மாலையின்" (குறிஞ்சிப். 174-177)

எனவரும் குறிஞ்சிப்பாட்டின் பகுதி முருகனைநோக்கி நறுமலர் மாலைகளால் புனையப் பெற்றிருக்கும் என்பதனைப் புலப்படுத்தும்.

சென்றார்க் கச்சந்தரும் தன்மையன முருகனுக்குரிய உயர்ந்த மலைகளாதலின்,

"சூருடை அடுக்கம்" (நற். 359)

எனவும்,

"சூருடைச் சிலம்பு" (நற். 373)

எனவும் குறிக்கப்பெற்றுள்ளன. அங்கு மணமாகாத இளைய மகளிர் தனிமையிற் சென்றபோது அவர் மனத்தே ஏற்பட்ட அச்சத்தின் விளைவாக அன்னோர் மெலிந்து வருந்துத லியல்பு. அச்சத்தால் ஏற்பட்ட மெலிவினை அம்மலைத் தெய்வமாகிய முருகனால் ஏற்பட்டதாகக் கொண்டு அம்மெலிவுதீர முருகனுக்கு வெறியாடல் நிகழ்த்துதல் மலைவாணரது ஒழுகலாறு ஆயிற்று,

நெடுவேளால் அணங்குறும் இளமகளிரைப் போல அவனது ஊர்தியாகிய மயிலும் அம்முதல்வனால் ஆவேசிக்கப்பெற்று நடுங்குதல் உண்டு.

"சூருறு மஞ்ஞையின் நடுங்க"

எனவரும் குறிஞ்சிப்பாட்டடி இங்கு நினைக்கத் தக்கதாகும்

"சூர் நசைந்தனையையாய் நடுங்கல் கண்டே" (52)

என்பது குறுந்தொகை. முருகனால் ஆவேசிக்கப்பெற்ற கணிகாரிகை வேலனைப் போன்று வெறியாடல் நிகழ்த்துதல் உண்டென்பது,

"முருகு மெய்ப்பட்ட புலத்திபோல
தாவுபு தெறிக்கும் மான்" (புறம். 259)

எனவரும் புறப்பாடல் அடிகளாற் புலனாகும்.

மன்னுயிர்களின் அச்சம் அகற்றி அருள் சுரக்கும் முருகப் பெருமானை வழிபடும் திறத்தில் மலைவாணர் அன்பு நீங்கா அச்சமுடன் தூய்மையுடையராய் ஒழுகினர் என்பது,

"அணங்குடை முருகன் கோட்டத்துக்
கலந்தொடா மகளிரின் இகந்து நின்றவ்வே"

எனவரும் புறப்பாடற் பகுதியால் புலனாகும்.

ஒளிதங்கிய சிவந்த திருமேனியையுடைய முருகப் பெருமானுக்குப் பிணிமுகம் என்னும் பெயருடைய யானையும் மயிலும் ஊர்தியாகவும் கொடியாகவும் அமைந்தன வென்பது,

"மணிமயி லுயரிய மாறா வென்றி
பிணிமுக வூர்தி ஒண்செய் யோனும்" (புறம். 56 : 7-8)

எனவருந் தொடராற் புலனாம்.

முருகப் பெருமானைப் பிரியாத நிலையில் பேரொளியுடன் திகழும் தேவியாகக் குறமகளாகிய வள்ளி நாச்சியார் போற்றப் பெற்றுள்ளார். மணங்கமழ் தெய்வத்து இளநலமாகிய இத் தெய்வப் பொலிவினைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது,

"முருகு புணர்ந் தியன்ற வள்ளி போலநின்
உருவு கண் ணெறிப்ப நோக்கலாற்றலனே"

எனவரும் நற்றிணைப் பகுதியாகும்.

மலைவாணர் தம் நிலத்து விளைவு பெருக மழை பொழியவும், போதிய அளவு பெய்தபின் விளைவு கெடாதவாறு மழை நீங்கவும் முருகப் பெருமானை வேண்டி வழிபடுவர் என்பதும், முருகன் அருளால் விளைந்த தினையினை உவகையுடன் பகுத்துண்டு மகிழ்வர் என்பதும்,

"மலைவான் கொள்கென உயர்பலி தூஉய்
மாரியான்று மழை மேக் குயர்கென
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய உவகையர் சாரற்
புனத்தினை அயிலும் நாட" (புறம். 143)

எனவரும் கபிலர் பாடலான் நன்குணரப்படும்.

குறவர்கள் மகப்பேறு கருதி முருகப் பெருமானை

வழிபடுவர். இச்செய்தி,

> "குன்றக் குறவன் கடவுட் பேணி
> இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்" (ஐங். 257)

எனவரும் பாடலால் இனிது விளங்கும். மணமாகாத இளமகளிர் தம் திருமணம் இனிது நிறைவேறுதல் வேண்டி முருகப் பெருமானை நறுமலர்கள் தூவி வழிபடுதல் உண்டு. இச்செய்தி,

> "குன்றக் குறவன் காதன் மடமகள்
> மன்ற வேங்கை மலர்சில கொண்டு
> மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தி
> தேம்பலிச் செய்த ஈர்நறுங்கையள் (ஐங். 259)

எனவரும் தொடர்களால் இனிது விளங்கும். இங்ஙனம் தலைவியின் திருமணம் இனிது நிறைவேற தோழி முதலியோர் முருகப் பெருமானை வழிபட்டுக் குரவைக் கூத்தாடி அம்முதல்வனது பெரும் புகழைப் பாடிப் பரவுதலு முண்டு. இச் செய்தி,

> "தெரியிழாய் நீயும் நின்கேளும் புணர
> வரையுறை தெயவம் உவப்ப உவந்து
> குரவை தழீ இயாம் ஆட குரவையுள்
> கொண்டு நிலைபாடிக்காண்" (கலி. 39)

எனவரும் தொடர்களால் புலப்படுத்தப் பெற்றுள்ளமை காணலாம். மலைவாழ்நர் வரையுறை தெய்வமாகிய முருகக் கடவுளைப் பேணித் தாம் வித்திய தினை நன்கு விளைதல் வேண்டுமெனப் போற்றி வழிபடுதலுண்டு. இச் செய்தி

> "பலிபெறு கடவுட் பேணிக் கலி சிறந்து
> நுடங்குநிலைப் பறவை உடங்குபீள் கவரும்
> தோடிடங் கோடாய்க் கிளர்ந்து
> நீடினை விளைமோ வாழிய திதையே" (நற். 251)

எனவரும் தொடர்களால் புலனாகும். பாண்டிய நாட்டில்

வாழ்ந்த மலைவாழ்நராகிய குறவர்கள் முருகப் பெருமானைப் போற்றித் தாம் வளர்த்த சந்தன மரத்தைத் தன் நாட்டு மன்னனாகிய பாண்டியனுக்கு அன்பின் கையுறையாகத் தந்தனர். இச் செய்தி

"தன் கடற்பிறந்த முத்தின் ஆரமும்
முனைதிரை கொடுக்கும் துப்பின் தன்மலைத்
திறலருமரபின் கடவுட் பேணி
குறவர் தந்த சந்தின் ஆரமும்
இருபே ராரமும் எழில் பெற வணியும்
திருவீழ் மார்பின் தென்னவன்" (அகம். 13)

எனவரும் அகப்பாடற் பகுதியால் இனிது விளங்கும். ஒத்தவன்புடைய ஒருவனும் ஒருத்தியும் நல்லூழின் தூண்டுதலால் ஒருவரை ஒருவர் எதிர்ப்பட்டுக் கூடும் இயற்கைப் புணர்ச்சியில் தலைவன் மலையுறை தெய்வமாகிய முருகப் பெருமானை வாழ்த்தி வணங்கித் தலைமகளை நோக்கி நின்னிற் பிரியேன் எனத் தண்ணீரைப் பருகிச் சூளுறவு செய்தல் உண்டு. இச்செய்தி

"...............................................பிறங்குமலை
மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது
ஏமுறுவஞ்சினம் வாய்மையிற்றேற்றி
அந்தீந் தெண்ணீர் குடித்தலின் நெஞ்சமர்ந்து
அருவிடர் அமைந்த களிறுதரு புணர்ச்சி (குறிஞ்சிப்.)

எனவரும் குறிஞ்சிப் பாட்டடிகளாற் புலனாகும்.

குறிஞ்சி நிலத் தெய்வமாகிய முருகப் பெருமான் யானையை ஊர்தியாகக் கொண்டு பகைவரை அழிக்கும் வேற்படையாலே கடல் நடுவே புக்கு இருவேறு உருவின னாகிய சூரபதுமனையும் அவன் வடிவாகிய மாமரத்தையும் பிளந்து அழித்தருளியதும் குருகொடு பெயர் பெற்ற குன்றமாகிய கிரௌஞ்சமலையைப் பிளந்தருளியதும் ஆகிய புராணச் செய்திகள் சங்கச் செய்யுட்களிற் பலவிடங்களிலும் எடுத்தாளப் பெற்றுள்ளன.

“வரைமருள் புணரி வான்பிசி ருடைய
வளிபாய்ந் தட்ட துளங்கிருங் கமஞ்சூல்
நளியிரும் பரப்பின் மாக்கடன் முன்னி
அணங்குடையவுண ரேமம் புணர்க்கும்
சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு” (பதிற். 11)

எனவரும் பதிற்றுப்பத்தில் கடல் அவுணர்களால் சூழப்பெற்ற சூரபதுமனையும் அவனுக்குக் காவலாக இருந்த மா மரத்தையும் முருகப் பெருமான் வேற்படையால் பிளந்தழித்த செய்தி உவமையாக எடுத்தாளப் பெற்றது. ‘சூருடைமுதல்’ என்றது சூரவன்மா தனக்கு அரணாகவுடைய மாவின்முதல் என்றவாறு. இனிச் சூரவன்மா தான் ஓர்மாவாய் நின்றான் என்று புராணம் உண்டாயின், சூர்னாதற்றன்மையையுடைய மாவின்முதல் என்றவாறாம்’ என்பர் பழைய உரையாசிரியர். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பகைவரது காவல் மரத்தினைத் தடிந்து யானைமேல் உலாவந்த தோற்றத்திற்கு முருகப் பெருமான் கடல் நடுவே நின்ற சூர்மாவைத் தடிந்து களிற்றின் மேல் எழுந்தருளிய தெய்வத் தோற்றத்தினைக் குமட்டூர்க் கண்ணனார் உவமையாக எடுத்தாண்ட திறம் முருகன் சூர்மாவைக் கொன்ற புராண வரலாற்றின் தொன்மையினை நன்கு புலப்படுத்தல் காணலாம்.

மிகப் பழங்காலத்திலே மக்களினத்தார் தமக்கு இடர் விளைத்த விலங்குகளையும், பகைவர்களையும் அழித்தற் பொருட்டுப் பயன்படுத்திய படைக்கல வகைகளுள் தொன்மையுடையதும் ஆழ்ந்து அகன்று நுண்ணிதாகிய திறத்தால் அறிவின் ஒட்பத்தைப் புலப்படுத்துவதும் வேல் என்னும் படைக்கலமேயாகும். இத்தகைய வேற்படையைத் தாங்கிய இளைய வீரனாகவும், மக்களுக்கு உளதாம் பல்வகை அச்சங்களைப் போக்கி அவர்கள் நினைந்தவற்றை விரைந்து முடித்தருளும் இளைய வீரர் தலைவனாகவும், செஞ்ஞாயிற்றை ஒத்த சிவந்த திருமேனியனாய் நறுமலர் மாலையணிந்து நீல மயிலாகிய பறவைமேல் அமர்ந்து வரும் பேரழகனாகவும் மலைவாழ்நரால் வழிபடப் பெற்ற தெய்வம்

சேயோனாகிய முருகப் பெருமான் என்பதனைச் சங்கச் செய்யுட்களால் நன்கு உணரலாம். எல்லாம் வல்ல முழுமுதற் பொருளாகிய இறைவன் காண்டற்கரிய கடவுளாயினும் தன்னை அன்பினாற் கருதி வழிபடுவர் உள்ளத்தே மேற்குறித்தவண்ணம் கவின்பெறு தோற்றத்தின னாகத் தோன்றிப் புறத்தேயும் காட்சி நல்குவான் என்பது அம்முதல்வனதருளால் அவனைப் போற்றிப் பேரின்பம் நுகர்ந்த அருளாளர்களும் அம்முதல்வனை அன்பினால் ஒருங்கு கூடிப் போற்றும் திறத்தார் அவன் அருளுக்கு இலக்காகிய உலகத்து ஏனைய் மக்களும் முறையே சிறப்பு நிலையிலும், பொது நிலையிலும் கண்டுணர்ந்த அனுபவ உண்மையாகும். வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து தெய்வத் திருவருளைப் பெற்றுப் பேரின்பம் உறும் பெருமக்கள்,

"யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"

என்ற நன்னோக்கு உடையராய்ப் பெரும் பெயர் முருகனாகிய முழுமுதற் கடவுளாற் பெறும் பேரின்ப நிலையினைப் பெறுதற்கு உறுதுணையாக முருகனது பொருள் சேர் புகழ்த் திறத்தைப் பலரும் ஒருங்கு கூடிப் போற்றும் முறையில் இயற்றியருளிய தெய்வப் பனுவல்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் இங்கு சிறப்பாகக் குறிப்பிடத்தகுவது பத்துப்பாட்டுள் முதற் பாட்டாகிய திருமுருகாற்றுப்படையாகும்.

தன்னிகரற்ற தலைவன் ஒருவன்பால் பரிசில் பெற்று வரும் கூத்தர், பாணர், பொருநர், விறலி முதலிய பரிசில் வாழ்நர் வழியிடையே தம்மை எதிர்ப்பட்ட இரவலர்களது துயரைக் கண்டு இரங்கித் தாம் பெற்ற பெருஞ் செல்வத்தை அவர்களும் பெற்று மகிழும்படி வழிப்படுத்துதல் ஆற்றுப்படை எனப்படும்.

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇ
சென்று பயன்எதிரச் சொன்ன பக்கமும்"

என்பது தொல்காப்பியனார் கூறிய ஆற்றுப்படை இலக்கணமாகும். ஆடுதல் தொழிலில் வல்ல கூத்தரும், பண் பொருந்தப் பாடுதலில் வல்ல பாணரும், பிறர் மனத்திற் கொண்டதனைக் குறிப்பால் உணர்ந்து இசை பட நடித்துக் காட்ட வல்ல பொருநரும், தன் மனக் குறிப்பு மெய்யின்கண் புலப்பட ஆடவல்ல விறலியரும் ஆகிய நால்வகையோரும் தாம் பெற்றுள்ள செல்வப் பொலிவும் தம்மை வழி இடையே எதிர்ப்பட்ட பரிசிலர்களின் வறுமைத் தோற்றமும் ஒன்றிரண்டு மாறுபட்டுத் தோன்ற, தமக்குப் பெருஞ் செல்வத்தை வழங்கியவர் இன்னார் எனவும் அவரை அடைந்து பரிசில் பெறுதற்குரிய வழிமுறைகள் இவையெனவும் தம்மை எதிர்ப்பட்ட பரிசிலர்க்கு அறிவுறுத்தி, அன்னோர் தாம் கூறியவழியே சென்று பரிசில் பெறுதற்கு ஏற்ற வழி சொல்லி அனுப்புவதாக அமைந்த பனுவல் ஆற்றுப்படை என்னும் துறையாம் என்பது மேற்குறித்த தொல்காப்பியத் தொடரின் பொருளாகும். இத் தொடரிற் சுட்டிய இலக்கணத்தின்படி அமைந்தன கூத்தராற்றுப்படை, பாணாற்றுப்படை, பொருநராற்றுப் படை, விறலியாற்றுப்படை என்பன. இவற்றுக்குரிய இலக்கியங்களாகப் பத்துப் பாட்டுள் மலைபடுகடாம் என்னும் கூத்தராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை ஆகிய பாடல்களையும், புறநானூற்றில் விறலியாற்றுப்படை என்னும் துறைகளிலமைந்த பாடல்களையும் கொள்ளலாம். வாழ்க்கைத்துறையில் வளம் பெற்றோர் தம்போல் வளம் பெறாதாரை நோக்கி வளம் பெற்று வாழ்வதற்கேற்ற வழி முறைகளை அறிவுறுத்துவது ஆற்றுப்படைப் பனுவல்களின் நோக்கமாகும். "யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்று எண்ணி விரிந்த உள்ளத்துடன் ஒருவர்க்கொருவர் தத்தம் அனுபவங்களை எடுத்துரைத்து வையத்து வாழ்வாங்கு வாழ வழிகாட்டி உதவும் இத்தகைய தெய்வ அருட் குறிப்பினை,

> "ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
> பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇ
> சென்று பயனெதிரச் சொன்னபக்கமும்"

எனவரும் தொடரால் ஆசிரியர் தொல்காப்பியனார் புலப்படுத்தியுள்ளார். இத்தொடர்ப்பொருளைக் கூர்ந்து நோக்குங்கால் இங்கு எடுத்து ஓதப்பட்ட கூத்தர், பாணர், பொருநர், விறலியர் என்னும் இவர்களையேயன்றி, இவர்களைப் போன்று ஏனைக் கலைத் துறைகளில் பயிற்சி உடைய கலைஞர் பிறரும் தம் எதிர்ப்பட்ட மக்களைத் தத்தம் துறையில் மேல்மேல் வளம் பெறச் செய்தல் வேண்டும் என்னும் அருள் நோக்குடன் நல்வழியிற் செலுத்துதற்குரியர் என்பதும், இவ்வாறு வெவ்வேறு கலைத் துறைகளில் வல்ல சான்றோர் பலரும் தத்தம் பயிற்சி நிலையையும், வாழ்க்கை அனுபவத்தையும் எடுத்துரைத்துத் தம்மை ஒத்த மக்களை நல்வழியிற் செலுத்துதலாகிய பல்வேறு முயற்சிகளும் ஆற்றுப்படை என்னும் இத்துறையில் அடங்கும் என்பதும் இனிது புலனாகும். எனவே இங்கு எடுத்துக் கூறப்பட்ட கூத்தர், பாணர், விறலியர், பொருநர் என்போர் கூற்றாக அமைந்த ஆற்றுப்படைகளேயன்றிப் புலவர் முதலிய பிறர் கூறுவனவாகவமைந்த ஏனைய ஆற்றுப்படைகளும் மேற் குறித்த தொல்காப்பிய இலக்கணத்தின்படி ஆற்றுப் படைகள் எனவே வழங்குதற்கு உரியன. ஆற்றுப்படை எல்லாவற்றிற்கும் உரியவாக இங்குக் கூறப்பட்ட பொது இலக்கணத்தினைக் கூர்ந்து நோக்குங்கால் பத்துப்பாட்டுள் முதற்பாட்டாகத் திகழும் திருமுருகாற்றுப்படை என்ற பனுவல் தொல்காப்பியனார் கூறிய ஆற்றுப்படை இலக்கணத்தின்படி அமைந்ததே என்னும் உண்மை நன்கு தெளியப்படும். "ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி, பெற்ற பெருவளம் பெறார்க்கறிவுறீஇச், சென்று பயனெய்தச் சொன்னபக்கம்" எனவரும்தொல்காப்பியத் தொடர் எல்லாவகையான ஆற்றுப்படைகளுக்கும் பொது இலக்கணமாக அமைந்தது எனவே கொள்ளுதல் வேண்டும். இத் தொடர்க்கு "இல்லறத்தைவிட்டுத் துறவறமாகிய நெறியில் நிற்றல் நன்றென்றும் கண்ட காட்சி தீதென்றும் மாறுபடத் தோன்றுகையினாலே தான் இறைவனிடத்துப் பெற்ற கந்தழியாகிய செல்வத்தை யாண்டும் திரிந்து பெறாதார்க்கு இன்ன இடத்தே சென்றாற் பெறலாம் என்று அறிவுறுத்தி, அவரும் ஆண்டுச் சென்று அக்கந்தழியினைச் சொன்ன கூறுபாடு" எனப் பொருள் வரைந்து தெய்வத்தி

னிடத்து ஆற்றுப்படுத்துவதாகிய ஆற்றுப்படைக்குரிய சிறப்பிலக்கணமாகக் கொண்டார் நச்சினார்க்கினியர். இவ்வாறன்றி இத் தொடரை ஆற்றுப்படையின் பொது விலக்கணமாகவே கொள்ளினும் தெய்வத்தின் பால் உய்ப்ப தாகிய இத்திருமுருகாற்றுப்படை அப்பொது விலக்கணத் தின்படி அமைந்த ஆற்றுப்படைகளுள் ஒன்றாய் அடங்குதல் காணலாம்.

"இனி முருகாற்றுப்படை என்பதற்கு முருகன்பால் வீடு பெறுதற்குச் சமைந்தான் ஓர் இரவலனை வீடுபெற்றான் ஒருவன் முருகனிடத்தே ஆற்றுப்படுத்தது என்பது பொருளாகக் கொள்க" என்பர் நச்சினார்க்கினியர். இதனைப் புலவராற்றுப்படை என வழங்குதலுமுண்டு.

'அமரர்கண் முடியும் அறுவகையானும்' எனவரும் தொல்காப்பியத் தொடர்க்கு "அமரர் கண்முடியும் கொடிநிலை, கந்தழி, வள்ளி, புலவராற்றுப்படை, புகழ்தல், பரவல் என்பன வற்றினும்" எனப் பொருள் வரைந்த இளம்பூரணர் வந்தது கொண்டு வாராததுணர்த்தல்" (தொல். மரபு. 110). என்பதனால் புலவராற்றுப்படை முதலாகிய மூன்றும் சார்த்தி வரும் எனவும் கொள்க. முருகாற்றுப் படையுள்,

> "மாடமலிமறுகில் கூடல் குடவயின்
> இருஞ்சேற்றகல்வயல் விரிந்து வாயவிழ்ந்த
> முட்டாட்டாமரைத்துஞ்சி"

என்றவழி ஒருமுகத்தால் பாண்டியனையும் இதனுட் சார்த்தியவாறு காண்க எனவரும் இளம்பூரணர் உரை, திருமுருகாற்றுப்படை புலவராற்றுப்படை என்ற பெயரால் இளம்பூரணர் காலத்தில் வழங்கியது என்பதனை வலியுறுத்தும். கூத்தராற்றுப்படை, பாணாற்றுப்படை பொருநராற்றுப்படை, விறலியாற்றுப்படை என ஏனைய ஆற்றுப்படைகளெல்லாம் ஆற்றுப்படுத்துவோராகிய கூத்தர் முதலியோரது தலைமை தோன்ற அவர்களது பெயரால் வழங்குமாறு போல, முருகன்பால் முதுவாய் இரவலனாகிய புலவனை புலமைச் செல்வருள் ஒருவர் ஆற்றுப்படுத்தும்

முறையில் நக்கீரர் பாடிய இவ்வாற்றுப்படையும், ஆற்றுப்படுத்துவோராகிய புலவர் பெயரால் புலவராற்றுப் படை என வழங்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்பது மேற்குறித்த இளம்பூரணர் உரையால் உய்த்துணரப்படும்.

எனினும், நக்கீரரால் பாடப்பெற்ற இவ்வாற்றுப்படை ஆற்றுப்படுத்தும் புலவர் பெயரால் புலவராற்றுப்படை என வழங்கப்பெறாமல் ஆற்றுப்படுத்தப் பெறும் முருகப் பெருமான் பெயரால் முருகாற்றுப்படை எனவே சிறப்பு முறையில் வழங்கப் பெற்று வருகிறது. புலவராற்றுப்படை என்ற பெயரால் இப்பாடல் நுதலிய சமய நுண்பொருள் விளங்கமாட்டாது போகவே அப்பொருள் எளிதில் விளங்குமாறு பாட்டுடைத் தெய்வத்தின் பெயரொடு சார்த்தி முருகாற்றுப்படை என இப்பனுவல் சிறப்பு முறையில் வழங்கப் பெறுவதாயிற்று. எனவே புலவராற்றுப்படை என்ற பொதுப் பெயர் வழக்கு வீழ்ந்ததாதல் வேண்டும். "இதனைப் புலவராற்றுப்படை என உய்த்துணராது பெயர் கூறுவார்க்கு முருகாற்றுப்படை என்னும் பெயரன்றி அப்பெயர் வழங்காமையான் மறுக்க" (தொல். புறம். 36) எனவரும் நச்சினார்க்கினியர் கூற்று இவ்வுண்மையைப் புலப்படுத்தல் காணலாம்.

மெய்யுணர்வினால் உயிர்முனைப்படங்கி இறைவனது திருவடிகளை இடையறாது போற்றும் நலம்புரி கொள்கைப் புலவன் ஒருவன் தன்னை ஒத்த புலவர்களை இறைவன்பால் ஆற்றுப்படுத்தற்குரிய தகுதி உடையேன் யான் என்னும் ஆன்ம போதத்துடன் முருகப் பெருமானை அடைதற்குரிய நெறி முறையைப் புலவர்க்கு அறிவுறுத்தினான் என்றல் சீவன் முத்தனாகிய அவனது உளவியல்பிற்குக் சிறிதும் ஒவ்வாது. எனவே, இவ்வாற்றுப்படை அப்புலவனது தலைமை தோன்ற புலவராற்றுப்படை என்ற பெயரால் வழங்கப் பெறாதாயிற்று. அன்றியும் சிந்தைக்கும் மொழிக்கும் எட்டாத முழுமுதற் பொருளாகிய முருகப் பெருமானை அடையும் நெறியறிந்து சென்று சேர்தல் சில் வாழ் நாள் பல்பிணிச் சிற்றறிவினராகிய மன்னுயிர்கட்கு இயலா தென்பதும் அரும் பெயர் மரபில் பெரும் பெயர் முருகனாகிய அம்முதல்வனே தன் அருள்

காரணமாக மன்னுயிர்த் தொகுதியாகிய நம்மை நோக்கி எளிவந்து தோன்றி அருள்புரியும் வண்ணம் அவ்விறைவனை அன்பின் திறத்தால் நம்வழிப்படுத்தும் வழிபாட்டு முறைகளை அறிவுறுத்தும் முறையில் இப்பாடல் அமைந்தமைபற்றி இது முருகாற்றுப்படை என்னும் பெயர்த்தாயிற்று என்பதும் பண்டைச் சான்றோர் முடிபாகும். இந்நுட்பம்

> "..................................குறமகள்
> முருகியம் நிறுத்து முரணினர் உட்க
> முருகாற்றுப்படுத்த உருகெழு வியனகர்"

எனவரும் இத்திருமுருகாற்றுப்படைத் தொடரானும்,

> "களநன் கிழைத்துக் கண்ணிசூட்டி
> வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்
> துருவச் செந்தினை குருதியொடு தூஉய்
> முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்" (அகம்.)

எனவரும் அகப்பாடலாலும் நன்கு புலனாதல் காணலாம். முருகாற்றுப்படுத்த எனவரும் இத் தொடர்க்குப் "பிள்ளையார் வரும்படி வழிப்படுத்தின" என்று நச்சினார்க்கினியர் கூறிய பொருள் முருகாற்றுப்படை என்னும் பெயர்க் காரணத்தை இனிது புலப்படுத்துவதாகும்.

இனி, முருகன் எழுந்தருளிய திருப்பதிகளாகிய திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்னும் ஆறுபடை வீடுகளையும் பற்றிக் கூறுதலின், இப்பாடல் திருமுருகாற்றுப்படை என்னும் பெயர்த்தாயிற்று எனக் கொண்டு இவ்வொரு பாடலையே ஆறுபகுதிகளாகப் பகுத்து வழங்குவாரும் உளர். இத்திருமுருகாற்றுப்படையில் தனிப்பட எடுத்துரைத்துச் சிறப்பிக்கப்பட்ட திருப்பதிகள் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம் என்னும் நான்குமேயாகும். அந்நூல் ஐந்தாவதாகக் கூறும் குன்றுதோறாடல் என்பது ஒருதனித் திருப்பதி அன்று. சேயோனாகிய முருகப் பெருமான் குறிஞ்சி நிலத் தெய்வம் ஆதலால் அவ்விறைவனுக்கு எல்லா மலை

களும் விரும்பி விளையாடுதற்கு உரிய சிறப்புடைய திருத் தலங்களே என்னும் கருத்தினால்

"குன்று தோறாடலும் நின்றதன் பண்பே"

என்றார் முருகாற்றுப்படை ஆசிரியர். மலைகள் தோறும் சென்று விளையாடுதலும் முருகப் பெருமானுக்கு நிலை பெற்ற பண்பாம் என்பது இத்தொடரின் பொருளாகும். இவ்வாறு குறிஞ்சிக் கிழவன் என்ற பொருள்படப் பழமுதிர் சோலை மலை கிழவோன் என முருக வேளை இந்நூலாசிரியர் திருமுருகாற்றுப்படையின் இறுதி அடியில் குறிப்பிட்டுப் போற்றியுள்ளார். இங்குக் கூறப்பட்ட பழமுதிர் சோலைமலை என்பதனைச் சங்கத் தொகை நூலாகிய பரிபாடலில் திருமாலிருஞ்சோலைமலை என்ற பெயரால் போற்றப்பெறும் அழகர்மலையென வழங்கும் திருப்பதியாகக் கொள்வது முண்டு. பழமுதிர் சோலைமலை என அதனைத் தனியே எண்ணாமல் அம்மலை முருகனுக்கு உரியது என்றவளவில் பழமுதிர் சோலை மலைகிழவோன் எனத் திருமுருகாற்றுப்படை குறித்தலால் பழமுதிர் சோலைமலை என்ற தொடர் திருமாலிருஞ்சோலை மலையை மட்டும் குறித்தது எனக் கொள்ளாமல், அம்மலையினை ஒத்து இழுமென இழிதரும் அருவியையுடைய வளமார்ந்த எல்லா மலைகளையும் குறித்து நின்றதெனக் கொள்ளுதலே ஏற்புடையதாகும். பழமுதிர் சோலை மலைகிழவோன் என உடம்பொடு புணர்த்துக் கூறினமையால், பழமுதிர் சோலை மலையின்கண்ணே எழுந்தருளியிருத்தலும் உரியன் எனப் பெருள் கொண்டு இம்மலையினை முருகனுக்குரிய தனித் திருப்பதியாகக் கொண்டாலும் இம்முருகாற்றுப்படையில் சிறப்பிக்கப் பெற்ற திருத்தலங்கள் ஐந்தெனக் கொள்வதன்றி ஆறுபடை வீடெனக் கொள்வதற்குச் சிறிதும் இடமில்லை.

திருமுருகாற்றுப்படை என்னும் இப்பனுவலின் ஆசிரியர் சங்கப்புலவர் நக்கீரனார் ஆவார். இச்செய்தி, "குமரவேளை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடிய திருமுருகாற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்த வுரை" எனவரும்

உரைத் தொடரால் நன்கு துணியப்படும். பத்துப்பாட்டுள் முதலாவதாகிய திருமுருகாற்றுப்படையினைப் பாடிய நக்கீரனாரே பத்துப்பாட்டுள் ஏழாவதாகிய நெடுநல்வாடை என்னும் படலையும் பாடியுள்ளார். இச்செய்தி, "பாண்டியன் நெடுஞ்செழியனை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடிய நெடுநல்வாடை" எனவரும் நச்சினார்க் கினியர் உரைத் தொடரால் நன்கு புலனாகும்.

இனி, திருமுருகாற்றுப்படையிலும் நெடுநல் வாடையிலும் முறையே பேரின்பமாகிய வீடுபேற்றினையும் சிற்றின்பமாகிய உலகியல் வாழ்வினையும் நாடி வாழ்ந்த இரு வேறு மனநிலை புலப்படுதலாலும் இவ்விரு பாடல் களிடையே மொழி நடை முதலியன வேறுபட்டிருத்த லானும் இவை இரண்டும் ஒரு புலவரால் பாடப்பெற்றிருத்தல் இயலாது என்றும், நெடுநல்வாடை இயற்றிய நக்கீரனார், கடைச் சங்க காலத்திலும், திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரனார் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிலும் வாழ்ந்தவர் எனக் கொள்ளுதலே ஏற்புடையதாம் என்றும் அறிஞர் ஒருவர் எழுதியுள்ளார் (திருமுருகாற்றுப்படை உரையாசிரியர் உரையுடன் கூடியது. முன்னுரை மதுரைத் தமிழ்ச் சங்கச் செந்தமிழ்ப் பிரசுரம் 68 பார்க்க). அவர்தம் கருத்து பண்டைச் சான்றோர் உரையொடு முரண்படுதலின் ஏற்புடையதாகத் தோன்றவில்லை. உலகத்து வாழ்வாங்கு வாழும்உயர்ந்த ஒழுகலாறு உடைய பெரும்புலவரது வாழ்க்கையிலே நெறிமுறைபிறழா உலகியற் செயல்களும், வீடுபேற்றிற்குக் காரணமாகிய மெய்ந்நெறிச் செயல்களும் வடிகால் முறையே ஒருங்கு நிகழ்தல் இயல்பு. அம்முறைப்படி வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த தெய்வப் புலவராகிய நக்கீரனார் உலகியல் வாழ்வில் நின்ற நிலையிலேயே எங்கும் நிறைந்த பெரும் பொருளாகிய பெரும் பெயர் முருகனை உணர்ந்து பேரின்பம் எய்தும் வழிபாட்டு முறைகளை விளக்கியுள்ளார். உலகியல் நெறியில் வள்ளல்களை நாடிச் செல்லும் பரிசிலர் வாழ்க்கையைப் பற்றியும், போக நுகர்ச்சியாகிய இல்வாழ்க்கை யைப் பற்றியும் இழித்துக் கூறும் குறிப்பெதுவும் திருமுரு காற்றுப்படையில் இடம்பெறவில்லை. பத்துப்பாட்டுள் முதலாவதாகவுள்ள திருமுருகாற்றுப்படையும் ஏழாவதாக

உள்ள நெடுநல்வாடையும் ஆகிய இவ்விரண்டும் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என வழங்கும் ஒரு புலவராலேயே பாடப்பெற்றனவாக பண்டையோர் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளனர்.

கடைச்சங்க காலத்தவராகிய நல்லந்துவனாராகிய புலவர் பாடிய பாடல்கள் பரிபாடலிலும் கலித்தொகையிலும் ஏனைத் தொகைகள் சிலவற்றிலும் இடம் பெற்றுள்ளன. ஒருவர் பாடிய பாடல்களாகிய இவை பொருளமைதியிலும் மொழி நடையிலும் சிறிது சிறிது வேறுபடக் காண்கிறோம். செய்ய எடுத்துக்கொண்ட பொருள்வகை காரணமாக யாப்பியலும் மொழி நடையும் வேறுபடுதல் இயல்பேயாகும். இவ்வாறே பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெற்ற நெடுநல்வாடையும் முருகன்பால் முதுவாய் இரவலனை ஆற்றுப்படுத்தும் நிலையில் பாடப் பெற்ற திருமுருகாற்றுப்படையும் எடுத்துக் கொண்ட பொருள் வகையால் சிறிது வேறுபட்டனவாதலின் அவற்றிடையே சிறிது சிறிது வேறுபாடு காணப்படுதல் ஏற்புடையதேயாகும். இடைச் சங்க நூலாகிய தொல் காப்பியத்தில் சுட்டப்படாத மொழி வழக்குகள் சில கடைச்சங்க நூல்களில் புதியன புகுதலாக ஆங்காங்கே உடன் பட்டு இருத்தலைக் காண்கிறோம். புதியன புகுதலாகிய இவ்வழக்கிற்குத் திருமுருகாற்றுப்படையும் விலக்கானதன்று.

திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரனாரும், நெடுநல்வாடை பாடிய நக்கீரனாரும் மதுரைக் கணக்காயர் மகனார் நக்கீரனார் என ஒருவராகவே குறிக்கப்படுதலானும், இவர்பாடிய இவ்விரு பாடல்களிலும், சங்கச் செய்யுட்கள் பிறவற்றிலும் சொல்வழக்குகள் ஒத்து நிற்றலாலும், பெரும் பேராசிரியர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் தாம் பதிப்பித்த பத்துப்பாட்டு இரண்டாம் பதிப்பிலே பாடினோர் வரலாறு என்னும் தலைப்பில் நக்கீரனாரைக் குறித்து எழுதுங்கால் இத்தகைய ஒப்புமைப் பகுதிகளைத் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளமையாலும் திருமுருகாற்றுப்படை ஆசிரியரும் நெடுநல்வாடை ஆசிரியரும் மதுரைக் கணக்காயர் மகனார் நக்கீரனாரும் ஒருவரே என்பது நன்கு துணியப்படும்.

"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்" (அகம். 50)

என மதுரை மருதன் இளநாகனாரும்

"உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப்படுத்த உருகெழு நடுநாள்" (அகம். 22)

என வெறிபாடிய காமக் கண்ணியாரும் கூறும் தொடர்கள் திருமுருகாற்றுப்படையில்

"சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்"

எனவும்,

"உருவப் பல்பூத் தூஉய் வெருவர
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்
முருகியம் நிறுத்து முரணினர் உட்க
முருகாற்றுப்படுத்த உருகெழு வியனகர்"

எனவும் வரும் தொடர்களோடு ஒத்து நிற்றலைக் கூர்ந்து நோக்குங்கால், இப்புலவர்கள் அனைவரும் கடைச் சங்க காலமாகிய ஒரு காலத்தில் வாழ்ந்தவர்கள் என்பது நன்கு புலனாகும். ஆகவே மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாரே இத்திருமுருகாற்றுப்படையைப் பாடியவர் என்றும், இவரே பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு நெடுநல்வாடையைப் பாடியவர் என்றும் பண்டையோர் கூறும் கூற்று உறுதிப் படுதல் காண்க. திருமுருகாற்றுப்படை பாடிய ஆசிரியர் மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் எனச் சுட்டப்படுதலால் இவர் வாழ்ந்த ஊர் மதுரை என்பதும், இவருடைய தந்தையார் மதுரையில் மாணாக்கர்கட்குக் கல்விபயிற்றும் ஆசிரியராகத் திகழ்ந்தமையால் மதுரைக் கணக்காயனார் என வழங்கப் பெற்றார் என்பதும் நன்கு புலனாம்.

பெரும்பெயர்க் கடவுளாகிய முருகப் பெருமான் திருவருளால் ஐம்புலநெறியின் நீங்கிச் செம்புலச் செல்வராய் மதுரையில் வாழ்ந்த நக்கீரனார் என்னும் புலவர் பெருமான்

முருகப் பெருமானது திருவடிப் பேரின்பமாகிய வீடு பேற்றினை அடைய விரும்பித் தன்னை எதிர்ப்பட்ட முதுவாய் இரவலனை நோக்கித் தாம் பெற்ற பேரின்பத்தை உலகமக்கள் அனைவரும் பெறுதல் வேண்டும் என்னும் அருள் நோக்கம் உடையராய் முருகப் பெருமானது திருவருளால் அடைதற்கரிய பேரின்பத்தை எடுத்துக் கூறி அவ்விறைவன்பால் ஆற்றுப்படுத்தும் நிலையில் திருமுரு காற்றுப்படை என்னும் செந்தமிழ்ப் பனுவலைப் பாடியுள்ளார். முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள தெய்வத்திருப்பதிகளின் சிறப்பினையும் அங்கு மக்கள் பலரும் அன்பினால் ஒருங்குகூடி முருகப் பெருமானது பொருள் சேர் புகழ்த் திறங்களைப் போற்றி உய்திபெறும் நிலையில் ஆங்காங்கே நிகழும் வழிபாட்டு முறைகளையும் அன்பினால் நிகழ்த்தப்பெறும் அவ்வழிபாடுகளில் காண்டற்கரிய கடவுளாகிய இறைவன் பண்டைத்தன் மூவா இளநல முடையோனாகத் தோன்றிக் காட்சியளிக்கும் பெற்றி யினையும், முருகனது அருளை நிரம்பப்பெற்ற சான்றோர்கள் அம்முதல்வனதருளை நாடிவந்த இரவலனுக்கு அருள் செய்யும் பொருட்டு இறைவனைப் பணிந்து வேண்டும் வேண்டுகோளையும், அவர்தம் வேண்டுகோளைச் செவிமடுத்த இறைவன் முதுவாய் இரவலனுக்கு விழுமிய பெறலரும் பரிசிலாகிய வீடுபேற்றினை வழங்கியருளும் திறத்தினையும் விரித்துரைக்கும் முறையில் அமைந்தது திருமுருகாற்றுப்படையென்னும் இத் தெய்வப் பனுவலாகும்.

உலகத்துப் பல்லுயிர்களும் மகிழ நீலக் கடல்மேல் தோன்றும் காலை யிளங்கதிரவனைப் போன்று, நீலமயிலின் மேல் செம்மேனிப் பேரொளியினனாகத் திகழ்வோன் முருகப்பெருமான். தன்னைச் சேர்ந்தவர்களது ஆணவவல் லிருளைப் போக்கி அவரைத் தாங்கிய ஆற்றல்மிக்க திருவடியினையும் அழித்தற்கரிய கொடியோரை அழித்த கையினையும் உடையவன். அறக்கற்பினையுடைய தெய்வயானையார் கணவன். செங்கடம்பின் மாலையசையும் மார்பினையுடையவன். வண்டுகள் மொய்க்காத தெய்வத் தன்மை வாய்ந்த செங்காந்தட் பூவாலாகிய கண்ணியைச் சூடிய திருமுடியையுடையவன். கடல்நடுவிற் புகுந்து

சூரபன்மாவாகிய தலைவனைக் கொன்ற சுடர்விடும் நெடிய வேலாலே, அவுணரது நல்ல வன்மையெல்லாம் அழியும்படி கீழ்நோக்கின பூங்கொத்துக்களையுடைய மாமரத்தைப் பிளந்த குற்றமில்லாத வெற்றியினையும், ஒருவராலும் அளந்தறிய வொண்ணாத பொருள்சேர் புகழினையும் உடையவன். சிவந்த வேற்படையைத் தாங்கிய சேயோனாகிய முருகப் பெருமானுடைய திருவடியிற் செல்லுதற்குக் காரணமான நல்வினைகளைப் பல பிறப்புக்களினும் விரும்பிப் புரிந்த தலைமைபெற்ற உள்ளத்துடனே அப் பெருமான்பாற் செல்லுதற்கு நீ விரும்பி விட்டாயாயின் நினது நல்ல நெஞ்சத்தினது இனிய விருப்பம் ஈடேற நீ கருதிய வீடு பேற்றின்பத்தை இப்பொழுதே தப்பாமற் பெறுவாய். வெற்றியாலும் செல்வத்தாலும் விளக்கமுற்ற கடல் நகரத்துக்கு மேற்றிசையிலுள்ளதும், இரவெல்லாம் தாமரை மலரில் உறங்கிய வண்டினங்கள் விடியற்காலத்தே நெய்தற் பூவையூதி ஞாயிறு தோன்றின காலத்தே கண்ணைப் போன்று மலர்ந்த சுனைப் பூக்களிலே சென்று ஆரவாரிக்கும் வளமார்ந்ததுமாகிய திருப்பரங்குன்றத்திலே இறைவனாகிய முருகன் மனம் விரும்பி எழுந்தருளியிருத்தலு முரியன். அதுவன்றி, ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு திருக் கரங்களும் தத்தமக்கேற்ற தொழில் செய்ய யானையின்மேல் எழுந்தருளி வான்வழியாகத் திருச்சீரலைவாய் என்ற திருப்பதியை யடைதலும் அவனுக்கு நிலைபெற்ற பண்பாகும். அதுவன்றிப் படைத்தற் கடவுளாகிய நான்முகனுக்கேற்பட்ட சாபத்தை நீக்குதற்பொருட்டுத் திருமால் சிவபெருமான் இந்திரன் ஆகிய தெய்வங்களும், முப்பத்து முக்கோடித் தேவர்களும் பதினெண்கணங்களும் துனியில் காட்சி முனிவர் முற்புகக் கந்தருவர் யாழிசைக்க உடன் வந்து காணத் திருவாவினன்குடியில் தன் தேவியுடன் சிலநாள் அமர்ந்திருத்தலும் உரியன்.

அதுவன்றி இருபிறப்பாளராகிய அந்தணர்கள் நீராடி ஈர ஆடை உடுத்து ஆறெழுத்து மந்திரமாகிய மறையை ஓதி மலர் தூவி வணங்க அவ்வழிபாட்டை விரும்பி ஏற்று ஏரகம் என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருத்தலும் உரியன். அதுவன்றிக் குறமகளிராடும் குரவைக் கூத்திற்கு முதற்கை

கொடுத்து அம்மகளிருடன் மலைகள் தோறும் விரும்பி விளையாடுதலும் அவன்பால் நிலைபெற்ற அருட் குணமாகும்.

அதுவேயுமன்றி ஊர்கள் தோறும் மக்கள் கொண்டாடும் திருவிழாக்களிலும், அன்புடைய அடியார்கள் உளமுருகிப் போற்ற அமைந்த இடங்களிலும், முருகபூசை புரியும் வேலனென்பான் வேலேந்தி வெறியாடுகளத்திலும், காடுகளிலும் இளமரச் சோலைகளிலும் ஆற்றிடைக் குறையிலும், குளங்களிலும் வேறுபல எழில்மிக்க இடங்களிலும் பல தெருக்கள் ஒன்று கூடும் சந்திகளிலும் புதுப்பூ மலருங் கடம்ப மரங்களிலும் மன்றங்களிலும் பொதுவாகிய அம்பலங்களிலும், தெய்வம் உறையும் தூண்கள் நிலைபெற்ற இடங்களிலும், குறையிரந்து வேண்டும் அன்பர்கள் தாம் விரும்பியவாறே பெற்று நின்று வழிபட அவ்வவ்விடங்களிலேயே நிலைபெற எழுந்தருளி யிருத்தலும் திருவருட்பெரியோர் அறிந்து கூறிய மெய்ந்நெறியாகும்.

யான் முற்கூறிய அவ்வவ்விடங்களிலேயாயினுமாக, நீ முற்பட அம்முருகப் பெருமானைக் கண்டபொழுது முகம் விரும்பித் துதித்துக் கைகளைத் தலைமேல் குவித்து நின்று வாழ்த்திப் பின்பு அவன் திருவடிகளிலே தலை பொருந்தும் படி வீழ்ந்து வணங்கி,

> “நெடும் பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
> ஐவருள் ஒருவன் அங்கை யேற்ப
> அறுவர் பயந்த ஆறமர் செல்வ
> ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
> மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே
> வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
> இழையணி சிறப்பிற் பழையோள் குழவி”

என்பன முதலாக யான் அறிந்து நினக்குக் கூறிய அளவாலேயே நீயும் நினக்குத் தெரிந்த பலவற்றையும் கூறிப் புகழ்ந்து, “நின்னோடு ஒப்பாரில்லாத மெய்ஞ்ஞானத்தை

யுடைய பெருமானே! நின் தன்மையெல்லாம் முழுதும் அளந்தறிதல் நிலைபெற்ற எவ்வுயிர்க்கும் அரிதாகையினாலே நின் திருவடியைப் பெறவேண்டுமென்று நினைந்து வந்தேன்" என அவ்விறைவனை நோக்கி நினது வேட்கையினைத் தெரிவிப்பாயாக. நீ அங்ஙனம் தெரிவித்தற்கு முன்னரே முருகனைச் சேவித்து நிற்போராகிய மெய்யடியார்கள், அங்கே பொலிவுடன் வந்து தோன்றி அவ்விறைவனை நோக்கிப் 'பெருமானே, அறிவு முதிர்ந்த வாய்மையுடைய இப்புலவன் நினது பொருள்சேர் புகழுரையினைக் கூற விரும்பிக் கேட்டோர்க்கு இனியனவும் உறுதி பயப்பனவுமாக மிக்க பலவற்றை வாழ்த்தி வந்துள்ளான். இவன் நின்னால் அளிக்கத் தக்கவன்' என நின் பொருட்டுக் குறையிரந்து நிற்பர். அந்நிலையில் இழுமென இழிதரும் அருவிநீரையும், பழம் முதிர்ந்த சோலைகளையும் உடைய மலைக்கு உரியவனாகிய முருகப்பெருமான் தெய்வத்தன்மை அமைந்த பேராற்றல் விளங்கும் வடிவினையும், வானளவோங்கிய வளர்ச்சியையுமுடையனாக அவ்விடத்தே வந்து தோன்றித் தனது பேருருவம் மக்கள் கண்களால் காண்டற்கரியதாதலின் அப்பெரிய வடிவத்தை உள்ளடக்கிக் கொண்டு தனது பழைய வடிவாகிய இளமைக் கோலத்தினை நினக்குக் காட்டி "நீ வீடுபெற நினைந்துவந்த வருகையை யான் முன்னரே அறிவேன். அது நினக்கு எய்துதற்கரியதென்று அஞ்சுதலைத் தவிர்க" என்று நின்பால் அன்புடைய நல்ல வார்த்தைகளைப் பலமுறையும் அருளிச் செய்து கடல் சூழ்ந்த இவ்வுலகிலே நீ ஒருவனுமே பிறர்க்கு வீடளித்தற்கு உரிமையுடையையாய்க் கேடின்றித் தோன்றும்படி பிறராற் பெறுதற்கரிய சிறப்பாகிய வீடுபேற்றின்பத்தை நினக்குத் தந்தருளுவான் என்பது இத் திருமுருகாற்றுப்படையின் திரண்ட பொருளாகும்.

எல்லாப் பொருளினும் சிறந்ததாகிய வீடுபேற்றினை 'விழுமிய பெறலரும் பரிசில்' என நக்கீரனார் இத்திருமுரு காற்றுப்படையிற் சிறப்பித்துள்ளார். விழுமிய பரிசில், பெறலரும் பரிசில் என இயையும். வீடு பேற்றினும் சிறந்தது பிறிதொன்றின்மையின் அதனை விழுமிய பரிசில் என்றும், அவ்வீடு பேறுதானும் இறைவனது திருவருளாற் கிடைக்கப் பெறுவதன்றி உயிர்கள் தாமே தமது முயற்சியாற்

பெறுதற்குரிய எளிமைத் தன்மைத்து அன்றாதலின் அதனைப் பெறலரும் பரிசில் என்றும் நக்கீரனார் குறித்த திறம் நினைந்து மகிழத்தக்கதாகும்.

கந்தழியைப் பெற்றான் ஒருவன் அதனைப் பெறாதான் ஒருவனுக்குப் பெறுமாறு கூறி அவனை வழிப்படுத்துக் கூறுவான் என்பது பற்றி நக்கீரனார் இத்திருமுருகாற்றுப்படையைப் பாடியுள்ளார் என்பர் நச்சினார்க்கினியர். "கந்தழியாவது ஒரு பற்றுமற்று அருவாய்த் தானே நிற்குந் தத்துவங் கடந்த பொருள்; அது,

> "சார்பினாற் றோன்றாது தானருவா யெப்பொருட்குஞ்
> சார்பெனநின் றெஞ்ஞான்று மின்பம் தகைத்தரோ
> வாய்மொழியான் மெய்யான் மனத்தா னறிவிறந்த
> தூய்மையதா மைதீர் சுடர்"

என்பதாம். இதனை,

> "உற்ற வாக்கையி னுறுபொருள் நறுமல ரெழுதரு
> நாற்றம்போல்
> பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்"

என அதனை உணர்ந்தோர் கூறிய வாற்றானுணர்க என நச்சினார்க்கினியர் கூறிய விளக்கம், இத்திருமுருகாற்றுப் படையும் திருவாசகம் முதலிய திருமுறைகளும் போற்றும் முழுமுதற் கடவுள் ஒன்றே யென்பதனை இனிது புலப்படுத்துதல் காணலாம்.

இறைவன் திருவடியே உயிர்களுக்கு வீடாயிருக்கும் என்பதனைத் "தென்னன் பெருந்துறையான், காட்டாதன வெல்லாம் காட்டிச் சிவம் காட்டித், தாட்டாமரை காட்டித் தன் கருணைத் தேன் காட்டி" எனவரும் திருவாசகத் தொடரால் திருவாதவூரடிகள் தெளிவாக அறிவுறுத்தி யுள்ளார் என்பது நச்சினார்க்கினியரின் கருத்தாகும்.

முருகப் பெருமான் கடல் நடுவேசென்று வேற்படை யாலே வெட்டி வீழ்த்திய மாமரம் கீழ் நோக்கின பூங்

கொத்துக்களையுடையதென்பது "கவிழிணர் மாமுதல் தடிந்த" என்ற தொடரால் அறியப்படும் என்றது "அவுணர் எல்லாரும் தம்முடனே எதிர்ந்தார் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரம் கொண்டிருந்து சாதித்ததொரு மாவை வெட்டினான் என்றவாறு" எனவரும் நச்சினார்க் கினியர் உரைத்தொடர் இங்கு நோக்கத்தகுந்தது. இறைவனடி சேர்தலொன்றையே சிறந்த வீடு பேறாகப் பண்டைத் தமிழ் மக்கள் கருதி வந்துள்ளார்களென்பது திருக்குறள் கடவுள் வாழ்த்தில் இறைவனடி சேர்தல், தாள் சேர்தல் எனக் குறிக்கப்படும் சொல் வழக்குகளால் நன்கு தெளியப்படும். இங்ஙனம் இறைவனடி சேர்தலே வீடு பேறாகும் எனச் சைவத்திருமுறை ஆசிரியர்கள் தாம் பெற்ற திருவருள் அனுபவத்தால் உணர்ந்துகூறிய அடிசேர் முத்தியினையே

"சேவடி படருஞ் செம்மலுள்ள மொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்துறையும் செலவு"

எனவருந் தொடரில் நக்கீரனார் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

"புலம்பிரிந்துறையும் அடி"

எனவும்,

"சேவடி படரும் செம்மலுள்ளமொடு
செலவு நீ நயந் தனையாயின்"

எனவும் இயைத்துப் பொருள் வரைந்தார் நச்சினார்க்கினியர். புலம்பிரிந்து உறைதலாவது, ஐம்புல உணர்வினை நீங்கி, சிவஞானவுணர்வாகிய செம்புல உணர்வுடையராதல். திருவாதவூர் மகிழ் செழுமறைமுனிவர் 'ஐம்புலன் கையிகந்து அறிவாய் அறியாச் செம்புலச் செல்வராயினர்' எனத் திருச்சிற்றம்பலக் கோவையார் உரை முகத்தே பேராசிரியர் தரும் விளக்கம்,

"சேவடிபடரும் செம்மலுள்ளமொடு

நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்துறையும் செலவு"

எனவரும் இத்திருமுருகாற்றுப்படையின் வரிகளை அடி யொற்றி அமைந்தனவாகும்.

"அமரர் கண் முடியும் அறுவகையானும்"

என்ற தொகுப்பில் முதற் கண்ணவாகிய கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றும் பாட்டுடைத் தலைவனைச் சார்த்தி வருங்காலத்துக் கடவுள் வாழ்த்தொடு பொருந்திவரும் என இந்நூற்பாவிற் கூறப்பட்ட இலக்கணத்தை இம்மூன்றுடன் சேர்த்தெண்ணப்பட்ட புலவராற்றுப்படை, புகழ்தல், பரவல் என்னும் ஏனை மூன்றற்கும் சேர்த்துப் புலவராற்றுப்படை முதலாகிய மூன்றும் சார்த்திவருமெனவும் கொள்க" என்றார் இளம்பூரணர். அவர் கருத்துப்படிப் பத்துப் பாட்டுள் ஒன்றாகிய திருமுருகாற்றுப்படை என்பது புலவராற்றுப் படையாகும். முருகப் பெருமான்பால் முதுவாயிரவலனாகிய புலவனை ஆற்றுப்படுத்தும் புலவராற்றுப்படையாகிய திருமுருகாற்றுப்படையுள் மாடமலிமறுகின் கூடலாகிய மதுரையின் மேற்கே அகன்ற வயலிடத்தே மலர்ந்த தாமரை மலரின் கண்ணே இரவெல்லாம் இனிது துயில் கொண்ட வண்டினம், வைகறைப் பொழுதிலே விழித்தெழுந்து தேன் மணம் கமழும் நெய்தல் மலரிலே இசை முரன்று ஞாயிறு தோன்றிய காலைப் பொழுதிலே திருப்பரங்குன்றத்தினை யடைந்து அங்குள்ள சுனையின்கண்ணே கண்போல் மலர்ந்த விரும்பத்தக்க மலரிடத்தே பரவி ஒலிக்கும் என்னும் இக்கருப்பொருள் நிகழ்ச்சியில், மாடமலி மறுகின் கூடலம்பதியிலே வளமார்ந்த அரண்மனையிடத்தே இரவுப் பொழுதிலே இன்துயில் வதிந்த பாண்டியன், வைகறைப் பொழுதிலே விழித்தெழுந்து தேங்கமழும் நறுமலர்ப் பொய்கையிலே நீராடி, ஞாயிறு தோன்றும் காலைப் பொழுதிலே திருப்பரங்குன்றத்தினையடைந்து முருகப் பெருமானுடைய திருவருள் நோக்கிற்குரியவனாகி அம்முதல்வனைப் பரவிப் போற்றும் வழிபாட்டு நிகழ்ச்சியினை,

"மாடமலி மறுகிற் கூடற் குடவயின்

இருஞ்சேற் றகல்வயல் விரிந்து வாயவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி யெற்படக்
கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்
அம்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றமர்ந் துறைதலும் உரியன்" (திருமுருகு. 71-77)

எனவரும் பகுதியில் நக்கீரனார் குறிப்பிற் புலப்பட வைத்துள்ளார். இந்நுட்பத்தினைக் கூர்ந்துணர்ந்த இளம்பூரணவடிகள், முருகாற்றுப்படையுள்,

"மாடமலிமறகின் கூடற்குடவயின்,
இருஞ்சேற் றகல்வயல் விரிந்து வாயவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி"

என்றவழி ஒருமுகத்தாற் பாண்டியனையும் இதனுட் சார்த்தியவாறு காண்க" என இங்குக் குறிப்பின்விளக்கும் திறம் உய்த்துணர்ந்து போற்றத்தகுவதாகும்.

"முன்னியது முடித்தலின் முருகொத்தீயே" (புறம்.)

என்றவண்ணம் தன்னை அன்பினால் வழிபடும் அடியார்கள் எண்ணியவற்றை எண்ணிய வண்ணமே முடித்தருளும் பேராற்றல் வாய்ந்த தெய்வம் முருகப் பெருமான் என்பது சங்ககாலத் தமிழ் மக்கள் உள்ளத்தே நிலைபெற்ற உறுதியான நம்பிக்கையாகும். எல்லாம் வல்ல இறைவன் நாற்றிசையிலும் மேலும் கீழுமாக இவ்வுலகில் நிகழும் எல்லா நிகழ்ச்சி களுக்கும் சான்றாய் நோக்கியருளுகின்றான் என்பதனைப் புலப்படுத்தும் முறையில் அமைந்தது முருகப் பெருமானுக் குரிய அறுமுகத்திருமேனி ஆகும். அம் முதல்வனுடைய ஆறுதிருமுகங்களுக்கும் உரிய பொது வியல்பினையும் அவற்றுள் ஒவ்வொரு திருமுகத்திற்கும் உரிய சிறப்பியல்பினை யும் வகைப்படுத்துரைப்பது.,

"தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்
மன்னோர் பெழுதர வாணிறமுகனே
மாயிருண் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுகம் ஒருமுகம்

ஆர்வலரேத்த அமர்ந்தினிதொழுகிக்
காதலினுவந்து வரங்கொடுத்தன்றேயொருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வியோர்க்கும்மே ஒருமுகம்
எஞ்சிய பொருளை யேமுற நாடித்
திங்கள்போலத் திசை விளக்கும்மே ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே"

எனவரும் பகுதியாகும். குற்றமற்ற கோட்பாட்டாலே தாம் தாம் மேற்கொண்ட தொழிலை முடிப்பவருடைய மனத்திலே எழுந்தருளியிருந்து உள்நின்று அருளும் ஒளியும் நிறமும் வாய்ந்த ஆறு முகங்களிலே ஒருமுகம் பேரிருளால் மூடப்பட்ட உலகம் குற்றமின்றி விளங்கும்படிப் பல கிரணங்களையும் தோற்றுவித்தது. ஒரு முகம் தன்மேல் அன்பு செய்தவர்கள் துதிக்க அதற்குப் பொருந்தி அவருக் கினிதாக நடந்து அவர் மேற் சென்ற காதலாலே மகிழ்ந்து அவர்கள் வேண்டும் பொருள்களை முடித்துக் கொடுத்தது. ஒரு முகம் மந்திரத்தையுடைய வேதத்திற்குரிய முறை தப்பாத அந்தணர்களுடைய வேள்வியிலே தீங்குவாராதபடி நினைந்தருளாநின்றது. ஒருமுகம் இவ்வுலகில் வழங்காத வேதங்களிலும் ஏனைய நூல்களிலும் உள்ள பொருள்களை ஆராய்ந்து முனிவர்கள் ஏமம் உறும்படி அறிவுறுத்தி திங்கள் போலத் திசைகள் எல்லாம் விளங்கச் செய்கின்றது. ஒருமுகம் எல்லா உயிர்களிடத்தும் செல்கின்ற நடுவு நிலைமையைக் கெடுத்துத் தீயோரைக் கொல்ல வேண்டுமென்று சினங் கொண்ட திருவுள்ளத்தோடே அழித்தற்குரிய அசுரர் முதலியோரைப் பொன்றக் கெடுத்துக் களவேள்வியை வேட்கின்றது. ஒருமுகம் குறவருடைய மடப்பத்தையுடைய மகளாகிய கொடிபோலும் இடையையுடைய வள்ளியுடனே மகிழ்ச்சியைப் பொருந்திற்று" என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும். இதன்கண் முருகப் பெருமா னுடைய ஆறுதிருமுகங்களுக்கும் உரிய பொது இயல்பினை,

"தாவில் கொள்கைத் தம்தொழில் முடிமார்
மனனேர் பெழுதரு வாணிறமுகனே"

என்னும் அடிகளில் நக்கீரர் தொகுத்துக் கூறியுள்ளார்.

> "வாகைதானே ...............................
> தாவில் கொள்கைத் தத்தம் கூற்றை
> பாகுபட மிகுதிப்படுத்தல் என்ப"

எனவரும் தொல்காப்பிய நூற்பாவை அடியொற்றியது மேற்காட்டிய திருமுருகாற்றுப்படைத் தொடராகும். வாகைத்திணையாவது மக்கள் குற்றமற்ற கொள்கையினால் தத்தமக்குரிய அறிவு ஆண்மை பெருமைபற்றிய தொழிற் கூறுபாடுகளை ஏனையோரினும் மிகுத்து மேம்படுதலாகிய வெற்றித் திறமாகும்.

இங்ஙனம் மக்கள் பெறுதற்குரிய வெற்றித்திறங்களுக் கெல்லாம் பற்றுக்கோடாய் உயிர்களின் உள்ளத்தில் அறுமுகச் செவ்வேளாக அமர்ந்தருளி ஊக்குவிப்போன் உயிர்க்குயி ராகிய இறைவனே என்பார், 'தாவில் கொள்கைத் தந்தொழில் முடிமார் மனனேர்பெழுதருவாணிறமுகனே' என அம் முதல்வனுடைய திருமுகங்கள் எல்லாவற்றுக்கும் உரிய பொதுவியல்பினைப் புலப்படுத்தியருளினார் நக்கீரர்.

> "குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
> மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்று"

என்ற தொடரில் மடவரல் என்பதனை 'நகைக்கு அடைமொழியாக்கி வள்ளியொடு மடவரல் நகையமர்ந் தன்று எனக் கூட்டி', "ஒருமுகம் குறவருடைய மடப்பத்தை யுடைய மகளாகிய வல்லிபோலும் இடையினையுடைய வள்ளியுடனே தனக்கு ஓர் அறியாமை தோன்றும் தன்மையுடைத்தாகிய மகிழ்ச்சியைப் பொருந்திற்று என உரை வரைந்து நச்சினார்க்கினியர் அவளொடு நகையமர்தலின் அறியாமை கூறினார் காம நுகர்ச்சி இல்லாத இறைவன் இங்ஙனம் நகையமர்ந்தான், உலகில் இல்வாழ்க்கை நடத்தற்கென்று உணர்க.

> 'தென்பாலுகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன்'

என்பதனுள்,

'பெண்பாலுகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர்
விண்பாலியோ கெய்தி வீடுவர்காண் சாழலோ'

என்பதனான் உணர்க" என விளக்கமும் தந்துள்ளார். இவ்விளக்கத்தினைக் கூர்ந்து நோக்குங்கால் முழுமுதற் கடவுளாகிய முருகப் பெருமானுடன் பிரிவின்றியியைந்த அருட்சத்தியே வள்ளியம்மை யென்பது அவர் கருத்தாதல் நன்கு புலனாம். மேற்குறித்த ஆறுதிருமுகங்களும் தத் தமக்குரிய தொழில்களிடத்துச் செய்யும் முறைமைகளைப் பயின்று நடத்துதலால் அவ் வாறு திருமுகங்களுக்கும் பொருந்த இரண்டிரண்டாகவமைந்த திருக்கரங்களின் பொதுவியல்பையும் சிறப்பியல்புகளையும் பிரித்துரைக்கும் முறையிலமைந்தது திருமுருகாற்றுப்படையில் 102ஆம் அடிமுதல் 118ஆம் அடிவரை யமைந்த பகுதியாகும். பொன்னாற் செய்த ஆரந்தாங்கிய அழகிய பெருமை வாய்ந்த மார்பிற் கிடந்த சிவந்த மூன்று வரியினையும் தன்னிடத்தே வந்து பொருந்தும்படி அமைந்து வண்மையினாலேயே பெரும்புகழ் நிறையப் பெற்றுச் சுடரையுடைய படைக் கலங்களை எறிந்து பகைவர் மார்பைப் பிளந்தவை முருகப் பெருமானுடைய திருக்கைகளாகும். அக்கைகளில் ஒருகை விண்ணிடத்தே செல்லும் முனிவர்களுக்குப் பாதுகாவலாக ஏந்தியகைக்கு இணைந்தகை மருங்கிலே வைத்தது என்பார்,

"விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது ஒருகை,
உக்கம் சேர்த்தியது ஒருகை"

என்றார். கதிரவனது வெம்மை பல்லுயிர்களும் பொறுத்துத் தாங்க வொண்ணாதது எனக் கருதித் தமது பெருங் கருணையால் அக்கதிரவனொடு திரிந்து கதிரவனது வெம்மையைத் தமது சடைக்கற்றையால் பொறுக்கின்ற முனிவர்கள்,

"விண்செலல் மரபின் ஐயர்"

எனப் பெற்றனர். உலக நலங்கருதிக் கதிரவனொடு சுழன்று திரியும் இம்முனிவர்களைக் காத்தற் பொருட்டு முருகன் ஏந்தியகை உலகத்தைத் தாங்கிக் காத்ததாயிற்று. எனவே

இக்கை மாயிருள் ஞாலம் மருவின்றி விளங்கப் பல்கதிர் விரிந்த முகத்திற்கு ஏற்ற தொழிலைச் செய்ததாயிற்று.

இங்கு முருகப் பெருமானால் காக்கப்பெற்ற விண்செலல் மரபின் ஐயர் எனப்படுவார்,

> "நிலமிசை வாழ்நர் அலமரல் தீர
> பெறுகதிக் கனலி வெம்மைதாங்கி
> காலுணவாகச் சுடரொடு கொட்கும்
> அவிர்சடை முனிவர்" (புறம். 43)

எனப் புறநானூற்றிற் குறிக்கப் பெற்றனர்.

முருகனது மனனும் முகனும் கையும் ஒரு தொழிலைச் செய்தலின் அதனொடு இணைந்த மற்றொருகை தொழிலின்றி மருங்கிலே கிடந்தது" என்றார் நச்சினார்க்கினியர். உக்கம் : மருங்கு = இடை. முருகப் பெருமானுக்குரிய ஒருகை அங்குசத்தைச் செலுத்தாநிற்க, அதற்கிணையான மற்றைக்கை செந்நிறம் வாய்ந்த ஆடையை யணிந்த தொடையின் மேலே கிடந்தது என்றார்.

> "நலம் பெறுகலிங்கத்துக் குறங்கின் மிசையசைஇய
> தொருகை
> அங்குசங் கடாவ வொருகை"

என்றார். இத்தோற்றம் யானையின் மேற் செல்வார்க்கு உரியதாகும். முருகப் பெருமான் தன்னை வழிபடுவாரிடத்து வருங்கால் யானைமேல் வந்து அருள் செய்தல் இயல்பு ஆகலின் இக்கைகள் காதலின் உவந்து வரங் கொடுத்த முகத்திற்கு ஏற்றனவாயின. இரண்டுகைகள் வியப்பையும் கருமையையும் உடைய கேடகத்துடனே வேலையும் வலமாகச் சுழற்றின வென்பார்.

> "இருகை ஐயிருவட்டமொடு எஃகுவலந்திரிப்ப"

என்றார். இதனானே அசுரர் வந்து வேள்வியைக் கெடாமல் அவரை ஓட்டுதற்கு இவற்றைச் சுழற்றுதலின் வேள்வி ஓர்க்கும் முகத்திற்கு இக்கைகள் ஏற்றனவாயின.

முருகப் பெருமான் முனிவர்க்குத் தத்துவங்களைக் கூறிச் சொல்லிறந்த மெய்ப் பொருளை உணர்த்தும் காலத்து ஒரு கை மார்புடன் விளங்க, மற்றொருகை மார்பின் மாலை தாழ்ந்ததனோடு சேர்ந்து அழகு பெற விளங்கியது என்பார்.

> "ஒருகை மார்பொடு விளங்க ஒருகை
> தாரொடு பொலிய"

என்றார் . என்றது முருகன் மோனமுத்திரைக் கையனாய் தானேயாய் இருந்து மெய்ப்பொருளைச் சுட்டிக் காட்டக் குவிந்தவாயமையாத குடத்தில் நீர் நிறைந்தாற்போல இன்ப மயமான பேரொளி மாணாக்கர்க்கு நிறைதலின் அதற்குரிய மோனமுத்திரை இங்கு கூறப்பெற்றது. இக்கைகள் இரண்டும் எஞ்சிய பொருள்களை விளக்கும் முகத்திற்கு ஏற்றனவாயின. முருகப் பெருமானது ஒருகை தொடியொடு மேலே சுழன்று களவேள்விக்கு முத்திரை கொடுப்ப அதனொடு இணையாய்க் கீழே தாழ்ந்த மற்றைக்கை இனிய ஓசையை யுடைய மணியை மாறி ஒலிக்கச் செய்கின்றது என்பார்

> "ஒருகை கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப ஒருகை
> பாடின் படுமணியிரட்ட"

என்றார். இக்கைகள் களவேள்வி வேட்கின்ற முகத்திற்கு ஏற்பவமைந்தன. முருகப் பெருமானுடைய ஒருகை நீல நிறத்தையுடைய மேகத்தாலே மிக்க மழையைப் பெய்யுமாறு செய்விக்க அதற்கிணையான மற்றைக்கை தெய்வமகளிர்க்கு மணமாலையைச் சூட்டும் நிலையிலமைந்த தென்பார்.

> "ஒருகை நீல்நிறவிசும்பின் மலிதுளிபொழிய ஒருகை
> வானற மகளிர்க்கு வதுவை சூட்ட"

என்றார். "வள்ளியொடு நகையமர்ந்த முகம் உலகிற்கு இல்வாழ்க்கையை நிகழ்த்துவித்தது ஆதலின் அவ்வில் வாழ்க்கை நிகழ்த்துதற்கு மழையைப் பெய்வித்தது ஒருகை. ஒருகை இல்வாழ்க்கை நிகழ்த்துதற்பொருட்டு மணமாலை யைச் சூட்டிற்று" என்பதாம். திருஆவிநன்குடியில் முருகப் பெருமானை அன்பினால் வழிபடும் பெருந்தவச் செல்வர்களின் உள்ளத்தியல்பினையும் திரு வேடப்

பொலிவினையும் விரித்துரைக்கும் நிலையிலமைந்தது,

"சீரை தைஇய உடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்
மாசற இமைக்கும் உருவினர் மானி
னுரிவை தைஇய ஊன்கெடு மார்பி
னென்பெழுந் தியங்கு மியாக்கையர் நன்பகற்
பலவுடன் கழிந்த உண்டியர் இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தின ரியாவதும்
கற்றோ ரறியா வறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினம் கடிந்த காட்சியர் இடும்பை
யாவது மறிய வியல்பினர் மேவரத்
துணியில் காட்சி முனிவர்"

எனவரும் திருமுருகாற்றுப்படைத் தொடராகும். திருவாவினன்குடித் திருக்கோயிலில் முருகனது பொருள்சேர் புகழ்ப் பாடல்களை இசையுடன் பாடும் மகளிரும் யாழில் இசைப்போரும் ஆகிய இசைவாணர்கள் அழுக்கேறாத தூய உடையும் நோயின்றித் தூய்மை வாய்ந்த உடல் வனப்பும் மாசற்ற தூய நன்னெஞ்சமும் உடையராய் விளங்கிய திறத்தை,

"புகைமுகந் தன்ன மாசில் தூவுடை
முகைவா யவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்
நல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர் மாவின்
அவிர்தளிர் புரையும் மேனியர் அவிர்தொறும்
பொன்னுரை கடுக்குந் திதலையர் இன்னகைப்
பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குல்
மாசில் மகளிரொடு மறுவின்றி விளங்க"

எனவரும் தொடரில் நக்கீரர் விரித்துக் கூறியுள்ளமை காணலாம். பலரும் புகழும் அயன் அரி அரன் என்னும்

மூவரும் தத்தமக்குரிய தொழில்களை நிகழ்த்தித் தலைவராக வேண்டி அயனைப் பழைய நிலையிலே நிறுத்தல் கருதி கருடக் கொடியையுடைய திருமாலும், திரிபுரம் எரித்த சிவபெருமானும், இந்திரனும் ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர் என நான்கு கூறாகப் பகுக்கப்படும் தேவர்கள் முப்பத்து மூவரும் பதினெண்கணங்களும் வான்வழியாகத் திருவாவினன்குடிக்கு வந்து தன்னைக் கண்டு போற்றும் வண்ணம் தாவில் கொள்கை மடந்தையாகிய தெய்வ யானையுடன் முருகன் எழுந்தருளியிருக்கும் செய்தி திருமுருகாற்றுப்படையில் திருவாவினன்குடிப் பகுதியில் விரிவாக எடுத்துரைக்கப்பெற்றது. இப்பகுதி சங்ககாலத்து நிலவிய பல்வேறு தெய்வ வழிபாடுகளையும் ஒருங்கே சுட்டும் முறையில் அமைந்துள்ளது. உலகினைப் படைத்துக் காத்து அழிக்கும் அயன் அரி அரன் என்னும் இம்மூவரும் தத்தம் உருவினாலும், தொழிலினாலும் வேறுபட்டவராயினும் உலகில் மன்னுயிரனைத்தையும் ஒப்பக் காத்தலாகிய ஒரே கோட்பாட்டினை உடையராதலின் அம்மூவரும் ஒருவரே எனப் போற்றத்தகும் பெற்றியர் என்பது,

> "உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
> பலர் புகழ் மூவரும்"

எனவரும் தொடரால் வலியுறுத்தப் பெற்றுள்ளமை காண்க. நகர்தோறும் நாற்றிசைக்கும் உரிய காவல் தெய்வங்களாக இந்திரன், இயமன், வருணன், சோமன் (குபேரன்) என்போர் வழிபடப் பெற்றனர் என்பது நாற்பெருந் தெய்வத்து நன்னகர் என்ற தொடர்க்கு நான்காகிய பெரிய தெய்வத்தை உடைய நன்றாகிய ஊர்கள் எனவும், நாற்பெருந் தெய்வமாவன இந்திரன், யமன், வருணன், சோமன் என்றும் தெய்வங்கள் எனவும் நச்சினார்க்கினியர் தரும் உரைவிளக்கத்தால் புலனாகும்.

> "ஒன்பதிற்றிரட்டி உயர்நிலை பெறீஇயர்"

என்றது பதினெண்வகையாகிய உயர்ந்த நிலையைப் பெற்ற பதினெண் கணங்களை. பதினெண் கணங்களாவார் தேவர்,

அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், கிம்புருடர், இயக்கர், விஞ்சையர், இராக்கதர், கந்தருவர், சித்தர், சாரணர், பூதர், பைசாசகணம், தாராகணம், நாகர், ஆகாயவாசிகள், போகபூமியோர் என இவர்களாவர்.

முருகன் எழுந்தருளிய திருத்தலங்களுள் ஒன்றாகிய ஏரகம் என்பது மலை நாட்டகத்து ஒரு திருப்பதி என்பர் நச்சினார்க்கினியர். இத்திருப்பதியில் எழுந்தருளிய முருகப் பெருமானை வழிபாடு செய்யும் நான்மறைவல்ல அந்தணர் களின் இயல்பினை விரித்துரைக்கும் நிலையிலமைந்தது,

“இருமூன் றெய்திய இயல்பினின் வழாஅ
திருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
அறுநான் கிரட்டி இளமை நல்லியாண்
டாறினிற் கழிப்பிய வறனில் கொள்கை
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்
திருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
வொன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர வுடீஇ
யுச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்
தாறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி
நாவியன் மருங்கி னவிலப் பாடி
விரையுறு நறுமல ரேந்திப் பெரிதுவந்
தேரகத் துறைதலும் உரிய னதாஅன்று”

என்ற பகுதியாகும்.

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறு தொழில்களின் இலக்கணத்தின் வழுவாமல் தாய் தந்தை எனனும் இருவர் குலத்தையும் உலகத்தார் நன்றென்று மதிக்கும் வண்ணம் உயர்ந்த குடிப்பிறப்பையும், நாற்பத்தெட்டியாண்டு வேதம் கூறிய நெறியிலே பிரமச்சரியம் காத்த அறங்கூறுகின்ற கோட்பாட்டினையும் ஆகவனீயம், தக்கணாக்கினீயம், காருக பத்தியம் என்னும் மூன்று தீயால் உண்டாகிய செல்வத் தினையும் நூலணிதற்குமுன் ஒரு பிறப்பும், பின் ஒரு

பிறப்புமாகிய இரு பிறப்பினையுமுடைய அந்தணர்கள் வழிபடும் காலமறிந்து தோத்திரங்களைக் கூற ஒன்பதாகிய நூலைத் தன்னிடத்தே கொண்ட முப்புரியாகிய பூணும் நூலையும் உடையராய், நீராடுங்கால் துவைக்கப்பட்ட ஆடை உடம்பிலே கிடந்து புலரும்படி உடுத்தி தலைமேல் குவித்த கையினை உடையராய்த் துதித்து ஆறெழுத்தினைத் தன்னிடத்தே அடக்கியிருக்கின்ற அருமறையாகிய மந்திரத்தை நா அசையும் அளிவிலே பயின்று ஓதி மணமிக்க நறுமலர்களை எடுத்துத்தூவி வழிபடப் பெரிதும் மகிழ்ந்து ஏரகம் என்னும் திருப்பதியிலே எழுந்தருளியிருத்தலும் உரியன் என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும். இரு பிறப்பாளராகிய அந்தணர்கள் திருவேரகத் திருப்பதியில் எழுந்தருளிய முருகப் பெருமானை வழிபட்டுப் போற்றுங்கால் 'ஆறெழுத்தடக்கிய அருமறைக் கேள்வி' எனப்படும் ஆறெழுத்து மந்திரத்தை நாப்புடை பெயரும் அளவில் ஓதினர் என்பது,

> "ஆறெழு தடக்கிய அருமறைக்கேள்வி
> நாவியல் மருங்கின் நவிலப்பாடி"

எனவரும் தொடராற் புலனாம். இத்தொடரிற் குறிக்கப்பட்ட ஆறெழுத்து மந்திரம் என்பது 'நமோகுமாராய' என்பதாம் என நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார்.

> "நாதா குமரா நமவென் றரனார்
> ஓதா யென வோ தியதெப் பொருள்தான்"

எனவரும் கந்தரநுபூதியில் இம்மந்திரம் குறிப்பாகச் சுட்டப்பட்டுள்ளமை காணலாம். இனி ஆறெழுத்து மந்திரமாவது 'சரவணபவ' என்பது பெரும்பாலோர் கருத்தாகும்.

> "ஆறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி"

என நக்கீரர் பொதுவாகக் குறிப்பிடுதலால் மேற்குறித்த இருவகை மந்திரங்களும் முருகப் பெருமானுக்குரிய ஆறெழுத்து மந்திரங்களாம் எனக் கொள்ளுதல்

ஏற்புடையதே. எனினும் 'சரவணபவ' என்பதனோடு 'நம' என்னும் வணக்க மந்திரத்தையும் இயைத்துரைப்பின் எட்டெழுத்து மந்திரமாதலின்றி ஆறெழுத்து மந்திரமாதல் இல்லை என்பதும் கருதத்தக்கது. முருகபூசை செய்யும் படிமத்தானாகிய வேலன் பச்சிலைக் கொடியாலே நறுநாற்றத்தையுடைய சாதிக்காயை நடுவே இட்டு அழகினையுடையதாகிய தக்கோலம் என்னும் காயையும் கலந்து காட்டுமல்லிகையுடனே வெண்டாளியையும் கட்டின முடிமாலையையுடையனாய் நறிய சந்தனத்தைப்பூசி நிறம் விளங்கும் மார்பினையுடையனாய் கொடிய தொழிலையுடைய வலிய வில்லாற் கொல்லுதலைச் செய்த குறவர் நீண்ட மூங்கிலிலே இருந்து முற்றின தேனாற் செய்யப்பட்ட கள்ளின் தெளிவை மலையின்கண்ணே சிறிய ஊரிலே இருக்கின்ற சுற்றத்தோடே உண்டு மகிழ்ந்து குறிஞ்சி நிலத்திற்குரிய தொண்டகமாகிய சிறுபறையினது தாளத்திற்குத் தக குரவைக் கூத்தினை ஆட சுனையிற் பூத்த பூவாற் செய்த வண்டுகள் மொய்க்கும் கண்ணியினையும், இதழாகப் பறித்துக் கட்டினமாலையினையும், சேர்த்துக் கட்டிய கூந்தலினையும், இலையைத் தலையிலேயுடைய கஞ்சங்குல்லையினையும், நறிய பூங்கொத்துக்களையும், வெண்கடம்பமரத்தின் வெள்ளிய பூங்கொத்துக்களை நடுவேவைத்துத் தொடுத்த அழகினையுடைய தழையை இடையிலே அசையும்படி உடுத்தி சாயலுடைமையால் மயிலைக் கண்டாற்போன்ற மகளிரொடு செந்நிறத்தினனாய், சிவந்த ஆடையினை உடுத்து அசோகின் தளிர் அசையும் காதினனாய் அரையிற் கச்சினைக் கட்டி, காலில் வீரக் கழலினை அணிந்து வெட்சிமாலையைத் தலையிற் சூடி, ஊதலை ஊதி, கொம்பைக் குறித்துச் சிறியவாகிய பலவாத்தியங்களை எழுப்பி, ஆட்டுக் கிடாயைப் பின்னிட்டு, மயில் மீதமர்ந்து குற்றமில்லாத கோழிக் கொடியை உயர்த்திப் பிடித்து நெடியோனாய் நின்று, தோளிலே துணியை அணிந்து யாழ் நரம்பு ஆரவாரித்தாலொத்த இனிய மிடற்றினையுடைய பாடும் மகளிரோடே குறிய புள்ளிகளை யுடையவாய் இடையிலே இறுகக் கட்டிய உதர பந்தத்தின் மேலே இயைக்கப்பட்டு, நிலமளவும் தொங்கும் துகிலினை யுடையனாய், மெல்லிய தோளினையுடைய மான்பிணை

போலும் மகளிர் குரவையாடி அசைய, தன்னுடைய முழவினை ஒத்த பெருமைவாய்ந்த கையினாலே அம்மகளிர் கையினைத் தழுவி எடுத்துக்கொண்டு, அவர்கட்கு முதற்கை கொடுத்து மலைகள் தோறும் சென்று விளையாடுதலும் முருகப் பெருமானாகிய அம் முதல்வனுக்கு நிலைபெற்ற குணம் என்பது முருகாற்றுப்படையில் குன்று தோறாடல் பகுதியால் விரித்துரைக்கப் பெற்றது.

இப்பகுதியில் முருகபூசை செய்யும் படிமத்தானாகிய வேலன் முன்னின்று நடத்தும் வழிபாட்டில் குறிஞ்சிக் கடவுளாகிய முருகப்பெருமான் சேவற் கொடியை ஏந்தி மயில் மீதமர்ந்து தன் தெய்வத் தோற்றத்தினைப் புலப்படுத்தித் தன்னைச் சேவிக்கும் மகளிர்க்கும் பாடும் மகளிர்க்கும் முதற்கை கொடுத்து எளிவந்து அருளும் திறம் குறிக்கப் பெற்றுள்ளமை கூர்ந்துணரத் தக்கதாகும். இதனால் சிந்தைக்கும் மொழிக்கும் எட்டாத முழுமுதற் பொருளாகிய முருகப் பெருமான் தன்னை ஆரா அன்பினால் வழிபட்டுப் போற்றும் அன்பர்களது காட்சிக்கு எளியனாய் எழுந்தருளும் பேரருளாளன் என்பது புலப்படுத்தப் பெற்றுள்ளமை காணலாம். இங்ஙனம் மக்களால் வழிபடப் பெறும் தெய்வம் அவர்தம் கண்ணிற்குப் புலனாகத் தோன்றி அருளும் என்னும் மெய்ம்மை,

"வழிபடு தெய்வம் கட்கண்டாங்கு"

எனவரும் சங்க இலக்கியத் தொடரால் நன்கு துணியப் பெறும்.

"சிந்தனைக்கும் அரியாய் என்கண் முன்வந்து
ஏதங்கள் அறுத்து எம்மை யாண்டருள்புரியும்
எம்பெருமான்"

எனவரும் திருவாதவூரடிகள் வாய்மொழி இங்கு ஒப்பு நோக்கத் தகுவதாகும்.

சிறிய தினையரிசியை மலரொடு கலந்து பிரப்பரிசியாக வைத்து, ஆட்டுக்குட்டியைப் பலியிட்டு

முருகனுக்குரிய கோழிக் கொடியை நிறுத்தி ஊர்தோறும் செய்யும் திருவிழாக்களிலும் அன்புடைய அடியார்கள் இறைவனது பொருள் சேர் புகழ்த்திறங்களை ஏத்துதலாலே அம்முதல்வன் மனம் பொருந்தி அவர்கட்கு எளிவந்தருளும் இடத்திலும், முருகபூசை செய்யும் வேலன் அமைத்த வெறியாடுகளத்திலும், காட்டினிடத்தும் பொழிலினும், ஆற்றிடைக் குறையினும், ஆறுகளிலும் குளங்களிலும், பலவாகிய ஊர்களிலும் நாற்சந்தியிலும், முச்சந்தியிலும் ஐஞ்சந்தியிலும் புதிய பூக்களையுடை கடம்ப மரத்திலும் ஊர் நடுவாய் எல்லாரும் தங்கும் மரத்தடியிலும், அம்பலத்திலும் தெய்வம் உறையும் தூண் நிலைபெற்ற இடத்திலும் தலைமையினையுடைய கோழிக் கொடியோடு நகரை அணி செய்து நெய்யோடே வெண்சிறு கடுகையும் அப்பி வழிபடுதற்குரிய மந்திரத்தைப் புறத்தார்க்குப் புலனாகாமல் மென்மையாக உச்சரித்து வழிபட்டு அழகிய மென் மலர்களைத் தூவி உள்ளொன்றும் புறம்பொன்றுமாக இரண்டு உடைகளை உடுத்துச் சிவந்த நூலைக் கையிலே காப்பாகக் கட்டி வெள்ளிய பொறிகளைத் தூவிக் கொழுவிய ஆட்டுக் கடாயினது உதிரத்தோடே பிசைந்த தூய வெள்ளரிசியைச் சிறு பலியாக இட்டுப் பல பிரப்பும் வைத்துப் பசுமஞ்சளோடே சந்தனம் முதலியவற்றையும் தெளித்துச் செவ்வலரிமாலையையும் ஏனைய நறுமலர் மாலையையும் ஒத்த அளவினவாக அறுத்து அசையும்படி மேலே கட்டி மலைப்பக்கத்து ஊர்களில் வாழ்வார்க்குப் பசியும் பிணியும் பகையும் நீங்குக என வாழ்த்தி நறும்புகை காட்டிக் குறிஞ்சிப் பண்ணைப் பாடி முழங்குகின்ற ஓசையினையுடைய மலையருவியோடு இனிய பலவாத்தியங்களும் ஒலியாநிற்க செந்நிறமுடைய பூக்களைத் தூவிக் குருதிகலந்த தினையினையும் பரப்பிக் குறச்சாதியிற் பிறந்த பெண் முருகப் பெருமான் உவக்கும் வாத்தியங்களை வாசிக்கப்பண்ணி, தெய்வம் இல்லை என்பார் அஞ்சும்படியாக இளைய பிள்ளையார் அவ்விடத்தே எழுந்தருளும்படி அம் முதல்வனை அன்பர்களின் வழிப்படுத்தின பெரிய நகரின் கண்ணே வெறியாடுகின்ற களம் ஆரவாரிப்ப, அதற்கு ஏற்ற புகழ்ப்பாடல்களைப்பாடி ஊது கொம்புகள் பலவற்றையும் சேரவூதி, கொடிய மணியையும் ஒலிப்பித்து முருகப்

பெருமானுக்குரிய ஊர்தியாகிய பிணிமுகம் என்னும் பட்டத்து யானையை வாழ்த்தித் தமக்கு ஏற்ற வரங்களை இரந்து வேண்டிநிற்பாரும் முன் வேண்டியவண்ணம் வரங்களைப் பெற்றவர்களும் ஆகிய இருதிறத்தாரும் வழிபட்டுப் போற்ற அவ்வவ்விடங்களிலே உறைதலும் உரியன். முற்கூறிய அவ்விடங்களிலே ஆயினுமாக! பிறவிடங்களிலே ஆயினுமாக! (முருகனை நீ காணப் பெறுவாய்). அழகு விளங்க முருகப் பெருமானை முற்பட நீ கண்டபொழுது முகம் விரும்பித் துதித்து இருகைகளையும் தலைமேல் வைத்து வாழ்த்திப் பின்னர் அம் முதல்வன் திருவடி நின் தலையிலே பொருந்தும்படி நிலத்தில் வீழ்ந்து வணங்கி நெடிய பெரிய இமயமலையின் உச்சியில் தருப்பை வளர்ந்த பசிய சுனையிடத்தே ஐம்பெரும் பூதங்களுக்குத் தெய்வமாகிய சதாசிவன், மயேச்சுரன், உருத்திரன், அரி, அயன் என்னும் ஐவருள் உருத்திரனைத் தெய்வமாகவுடைய தீ தான் அகங்கையிலே ஏற்ப, அறுவராலே பெறப்பட்ட ஆறு வடிவு பொருந்திய செல்வனே! கல்லாலின் கீழிருந்த கடவுளின் மகனே! மலைமகளாராகிய உமா தேவிக்கு மகனே! பகைமையுடையார்க்குக் கூற்றுவனே! கொற்றவை யின் புதல்வனே! காடுகிழாளாகிய காளியின் மைந்தனே! தேவர்கள் போற்றும் படைத்தலைவனே! இன்பத்திற்குரிய மாலையை யணிந்த மார்பனே! எல்லா நூல்களையும் அறியும் புலவனே! போர்த் தொழிலில் ஒப்பற்றவனாகி நிற்பாய்! பொருகின்ற வெற்றியையுடைய இளையோனே! அந்தணருடைய செல்வமாய் இருப்பவனே! சான்றோர் புகழ்ந்து கூறும் சொற்களின் தொகுதியாய் விளங்குபவனே! வள்ளி நாச்சியாரும் தெய்வயானையாரும் ஆகிய மகளிருக்குக் கணவனே! வேல் பொருந்திய பெரிய கையினை உடையவனே! குருகாற் பெயர் பெற்ற (கிரௌஞ்சமலை) மலையைப் பிளந்த குன்றாத வெற்றிச் செல்வனே! வானைத் தீண்டும் நீண்ட சிமயங்களை உடைய குறிஞ்சி நிலத்திற் குரியவனே! பலரும் புகழ்ந்து போற்றும் நன்றாகிய நூல்களை உணர்ந்த ஞானியர்க்கு ஏறுபோல்வாய். உயிர்கள் தம் முயற்சியால் சென்று பெறுதற்கரிய முறைமையினையுடைய பெரும் பொருளாகிய வீட்டினை வழங்க வல்ல முருகப் பெருமானே! அப்பெரும்பொருளை நச்சி வந்தார்க்கு வீடு

பேற்றின்பத்தினை நுகர்விக்கும் பெரிய புகழை ஆளுதல்வல்ல இறைவனே! பிறவித் துன்பங்களால் இடுக்கண்பட்டு வந்தோர்க்கு அருள் செய்யும் சேயோனே! மிக்குச் செல்கின்ற போர்களில் கொடியோர்களை வென்றடுகின்ற நினதழகிய மார்பிடத்தே பொன்னாற் செய்த பேரணிகலங்களை அணிந்தவனே! இரந்து வந்தோரை வேண்டுவன கொடுத்துப் பாதுகாத்தலால் அவர்க்குப் பகையாயினார் அஞ்சத்தக்க நெடிய வேளே! தேவரும் முனிவரும் ஆகிய பெரியோர்கள் ஏத்தும் பெரும்பெயரை உடைய முருகனே! சூரபன்மாவின் குலத்தை இல்லையாக்கின மிகுகின்ற வன்மையுடைய மதவலி என்னும் பெயரையுடையவனே! மிக்க போர்த் தொழிலிலே வல்ல வீரர்க்கு உவமையாக உவமிக்கப்படுபவனே! தலைவனே! என்று யான் அறிந்து நினக்கு எடுத்துரைத்த அளவில் அமையாமல் நீ நினக்குத் தெரிந்த பலவற்றையும் கூறிப் புகழ்ந்து இறைவனாகிய நின் தன்மையெல்லாம் முற்ற அளவிட்டறிதல் எம்மை ஒத்த பல்லுயிருக்கும் அரியதாகையி னாலே நின் திருவடியைப் பெறவேண்டுமென்று நினைந்து வந்தேன். நின்னோடு ஒப்பார் இல்லாத மெய்ஞ்ஞானத்தை யுடையவனே என்று சொல்லி நீ கருதிய வீடு பேற்றினை அம்முதல்வனுக்கு விண்ணப்பம் செய்வதற்கு முன்னே வேறுவேறாகிய பலவடிவினையுடையராய் அவ்விறைவனை வணங்கிநிற்கும் அடியார்கள் விழாவெடுத்த களத்திலே தாங்கள் பொலிவுபெறத் தோன்றி அம்முதல்வனை நோக்கி "பெருமானே! அறிவு முதிர்ந்த வாய்மையினையுடைய புலவனாகிய இவன் நினது வளமார்ந்த புகழினைக் கூறவிரும்பிக் கேட்டோர்க்கு இனியனவும் உறுதி பயப்பனவுமாக உள்ள மிக்க பெரும்புகழ் பலவற்றை எடுத்துக் கூறிப் போற்றி வந்துள்ளான். இவன் நின்னால் அளிக்கத் தக்கான்" எனக் கூறிய அளவிலே பழமுதிர் சோலைமலைக்கு உரியோனாகிய அம்முருகன் தெய்வத்தன்மை வாய்ந்த ஆற்றல் விளங்கும் வடிவினையும், வானைத் தீண்டும் வளர்ச்சியையும் உடையனாய் அவ்விடத்தே வந்தணுகிக் கண்டோர்க்கு அச்சத்தை மிகுவிக்கும் தன் தெய்வத் தோற்றத்தை உள்ளடக்கிக் கொண்டு மணம் நாறுகின்ற தெய்வத்தன்மையுடைய தொன்மைவாய்ந்த தனது இளைய திருமேனியைக் காட்டி, நின்னைநோக்கி "நீ வீடுபெற வந்த

வரவை முன்பே அறிவேன். அது நினக்கு எய்தலரிதென்று அஞ்சுதலை நீக்குவாயாக என்று நின்மேல் அன்பினைப் புலப்படுத்துவதாகிய மொழிகளைப் பலமுறையும் அருளிச் செய்து இருண்ட நிறத்தையுடைய கடல்சூழ்ந்த உலகத்தில் நீ ஒருவனுமே பிறர்க்கு வீடளித்தற்கு உரியையாய்க் கேடின்றித் தோன்றும்படி விழுமியதாய்ப் பிறரால் பெறுதற்கரியதாகிய வீடுபேற்றினை நல்கியருள்வான்" என முதுவாய் இரவலனை நோக்கிச் செம்புலச் செல்வராகிய நக்கீரர் முருகப் பெருமான்பால் ஆற்றுப்படுத்துகின்றார். எல்லாம் வல்ல இறைவன் உலகியல் கல்வி அறிவாலும் உயிர் உணர்வாலும் உணர்தற்கரியவன் என்பதும், அம்முதல்வனது திருவருள் ஞானத்தாலேயே மன்னுயிர்கள் அவனை உணர்ந்து உய்தி பெறுதல் கூடும் என்பதும்,

"பாச ஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே நேசமொடு உள்ளத்தே நாடி" எனவரும் சிவஞானசித்தியார் திருவிருத்தத்தாலே அறிவுறுத்தப்பெற்றன. தனக்குவமையில்லாத இறைவனை மன்னுயிர்கள் தம் அறிவினால் அறிதல் இயலாது எனவும் அவனருளாலே தான் அவனை உணர்ந்து வழிபட்டு உய்தி பெறுதல் கூடும் எனவும் இறைவனது இயல்பு குறித்துச் சைவ சித்தாந்த மெய்ந்நூல்களிற் கூறப்படும் இவ்வுண்மை,

> "நின்னளந்தறிதல் மன்னுயிர்க்கருமையின்
> நின்னடி உள்ளி வந்தனன் நின்னொடு
> புரையுநர் இல்லாப் புலமை யோய்"

எனவரும் திருமுருகாற்றுப்படைத் தொடரில் தெளிவாக இடம் பெற்றுள்ளமை காணலாம்.

தீயோரைச் சினந்து பொருது அழிக்கும் திறத்தில் தன்னிகரற்ற பேராற்றல் படைத்தவனாக முருகப் பெருமான் விளங்குதலால் பெருவீரரது சீற்றத்திற்கு முருகப் பெருமானது சீற்றத்தை உவமையாகக் கூறுதல் மரபாம் என்பது,

> "........................... வெனவேல
> உருவப்பஃறேர் இளையோன் சிறுவன்
> முருகற் சீற்றத்து உருகெழு குருசில்"

எனவரும் பொருநராற்றுப்படைத் தொடரால் புலனாம். வென்ற வேலினையும், அழகினையும் உடையனாய்ப் பல தேரினை உடைய இளஞ்சேட் சென்னியின்மைந்தன் முருகனது சீற்றத்தையுடைய உட்குதல் பொருந்திய தலைவன் (கரிகாலன்) என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும்.

"முருகற் சீற்றத்து உருகெழு குருசில்" (புறம். 16)

என இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி போற்றப்படுதலும்

"முருகன் நற்போர் நெடுவேளாவி" (அகம். 1)

எனவும், 'முருகுறழப்பகைத் தலைச் சென்று' (மதுரைக். 181) எனவும் போர்த்திறத்திற்கு முருகனது போர்த்திறம் உவமையாகக் கூறப்படுதலும் இங்கு நோக்கத்தக்கன. ஒய்மா நாட்டு நல்லியக் கோடன் என்னும் வள்ளல் தன் பகை மிகுதிக்கு அஞ்சி முருகனை வழிபட்டானாக, அம் முதல்வன் கேணியில் பூ வொன்றினைத் தன் வேலாகத் தோற்றுவித்து, நல்லியக் கோடன் கனவிற் றோன்றிக் கேணியிற் பூத்துள்ள பூவை வாங்கிப் பகைவரை வென்றடக்குக என அருள் செய்தான் எனவும், அது கொண்டு நல்லியக் கோடன் தன் பகையை வென்று அடக்கினான் எனவும், முருகனது வேல் கேணியிற் பூவாகத் தோன்றினமையால் அவ்வூர் வேலூர் எனப் பெயர் பெற்றதெனவும் ஒரு கதையினைச் சிறுபாணாற்றுப்படை உரையில் நச்சினார்க்கினியர் குறித்துள்ளார். இக்கதைக் குறிப்பினையுடையதாக அமைந்தது,

"திறல்வேல் நுதியில் பூத்த கேணி
விறல்வேல் வென்றி வேலூர்" (சிறு. 170-171)

எனவரும் சிறுபாணாற்றுப்படைத் தொடரால் "முருகன் கையில் வலியினையுடைத்தாகிய வேலின் நுதிபோல கேணி பூக்கப்பட்ட வெற்றியையுடைய வேலாலே வெற்றியை யுடைய வேலும்" என்பது இத் தொடரின் பொருளாகும் என்றது : நல்லியக் கோடன் தன் பகை மிகுதிக் கஞ்சி முருகனை வழிபட்டவழி, அவன் இக்கேணியிற் பூவை

வாங்கிப் பகைவரை எறி என்று கனவிற் கூறி அதிற் பூவைத் தன் வேலாக நிருமித்த தொரு கதை கூறிற்று. இதனானே வேலூர் என்று பெயர் ஆயிற்று" என இத்தொடர்ப் பொருளை விளக்குவர் நச்சினார்க்கினியர். எனவே, இத் தொடரில் திறல்வேல் எனவும் விறல்வேல் எனவும் சுட்டப்பட்டது, முருகன் கையில் உள்ள வலியினை உடைத்தாகிய வேற்படையினை என்பது மேற்குறித்த உரைவிளக்கத்தால் உய்த்துணரப்படும். இதனால் வேல் என்பது போருக்குரிய படைக்கலம் என்றமையாது முருகன் கையிலுள்ள தெய்வத் தன்மை வாய்ந்த வேற்படையினைச் சிறப்பாகக் குறித்து வழங்கும் மரபு காணலாம். தமிழகத்துச் சிற்றூர்களில் முருகப் பெருமானுடைய தேவியாகிய வள்ளி நாச்சியாரைப் போற்றி ஆடும் வள்ளிக் கூத்தினை ஆண் பெண் இரு திறத்தாரும் நாடு வளம்பெற ஆடிப் போற்றுதலை மரபாகக் கொண்டனர். இச்செய்தி வாடாவள்ளி (தொல். புறம். சூத். 5) எனவரும் தொல்காப்பியத் தொடராலும்,

"வாடா வள்ளியின் வளம்பல தரூஉம் நாடு"
(பெரும்பாண். 370-371)

எனவரும் பெரும்பாணாற்றுப்படைத் தொடராலும் அறியப்படும். பேய்களாடும் துணங்கைக் கூத்தினையும் அழகினையுமுடைய வெற்றி வெல் போர்க் கொற்றவையாகிய இறைவி வெள்ளிய அலைகளையுடைய கடலிலே சென்று கடிய சூரனைக் கொன்ற முருகப் பெருமானைப் பெற்ற பெரிய வயிற்றினையுடையாள் எனச் சிறப்பித்துப் போற்றப் பெறுகின்றாள். குறிஞ்சிக் கிழவனாகிய முருகப் பெருமானைப் பாலை நிலத் தெய்வமாகிய கொற்றவைக்கு மைந்தனாகக் கொண்டு போற்றும் இவ்வுறவு முறை,

"வெற்றி வெல்போர்க்கொற்றவை சிறுவ"

எனவரும் திருமுருகாற்றுப்படைத் தொடரிலும்,

"வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற
பைம்பூட் சேஎய் பயந்த மாமோட்டுத்

துணங்கையஞ்செல்வி" (பெரும்பாண். 457-458)

எனவரும் பொரும்பாணாற்றுப்படைத் தொடரிலும் இடம் பெற்றுள்ளமை அறியத் தக்கதாகும். தெய்வத் தன்மையைக் குறித்து வழங்கும் முருகு என்னும் சொல் முழுமுதல் கடவுளாகிய முருகனைக் குறிப்பதோடு, முருகற்சீற்றத்து உருகெழு வீரர்களைக் குறித்துச் செய்யப்படும் கள வேள்வியைக் குறித்த பெயராகவும் ஆளப் பெறுதல் உண்டென்பது,

"படையோர்க்கு முருகயா" (மதுரை. 38)

எனவரும் மதுரைக் காஞ்சித் தொடரால் அறியலாகும் முருகப் பெருமான் கோயில் கொண்டருளிய திருத்தலங்களுள் முதன்மை பெற்றுத் திகழ்வது மதுரையின் மேற்கே உள்ள திருப்பரங்குன்றம் ஆகும். இக்குன்றத்திலே இனிய ஓசையினையுடைய ஒலிகளை உடைய மேகம் தங்கி மழையைப் பொழிதலும், அம்மலையிலே ஆடவரும் மகளிரும் பெருந்திரளாகக் கூடி முருகப் பெருமானுக்குத் திருவிழாக் கொண்டாடும் முறையில் ஆடல்பாடல் ஆகியவற்றை நிகழ்த்துதலின் ஆரவாரம் வானளாவ ஓங்கியிசைத்தலும்

"தளிமழை பொழியும் தண்பரங்குன்றில்
கலிகொள் சும்மை ஒலிகொள் ஆயன்
ததைந்த கோதை தாரொடு பொலிய
புணர்ந்துடன் ஆடும் இசையே அனைத்தும்
அகலிரு வானத் திமிழ்ந்தினி திசைப்ப"

(மதுரைக். 262-267)

எனவரும் மதுரைக் காஞ்சியடிகளாற் புலனாம்.

ஒளி வாய்ந்த பூக்களையுடைய கொன்றையின் பரந்த நிழலிடத்தே நீலமணியை ஒத்த பசிய பயிர்களினிடத்தே முறுக்குண்ட அரும்புகளையுடைய முசுண்டையுடனே வெள்ளியின் நிறம் வாய்ந்த முல்லைப் பூக்கள் உதிர்ந்துபரந்து தெளிந்த நீரையுடைத்தாகிய பள்ளத்திலே நீலமணியென

மருளும் நெய்தல் பூக்கள் மலரக் காட்டினால் சூழப்பட்டு விளங்கும் நிலப்பகுதி ஓவியம் வல்லானால் அணிசெய்யப் பட்ட வெறியாடுகளத்தை ஒத்துத் தோன்றியது என்பது மதுரைக் காஞ்சி 277 முதல் 285 முடியவுள்ள வடிகளால் விரித்துரைக்கப்பெற்றுள்ளது. இதனால் முருகனைக் குறித்த வழிபாட்டு நிலையாகிய வெறியாடல் நறுமணங்கமழும் பலவகைப் பூக்களால் அணி செய்யப் பெற்ற இடத்திலேயே நிகழும் என்பது புலனாகும்.

இளைய பிள்ளையாராகிய முருகப் பெருமானுக்குரிய வேலைத் தாங்கிய வேலனாகிய முருக பூசை பண்ணுபவன் மணமாகாத இளமகளிர்களுக்கு உண்டாகிய மெலிவுக்குரிய காரணத்தைக் கழங்கு வைத்துப் பார்த்து இவ்வருத்தம் முருகனால் வந்ததெனக் கூறித் தான் கூறிய சொல்லாலே கேட்டோர் உள்ளத்தைப் பிணித்துச் சல்லி, கரடி முதலிய வாச்சியங்கள் ஒலியாநிற்கக் கார்ப்பருவத்தில் மலர்ந்த குறிஞ்சி மலரைச் சூடிக் கடப்பமலர் மாலையை யணிந்த அழகியோனாகிய முருகனைத் தன் மெய்க்கண்ணே நிறுத்தி (ஆவேசிக்கும்படிச் செய்து) வழிபாடு செய்வன். அந் நிலையில் மன்றங்கள்தோறும் மகளிர்பலரும் தம்முள் கைகோத்துநின்று முருகனது புகழ் பாடிக் குரவைக் கூத்தாடுவர். இச்செய்தி,

> "அருங்கடி வேலன் முருகொடுவளைஇ
> அரிக்கூட்டி இன்னியங் கறங்க நேர் நிறுத்து
> கார் மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்
> சீர்மிகு நெடுவேட் பேணித்தழூஉப் பிணையூஉ
> மன்றுதொறும் நின்ற குரவை" (மதுரைக் 610-615)

எனவரும் மதுரைக் காஞ்சித் தொடரில் விரித்துரைக்கப் பெற்றமை காணலாம்.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் நாட்காலையில் அரசர்க்குரிய கடன்களைச் செய்து முடித்து தெய்வ வழிபாட்டோடு இருந்த தோற்றப் பொலிவினைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது,

"வல்லோன் தைஇய வரிப்புனைபாவை
முருகியன்றன்ன உருவினையாகி" (மதுரைக். 723-724)

எனவரும் மதுரைக் காஞ்சித் தொடர். "ஓவியத் தொழில் வல்லான் ஒருவன் எழுதிக் கைசெய்த பாவையிடத்தே தெய்வத்தன்மை நிகழ்ந்தாற் போன்ற பொலிவு பெற்ற வடிவினையுடையவனே!" என மாங்குடி மருதனார் நெடுஞ்செழியனது தெய்வ வழிபாட்டுத் தோற்றத்தைப் புனைந்திருக்கின்றார். இத் தொடரில் அமைந்த முருகு என்னும் சொல் தெய்வத் தன்மை என்ற பொருளில் ஆளப் பெற்றது என்பது நச்சினார்க்கினியர் கருத்தாகும். திருமுருகாற்றுப்படை உரையிலும் முருகு என்னும் சொல்லுக்குத் தெய்வத் தன்மை எனவே உரை வரைந்துள்ளார். முருகு என்பதற்கு நறுமணம் என்னும் பொருளும் உண்டு.

"முருகமர் பூமுரண் கிடக்கை"

என்பது பட்டினப்பாலையாகும். மலரிடத்தே உள்ளிருந் தெழும் நறுமணம் போன்று உயிர்களின் உள்ளத்தே உள்ளிருந்தெழுவதே தெய்வ வழிபாட்டுணர்வாகும். முழுமுதற் கடவுளாகிய தெய்வம் மன்னுயிர்களின் உடம்பிலும் உயிரினும் ஒழிவின்றி நிறைந்து நிற்றலும் இங்ஙனம் உலகப் பொருள்தோறும் பிரிப்பின்றி விரவி யிருப்பினும் அவற்றைத் தனக்குச் சார்பெனக் கொள்ளாது எல்லாப் பொருட்குந் தானே சார்வாய் ஒன்றினும் தோய்வின்றி நிற்றலும் ஆகிய தெய்வத் தன்மையினைப் புலப்படுத்தும் நிலையில் மணங்கமழ் தெய்வமாக வழிபடப் பெறுபவன் முருகனாதலின் முருகு என்பதற்குத் தெய்வத் தன்மை எனப் பொருள் கொண்டார் நச்சினார்க்கினியர். இக்கருத்திற்கு அரண் செய்யும் நிலையில் அமைந்தது,

"உற்றவாக்கையி னுறுபொருள் நறுமலரெழுதரு
நாற்றம்போல்
பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்"

எனவருந்திருவாசகத் தொடராகும்.

குறிஞ்சிநிலத் தெய்வமாகிய முருகப் பெருமான் தனக்குப் பூசை பண்ணும் வேலன் முதலியோர்பால் ஆவேசித்தல் போலத் தன் ஊர்தி எனப்படும் மயிலின்மேலும் ஆவேசித்தலுண்டு. இச்செய்தி,

"சூருறு மஞ்ஞையின் நடுங்க" (குறிஞ்சிப். 169)

எனவரும் குறிஞ்சிப்பாட்டடியான் புலனாகும். "தெய்வம் ஏறின மயில் போலே நடுங்காநிற்ப" என்பதிதன் பொருளாகும். முருகனால் வருந்தலுற்ற மகளிரது வருத்தந் தீர வெறியாடு களத்தில் முருகனுக்குரிய தெய்வமரமாகிய கடம்ப மரத்தினடியிலே சூழவும் மலர் மாலைகள் அணி செய்யப் பெற்றிருக்கும் என்பது,

"......................நெடுவேள்
அணங்குறு மகளி ராடுகளங் கடுப்பத்
திணிநிலைக் கடம்பின் றிரளரை வளைஇய
துணையறை மாலையின்..............."

(குறிஞ்சிப். 174-177)

எனவரும் குறிஞ்சிப் பாட்டடிகளான் புலனாகும்.

காவிரிப்பூம்பட்டினத்தில் கட்டப்பெற்றுள்ள பல்வேறு கொடிகளுள் நெடுநிலை மாடத்துவாழும் இளமகளிர் காந்தட்பூப்போலும் இருகைகளையும் குவித்து வணங்கி முருகவேளைக் குறித்து வெறியாடல் நிகழ்த்தும் மகளிரொடு பொருந்திக் குழலும் யாழும் முதலிய இன்னியம் இயம்பத் திருவிழா நீங்காத அகன்ற வீதியிலே தீமையை யகற்றும் சிறப்பினையுடைய தெய்வத்தை வழிபட்டுத் தூவிய மலர் நிறைந்த கோயில் வாயிலிலே பலருந்தொழக் கட்டிய கொடிகள் நிழல் செய்யும் திறத்தினை,

"காந்தளந் துடுப்பிற் கமழ்குலை யன்ன
செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்
வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்
குழலகவ யாழ்முரல
முழவதிர முரசியம்ப

விழவறா வியலாவணத்து
மையறு சிறப்பிற் றெய்வம் சேர்த்திய
மலரணி வாயில் பலர் தொழு கொடியும்"

எனவரும் பட்டினப்பாலை விரித்துரைக்கின்றது. இதனால் முருகனுக்குரிய திருவிழாவில் நிகழும் கொடியேற்று விழாச் சடங்கில் வெறியாடு மகளிரொடு இளமகளிரும் கலந்து கொண்டு விழாவினைச் சிறப்பித்தல் என்பது உய்த்துணரப் படும். முருகப் பெருமானை மணந்த வள்ளி நாச்சியாரது தெய்வத்தோற்றம் மக்கள் கண்ணால் உற்று நோக்குதற் கியலாத பேரொளி வாய்ந்தது என்பது,

"முருகு புணர்ந் தியன்ற வள்ளிபோன்று
உருவு கண்ணெரிப்ப நோக்கலாற்றலனே" (நற். 82)

எனவரும் நற்றிணைத் தொடரால் அறியலாம். களவொழுக்கத்துத் தலைவனது பிரிவினால் ஆற்றாளாகிய தலைமகளது மெலிவுகண்டு, இஃது தெய்வத்தானாகியது எனச் செவிலி வெறியாட்டு நிகழ்த்தக் கருதிய நிலையில் தோழி தலைவன் சிறைப்புறத் தானாகத் தலைவியை நோக்கிக் கூறியதாகவமைந்தது நற்றிணை 173ஆம் பாடலாகும். சுனையிடத்தே பூக்களைக் கொய்தும் அவற்றை மாலையாகத் தொடுத்தும் மலையிலே படர்ந்த செங்காந்தட் பூவினை முடிமாலையாகக் கட்டியும் தன்வழிபாட்டில் ஈடுபட்ட நம்பால் முருகப்பெருமான் அருள்கூர்ந்து தலைவியின் வேறுபாடு வெறியாடுதலால் நீங்கும் எனக் கருதி முயலும் அன்னைக்குத் தன் தெய்வத் தோற்றத்தினைக் கண்ணினால் காணும்படி நனவிலோ அன்றிக் கனவிலோ புலப்படுத்தி நின்மகளாகிய இவள் உற்ற நோய் என்னால் ஏற்பட்டது மன்றிப் பிற தெய்வங்களாலும் ஏற்பட்டதுமன்றி அழகிய மலைக்குரியனாகிய தலைவன் ஒருவனால் ஏற்பட்டதே என்று தன் அருளால் வெளிப்படக் கூறில் நெடுவேளாகிய அம்முதல்வனுக்கு வருவதொரு குற்ற முண்டோ? எனத் தோழி தலைவியை நோக்கிக் கூறும் முறையில் சிறைப்புறமாக நின்ற தலைவனுக்குக் களவொழுக்கந்தவிர அறிவுறுத்தும் நிலையில் இப்பாடற் பொருள் அமைந்துள்ளமை காணலாம்.

இதன்கண் மணமாகாத இளம் பருவத்தினராகிய தோழியும் தலைவியும் சுனையிலுள்ள மலர்களைக் கொய்து மாலையாகத் தொடுத்தும் செங்காந்தள் மலர் கொய்து கண்ணியாகச் சேர்த்தியும் முருகப் பெருமானது வழிபாட்டிற்கு உதவிய திறம் நன்கு புலனாகும்.

தலைமகன் சிறப்புறத்தானாகத் தோழி தலைமகட் குரைப்பாளாய் வெறியறிவுறுத்தி வரைவுகடாவும் நிலையிலமைந்தது நற்றிணை 288 ஆம் பாடலாகும். உயர்ந்த மரக்கிளையில் உள்ள மயிர் தன் தோகையை விரித்து இளவெயில் காண வேண்டி நெடியமலைச் சிகரத்தின் பக்கத்திலே தன் பெடையொடு தங்கும் மலைநாடனாகிய தலைவன் பிரிதலினாலே நினது நுதலில் படர்ந்த பசலையை நோக்கி அன்னை செம்முது பெண்டிருடனே தன் மனையிற் புகுந்து கட்டுவிச்சியைக் கொண்டு நெல்லை முறத்தில் பரப்பி, நட்டுவைத்து நின் மெலிவுபற்றிக் குறிகேட்குமானால், அக்கட்டுக்குறியானது புனத்திலே தினையின் கதிர்களைக் கொய்து கொண்டு போகும் கிளிகளை வெருட்டுவோமாகி நாம் சென்றிருந்தும் அந்நிலையில் எதிர்ப்பட்ட தலைவனது பிரிவினால் நினக் கேற்பட்ட மெலிவினையறியாது இவள் முருகவேள் இருக்கும் இடத்தருகே சென்றதனால், முருகவேள் வருத்தியவருத்தமின்றி மாறாகக் கூறிவிடுமோ? எனத் தோழி தலைமகளை நோக்கி வினவும் நிலையில் சிறைப்புறத்தானாகிய தலைவனுக்குத் தலைவியின் மெலிவு குறித்து வெறியாடல் நிகழும் என்பதனை அச்சத்துடன் புலப்படுத்தும் முறையில் இப்பாடலின் பொருள் அமைந்துள்ளது. இதனால் தலைவியின் வாட்டம் கண்டு வெறியாடல் நிகழ்த்த எண்ணிச் செவிலி கட்டுவிச்சியைக் கொண்டு குறிபார்த்து அக்குறி தெய்வத்தினான் நேர்ந்த தெனப் புலப்படுத்திய பின்னரே வெறியாடல் நிகழ்த்தற்கு ஏற்பாடு செய்யும் மரபுண்மை புலனாகும்.

"தாமரை புரையும் காமர் சேவடி
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேயக்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேற்

சேவலங் கொடியோன் காப்ப
ஏமவைகல் எய்தின்றால் உலகே"

எனவரும் பெருந்தேவனார் பாடல் குறுந்தொகைக் கடவுள் வாழ்த்தாக வமைந்துள்ளது. செந்தாமரை மலர் போலும் அழகிய சிவந்த திருவடியினையும், பவழம் போன்ற சிவந்த நிறத்தையுடைய திருமேனியையும், அம்மேனியில் விளங்காநின்ற ஒளியினையும், குன்றுமணியின் நிறம்போலும் செந்நிறம் வாய்ந்த உடையினையும், குருகுபெயர்க் குன்றத்தின் நடுவிடம் பிளக்கும்படி எறிந்த அழகிதாய்ச் சுடர்விட்டு விளங்கும் நெடிய வேற்படையினையும், கோழிச் சேவற் கொடியினையும் உடைய முருகப் பெருமான் பாதுகாத்தருளுதலால் இவ்வுலகத்து மன்னுயிர்கள் இன்பம் நிறைந்த நாட்களைப் பெற்று வாழ்கின்றன என்பது இப்பாடலின் பொருளாகும்.

குறிஞ்சிக் கடவுளாகிய முருகப் பெருமானது திருவடியையும், ஒளி திகழும் திருமேனியையும், அம் மேனியில் அணியப் பெற்ற செந்நிறம் வாய்ந்த உடையினையும், அம்முதல்வன் ஏந்திய நெடிய வேற்படையினையும், கோழிக் கொடியினையும் உவமை காட்டிப் புனைந்துரைக்கும் முகமாகக் காண்டற்கரிய அக் கடவுளை வழிபடும் அன்பர்கள் கண்ணினாற் காணச் சொல்லோவியம் செய்து காட்டும் முறையில் அமைந்த இச்செய்யுளிற் கடவுள் உயிர் உலகம் என்னும் முப்பொருள்களும் தோற்றமில் காலமாகவுள்ள உள்பொருள்கள் என்னும் சைவ சித்தாந்தத் தத்துவவுண்மை நன்கு வலியுறுத்தப் பெற்றுள்ளமை கூர்ந்து நோக்கற்பாலதாகும். போர்க்களம் குருதியாற் செந்நிறக் களமாக ஆகும்படி அவுணர்களைக் கொன்று இல்லையாக்கிய நடுவு நிலையில் திறம்பாத செம்மைவாய்ந்த திரண்ட கைப்பிடியினையுடைய அம்பினையும், குருதியாற் சிவந்த கொம்பினையுடைய யானையையும், கழல வணிந்த வீரவளையையும் உடைய முருகனுக்குரிய மலை, குருதி போலும் செந்நிறப் பூங்கொத்துக்களையுடைய காந்தளையுடையது என்று கூறித் தோழி தலைவன் தந்த கையுறையை மறுத்தல் என்னும் துறையில் அமைந்தது,

"செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பிற் செங்கோட்டி யானைக்
கழறொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே" (குறுந். 1)

என்னும் குறுந்தொகைப் பாடலாகும். குறிஞ்சி நிலத் தெய்வமாகிய முருகப் பெருமானுக்கு உரிய ஊர்திகளுள் பிணிமுகம் என்னும் பெயருடைய யானையும் ஒன்றென்பதும் முருகப் பெருமான் அவுணர்களைப் பொருதழிக்கும் காலத்து யானைமீதமர்ந்து அம்பெய்து பொருதலுமுண்டென்பதும்,

"கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந்தாங்கு" (பதிற். 11)

எனவும்,

"சேயுயர் பிணிமுகம் ஊர்ந்தம ருழக்கி" (பரி. 5)

எனவும் வரும் தொடர்களால் அறியப்படும்.

தலைவியின் மெலிவு முருகனால் வந்ததெனக் கருதி வெறியாடத் தொடங்கிய நிலையில் அவ்வெறியினை விலக்கித் தோழி அறத்தொடு நிற்பதாக அமைந்து,

"முருகயர்ந்து வந்த முதுவாய் வேல
சினவ லோம்புமதி வினவுவ துடையேன்
பல்வே றுருவிற் சில்லவிழ் மடையொடு
சிறுமறி கொன்றிவ ணறுநுத னீவி
வணங்கினை கொடுத்தி யாயி னணங்கிய
விண்டோய் மாமலைச் சிலம்பன்
உண்டா ரகலமு முண்ணுமோ பலியே" (குறுந். 362)

எனவரும் பாடலாகும்.

"முருகப் பெருமானை வழிபட்டு வெறியாடல் நிகழ்த்தவந்த அறிவு வாய்ந்தவேலனே. யான் நின்னைக் குறித்து வினவுவதொன்றுடையேன். என்னைச் சினவா தொழிக. பலவாக வேறுபட்ட சிலவாகிய சோற்றையுடைய பலியுணவுடனே சிறிய மறியினைக் கொன்று இத்தலைவியது

நெற்றியைத் தடவி முருகப் பெருமானை வணங்கி பலி யுணவைப் படைப்பாயாயின், அவ்வுணவினை வானளாவிய பெரிய மலைப் பக்கத்தையுடைய தலைவனது ஒளி தங்கிய மாலையை யணிந்த மார்பும் நின்னாற் கொடுக்கப்பட்ட அப்பலியை உண்ணுமோ?" என்பது இப்பாடலின் பொருளாகும். தலைவியின் நோய் தீர முருகனை வழிபட்டு நிகழ்த்தும் இவ்வெறியாடலில் பலவேறு உருவினவாகிய சோற்றினை உணவாகப் படைத்தலும், மறியைப் பலியிட்டு, நிலத்தில் படிந்த குருதித்துளியைத் தலைவியின் நெற்றியில் தடவுதலும் வெறியாடலில் நிகழ்த்தும் சடங்கென்பது மேற்குறித்த குறுந்தொகைப் பாடலாற் புலனாகும்.

தினைப்புனத்தில் தினை விளைவித்த குறவன் தன் தோட்டத்திலே முதன்முதல் புதிதாய் விளைந்த பெருங் கதிரைச் சிறப்புணவாகக் குறிஞ்சிக் கடவுளாகிய முருகனுக் குரியதென விட்டிருந்தான். அதனைத் தெய்வத்திற்கு விடப் பட்டதென அறியாது மயில் உண்டது. அந்நிலையில் அம் மயில் முருகபூசை பண்ணும் குறமகளாகிய தேவராட்டி வெறியாடுகின்ற அழகைப் போல அஞ்சி நடுங்கியது. இச் செய்தியினை,

> "புனவன் றுடவைப் பொன்போற் சிறுதினைக்
> கடியுண் கடவுட் கிட்ட செழுங்குரல்
> அறியா துண்ட மஞ்ஞை யாடுமகள்
> வெறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கும்" (குறுந். 105)

எனவரும் குறுந்தொகைப் பாடலில் நக்கீரர் குறித்துள்ளார். மலைவாழ்நர் தினை முதலியன விளைக்குங்கால், முதலிற் றோன்றிய பெருங்கதிரைத் தெய்வத்திற்காக இட்டு வைத்தல் மரபென்பதும், அதனைத் தெய்வத்திற்குரிய படைப்புப் பொருளாகவே பயன்படுத்துதல் வேண்டுமென்பதும், அதனை யறியாதுண்போர் தெய்வத்தாலாவேசிக்கப்பெற்று நடுக்கமுறுவர் என்பதும் இப்பாடலாற் புலனாம்.

இயலிசைத் தமிழ்ப் பனுவலாகிய பரிபாடல் என்னும் தொகை நூலில் திருமால், செவ்வேள், காடுகிழாள், வையை மதுரை என்னும் பொருள் பற்றிய பாடல்கள் இடம்

பெற்றுள்ளமையும் எழுபது பரிபாடல்களுள் இருபத்திரண்டு பாடல்களும், சில தொடர்களுமே கிடைத்துள்ளன என்பதும் முன்னர்க் குறிக்கப் பெற்றன. எழுபது பரிபாடல்களுள் முருகப் பெருமானைப் போற்றிய பாடல்கள் முப்பத்தொன்றாகும். அவற்றுள் 5.8,9,14,17,18,19,21 என்னும் எட்டுப்பாடல்களே இப்பொழுது கிடைத்துள்ளன. ஐந்தாம் பரிபாடலின்கண் குறிக்கப்பெற்ற முருகப் பெருமானது பிறப்புப்பற்றிய புராணச் செய்தி முன்னர் விளக்கப் பெற்றது.

"பரந்த கரிய குளிர்ச்சியையுடைய கடலிடத்தே பாறைகள் பிதிர்ந்து துகள் படும்படி மிகவுயர்ந்த பிணிமுக மென்னும் யானையின் மீதிவர்ந்து உட்புகுந்து தீயின் கொழுந்து ஒலிப்ப வேலினைத் திரித்து விட்டெறிந்து அச்சத்தால் நடுங்குகின்ற சூர்மாவினது முதலைத் தடிந்து வென்றியுடைமையால் நல்வினையாளர் என ஒரு கூற்றாற் பெயர் பெற்ற தீவினையினையும் கொல்லப்படும் தகைமை யினையும் உடைய வஞ்சனைத் தொழிலில் வல்ல அவுணரைக் கிளையறக் கொன்ற வேற் படையினாலே நாவலந் தீவினுள் வடபகுதியிலுள்ள அன்றில் என்னும் குருகின் பெயரையுடைய கிரவுஞ்ச மலையினைத் துளைத்து அம்மலையினைப் பலரும் செல்லுதற்குரிய வழியாக்கிய ஆறு மென் தலையினை உடையோனே! ஆறு திருமுகங் களுடனும், பன்னிரண்டு திருத்தோள்களுடனும் ஞாயிற்றின் எழுச்சிபோலும் திருமேனி நிற அழகுடனும், தாமரைப் பூவின்கண் பிறந்த பிறப்பினை உடையோனே! உலகத்தை அழிக்கும் கடவுட்கு மகனே! செவ்வேளே! திருவருட் பண்புகளின் நிறைவினையுடையோனே! உலகுயிர்கட்குத் தலைவனே! என இவ்வாறு கண்டார்க்கு அச்சம் தரும் வெறியாட்டு விழவினுள் நின்னைக் கண்டு வழிபடும் வேலன் இவ்வாறு சொல்லி ஏத்தும் வெறிப்பாடல்களும் பல உள்ளன. இவ்வுலகிற் கெல்லாம் தலைவன் நீயே யாதலால் வெறியாடுகளத்திலே வேலன் நின்னைக் கண்டு ஏத்துகின்ற அப்பாடலில் கூறப்பட்டவை உண்மை நிகழ்ச்சியுமல்ல. ஆயினும் அப்பாடல்களால் நின்னைப் புகழும்போது அன்பர் முன்னே நீ வெளிப்படுதலால் அப்பாடலிற் கூறப்பட்டவை நிகழாதன என ஒதுக்கத் தக்கனவுமல்ல. அப்பாடல்கள்

பொய், மெய் என்னும் அவ்விரு கூற்றுள் ஒன்றிற் பட்டவழி அவற்றாற் புகழப்படும் தலைமைச் சிறப்பினையுடைய நீ கற்றார் கல்லாதார் என்னும் இரு திறத்தாராலும் புகழப்படும் தலைமைச் சிறப்பினையுடைய நீ அச்சிறப்பினின்றும் விலகுவாய். முழுமுதற் கடவுளாகிய நின்னை ஒழிந்த ஏனை உயிர்த் தொகுதிகள் நல்லறங்களால் சிறப்பாகிய வீடு பேற்றினைப் பெற்று உயர்தலும், தீவினைகளால் பிறவிப் பெருங்கடலுட்பட்டு இழிவடைதலும் ஆகிய இந்நிலைமை, நின்னுடைய திருவருளாகிய ஆணை வரம்பின் உட்பட்ட தாகும்" என முருகப் பெருமானது பொருள் சேர் புகழ்த் திறங்களைப் போற்றிப் பரவும் நிலையிலமைந்தது,

"பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச்
சேயுயர் பிணிமுக மூர்ந்தம ருழக்கித்
தீயழ றுவைப்பத் திரியவிட் டெறிந்து
நோயுடை நுடங்குசீர் மாமுத றடிந்து
வென்றியின் மக்களு ளொருமையொடு பெயரிய
கொன்றுண லஞ்சாக் கொடுவினைக் கொஃறகை
மாய வவுணர் மருங்கறத் தபுத்தவேல்
நாவலந் தண்பொழில் வடபொழி லாயிடைக்
குருகொடு பெயர்பெற்ற மால்வரையுடைத்து
மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை
மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத்தோள்
ஞாயிற்றேர் நிறத்தகை நளினத்துப் பிறவியை
காய்அய் கடவுள் சேஎய் செவ்வேள்
சால்வ தலைவவெனப் பேஎ விழவினுள்
வேல னேத்தும் வெறியு முளவே
அவை வாயுமல்ல பொய்யு மல்ல
நீயே வரம்பிற்றிவ் வுலக மாதலிற்
சிறப்போய் சிறப்பின்றிப் பெயர்குவை
சிறப்பினு ளுயர் பாகலும்
பிறப்பினு ளிழி பாகலும்
ஏனோர் நின்வலத் தினதே" (பரி. 5. 1-21)

எனவரும் பரிபாடற் பகுதியாகும். இதன்கண்

"வேலன் ஏத்தும் வெறியு மளவே
அவை, வாயுமல்ல பொய்யு மல்ல
நீயே வரம்பிற் றிவ்வுலக மாதலின்
சிறப்போய் சிறப்பின்றிப் பெயர்குவை"

எனவரும் நான்கடிகள் முழுமுதற் கடவுளாகிய முருகப் பெருமானது சிறப்பிலக்கணம் ஒன்றினையே சிறந்து எடுத்துக் கூறும் முறையில் அமைந்துள்ளன. உலக முதல்வனாகிய முருகப் பெருமான், சூரபதுமன் முதலிய அவுணர்களை அழித்ததும், குருகொடு பெயர்பெற்ற மால்வரையைப் பிளந்ததும் முதலிய புராணச் செய்திகள் வேண்டுதல் வேண்டாமை இலானாகிய அம்முதல்வன் தன்னருளால் உலகுயிர்களைச் சார்ந்து புரந்தருளும் பல்வேறு நிலைகளைக் குறிப்பனவாதலின் அவை, அவனது பொதுவியல்பெனப் படுவனவன்றி, அவனது சிறப்பிலக்கணமாகக் கொள்ளத் தக்கன அல்ல என்பதும், தனக்குவமை இல்லாத அவன் ஒருவனே உலகெலாம் இயக்கும் முழுமுதற் கடவுளாக அவனை யொழிந்த ஏனை மன்னுயிர்கள் யாவும் தாம் தாம் செய்யும் நல்வினைத் திறத்தால் உயர்வினைப் பெறுதலும், தீவினைகளால் இழிவினையடைதலும் அம்முதல்வனது திருவருளாகிய ஆணையின் வரம்பின் உட்பட்டு நிகழ்வன என்பதும் தன்னிற் பிரிவிலா யென்னுந் திருவருள் வலத்தால் உலகுயிர்கள் பலவகைச் செயல்களில் ஈடுபட்டு இயங்க, அவற்றுள் ஒன்றினும் தோய்வின்றி நிற்றலே அம் முதல்வனது சிறப்பிலக்கணம் என்பதும் இவ்வடிகளிற் புலப்படுத்தப் பெற்றுள்ளமை காணலாம்.

நீயே வரம்பிற்றிவ் வுலகமாதலின், வேலன் ஏத்தும் வெறியாகிய அவை வாயும் அல்ல; பொய்யும் அல்ல எனவும், அவற்றுள் ஒன்றாய வழி, சிறப்போய் சிறப்பின்றிப் பெயர்குவை எனவும் வரும் இத்தொடர்கள், அம்முதல்வனது பொதுவும், சிறப்புமாகிய இயல்புகளைப் புலப்படுத்துவன. உலகப் பொருள்கள் ஒன்றிலும் தோய்வற நிற்கும் சிறப்பியல்பினனாகிய முருகப் பெருமான் படைத்தல் முதலிய தொழில்கள் எல்லாவற்றையும் தன் தொழிலாகக் கூடி நின்று செய்யும் நிலையிலும் தான் அத்தொழில் பற்றி விருப்பு

வெறுப்பின்றி நிற்றல் பற்றி அவன் செய்தனவாக வேலன் ஏத்தும் புராணச் செய்திகள் யாவும் ஒன்றிற் கருத்திருத்திச் செய்யும் முறையில் அவனால் செய்யப்பட்டன அல்ல என்பதும், அவையனைத்தும் அவன் அருளின் வழி நிகழ அவன் அவற்றிற்றோய்வின்றி விளங்குகின்றான் என்பதும், மேற்காட்டிய தொடரின் கருத்தாகும். 'ஏனோர் சிறப்பினுள் உயர்வாகலும் பிறப்பினுள் இழிவாகலும் நின் வலத்தினதே' எனவரும் தொடர், பால்வரை தெய்வம் எனத் தொல்காப்பினார் குறித்த இறை இயல்பினை அறிவுறுத்தும் நிலையிலமைந்துள்ளது. முழுமுதற் கடவுளாகிய நின்னை யொழிந்த மன்னுயிர்கள் நல்வினையாற் சிறப்பினைப் பெற்று உயர்தலும், தீவினையாற் பிறப்பினை அடைந்து தாழ்தலும் ஆகிய இந்நிகழ்ச்சிகள் நினது அருளாணையின் வரம்பின் உட்பட்டு நிகழ்வனவே என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும். இதனால் இவ்வுலகில் மன்னுயிர்கள் செய்யும் நன்றும் தீதுமாகிய இருவினைகளால் ஆகிய இன்ப துன்பங்களாகிய பயன்களை வினை செய்த உயிர்களே நுகரும் வண்ணம் எய்துவிக்கும் ஆற்றல் முழுமுதற் பொருளாகிய இறைவன் ஒருவனுக்கே உரியதென்பது, தொல்காப்பியனார் முதலிய பண்டைத் தமிழ்ச் சான்றோர் கண்டுணர்த்திய தத்துவ உண்மையாகும். இவ்வுண்மையை மேற்காட்டிய பரிபாடற் றொடரும் வலியுறுத்துவதைக் காணலாம். 'ஏனோர் நின் வலத்தினதே' என்னும் அடியில் ஏனோர் என்னும் சொல் இறைவனை ஒழிந்த ஏனைய உயிர்த் தொகுதியினையும் 'நின்' என்ற சொல் ஒருவன் என்னும் ஒருவனாகிய இறைவனையும், 'வலம்' என்ற சொல் அம் முதல்வனது அருளாகிய ஆணை என்னும் சிற்சத்தியினையும் குறித்து நின்றன. முழுமுதற்கடவுளாகிய முருகனது அருளாணை உயிர்களின் இருவினைகளின் வழிநின்று அவற்றின் பயன்களாகிய சிறப்பினையும் பிறப்பினையும் உயிர்கட்கு எய்துவிக்கின்றது என்னும் இத்தத்துவக் கொள்கையினை "அவையே தானேயா யிருவினையிற், போக்குவரவு புரிய ஆணையின், நீக்க மின்றி நிற்குமன்றே" எனவரும் சிவஞானபோத இரண்டாஞ் சூத்திரத்தில் ஆசிரியர் மெய்கண்டார் ஏதுவும் எடுத்துக்காட்டும் தந்து விளக்கியுள்ளார்.

"மேலைச் சூத்திரத்தில் எடுத்துக்கொண்ட முழுமுதற் கடவுளாகிய இறைவன், கலப்பினால் அவ்வுயிர்களேயாய்ப் பொருட்டன்மையால் அவ்வுயிர்களின்வேறாய் உயிர்க்குயிராதல் தன்மையால் உடனுமாய் நின்று ஆணையெனப்படும் தனது சிற்சத்தியால் வரும் இருவினைகளால் அவ்வுயிர்கள் இறத்தலையும் பிறத்தலையும் மேற்கொள்ளும்படி அவ்வாணையுடன் பிரிப்பின்றி ஒன்றாய் நிற்பன்" என்பது இச்சூத்திரப் பொருளாகும். அருண்மொழித் தேவராகிய சேக்கிழாரடிகள்,

> **"செய்வினையும் செய்வானும் அதன் பயனும் சேர்ப்பானும்**
> **மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள் எனக்**
> **கொண்டே**
> **இவ்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லையென**
> **மெய்வகையால் பொருள் சிவனென் றருளாலே**
> **உணர்ந்தெழுந்தார்**

எனவரும் பாடலில் சைவ சமயத்துக்குரிய தனிச் சிறப்புடையதாக இத்தத்துவக்கொள்கையினை எடுத்துரைத்துள்ளமை காணலாம்.

அறவாழி அந்தணனாகிய இறைவனது திருவருட் பண்பினை உள்ளத்துட் கொண்டு தன் முனைப்பின்றி மக்கள் செய்யும் நற் செயல்களே அறச் செயல்களாகும் என்பது

> **"நின்குணம் எதிர்கொண்டோர் அறம் கொண்டோர்"**
> (பரி. 5,71)

எனவரும் தொடராற் புலனாகும். என்றும் அழியாது நிலைபெறும் வீடுபேற்றினை அடையும் தன்மையினர், தவப்பெருஞ் செல்வராகிய இறைவனடியார்களையடைந்து வழிபட்டோர் என்பது

> **"மன்குணமுடையோர் மாதவர் வணங்கியோர்"**
> (பரி. 5, 72)

எனவரும் தொடராற் புலப்படுத்தப் பெற்றது. ஈண்டு மன்

குணம் என்றது பிறப்பிறப்புக்களிற்பட்டு உழலாது இறைவன் திருவடியைச் சார்ந்து என்றும் மாறாத பேரின்ப நிலையில் நிலைபெறுதலாகிய வீடுபேற்றினை. மன்குணம் நிலை பேறாகியதன்மை. மேற்குறித்தவண்ணம் இறைவனது திருவருட் குணத்தினை ஏற்றுக்கொண்டோராகிய அற நெஞ்சத்தினரும், பெருந்தவச் செல்வர்களாகிய அடியார் களை வணங்கி அவர் வழியொழுகும் பேரன்பர்களும் ஆகிய இவர்களே இறைவனது திருவடி நிழலை அடைதற்கு உரியார். அத்தன்மையோரல்லது உயிர்களைச் செறுகின்ற தீய நெஞ்சத்தையுடைய கொடியோரும், அறத்தின்கண் சேராத பழி உடையோரும், கூடா ஒழுக்கத்தால் அழிந்த தவவிரதத்தை உடையோரும் "இப்பிறப்பின் நுகர்ச்சியே உண்மையெனச் கொள்ளத்தக்கது; மறுபிறப்பென்ப தொன்றில்லை" எனத் தம் மனம் போனவாறொழுகும் மடவோரும் ஆகிய இவர்கள் இறைவன் திருவடி நீழலை யடைந்து இன்புறும் வீடுபேற்றிற்கு உரியரல்லர் என்பது பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறியினைப் புலப்படுத்தும். இக்கருத்து

> "நின்குணம் எதிர்கொண்டோர் அறங்கொண்டோர் அல்லதை
> மன்குணமுடையோர் மாதவர் வணங்கி யோரல்லதை
> செறுதீ நெஞ்சத்துச் சினம் நீடினோரும்
> சேரா அறத்துச் சீரிலோரும்
> அழிதவப்படிவத்து அயரியோரும்
> மறுபிறப்பில் லெனும் மடவோரும் சேரார்
> நின்னிழல்; அன்னோரல்லது இன்னோர்
> சேர்வர்" (பரி. 5;70-78)

எனவரும் பகுதியில் இடம் பெற்றுள்ளமை காணலாம்.

மன்னுயிர்களாகிய தம் இயல்பினையும், உயிர்க் குயிராய் உள்நின்றியக்கும் இறை இயல்பினையும் உள்ளவாறு உணரப் பெற்றவர்கள் இறைவன்பால் ஒன்றை வேண்டுங்கால் இவ்வாறு வேண்டுதல் வேண்டும் என அறிவுறுத்தும் நிலையில் அமைந்தது.

"யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமுமல்ல நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க்கடம்பின் ஒலி தாரோயே" (பரி. 5, 78-81)

எனவரும் பரிபாடற் பகுதியாகும். "தேருருள் போலும் பூங்கொத்துக்களையுடைய கடப்பமலர்களால் தொடுக்கப் பெற்ற தழைத்த மாலையை யணிந்த முருகப் பெருமானே! நின்னையாம் இரந்து வேண்டுபவை இவ்வுலக வாழ்க்கையில் நுகரப்படும் நுகர் பொருள்களும், அவற்றை உளவாக்கும் பொன்னும், அவ்விரண்டாலும் நுகரத்தகும் இன்ப நுகர்ச்சியும் அல்ல; எமக்கு வீடு பேற்றினை நல்கும் நின் திருவருளும், அவ்வருளைப் பெறுதற்கு இறைவனாகிய நின்பால் யாம் செய்யும் பேரன்பும், அருள் அன்பு என்னும் அவ்விரண்டினாலும் யாம் செய்தற்குரிய அறனும் ஆகிய இவை மூன்றுமேயாகும்" எனக் கடுவன் இளவெயினனா ராகிய புலவர் பெருமான் திருப்பரங்குன்றத் தெழுந்தருளிய முருகப் பெருமானை நோக்கி வேண்டும் நிலையில் அமைந்த இவ்விண்ணப்பம் இறைவனது திருவருளே உலகுயிர் நிகழ்ச்சிகள் எல்லாவற்றுக்கும் ஆதாரம் என்பதும், இறைவனருளால் அன்பு மீதூரப் பெற்ற மக்கட்குலத்தால் அருளும் அன்புமாகிய இவற்றின் துணை கொண்டு செய்யப்படும் நற்செயல்களே நிலை பெற்ற அறமாம் என்பதும் ஆகிய உண்மைகளை நன்கு புலப்படுத்தல் காணலாம்.

"அருளே உலகெலாம் ஆள்விப்ப தீசன்
அருளே பிறப்பறுப்ப தானால் - அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளும் ஆவ தெனக்கு" (அற்புதத்.)

என்வரும் காரைக்காலம்மையார் வாய்மொழியும்

"அவனருளே கண்ணாகக் காணினல்லால்"

எனவரும் அப்பர் மொழியும்,

"அவனருளாலே அவன்தாள் வணங்கி"

எனவரும் திருவாதவூரடிகள் வாய்மொழியும் மேற்குறித்த பரிபாடற்றொடரின் விளக்கமாக அமைந்துள்ளமை இங்கு ஒப்பு நோக்கி உணரற்பாலதாகும்.

முப்பத்து மூவரும் மற்றொழிந்த தேவரும் போற்றும் முழுமுதற் கடவுளாகப் பரங்குன்றத் தெழுந்தருளிய செவ்வேளைப் பரவிப் போற்றுவது எட்டாம் பரிபாடலாகும். மலர்ந்த துழாய் மாலையையும் அளவற்ற செல்வத்தினையு முடைய கருடக் கொடியோனாகிய திருமாலும் ஏறூர்ந்த செல்வனாகிய சிவபெருமானும் தாமரை மலரில் வீற்றிருப்போனாகிய நான்முகனும் அவனிடத்தே தோன்றி உலகத் திருளை நீக்கிய சூரியர் பன்னிருவரும் அசுவினி தேவர் என்னும் மருத்துவர் இருவரும், வசுக்கள் எண்மரும் ஆதிரை முதல்வனாகிய இறைவன் பெயராற் சொல்லப்பட்ட உருத்திரர் பதினொருவரும் ஆகத் தேவர் முப்பத்து மூவரும் நல்ல திசைகளைக் காப்போராகிய இந்திரன் முதலிய எண்மரும் இவர் எல்லோரும் இவரொழிந்த பிறரும் ஆகிய தேவர்களும் அவுணர்களும், அறிதற்கரிய வேதத்தினை அறிந்த தவச் செல்வராகிய தெய்வ முனிவர்களும், முழு முதற் பொருளாகிய முருகனைக் காணுதல் காரணமாக நிலமிசை வந்து தங்கும் இடமாகத் திகழ்வது திருப்பரங்குன்றம். ஆகவே திருப்பரங்குன்று தேவர்கள் தங்கும் பழைய இடமாகிய இமயக் குன்றத்தை ஒக்கும். அவ்விமயக் குன்றின் கண்ணே விளங்கும் சிறப்புடையதாய் முருகனை ஈன்ற தாமரை பூத்த வற்றாப் பொய்கையினை ஒத்தது திருப்பரங்குன்றில் உள்ள அருவி தங்கும் சுனையாகும் என ஆசிரியர் நல்லந்துவனார் முருகப் பெருமான் எழுந்தருளிய திருப்பரங்குன்றத்தினை இமயக் குன்றத்தினொடும் இணைத்துப் போற்றுவதாக அமைந்தது,

> "மண்மிசை யவிழ் துழாய் மலர்தரு செல்வத்துப்
> புண்மிசைக் கொடி யோனும் புங்கவ மூர்வோனும்
> மலர்மிசை முதல்வனும் மற்றவனிடைத் தோன்றி
> உலகிரு ளகற்றிய பதின்மரு மிருவரும்

மருந்துரை இருவரும் திருந்துநூ லெண்மரும்
ஆதிரை முதல்வனிற் கிளந்த
நாதர்பன் னொருவரு நன்றிசை காப்போரும்
யாவரும் பிறரும் அமரரும் அவுணரும்
மேவரு முதுமொழி விழுத்தவ முதல்வரும்
பற்றா கின்றுநின் காரண மாகப்
பரங்குன் றிமயக் குன்ற நிகர்க்கும்
இமயக் குன்றினிற் சிறந்து
நின்னீன்ற நிரையிதழ்த் தாமரை
மின்னீன்ற விளங்கிணரூழா
ஒருநிலைப் பொய்கையோ டொக்குநின் குன்றின்
அருவிதாழ் மாலைச்சுனை"

எனவரும் பரிபாடற் பகுதியாகும்.

திருப்பரங்குன்றத்திற்கும் அதன் கிழக்கேயமைந்த மதுரை நகருக்கும் இடையேயுள்ள வழியின் இயல்பையும், அவ்வழியே திருப்பரங்குன்றத்தையடைந்து முருகப் பெருமானை வழிபட வந்த அன்புடைய காதலர்களின் ஊடலும் கூடலுமாகிய இன்ப நிகழ்ச்சிகளையும் தலைமகள் ஊடலைத் தணிக்க எண்ணிய தலைவன் வையையின் மேலும் முருகன் எழுந்தருளிய பரங்குன்றின்மீதும், அங்கு வழிபடவந்த் பார்ப்பார் மீதும் சூளுற்றுக் கூற அது கண்ட தோழி அவனுடைய பொய்ச் சூளால் நேரும் துன்பங்களை நீக்க அவன்பால் அன்புடைய தலைவி முருகப் பெருமான் தலைவனது பொய்ச் சூள் கருதிச் சீற்றம் கொள்வதற்கு முன்னரே திருப்பரங்குன்றத்தில் முருகன் கோயிலில் தொங்கும் மணியைக் கையாலடித்துத் தலையால் வணங்கி, தலைவனது பொய்ச்சூளால் வரும் ஏதத்தைத் தவிர்த்தருள்க என வேண்டிக்கோடலும் ஆகிய செய்திகள் இப்பாடலில் 22 முதல் 89 முடியவுள்ள அடிகளால் விரித்துரைக்கப் பெற்றுள்ளன. இதனால் தெய்வம் எழுந்தருளிய திருத்தலத்தின் மேலும், அங்கு எழுந்தருளிய தெய்வத்தின் மீதும் தெய்வத்தைப் போற்றும் அடியார்கள் மீதும், தெய்வத்தன்மை வாய்ந்த தீர்த்தத்தின் மீதும் பொய்ச்சூள் செய்தல் இறைவன்பால் அன்பிலாதார் செய்யும் போலிச்

சடங்கென்பதும் இதனால் அன்னோர்க்குத் தெய்வத்தால் தீமை நேருும் என்பதும் அத்தீமை நீங்க இறைவனை வழிபடுதலே அவர்பால் அன்புடையார் செயல் என்பதும் ஆகிய உண்மைகள் புலப்படுத்தப் பெற்றுள்ளமை காணலாம்.

தன் அடியார் பொருட்டுக் கூற்றினது மிக்க ஆணையையும் இகழும் ஆற்றல் முருகப் பெருமானுக்கு உண்டு என்பது.

"எருமை இருந்தோட்டி எள்ளீயும் காளை"

(பரி. 8; 86)

என்ற தொடரால் உணர்த்தப்பட்டது. மழையால் வளர்ந்த குளிர்ந்த கிளைகளையுடைய மரங்களடர்ந்த பகுதிகள் பறிக்கத் தொலையாவாக நிறைந்த மலர்களைப் பெற்று மலர, குளிர்ந்த பொய்கைகள் நீரால் நிறைய கூடல் நகரத்திற்கும் பரங்குன்றத்திற்கும் இடையேயமைந்த வழியின் கண்ணே திருவிழாத் தோற்றம் பொலியப் பரங்குன்றத்துப் பெருமானை வழிபட எழுந்து சாந்தமும், நறும்புகைக்குரியனவும், நந்தா விளக்கிற்கு வேண்டுவனவும், நறுமலர்களும், இசைக் கருவியாகிய முழவமும், மணியும் கயிறும், மயிலும், மழுப்படையும், ஊர்தியாகிய பிணிமுகமும் உட்பட முருகப் பெருமான் விரும்புகின்ற வேறுபல பொருள்களையும் ஏந்திக் கொண்டு பரங்குன்றத்தை அடைந்து தொழும் அடியார் களும், அம்மலையின் தாழ்வரையிற் சென்று முருகப் பெருமானின் திருவடிகளைத் தொழுது "யாம் எம் காதலரைக் கனவில் தொட்டது பொய்யாகாமல் நனவின்கண்ணும் அடைய வையைப் புதுப்புனலை அணி செய்க" என வரம் வேண்டுவோரும், 'வயிறு கருவுறுக' என இறைவனுக்கு வேண்டும் பொருள்களை நேர்வோரும், "எம் கணவர் செய்பொருள் வாய்ப்பதாகுக" என முருகப் பெருமான் செவியிற்படக் குறை இரப்போரும் எம்முடைய கணவர் வியக்கத்தக்க போரில் பகைவரை அழித்து வெற்றி பெறுவாராக" என அருச்சிப்போருமாய் அம்மலையிற் குழுமிய நிலையில் பாடுவாரது பாணியாகிய தாளமும் ஆடுவாரது ஆடரங்கிற்குரிய தாளமும், மலையின்கண் உண்டாகும் எதிரொலியும் கலத்தலால் பெருமுழக்கம்

உண்டாகிய தன்மையினையும் முருகனருள்பெற்ற அம்மகளிர் தம் கணவரொடு துன்பம் நீங்கி மகிழ்ந்திருக்கும் திறத்தையும் விரித்துரைக்கும் முறையிலமைந்தது. 90 முதல் 123 வரை அமைந்த இப்பாடல் பகுதியாகும். இங்ஙனம் முருகப் பெருமான் எழுந்தருளிய பரங்குன்றைப் புனைந்துரைக்கும் முகத்தான் அம்முதல்வனை எதிர்முக மாக்கியும், படர்க்கையாக்கியும் அவனையே வாழ்த்தி நிறைவு பெறும் நிலையிலமைந்தது,

> "உடம்புணர் காதலரு மல்லாருங் கூடிக்
> கடம்பமர் செல்வன் கடிநகர் பேண
> மறுமிடற் றண்ணற்கு மாசிலோ டந்த
> நெறிநீ ரருவி யசும்புறு செல்வம்
> மண்பரிய வானம் வறப்பினும் மன்னுகமா
> தண்பரங் குன்ற நினக்கு" (பரி. 8, 125-130)

எனவரும் பகுதியாகும். "பரங்குன்றமே! தம்முட் பிரியாத காதலர்களாகிய மகளிரும் மைந்தரும், அவர்களல்லாத வரம் வேண்டுவோர் பிறரும் கூடிக் கறை மிடற்றிறைவனுக்குத் தூய்மையே உருவாகிய உமையம்மையார் தந்த புதல்வனாகிய கடப்பமலரையணிந்த செவ்வேள் எழுந்தருளிய திருக்கோயிலை வழிபட்டு மகிழ நிலவுலகம் வெயில் வெப்பத்தால் வருந்த மழை பெய்யாது போயினும் பல இடங்களிலும் அருவிநீர் சொரியும் நீர்வளமாகிய செல்வம் நினக்கு என்றும் குன்றாது நிலை பெறுவதாகுக!" என ஆசிரியன் நல்லந்துவனார் முருகப் பெருமான் எழுந்தருளிய வளமார்ந்த திருப்பரங்குன்றத்தை வாழ்த்திப் போற்றும் நிலையிலமைந்தது மேற்காட்டிய பாடற் பகுதியாகும். இங்ஙனம் ஆசிரியன் நல்லந்துவனார் பாடிய பரிபாடலாற் சிறப்பிக்கப் பெற்றது திருப்பரங்குன்றம் என்பது,

> "அந்துவன் பாடிய சந்து கெழு நெடுவரை"

எனவரும் அகநானூற்றுத் தொடராற்புலனாகும். மறுமிடற்றண்ணற்கு மாசிலோள் தந்த கடம்பமர் செல்வன் எனவரும் பரிபாடல் அடிகளைத் தழுவி அமைந்தது "நங்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்" எனவரும் அப்பர்

தேவாரமாகும்.

பரங்குன்றத்துச் செவ்வேளைப் பரவிப் போற்றும் நிலையிலமைந்தது குன்றம் பூதனார் பாடிய ஒன்பதாம் பரிபாடல் ஆகும். இருநிலம் துளங்காமல் வடதிசைக் கண்ணே நிலைபெற்று ஓங்கி இந்திரனாற் காக்கப்படும் இமய மலையின் சிகரத்திலே தெய்வத் தன்மை வாய்ந்த முனிவர் அறுவரும் உடம்படக் கற்பின் திறத்தால் நன்கு மதிக்கப்படும் கார்த்திகைப பெண்கள் அறுவரிடத்தே பெருவெள்ளமாக வந்த கங்கையைச் சடையிற் கரந்தோனும் நீலமணிபோலும் மிடற்றினையுடையவனுமாகிய இறைவனுக்கு மகனாகத் தோன்றியவனே! இறைவனாகிய நீ களவொழுக்கம் ஒழுகி வள்ளி நாச்சியாரை மணந்தவன்று ஆயிரங்கண்ணோனாகிய இந்திரன் மகள் தெய்வ யானையின் கண்கள் மணிநிற மழையைப் பெய்தாற்போன்று முதுவேனிற்பருவம் கார்காலத்தின் தன்மையைப் பெற்றுப் பெருமழையைப் பெய்தாலொக்கப் பரங்குன்றின் கண்ணே நீராகிய தணிந்த மழையைப் பெய்தது.

முருகப் பெருமான் அவுணர்களை அழித்து இந்திரன் மகள் தெய்வயானையை மணந்து கொண்டபின்னரே குறவர் மகளாராகிய வள்ளி நாச்சியாரைக் களவொழுக்கம் ஒழுகி மணந்து கொண்டான் என்பது மேற்காட்டிய தொடரால் நன்கு விளங்கும். குறிஞ்சிக் கிழவனாகிய முருகன் குறவர் மகளாகிய வள்ளியை அன்பின் ஐந்திணைக் களவொழுக்க மாகிய தமிழியல் வழக்கப்படி மணந்து கொண்டான் என்பதும், இந்திரன் வேண்ட, அவன் மகள் தெய்வ யானையை மணந்து கொண்டது வேத நெறி பற்றிய பொதுமை சுட்டிய உலகியல் வழக்கே என்பதும் குன்றம் பூதனால் பாடிய இப்பரிபாடலில் விரித்துரைக்கப்பெற்றன. அன்பின் ஐந்திணை ஒழுகலாற்றில் களவு, கற்பு என்னும் இருவகைக் கைகோளிற்கும் உரியராகிய வள்ளி நாச்சியார். தெய்வயானையார் ஆகிய தேவியர் இருவராலும் காதலிக்கப் படும் ஒரு தனித்தலைவன் முருகப் பெருமான் என்பதனை எடுத்துக் கூறி அம்முதல்வனால் களவொழுக்கம் ஒழுகி மணந்து கொள்ளப் பெற்ற வள்ளியின் சிறப்பும், அம்

முதல்வன் எழுந்தருளிய திருப்பரங்குன்றம் வள்ளி நாச்சியார்க்கு ஒத்தவாறும் உணர்த்துவது இப்பரிபாடலாகும். குறிஞ்சிக் கடவுளாகிய முருகனைப் பரவிப் போற்றும் நிலையிற் பாடிய இப்பாடலின் ஆசிரியர் குன்றம் பூதனார், நான்மறைப் பொருளை விரித்து அம்மறையது நல்லிசையை விளக்கும் வடமொழிப் புலவர்களை நோக்கித் தமிழியல் வழக்கமாகிய அன்பின் ஐந்திணைக் களவொழுக்கத்தின் சிறப்பினை விரித்துரைப்பதாகவமைந்தது,

"நான்மறை விரித்து நல்லிசை விள க்கும்
வாய்மொழிப் புலவீர் கேண்மின் சிறந்தது
காதற் காமங் காமத்துச் சிறந்தது
விருப்போ ரொத்து மெய்யுறு புணர்ச்சி
புலத்தலிற் சிறந்தது கற்பே யதுதான்
இரத்தலு மீதலு மிவையுள் ளீடாப்
பரத்தையுள் ளதுவே பண்புறு கழறல்
தோள்புதி துண்ட பரத்தையிற் சிவப்புற
நாளணிந் துவக்குஞ் சுணங்கறை யதுவே
கேளணங் குறமனைக் கிளந்துள சுணங்கறை
சுணங்கறைப் பயனு மூடலுள் ளதுவே, அதனால்
அகற லறியா வணியிழை நல்லார்
இகறலைக் கொண்டு துனிக்குந் தவறிலரித்
தள்ளாப் பொருளியல்பிற் றண்டமிழாய் வந்திலார்
கொள்ளாரிக் குன்று பயன்" (பரி. 9, 12-26)

எனவரும் பகுதியாகும்.

நான்மறைப் பொருளை விரித்து அம்மறையின் நல்லிசையை விளக்கும் புலவர்களே! நான் கூறக்கருதிய நல்ல தொரு பொருளைக் கேண்மின். மக்கள் நுகரும் காம வின்பத்திற் சிறந்தது அன்புடைய காதலர் இருவர் தம்முட் கூடி நுகரும் இன்பமாகும். அஃதாவது, மெய்யுற்றறியாத ஒருவனும் ஒருத்தியுமாகிய இருவர் ஒத்த அன்பினராய் நல்லூழின் திறத்தால் தாமே மெய்யுற்றுப்புணரும் இயற்கைப் புணர்ச்சியாகும். இங்ஙனம் ஒத்த அன்பில்லாத கற்புமணம் புலந்து ஊடுதலால் சிறப்பதாகும். புலத்தலாவது, தலைமகன் தலைவியின் பிணக்கு நீக்குவார் வாயிலாக வேண்டிக்

கொள்ளுதலும், தலைவி அவ்வேண்டுகோளை ஏற்றலுமாகிய இவை உட்படத் தலைவனது புறத்தொழுக்கத்தால் வருவது. தலைவனால் நுகரப்பட்ட பரத்தை வீட்டின்கண்ணே நாட்காலையிலே ஆயமகள் ஒருத்திக்குச் செவ்வணியணிந்து தூதாகவிட்டுத் தலைமகளது பூப்பு அறிவிப்ப, பண்புடைய அக்கழற்றுரையால் தலைவன் அங்கிருந்து மீண்டுவந்து உவக்கும் புணர்ச்சி உடையது. அப்புணர்ச்சிகள் தாம் தலைவியின் பக்கத்துள்ளார் கேட்டு வருந்த பரத்தையால் அவள் மனைக்கண் அலர் தூற்றப்படுவன. அப்புணர்ச்சி இன்பம் இயல்பாக அன்றி ஊடலால் உளதாவது. அதனால் இங்ஙனம் கற்புமணம் பெற்ற மகளிர் தலைவன் பிரிய அவனொடு ஊடல் கொண்டு வருந்துமாறு போல, கணவரை விட்டு நீங்குதலறியாத களவிற் புணர்ச்சியையுடைய மகளிர், தம் கணவரொடு மாறுகொண்டு ஊடும் குற்றமுடையர் அல்லர். இவ்வாறு காதலர் பிரிந்தறியாத இப்புணர்ச்சியை விரும்புகின்ற பொருளிலக்கணத்தையுடைய தமிழியல் வழக்கமாகிய களவொழுக்கத்தின் அன்பின் திறனை ஆராய்ந்துணராத தலைவர். இத்தகைய குறிஞ்சி நிலத்தின் உரிப்பொருளாகிய புணர்ச்சியின் பயனை உள்ளவாறு உணர்ந்து பயன்கொள்ளும் ஆற்றல் இல்லாதவராவார் என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும்,

காதலர் இருவர் கருத்துணராது பெற்றோர் முதலியோரால் நடத்தப்படும் கற்பு மணத்திற்கும், நல்லூழின் செயலால் ஒத்த அன்பினராகிய ஒருவனும் ஒருத்தியும் உலகத்தார் அறியாது தம்முள் தாமே கலந்த கேண்மையின ராய்க் களவொழுக்கம் ஒழுகிப் பின்னர் வரைந்து கொள்ளும் தமிழியல் வழக்கமாகிய களவு மணத்திற்கும் இடையே அமைந்த வேறுபாட்டினை முறையே தெய்வயானை அம்மையார், வள்ளி நாச்சியார் ஆகிய இருவருடைய செயல்களிலே வைத்துப் புலப்படுத்தும் முறையிலமைந்தன, 9ஆம் பரிபாடலில் 27 முதல் 69 முடியவுள்ள அடிகளாகும்.

கடிய சூர்மாவினைத் தடிந்த வேற்படையைத் தாங்கிய முருகப் பெருமான் எழுந்தருளிய திருப்பரங்குன்றம் கலைத்திறத்தில் வல்லார் பலரும் தம்முள் உறழ்ந்து தத்தம்

துறையில் வெற்றிபெற்றுத் தாம் பெற்ற வெற்றிக் கறிகுறியாகத் தடாகம் போலும் சுனையின் பக்கத்தே வெற்றிக் கொடியை நாட்டப் பொலிவு பெற்று விளங்கிய திறத்தை விரித்துரைப்பது,

> "கடுஞ்சூர் மாமுத றடிந்தறுத்தவேல்
> *அடும்போ ராளநின் குன்றின்மிசை*
> *ஆட னவின்றோ ரவர்போர் செறுப்பவும்*
> *பாடல் பயின்றோரைப் பாணர் செறுப்பவும்*
> *வல்லரை வல்லார் செறுப்பவும்*
> *அல்லரை யல்லார் செறுப்பவும் ஓர் சொல்லாய்ச்*
> *செம்மைப் புதுப்புனற்*
> *றடாக மேற் தண்சுனைப் பாங்கர்ப்*
> *படாகை நின்றன்று"* (பரி. 9, 70-78)

எனவரும் பகுதியாகும். கடுந்தொழில் உடைய சூர்மாவைத் தடிந்தறுத்த வேலால் கொடியோரைக் கொன்று குவிக்கும் போர்த் தொழிலை யாள்பவனே! நீ வீற்றிருந்தருளும் பரங்குன்றின்மேலே ஆடல் பயின்றோரை ஆடலில் வல்லோர் வெற்றிகொள்ளவும் இசைபாடுதலில் வல்லாரை அத்துறையில் வல்ல பாணர் வென்றடக்கவும், வல்லுப் போரை வல்லாரை அத்தொழிலில் வல்லாற் வென்றடக்கவும் ஒழிந்த கலைத் திறங்களில் வல்லாரை அவ்வத்துறையில் வல்லார் வென்றடக்கவும் இக்கல்வி வென்றிகளால் ஒப்பில்லாத புகழ் பரப்பத் தடாகம் போலும் சுனையின் பக்கத்துக் கொடி எடுத்து நின்றது என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும். தாவில் கொள்கைத் தந்தொழில் முடிப்பாருடைய மனத்தின் எழுந்தருளியிருந்து, அவர் தத்தம் தொழிலில் மேம்படுதற்கேற்ற உள்ளக்கிளர்ச்சியை நல்குவோன் முருகனாதலின் அம்முதல்வன் எழுந்தருளிய திருப்பரங்குன்றத்தில் இத்தகைய கலை வென்றிச் செயல்கள் நிகழ்வனவாயின என்பது இங்குக் குறிப்பிடத்தகுவதாகும். கற்புப் பொருந்திய நெறியையுடைய தேவியர் இருவரது அன்பின் வழிப்பட்ட ஊடல் உரிமையை விரும்பும் பண்பினையுடைய முருகப் பெருமானை நோக்கி அன்பினாற்

சிறந்து நின் திருவடி உறைதலாகிய இவ்வாழ்வு எமக்கு நாள்தோறும் பொலிந்து பயன்தந்து சிறப்பதாகுக! எனக் குன்றம்பூதனார் வேண்டிக் கொள்வதாகவமைந்தது,

> "கற்பினை நெறியூ டற்பிணைக் கிழமை
> நயத்தகு மரபின் வியத்தகு குமர
> வாழ்த்தினேம் பரவுதுந் தாழ்த்துத் தலை நினையா
> நயத்தலிற் சிறந்தவெம் மடியுறை
> பயத்தலிற் சிறக்க நாடொறும் பொலிந்தே"
>
> (பரி. 9, 81-85)

எனவரும் பகுதியாகும். தலைவன் பிரிந்து சென்ற நிலையில் அவன் வருவதாகக் குறித்த கார்ப்பருவத்தைக் கண்டு வருந்திய தலைமகள் கேட்பத் தோழி முருக வேளைப் பரவுவாளாய்த் தலைமகன் இப்பருவத்தே வந்துசேர்வான் என்பது பட வற்புறுத்தும் முறையிலமைந்தது கேசவனார் பாடிய 14ஆம் பரிபாடலாகும். இப்பாடலின் முதலிலுள்ள 17 அடிகள் கார்ப்பருவத்தின் தோற்றத்தைச் சொல்லோவியஞ் செய்து காட்டுகின்றன. சூரபன்மாவைக் கிளையோடு அழித்த வேற்படையை உடையோனே! கார்காலத்து வெண்மேகம் கிளர்ந்து மேலெழுந்தாற் போன்ற நறிய அகில் முதலிய வற்றாற் புகைத்த நறும் புகையை மிகவிரும்பியவனே! ஆறு முகங்களையும் பன்னிரு தோள்களையும் உடையையாய் அழகினாற் பிற மகளிரை வென்ற வெற்றியையுடைய வள்ளி நாச்சியாரது நலத்தை நயந்தவனே! தம்மைப் பிரிந்த கணவர் வந்து புணர்ந்து பின் நீங்காமைப் பொருட்டு மகளிர் யாழை இசைத்து நின்னைப்பாடுகின்ற தோத்திரப் பாடலை விரும்பியவனே! நீ பிறந்தருளியபொழுதே நின்னை நினைந்து உளம் நடுங்கி இந்திரன் முதலிய சிறப்புடைய தேவர்களும் அஞ்சுதற்குக் காரணமாகிய இறைமைத் தன்மையை உடையோனே! முந்நூல் அணிதற்கு முன் ஒரு பிறப்பும், அணிந்தபின் ஒரு பிறப்பும் என இரண்டு பிறப்பினையும் அப்பிறப்பினால் வந்த இரண்டு பெயர்களையும் அன்பென்னும் ஈரம் வாய்ந்த நெஞ்சினையும் ஒப்பில்லாத புகழினையும் உடைய அந்தணர்களது வைதிக அறத்தைப் பொருந்தியவனே! மேற்கூறிய அத்தன்மையை ஆதலின்,

நின்னை யாங்கள் விரும்பி அடுத்தடுத்து வழிபடுவதன் பயன் அவ்வழிபாடுகள் தாமே இன்னும் இன்னும் நின்புகழினும் பலவாக எங்கட்கும் பெருகுக! என்பதேயாகும்" என முருகப் பெருமானை நோக்கித் தோழி பரவிப் போற்றுவதாக வமைந்தது,

"சூர்மருங் கறுத்த சுடர்ப்படை யோயே
கறையில் கார்மழை பொங்கி யன்ன
நறையி னறும்புகை நனியமர்ந் தோயே
அறுமுகத் தாறிரு தோளால் வென்றி
நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே
கெழீ இக் கேளிர் சுற்ற நின்னை
எழீ இப் பர்டும் பாட்டமர்ந் தோயே
பிறந்த ஞான்றே நின்னை யுட்கிச்
சிறந்தோ ரஞ்சிய சீருடை யோயே
இருபிறப் பிருபெய ரீர நெஞ்சத்
தொருபெய ரந்தண ரறனமர்ந் தோயே
அன்னை யாகலி னமர்ந்தியா நின்னைத்
துன்னித் துன்னி வழிபடுவதன் பயம்
இன்னு மின்னுமவை யாகுக
தொன்முதிர் மரபினின் புகழினும் பலவே"

(பரி. 14, 18-32)

எனவரும் பகுதியாகும். முருகப் பெருமானை அடுத்தடுத்து வழிபடுவதன் பயன், அத்தகைய வழிபாடுகள் தமக்குத் தொடர்ந்தென்றும் கிடைத்தற் பொருட்டே எனத் தோழி கூறும் இவ்வேண்டுகோள்,

"கூடும் அன்பினிற் கும்பிடலே யன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்"

என அருண்மொழித் தேவர் கூறும் அடியார் திருக் கூட்டத்தின் குறிக்கோளை நன்கு நினைவுபடுத்தல் காணலாம்.

திருப்பரங்குன்றத்துச் செவ்வேளைப் பரவிப்

போற்றும் முறையில் நல்லழிசியார் பாடியது 17ஆம் பரிபாடலாகும். பரங்குன்றத்து முருகப் பெருமானை வழிபடும் அடியார்கள் சுற்றப்படும் சுடர்விளக்கும், இசைக்கருவிகளின் இன்னிசையும், சந்தனம் முதலிய மணப்பொருள்களும், அகிற்புகையும், கொடிகளும் ஒருங்கே வரத் தேன் நிறைந்த நறுமலர்களையும் தளிர்களையும், பூத்தொழில்களையுடைய ஆடைகளையும் தெளிந்த ஓசையினையுடைய மணியினையும் இலைத் தொழிலமைந்த வேற்படையினையும் சுமந்து வந்து சந்தனத்தைத் தெளித்து முருகபூசை செய்யும் வேலன் ஆட்டுக் கடாயைக் கட்டின பூசையையுடைய தெய்வமரமாகிய கடம்பமரத்தினைத் தோத்திரவுரைகளால் ஏத்தியவர்களாய் ஆளத்தியால் ஆக்கிய இசையினைப் பாடியவராய் விரிந்த மலர்களிலிருந்து சொரியும் தேனால் நனைந்த திருப்பரங்குன்றத்தின் தாழ்வரையிலே மாலை நேரந்தோறும் முருகப்பெருமானுக்கு நேரும் வழிபாட்டிலே கலந்து கொண்டு அம்மலையில் தங்கி முருகன் திருவருளில் திளைத்து மகிழும் வாய்ப்பினைப் பெற்ற மக்கள் இறைவன் கழலேத்தும் இன்பத்தையன்றி தேவருலகத்தே தங்கிய இன்பத்தைச் சிறிதும் விரும்ப மாட்டார்கள் என்பதனை,

> "தேம்படு மலர்குழை பூந்துகில் வடிமணி
> எந்திலை சுமந்து சாந்தம் விரைஇ
> விடையரை யசைத்த வேலன் கடிமரம்
> பரவின ருரையொடு பண்ணிய விசையினர்
> விரிமலர் மதுவின் மரநனை குன்றத்துக்
> கோலெரி கொளைநறை புகைகொடி யொருங்கெழ
> மாலைமாலை யடியுறை இயைநர்
> மேலோ ருறையுளும் வேண்டுநர் யாஅர்"
>
> (பரி. 17, 1-8)

எனவரும் தொடர்களில் நல்லழிசியார் குறித்துள்ளார்.

> "தங்குபிறப்பே வீட்டினுக்கு மேலாந்தன்மை சாதித்தார்"

எனவரும் சேக்கிழார் வாய்மொழி இங்கு ஒப்பு நோக்கற் பாலதாகும். திருப்பரங்குன்றத்தின் ஒரு பக்கத்தே இசைப்

பாணர்களுடைய யாழோசை எழ, அதற்கெதிராக வண்டின் இன்னிசை எழலும், ஒருபக்கத்தே வேய்ங்குழலின் ஒலி எழ அதன் எதிர் தும்பி முரலுதலும், ஒருபக்கத்தே முழவின் முழக்கம் உண்டாக அதன் எதிர் அருவி ஒலித்தலும், ஒரு பக்கம் ஆடலில் வல்ல மகளிர் ஆட அவர்க்கெதிரே பூங்கொடிகள் வாடைக்காற்றால் அசைதலும், ஒரு புறத்தே பாடினி பாடும் சுரவரிசையை யுடைய மிடற்றுப் பாடலின் கண்ணே நாலு தாக்குடைய கிழமையும், இரண்டு தாக்குடைய நிறையும் ஒரு தாக்குடைய குறையும் தோன்ற அதற்கெதிராக மற்றொருபுறம் சீருக்கிசைய ஆடுகின்ற மயிலினது இடை விட்டெழும் குரல் தோன்றுதலும் இவ்வாறு கலைத்திறங்களால் மாறுமாறாகிய தன்மையை உற்றனபோல ஒன்றின் ஒன்று இகலும் தன்மையை ஏற்றுக் கொள்ளுதலைப் பகைவரை இல்லை யாக்கிய முருகப் பெருமான் எழுந்தருளிய திருப்பரங்குன்றம் உடையதாகும்.

பாடுதல் அமைந்து பலபுகழும் முற்றுப்பெற்ற கூடல் நகரத்திற்கும் பரங்குன்றத்திற்கும் இடையே நின்ற நிலம் மிக அணிமையதாயினும் மகளிரும் மைந்தரும் நெருங்கி விளையாடுதலால் அவ்வழியில் இயங்குவோர்க்கு மிகச் சேய்மையுடையதாகத் தோன்றாநின்றது. மகிழ்ச்சிமிக்க மகளிர் கூந்தலினின்றும், மைந்தர் குஞ்சியினின்றும் வீழ்ந்து அவிழ்ந்து கிடக்கும் மாலையால் தடுக்கப்பட்டு வழிச் செல்வார்க்கு இயங்கும் நெறி இல்லையாயிற்று. பழி நீங்கிய மெய்ப்பொருள் பனுவல்களாலும், வழிபாடாகிய வேள்வியி னாலும் புகழினால் திசையெங்கும் பரந்த பரங்குன்றின்கண் எழுந்தருளியிருந்து உலகத்தார் பல இடங்களிலும் செய்கின்ற பூசையின்கண் முருகன் ஆவியாகக் கொள்ளும் அகிற்புகை அவ்விடந்தோறும் மேலே வானத்துச் செல்லுதலால் கண்ணிமையாத வானோரும் அவ்விடத்து நின்று கண்ணிமைத்துச் செல்வர். தேயாத ஞாயிற்று மண்டிலமும் புகை மிகுதியால் காணும் இயல்பினையுடையதன்று. குளிர்ந்த மாலையையணிந்த வளைக்கை இளமகளிரும் அவர்தம் மென்தோளிற்றங்கி அன்பு ஒத்தாராகிய மாலையணிந்த மார்பையுடைய மைந்தரும் மகிழ்ச்சிமிக்கு ஒரு சேரச்சுனையின்கண் பாய்ந்தாடுதலால் சுனையின்

மலரிடத்தே படிந்த வண்டுகள் வெருவி அம்மலர்களின் தாதினை ஊதப்பெறாவாயின. திருப்பரங்குன்றத்தின் அணிநலங்கள் அத்தன்மையனவாய் மலையிடத்தே ஒழுகும் வெள்ளிய அருவி நீங்காது பரவி உழவரது வயலின்கண் பரவிநிற்கும். மலைமேல் விளையாடும் மகளிர் இயங்குதலால் அவர்தம் அணிகலங்களிலிருந்து வீழ்ந்த நீலமணி வயலைச் சிதைக்கும்.

பிரிந்த தலைவர் வினைமுடித்து விரைவின் வந்து தம்மை அடைதற்பொருட்டு வெள்ளிய அருவியையுடைய பரங்குன்றின்கண் தலைவியர் செய்யும் தெய்வ விழாவும், அவ்வாறு அவர்கள் வந்து கூடிய நிலையில் வளங்கெழு வையையாற்றின்கண் அவரோடு புதுப் புனலாடுதலாகிய விருந்தயர்வும், வேற்படையையுடைய பாண்டியனது கூடல் நகரத்தின்கண் மனைக்கண் தங்கி அம்மகளிர் செய்யும் விருந்தோம்பலும் தம்மிற் காரணகாரியங்களாய் முன்னும் பின்னுமாக மாறி மாறி நிகழ்தல் மனைவாழ்க்கை நெறி யாதலின் அவர்க்கு நல்லொழுக்கமாயிற்று எனத் திருப்பரங் குன்றத்தில் மகளிரும் மைந்தரும் நிகழ்த்தும் தெய்வ வழிபாட்டினையும், அவ்வழிபாட்டின் பயனாக வையைப் புதுப்புனலாட்டும், மனைக்கண் விருந்தோம்புதலும் ஆக நிகழும் நற்பயன்களையும் விரித்துரைத்த நல்லழிசியார் முருகப்பெருமானை எதிர்முகமாக்கி வேண்டும் நிலையிலமைந்தது :

> "மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடிப்
> பிணிமுக மூர்ந்த வெல்போ ரிறைவ
> பணியொரீஇ நின்புக ழேத்தி
> அணிநெடுங் குன்றம் பாடுதும் தொழுதும்
> அவை, யாமுமெஞ் சுற்றமும் பரவுதும்
> ஏம வைகல் பெறுகயா மெனவே" (பரி. 17, 48-53)

எனவரும் பாடற்பகுதியாகும். நீலமணிபோலும் நிறத்தினை யுடைய மயிலையும், உயர்ந்த கோழிக் கொடியையும், பிணிமுகம் என்னும் உயர்ந்த யானையை ஊர்ந்து செய்யப் பட்ட வெல்லும் போரினையுமுடைய தலைவனே! சிற்றறிவும்

சிறு தொழிலுமுடைய மக்கள் மாட்டுப் பணிந்துகூறும் பொய்ப்புகழை ஒழிந்து நினது பொருள் சேர்ந்த புகழையே வாழ்த்தி நின்னுடைய அழகிய நீண்ட திருப்பரங் குன்றத்தினை யாமும் எம் சுற்றமும் பாடித் தொழுதேமாய் பிறவித்துன்பம் சாராத இன்பமே நிகழும் நாளைப் பெறுக என்று வேண்டிக் கொள்கின்றேம் என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும். பொய்ம்மையாளரைப் புகழாதே. எம் பெருமானாகிய நின் மெய்ப்புகழையே ஏத்திப் பாடித் தொழுகின்றோம் என்பார்,

> "பணியொரீ இ நின்புகழேத்தி
> அணிநெடுங் குன்றம் பாடுதும் தொழுதும்"

என்றார். 'நாமார்க்கும் குடியல்லோம்' எனவரும் அப்பர் அருள் மொழியும், 'பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவிர்காள்' எனவரும் நம்பி ஆரூரர் அருள் மொழியும் இங்கு நினைக்கத்தக்கன. இங்கு 'ஏமவைகல்' என்றது பிறவித்துன்பம் சாராத இன்பமே நிகழும் நன்னாளை.

> "சேவலங்கொடியோன் காப்ப
> ஏமவைகல் எய்தின்றாலுலகே"

எனவரும் குறுந்தொகைக் கடவுள் வாழ்த்துப் பகுதி இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

செவ்வேளைப் பரவிப் போற்றிய கடவுள் வாழ்த்தாக வமைந்தது, குன்றம் பூதனார் பாடிய 18ஆம் பரிபாடலாகும். நிலத்தால் தாங்கப்படும் கடற்பரப்பினுள் பரந்து சுற்றிய சூர்மாவை அழித்த வேற்படையையுடைய முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள திருப்பரங்குன்றம், முருகனைப் பயந்த இமயமலையொடு மேல்நின்றருளும் பெருமை யுடையது. வேற்படையைத் தாங்கிய செவ்வேளே! விரைந்த மயிலின்மேல் அமர்ந்துவரும் ஞாயிறு போல்பவனே! மழை முழங்கிய சிகரமும் அதன் மேல் கொடி போன்று தோன்றும் மின்னலும் நினது முகபடாம் அணிந்த பிணிமுகம் என்னும் யானையை ஒக்கும். நின் குன்றத்தின்கண் பல்வேறு

ஓவியங்கள் எழுதப் பெற்ற ற அம்பலம் காமவேளது படைக் கொட்டிலை ஒக்கும். சூர்நிறைந்த பக்கமலைகளையுடைய சோலைகளும், மேகத்தால் நீர் நிறைந்து துளும்புவனவாகிய சுனைகளும், மலர்ந்த பூக்களின் செறிவால் அழகு ததும்புபவை காமவேளின் அம்பறாத் தூணியை ஒக்கும். கார்காலம் தோற்றுவிக்கும் காந்தட் குலைகள் போரில் தோற்றுக் கட்டுண்டார் கைகளை ஒப்பன. தும்பியால் கட்டவிழ்ப்பனவாகிய அழகிய காந்தள் முகைகள் கட்டுதலையுடைய யாழ் நரம்பினது முருக்கை நெகிழ்ப்பார் கையை ஒத்தன. அழகிய மேகம் முன்பனிக் காலத்தின்கண் ஆரவாரித்து இந்திரனது வானவில்லை வளைத்தது. நினது மலைமேல் உள்ள மரங்கள் அவ்வில் சொரியும் கணைகளைப் போன்று மெல்லிய மலர்களைச் சொரிந்தன. நின் குன்றின்கண் கோட்டத்திலும் அதனைச் சூழ்ந்துள்ள இடத்திலும் மிகும் அரவம்போலத் திரளாகிய தாளம் ஒலிக்கும் ஒலியோடு சிறந்து வாத்தியங்கள் முழங்க மேகத் தொகுதியும் அவ்வாரவாரத்தோடு ஒத்து நின்றன. மலைக்கண் சிகரங்கள் அருவி ஆரவாரித்துச் சொரிதலால் முத்துக்களை அணிந்தால் ஒத்தன. குருவிகள் ஆரவாரிக்கு மாறு தினைக்கதிர்கள் விளைந்தன. கரையினின்றும் சாய்ந்தாலொத்த கொருக்கச்சியை முட்டுவனவாகிய பலநிற மலர்களால் வளையப்பட்டு அழகு பொருந்திய சுனைகள் இந்திரவில் வளைந்துள்ள வானத்தை ஒப்பனவாகி வண்டுகள் முரலும் வனப்புடைய ஆயின. செருவில் வெல்லும் வேலைத் தாங்கிய சேனையையுடைய செல்வனே! நின் பூசைக்கண் விரிதலுள்ள யாழ் நரம்பினது ஒலியும் புலவர் பாடிய இயற் பாட்டுக்களும் பொருந்தி வேதவொலியும் அருச்சிக்கும் பூவும், தீபமும் கூடி எரியின்கண் உருகும் அகிலும், சந்தனமும் ஆகிய நறும்புகை கமழாநிற்கும் நின் திருவடி யின்கண் தங்குதலை எமக்கு உரித்தாக யாம் உறையும் எம் பதியைச் சேர்ந்தாற்போல எம் சுற்றத்தோடும் கூடி யாம் பிரியாதிருப்பேமாக அருள் செய்க என வாழ்த்தி முடிப்பதாக வமைந்தது குன்றம் பூதனார் பாடிய இப்பரிபாடலாகும். இப்பாடல் திருப்பரங்குன்றத்தின் மலைவளத்தையும், இசை முதலிய கலைவளத்தையும், அம்மலைக்கண் முருகனுக்கு நிகழும் வழிபாட்டுச் சிறப்பினையும், அவ்வழிபாட்டில்

சுற்றத்தாருடன் பிரியாது கலந்து கொண்டு முருகனது திருவடிக் கீழ் உறைதலே மக்கள் அடைதற்குரிய நிலைத்த பேரின்பமாம் என்பதனையும் விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளமை மனங்கொளற் பாலதாகும்.

நப்பண்ணனார் பாடிய 19ஆம் பரிபாடல் செவ்வேளைப் பரவிப் போற்றிய கடவுள் வாழ்த்தாக வமைந்துள்ளது. . இன்பமேநுகரும் வானுலகின்கண் உரைதற்கேதுவாகிய விருப்பத்தை மண்ணுலக எல்லையிலும் கொண்டு தந்து உயிர்களின் அறிவெல்லையால் அறியப் படாத புகழுக்குரிய கடம்பமரத்தினைப் பொருந்தியிருந்து பெறுதற்கரிய இறைமைத் தன்மையால் அமர்ந்த பெரியோர்கள் நுகரும் வீடு பேற்றின்பத்தினை மண்ணுலகில் வாழும் மக்களும் எய்துக என மன்னுயிர்கட்கு எளிவந்தருள் புரியும் அருள் நோக்குடன் முருகப் பெருமான் திருப்பரங் குன்றத்தில் எழுந்தருளிய அருமையில் எளிய அழகின் திறத்தினை முன்னிலைப்படுத்துப் போற்றும் முறையில் அமைந்தது,

> "நிலவரையழுவத்தான் வானுறை புகல்தந்து
> புலவரை யறியாத புகழ்பூத்த கடம்பமர்ந்து
> அடுமுனி மரபின் ஆன்றவர் நுகர்ச்சிமன்
> இருநிலந்தோரும் இயைகென, ஈத்தநின்
> தண்பரங்குன்றத்தியலணி" (பரி. 19 : 1-5)

எனவரும் பரிபாடற் பகுதியாகும். தேவரும் அறியா முழுமுதற் பொருளாகிய முருகப் பெருமான் இருநிலத்தோர் யாவரும் தன்னை அன்பினால் வணங்கிப் பேரின்பம் நுகர்தற்பொருட்டு மண்ணுலகத்தில் திருப்பரங்குன்றம் முதலிய பதிகளிற் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ளான் என்னும் இவ்வுண்மையினை வற்புறுத்தும் நிலையில் அமைந்தது,

> "புவனியிற் போய்ப் பிறவாமையின் நாள்நாம்
> போக்கு கின்றோம் அவமே யிந்தப்பூமி
> சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
> திருப்பெருந்துறையுறைவாய் திருமாலாம்

அவன் விருப்பெய்தவும் மலரவன் ஆசைப்
படவுநின்னலர்ந்த மெய்க்கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ளவல்லாய்
ஆரமுதே பள்ளியெழுந்தருளாயே"

என வரும் திருவாதவூரடிகள் வாய்மொழியாகும்.

திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளிய முருகப் பெருமானாகிய நீ மானிட மகளாகிய அழகிய வள்ளி நாச்சியாரைத் திருமணம் புரிந்த திறம் நின்னருகேயுள்ள வானுலக மடந்தையாகிய தெய்வயானையது திருமணத் துடன் மாறு கொள்வதுபோற் காணப்படினும் யாவரும் பெறவுறும் ஈசனாகிய நினது திருவருளின் நீர்மைக்குச் சிறிதும் மாறுபட்டதன்று என்பார்,

"தண்பரங்குன்றத் தியலணி நின் மருங்கு
சாறுகொள் துறக்கத் தவளொடு
மாறுகொள்வது போலும் மயிற்கொடி வதுவை"

என முருகப் பெருமானை முன்னிலைப்படுத்துப் போற்றினார் நப்பண்ணனார். நின் மருங்கு சாறுகொள் துறக்கத் தவளொடு மயிற்கொடி வதுவை மாறுகொள்வது போலும் என இயையும். சாறு - விழா, திருமணம். துறக்கத்தவள்- வானோர்தலைவன் இந்திரன் மகளாகிய தெய்வயானை யம்மையார். மயிற்கொடி - மயில்போலும் சாயலையும் கொடிபோல் நுடங்கும் இடையினையும் உடையாளாகிய வள்ளி நாச்சியார். சங்ககாலத்தில் வள்ளி நாச்சியார் தெய்வயானையம்மையார் என்னும் தேவியர் இருவர்க்கும் நாயகனாக வைத்து முருகப் பெருமான் வழிபடப்பெற்றமை குன்றம் பூதனார் பாடிய ஒன்பதாம் பரிபாடலாலும் நப்பண்ணனார் பாடிய இப்பத்தொன்பதாம் பரிபாடலாலும் நன்கு விளங்கும்.

அறிவினாலும் வீரத்தினாலும் பிறரைப் போர் வெல்லும் கூடல் நகரத்தின் கண்ணே மகளிரும் மைந்தரும் புணர்ச்சியொடு வந்த இரவுப் பொழுது நீங்கிய வைகறைப் பொழுதிலே இவ்வுலகத்து அறத்தை நிறையச் செய்து அதன்

பயனை நுகர்தல் வேண்டி வானுலகத்துக்குச் செல்வாரைப் போலத் தமக்கேற்ற மாண்பமைந்த அணிகலன்களையும் நல்ல துகில்களையும் அணிந்துகொண்டு விரும்பிய குதிரையின்கண் அமர்ந்தும் நன்கு ஓடுதலமைந்த தேரின்மீது அமர்ந்தும் ஒளி விளக்கம் தெருவின்கண் இருளை நீக்கப் போந்து நினக்குரிய திருப்பரங்குன்றத்திற்கும் கூடல் நகரத்திற்கும் இடையேயுள்ள வழியெல்லாம் நெருங்கி நின்திருவிழாக் காண யாத்திரை செல்கின்ற குளிர்ந்த மணலார்ந்த பெருவழி, அங்ஙனம் செல்வோருடைய மாலையணிந்த தலைகள் இடைவெளியின்றி நிறைந்து காணப் படுதலால், ஒத்த பூக்களை நிறையவைத்துக் கட்டிப் பெரிய நிலவுலகிற்கு அணிந்த மாலையினைப் போன்று அமைந்துளது என்பதனை இப்பாடலில் எட்டு முதல் 18 முடியவுள்ள அடிகள் புலப்படுத்துகின்றன. அறிவினால் மாட்சிமையுடைய பாண்டியன் இளைய மயில்போலும் சாயலையுடைய மகளிரோடும் அரசியற் கடமையினை நன்குணர்ந்த தன் கண்ணெனத்தகும் அமைச்சர்களோடும் கூடி நாட்டு மக்களும், கூடல்நகர மாந்தரும் பழைய வரிசையாற் கூடித் தோட்புறத்தேயசையும் பரிவட்டத் துடனும், முருகன் புகழ் பாடிய நாவுடனும், பரந்த உவகையோடும் தன்னைச் சூழவந்து திருப்பரங்குன்றத்தின் மேலேறி முருகப் பெருமான் எழுந்தருளிய திருக்கோயிலைப் பெருமையுண்டாக வலம் வந்து போற்றும் பண்பினாற் சூழ்ந்து வருதலை உவமை கூறுங்கால் நிறைமதியுடனே ஒளியுடைய விண்மீன்கள் மேருமலையின் பக்கத்தே சூழ்வருதலையொத்துத் தோன்றும்.

மத நீரில் மொய்த்தற்கென வண்டுகள் தொடரும் கன்னத்தையுடைய யானைகளை வழியினின்றும் வாங்கிக் காலிற் சங்கிலியாற் பிணித்து மரங்களிற் கட்டுவோரும் அவற்றிற்கு முறித்த கரும்புத் துண்டங்களை உணவாகக் கொடுப்போரும் குதிரைகளை வழியினின்றும் வாங்கி ஓரத்தில் நிறுத்துவோரும் தேர்களை வழியினின்றும் ஒதுக்கி நிறுத்துவோரும் ஆக யானை குதிரை தேர்கள் பரவியுள்ள திருப்பரங்குன்றத்தின் கீழுள்ள இடைநிலம் பாண்டியனது பாசறையின் தன்மையினையுடையதாகும்.

பாண்டியனுடன் பரங்குன்றத்தை வலம் வரும் மக்கள் அம்மலையிலுள்ள குரங்குகள் உணணக்கூடிய பண்டங்களை அவற்றிற்குக் கொடுப்போரும் கரும்பினை முசுத்திரளுக்குக் கொடுப்போரும் தெய்வத்தன்மையினை யுடைய பிரம வீணையை வாசிப்போரும் கைவிரல்களை வேய்ங்குழலின் துளைகளின் வைத்து ஊதி இசையை அளப்போரும் யாழின்கண் இளி முதலிய சுரக்கோவை யையும் குரல் முதலிய சுரக் கோவையையும் வலியவும் மெலியவுமாகத் தாக்காது சமனாக வாசித்து அதன்கண் இசையின் இன்பத்தை நுகர்வோரும் அங்கு முருகப் பெருமானுக்கு நிகழும் பூசையின் அழகியல்பினைக் கூறி மகிழ்வோரும் யாழ் நரம்பின் குரல் கொம்மென ஒலித்த அளவிலே அதன் தாளத்திற்குப் பொருந்த முரசின் ஒலியை எழுப்புவோரும் ஆக மகிழ்ந்துறைவர் ஞாயிறு முதலாகவரும் கோட்களின் நிலைமையை அக் கோயிலில் வரையப் பட்டுள்ள சுடர்ச்சக்கரத்தால் ஆய்ந்தறிவோரும், தம்மைப் பிரியாமைக் குறிப்பினராகிய மகளிர் அங்கு எழுதப்பட்டுள்ள ஓவியத்தைக் கண்டு இவர் யார் என வினவ, அவள்தம் கணவர் 'இவள் இரதி, இவன் காமவேள்' எனக் கூறுவோரும் 'இங்குள்ள பூனை இந்திரன்; அவ்விடத்திலுள்ளவன் இரவில் வெளியே சென்ற கௌதமன், இவனது வெகுளியால் அகலிகையாகிய இவள் கல்லாகிய வரலாறு இது' என்று கணவன்பால் தவறு செய்த மகளிரடைந்த தண்டனையைக் கூறுவோரும் இவ்வாறு சென்றவர் கையாற் சுட்டிக் கேட்கவும் உடன் வந்தவர் அவற்றை அறிவிக்கவும் இத்தன்மையவாய பல ஓவியங்கள் நிலைபெற்ற மண்டபங் களைச் செவ்விய மூங்கில்களையும் விரிந்த பாறைகளையு முடைய அகன்ற இடத்திற் கொண்டிருந்த லால் திருமால் மருகனாகிய செவ்வேள் எழுந்தருளிய திருக்கோயிலின் பக்கம் படிமுறையான் அமைந்த பல நிலைகளையுடையது.

பேதைப் பருவப் பெண்ணொருத்தி மலைவளம் காணும் விருப்பினால் உடன் வந்த சுற்றத்தாரினின்றும் பிரிந்து அம்மலையில் வெளிப்பட்டு விளங்கும் கற்பாறை களின் இடையிடையே புகுந்து செல்பவள் தன் சுற்றத்தாரைக் காணாது 'சிறந்தவரே' எனவும் 'சிறந்தவரோ' எனவும்

கூக்குரலிட்டு அவர்களை அழைத்தாளாக அவ்வழைப் பொலியினையேற்று அங்குள்ள குகைகள் அவ்வொலி யினையே எதிரொலிக்க அது கேட்டுச் சுற்றத்தார் தன்னை யழைப்பதாகக் கருதி அங்குச் செல்பவர் தன் சுற்றத்தாரைக் காணாது மீளுமிடத்தும் மீண்டும் மீண்டும் கூவுதலை யுடையளாய் நின்றாள். இவ்வாறு அன்பரது வாழ்த்தினை உவந்து ஏற்றுக்கொள்ளும் முருகப் பெருமானது திருப்பரங்குன்றின் இடவேறுபாடு இளஞ் சிறார்க்கு அறியாமை காரணமாக மயக்கஞ் செய்தலை யுடையதாகும்.

மிக விரும்பப்படும் சாய்ந்த நுனியினையுடைய கிளையினைப் போழ்ந்து புறப்பட்ட இளந்தளிர்களை விளையாட்டு விருப்பால் மகளிர் கொய்து இனிய சுனைக் கண்ணே உதிர்த்தனர். அத்தளிர்களுள் உதிர்க்கப்பட்ட சுனையின்கண்ணே தூக்கிய தலையினையுடையனவாய் அலரையும் அரும்பினையும் பொருந்திக் கிடந்ததனை இஃது ஐந்தலையையுடைய பாம்பென்றும், அதனருகே முதிர்ந்த முகையைப் பொருந்திக் கிடந்ததனை அப்பாம்பின் மூத்தமைந்தனென்றும், இளமுகை யைப் பொருந்திக் கிடந்ததனை அப்பாம்பின் இளம்பார்ப் பென்றும் பிறழ வுணர்ந்து இளமகளிர் மருண்டு நின்றனர். அதனருகே பச்சிலையது இளங்கொழுந்து பிணியவிழ்ந்த வாயையுடைய அல்லி, கைபோற் பூத்த காந்தட்பூக்குலை கொறுக்கச்சியின் நறுந்தோட்டினையுடைய பூ, சுடர்போலும் துணர்களை யுடைய வேங்கைப்பூ, நிறம் மிகுந்த தோன்றி (செங்காந்தட்) பூ, முதிரிந்த கொத்துக்களையுடைய நறவும்பூ, காலங் குறியாது பூக்கும் கோங்கு அக்கோங்கரும்போடு நிறத்தால் மாறுபட்ட மலரையுடைய இலவம் ஆகிய இம்மலர்க ளெல்லாம் பின்னிக் கட்டிய மாலைகள் போல மலர் நிறைந்தும் கோத்த மாலைகள் போல நிறம் வேறுபட்டும் தொடுத்த மாலைகள் போல இடையிட்டும் தூக்கிக் கட்டின மாலைகள்போல நெருங்கியும் பூத்தலால் மலையெங்கும்

கலந்து தோன்றுவன விடியற் காலத்துப் பலநிறத்து மேகம்
சிதைந்த வானம் போலப் பொலிந்து தோன்றும்.

என இவ்வாறு திருப்பரங்குன்றத்தினை வழிபடவரும் பாண்டியனது தானைச் சிறப்பினையும் அவனுடன் வரும் அமைச்சர் முதலியோர் மன்னனாற் சிறப்புப் பெற்ற நாட்டவர் நகரத்தார் ஆகியோர் காணப் பரங்குன்றத்தில் முருகனுக்கு நிகழ்த்தப் பெறும் திருவிழாச்சிறப்பினையும் பூசை முறையினையும் அவற்றிற்கலந்துகொள்ளும் மக்கட் கூட்டத்தாரின் விளையாட்டு நிகிழ்ச்சிகளையும் குன்றத்தின் இயற்கை எழில் நலங்களையும் மால்மருகன் கோயிலின் செயற்கை அணிநலங்களையும் விரித்துக் கூறிய நப்பண்ணனார், பரங்குன்றத்தில் முருகப் பெருமானுக்கு நிகழும் திருவிழாவிற் கலந்துகொள்ளுதலால் இளமகளிர் பெறுதற்குரிய மனைவாழ்க்கையின் சிறப்பினை வகுத்துரைப்பதாக அமைந்தது.

"நினயானைச் சென்னி நிறங்குங்குமத்தாற்
புனையாப் பூநீருட்டிப் புனைகவரி சார்த்தாப்
பொற்பவளப் பூங்காம்பிற் பொற்குடையேற்றி
மலிவுடை யுள்ளத்தான் வந்து செய் வேள்வியுட்
பன்மணமன்று பின்னிருங் கூந்தலர்
கன்னிமை கனிந்த காலத்தார் நின்
கொடியேற்ற வாரணங் கொள் கவழமிச்சில்
மறுவற்ற மைந்தர் தோளெய்தார் மணந்தார்
முறுவற் றலையளி யெய்தார் நின்குன்றங்
குறுகிச் சிறப்புணாக்கால்" (பரி. 19. 85-94)

எனவரும் பரிபாடற் பகுதியாகும்.

"நெடுவேளாகிய இறைவனே, நீ கோயில் கொண்டெழுந்தருளிய திருப்பரங்குன்றினையடைந்து நினது கொடியை யேற்றப்படும் நின் யானையின் மத்தகத்தைக் குங்குமத்தால் அலங்கரித்துப் பூவோடு கூடிய நீரால் அதனை வழிபட்டு அதற்கு உணவினை இனிதாக ஊட்டி அதன் செவியின்கண் வெண்சாமரை சார்த்திப் பொலிவுடைய பவளத்தாற் செய்த நல்லகாம்பினையுடைய பொற்குடையை

மேலெடுத்து உள்ளத்துவகையுடன் செய்யப்படும் பூசையின்கண்ணே அவ்யானை கவளங்கொண்டு உண்டு எஞ்சிய மிச்சிலைக் கொண்டு நறுமணங்கமழும் கூந்தலை யுடைய இளமகளிர் திருவருட் சிறப்புடைய உணவாகக் கொண்டு உண்ணா தொழியின் தம் காதலர் முறுவலோடு கூடிய தலையளியை எய்தமாட்டார்கள்; கன்னிமை கனிந்த பருவ மகளிர் கல்விதறுகண் புகழ்கொடை என்னும் பெருமிதப் பண்புகளிற் குறைவற்ற மைந்தரைக் கணவராகப் பெற்று அவர்தம் தோளினைக் கூடப் பெறுவாரல்லர்" என்பது இத்தொடரின் பொருளாகும். ஆகவே பரங்குன்றத்து நிகழும் முருகப் பெருமானது கொடியேற்று விழாவில் அக்கொடியினைத் தாங்கும் யானையை வழிபட்டு அவ்வியானையுண்டு எஞ்சிய கவளமாகிய உணவினை முருகனது திருவருட் படைப்பாக ஏற்று உட்கொண்ட மகளிருள் மணமுடித்த மகளிர் தம் காதலரது முறுவலுடன் கூடிய தலையளியைப் பெற்று இன்புறுவர் என்பதும் கன்னிமைப் பருவத்தார் பெருமிதப் பண்புகளாற் குறைவற்ற மைந்தரைத் தம் கணவராகப் பெற்று மகிழ்வர் என்பதும் மேற்காட்டிய தொடராற் புலனாகும். இங்ஙனம் காதலனை மணந்து மனையறம் நிகழ்த்தும் மகளிரும் கன்னிமைப் பருவத்தினராய் நல்ல கணவரையடைய விரும்பும் இளமகளிரும் பரங்குன்றில் நிகழும் முருகப் பெருமானது வழிபாட்டிற் கலந்து கொண்டு இம்மைப் பயன்பெற்று இன்புறும் நிலையில் பரங்குன்றில் முருகவேள் வழிபாடு சிறப்புற நிகழ்ந்த செய்தியினை உள்ளவாறு விளக்கிய நப்பண்ணனார் முருகப் பெருமானை எதிர்முகமாக்கி வாழ்த்திப் போற்றுவதாக அமைந்தது,

> "குறப்பிணாக் கொடியைக் கூடியோய் வாழ்த்துச்
> சிறப்புணாக் கேட்டி செவி.
> உடையும் ஒலியலும் செய்யை மற்றாங்கே
> படையும் பவழக்கொடி நிறங்கொள்ளும்
> உருவும் உருவத்தீயொத்தி முகனும்
> விரிகதிர் முற்றா விரிசுடர் ஒத்தி
> எவ்வத் தொவ்வா மாமுதல் தடிந்து
> தெவ்வுக் குன்றத்துத் திருந்து வேலழுத்தி

அவ்வரை யுடைத்தோய் நீ, இவ்வரை மருங்கிற்
கடம்பமர் அணிநிலை பகர்ந்தேம்
உடங்கமர் ஆயமோ டேத்தினம் தொழுதே"
(பரி. 19 : 95-105)

எனவரும் இப்பரிபாடலின் நிறைவுரையாகும். "அன்புடைமையாற் குறக்குடியிற் பெண்ணாகிய வள்ளியை மணந்தோய்! அருளுடைமையால் எம்முடைய வாழ்த்தினையும் நின் செவிக்குச் சிறப்புடைய உணவாகக் கேட்டல் வேண்டும். நின் உடையும் மாலையும் செம்மை நிறமுடையவாகப் பெற்றன. அவ்வாறே நினது வேற்படையும் (பகைவர் மார்பினைப் பிளத்தலால்) பவழக் கொடியின் நிறமாகிய செந்நிறத்தைக் கொள்வதாயிற்று. திருமேனி நிறத்தாலும் சுடர் விட்டெரிகின்ற தீயினை ஒப்பாய். நின் முகமும் விரிகதிர் வெப்பமடையாத இள ஞாயிற்றை ஒத்துள்ளாய். உலகிற்குத் துன்பஞ் செய்தலால் நீதியில் தவறிய சூரனாகிய மாலின் முதலைத் தடிந்து பகைமை பொருந்திய குருகு பெயர்க்குன்றத்துத் திருந்திய வேற் படையை யழுத்தி அம்மலையினைப் பிளந்தவனே! திருப்பரங் குன்றமென்னும் இம்மலையினிடத்தே கடம்ப மரத்தின் நிழலிலே அமர்ந்தருளிய நினது நல்ல அருள் நிலையினை எம்முடன் பொருந்திய சுற்றத்தோடுங் கூடித் தொழுது வாழ்த்தினேம், எம்முடைய வாழ்த்து இது" என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும்.

திருப்பரங்குன்றத்தில் வீற்றிருந்தருளும் செவ்வேளைப் போற்றிப் பரவும் கடவுள் வாழ்த்தாக நல்லச்சுதனார் என்னும் புலவராற் பாடப்பெற்றது இருபத்தொன்றாம் பரிபாடலாகும். வென்றிக் கொடியினை யுடைய செல்வனே! நின்னால் ஊரப்பட்ட ஊர்தி சுடரினை யொத்தொளிரும் முகபடாம் அணிந்த சென்னியையுடைய பிணிமுகம் என்னும் யானையாகும். நின் திருவடியில் தொட்டது செந்தாமரையடிக்கு இயைந்த பீலிப் போழாற் புனைந்த அடையற் செருப்பாகும். நின் கையின் கண்ணது நின்னை மதியாத அவுணர் தமக்குத் துணையாக மதித்த சூரனாகிய மாமரத்தினைத் தடிந்து குருகுபெயர்க்

குன்றத்தினைப் பிளந்த வேற்படையாகும். நின்னாற் பூணப்பட்டது, சுருளுந்தலையுடைய வள்ளிப் பூவினை இடையிட்டுத் தொடுத்த கடப்பம் பூவினையுடைய தாய் ஒன்றுபட்டு மலர்ந்த மாலை. நீ அமர்ந்தருளியது, உயர்ந்தோர் நாவினாற் புகழப்பெறும் நலத்தால் நிறைந்து ஏழு நிரையாக அடுக்கிய ஏழிலைப்பாலை மரத்தினை யுடையதாய்ப் பக்க மலையாகிய இலகடத்தினையும் அருவியாகிய முகபடாத்தினையும் உடையதாய்த் தரையின் கணின்று விசும்பளவும் ஓங்கிய பரங்குன்றமாகும். இத்தகைய குன்றத்து அடியின்கண் உறைதலாகிய பேறு மறுபிறப்பினும் எமக்கு இயைவதாகுக என வேண்டி நின்னைத் தொழு கின்றோம் என முருகவேளைப் போற்றித் தொடங்கிய இப்பாடல் காதல் மகளிரும் மைந்தரும் மகிழ்ந்து விளையாடும் பரங்குன்றின் சிறப்பினை விரித்துரைத்து மாற்றாரை அமரின்கண் கொன்ற வேற்படை முதலிய படைக்கலங்களை யேந்திய பன்னிருகைகளையும்ஆறு திருமுகங்களையும் உடைய செல்வனே! அறத்தையே விரும்பிய சுற்றத்தோடு கூடிநின் அடிக்கண் உறைதல் இன்றுபோல் என்றும் எமக்கு இயைக என்று பரவுகின்றோம்" என முருகனை முன்னிலைப் படுத்தி வேண்டும் முறையில் நிறைவுபெறுகின்றது. இயலிசைப்பனுவலாகிய பரிபாடலால் திருமாலும் செவ்வேளும் ஆகிய தெய்வத்தைப் பரவிப் போற்றும் புலவர் பெருமக்கள் அனைவரும் தாம் தாம் வாழ வேண்டும் என்னும் தனி முறையிற் கடவுளை வாழ்த்தித் தத்தமக்குரிய வற்றை வேண்டிப் பெறும் தன்னலவுணர்வின்றி அன்புடைய சுற்றத்தார் அனைவரொடும் கூடி நின்று உலகம் வாழ இறைவனை இன்னிசையாற் போற்றிப் பரவும் உயர்ந்த குறிக்கோளுடையராய்த் திகழ்கின்றனர். கடைச் சங்க காலத்தில் கடவுள் வழிபாட்டிற் பாடப்பெற்ற பண் சுமந்த பாடல்களாகிய இப் பரிபாடல்களின் பொருளமைப்பினைக் கூர்ந்து நோக்குங்கால், இயற்கை வனப்பும் தெய்வ வனப்பு மாகிய இருவகை வனப்புக்களே இசைப் பாடற்குரிய பொருளாம் என்பதும் கடைச் சங்ககாலத்து மலையும் காடும் காவும் ஆற்றிடைக் குறையும் ஊர் மன்றங்களும் ஆகிய பல்வேறிடங்களிலும் வேறுவேறு பெயருடன் வேறு வேறு

உருவங்களில் வைத்து வழிபடப்பெறும் எல்லாத் தெய்வங்களும் முழுமுதற் கடவுளாகிய ஒரு பொருளின் பல்வேறு கோலங்களே யென்பதும் இவ்விடங்களில் நிகழ்த்தப்பெறும் பூசையும் திருவிழாக்களும் ஆகிய நிகழ்ச்சிகள் யாவும் உலகமக்கள் எல்லோருடைய நலங்களையும் உளத்துட் கொண்டு நிகழ்த்தப்பெறும் பொதுநலச் செயல்களே என்பதும் நன்கு புலனாதல் காணலாம்.

# சங்கவிலக்கியத்திற் சிவன் வழிபாடும் சைவசமயத் தத்துவ வுண்மைகளும்

சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள தெய்வ வழிபாடுகளில் எல்லாத் தெய்வ வழிபாடுகட்கும் தலைமை யானதாகவும் குறிஞ்சி முல்லை முதலிய நில எல்லையைக் கடந்த விரிவுடையதாகவும் விளங்கும் சிறப்புடையது சிவவழிபாடு ஒன்றேயாகும். பண்டை நாளிற் போர் மறவர்களால் வழிபடப் பெற்ற கொற்றவையாகிய வனதுர்க்கையும், தீயோரைச் சினந்தழிக்கும் காடுகிழாளாகிய காளியும், ஆருயிர்கட்கெல்லாம் அப்பனாகிய இறைவனொடு பிரிவின்றி அவனது ஒரு கூறாகியமர்ந்து அருள்சுரக்கும் அம்மையாகிய மலைமகளும் என உலகமக்களால் வழிபடப் பெறும் மூவகைத் திருமேனியும் நுதல்விழிநாட்டத் திறைவனாகிய சிவபெருமானுடன் பிரிவின்றியுள்ள சிவசத்தியே என்பது பண்டைத் தமிழர் துணிபாகும். இவ்வுண்மை,

> "வெள்ளேறு
> வலவயின் உரிய பலர்புகழ் திணிதோள்
> உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
> மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்"
>
> (திருமுருகு. 151-154)

எனத் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளை உமையொரு பாகனாகவும்,

> "நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
> ஐவருள் ஒருவன் அங்கை யேற்ப
> அறுவர் பயந்த ஆறமர் செல்வ
> ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
> மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே

வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பிற் பழையோள் குழவி"
(திருமுருகு. 253-259)

என முருகப்பெருமானை ஆலமர் செல்வனாகிய சிவ்பெருமானுக்கும் அம்முதல்வனுடைய சத்திகளாகிய உமாதேவி கொற்றவை - காடுகிழாள் (காளி) என்போர்க்கும் மகனாகவும் நக்கீரனார் பரவிப் போற்றியுள்ளமையால் நன்கு புலனாகும். ஆகவே பண்டைநாளில் தனித்தனியே வேறுவேறு திருவுருவமைத்து வழிபாடு செய்யப்பெற்ற சிவசத்திகளும் சத்தியின் மைந்தனாகவும் குறிஞ்சி நிலத்தெய்வமாகவும் வழிபடப் பெற்ற முருகவேளும் செம்பொருளாகிய சிவத்துடன் நெருங்கிய தொடர்புடைய தெய்வங்களாக மக்கள் மேற்கொண்ட தெய்வ வழிபாடுகளில் இணைக்கப்பட்டுச் சிவபரம்பொருளே முழுமுதற்கடவுள் எனக் கருதிப்போற்றும் ஒரு தெய்வ வழிபாட்டுமுறை தமிழகத்திற் சங்ககாலத்திற்குப் பன்னூ றாண்டுகட்கு முன்னரே உருவாகி நிலைபெற்று விட்டதென்பது மேற்குறித்த திருமுருகாற்றுப்படைத் தொடர்களாலும் ஏனைய சங்கச் செய்யுட்களிற் சத்தியைப் பற்றியும் முருகப் பெருமானைப் பற்றியும் ஆங்காங்கே காணப்படும் பல்வேறு குறிப்புக்களாலும் நன்கு விளங்கும்.

மாயோன், சேயோன், வேந்தன், வருணன் ஆகிய நிலத் தெய்வங்கட்கும், முல்லை நிலத் தெய்வமாகிய மாயோனது அருட்பிறப்பாகிய கண்ணன், பலதேவன் ஆகிய தெய்வங்கட்கும் மாயோனுடன் தொடர்புடைய திருமகள், நான்முகன், காமன் முதலிய தெய்வங்கட்கும், ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர் என்னும் நால்வகைப் பிரிவினராகிய முப்பத்து முக்கோடி தேவர்கட்கும் பதினெண்கணங்கட்கும் தலைமையுடைய முழுமுதற்கடவுளாகச் சிவபெருமான் சங்கச்செய்யுட்களிற் குறிக்கப்பெற்றுள்ளார்.

பத்துப்பாட்டில் ஒன்றாகிய மதுரைக் காஞ்சியைப் பாடிய மாங்குடி மருதனார் என்னும் புலவர் பெருமான்

மதுரை மாநகரில் அமைந்த (கடவுட்பள்ளியைத்) தெய்வத் திருக்கோயில்களைக் குறிப்பிடும் நிலையில் அத்திருக்கோயில் களில் எழுந்தருளியுள்ள தெய்வங்கட்கெல்லாந் தலைமை யுடைய தெய்வமாகவும் நிலம் தீ நீர் வளி விசும்பு என்னும் ஐம்பெரும் பூதங்களாலியன்ற உலகினை முதன்முதற் படைத்தருளிய முழு முதற்கடவுளாகவும் மழுவாகிய வாட்படையினையுடைய சிவபெருமானைச் சிறப்பித்துப் போற்றியுள்ளார்.

"நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்போ டைந்துட னியற்றிய
மழுவாள் நெடியோன் தலைவன் ஆக
மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்
வாடாப்பூவின் இமையாநாட்டத்து
நாற்ற வுணவின் உருகெழு பெரியோர்க்கு
மாற்றரு மரபின் உயர்பல் கொடுமார்
அந்தி விழவில் தூரியம் கறங்க" (மதுரைக். 453-460)

எனவரும் மதுரைக் காஞ்சித்தொடர், மதுரை மாநகரில் உள்ள திருக்கோயில்களின் மாலைவழிபாட்டினைக் குறிப்பதாகும். "திக்குக்களையுடைய ஆகாயத்துடனே காற்றும் நெருப்பும் நீரும் நிலமும் ஆகிய ஐம்பெரும் பூதங்களையும் சேரப்படைத்த மழுவாகிய வாட்படையினை யுடைய பெரியோன் (மகாதேவன்) ஏனையோரின் முதல்வனாகக் கொண்டு தீர்த்தமாடிய வடிவினை யுடையராய்த் தெய்வத்தன்மையாற் சூழ்ந்த ஒளியுடைய வாடாத பூக்களையும் இதழ்குவியாத கண்ணினையும் அவியாகிய உணவினையும் உடைய அச்சம் பொருந்திய மாயோன் முருகன் முதலாகிய தெய்வங்கட்கு விலக்குதற்கு அரிய முறைமையினையுடைய அந்திக் காலத்துக்கு முன்னாக எடுத்த விழாவிலே தூ ரியம் (பலவகை வாத்தியம்) ஒலிக்க" என்பது மேற்காட்டிய தொடரின் பொருள்.

மதுரை மாநகரிலே மழுப்படையினையேந்திய சிவபெருமானைத் தலைமைக் கடவுளாகக் கொண்டு மாயோன் சேயோன் முதலிய தெய்வங்கள் எழுந்தருளிய

திருக்கோயிலிலே பலவகை வாத்தியங்களும் முழங்கத் தொடங்கப் பெற்ற திருவிழாவிலே மாலைக் காலத்தில் மனைவாழ் மங்கல மகளிர் தாம் பெற்ற மழலைச் செல்வங்களாகிய குழந்தைகளோடும் தம் கணவரையும் உடனழைத்துக் கொண்டு வயதின் முதிர்ந்தோராகிய பேரிளம்பெண்டிர் கடவுட்பூசைக்கு இன்றியமையாத பூவும் நறும்புகையும் ஏந்திக்கொண்டு இறைவனைத் தொழுது போற்றிப் பாதுகாத்து உடன்வரத் திருக்கோயிலில் இறைவனை வழிபடச் சென்ற அன்பின் திறத்தினை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது,

> "திண்கதிர் மதாணி ஒண்குறு மாக்களை
> ஓம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்
> தாதணி தாமரைப் போது பிடித்தாங்குத்
> தாமும் அவரும் ஓராங்கு விளங்கக்
> காமர் கவினிய பேரிளம் பெண்டிர்
> பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்
> சிறந்து புறங் காக்குங் கடவுட் பள்ளியும்"
>
> (மதுரைக். 461-468)

எனவரும் மதுரைக் காஞ்சித் தொடராகும்.

"மகவீன்ற மகளிர் திண்ணிய ஒளியினையுடைய பதக்கம் அணிந்த ஒண்மைவாய்ந்த இளங்குழந்தைகளைத் தாது சேர்ந்த செவ்வித்தாமரைப் பூவைப் பிடித்தாற்போலத் தழுவியெடுத்துக் கொண்டு தாமும் கணவரும் தம்குழந்தைகளும் சேரச் சீலமுடையராகச் சிறந்து விளங்கப் பெரு விருப்பமும் அழகுமுடையராய்த் திகழும் செம்முது பெண்டிராகிய பேரிளம் பெண்கள் கடவுட் பூசைக்கு வேண்டும் பூவினையுடையராய் நறும்புகையினையுடையராய் இறைவனை மிகுத்துத் துதித்துப் பாதுகாத்து நடத்தும் தெய்வத் திருக்கோயில்களும்" என்பது மேற்குறித்த தொடரின் பொருளாகும்.

இத்தொடரிற் கூறப்பட்ட 'கடவுட்பள்ளி' என்பதற்கு நச்சினார்க்கினியருரையிற் 'பௌத்தப்பள்ளி' எனப் பொருள் வரையப்பெற்றுளது. "நீரும் நிலனும் தீயும்

வளியும், மாகவிசும்போடு ஐந்து உட ன் இயற்றிய மழுவாள் நெடியோன் தலைவனாக...................... உருகெழு பெரியோர்க்கு உயர்பலி தருமார் அந்திவிழாவில் தூரியம் கறங்க" என்ற தொடரில் உள்ள 'கறங்க' என்னும் செயவென் வாய்பாட்டு வினையெச்சம், 'சிறந்து புறங்காக்கும்' எனப் பின்வரும் தொடரில் அமைந்த 'புறங்காக்கும்' என்னும் பெயரெச்சத்தின் பகுதியாய்ப் 'புறங்காத்தல்' என்னும் பிற வினைமுதல் வினைகொண்டு முடியக் 'காக்கும்' என்னும் அப்பெயரெச்சம் 'கடவுட்பள்ளி' என்னும் பெயர்கொண்டு முடிந்தது, ஆகவே கடவுட் பள்ளி என்ற இத்தொடரிலுள்ள 'கடவுள்' என்றது முதற்குறித்த மழுவாள் நெடியோன் ஆகிய சிவபெருமானைத் தலைவனாகக் கொண்ட தெய்வங் களையே குறித்தல் தெளிவு. இதற்குமாறாகப் புத்தரைக் குறித்ததென்று கொள்ளுதற்குச் சிறிதும் இடமில்லை. அன்றியும் இக்கடவுட் பள்ளியையடுத்துச் சிறந்த வேதம் விளங்கப்பாடும் அந்தணர்பள்ளி கூறப்பட்டிருத்தலும் இங்குச் சிந்தித்தற்குரியதாகும். மாங்குடி மருதனார் காலத்தில் மதுரை மாநகரில் பௌத்தப்பள்ளி தனியே எடுத்துக் கூறும் முறையிற் சிறப்பிடம் பெற்றிருக்குமானால் அமணர்பள்ளியினை விதந்தெடுத்துக் கூறினாற்போன்று பௌத்தப் பள்ளியையும் தனியே விதந்து கூறியிருப்பர். அவ்வாறன்றி,

"வண்டுபடப் பழுநிய தேனார் தோற்றத்துப்
பூவும் புகையுஞ் சாவகர் பழிச்சச்
சென்ற காலமும் வரூஉம் அமயமும்
இன்றிவட் டோன்றிய வொழுக்கமொடு நன்குணர்ந்து
வானமும் நிலனும் தாமுழுதுணருஞ்
சான்ற கொள்கை சாயாயாக்கை
ஆன்றடங்கறிஞர் செறிந்தனர் நோன்மார்
கல்பொளிந்தன இட்டுவாய்க் கரண்டைப்
பல்பொறிச் சிமிலி நாற்றி நல்குவரக்
கயங்கண்டன்ன வயங்குடை நகரத்துச்
செம்பியன்றன்ன செஞ்சுவர் புனைந்து
நோக்குவிசை தவிர்ப்ப மேக்குயர்ந்த தோங்க
இறும்பூது சான்ற நறும்பூஞ் சேக்கையும்"

(மதுரைக். 475-488)

என அமண்சமயச் சான்றோர்களையும் அவர்களது விரதக் கோலத்தினையும் விரித்துக்கூறிய ஆசிரியர் "இறும்பூது சான்ற நறும்பூஞ்சேக்கை" என்பதனால் பௌத்தப் பள்ளியையும் குறிப்பாகச் சுட்டியுள்ளார் என்றே கருத வேண்டியுளது.

இனி, மதுரைக் காஞ்சியில் கடவுட்பள்ளி என்பதற்கு நச்சினார்க்கினியர் 'பௌத்தப் பள்ளி' என உரை வரைதற்குரிய காரணம் யாது என்பதும் இங்குச் சிந்தித்தற் குரியதாகும். தொல்காப்பியம், சங்கவிலக்கியம், திருக்குறள் முதலிய பழந்தமிழ்த் தொன்னூல்களில் 'பள்ளி' என்ற சொல் 'இடம்' என்ற பொதுப்பொருளிலும் துயிலுமிடம், படுக்கை, சிற்றூர், அறவோர் இருப்பிடம், கல்விபயிலும் இடம் என்ற சிறப்புப் பொருள்களிலும் பயின்று வழங்கக் காண்கின்றோம். 'அறவோர் பள்ளி' (சிலப். இந்திர. 179) எனவரும் சிலப்பதிகாரத் தொடர்க்கு 'அருகர்பள்ளி, புத்தர்பள்ளி' என அடியார்க்கு நல்லார் உரைவரைந்துள்ளார். 'அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளி' (சிலப். ஊர்காண். 11) எனவரும் சிலப்பதிகாரத்தொடர் அருகர்பள்ளி, புத்தர்பள்ளி என்னும் புறச் சமயத்தார்க்குரிய பள்ளிகள் இரண்டினையும் பொதுப்படச் சுட்டி நிற்றல் காணலாம். புத்தநோன்பிகள் வாழும் இடத்தினை 'மாதவர்பள்ளி' (மணி. 18:8) எனக் குறிப்பிடுவர் சாத்தனார். 'பள்ளி' என்னும் இச்சொல் நாயன்மார் ஆழ்வார் காலங்களில் புத்தர் சமணர் என்னும் புறச்சமயத்தார் தங்குமிடம் என்ற சிறப்புப் பொருளிலும் வழங்கப்பெறுவதாயிற்று.

"பொங்கு போதியும் பிண்டியும் உடைப்புத்தர் நோன்பியர் பள்ளியுள்ளுறை" (திவ்ய. பெரிய. 2.5) எனப் பெரிய திருமொழியிலும், "பள்ளிகள் மேலும் மாடு பயில மண் பாழிமேலும்" (பெரிய. சம்பந்தர். 682) எனப் பெரிய புராணத்திலும் இவ்வழக்கு இடம்பெற்றுள்ளமை காணலாம். முதலாம் இராசராச சோழன் ஆட்சியில் நாகப் பட்டினத்தில் கட்டப்பட்ட புத்த விகாரம் 'இராசராசப்பெரும்பள்ளி' எனப் பெயரிடப்பட்டுள்ளமை இச்சொல் வழக்கினை மேலும் வலியுறுத்துவதாகும். இவ்வாறு தம்காலத்தில்

பள்ளியென்னும் சொல் புத்தநோன்பியர் தங்கி வழிபடும் பௌத்தப் பள்ளிக்குச் சிறப்பு முறையில் வழங்குவதனையறிந்த நச்சினார்க்கினியர், மதுரைக்காஞ்சியில் சிவன் மாயோன் முதலிய தெய்வங்களுக்கு உரியதாகவமைந்த தொடருடன் இணைந்த 'கடவுட்பள்ளி' என்பதனைத் தனியே பிரித்துப் 'பௌத்தப்பள்ளி' எனப் பொருள் வரைந்தார் எனக் கருத வேண்டியுளது.

எனினும், 'பள்ளி' என்னும் சொல், தமிழ்த் தொன்னூல்களில் 'இடம்' என்ற பொதுப்பொருளிலன்றிப் 'புறச்சமயத்தார்க்குரிய இடம்' என்ற சிறப்புப் பொருளில் வழங்கப்படாமையானும், பின்னர் இயற்றப்பட்ட சிலப்பதிகாரம், மணிமேகலை என்ற காப்பியங்களிலும் 'அறவோர் வாழும் இடம்' என்ற பொதுமையின் நீங்காது புத்தர் சமணர் தங்குமிடங்களுக்குச் சிறப்பாக வழங்கப் பெற்றிருத்தலையும் நாயன்மார் ஆழ்வார் காலங்களில் பள்ளி என்னும் இச்சொல் சக்கரப்பள்ளி, மயேந்திரப்பள்ளி, அகத்தியான்பள்ளி எனச் சைவத் திருக்கோயில்களையும், பார்த்தன்பள்ளி என வைணவத் திருக்கோயிலையும் குறித்து வழங்கப்பெற்றிருத்தலையும் கூர்ந்து நோக்குங்கால், மதுரைக்காஞ்சியில் கடவுட்பள்ளி, அந்தணர்பள்ளி எனவரும் தொடர்களிலுள்ள பள்ளி என்னும் சொல் 'இடம்' என்ற பொதுப் பொருளிலேயே வழங்கப்பெற்றதென்பதும், எனவே 'கடவுட்பள்ளி' என்ற தொடர்க்குத் 'தெய்வம் உறையும் கோயில்' எனப் பொருள் கொள்வதன்றிப் 'பௌத்தப்பள்ளி' எனப் பொருளுரைத்தல் சிறிதும் பொருந்தாதென்பதும் நன்கு புலனாகும்.

மதுரைக் காஞ்சியிற் கடவுள்பள்ளியையொட்டி அந்தணர் பள்ளி குறிக்கப்பெற்றுளது. சங்ககாலத்தில் தெய்வங்கொள்கையாகிய சிவவழிபாட்டு நெறியினைச் சார்பாகக்கொண்டு வேதநெறியாகிய வைதிகம் தமிழகத்தில் வேரூன்றி நிலைபெற்ற திறத்தினைப் புலப்படுத்தும் முறையிற் கடவுட்பள்ளியையடுத்து அந்தணர் பள்ளியமைந்துள்ள இடத்தொடர்பு குறிப்பிற் புலப்படுத்தல் காணலாம். வேதம் என்பது தோற்றமில் காலமாக நிலைபெற்றுள்ள தொன்மை

வாய்ந்த நூலென்றும் அஃது ஒருவராலும் இயற்றப்படாதது (அபௌருஷேயம்) என்றும் கூறுவர் வேதவாதிகள். இக்கொள்கை,

> "கற்பங்கை, சந்தங்கால், எண்கண்,
> தெற்றெ னிருத்தஞ்செவி, சிக்கை மூக்கு,
> உற்றவியாகரணம் முகம் பெற்றுச்
> சார்பிற் றோன்று ஆரண வேதக்கு
> ஆதியந்தம் இல்லை அது நெறியெனும்
> வேதியன் உரையின் விதியுங்கேட்டு"
>
> (மணி. சமயக். 100-105)

என மணிமேகலையாசிரியர் சாத்தனார் கொண்டெடுத்து மொழியும் வேதவாதியின் உரையில் இடம் பெற்றிருத்தல் அறியத் தகுவதாகும். இத்தொடரில் 'சார்பில்தோன்றா' என்றது, நூலாசிரியர் ஒருவர் வாயிலாகத் தோன்றாத தானே தோன்றிய என்னும் பொருளில் வழங்கப் பெற்றது. எனவே ஒருவராலும் செய்யப்படாத நூல் வேதம் என்பது வேதவாதியர் கொள்கையாதல் நன்கு தெளிப்படும். 'செய்யாமொழிக்கும் திருவள்ளுவர் மொழிக்கும்' (42) எனவரும் திருவள்ளுவமாலைப் பாடலும் இதனை வலியுறுத்துவதாகும். வடநாட்டில் தோன்றிய சமண பௌத்த சமய வாதிகளால் வேத வேள்விகள் எதிர்க்கப் பட்டுச் சிதைவுறும் இழிநிலையேற்பட்டபோது, தென்னாட்டில் வாழ்ந்த வேதநெறியாளராகிய அந்தணர்கள் கடவுட் கொள்கையை உறுதியாகப் பற்றிக்கொண்டு, 'முழுமுதற் கடவுளாகிய முதல்வனால்அருளிச் செய்யப் பெற்றனவே ஆறங்கங்களால் உணர்தற்கரிய அருமறையாகிய வேதங்கள்' எனவும் உலகியல் ஒழுக்கமாகிய வேதத்தை அருளிச் செய்த இறைவனை வேதமுதல்வன் எனவும் தெளிவுபட எடுத்துக் கூறிப் புத்தம் சமணம் முதலிய புறச்சமய வாதிகளை உறழ்ந்து வாதில்வென்று, இந்நாட்டின் தொன்மைவாய்ந்த தெய்வங்கொள்கையைச் சார்பாகக் கொண்டு மன்னர்களும் மதித்து ஏற்றுக்கொள்ளும் வண்ணம் வேதவேள்விகளைச் சிறப்புடன் செய்து வைதிக நெறியினை நன்கு வளர்த்து வந்தனர். இச்செய்தி,

"நன்றாய்ந்த நீணிமிர்சடை
முதுமுதல்வன் வாய்போகாது
ஒன்றுபுரிந்த ஈரிரண்டின்
ஆறுணர்ந்த ஒரு முதுநூல்
இகல்கண்டோர் மிகல்சாய்மார்
மெய்யன்ன பொய்யுணர்ந்து
பொய்யோராது மெய்கொளீஇ
மூவேழ்துறையும் முட்டின்றுபோகிய
உரைசால் சிறப்பின் உரவோர்மருக" (புறம். 166)

எனச் சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனை ஆவூர்மூலங்கிழார் பாடிய புறப்பாடற் பகுதியால் இனிது விளங்கும்.

பெரிதும் ஆராயப்பட்ட மிக்க நீண்ட சடையினை யுடைய பழையோனாகிய இறைவனது (சிவபெருமானது) வாக்கை விட்டு நீங்காது அறம் ஒன்றையே மேவிய நான்கு பகுதிகளையுடையதாய் ஆறு அங்கங்களாலும் உணர்தற்குரிய ஒரு பழைய நூலாகிய வேதத்திற்கு மாறுபட்ட நூல்களைச் செய்தாராகிய புத்தர் முதலிய புறச் சமயத்தோரது மிகுதி யாகிய செருக்கினை அடக்குதல் வேண்டி அவரது மெய் போன்ற பொய்யினை உளப்பட்டுணர்ந்து அப்பொய்யை மெய்யென்று எண்ணாது உண்மைப்பொருளை அவர்கள் ஏற்றுக்கொள்ளும்படி செய்து, இருபத்தொரு வேள்வி களையும் குறைவின்றிச் செய்து முடித்த புகழமைந்த தலைமையையுடைய அறிவுடையோர் மரபில் உள்ளோனே" எனக் கௌணியன் விண்ணந்தாயனையும் அம்மறையோன் புத்தன் முதலிய புறச்சமயத்தாரை வாதில் வென்று அவர்களைத் தன்வழிப்படுத்தி வேதவேள்விகளைத் திறம்பெற நிகழ்த்திய அவனது சீர்த்தியையும் சிறப்பித்துப் பாராட்டும் முறையிற் பார்ப்பனவாகை என்னுந்துறையிற் பாடற்பெற்றது மேற்குறித்த புறநானூற்றுப் பாடலாகும்.

சங்க காலத்தில் வாழ்ந்த தமிழக அந்தணர்கள் சிவநெறியுடன் தொடர்புடைய வைதிக நெறியினராய் ஒழுகினர் என்பது இப்புறப்பாடலால் இனிது விளங்கும்.

இங்ஙனம் சிவநெறியும் வேதநெறியும் தம்முட் பிரிவின்றி ஒருநெறியாய் விரவி வளரும் நிலையிற் சங்க காலத்தில் வாழ்ந்த பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் விண்ணந்தாயன் தோன்றிய மரபாகிய கௌணிய கோத்திரத்தில் இற்றைக்கு ஆயிரத்து முந்நூறாண்டுகட்குமுன் காழிப்பதியில் சிவபாத விருதயர்க்கும் பகவதியார்க்கும் மகவாகத் தோன்றியவரே சைவ சமய குரவர் நால்வருள் முதலாமவராகப் போற்றப்பெறும் தமிழ் ஞான சம்பந்தர் என்பது இங்கு நினைவுகூரத் தகுவதாகும்.

முற்காலத்தில் பேரூர்கள் தோறும் இறைவனை வழிபடுதற்கும் மக்கள் பலரும் கூட்டமாகத் தங்கியிருத்தற்கும் ஏற்றவண்ணம் பொதியில் எனப்படும் அம்பலங்கள் ஊரின் நடுவே அமைக்கப் பெற்றிருந்தன. அவ்வம்பலத்தின் கண்ணே மக்கள் பலரும் அன்பினால் ஒருங்குகூடி இன்னவுரு இன்னநிறம் என்று அறியவொண்ணாத இறைவனை மலர்தூவி வழிபடுதற்குரிய முறையில் 'கந்து' எனப் பெயரிய தெய்வம் உறையும் தூணொன்று நடுவே நாட்டப்பட்டிருந்தது. அவ்வம்பலத்தின் அருகே தெய்வத்தை வழிபடுதற்கு வருவோர் நீராடித் தூய்மையுடையராகச் செல்லுதற்கு ஏற்றவாறு தீர்த்தக்குளம் அமைக்கப்பெற்றிருந்தது. போர்க்காலத்திற் பகைவரது நாட்டினின்றும் சிறைபிடித்துக் கொணரப்பட்ட மகளிர் பலரும் அங்குள்ள திருக்குளத்தில் நீராடிப் பொதியிலாகிய அம்பலத்தில் திருவலகிடுதல் மெழுகுதல் முதலிய திருப்பணிகளைச் செய்து மாலைக் காலத்திலே திருவிளக்கு ஏற்றி வழிபட்டனர். ஊர்மக்கள் அங்குக்கூடித் தெய்வம் உறையும் தூணாகிய கந்தினை மலர்தூவி வழிபாடு செய்தனர். ஊர்க்குப் புதியராய் வந்தோர் பலரும் அங்குத் தங்கியிருந்தனர். இச்செய்தி,

> "கொண்டி மகளிர் உண்துறை மூழ்கி
> அந்தி மாட்டிய நந்தா விளக்கின்
> மலரணி மெழுக்கம் ஏறிப் பலர்தொழ
> வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்"

(பட்டினப். 246-249)

எனவரும் பட்டினப்பாலையடிகளிற் குறிக்கப்பெற்றுள்ளமை கூர்ந்து நோக்கற்பாலதாகும். "பகைவர் மனைவியராய்ப் போரிற் சிறைப்பிடித்து வந்த மகளிர் பலரும் நீருண்ணுந் துறையினையுடைய குளத்திலே மூழ்கி அலகிட்டு மெழுகிய மெழுக்கத்தினையும் அந்திக் காலத்திலே கொளுத்தின அவியாத விளக்கினையும் உடையதாய் மக்கள் பலரும் சென்று மலர்தூவித் தொழுவதற்குரிய தெய்வம் உறையும் தூணினைத் தன்னகத்தேயுடையதாய்ப் புதியவர்கள் தங்குதற்கு இடமாகிய அம்பலம்" என்பது மேற்காட்டிய பட்டினப்பாலைத் தொடரின் பொருளாகும்.

கொண்டி மகளிராவார் பகைவர் மனைவியராய்ப் போரிற் சிறைப்பிடித்துக் கொணரப்பட்ட பெண்கள், பிறர்க்குரியராய அம்மகளிரை அவர்தம் கற்பியல் வாழ்வுக்கு இடர் நேராதவாறு மதித்து அவர்கள் தாம் விரும்பிய தெய்வவழிபாட்டில் உரிமையுடன் ஈடுபட்டு அமைதியாக வாழும்படி செய்த தமிழ் முன்னோரது அரசியலுணர்வும் நாகரிகப் பண்பாடும் யாவராலும் புகழ்ந்து போற்றத் தக்கனவாகும். "பொதியிலை மெழுகி விளக்கும் இட்டிருக்க வம்பமகளிரை வைத்தார். அதனால் தமக்குப் புகழுளதா மென்று கருதி" என நச்சினார்க்கினியர் தரும் உரைவிளக்கம் இக்கருத்தினை நன்கு வலியுறுத்துவதாகும்.

கந்து - தெய்வம் உறையும் தறி, தூண் இன்னஉரு இன்னநிறம் என ஒருவராலும் உணர்தற்கு அரிய கடவுளை நிலையுடைய கந்தின் (தூணின்) உருவில் நாட்டி வழிபடுதல் தமிழகத்தில் நெடுங்காலமாக நிலைபெற்றுவரும் வழிபாட்டு முறையாகும். இத்தகைய தூணின் வடிவில் அமைந்ததே சிவநெறிச் செல்வர்களால் நெடுங்காலமாக வழிபடப்பெற்று வரும் சிவலிங்கத் திருமேனியாகும். இந்நுட்பம் காஞ்சியிற் கோயில் கொண்டருளிய இறைவனுக்குக் 'கம்பன்' என வழங்கும் காரணப் பெயராலும்.

"கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே"

"மழபாடி வயிரத்தூ ணே என்றென்றே
நான் அரற்றி நைகின்றேனே"

எனவரும் அப்பர் அருள்மொழிகளாலும் சிவபெருமானுக் குரிய ஸ்தாணு என்னும் வடமொழிப் பெயர் வழக்காலும் நன்கு புலனாதல் காணலாம்.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகையாகிய சங்கச் செய்யுட்களில் சிவபெருமானைக் குறித்தனவாகப் பின்வரும் தொடர்கள் இடம் பெற்றுள்ளன :

அந்திப் பசுங்கட் கடவுள், அருந்தவமுதல்வன், ஆதிரையான், ஆதிரைமுதல்வன், ஆல்கெழுகடவுள், ஆலமர்கடவுள், ஆலமர்செல்வன், ஆனேற்றுக் கொடியோன், இமைய வில்வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன், இறை, ஈசன், எரியுமிழ்கணிச்சியோன், ஏற்றூர்தியான், ஐந்தலையுயரிய அணங்குடை அருந்திறல் மைந்துடை யொருவன், கடவுள், காரியுண்டிக் கடவுள், காலக்கடவுள், கொலைவன், கொன்றையலங்கலந்தெரியலான், சலதாரி, சீறருமுன்பினோன், செல்விடைப்பாகன், தாழ்சடைப் பொலிந்த அருந்தவத்தோன், நீர் சடைக்கரந்தோன், நீலமணிமிடற்றொருவன், நீலமேனி வாலிழைபாகத் தொருவன், புங்கவம் ஊர்வோன், புதுத்திங்கட்கண்ணியான், பெரும்பெயர்க் கணிச்சியோன், பைங்கட் பார்ப்பான், மணிமிடற்றண்ணல், மணிமிடற்றந்தணன், மணிமிடற் றெண்கையான், மணிமிடற்றோன், மழுவாள் நெடியோன், மறுமிடற்றண்ணல், முக்கட்செல்வன், முக்கணான், மூவெயில் முருக்கிய முரண்மிகுசெல்வன் எனவரும் இத்தொடர்கள், சிவபெருமானது திருமேனி வடிவினையும் வண்ணத்தினையும், அம்முதல்வனுக்குரிய ஊர்தி, கொடி, படை முதலியவற்றையும் மன்னுயிர்களைக் காத்தல் வேண்டி அவ்இறைவன் செய்தருளிய அருட் செயல்களையும் புலப்படுத்தும் முறையில் அமைந்துள்ளமை காணலாம்.

பத்துப்பாட்டுள் முதற்கண்ணதாகிய திருமுருகாற்றுப் படையுள்,

> "வெள்ளேறு
> வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
> உமையமர்ந்து விளங்கும் இமையாமுக்கண்

மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வன்" (151-154)

எனச் சிவபெருமானை நக்கீரர் போற்றிப் பரவியுள்ளார்.

"வெள்ளைநிறம் வாய்ந்த எருதினை எழுதிய கொடியினை வெற்றியுடன் உயர்த்தப் பலரும் புகழும் திணிந்த தோள்களையும் ஒருபாகத்தே உமையமர்ந்து விளங்கும் திருவுருவினையும் இதழ் குவியாத மூன்று கண்களையும் உடைய முப்புரங்களை யெரித்த வலிமை மிக்க செல்வனாகிய இறைவன்" என்பது இத்தொடரின் பொருளாகும். இடபக்கொடி சிவபெருமானுக்குரிய கொடி யென்பதும் அம்முதல்வன் மூன்று கண்களையுடையவனாய் உமாதேவியாரை ஒருபாகத்திற்கொண்டவன் என்பதும் முப்புரங்களை அழித்தவன் என்பதும் மேற்காட்டிய தொடரிற் சுட்டப்பெற்றுள்ளமை காணலாம்.

நீண்டுயர்ந்த பெரிய இமயமலையின் உச்சியிலே நீலநிறத்தையுடைய தருப்பை வளர்ந்த சரவணப் பொய்கையிலே விசும்பும் வளியும் தீயும் நீரும் நிலனுமாகிய ஐவருள் தீ தன் அகங்கையிலே ஏற்ப முனிவர் எழுவர் மனைவியருள் அருந்ததி யொழிந்த ஏனைய அறுவராலே பெறப்பட்ட ஆறுவடிவு பொருந்திய செல்வனே, கல்லாலின் கீழிருந்த கடவுளினுடைய புதல்வனே, பெருமையையுடைய மலையாகிய இமயமலையரையன்மகளாகிய உமையின் மகனே என முருகப் பெருமானைப் போற்றும் முறையில் அமைந்தது,

"நெடும் பெருஞ்சிமையத்து நீலப்பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கையேற்ப
அறுவர் பயந்த ஆறமர் செல்வ
ஆல்கெழுகடவுட் புதல்வ மால்வரை
மலைமகள் மகனே" (திருமுருகு. 253-257)

எனவரும் திருமுருகாற்றுப்படைத் தொடராகும். இதன்கண் 'ஐவருள் ஒருவன்' என்றது ஐம்பெரும்பூதங்களுள் ஒன்றாகிய தீக்கடவுளை, அவன் அங்கையேற்ப என்றது, சிவபெருமான் உமாதேவியுடன் கூடியிருந்த நிலையில் சிவபெருமானிடத்தி

னின்றும் இந்திரன் இரந்து வாங்கிக்கொண்டு தன் வச்சிரப்படையால் சிதைத்த கருவினைத் தவத்திற் சிறந்த முனிவர் எழுவரும் பெற்றுத் தமக்குத் தரிக்கவியலாமையின் இறைவன் கூறாகிய முத்தீக் குண்டத்திலே பெய்ததனைக் கூறிற்று. அறுவர் பயந்த ஆறமர் செல்வ என்றது, அவ்வாறு வேள்விக் குண்டத்திற்பெய்து சத்தி குறைந்த கருப்பத்தை அம்முனிவர் எழுவரும் தம் மனைவர்க்குக் கொடுக்க அவருள் அருந்ததி நீங்கலாகவுள்ள அறுவரும் அக்கருவினை விழுங்கிச் சூல் முதிரிந்து சரவணப்பொய்கையிற் பதுமப்பாயலிலே பெற்ற நிலையில் முருகப் பெருமான் ஆறு குழந்தை வடிவாக வளர்ந்தமை கூறிற்று. முருகப்பெருமானது தோற்றம் பற்றிய இப்புராண வரலாறு 'பாயிரும் பனிக்கடல்' எனத் தொடங்கும் ஐந்தாம் பரிபாடலில் விரித்துரைக்கப்பெற்றமை முன்னர் விளக்கப்பெற்றது. முருகவேட்டுத் தந்தையாகிய சிவபெருமான் கல்லால மரத்தின் கீழமர்ந்து முனிவர்க்கு அருமறைப் பொருளை அறிவுறுத்திய செய்தி, 'ஆல்கெழு கடவுட் புதல்வ' எனவரும் இத்திருமுருகாற்றுப்படைத் தொடராலும், 'ஆலமர் செல்வன் அணிசால்மகன்' (கலி. 83) எனவரும் கலித்தொகைத் தொடராலும் குறிக்கப் பெற்றுள்ளமை காணலாம். கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த வள்ளல் எழுவருள் ஒருவனும் வெற்றி தரும் விற்படையின்னும் யார்கண்ணும் ஆர்வ மொழியுடையவனுமாகிய ஆய் என்பான், பாம்பு ஈன்று கொடுத்த ஒளிவிளங்கும் நீலநிறத்தினையுடைய ஆடையினை ஆலின் கீழமர்ந்து அற முரைத்தருளிய நாயனாராகிய தென்முகக் கடவுள் திருமேனிக்கு நெஞ்சுமகிழ்ந்து கொடுத்தனன். இச்செய்தி,

> "நிழல்திகழ்
> நீலநாகம் நல்கிய கலிங்கம்
> ஆலமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த
> சாவம் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்
> ஆர்வ நன்மொழி ஆயும்" (சிறுபாண். 94-99)

எனவரும் சிறுபாணாற்றுப் படைத் தொடரால் இனிது விளங்கும். இதனால் சிவபெருமானுக்குரியனவாக வைத்து வழிபடப்பெறும் பல்வேறு திருவுருவங்களில் ஆலின்

கீழறமுரைத்த நாயனாராகிய தென்முகக் கடவுள் (தட்சிணாமூர்த்தி) திருவுருவம் மிகவும் தொன்மை வாய்ந்ததென்பது நன்கு புலனாம்.

> "தென்னவற் பெயரிய துன்னருந்துப்பிற்
> றொன்முது கடவுட் பின்னர் மேய
> வரைத்தா ழுருவிப் பொருப்பிற் பொருந"
>
> (மதுரைக். 40-42)

எனவரும் மதுரைக் காஞ்சித் தொடருக்கு, "இராவணனைத் தமிழ்நாட்டை ஆளாதபடி போக்கின கிட்டுதற்கு அரிய வலியினையுடைய பக்க மலையிலே விழுகின்ற அருவியினை யுடைய பொதியின் மலையிலிருக்கும் அகத்தியன் பின்னே எண்ணப்பட்டுச் சான்றோனாயிருத்தற்கு மேவின ஒப்பற்றவனே" எனப் பொருள் வரைந்த நச்சினார்க்கினியர், "இராவணன் தென்றிசையாண்டமை பற்றித் தென்னவன் என்றார், இப்பெயர் பாண்டியற்கும் கூற்றுவற்கும் ஏற்று நின்றாற்போல அகத்தியனைத் தென்றிசையுயர்ந்த நொய்ம்மை போக இறைவனுக்குச் சீரொப்ப இருந்தான் என்பது பற்றிக் கடவுள் என்றார். இராவணன் ஆளுதல் பாயிரச் சூத்திரத்து உரையாசிரியர் கூறிய உரையானும் உணர்க............... இதனால் அகத்தியனுடன் தலைச்சங்கத்துப் பாண்டியன் இருந்து தமிழாராய்ந்த சிறப்புக் கூறினார்" என விளக்கமும் வரைந்துள்ளார். இத்தொடரில் 'தென்னவன் என்றது இராவணனை' என நச்சினார்க்கினியர் விளக்கியுள்ளமை ஏற்புடையதேயாகும். எனினும் இங்குத் 'தென்னவற் பெயரிய தொன்முதுகடவுள்' என்றது, முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம் பொருளாகிய சிவபெருமானை என்பது நச்சினார்க்கினியர்க்கு முற்பட்ட பழைய உரையாசிரியர்கள் கருத்தென்பது, "கூற்றுவனை யுதைத்த கடவுள் என்று இறைவனாக்கி 'அவன் பின்னர்' என்றது அகத்தியனையென்று பொருள்கூறின், இறைவனுக்குத் தம்பியென்றல் சாலாமையானும், அப்பொருள் (தம்பியென்றபொருள்) தருங்காலத்து, முன்னவன் பின்னவன், முன்னோன் பின்னோன் என்றல்லது அச்சொல் நில்லாமையானும் அது பொருந்தாது" என

நச்சினார்க்கினியர் அவ்வுரையை மறுத்தலால் உய்த்துணரப் படும். தென்னவன் என்ற சொல் இராவணன் என்ற பொருளிலும் தென்றிசைக்கோனாகிய கூற்றுவன் என்ற பொருளிலும் ஒப்ப வழங்குதலால் தென்னவன் என்பதனை இராவணன் எனக்கொண்டு இராவணன் கயிலாயமலையைப் பெயர்த்தெடுத்த காலத்து அவனைத் தன் திருவடிப் பெருவிரலொன்றினால் அழுத்தி மலைக்கீழடர்த்தருளிய சிவபெருமான் செயலைக் குறிப்பதே 'தென்னவற் பெயரிய துன்னருந்துப்பிற் றொன்முது கட்வுள்' எனவரும் இம்மதுரைக் காஞ்சித்தொடர் எனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

> "தென்னவன் மலையெடுக்கச் சேயிழை நடுங்கக் கண்டு
> மன்னவன் விரலாலூ ன்ற மணிமுடி நெரிய வாயால்
> கன்னலின் கீதம்பாடக் கேட்டவர்" (4-43-10)

எனவரும் திருநாவுக்கரசர் வாய்மொழி இங்கு ஒப்புநோக்கி யுணரத் தகுவதாகும். தொன்முது கடவுளாகிய சிவபெருமான் வடதிசையிற் கயிலாய மலையிற் கோயில் கொண்டிருப்பது போன்று தென்றிசையிலுள்ள பொதியில் மலையிலும் எழுந்தருளியுள்ளார் என்பது,

> "பொதியில்மேய புராணனை" (4-15-10)

எனவரும் அப்பர் அருள்மொழியால் நன்கு தெளியப்படும்.

தமிழகத்து முடியுடைவேந்தராகிய சேர சோழ பாண்டியர்களுள் திங்கள் மரபினராகிய பாண்டியர் மரபில் அங்கயற்கண்ணியம்மை தோன்றினமையால் அம்மரபு அம்மையப்பனாகிய சிவபெருமானது தொடர்பு பெற்ற மரபாயிற்று என்பது திருவிளையாடற் புராண நிகழ்ச்சிகளால் உய்த்துணரப்படும். நம்பி திருவிளையாடல், பரஞ்சோதி திருவிளையாடல் முதலிய புராணங்கள் காலத்தாற் பிற்பட்டவையாயினும் அவற்றுட் கூறப்படும் இறைவன் திருவிளையாடல்கள் அறுபத்து நான்கினுள் கடல் சுவறவேல்விட்டது, இந்திரன் ஆரம்தாங்கியது, மேகத்தைச் சிறைப்படுத்தியது, இந்திரன் முடிமேல் வளையெறிந்தது

முதலிய சில திருவிளையாடல்களுக்குரிய மரபுவழிச் செய்திகள் சில சங்க இலக்கியத்திலும் சிலப்பதிகாரத்திலும் இடம் பெற்றுள்ளன என எண்ணுதற்கு இடமுண்டு.

"அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி
வடிவேலெறிந்த வான்பகை பொறாது
பஃறுளியாற்றுடன் பன்மலையடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமுங்கொண்டு
தென்றிசையாண்ட தென்னவன் வாழி
திங்கட் செல்வன் திருக்குலம் விளங்கச்
செங்கணா யிரத்தோன் திறல்விளங்கு ஆரம்
பொங்கொளி மார்பிற் பூண்டோன்வாழி
முடிவளையுடைத்தோன் முதல்வன் சென்னியென்
றிடியுடைப் பெருமழை யெய்தாதேகப்
பிழையா விளையுட் பெருவளஞ்சுரப்ப
மழை பிணித்தாண்ட மன்னவன் வாழ்கெனத்
தீதுதீர் சிறப்பிற் றென்னனை வாழ்த்தி"

(சிலப். காடுகாண். 17-29)

எனவரும் சிலப்பதிகாரத் தொடரில் திருவிளையாடற் புராணச் செய்திகள் சிலவற்றுக்குரிய மூலங்கள் இடம் பெற்றுள்ளமை காணலாம். பாண்டியர் மரபு சிவபெருமானொடு தொடர்புடையதாய்த் தெய்வநலம் பெற்றுத் திகழுந் திறத்தினைச் சேர முனிவராகிய இளங்கோவடிகள்,

"மறைமுது முதல்வன் பின்னர் மேய
பொறையுயர் பொதியிற் பொருப்பன்"

(சிலப். வேட்டுவவரி)

எனவரும் தொடரில் தெளிவாகக் குறித்துள்ளார். இத்தொடர்ப் பொருளை விளக்க வந்த அரும்பதவுரையாசிரியர், "மறைமுது முதல்வன் - மாதேவன், இவன் பின்னர் அகத்தியராகியகடவுள், பொருப்பன் - பாண்டியன்" எனப் பொருள் வரைந்துள்ளார். இங்குள்ள பின்னர் என்னும் இடப்பெயர் 'வழிமுறை' என்ற பொருளைத் தருவதன்றிப் பின்வந்தவன் என்ற பொருளில் அகத்திய முனிவரைக் குறித்தல் இயலாது. எனவே 'மறைமுது முதல்வன் பின்னர்

மேயபொருப்பன்' என்றது, "மாதேவனாகிய சிவபெருமான் அருள் மரபில் வந்த பாண்டியன்" என்ற பொருளில் வழங்கப் பெற்றதெனவே கொள்ள வேண்டியுளது. "மறைமுது முதல்வன் பின்னர் மேய பொறையுயர் பொதியிற் பொருப்பன்" எனவரும் இளங்கோவடிகள் வாய்மொழி,

"தென்னவற் பெயரிய துன்னருந்துப்பிற்
றொன்முது கடவுட் பின்னர்மேய
வரைதாழருவிப் பெருப்பிற்பொருந"
(மதுரைக் காஞ்சி 40-42)

எனவரும் மாங்குடி மருதனார் வாய்மொழியினை அடியொற்றி அமைந்திருத்தலால் 'தொன்முது கடவுள்' என மாங்குடி மருதனாராலும் 'மறைமுது முதல்வன்' என இளங்கோவடிகளாலும் குறிக்கப்பெற்றவர் சிவபெருமானே என்பதும் அம்முதல்வனது அருள்வழியமைந்தது பாண்டியர் மரபென்பதும் நன்கு துணியப்படும்.

நஞ்சுண்டுகண்டங்கறுத்தமை

உண்டவர்கட்குச் சாவாமையினையும் மூவாமையினையும் தரும் அமிழ்தத்தைப் பெறுதல் வேண்டித் தேவர்களும் அசுரர்களும் கூடிப் பாற்கடலைக் கடைந்தபொழுது உலகவுயிர்கள் நடுங்கும்படி தோன்றிய ஆலகால நஞ்சினைத் தேவர்கள் வேண்டிக்கொண்ட வண்ணம் சிவபெருமான் உட்கொண்டு புறம் போகாமல் கண்டத்தில் அடக்கிக்கொண்டு மன்னுயிர்களைக் காத்தருளினார். அதனால் காரியுண்டிக் கடவுள் என்பது அவர்க்குரிய திருப்பெயராயிற்று. காரி - கருமை நிறமுடைய நஞ்சு. நஞ்சுண்ட பெருமானாகிய அவரது மிடறு அகத்தே நஞ்சக்கறை பொருந்தியிருத்தலால் கறைமிடறு எனவும் மறுமிடறு எனவும் புறத்தே நீலமணி போலும் நிறத்தினைப் பெற்று ஒளிர்தலால் திருநீல கண்டம் எனவும் மணிமிடறு எனவும் வழங்கப் பெறுவதாயிற்று. நஞ்சுண்ட கண்டனாகிய சிவபெருமானைக் காரியுண்டிக் கடவுள், கறைமிடற் றண்ணல், நீலமணிமிடற்றொருவன், மணிமிடற்றண்ணல்,

மணிமிடற்றந்தணன், மணிமிடற்று எண்கையான் எனச் சங்க இலக்கியங்கள் பரவிப் போற்றுகின்றன. சங்ககாலத்தில் நன்னன்சேய் நன்னன் என்னும் குறுநில மன்னனது ஆட்சிக்கு உட்பட்ட நிலப்பரப்பில் அமைந்திருந்ததும் இக்காலத்தில் வடவார்க்காடு மாவட்டத்தில் திரிசூலகிரியென்னும் பெயருடன் விளங்குவதும் ஆகிய பெரும்புகழ் வாய்ந்த நவிரமலையின் உச்சியிலே காரியுண்டிக் கடவுளாகிய சிவபெருமானுக்குச் சிறப்புடைத்தாகிய திருக்கோயில் அமைக்கப்பெற்றிருந்ததென்பது,

> "பேரிசை நவிரம் மேஎயுறையும்
> காரியுண்டிக் கடவுள தியற்கையும்" (மலைபடு. 81-82)

எனப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் என்னும் புலவர் பெருமான் அத்திருக்கோயிலைச் சிறந்தெடுத்துக் கூறுதலால் இனிது விளங்கும்.

நவிரமலையிற் கோயில் கொண்டருளிய சிவபெருமான் அவனருளாலன்றி உயிர்களது அறிவால் உணர்ந்து பரவுதற்கு அரிய முறைமையினையுடைய முழுமுதற்கடவுள் என்பதனை அறிவுறுத்தும் நிலையிற் 'பராவரு மரபிற் கடவுள்' (மலைபடு. 280) என்றார். சிந்தைக்கும் மொழிக்கும் எட்டாத நிலையில் மக்களால் உணர்ந்து பரவுதற்கு அரிய முறைமையினையுடைய கடவுள் என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும்.

யாழின் நரம்போசையுடன் இயைந்து பாடுதற்குரிய இனிய குரலினையுடைய விறலியர்கள் தொன்றுதொட்டு ஒழுகும் முறைமையாகிய தம் இயல்பில் வழுவாமல் (பிறர் யாவராலும்) பொறுத்தற்கு இயலாத பேராற்றல் வாய்ந்த முழுமுதற் கடவுளை முதற்கண் வாழ்த்தின பின்னரே தாம் இசையரங்கிற் பாடுதற்குரிய புதிய இசைப் பாடல்களைப் பாடுதல் மரபு. இம்மரபு,

> "கடவ தறிந்த இன்குரல் விறலியர்
> தொன்றொழுகு மரபின் தம்மியல் வழாஅது
> அருந்திறம் கடவுட் பழிச்சிய பின்றை

விருந்திற் பாணி கழிப்பி”

(மலைபடு. 536-538)

என மலைபடுகடாத்தில் விரித்துரைக்கப்பெற்றது.

எட்டுத் தொகை நூல்களுள் ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்னும் தொகை நூல்கள் நான்கினுக்கும் அமைந்த கடவுள் வாழ்த்துப் பாடல் சிவபெருமானைப் போற்றுவனவே. இவற்றுள் கலித்தொகைக்கு அமைந்த கடவுள் வாழ்த்து நெய்தற்கலி பாடிய ஆசிரியர் நல்லந்துவனாராற் பாடப்பெற்றதாகும். ஏனைய மூன்றும் பாரதம் பாடிய பெருந்தேவனாராற் பாடப் பெற்றனவாகும். பதிற்றுப்பத்து என்னும் தொகை நூல் முன்னுள்ள முதலாம் பத்தும் இறுதியிலுள்ள பத்தாம் பத்தும் கிடைக்காமையால் அதன் முன்னுள்ள கடவுள் வாழ்த்தும் கிடைத்திலது. தொல்காப்பியம் புறத்திணையியல் 26ஆம் சூத்திரவுரையில் கடவுள் வாழ்த்துக்கு உதாரணமாக நச்சினார்க்கினியர் காட்டிய பாடல்,

“எரியெள்ளுவன்ன நிறத்தன் விரியிணர்க்
கொன்றையம் பைந்தார் அகலத்தன் பொன்றார்
எயில் எரியூட்டிய வில்லன் பயிலிருட்
காடமர்ந்தாடிய ஆடலன் நீடிப்
புறம்புதை தாழ்ந்த சடையன் குறங்கறைந்து
வெண்மணியார்க்கும் விழவினன் நுண்ணூற்
சிரந்தை யிரட்டும் விரலன் இரண்டுருவாய்
ஈரணிபெற்ற எழிற்றகையனேரும்
இளம்பிறை சேர்ந்த நுதலன் களங்கனி
மாறேற்கும் பண்பின் மணிமிடற்றன் தேறிய
சூலம் பிடித்த சுடர்ப்படைக்
காலக்கடவுட் குயர்கமா வலனே”

என்பதாகும். இது பதிற்றுப்பத்து என்னும் தொகை நூலுக்குரிய கடவுள்வாழ்த்துப் பாடலாக இருத்தல் வேண்டும் என்பது அறிஞர் சிலரது கருத்தாகும். இப் பாடலைப் பாடியவர் சங்கத்தொகை நூல்கள் பலவற்றுக்குக்

கடவுள் வாழ்த்துப் பாடிய பாரதம் பாடிய பெருந்தேவனாராக இருத்தல் கூடும் எனக்கருதுவர் சிலர். பாடியோர் யாவராயினும் இப்பாடல் சங்ககாலச் செய்யுள் நடையினை அடியொற்றியதென்பதனை அறிஞர் பலரும் உடன்படுவர் என்பதில் ஐயமில்லை.

> சுடர்விட்டொளிரும் தீயின் நிறத்தினையும் ஒவ்வாதென்று இகழ்ந்தாலொத்த செந்நிறவொளி வாய்ந்த திருமேனியை யுடையான், விரிந்த கொத்துக்களையுடைய அழகிய கொன்றை மலர்மாலையை அணிந்த மார்பினை யுடையான், உலக வுயிர்கட்கு இடர்விளைக்கும் பகைவராகிய அவுணர்கள் வாழ்ந்த முப்புரங்களையும் தீக்கு இரையாக்கிய (மேரு மலையாகிய) வில்லினை ஏந்தியவன், செறிந்த நள்ளிருளிலே சுடுகாட்டினையே அரங்காக விரும்பி ஆடும் கூத்தினை யுடையான், தொடையளவும் சார்ந்து ஒலித்து வெள்ளிய மணி ஆரவாரிக்கும் விழாவினையுடையான், நுண்ணிய கயிற்றாற் பிணிக்கப்பட்ட உடுக்கையினை இரட்டுறவொலிக்கும் விரலினையுடையான், (வலப்பக்கம் ஆணுருவும் இடப்பக்கம் பெண்ணுருவும் என) இரண்டுருவும் ஒருங்கியைந்த அம்மையப்பர் உருவுடையனாய் அவ்விரண்டுருவிற்கேற்ற இருவகையணிகளையும் பெற்ற அழகினை யுடையான், ஒத்த இளம் பிறை சேர்ந்து விளங்கும் நெற்றி யினையுடையான், களாக்கனியொடு நிறத்தால் உறழும் நீலகண்டத்தையுடையான், (மன்னுயிர்களின் மும்மலப் பிணிப்பினைக் களைவது எனத்) தெளிந்த மூவிலைச் சூலமாகிய சுடர்விட்டொளிரும் படை யினை ஏந்திய காலத்தைக் கடந்த கடவுளாகிய இறைவனுக்கு வெற்றி மேன்மேல் உயர்வதாகுக"

என்பது மேற்குறித்த கடவுள் வாழ்த்துப் பாடலின் பொருளாகும். இப்பாடல் சிவபெருமான் திருமேனியின் எழில் வண்ணத்தினையும் அம்முதல்வன் அருட்செயல் களையும் பரவிப் போற்றும் முறையில் அமைந்துள்ளமை அறியத்தகுவதாகும்.

இனி, சிவபெருமானைக் குறித்துப் பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்துப் பாடல்கள்

மூன்றினையும் தொகுத்து நோக்குவோமாக. அம் மூன்றனுள் ஐங்குறுநூற்றுக் கடவுள் வாழ்த்தாக அமைந்தது,

"நீலமேனி வாலிழை பாகத்
தொருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகையுலகும் முகிழ்த்தன முறையே"

எனவரும் பாடலாகும். "நீலநிறம் வாய்ந்த திருமேனியினையும் தூய அணிகலங்களையும் உடைய உமா தேவியாரை ஒருபாகத்திற் கொண்ட ஒப்பற்ற முதல்வனாகிய சிவபெருமானுடைய திருவடி நீழலின்கண்ணே மேல், கீழ், நடுவென்னும் மூவகையுலகங்களும் முறையே தோன்றின" என்பது இதன்பொருளாகும்.

"கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்
மார்பினஃதே மையினுண்ஞாண்
நுதல திமையா நாட்டம் இகலட்டுக்
கையது கணிச்சியொடு மழுவே மூவாய்
வேலு முண்டத் தோலா தோற்கே
ஊர்ந்ததேறே சேர்ந்தோள் உமையே
செவ்வா னன்னமேனி யவ்வான்
இலங்கு பிறையன்ன விலங்குவால் வையெயிற்
றெரியகைந் தன்ன வவிர்ந்து விளங்கு புரிசடை
முதிராத் திங்களொடு சுடருஞ்சென்னி
மூவா வமரரும் முனிவரும் பிறரும்
யாவரு மறியாத் தொன்முறை மரபின்
வரிகிளர் வயமா னுரிவை தைஇய
யாழ்கெழு மணிமிடற்றந்தணன்
தாவில் தாணிழல் தவிர்ந்தன்றால் உலகே"

என்பது அகநானூற்றுக் கடவுள் வாழ்த்தாகும்.

கார் காலத்து மலரும் கொன்றையின் பொன்போலும் பூக்களால் இயன்ற (தோளில் அணிந்த) தாரினையும் (மார்பில் அணிந்த) மாலையினையும் (முடியிற்சூடிய) கண்ணியினையும் உடையான் குற்றம் இல்லாத நுண்ணிய புரிநூல் அவன் மார்பின் கண்ணது. இமையாத கண்

(மூன்றனுள் ஒன்று) அவன் நெற்றியின் கண்ணது; குந்தாலியொடு மழுப்படை பகையினையழித்து அவன் கையின் கண் உள்ளது, யாவர்க்குந் தோலாதானாகிய அவனுக்கு முத்தலைச் சூலப்படையும் உண்டு. அவன் ஊர்தியாகக் கொண்டு செலுத்துவது ஆனேறு ஆகும். அவனைச் சேர்ந்து பிரிவின்றி விளங்கும் தேவியாவாள் உமையம்மையே, மாலைக் காலத்துச் செவ்வானத்தை யொத்து விளங்கும் அவனது திருமேனியின்கண் அத்தகைய வானிடத்தே விளங்கும் வெள்ளிய பிறையினைப் போன்று குறுக்கிட்டு விளங்கும் கூரிய பன்றிக் கொம்பினையும் தீயானது சுடர்விட்டு எரிந்தாலொத்து விளங்கும் செஞ்சடையினையும் (அத்தகைய சடைமீது அணியப்பெற்ற) மூவாத இளம்பிறையுடன் திகழும் சென்னியினையும், என்றும் முதுமையடையாத தேவர்களும் முனிவர்களும் பிறரும் ஆகிய யாவராலும் அறிய வொண்ணாத தொன்மை வாய்ந்த இறைமைத் தன்மையினையும் உடையனாய் வரிகளோடு தோன்றும் வலிய புலியின் தோலையுடுத்த, யாழிசை போலும் இனிய குரலும் நீலமணி போலும் நிறமும் ஒளியும் வாய்ந்த எவ்வுயிர்க்கும் அழகிய தண்ணளியைப் புரிவோனாகிய சிவபெருமானது வருத்தமில்லாத வலிய திருவடி நிழலின் கண்ணே இவ்வுலகம் தங்கியுள்ளது" என்பது இப்பாடலின் பொருளாகும்.

> **"இசை திரிந் திசைப்பினும் இயையுமன் பொருளே**
> **அசை திரிந் திசையா என்மனார் புலவர்"**
>
> **(தொல். பொருளியல் 1)**

எனவரும் தொல்காப்பியச் சூத்திரவுரையில், "சொல்லொடு சொல் தொடர்வுபடும் வாய்பாட்டால் தொடராது பிறிதோர் வாய்பாட்டால் தொடுப்பினும் பொருட்டொடர்பு உண்டாயின் பொருள் இயையும். அவ்வழி அசைச்சொற்கள் திரியாது நின்ற நிலையே பொருள்படும்" என்பதற்கு இப்பாடலை உதாரணமாகக் காட்டுவர் இளம்பூரணர்.

இதற்குக் "கொன்றையாலமைந்த தாரினனாய் மாலையனாய்க் கண்ணியனாய் நுண்ஞாண் மார்பினனாய் இமையா நாட்டத்து நுதலினனாய்க் கணிச்சியும் மழுவும்

மூவாய்வேலும் ஏந்திய கையினனாய் யாவர்க்குந் தோலா தோனுமாய் ஏற்றினையும் ஊர்ந்து உமையாளையுஞ்சேர்ந்து செவ்வான் அன்ன மேனியையும் பிறைபோன்ற எயிற்றினையும் எரி போன்ற சடையினையும் திங்களொடு சுடருஞ்சென்னியையும் உடையனாய் மூவா அமரர் முதலிய யாவரும் அறியாத்தொன்முறை மரபினனாய்ப் புலியதளையும் உடுத்த யாழ்கெழு மணிமிடற்று அந்தணனது சிவானுபூதியிற் பேருலகம் தங்கிற்று" எனப் பொருள் உரைத்தார் இளம்பூரணர்.

யாழ்கெழு மணிமிடற்று அந்தணனாகிய சிவபெருமானது திருவடித் துணையே மன்னுயிர்கட்குப் பிறவியாகிய வெப்பத்தினை நீக்கி வீடுபோறாகிய தண்ணிழலைத் தந்தருளும் என்பது தோன்றத் 'தாள்நிழல்' என்றார். தவிர்ந்தன்று தங்கியது தாள்நிழல் என்பதற்குச் சிவானுபூபதி எனவும் உலகு என்றது உயர்ந்தோராகிய சிவஞானிகளைக் குறிக்கும் என்பது தோன்றப் பேருலகம் எனவும் இளம்பூரணர் உரைவரைந்துள்ளார். இவரது உரை விளக்கம், நலம் புரிகொள்கைப்புலம் பிரிந்துறையும் செலவு (திருமுருகு. 63) எனவரும் திருமுருகாற்றுப்படைத் தொடரையும் இறைவன் திருவடியே மன்னுயிர்கட்கு வீடுபேறாயிருக்கும் என்ற கருத்தமையத் 'தென்னன் பெருந்துறையான் . . . . . . தாட்டாமரை காட்டித் தன் கருணைத் தேன்காட்டி (திருவாசகம், திருவம்மானை) என வரும் திருவாசகத் தொடரையும் நினைவு கூரும் முறையில் அமைந்துள்ளமை இங்கு மனங்கொளத் தகுவதாகும்.

"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பில் தாரும் கொன்றை
ஊர்திவால் வெள்ளேறே சிறந்த
சீர்கெழு கொடியும் அவ்வேறென்ப
கறைமிடறணியலும் அணிந்தன்று, அக்கறை
மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே
பெண்ணுரு வொருதிறனாகின்று, அவ்வுருத்
தன்னுளடக்கிக் கரக்கினும் கரக்கும்
பிறை நுதல்வண்ணமாகின்று, அப்பிறை

பதினெண் கணனும் எத்தவும்படுமே
எல்லாவுயிர்க்கும் ஏமமாகிய
நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோற்கே"

என்பது புறநானூற்றுக் கடவுள் வாழ்த்தாகும். எவ்வகைப் பட்ட உயிர்களுக்கும் காவலாகிய நீர்தொலைவறியாக் குண்டிகையாலும் தாழ்ந்த திருச்சடையாலும் பொலிவு பெற்றுத் தோன்றும் செய்தற்கு அரிய தவத்தையுடையோ னாகிய இறைவனுக்கு "திருமுடிமேற் சூடப்படுங்கண்ணி கார்காலத்து மலரும் நறிய கொன்றைப்பூ, அழகிய நிறத்தையுடைய திருமார்பின் மாலையும் அக்கொன்றைப்பூ; ஏறப்படுவது தூயவெளிய ஆனேறு, மிக்க பெருமை பொருந்திய கொடியும் அவ் ஆனேறென்று சொல்லுவர், நஞ்சினது கறுப்பு திருமிடற்றை அழகு செய்தலுஞ் செய்தது, அக்கறுப்பு, தான் மறுவாயிருந்தும் தேவர்களை உய்யக் கொண்டமையால் வேதத்தைப் பயிலும் அந்தணர்களாற் புகழவும் படும். பெண் வடிவு ஒருபக்கம் (இடப்பக்கம்) ஆயிற்று, ஆகிய அவ்வடிவுதான் (ஊழிக்காலத்தில்) தன்னுள்ளே ஒடுக்கி மறைக்கினும் மறைக்கப்படும், பிறையானது திருநுதலுக்கு அழகாகியது. அப்பிறைதான் பெரியோன் சூடுதலால் பதினெண் கணங்களாலும் புகழவும் படும் என்பது இதன் பொருள். 'தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்' என்பதற்கு, ஒரு பாலாய அப்பெண் வடிவுதான் உலகம் எல்லாம் ஒடுங்கிய ஊழிக்காலத்தில் இறைவன் வடிவினுள்ளே ஒடுக்கி மறைக்கினும் மறைக்கப்படும் எனப்பொருள் கொண்ட பழைய வுரையாசிரியர் 'தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்' என்பதற்கு இறைவனது ஒரு கூற்றில் தோன்றும் அப்பெண் வடிவுதான் எல்லாப் பொருளையும் தன்னுள்ளேயடக்கி அவ்விறைவன் கூற்றிலே மறையினும் மறையும்' என்று உரைப்பினும் அமையும் என்று மீண்டும் கூறிய பொருள் மிகவும் பொருத்தமுடையதாகும். 'எல்லா வுயிர்க்கும் ஏமமாகிய அருந்தவத்தோன்' எனச் சிவபெருமானைக் கூறுதலால் எல்லாவுயிர்கட்கும் சார்பாயுள்ளவன் செம்பொருளாகிய அவ்விறைவனே என்பது நன்கு புலனாதல்

காணலாம்.

சிவபெருமானைப் போற்றிப் பெருந்தேவனார் பாடிய, மேற்குறித்த கடவுள் வாழ்த்துப் பாடல்கள் மூன்றிலும் இறைவனாகிய சிவபெருமான் ஒருவனே ஆணும் பெண்ணும் என இருவடிவினையும் ஒருங்கே பெற்றுப் பிரிவின்றி விளங்கும் திறமும் அவனது திருவடியினை ஆதாரமாகக் கொண்டு உலகம் தோன்றி நிலைபெற்று ஒடுங்கும் முறையும் கொன்றை மலர் மாலை அம்முதல்வனுக்குரிய அடையாள மாலையாதலும் அந்தணனாகிய அவன் மார்பில் நுண்ணூல் திகழ்தலும் நெற்றிக் கண்ணினையுடைய அம்முதல்வன் கணிச்சி, மழு. மூவாய்வேல் ஆகிய படைக்கலங்களை யேந்தியுள்ளமையும் சிவபெருமான் வெள்ளைநிறம் வாய்ந்த ஆனேறாகிய இடபத்தினை ஊர்தியாகவும் கொடியாகவும் கொண்டுள்ளமையும் செம்மேனியம்மானாகிய அவன் தன் சடையில் பிறைத்திங்களையணிந்துள்ளமையும் நஞ்சக் கறை பொருந்திய திருநீலகண்டத்தையுடையனாதலும் புலித்தோலை உடையாகவுடுத்துள்ளமையும் நீர்குறைத லறியாத குண்டிகையைத் தாங்கிய அரிய தவக்கோலத்தினை யுடைய அம்முதல்வன் எல்லாவுயிர்கட்கும் பாதுகாவலாய் விளங்கும் அருளின் திறமும் விரித்துரைக்கப் பெற்றுள்ளமை காணலாம். இங்ஙனம் உலகம் தோன்றி நின்று ஒடுங்குதற்கும் மன்னுயிர்கள் துன்பந்தவிர்ந்து 'இன்பமே எந்நாளுந் துன்பமில்லை' என அமைதியான பேரின்ப வாழ்வைப் பெறுதற்கும் காரணமாகிய இறைவன் திருவடிகள் மனமொழி மெய்களால் வணங்குவார்க்கு அறம்பொருள் இன்பம் வீடு என்னும் நான்கினையும் பயக்கும் என்பது இக்கடவுள் வாழ்த்துப் பாடல்கள் கருத்தாகும்.

உமையொருபாகன்

உலகுயிர்களை இயக்கியருளும் ஒப்பற்ற பேரறிவுப் பொருளாகிய முழுமுதற் பொருள் ஒன்றே என்பது தமிழ் முன்னோர் கொள்கையாகும். 'ஒருவனே தேவனும்' எனவரும் திருமூலர் வாய்மொழியும், 'ஒருவன் என்னும் ஒருவன் காண்க' (திருவாசகம்) எனவரும் திருவாதவூரடிகள்

வாய்மொழியும் தமிழரது ஒரு தெய்வக்கோட்பாட்டினை நன்கு வலியுறுத்துதல் இங்கு நினைக்கத் தகுவதாகும். காண்டற்கரிய கடவுளாகிய அவ்வொருபொருளே, உலகுயிர்களில் தோய்வின்றித் தானே திகழொளியாய்த் தனித்து நிற்கும் நிலையிற் 'சிவம்' எனவும், அதுவே உலகெலாமாகிவேறாய் உடனுமாய் இவ்வாறு மன்னுயிர் களின் பொருட்டு அருளாய் விரிந்து உலகுயிர்களுடன் இரண்டறக் கலந்து நின்று உயிர்களை உய்வித்தருளும் நிலையிற் 'சத்தி' எனவும் இருநிலையில் வைத்துப் போற்றப் பெறுகின்றது. உலகப் பொருளை விளக்கும் ஞாயிறு ஒன்றே தன்னிலையில் தனித்து விளங்குந்திறத்திற் கதிரவன் எனவும் உலகப் பொருள்கள் தோறும் இரண்டறக் கலந்து நிற்குந் திறத்திற் 'கதிர்' எனவும் இருதிறமாகப் பிரித்துப் பேசப்படுதல் போன்று முழுமுதற் பொருள் ஒன்றுதானே தனித்து நிற்குந் தன்னிலையிற் சிவம் எனவும், உலகுயிர்களுடன் விரவி நிற்கும் நிலையிற் சத்தி எனவும் இருதிறமாகப் பகுத்துப் பேசப்படுவதாயிற்று.

இவ்வாறு தனிமுதற் பொருளாகிய ஒன்றையே சத்தியும் சிவனும் என இரு நிலைமையதாக வைத்து எண்ணிப் போற்றுதல் நம் நாட்டில் தொன்றுதொட்டு நிலவிவரும் கடவுள் வழிபாட்டு மரபாகும். இத்தொன்மை மரபு, 'நீலமேனி வாலிழைபாகத்து ஒருவன்' என ஐங்குறுநூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடலிலும், 'சேர்ந்தோள் உமையே' என அகநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடலிலும் 'பெண்ணுரு வொரு திறனாகின்று அவ்வுருத் தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்' எனப் புறநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடலிலும் இடம் பெற்றுள்ளமை காணலாம். இம்மரபினை யடியொற்றியதே திருக்குறள் கடவுள் வாழ்த்தில் வரும் 'ஆதிபகவன்' என்னும் திருப்பெயராகும். உயிர்ப் பொருள் உயிரல் பொருள் ஆகிய எவ்வகைப் பொருள்களிலும் நீக்கமறக் கலந்தும் அவற்றின் தன்மை தனக்கு எய்தலின்றி அப்பாற்பட்டு விளங்கும் இறைவன் சத்தியுஞ்சிவமுமாய்ப் பிரிவற நின்றே உலகினைப் படைத்துக் காத்து ஒடுக்கியருள் புரிகின்றான் என்பது 'நீல மேனிவாலிழை பாகத்து ஒருவன் இருதாள் நிழற்கீழ் மூவகையுலகும் முறையே முகிழ்த்தன'

என உலகத் தோற்றத்தைப் பற்றியும், 'யாழ்கெழு மணிமிடற்று அந்தணன், தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே' என உலகின்நிலை பேறுபற்றியும், 'பெண்ணுரு வொருதிற னாகின்ற அவ்வுருத் தன்னுள் அடக்கிக் கரக்கினும்' என உலகின் ஒடுக்கம் பற்றியும் பெருந்தேவனார் குறிப்பிடுதலால் இனிது விளங்கும்.

தனிமுதலாகிய இறைவன், தனது ஒருமையில் சத்தியும் சிவமும் என இருமைத் தன்மையனாய் அம்மை யப்பராகத் தோன்றி உயிர்கட்கு அருள்புரியுந்தொன்மைத் திருக்கோலத்தின் இயல்பினை இறையருளால் உணரப்பெற்ற செம்புலச் செல்வராகிய திருவாதவூரடிகள், 'அம்மையே அப்பா ஒப்பிலாமணியே' என அகங்குழைந்து போற்றிய துடன் தாம் கண்ட தெய்வக்காட்சியை ஏனையோரும் உணர்ந்து போற்றுதல் வேண்டும் என்னும் பெருவேட்கை யுடன்,

> **"தோலுந் துகிலும் குழையுஞ் சுருள்தோடும்**
> **பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்**
> **சூலமுந் தொக்க வளையும் உடைத்தொன்மைக்**
> **கோலமே நோக்கிக் குளிர்ந்தூ தாய் கோத்தும்பீ"**
>
> **(திருக்கோத்தும்பி)**

எனவரும் திருப்படலிற் புனைந்து போற்றியுள்ளமையும், சீகாழிப்பதியில் பிரம தீர்த்தக்கரையில் நின்றுகொண்டு நீரில் முழுகும் தந்தையாரைக் காணாத நிலையில் திருத்தோணிச் சிகரம் பார்த்து 'அம்மே அப்பா' என அழுதருளிய கவுணியப் பிள்ளையார்க்குத் தோணிண புரத்து இறைவன் தோடுடைய செவியனாகி (அம்மையப்பராகி) விடைமேல் தோன்றிச் சிவஞானப்பால் அருத்தியருளிய திருவருட்செயலும், இவ்வாறே திருத்தொண்டத் தொகையிற் போற்றப்பெறும் அடியார் பலர்க்கும் அம்மையப்பனாக விடைமேல் தோன்றி அருள் புரிந்த நிகழ்ச்சிகளும் திருத்தொண்டர் புராணத்தில் விரித்துரைக்கப் பெற்றுள்ளமையும் இங்கு உளங்கொளத் தக்கனவாகும்.

திரிபுரம் எரித்தது

வானிடத்தே பறந்து திரியும் இயல்பினவாய்ப் பொன், வெள்ளி, இரும்பு என்பவற்றால் இயன்ற மதில்களையுடைய நகரங்கள் மூன்றில் வாழ்ந்த அவுணர்கள், தாம் வாழும் நகருடன் விசும்பிற் பறந்து தேவர் முதலியோர்க்கு இடர்விளைத்தனர். திரியும் முப்புரத்து அவுணர்களால் இடருற்று வருந்திய தேவர்கள் வேண்ட அவர்களுடைய துன்பங்களைப் போக்கத் திருவுளங் கொண்ட சிவபெருமான், பூமியைத் தேராகவும், வேதங்களைத் தேரிற்பூட்டும் குதிரைகளாகவும், நான்முகனைத் தேர்ப்பாகனாகவும், இமயமலையை வில்லாகவும், வாசுகியென்னும் பாம்பினை வில்லின் நாணாகவும், காற்று, தீ, திருமால் ஆகியோரை ஓர் அம்பாகவும் கொண்டு திரியும் முப்புரங்களையும் தம் புன் சிரிப்பினால் எரித்தருளினார் எனப் புராணம் கூறும், இப்புராணச்செய்தி,

> "ஆதியந்தணன் அறிந்து பரிகொளுவ
> வேதமாபூண் வையத்தேர் ஊர்ந்து
> நாகம் நாணா மலை வில்லாக
> மூவகை, ஆரெயில் ஓர் அழல் அம்பின் முளிய
> மாதிரம் அழல எய்து, அமரர் வேள்விப்
> பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான்" (பரி. 5. 22-27)

என ஐந்தாம் பரிபாடலில் விரித்துரைக்கப்பெற்றது.

"நான்முகனாகிய பாகன் தேரைச் செலுத்தும் நெறியறிந்து செலுத்த, வேதங்களாகிய குதிரை பூண்ட தேரையேறி, வாசுகியென்னும் பாம்பு நாணாகவும் இமயமலை வில்லாகவும் கொண்டு பொன், வெள்ளி, இரும்பு என்னும் மூவகைப்பட்ட அழித்தற்கரிய மதில்களைத் தீயாகிய ஓர் அம்பினாலே வெந்து நீறாகத் திசைகள் வெதும்ப எய்து அழித்து அமரர்க்குச் செய்யும் வேள்விக் கண்ணே அவிப்பாகத்தையுண்ட பசிய இடப்பாகத்தையுடைய ஈசன்" என்பது மேற்குறித்த பரிபாடற் பகுதியின் பொருள். திரிபுரம் எரித்த இச்செய்தி,

"ஓங்குமலைப் பெருவிற் பாம்புநாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்
பெருவிறல் அமரர்க்கு வென்றிதந்த
கறைமிடற் றண்ணல்" (புறநானூறு 55)

எனப் புறநானூற்றிற் கூறப்பெற்றது. உயர்ந்த மலையாகிய பெரிய வில்லைப் பாம்பாகிய நாணைக்கொளுவி, ஒப்பில்லாததோர் அம்பை வாங்கி மூன்று மதிலையும் எய்து பெரிய வலியையுடைய தேவர்க்கு வெற்றியைக் கொடுத்த கரிய திருமிடற்றையுடைய இறைவன் என்பது இப்புறப் பாடற்பகுதியின் பொருளாகும்.

"தேறுநீர் சடைக்கரந்து திரிபுரந் தீமடுத்து"

எனக் கலித்தொகைக் கடவுள் வாழ்த்திலும்,

"அயந்திகழ் நறுங்கொன்றையலங் கலந்தெரியலான்
இயங்கு எயில் எ(ய்)யப் பிறந்த எரிபோல எவ்வாயுங்
கனைகதிர்தெறுதலின்" (கலித்தொகை 150)

என நெய்தற் கலியிலும் இச்செய்தி குறிக்கப் பெற்றுள்ளமை காணலாம். பாலை நிலத்தில் கதிரவன் தெறுதலால் மூங்கில் ஒன்றோடொன்று உராய்தலாற்றோன்றி விசும்பளவும் ஓங்கிப் பரந்தெரியுந் தீயினுக்கு, இறைவன் திரிபுரத்தை எய்கையி னாலே தோன்றி முழங்கும் வெம்மையையுடைய பெருந்தீ இங்கு உவமையாகக் கூறப்பட்டது.

கதிரவன் வெப்பத்தால் மலைகள் பிளந்து சிதர்ந்து கிடக்கும் நிலைக்கு, முக்கட் பெருமானாகிய சிவபெரு மானது சினத்தால் முப்புரங்களும் நீறாகிச் சிதர்ந்து வீழ்ந்த நிகழ்ச்சியினை உவமையாக எடுத்துக் காட்டும் முறையில் அமைந்தது,

"தொடங்கற்கண் தோன்றிய முதியவன் முதலாக
அடங்காதார் மிடல்சாய அமரர் வந்திரத்தலின்
கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலும்
உடன்றக்கால் முகம்போல ஒண்கதிர் தெறுதலின்
சீறருங் கணிச்சியோன் சினவலின் அவ்வெயில்

ஏறுபெற் றுதிர்வனபோல் வரைபிளந்து, இயங்குநர்
ஆறுகெட விலங்கிய அழலவிர் வெஞ்சுரம்"        (கலித். 1)

எனவரும் பாலைக்கலியாகும்.

'இறைவன் உலகுகளைப் படைக்கக் கருதிய இடத்தே அப்படைத்தற்றொழிலைச் செய்தற்கு உரியனாய்த் தோன்றிய முதியவனாகிய பிரமன் முதலாகவுள்ள தேவர்கள் வந்து இரந்து வேண்டிக் கொண்டமையாலே, தமக்குரிய எல்லையளவில் அடங்கி நடவாத அவுணருடைய வலிமையைக் கெடுத்தற்கு கூற்றுவனைப் போன்று சினந்து, வஞ்சனையாளராகிய அவ்வவுணரை வஞ்சியாது எதிர்நின்று கொல்லும் வலியுடனே மூன்று கண்களையுடைய சிவபெருமான் முப்புரங்களையும் வெகுண்டுநோக்க, அவ்விறைவனுடைய முகம் பகைவரைத் தேறுமாறுபோல ஒளிதங்கிய கதிரவன் சுடுகையினாலே மலைகள் பிளவுபட்டுப் பிறராற் சீறுதற்கரிய மழுப்படையினையுடைய அம்முதல்வன் வெகுளுதலால் முப்புரங்களும் அழித்தலைப் பெற்றுப் பொடியாய் உதிர்வனபோல, வழிபோவார்க்கு வழி யில்லாதபடி வீழ்ந்து குறுக்கிட்டுக் கிடந்த வெம்மை விளங்கும் அரிய வழியிடத்தே" என்பது மேற்காட்டிய பாலைக்கலியின் பொருளாகும். இதன்கண் கதிரவனது வெப்பத்தால் வானுறவுயர்ந்த மலைகள் பிளந்து பொடியாய்ச் சிதர்ந்து கீழே கிடக்கும் தோற்றத்திற்கு, விசும்பிலே திரியும் இயல்பினவாகிய முப்புரங்களும் முக்கண்ணனாகிய இறைவனது வெகுளியாற் சுடப்பட்டுப் பொடியாகிச் சிதர்ந்து வீழ்ந்து கிடக்கும் தோற்றத்தினைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்னும் புலவர் பெருமான் உவமையாக எடுத்துக்காட்டி விளக்கியுள்ளமை இப்புராணச் செய்தியின் தொன்மையைப் புலப்படுத்துவதாகும்.

தனக்கு மேலாகத் தொழப்படுந் தெய்வமில்லாத சிறப்பினையுடைய முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் திரிபுரத்தை எரித்த காலத்து இமயமலையாகிய வில்லின் நாணாக அமைந்து புகழப்படும் தொல்புகழைத் தந்தது வாசுகியென்னும் பாம்பே என்பது,

"பணிவில் சீர்
செல்விடைப் பாகன் திரிபுரஞ் செற்றுழிக்
கல்லுயர் சென்னி இமயவில் நாணாகித்
தொல்புகழ் தந்தாரும் தாம்" (பரிபாடல் திரட்டு 1)

எனவரும் பரிபாடற் பகுதியால் இனிது விளங்கும்.

**கங்கையைச் சடையிற் கரந்தது**

பகீரதன் என்பான் தன்குலத்து இறந்த முன்னோர்கள் நற்கதி பெறுதல் வேண்டிக் கடுந்தவம் புரிந்து கொணர்ந்த ஆகாய கங்கையானது, நிலவுலகு தாங்காத பெருவெள்ள மாய்ப் பெருக்கெடுத்து வந்த காலத்துச் சிவபெருமான் அப்பெருவெள்ளத்தைத் தமது செஞ்சடையிற் கரந்தருளி னார் எனப் புராணம் கூறும். இச்செய்தி,

"எரிமலர்த் தாமரையிறை வீழ்த்த பெருவாரி
தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி
மணிமிடற்றண்ணல்" (பரி. 9. 4-7)

எனவரும் பரிபாடலிற் குறிக்கப்பெற்றது. "அயனால் வீழ்த்தப்பட்ட ஆகாய கங்கையை மலர்ந்து விழும் பூவை யொப்ப வேகந்தணியச் சடைப்பாரத்தின்கண் தாங்கிய ஒப்பில்லாத நிலைமையையுடைய சலதாரியாகிய மணிமிடற் றண்ணல்" என்பது இத்தொடரின் பொருளாகும். சலதாரி (கங்கை நதியாகிய) சலத்தைத் தரிக்கும் இயல்புடையவன்.

"இமயவில் வாங்கிய ஈர்ஞ்சடையந்தணன்" (குறிஞ்சிக் கலி 1) எனக் கபிலரும், "பிறங்குநீர் சடைக் கரந்தான்" (நெய்தற்கலி 33) என நல்லந்துவனாரும் சிவபெருமான் கங்கையைச் சடையில் தரித்துள்ள அருட்செயலைக் குறிப்பிட்டுப் போற்றியுள்ளமை இங்கு நினைக்கத்தகுவ தாகும்.

**கூற்றுவனை உதைத்தது**

சிவபெருமான் தன்னை அன்புடன் பூசனை புரிந்த

அந்தணாளன் ஆகிய மார்க்கண்டேயரது உயிரைக் கவர வந்த கூற்றுவனையுதைத்து மார்க்கண்டேயனாரைச் சாவாது மூவாதிருக்கும்படி உய்வித்தருளினார் என்பது நெடுங்கால மாக நம்நாட்டில் வழங்கி வரும் புராணச் செய்தியாகும்.

காற்றென விரைந்த கரிய எருதினை அதன்வன்மை கெடத்தழுவி நின்ற ஆயனது அழகிய பெருமிதத் தோற்றத் திற்கு, எருமையேற்றினை ஊர்ந்து வந்த கூற்றுவனது மார்பினைக் காலின் விளிம்பிலே தாக்கி யுதைத்து உயிர்கவர்ந்த சிவபெருமானது தோற்றப் பொலிவினை உவமையாகக் கூறும் முறையில் அமைந்தது,

> "காற்றுப் போல்வந்த காழ்விடைக் காரியை
> யூற்றுக் களத்தே யடங்கக்கொண் டட்டதன்
> மேற்றொன்றி நின்ற பொதுவன் தகைகண்டை
> ஏற்றொருமை நெஞ்சும் வடிம்பின் இடந்திட்டுச்
> சீற்றமோ டாருயிர் கொண்டஞான்று இன்னன்கொல்
> கூற்றென வுட்கிற்றென் னெஞ்சு" (கலி. 103)

எனவரும் முல்லைக்கலியாகும்.

"காற்றின் விசைபோல ஓடிவந்த விரைந்த ஏறாகிய கரிய காளையினைப் பலரும் வந்து சேர்தற்குரிய களத்திலே வலியடங்கத்தழுவி வருத்தி அதன்மேலே தோன்றி நின்ற ஆயனாகிய வீரனது அழகைப் பாராய், ஏறாகிய எருமைக் கிடாயை ஊர்ந்த கூற்றுவனுடைய மார்பினைத் தன்காலின் விளிம்பாலே தாக்கிப் பிளந்து வீழ்த்திச் சினத்துடனே அவனது அரிய உயிரை வாங்கின அந்நாளில் இறைவன் இத்தன்மையை உடையவனாக இருப்பானோ? என என் நெஞ்சு நடுக்கமுற்றது" எனத் தோழி தலைமகளை நோக்கிக் கூறுவதாக அமைந்தது இப்பாடற் பகுதியாகும்.

சுடர் விரிந்தாற்போன்ற நெற்றிச்சுட்டியையுடைய கரிய காளையொன்று தன்னைத் தழுவிப் பிடிக்க வந்த ஆயனாகிய வீரனைக் குடர் சரியக்குத்தித் தன் கொம்பிலே கொண்டு வருத்தும் தோற்றம், பல்லுயிரும் வருத்தத்தை யணிகின்ற ஊழிமுடிவிலே பசிய நிறத்தைத் தன் இடப்பாகத்

தேயுடைய சிவபெருமான், வருத்தத்தைச் செய்த ஏறாகிய எருமையை யூர்தியாகவுடைய கூற்றுவ னுடைய மார்பைப்பிளந்து அவன் குடரைக் கூளிகளாகிய பேய்க்கு இட்டு அவற்றின் வயிற்றை நிறைவித்தாற்போலும் எனக் காலகாலனாகிய இறைவன் ஊழி முடிவிலே கூற்றுவனைக் கொன்ற செயலை உவமையாகக் காட்டும் நிலையில் அமைந்தது.

"சுடர் விரிந்தன்ன சுரிநெற்றிக் காரி
விடரியங்கண்ணிப் பொதுவனைச் சாடிக்
குடர்சொரியக் குத்திக் குலைப்பதன் தோற்றங்காண்
படரணியந்திப் பசுங்கட் கடவுள்
இடரிய ஏற்றெருமை நெஞ்சிடந்திட்டுக்
குடர் கூளிக் கார்த்துவான் போன்ம்" (கலி. 101)

எனவரும் கலித்தொகைப் பகுதியாகும். "மதிவிரிந்தாற் போன்ற சுட்டியை நெற்றியிலேயுடைய கரிய எருது முழைஞ்சினையுடைய மலையிற் பூவாற்செய்த அழகை யுடைய முடி மாலையையணிந்த ஆயனாகிய வீரனைக் காலால் துகைத்துக் குடர்சரியும்படி குத்திக் கொம்பி னிடத்தே கொண்டு குலைப்பதன் தோற்றத்தைக் காண்பாயாக, பல்லுயிரும் வருத்தத்தை அணிகின்ற ஊழிமுடிவிலே பசிய நிறத்தைத் தன் (இடப்) பாகத்தே யுடைய சிவபெருமான், வருத்தத்தைச் செய்த காளையாகிய எருமையை யூர்தியாகவுடைய கூற்றுவனது மார்பைப் பிளந்து வீழ்த்தி அவன் உயிரைப் பேய்ச்சுற்றத்திற்கு இட்டு அவற்றின் வயிற்றை நிறைவிக்கின்ற வினைபோலும்" என்பது இதன்பொருள். இங்கு எருமையென்றது எருமையை யூர்தியாகவுடைய கூற்றுவனைக் குறித்தது, ஆகுபெயர்.

பிறையணிந்தது

தக்கன் புதல்வியராகிய விண்மீன்கள் இருபத்தெழு வரையும் மணந்துகொண்ட சந்திரன், அவருள் உரோகிணி யின்பால் மட்டுமே பேரன்பு செலுத்துபவனாய் ஏனை யோரைப் புறக்கணித்து ஒழுகினான். அதனையறிந்த தக்கன்

'நீ நாளும் ஒவ்வொரு கலையினையிழந்து தேய்ந் தொழிவாயாக' எனச் சந்திரனைச் சபித்துரைத்தான். அச்சாபத்தால் கலைகளையிழந்து தேய்ந்து நலிவுற்ற சந்திரன் சிவபெருமானைச் சரணடைந்தான். அவனது இடரைப் போக்கத் திருவுளங்கொண்ட சிவபெருமான் பிறையாகிய அவன் தேயாதவாறு தனது சடையில் தரித்தருளினார் எனப் புராணம் கூறும்.

> 'முதிராத் திங்களொடு சுடருஞ்சென்னி' (அகம். கட. வா.)
>
> 'புதுத்திங்கட் கண்ணியான்' (கலித்.)
>
> 'பிறைநுதல் வண்ணமாகின்று, அப்பிறை
> பதினெண்கணனும் ஏத்தவும்படுமே' (புறம். கட. வா.)
>
> 'கொலைவன் சூடிய குழவித்திங்கள்போல்' (கலி. 103)
>
> 'எரிகதிர்க் கணிச்சியோன் சூடிய பிறை' (கலி.)

எனவரும் தொடர்கள் இறைவன் பிறையினைச் சடைக் கணிந்த தோற்றத்தைப் புலப்படுத்துவன.

## ஆலின் கீழமர்ந்து அறமுரைத்தது

சிவபெருமான், தாழ்சடைப்பொலிந்த அருந்தவக் கோலமுடையனாய் நீர்மலி கரகம் கொண்டு மோன முத்திரைக்கையினனாய் ஆலின் கீழமர்ந்து சனகர் முதலிய முனிவர் நால்வர்க்கு அறம் முதலிய நாற்பொருள்களை அறிவுறுத்தியருளினான் எனப் புராணம் கூறும். ஆலின் கீழமர்ந்து தென்திசை நோக்கி முனிவர்க்கு அறமுறைத் தருளிய திருக்கோலம் சங்கநூல்களில் 'ஆலமர்செல்வன் என்ற திருப்பெயராற் போற்றப்பெறுகின்றது.

> 'ஆல்கெழு கடவுட் புதல்வ' (திருமுருகு.)
>
> 'நீலநாகம் நல்கிய கலிங்கம்
> ஆலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த
> ஆர்வ நன்மொழி ஆயும்' (சிறுபாண்.)
>
> 'ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறல்' (கலி. 81)
>
> 'ஆலமர் செல்வன் அணிசால் மகன்' (கலி. 83)

'ஆலமர் கடவுளன்ன நின்செல்வம்' (புறம். 198)

'கடவுளாலத்துத் தடவுச் சினைப்பல்பழம்' (புறம். 199)

'சீர்மிகு சிறப்பினோன் மரமுதற்கைசேர்த்த
நீர் மலி கரகம்' (கலி.)

எனவரும் தொடர்கள் இப்பெயர் வழக்கினை வலியுறுத்துவன. இறைவனுக்கு அருளுருவம் உண்டென் பதும் குருவாக எழுந்தருளி அம்முதல்வன் உயிர்கட்கு மெய்ப்பொருளை அறிவுறுத்தியருள்வன் என்பதும் இறைவன் குருமேனி தரித்து மெய்ப்பொருளை உபதேசித்தலாலே உலகில் குருவின் வழிமுறை தொடர்ந்து நிலைபெற்று வருகின்றதென்பதும் ஆகியசைவ சமய வுண்மையினை வலியுறுத்தும் நிலையில் அமைந்தது, ஆலமர் செல்வன் திருவுருவமாகும்.

**கயிலைக்கடவுள்**

செம்மேனியம்மானாகிய சிவபெருமான் வட விமயத்து உச்சியாகிய திருக்கயிலாய மலையில் மலையரையன் மகளாகிய உமாதேவியுடன் எழுந்தருளி யுள்ளான் என்பது சைவ சமயச் சான்றோர் துணிபாகும். கடவுள் என்ற சொல் தெய்வம் என்னும் பொதுப் பொருளில் வழங்குமாயினும் எல்லாவற்றையும் இயக்குவது என்னும் அப்பெயர்க் காரணத்தை நோக்கும் வழி எல்லாம் வல்ல முழுமுதற் பொருளாகிய இறைவன் ஒருவனையே குறிப்பதாகும். "குவியிணர்ப் புல்லிலையெருக்கமாயினும் கடவுள் பேணேம் என்னா" (புறம். 106) எனவும், 'ஆல்கெழு கடவுட் புதல்வ' (திருமுருகு.) எனவும் வரும் தொடர்களில் கடவுள் என்னும் சொல் முழுமுதற் பொருளாகிய சிவபெருமானைக் குறித்து வழங்கப் பெற்றுள்ளமை காணலாம்.

"கடவுள் நிலைஇய கல்லோங்கு நெடுவரை
வடதிசையெல்லை இமயமாக" (பதிற். 43)

எனவரும் பதிற்றுப்பத்துப்பாடலில், 'கடவுள் நிலைஇய

கல்லோங்கு நெடுவரை' என்றது, சிவபெருமான் எழுந்தருளிய திருக்கயிலாய மலையினையேயெனக் கொள்ளுதல் பெரிதும் பொருத்தமுடையதாகும். 'கயிலாயத்துச்சியுள்ளான்' என அப்பரடிகளும் 'மானக் கயிலை மலையாய் போற்றி' என வாதவூரடிகளும் அருளிய வாய்மொழிகள் இங்கு ஒப்புநோக்கற் பாலனவாகும்.

### இராவணனை அடர்த்தருளியது

இலங்கை வேந்தனாகிய இராவணன், தேரூர்ந்து வடதிசையிற் செல்லுங்கால் அவனது தேர் செல்ல வொண்ணாதபடி இறைவன் எழுந்தருளிய கயிலாய மலை தடையாயிருத்தலைப் பொறாது தன்னுடைய இருபது கைகளாலும் அம்மலையைப் பெயர்த்தெடுக்க முற்பட்ட போது கயிலைப்பெருமானாகிய இறைவன் தன் திருவடிப் பெருவிரலொன்றினால் சிறிதேயழுத்த மலையிற்சிக்குண்டு அலறியழுது பின்னர் இறைவனுக்கு உவப்பாகச் சாம வேதத்தினை இசையுடன் பாடிப்போற்றினானாக அதுகண்டு உளமிரங்கிய இறைவன் அவனுக்கு முக்கோடி வாழ்நாளும் பகைவரைக் கொல்லும் கோலவாளும் கொடுத்தருளினார் என்பது, இராமாயணத்தும் புராணங்களிலும் சைவத் திருமுறைகளிலும் காணப்படும் செய்தியாகும். திருக்கயிலாயம் இறைவன் எழுந்தருளிய திருமலை என்பதனைச் சிறிதும் மதியாத இராவணன், அம்மலையினைத் தன்னுடைய கைகளால் அடியோடு பெயர்த்தெடுக்கத் தொடங்கி அம்மலைக் கீழகப்பட்டு அதனை எடுக்கலாற்றாது உழன்ற இடர்நிலையை மதயானையொன்றின் செயலுக்கு உவமையாக எடுத்துக் காட்டும் முறையில் அமைந்தது.

"இமயவில் வாங்கிய ஈர்ஞ்சடை யந்தணன்
உமையமர்ந்துயர் மலையிருந்தனனாக
ஐயிருதலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுத்தம்மலை
எடுக்கல் செல்லா துழப்பவன்போல
உறுபுலி யுருவேய்ப்பப் பூத்தவேங்கையைக்
கறுவு கொண்டதன் முதற்குத்திய மதயானை

நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய்த்தன்
கோடு புய்க்கல்லா துழக்கும்'' (கலி. 8)

எனவரும் குறிஞ்சிக் கலியாகும். "இமயமலையை வில்லாக வளைத்து முப்புரங்களையழித்த, கங்கையால் ஈரத்தை யுடையதாகிய சடையினையுடைய இறைவன், உமை யம்மையோடு உயர்ந்த கயிலாய மலையிலே அமர்ந்திருந் தானாக, அரக்கர்க்கு அரசனாகிய பத்துத் தலையையுடைய இராவணன் மலையை எடுத்தற்குக் கையைக் கீழே செருகித் தொடி (வீரவளை) பொலிவு பெற்ற அத்தடக்கையினாலே அம்மலையை எடுக்கலாற்றாது வருந்துகின்றவனைப் போல, வன்மை மிகுதியையுடைய புலியினது வடிவையொப்பப் பூத்த வேங்கை மரத்தைப் புலியென மாறுபட எண்ணி அதன் அடியிலே குத்திய மதயானை, நீண்ட மலையின் முழைஞ்சிடமெல்லாம் ஒலிக்கும்படி கூப்பிட்டு பசிய மரத்தில் அழுந்திய தன்கொம்பை மீட்டு இழுக்க முடியாமல் வருந்தும்'' என்பது இதன் பொருளாகும்.

### ஆதிரைமுதல்வன் சிவன்

திருவாதிரை நாளுக்குரிய தலைவனாகச் சிவபெருமானையும் திருவோண நாளுக்குரிய தலைவனாகத் திருமாலையும் போற்றுதல் இந்நாட்டில் தொன்றுதொட்டு வரும் வழிபாட்டு மரபாகும். இருபெருந்தெய்வத் தொடர்புடைமை பற்றியே இருபத்தேழு விண்மீன்களுள் ஆதிரை ஓணம் என்னும் இரண்டும் 'திரு' என்னும் அடைமொழி பெற்று வழங்கப்பெறுகின்றன. ஆதிரை விண்மீன்கூட்டம் ஆடவல்லானாகிய கூத்தப் பெருமானது திருவுருவினைப் போன்று விண்ணில் ஒளிர்தலால் அத்திருமேனியிற் காட்சி நல்கும் சிவபெருமானை ஆதிரை முதல்வன் எனச் சங்கநூல்களும் ஆதிரைநாயகன் எனத் திருமுறைகளும் போற்றிப் பரவுகின்றன. மதிநிறை நாளாகிய உவாநாளுடன் தொடர்புடையதாய் வருவது மார்கழித் திருவாதிரையாகும். எனவே மார்கழித் திருவாதிரை நாளில் சிவபெருமானுக்குச் சிறப்புடைய திருவிழா தொன்று தொட்டு நிகழ்த்தப்பெற்று வருகின்றது. திருநாவுக்கரசர்

காலத்தில் திருவாரூரில் திருவாதிரைத் திருவிழாச் சிறப்பாக நிகழ்ந்த திறத்தை நேரிற்கண்டு மகிழ்ந்த திருநாவுக்கரசர் அதன் சிறப்பினைத் திருஞான சம்பந்தப் பிள்ளையார்க்கு எடுத்துரைக்கும் முறையிற் பாடப்பெற்றது 'முத்துவிதான மணிப் பொற்கவரி' எனத் தொடங்கும் திருவாதிரைத் திருப்பதிகமாகும்.

## திருவாதிரைத் திருவிழாவும் அம்பா ஆடலும்

மக்களால் ஓராண்டு என வரையறுக்கப்படும் காலம் தேவர்கட்கு ஒருநாளாகும். ஆடி முதல் மார்கழி முடிய வுள்ள ஆறு திங்களும் வானோர்க்கு இரவுப்பொழுது, தை முதல் ஆனி முடிய ஆறு திங்களும் அவர்கட்குப் பகற் பொழுது. இவ்வகையில் நோக்கும்போது மார்கழித் திங்கள் வானோர்க்குரிய வைகறைப் பொழுதாகக் கருதப்படும். கூத்தப் பெருமான் திருவுருப்போன்று ஒளிரும் செம்மீனாகிய திருவாதிரையானது, நிறைமதியுடன் கூடி விளங்கும் சிறப்புடைய திருநாளாகத் திகழ்வது மார்கழித் திங்களில் ஆதலின் மார்கழித் திருவாதிரைத் திருநாள் சிவபெருமானுக்குரிய சிறப்புடைய திருவிழா நாளாகக் கொண்டாடப்பெற்று வருகிறது. இத்திருவிழாவின் சிறப்பினைப் பதினோராம் பரிபாடலில் ஆசிரியர் நல்லந்துவனார் பின்வருமாறு விரித்துக் கூறுகின்றார் :-

"கனைக்கும் அதிர்குரல் கார்வானம் நீங்கப்
பனிப்படு பைதல் விதலைப்பருவத்து
ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
மாயிருந்திங்கள் மறுநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்
புரிநூல் அந்தணர் பொலங்கலம் ஏற்ப
வெம்பாதாக வியனில வரைப்பென
அம்பா வாடலின் ஆய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப்புலர் பாடிப் பருமண லருவியின்
ஊதை யூர்தர வுறைசிறை வேதியர்
நெறிநிமிர் நுடங்கழல் பேணிய சிறப்பிற்

றையல் மகளிர் ஈரணி புலர்த்தர
வையை நினக்கு மடை வாய்த்தன்று" (பரி. 11, 74-87)

என்பது அப்பரிபாடற் பகுதியாகும்.

"மேகம் பெய்யும் பருவத்து மழைபெய்து முடித்தமையால் தனது கடுங்குரல் நீங்கப் பனிமிகுதலால் குளிரால் நடுங்குதலையுடைய முன்பனிப் பருவத்து, வெயில் கடுமையாகக் காயாத மழையின் கடைப் பகுதியாகிய மார்கழி மாதத்தில் சந்திரன் கலை முழுவதும் நிறைந்து மறுவுடன் விளங்கும் பூரணை நாளாகிய திருவாதிரை நாளின்கண் (பதி பசு பாசம் என்னும் முப்பொருளுண்மை யினையும்) விரித்துரைக்கும் நூல்களாகிய ஆகமங்களைக் கற்று வல்ல அந்தணர்கள் ஆதிரை முதல்வனாகிய சிவபெருமானுக்குத் திருவிழாவைத் தொடங்கி நிகழ்த்த, முப்புரிநூலணிந்த வேதியர்கள் மக்கள் தானமாகத் தரும் பொன்னாலாகிய அணிகலங்களை ஏற்றுமகிழ, வளையலை யணிந்தகன்னிப் பெண்கள் 'இவ்வுலகம் வெயிலாலும் பனியாலும் வெதும்பாது மழையாற் குளிர்வதாகுக' என உலகம் ஈன்ற அன்னையாகிய இறைவியை வேண்டி அம்பாவாடலாகிய நோன்பினை மேற்கொண்டு தவமுது மகளிர் அறிவுறுத்த நெறியிலே நின்று, பனிபெய்யும் விடியற் காலத்திலேயே பருமணலையுடைய வையையாற்று நீரிலே முழுகியெழுந்து, குளிர்ந்த வாடைக்காற்று வீசுதலால் வையையாற்றின் கரைக்கண் வேதியர் வளர்த்த வேள்வித் தீயைப் பேணிய சிறப்புடனே தமது ஈரவுடையினையும் புலரும்படி செய்ய, அவ்வந்தணர் தம் வேள்விக் கண்ணே தரும் அவியுணவையே உனக்குரிய திருவமுதாயிற்று" என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும்.

"மையோலை பிடித்த இளைய புலமையாளராகிய மாணவர்களது கல்விப் பயிற்சியாகிய விளையாட்டிற்கு மாறாக (எதிராக) விடியற்காலத்திலேயே துயிலெழுந்து காமக் குறிப்பில்லாத விளையாட்டினைச் செய்கின்ற ஆயத்தினராய கன்னி மகளிர் நீரின்கண் புலன்கள் அடக்கிச் செய்யுந் தவத்தினை முன்னைப் பிறப்புக்களில் அடுத்

தடுத்துச் செய்ததன் பயன்தானோ தம்தாயின் அருகே நின்று தவமாகிய தைந்நீராடல் நோன்பினை நின்கண் செய்யப்பெற்றனர்? வையையே கூறுவாயாக" என வையையாற்றை நோக்கி வினவுவதாக அமைந்தது,

> "மையாட லாடல்மழபுலவர் மாறெழுந்து
> பொய்யாட லாடும் புணர்ப்பினவரவர்
> தீயெரிப்பாலுஞ் செறிதவமுன் பற்றியோ
> தாயருகா நின்று தவத்தைந் நீராடுதல்
> நீயுரைத்தி வையை நதி" (பரி. 11 : 88-92)

எனவரும் பரிபாடற் பகுதியாகும்.

இங்கு எடுத்துக்காட்டிய பதினோராம் பரிபாடற் பகுதி மார்கழி மாதத்துத் திருவாதிரைத் திருவிழாவை யொட்டி நிகழும் மகளிர் நோன்பாகிய அம்பாவாடலின் நிகழ்ச்சியை விரித்துரைப்பதாகும். இப்பாடலில் 'குளம்' என்றது, மார்கழி மாதத்தை. திருவாதிரை நிறைமதி நாளாங்கால் ஆதித்தன் (ஞாயிறு) பூந்தடத்தின்கண் (புனர்பூசத்தின்) நிற்குமாதலின் அதனையுடைய மார்கழி மாதம் 'குளம்' எனப்பட்டது என்பர் பரிமேலழகர்.

மார்கழித் திருவாதிரையில் தொடங்கி நிகழும் மகளிர் நோர்ன்பாகிய அம்பாவாடல் தைத் திங்களில் நிறைவு பெறுதலின் தைந்நீராடல் எனவும் வழங்கப்படும். தாயருகாநின்று இளமகளிர் ஆடுதலின் அம்பா ஆடல் எனப்பட்டது. "அம்பா ஆடல் என்று தைந்நீராடற்குப் பெயராயிற்று, தாயோடு ஆடப்படுதலின்" என்பர் பரிமேலழகர். அம்பா - தாய், 'தாயருகாநின்று தவத் தைந்நீராடலின்' என்பர் நல்லந்துவனார். இத் தொடரில் 'தாய்' என்றது, உலகம் ஈன்ற தாயாகிய பராசத்தியை எனக் கொள்ளுதல் கன்னி மகளிர் பராசத்தியை வழிபட்டு நோற்கும் நீராடல் நோன்பிற்கு மிகவும் பொருத்த முடையதாகும். சிவபெருமானுக்குரிய திருவிழாவை யொட்டி உமையம்மையை வழிபட்டு நோற்கும் நீராடல் நோன்பு நிகழ்வது அம்மையப்பர் வழிபாட்டின் ஒற்றுமைத் திறத்தை நன்கு புலப்படுத்துவதாகும்.

மார்கழித் திருவாதிரை விழாவில் தொடங்கித் தைத்திங்களில் நிறைவுபெறும் மகளிர் நோன்பானது சங்க காலத்தில் தைந்நீராடல் எனவும் பிற்காலத்தில் மார்கழி நீராடல் எனவும் வழங்கப் பெற்றுள்ளது. இதனைத் திருவாதவூரடிகளாகிய மணிவாசகப் பெருமானும் திருமாலடியாராகிய நாச்சியாரும் மார்கழி நீராடல் என்றே குறிப்பிட்டுள்ளார்கள். இந்நோன்பின் நிறைவு தைத் திங்களில் முற்றுப்பெறுதல் கருதிச் சங்கச் செய்யுட்களில் தைந்நீராடல் எனவும் மார்கழித் திருவாதிரையினை யொட்டித் தொடங்குதல் பற்றி திருவெம்பாவையிலும், திருப்பாவையிலும் மார்கழி நீராடல் எனவும் வழங்கப் பெறினும் இவை இரண்டும் ஒரு நோன்பினையே குறித்த பெயர்கள் என்பது பதினோராம் பரிபாடலுக்குப் பரிமேலழகர் எழுதியவுரையால் நன்கு துணியப்படும். இந்நோன்பின்கண் கன்னிப்பெண்கள் ஈரமணலால் சத்திவடிவாகிய பாவையை அமைத்துச் செய்யும் சடங்கு உண்மைகருதி 'அம்பாவையாடல்' என்பது மருவி 'அம்பாவாடல்' எனப் பெயரெய்தியது எனக் கருதுதற்கும் இடமுண்டு.

"வையத்து வாழ்வீர்கள் நாமும் நம்பாவைக்குச
செய்யும் கிரிசைகள் கேளீரோ"

(திருப்பாவை)

"நாங்கள் நம்பாவைக்குச சாற்றி நீராடினால்"

(திருப்பாவை)

"பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம்புக்கார்"

(திருப்பாவை)

எனவரும் திருப்பாவைத் தொடர்களால் இந்நீராடல் நோன்பில் அழகிய பாவைக்குச் செய்யும் சடங்குண்மை நன்கு புலனாகும். இங்ஙனம் கன்னிப் பெண்கள் நீராடி நோன்பு நோற்றலின் நோக்கம், நாடுமலியமழை பெய்து நோயும் துன்பமும் நீங்கி இவ்வுலகம் இன்புறுதல் வேண்டும் என இறைவனது அருள்வடிவாகிய அம்மையை வழிபட்டு நலம் பெறுதலே எனபதனை,

"வெம்பாதாக வியனில வரைப்பென
அம்பாவாடலின் ஆய்தொடிக் கன்னியர்"

எனவரும் தொடரில் ஆசிரியர் நல்லந்துவனார் சிறப்பாகக் குறித்துள்ளமை காணலாம்.

## சிவநெறியும் வேதநெறியும்

விரிநூலந்தணர் திருவாதிரைக்குத் தெய்வமாகிய இறைவனுக்கு விழாவைத் தொடங்கி நிகழ்த்தினர் எனவும் அவ்விழாவில் மக்கள் தானப்பொருள்களைப் புரி நூலந்தணர் ஏற்றனர் எனவும் ஆசிரியர் நல்லந்துவனார் பதினோராம் பரிபாடலிற் குறிப்பிடுதலால் அவர் வாழ்ந்த காலமாகிய சங்க காலத் தமிழகத்தில் இருவகை யந்தணர் களும் வாழ்ந்தனர் என்பது நன்கு புலனாகும். அவ்விரு திறத்தாருள் விரிநூலந்தணர் எனப்படுவார் ஆகமங்களை யுணர்ந்த பூசகர் என்பர் பரிமேலழகர். எனவே கோயிற் பூசகராகிய சிவாசாரியரின் வேறாகக் கூறப்படும் புரிநூ லந்தணர் என்போர் வேதங்களை யோதும் வேதியர் என்பதுதானே விளங்கும். ஆகமங்கள் கடவுள் உயிர் உலகு என்னும் முப்பொருள்களின் இயல்பினை விரித்துரைக்கும் நூல்களாதலின் விரிநூல் எனப்பெற்றன. ஆகமவிதிகளை நன்குணர்ந்து திருக்கோயில்களில் சிவபெருமானுக்குப் பூசனையும் திருவிழாவும் நிகழ்த்தும் விரிநூல் அந்தணர்கள் சங்ககாலத்தில் இருந்தனர். எனவே அவர்களால் ஓதியுணரப் பட்டுக் கற்றவண்ணம் ஒழுகும் முறையினை அறிவுறுத்தும் சிவாகமங்களும் அவர் காலத்தில் தமிழகத்தில் வழங்கினமை நன்கு பெறப்படும். விரிநூலந்தணராகிய சிவநெறிச் செல்வர் தொடங்கி நிகழ்த்தும் திருவாதிரை விழாவிற் புரிநூலந்தணராகிய வேதியர்களும் கலந்து கொண்டமை கூறப்படுதலால் சங்க காலத்தில் சைவமும் வைதிகமும் ஆகிய இருவகை நெறிகளும் முறையே சிறப்பும் பொதுவுமாகக் கலந்து தமிழக மக்களாற் பேணப்பட்டு வளர்ந்தமை உய்த்துணரப்படும்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெரு

வழுதி என்னும் வேந்தர் பெருமான் சிவமுனிவர்களால் வழிபடப்பெறும் முக்கட்செல்வராகிய சிவபெருமானை வழிபடும் சிறப்புடைய சிவநெறியினை மேற்கொண்டு, நான் மறைவல்ல வைதிக முனிவர்களை ஆதரித்து அவர்களது நல்வாழ்த்துடன் உலகியலொழுக்கமாகிய வேதநெறியினை வளர்த்தனன். இச்செய்தியினை,

> "பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
> முக்கட் செல்வர் நகர் வலஞ்செயற்கே
> இறைஞ்சுக பெரும நின்சென்னி சிறந்த
> நான்மறை முனிவர் ஏந்துகையெதிரே" (புறம். 6)

என அம்மன்னனைக் காரிகிழார் என்னும் புலவர் பெருமான் உளமுவந்து வாழ்த்திய புறநானூற்றுப் பாடற்பகுதியால் நன்குணரலாம். "நினது கொற்றக்குடை முனிவராற் பரவப்படும் மூன்று திருநயனத்தையுடைய செல்வரது கோயிலை வலம் வருதற்குத் தாழ்க. பெரும நினது முடி மிக்க நான்கு வேதத்தினையுடைய அந்தணர் நின்னை நீடுவாழ்க என்று எடுத்த கையின்முன்னே வணங்குக" என்பது இவ்வடிகளின் பொருளாகும். முக்கட் பெருமான் திருக்கோயிலின்றிப் பிற இடங்களிற் பணியாத குடையினை யுடைய இப்பாண்டியன், நான்மறைவல்ல அந்தணர்களாகிய வேதியர்கள் உளமுவந்து வாழ்த்தும் வண்ணம் வேத நெறிப்படி பலவகை வேள்விகளையும் செய்து நிறை வேற்றியவன் என்பது,

> "பல்சாலை முதுகுடுமியின்
> நல்வேள்வித்துறை போகிய" (மதுரைக். 759, 760)

எனவரும் மதுரைக் காஞ்சியடிகளாலும், 'பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' என இவ்வேந்தனுக்கு வழங்கும் சிறப்புப் பெயராலும் நன்குதெளியப்படும்.

### ஆடவல்லான்

சிவபெருமான் மன்னுயிர்கள் உய்ய வேண்டி உலகங்களையெல்லாம் படைத்தும் காத்தும் ஒடுக்கியும்

ஆடவல்லகூத்தப் பெருமானாகத் திகழ்பவன் என்பதும் அவன் ஆடியருளும் கூத்தினை அவனுடன் பிரியாதிருந்து கண்டு உயிர்களுக்கு நலஞ்செய்பவள் அவனின் வேறல்லாத திருவருட் சத்தியாகிய உமையம்மையென்பதும் சைவ நூல்களின் துணிபாகும். உமையம்மை காண ஆடியருளும் இறைவனை முன்னிலையாக்கிப் பரவிப் போற்றுவதாக அமைந்தது,

(தரவு)

"ஆறறியந்தணர்க் கருமறை பலபகர்ந்து
தேறுநீர் சடைக்கரந்து திரிபுரந் தீ மடுத்துக்
கூறாமற் குறித்ததன் மேற்சொல்லுங் கடுங்கூளி
மாறாப்போர் மணிமிடற் றெண்கையாய் கேளினி,

(தாழிசை)

படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்து நீ
கொடுகொட்டி யாடுங்காற் கோடுய ரகலல்குல்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ
மண்டமர் பலகடந்து மதுகையா னீறணிந்து
பண்டரங்க மாடுங்காற் பணையெழிலணை மென்றோள
வண்டரற்றுங் கூந்தலாற் வளர்தூக்குத் தருவாளோ
கொலையுழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார் சுவற்புரளத்
தலையங்கை கொண்டு நீ காபால மாடுங்கால்
முலையணிந்த முறுவலாள் முற்பாணி தருவாளோ

(தனிச்சொல்)

எனவாங்கு,

(சுரிதகம்)

பாணியுந் தூக்குஞ் சீருமென்றிவை
மாணிழை யரிவைகாப்ப
வாணமில் பொருளெமக் கமர்ந்தனையாடி"

எனவரும் கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலாகும்.

"ஆறு அங்கங்களையும் அறியும் அந்தணர்களா[illegible]
[illegible]முனிவர்கட்கு அரியவாகிய வேதங்கள் பலவற்[illegible]

அருளிச் செய்து, தெளிந்த நீர்ப்பெருக்கையுடைய கங்கையின் வேகத்தைத் தன் சடையின் ஒரு கூற்றிலே யடக்கி, முப்புரத்திலே தீயைச்செலுத்தி, வாக்காற் கூறப் படாமல் மனத்தால் குறித்த அப்பொருட்கும் எட்டாமல் நிற்கும் கடிதாகிய கூளியினது முகுகிடாத போரினையும் நீலமணிபோலும் மிடற்றினையும் எட்டுக் கைகளையும் உடைய இறைவனே! (இப்பொழுது என் கட்புலனாகத் தோன்றி நின்று) யான் கூறுகின்றதனைக் கேட்பாயாக.

(நின்கையில்) ஒலிக்கின்ற பறை பலவாச்சியங்களை யும் ஒலியா நிற்பக் கட்புலனாய்ப் பலவடிவுகளையும் மீண்டு நின்னிடத்தே ஒடுக்கிக் கொண்டு கொடிதாகிய 'கொட்டி' என்னும் கூத்தை நீ ஆடுகின்ற காலத்துப் பக்கம் அகன்ற குறியினையுடைய கொடியினையொத்த இடையினை யுடைய உமையம்மையோ தாளத்தின் முடிந்த காலத் தினைத் தன்னிடத்தே கொண்ட 'சீர்' என்னும் தாளத்தைத் தருபவள்? (அங்கு அவளைத் தவிரப் பிறர் இல்லையே?)

மிக்குச் செல்கின்ற போர்களிற் பலவாகிய முப்புரங் களை வென்று அந்த வன்மையாலே அவ்வவுணர்கள் வெந்து வீழ்ந்த சாம்பராகிய நீற்றினை அணிதலாலே பாண்டரங்கம் என்னும் பெயர் பெற்ற கூத்தினை நீ ஆடுகின்ற காலத்து, மூங்கிலினது அழகையுடைத்தாகிய அணை போன்ற மெல்லிய தோள்களையும் வண்டுகள் ஒலிக்குங் கூந்தலையும் உடையாளாகிய பராசத்தியோ தாளத்தின் இடை நிகழுங்காலக் கூறாகிய தூக்கினைத் தருவாள்? (அவ்விடத்து அவளன்றிப் பிறரில்லையே!)

கொலைத் தொழிலையுடைய புலியைக்கொன்று அதன்தோலை உடுத்துக் கொன்றைப்பூமாலை தோளிலே கிடந்தசைய அயனுடைய தலையினை அகங்கையிலே ஏந்துதலாலே காபாலம் என்று பெயர் பெற்ற கூத்தை நீ ஆடுங்காலத்து, முல்லையரும்பினையொத்த எயிற்றினை யுடைய மலைமகளோ தாளத்தின் முதலெடுக்குங் காலத்தினையுடைய பாணியைத் தருவாள்? (அவ்விடத்து அவளன்றிப் பிறர் இல்லையே!)

என்று சொல்லும்படியாக அழித்தற்றொழிலை நிகழ்த்து கின்ற காலங்களிலே (தாளத்தின் தொடங்கும் காலமாகிய) பாணியும், (இடைநிகழுங் காலமாகிய) தூக்கும், (முடியுங் காலமாகிய) சீரும் என்று கூறப்படும் இவற்றை மாட்சிமைப் பட்ட அணிகலங்களையுடைய உமாதேவி உடனிருந்து காப்ப ஆடல்புரிந்து, காத்தற்றொழிலை நிகழ்த்துகின்ற இக்காலத்தே ஒருவடிவைக் கொண்டு தோன்றி அன்பில்லாத பொருளாகிய எங்களுக்குப் பொருந்திக் காட்சி நல்கினாய். இவ்வாறு யாவராலும் காணுதற்கு அரிய கடவுளாகிய நீ, ஆணம் (அன்பு) இல்லாத உயிர்ப்பொரு ளாகிய எமக்கு எளியனாய்த் தோன்றி யருளுதற்கு எம்மிடத்து எதனையும் எதிர்பாராத நினது பேரருளே காரணமாகும்" என்பது இக் கடவுள் வாழ்த்துப் பாடலின் பொருளாகும்.

வேதங்களை முனிவர்க்கு அருளிச்செய்தது, கங்கையைச் சடையிற்கரந்தருளியது, திரிபுரங்களை யெரித்தது, நஞ்சினையுண்டு நீலமணிமிடற்றன் ஆனது ஆகிய சிவனுடைய அருட் செயல்கள் இக்கலியின் தரவில் தொகுத்துரைக்கப்பெற்றன.

"கூறாமற் குறித்ததன் மேற்செல்லும் .................... எண்கையாய்" என்ற தொடர் இறைவனது சொரூப லக்கணம் எனப்படும் சிறப்பிலக்கணத்தினைப் புலப்படுத்தி நின்றது. "வாக்காற் கூறப்படாமல் மனத்தாற் குறித்த அப்பொருட்கும் எட்டாமல் மாற்றம் மனம் கழிய நின்ற இறைவன், அன்பினால் வழிபடுவோரது உள்ளத்தின்கண் எண் தோள்வீசி நின்று ஆடும்பிரானாகத் தோன்றி அருள்புரிகின்றான்" என்பது, இக்கலித்தொகைத் தொடரால் உணர்த்தப்படும் இறைவனது சிறப்பிலக்கண மாகும்.

இங்ஙனம் உயிர்களின் சுட்டறிவினால் ஆராய்ந்து காணுதற்கரிய தன்மையும் அன்புடையாரது நினைவி னின்றும் என்றும் நீங்காது நிலைபெறும் அருளின் நீர்மையும் இறைவனுக்குரிய சிறப்பிலக்கணமாதலைக்

'காணாமரப நீயா நினைவ' (பரிபாடல் 3) எனத் திருமாலைப் பரவிப்போற்றும் தொடரில் கடுவன் இளவெயினனார் புலப்படுத்தியுள்ளமை இங்கு நினைவு கூர்தற்குரியது.

கடவுளாகிய முழுமுதற் பொருள், மன்னுயிர்களின் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாத நிலையினதாய் இப்பொருள் போன்று எவ்வகையாலும் புலப்படாது போயினும் தனது அருளே கண்ணாகக் கொண்டு காணும் மெய்யன்புடைய அடியார்கட்கு உள்ளத்தினுள்ளே அகலாது வெளிப்பட்டுத் தோன்றி இன்னருள் சுரக்கும் உள்பொருளேயாம் என்பதனை வற்புறுத்தும் முறையில் அமைந்தது, 'மணிமிடற்று எண்கையாய்' எனவரும் தொடராகும். "இது திருமேனி கொண்டு நின்றாய் ஆயினும் வாக்குக்கும் மனத்துக்கும் எட்டாய் என்றது" என இத்தொடர்ப்பொருளை விளக்குவர் நச்சினார்க்கினியர்.

"கூறாமல் குறித்ததன் மேற்செல்லும் .................. எண்கையாய்" என்னும் இக்கலித்தொகைத் தொடரையும், "காண்டற்கரிய கடவுள் கண்டாய் கருதுவார்க் காற்ற வெளியான் கண்டாய்" எனவும், "என் புந்திவட்டத் திடைப்புக்கு நின்றானையும் பொய்யென்பனோ" எனவும், "மாற்றமனங்கழிய நின்ற மறையோனே" எனவும் வரும் திருமுறைத் தொடர்களையும் அடியொற்றிய நிலையில் சத்து, அசத்து என்பவற்றை வரையறை செய்து உணர்த்துவது,

> **"உணருரு வசத்தெனின் உணராதின்மையின்**
> **இருதிற னல்லது சிவசத்தாமென**
> **இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே"**

எனவரும் சிவஞானபோத ஆறாஞ் சூத்திரமாகும்.

"உணர் உருஎனின் அசத்து - (மேலைச்சூத்திரத்திற் கூறப்பட்ட தம்முணர்வின் தமியாகிய முழுமுதற்பொருள்) காட்சி, கருதல், உரை என்னும் அளவைகளால் அறியப்படும் இயல்பினது என்றால், அவ்வாறு நம்மால்

அறியப்படும் அப்பொருள் உலகத்துப் பொருள்கள் போல அழியுமியல்பின தாகிய அசத்து எனப்படும், உணராது எனின் - (பதிப் பொருளாகிய அது) எவ்வகையாலும் நம்மால் அறியப்படாத பொருள் என்றால் அது முயற்கோடு போல இல்பொருளாய் (சூனியமாய்) விடும், இருதிறன் அல்லது (ஆதலால்) அசத்து, சூனியம் எனப்படும் இவ்விரு பகுதியுமன்றி, இரண்டு வகையின் சிவசத்தாம் என மன்னுலகு இசைக்கும் - பாசஞான பசுஞானங்களால் உணரப்படாமையும் பதிஞானத்தாலே உணரப்படுதலும் ஆகிய இரண்டுவகையாலும் சிவசத்தாம் என்று மெய் யுணர்வின் நிலைபெற்றோர் அதன் சிறப்பிலக்கணம் கூறுவர் - என்பது இச்சூத்திரத்தின் பொருளாகும். கலையறிவாகிய பாசஞானத்தாலும் உயிருணர்வாகிய பசு ஞானத்தாலும் உணரப்படாத தூய்மையும் என்றும் ஒரு தன்மையதாய் பதிஞானத்தால் அறியப்படும் உள்பொருளாந்தன்மையும் பற்றிக் கடவுளைச் சிவசத்து என்றார். இங்ஙனம் குறையுணர்வாகிய பசு அறிவாலும் பாச அறிவாலும் அறியப்படாத முதல்வனை அவனது திருவடி ஞானத்தால் தன்னறிவின் கண்ணே ஆராய்ந்து தெளிக" என அறிவுறுத்துவது,

> "ஊனக்கண் பாசம் உணராப் பதியை
> ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி" (சிவஞானபோதம், சூ. 9)

எனவரும் சிவஞானபோத ஒன்பதாஞ் சூத்திரமாகும்.

இனி, 'ஆறறியந்தணர்' என்புழி 'ஆறு' என்னும் எண்ணுப்பெயர் ஆகுபெயராய் ஆறு அங்கங்களையும் உணர்த்தியது. ஆறங்கமாவன : நிருத்தம், வியாகரணம், கற்பம், கணிதம், பிரமம், சந்தம் என்பன. ஆறங்கங்களாலும் அரியமறைப்பொருளை அறிய வல்லார் என்பார் 'ஆறறி யந்தணர்' என்றார். "அந்தத்தை அணவுவார் அந்தணர், என்றது, வேதாந்தத்தையே மேற்கொண்டு பார்ப்பார் என்றவாறு" என்பர் நச்சினார்க்கினியர். அழகிய தண்ணளி யையுடைய அறவோர் எனினும் அமையும்.

இக்கலிப்பாடலின் மூன்று தாழிசைகளிலும்

முறையே கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் எனச் சிவபெருமான் ஆடிய மூன்று திருக்கூத்துக்களும், அவற்றுக்குச் சிறப்புரிமையுடைய சீர், தூக்கு, பாணி என்னும் தாளக் கூறுபாடுகளும் பற்றிய செய்திகள் விரித்துரைக்கப் பெற்றன.

அவற்றுள் கொடுகொட்டி என்பது, பதினோராடலுள் ஒன்று, சிவபெருமான் ஆடியது, இறைவன் எல்லாவுலகங்களையும் அழித்து நின்றாடுதலின் கொடுங்கொட்டி என்னும் பெயர்த்தாயிற்று. "கொடுங்கொட்டி கொடுகொட்டியென விகாரமாயிற்று. எல்லாவற்றையும் அழித்து நின்றாடுதலின் கொடுங்கொட்டி என்றார்.

"கொட்டியாடற்கேற்றம் ஒட்டிய
உமையவள் ஒருபாலாக ஒருபால்
இமையா நாட்டத் திறைவனாகி
அமையா உட்கும் வியப்பும் விழைவும்
பொலிவும் பொருந்த நோக்கிய தொக்க
அவுணர் இன்னுயிர் இழப்ப அக்களம்
பொலிய ஆடினன் என்ப மற்றதன்
விருத்தங் காத்தற் பொருளொடு கூடிப்
பொருத்த வரூஉம் பொருந்திய பாடல்
திருத்தகு மரபிற்றெய்வத் துதிப்பே"

இதனான் உணர்க" என நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டிய விளக்கமும் உரைச் சூத்திரமும் கொடுகொட்டியாடலின் இயல்பினைப் புலப்படுத்தல் காணலாம்.

தேவர்கள் திரிபுரம் எரிய வேண்டுதலால் வடவைத் தீயைத் தலையிலேயுடைய பெரிய அம்பு ஏவல்கேட்ட அளவிலே (சுட்ட அளவிலே) அப்புரத்தில் அவுணர்வெந்து வீழ்ந்த வெண்பலிக்குவையாகிய பாரதியரங்கத்திலே (சுடுகாட்டிலே) உமையவள் ஒருபாகத்தினளாய் நின்று பாணி, தூக்கு சீர் என்னும் தாளங்களைச் செலுத்த எல்லாத் தேவரினும் உயர்ந்த மகாதேவனாகிய இறைவன் வெற்றிக்களிப்பாற் கைகொட்டி நின்று ஆடியது கொடுகொட்டி என்னும் ஆடலாகும். இதனியல்பினை,

"பாரதியாடிய பாரதியரங்கத்துத்
திரிபுரமெரியத் தேவர்வேண்ட
எரிமுகப் பேரம்பு ஏவல் கேட்ப
உமையவள் ஒருதிறனாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொடுகொட்டி யாடலும்"

(சிலப். கடலாடு. 39-43)

என்ற தொடரால் இளங்கோவடிகள் விரித்துக் கூறியுள்ளமை இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும். "திரிபுரம் தீமடுத்து எரியக்கண்டு இரங்காது கைகொட்டி நின்று ஆடுதலின் கொடுகொட்டியென்று பெயர் கூறினார்" என்பர் அடியார்க்கு நல்லார்.

பண்டரங்கம் என்றது, பாண்டரங்கம் என்னும் ஆடலை. இதன் இயல்பினை,

"தேர்முன் நின்ற திசைமுகன்காணப்
பாரதியாடிய வியன்பாண்டரங்கமும்"

(சிலப். கடலாடு. 44, 45)

என்ற தொடராற் குறித்தார் இளங்கோவடிகள். "வானோராகிய தேரில் நான்மறைக் கடும்பரிபூட்டி நெடும்புறமறைத்து வார்துகில் முடித்துக் கூர்முட் பிடித்துத் தேர்முன் நின்ற திசைமுகன் காணும்படி பாரதி வடிவாகிய இறைவன் வெண்ணீற்றையணிந்தாடிய பாண்டரங்கக் கூத்தும்" என இத்தொடர்க்கு உரைவரைந்தார் அடியார்க்கு நல்லார். முப்புரங்களைவென்று அந்த வலியாலே முப்புரத்து அவுணர்கள் வெந்து வீழ்ந்த நீற்றை அணிந்து இறைவன் ஆடுதலினாலே இக்கூத்து பாண்டரங்கம் என்னும் பெயர்த்தாயிற்று எனவும் பாண்டரங்கம் என்பதே பண்டரங்கமென விகாரமாயிற்று எனவும் கருதுவர் நச்சினார்க்கினியர்.

"ஏறமர் கடவுள் மூவெயில் எய்வுழிக்
கூறுகூறாகக் கொடியொடும் படையொடும்
வேறுவேறுருவின் விண்மிசைப் பரந்தனா
அவ்வழி ஒளியொடும் உருவொடுந் தோன்றித்

தேர்முன் நின்று திசைதலை பனிப்பச
சுவையும் குறிப்பும் ஒழிவில தோன்றி
அவையவை யவ்வழி ஆடினன் ஆட
மைந்தரு மகளிரும் தந்நிலையழிய
மெய்ப்படு சுவையொடு கைப்படை மறப்பக்
கூடியகாலக் காற்றென ஏற்றவன்
படிநிலை திரியாப் பாண்டரங்கம்மே"

என நச்சினார்க்கினியர் உரையிற் காட்டிய மேற்கோட் சூத்திரம், இக்கூத்தின் இயல்பினை விரித்துரைப்பதாகும்.

"மண்டமர் பலகடந்து மதுகையான் நீறணிந்து
பண்டரங்கம் ஆடுங்கால்"

எனவரும் கலித்தொகைத் தொடரில் இறைவன் முப்புரத் தவுணர்கள் வெந்து வீழ்ந்து வெண்ணீற்றினையணிந்து ஆடிய செய்தி குறிக்கப்பெற்றுள்ளமை காணலாம். பாரதி (பைரவி) வடிவாகிய இறைவன் அணிந்த வெண்ணீறு 'பராவணமாகிய திருநீறு' எனச் சிவநெறியாளர்களால் அணியப்பெறும் தொன்மையுடைய சைவ சமய அடையாளம் என்பது இத்தொடரால் இனிது விளங்கும்.

இனி, காபாலம் என்பது, சிவபெருமான் புலித் தோலை யுடுத்துக் கொன்றை மலர்மாலை தோளிலே அசையப் பிரமனது தலையை அகங்கையில் ஏந்தி ஆடிய கூத்தாகும். அயனது தலையோடாகிய பிரமகபாலத்தைக் கையில் ஏந்தியாடுதலின் இது கபாலம் என்னும் பெயருடைய தாயிற்று.

கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் என்னும் இம்மூன்று கூத்துக்களும் சிவபெருமான் அழித்தற் றொழிலை நிகழ்த்துங் காலத்தில் ஆடப்பெறுவன என்பது,

"பல்லுருவம் பெயர்த்து நீ கொடுகொட்டியாடுங்கால்"

"மண்டமர் பலகடந்து மதுகையான் நீறணிந்து பண்டரங்கம்
ஆடுங்கால்"

"தலை அங்கை கொண்டு நீ காபாலம் ஆடுங்கால்"

எனவரும் கலித்தொகைத் தொடர்களாலும், "அழித்தற் றொழிலை நிகழ்த்துகின்ற காலங்களிலே பாணியுந் தூக்குஞ் சீரும் என்று சொல்லப்பட்ட இவையிற்றை மாட்சிமைப் பட்ட அணியினையுடைய உமாதேவி காப்ப ஆடி" எனவரும் நச்சினார்க்கினியர் உரையாலும் நன்கு புலனாம்.

சிவபெருமான், தன்கையில் ஒலிக்கின்ற துடி யென்னும் பறையானது, பலவகை வாத்திய ஒலிகளையும் ஒலியா நிற்க, (தன்னால் தோற்றுவிக்கப்பட்ட) கட்புலனாய பலவடிவுகளையும் மீட்டுத் தன்னிடத்தே ஒடுக்கிக் கொண்டு, உமாதேவியார் தன் ஒரு பாகத்திலேயடங்க, ஊழி முடிவிலே கொடுகொட்டி என்னும் கூத்தினை ஆடியருள்வன் என்பது, "படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்து நீ, கொடுகொட்டி ஆடுங்கால்" என ஆசிரியர் சிவபெருமானை முன்னிலைப்படுத்துப் போற்றுந் தொடரால் அறிவுறுத்தப் பட்டது. இத்தொடர்ப் பொருளைக் கூர்ந்து சிந்திக்குங்கால், பல்வேறு உலகங்களையும் முதன் முதற் படைத்த முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானே பேரூழி முடிவில அவ்வுலகங்களை யெல்லாம் மீட்டுத் தன்கண் ஒடுங்கச் செய்பவன் என்பதும், எனவே மகா சங்கார காரணனாகிய இறைவனே உலகங்களைத் தோற்றுவிக்கும் நிமித்த காரணன் என்பதும் இக்கடவுள் வாழ்த்தினைப் பாடிய ஆசிரியர் நல்லுந்துவனார் கொண்ட தத்துவக்கொள்கை என்பது இனிது விளங்கும். சிவ நெறிபற்றி இவ்வாசிரியர் அறிவுறுத்திய இக்கொள்கை, இவ்வாசிரியர் பாடிய நெய்தற்கலி பன்னிரண்டாம் பாடலிலும் நன்கு விளக்கப்பெற்றுள்ளமை காணலாம்.

கதிரவன் நாட்காலையிலே தன் கதிர்க்கற்றைகளை உலகிற் பலவிடங்களிலும் பரப்பிப் பகல் முடிவிலே தன்கதிர்களையெல்லாம் மீட்டுத் தன்பால் ஒடுக்கிக் கொள்ளுதலாகிய செயலுக்கு, உலகினைப் படைத்த முதல்வன் ஊழி முடிவில் அவ்வுலகங்களையெல்லாம்

மீட்டுத் தன்பால் ஒடுக்கிக் கொள்ளுதலாகிய செயலினை உவமையாக எடுத்துக்காட்டி விளக்கும் முறையில் அமைந்தது,

> "தொல்லூ ழி தடுமாறித் தொகல் வேண்டும் பருவத்தாற்
> பல்வயின் உயிரெல்லாம் படைத்தான் கட்பெயர்ப்பான் போல்
> எல்லுறு தெறுகதிர் மடங்கித் தன் கதிர்மாய" (கலித். 129)

எனவரும் நெய்தற்கலியாகும். "பழையதாகிய ஊழித் தொடக்கத்திலே பலவிடங்களிலும் பரவிவாழ உடம்போடு உயிர்களைத் தடுமாறி மீட்டும் தன்னிடத்தே வந்து ஒடுங்குதலை விரும்பும் ஊழிமுடிவிலே பலவடிவுகளையும் தன்னிடத்தே மீட்டு ஒடுக்கிக் கொள்கின்றவனைப் போலே, கதிரவன் தன்னிடத்தினின்றும் தோன்றிப் புறத்தே பரவிப் பகற்பொழுதில் தெறுகின்ற தன் ஒளிக்கதிர்களைத் தன்னிடத்தே மீட்டுக்கொண்டு மறைய" என்பது மேற்குறித்த தொடரின் பொருளாகும்.

அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு அவயவப் பகுப்புடையதாய்ச் சுட்டியுணரப்படும் உலகத்தொகுதியானது தோன்றுதல் நிலைபெறுதல் அழிதல் என்னும் முத்தொழிற்படுதலால் அஃது ஒருவினை முதலால் சோற்றுவிக்கப்பட்ட உள்பொருளே எனவும், அதுதான் மலம் நீங்காமையால் அது நீங்குதற்பொருட்டுத் தான் ஒடுங்குதற்கு ஏதுவாயிருந்த கடவுளால் மீளவும் உளதாம் எனவும், எனவே ஒடுக்குதலாகிய சங்காரத் தொழிலைச் செய்யும் கடவுளே உலகிற்கு முதற்கடவுள் எனவும் அறிவுறுத்துவது,

> "அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின்
> தோற்றிய திதியே ஒடுங்கிமலத்துளதாம்
> அந்தம் ஆதி என்மனார் புலவர்"

எனவரும் சிவஞான போத முதற்சூத்திரமாகும். இந்நூலின் ஆசிரியராகிய மெய்கண்ட தேவர், "இச்சூத்திரம் என்னுதலிற்றோவெனின், சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பது

உணர்த்துதல் நுதலிற்று'' என இம்முதற் சூத்திரத்திற்குக் கருத்துரை வரைந்துள்ளார். ஆசிரியர் மெய்கண்டார் சிவஞான போத முதற்சூத்திரத்தில் ஏது எடுத்துக்காட்டுக் களுடன் விரித்து விளக்கும் சைவசித்தாந்தத் தத்துவ வுண்மையாகிய இக்கொள்கைக்குப் "படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்து நீ, கொடுகொட்டி ஆடுங்கால்'' எனக் கலித்தொகைக் கடவுள் வாழ்த்திலும் "பல்வயின் உயிரெல்லாம் படைத்தான் கட் பெயர்ப்பான்போல்'' என நெய்தற்கலியிலும் வரும் தொடர்கள் ஆதாரமாக அமைந்துள்ளமை இங்கு ஒப்புநோக்கியுணர்தற்குரியதாகும். இறைவன் படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய முத்தொழிற்கும் உரியனாயினும் ஊழிமுடிவில் யாவராலும் செய்ய இயலாத முற்றழிவாகிய மகாசங்காரத் தொழில் அவனொருவனாலேயே செய்தற்குரியதாதலின் அதுபற்றி அம்முதல்வனைக் 'காஅய் கடவுள்' (பரி.) என்றும் 'கொலைவன்' (கலி.) என்றும், கூற்று (கலித்.) என்றும் சங்கச் செய்யுட்கள் குறித்துள்ளன.

### முக்கண்ணான்

ஞாயிறு, திங்கள், தீ என்னும் முச்சுடர்களைக் கண்களாக வுடையவன் இறைவன் ஆதலின் முக்கண்ணான் என்பது அவற்குரிய திருப்பெயராயிற்று. "முக்கண்ணான் மூவெயிலும் உடன்றக்கால் முகம்போல ஒண்கதிர் தெறுதலின்'' (கலித். 1) எனக் கலித்தொகையிலும் "பணியிய ரத்தை நின்குடையே முனிவர், முக்கட்செல்வர் நகர்வலஞ் செயற்கே'' (புறம். 6) எனப் புறநானூற்றிலும் இப்பெயர் பயின்றுள்ளமை காணலாம். மூன்று கண்களுள் வலக்கண் ஞாயிறு. இடக்கண் திங்கள். நடுவேயுள்ளது தீயினுருவாகிய நெற்றிக் கண்ணாகும். நெற்றிக் கண்ணாகிய இது ஏனைய இரண்டு கண்களைப் போல் நெற்றியின் கீழ் இருபக்கங்களிலும் படுத்த நிலையிலமையாது நிமிர்ந்து நின்ற நிலையில் இருத்தலால் ஏனைத்தேவர் கண்களினின்றும் வேறுபாடுடையதாய் உயர்ந்து விளங்கும் தன்மையினையுடையதாகும். இதன் இயல்பினை,

"கறைமிடற்றண்ணல் காமர் சென்னிப்

பிறைநுதல் விளங்கும் ஒருகண்போல
வேந்து மேம்பட்ட பூந்தார் மாற" (புறம். 55)

எனவரும் தொடரில் மதுரை மருதன் இளநாகனார் உவமையாக எடுத்துக்காட்டியுள்ளார். "கறை சேர்ந்த திருமிடற்றையுடைய இறைவனது அழகிய திருமுடிப் பக்கத்து அணிந்த பிறை சேர்ந்த திருநெற்றிக் கண்ணே விளங்கும் ஒரு திருநயனம் போல (சேர சோழ பாண்டியர் ஆகிய ) மூவேந்தருள்ளும் மேம்பட்டு விளங்கும் பொலிவு பெற்ற மாலையையணிந்த பாண்டியனே" எனப் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனை முடிவேந்தர் மூவருள்ளும் முதன்மை பெற்றுயர்ந்தவனாகப் புகழ்ந்து போற்றுவதாக அமைந்தது மேற்குறித்த புறநானூற்றுத் தொடராகும். உலகினைப் படைத் தளித்தழிக்கும் கடவுளர் மூவரினும் முதல்வனாகச் சிவபெருமானே உயர்ந்து விளங்கும் இறைமைத் தன்மை யினையுடையார் என்பது, மாலும் அயனும் ஆகிய ஏனை யிருவர்க்கும் இல்லாத இமையா நாட்டமாகிய நெற்றிக் கண்ணுடைமையால் உய்த்துணரப்படும். இறைவனை முக்கண்ணனாகத் திருவுருவமைத்து வழிபடும் மரபு இந்நாட்டின் நெடுங்காலமாக நிலைபெற்றுள்ளமை அரப்பா, மொகஞ்சதரோ ஆகிய இடங்களில் நிகழ்ந்த அகழ்வாராய்ச்சியால் நன்கு வலியுறுத்தப் பெற்றதாகும்.

### ஏற்றூர்தியான், ஆனேற்றுக்கொடியோன்

தூய வெள்ளை நிறம் வாய்ந்த ஆனேறு ஆகிய இடபம் சிவபெருமானுக்குரிய ஊர்தியாகவும் கொடியாகவும் தொன்றுதொட்டுப் போற்றப்பெற்று வருகின்றது. இச்செய்தி,

'ஊர்தி வால்வெள்ளேறே சிறந்த
சீர்கெழு கொடியும் அவ்வேறு என்ப' (புறம். கடவுள்)

'ஊர்ந்தது ஏறே சேர்ந்தோள் உமையே' (அகம். கடவுள்)

'உருவ ஏற்றூர்தியான்' (கலித். பரிபாடல் 6)

'புங்கவம ஊர்வோன்' (பரி.)

'ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை
மாற்றருங்கணிச்சி மணிமிடற்றோனும்' (புறம். 56)

எனவரும் சங்க இலக்கியத் தொடர்களால் நன்குபுலனாம். தூயவெள்ளை நிறம் வாய்ந்த எருதினை (இடபத்தினை) கொண்டதன் உட்கருத்து தூய்மெய்யுணர்வின்கண் நிலைபெற்று விளங்குபவன் இறைவன் என்பதாகும். இந்நுட்பம்,

'உணர்வெனும் ஊர்வதுடையாய் போற்றி'

எனவரும் தேவாரத் தொடரால் இனிது புலனாதல் காணலாம். இறைவனது ஊர்தியாகிய இடபத்தினை அறத்தின் வடிவாகக் கூறுதலும் உண்டு.

## இறைவனுக்குரிய படைக்கலங்கள்

சிவபெருமான் தன் திருக்கைகளில் ஏந்திய படைக் கலங்களாகக் கணிச்சி - மழு, முத்தலைச்சூலம் என்பன குறிக்கப்பெற்றன. இறைவனுக்குப் படையாகக் கூறப்படும் கணிச்சியும் மழுவும் சொல்லால் வேறுபடினும் பொருளால் ஒன்றே என்பது பழையவுரையாசிரியர் உரையாற் புலனாகின்றது. 'இகலட்டுக், கையது கணிச்சியொடு மழுவே, மூவாய்வேலும் உண்டு அத்தோலாதோற்கே' எனவரும் அகநானூற்றுக் கடவுள் வாழ்த்தில் கணிச்சியாகிய மழுவும் மூவாய்வேலாகிய முத்தலைச்சூலமும் சிவபெரு மானுக்குரிய படைக்கலங்களாகக் குறிக்கப்பெற்றன. 'மழு' என்பது சிறிய கோடரி போன்று அமைந்த பரசு என்னும் ஆயுதமாகும்.

## ஆனேற்றவிர்பூண்

முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானுக்குரிய ஊர்தியும் கொடியும் ஆகிய ஆனேற்றினை (இடபத்தினை) நடுவில் வைத்து அதன் ஒருபக்கத்தில் திருமாலுக்குரிய நாந்தகம் என்னும் வாட்படையும் மற்றொரு பக்கத்தில் சிவனுக்குரிய மழுப்படையும் விளங்கப் பொன்னினாலும்

பவளத்தினாலும் செய்தமைத்த பொற்பூணினை இளங் குழந்தைகட்குக் காப்பாக அணிவதென்பது சங்ககாலந் தொட்டுத் தமிழ் மக்களிடையே நிலவி வரும் பழக்கமாகும். இச்செய்தி,

> "பூண்டவை,
> எறியா வாளும் ஏற்றாமழுவும்
> செறியக்கட்டி ஈரிடைத் தாழ்ந்த
> பெய்புல மூதாய்ப் புகர்நிறத் துகிரின்
> மையற விளங்கிய ஆனேற்று அவிர்பூண்" (கலித். 85)

எனவும்,

> "பொலஞ்செய் மழுவொடு வாளணிகொண்ட
> நலங்கினர் ஒண்பூண்" (கலித். 86)

எனவும் வரும் மருதக் கலித்தொடர்களால் இனிது விளங்கும். "பூண்டவை, வெட்டாத வாளும் வெட்டாத மழுவும் நெருங்கக்கட்டி, இரண்டு புறத்தினும் தங்கின மழைபெய்த நிலத்துப் பரவிய ஈயல் மூதாயினது (பட்டுப்பூச்சியினது) புகரையுடைத்தாகிய நிறத்தையுடைய பவளத்தாற் செய்த அழுக்கற விளங்கிய இடபத்தையுடைய விளங்குகின்ற பூண்" என்பதும், "பொன்னாற் செய்த மழுவோடே வாளும் அணிதலைக்கொண்ட நன்றே விளங்குகின்ற ஒள்ளிய பூண்" என்பதும் இவ்விரு தொடர்களின் பொருளாகும்.

### சிவனுக்குரிய அடையாளப்பூ கொன்றைமலர்

பொன்போலும் நிறத்தினதாய்க் கொத்தாக மலரும் கொன்றைமலர் மாலை இறைவனுக்குரியதாகும்.

> "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்த்
> தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்" (அகம். கடவுள்)
>
> "கண்ணி கார்நறுங்கொன்றை காமர்
> வண்ணமார்பில் தாரும் கொன்றை" (புறம். கடவுள்)
>
> "அயந்திகழ் நறுங்கொன்றையலங்கலந் தெரியலான்" (கலி. 150)

"மணிமிடற்று மாண்மலர்க் கொன்றையவன்" (கலி. 143)

என்றாங்குவரும் சங்க இலக்கியத் தொடர்கள் சிவபெருமானுக்குச் சிறந்தது கொன்றை மலர்மாலை என்பதனை அறிவுறுத்துவன, கொன்றை பொன்னார் மேனியனாகிய சிவபெருமானைப் போன்று பொன்னிறம் வாய்ந்த பூவாகும். ஐந்திதழ்களையுடைய இம்மலர் சிவபெருமானுக்குரிய மந்திரமாகிய திருவைந்தெழுத்தின் அடையாளமாகும். இவ்விதழ்களின் மேலாகத் தமிழ் ஓகாரவெழுத்தமைப்பில் திருவாசிபோல் வளைந்துள்ள முனை ஓங்காரமாகிய பிரணவத்தின் அமைப்புடையது. இவ்வாறு திருவைந்தெழுத்தின் அமைப்பில் உருவும் நிறமும் வாய்ந்த கொன்றைமலர் ஐந்தெழுத்தின் உருவாகி நின்ற இறைவனுக்குரிய அடையாளப்பூவாயிற்று என்பர் பெரியோர்.

மாலொருபாகர் (சங்கரநாராயணர்)

அந்திவானம் போன்ற திருமேனியன் சிவபெருமானும் கடல்நிற வண்ணனாகிய திருமாலும் ஆகிய இருபெருந் தெய்வத்திருமேனியும் ஓருருவாய் உடனியைந்து தோன்றும் திருவுருவம் சங்கரநாராயணர் (மாலொருபாகர்) திருமேனியாகும். கொடியோர் அஞ்சுதற்குக் காரணமான பேராற்றல் வாய்ந்த செம்மேனியிறைவனாகிய சிவனும்கரிய திருமேனிய னாகிய திருமாலும் ஓருருவினராய்த் திகழும் தோற்றம் போல அந்தி வானமும் கருங்கடலும் ஒருங்கியைந்து அழகுபெற்றுத் தோன்றும்படி மாலைக்காலம் வந்தது என்பார்,

"வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து
உருஉடனியைந்த தோற்றம் போல
அந்திவானமொடு கடல் அணிகொளாஅ
வந்த மாலை" (அகம். 360)

என்றார் மதுரைக் கண்ணத்தனார் என்னும் புலவர் பெருமான். சங்ககாலத்தில் உமையொருபாகர் திருமேனியைப் போன்று மாலொருபாகர் (சங்கர

நாராயணர்) திருமேனியும் சிவபெருமானுக்குரிய திருமேனிகளுள் ஒன்றாகக் கருதி வழிபடப்பெற்றதென்பது இங்கெடுத்துக் காட்டிய அகநானூற்றுப் பாடற்பகுதியால் இனிது விளங்கும். இதனால் சிவன் திருமால் வழிபாடுகளுக்கிடையேயமைந்த ஒருமைப்பாடும் நன்கு புலனாதல் காணலாம்.

இங்ஙனம் சிவபெருமானும் திருமாலும் ஒருருவாய் உடன் இயைந்து தோன்றும் திருவுருவத் தோற்றத்திற்கு உவமை கூற எண்ணினால் பொன்மலையும் நீலமலையும் ஒருங்கியைந்து நீண்டுயர்ந்து நிற்கின்ற தோற்றத்தினை உவமையாகக் கூறுதல் பொருந்தும் என்பார்,

> "மின்போலுஞ் செஞ்சடையான் மாலோடும் ஈண்டிசைந்தால்
> என்போலும் காண்பார்கட் கென்றிரேல் - தன்போலும்
> பொற்குன்றும் நீலமணிக்குன்றுந தாமுடனே
> நிற்கின்ற போலும் நெடிது" (அற்புத் திருவந்தாதி 83)

என்று அருளிச் செய்தார் காரைக்காலம்மையார். "மின்னலையொத்து மிளிரும் சிவந்த சடையினையுடைய சிவபெருமான் (தனது ஒருபாகத்தில் விளங்கும் காத்தற் கடவுளாகிய) திருமாலோடும் இங்கு இசைந்து எழுந்தருளினால் அத்தெய்வத் தோற்றம் காண்பார்க்கு எங்ஙனம் திகழும் எனக் கேட்பீராயின், தனக்குத் தானேயொப்பென விளங்கும் பொன்மலையும் நீலநிறம் வாய்ந்த மணிமலையும் ஒருங்கியைந்து மிகவுயர்ந்து விளங்கும் தோற்றத்தை ஒப்பதாகும்" என்பது இதன்பொருள்.

> "பொன்திகழும் மேனிப் புரிசடையம் புண்ணியனும்
> நின்றுலகம் தாய நெடுமாலும் - என்னும்
> இருவரங்கத்தால் திரிவரேனும் ஒருவன்
> ஒருவனங்கத் தென்றும் உளன்"
>
> (இயற்பா, முதற்றிருவந்தாதி 98)

எனப் பொய்கையாழ்வாரும்.

"தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவுஞ் சக்கரமும்
சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால் - சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து"
(இயற்பா, மூன்றாந்திருவந்தாதி 63)

எனப் பேயாழ்வாரும் அருளிய அருளிச் செயல்கள் சங்கரநாராயணர் திருவுருவ அமைப்பினை நன்கு புலப்படுத்துவனவாகும்.

## அட்டமூர்த்தி (எண்பேருருவினன்)

ஈசனாகிய சிவபெருமான் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், ஞாயிறு, திங்கள், வேள்வித் தலைவனாகிய ஆன்மா என எண்பேருருவினனாக உலகுயிர்களோடு பிரிவின்றிக் கலந்து விளங்குகின்றான் என்பது சிவநெறியாளர்கள் தாம் வழிபடும் இறைவனுக்குக் கூறும் சிறப்புடைய இலக்கணமாகும்.

"மாஅயோயே மா அயோயே,
மறுபிறப்பறுக்கும் மாசில்சேவடி
மணிதிகழுருவின் மாஅயோயே"    (பரிபாடல் 3)

எனத் திருமாலை எதிர்முகமாக்கிப் போற்றத்தொடங்கிய கடுவன் இளவெயினனார் என்னும் புலவர் பெருமான் திருமாலும் சிவனும் ஒருமுழுமுதற்பொருளே என்னும் ஒருமையுணர்வுடன் சிவபெருமானுக்குரிய அட்ட மூர்த்தவடிவினைத் திருமாலுக்கு ஏற்றிக் கூறுவதாக அமைந்தது,

"தீவளிவிசும்புநிலன் நீர் ஐந்தும்
ஞாயிறும் திங்களும் அறனும்"    (பரி. 3 : 4,5)

எனவரும் பரிபாடற்றொடராகும். அச்சேவடி (மறுபிறப் பறுக்கும் மாசில் சேவடி) கூறுதற்கு முகம் புகுகின்றாராதலிற் பலகாலும் எதிர்முகமாக்கினார்; ஆக்கி வாழ்த்துகின்றவர் அவன்கண் தோன்றிய பொருள்கள் கூறுவான் தொடங்கி,

ஈசற்கு (சிவபெருமானுக்கு) தீவளி விசும்புநிலம் நீர் என்னும் பூதங்கள் ஐந்தும் ஞாயிறும் திங்களும் வேள்வி முதல்வனும் என இவை, வேட்கின்ற வடிவு தருமமாதலின் அஃது அறனெனப்பட்டது" எனப் பரிமேலழகர் தரும் உரை விளக்கம் அட்டமூர்த்தி வடிவம் சிவனுக்குச் சிறந்து எடுத்துக் கூறப்படுவது என்பதனை நன்கு வலியுறுத்துவ தாகும்.

### சிவபெருமானுக்குத் திருமுகங்கள் ஐந்து

சிவபெருமானுக்கு ஐந்து திருமுகங்கள் உள்ளன என்பதும் ஐந்து திருமுகங்களையுடைய அம்முதல்வனே உலகுயிர்களைத் தன்கண் ஒடுக்கவல்ல பேராற்றல் படைத்தவன் என்பதும் அவ்விறைவன் திருமாலாகவும் திகழ்கின்றான் என்பதும்

> "ஐந்தலை யுயரிய அணங்குடை யருந்திறல்
> மைந்துடை யொருவனும் மடங்கலும் நீ" (பரி. 1)

எனத் திருமாலைப்போற்றும் பரிபாடற் பகுதியாலும், "ஐந்துதலையைத் தோற்றுவித்த அணங்குடை அருந் திறலையுடைய . . . ஈசன், மடங்கல்-அவனினாகிய உலகுயிர்களின் ஒடுக்கம்" எனவரும் பரிமேலழகர் உரைக் குறிப்பானும் அறியப்படும்.

### வாய்மைப் பொருள் சிவன்

சிவபெருமான், தன்னை வணங்கிக்கேட்போர் யாவராயினும் அவர்கேட்ட வரங்களை மாறாது கொடுத் தருளுதலில் தவறாத வாய்மையுடையன் என்பது, அம் முதல்வனைக் குறித்து வழங்கும் புராணங்களால் அறியப் படும். அம்முதல்வன் உமாதேவியைத் திருமணம் புரிந்து கூடியிருக்கும் காலத்திலே இந்திரன் வந்து அப் பெருமானிடம் ஒருவரம் கேட்டு "உமையொடு கூடிய புணர்ச்சியால் தோன்றிய கருவை அழிப்பாயாக" என வேண்ட மழுப்படையைத் தரித்த இறைவன் வாய்மையில்

தவறாதவனாதலின், "அவ்விந்திரனுக்குத் தான் கொடுத்த வரத்தைச் செய்தற்கரிதென மாற்றாமல் ஏழுலகத்தவர்களும் வியக்க அதனுருவினைப் பல கண்டமாகச் சேதித்தான்" என ஐந்தாம் பரிபாடலிற் கூறிய செய்தி முன்னர் முருகனைப் பற்றிய செய்திகளில் எடுத்துக்காட்டப்பட்டது. ஆலின்கீழ் அறமுரைத்த அருந்தவமுதல்வனாகிய சிவபெருமானே யார்கண்ணும் ஐயந்தீர மெய்ப்பொருளை யறிவுறுத்தி எக்காலத்தும் பொய்கூறா வாய்மையனாகத் திகழ்கின்றான் என்பது,

> "ஐயந்தீர்ந்தியார்கண்ணும் அருந்தவ முதல்வன்போல்
> பொய்கூறாய் என நின்னைப் புகழ்வது" (கலி. 100)

எனவரும் மருதக்கலியாலும் "அரிய தவத்தையுடைய அறமுரைத்த நாயனாரைப்போல யாவரிடத்தும் பொய்கூறாய் என ஐயம் அற்று உலகம் நின்னைப் புகழ்கின்ற தன்மை" எனவரும் அதன் உரையாலும் அறிவுறுத்தப் பெற்றது

### ஈறிலாதவன் இறைவன்

எவ்விடத்தும் எக்காலத்தும் மாறாதுள்ள நிலைமை சத்து என்னும் செம்பொருளுக்கு இயல்பாகவுள்ள தன்மையாகும். செம்பொருளாகிய சிவம் எக்காலத்தும் திரிபின்றி அழியாது உள்ளது ஆதலின் அதற்குப் பிறப்பும் இல்லை இறப்புமில்லை என்பதும் அது தோற்றமும் ஈறுமில்லாத முழு முதற்பொருள் என்பதும் சிவநெறியாளர் துணிபாகும். அதியமான் நெடுமானஞ்சி என்னும் வள்ளல் சாதலைத் தடுத்து நீண்டநாள் வாழச் செய்வதும் பெறுதற்கு அரியதும் ஆகத் தான்மலையுச்சியிற் கொண்ட நெல்லிக் கனியின் ஆக்கத்தினை வெளிப்படுத்தாமல் ஔவையார்க் குக் கொடுத்தானாக அதனையுண்டு அதன் விளைவினை அறிந்துகொண்ட ஔவையார் தன்பால் அதியமான் கொண்டுள்ள பேரன்பினையும் பெருமதிப்பினையும் எண்ணி நெஞ்சம் நெகிழ்ந்து அவனை வாழ்த்துவதாக அமைந்தது,

"வலம்படுவாய்வாள் ஏந்தி ஒன்னார்
களம்படக் கடந்த கழல்தொடித்தடக்கை
ஆர்கலிநறவின் அதியர் கோமான்
போரடுதிருவிற் பொலந்தார் அஞ்சி
பால்புரை பிறைநுதற்பொலிந்த சென்னி
நீலமணி மிடற்றொருவன் போல
மன்னுகபெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத்தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித்தீங்கனி குறியாது
ஆதல்நின்னகத்தடக்கிச
சாதல்நீங்க எமக்கீத் தனையே" (புறம். 91)

எனவரும் புறநானூற்றுப் பாடலாகும். "மாற்றாரைப் போரின்கண் கொல்லும் வீரச் செல்வத்தினையுடைய அதியர்கோமான் நெடுமானஞ்சியே, நீ பெரிய மலையின் உச்சிக்கண் கொள்ளப்பட்ட அரிய இனிய நெல்லிக் கனியைப் பெறுதற்கு அரிதென்று கருதாது அதனாற் பெறும் பேற்றினை எமக்குச் சொல்லாது நின்னுள்ளே அடக்கி எமக்குச் சாதல் நீங்க அளித்தாய்; ஆதலால் பால்போலும் பிறைநுதலிடத்தே பொலிவுபெற்றுத் தோன்றும் திருமுடியையும் நீலமணிபோலும் கரிய திருமிடற்றினையும் உடைய ஒப்பற்ற முதல்வனாகிய சிவபெருமானைப் போல என்றும் நிலைபெற்று வாழ்வாயாக" என இப்பாடலால் அதியமானை வாழ்த்து கின்றார் ஔவையார். 'நீலமணிமிடற்று ஒருவன் போல மன்னுகபெரும' என வாழ்த்தியதன் குறிப்பு, சிவபெருமான் எக்காலத்தும் அழிவின்றி நிலைபெறுமாறு போல நீயும் அழிவின்றி நிலைபெறுக என்பதாம். 'நீலமணிமிடற் றொருவன் போல' என்ற கருத்து, சாதற்குக் காரணமான நஞ்சுண்டும் நிலைபெற்றிருந்தாற்போல நீயும் சாவா திருத்தல் வேண்டும் என்பதாம் எனப் புறநானூற்றின் பழைய வுரையாசிரியர் இக்குறிப்பினைப் புலப்படுத்தலால் நீலமணி மிடற்றொருவனாகிய ஈசனே என்றும் அழிவின்றியுள்ள முழு முதற் கடவுள் என்பது அதியமானை வாழ்த்திய ஔவையார் துணிபாதல் நன்கு தெளியப்படும். ஔவையார் பாடிய இப்பாடலை அடியொற்றியமைந்தது. 'ஈறிலாதவன்

ஈசன் ஒருவனே' (5-100-3) எனவரும் அப்பரடிகள் வாய்மொழியாகும். 'ஆறெலாங்கங்கையே யனைய குன்றெலாம், ஈறிலான் கயிலையே ஏய்ந்த' (கம்பர்.பால.) எனவரும் பாடலிற் கவிச்சக்கரவர்த்தி கம்பர் சிவபெரு மானை 'ஈறிலான்' என்ற பெயராற் குறித்துள்ளமையும் இங்கு ஒப்புநோக்கற்பாலதாகும்.

### சிவநெறிக்கொள்கைகள்

அம்மையப்பனாகத் திகழும் சிவபெருமான் மன்னுயிர்களின் பொருட்டு உலகங்களைத் தோற்றுவித்துக் குறித்தகாலம் வரை அவற்றை நிலைபெறச் செய்து ஊழிமுடிவில் மீட்டுத் தன்னிடத்து ஒடுங்கச் செய்கின்றான் என்பதும், ஊழிமுடிவில் உலகங்களை ஒடுக்கிய இறைவனே உயிர்களின் பொருட்டு உலகங்களை மீளவும் படைத்தருள் கின்றான் என்பதும் எனவே மகாசங்காரகாரணனாகிய சிவபெருமானே உலகத்திற்கு நிமித்தகாரணன் என்பதும், கலித்தொகைக் கடவுள் வாழ்த்தின் பொருளை விளக்கு மிடத்து முன்னர் விளக்கப் பெற்றன. காணப்படும் உலக மாகிய காரியத்தைக் கொண்டு அதற்கு நிமித்த காரணமா யுள்ள முழுமுதற் பொருள் ஒன்று உண்டுஎனக் கருத லளவையால் கடவுளுண்மை துணியவேண்டுதலின் கடவுள் வாழ்த்துப் பாடிய பெருந்தேவனார், 'ஒருவன் இருதாள் தாள்நிழற்கீழ் மூவகையுலகமும் முறையே முகிழ்த்தன' என உலகின் மேல் வைத்துக் கூறினார். ஆயினும் மூவகை யுலகங்களையும் தன்தாள் நிழற்கீழ்க் கொண்டு அவற்றை முறையே முகிழ்க்கும்படி (தோன்றும்படி) செய்தருளியவன் 'நீலமேனி வாலிழைபாகத்து ஒருவன்' என்பது ஆசிரியர் கருத்தாகக் கொள்ளுதல் வேண்டும். இத்தொடரில் 'தாள்நிழல்' என்றது, இறைவன் திருவடி நீழற்கண் அடங்கிய தூயமாயையாகிய சட ஆற்றலையெனக் கொள்ளுதல் வேண்டும், கிழங்கினின்றும் முளைத்த தாமரையை அதற்கு ஆதாரமாகிய சேற்றினின்றும் முளைத்தது என்னும் பொருளில் பங்கயம் என வழங்கினாற் போல மாயையினின்றும் தோன்றிய உலகங்களை மாயைக்கு ஆதாரமாகிய திருவடி நீழலினின்றும் முகிழ்த்தன என்றார்

பெருந்தேவனார்.

மூவகையுலகம் ஆவன மேல், நடு, கீழ் என முப்புணர் அடுக்கிய உலகத் தொகுதிகள். மூவகை யுலகங்களும் எவ்வேழுவகைப்பட்டுள்ளன என்பது, 'மூவே ழுலகமும் உலகினுள்மன்பதும்' (பரிபாடல் 9) என்பதனாற் புலனாம். 'மூவேழுலகம் - ஒரோவொன்று எழுவகைப் பட்ட மூன்றுலகம். மன்பது - ஒழிந்த உயிர்ப்பன்மை' என்பர் பரிமேலழகர். இனி, 'மூவகையுலகு' என்பதற்கு, 'அவன் அவள் அதுவெனும் அவயவப்பகுப்புடையனவாய்ச் சுட்டியுணரப்படும் உலகத்தொகுதி' எனப் பொரு ளுரைத்தலும் பொருந்தும். 'அவன் அவள் அது வெனும் அவை மூவினைமையின் தோற்றிய திதியே' (சிவஞான போதம், சூத்திரம்) என்றார் மெய்கண்டார். ஒருவன் என்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் கூறப்படும்.

அவயப்பகுப்புடையதாயும் பல்வேறு வகைத்தாய்ச் சடமாயும் சுட்டியறியப் படுவதாயும் இருத்தலின் இம்மூன்று ஏதுக்களாலும் காணப்படும் உலகம், தோன்றிநின்று அழிதலாகிய முத்தொழிற்படும் உள்பொருளேயாம் என்பது இத்தொடரின் பொருளாகும்.

சிவபெருமானைப் போற்றிப்பரவும் முறையிற் பெருந்தேவனார் பாடியுள்ள கடவுள் வாழ்த்துப் பாடல்களில், 'நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன்', 'யாழ் கெழு மணிமிடற்று அந்தணன்', 'தாழ்சடைப்பொலிந்த அருந்தவத்தோன்' எனவரும் தொடர்கள் கடவுளுண்மை யினையும், 'மூவகையுலகும் முகிழ்த்தனமுறையே', 'தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே' எனவரும் தொடர்கள் உலகின் உண்மையினையும், 'மூவா அமரரும் முனிவரும் பிறரும் யாவரும்', 'எல்லாவுயிர்க்கும்' எனவரும் தொடர்கள் உயிர்களின் உண்மையினையும் புலப்படுத்தி நிற்றல் காணலாம். எனவே கடவுள், உயிர், உலகம் என்னும் முப்பொருள்களும் தோற்றமில் காலமாக (அநாதியாக) உள்ள பொருள்களே என்னும் சைவ சித்தாந்தத் தத்துவத் துக்குரிய வேர்கள் (மூலங்கள்) சங்கச் செய்யுட்களாகிய

இப்பாடல் களில் ஊன்றியிடங்கொண்டு பரவியுள்ளமை நன்கு தெளியப்படும்.

## கோயில்களும் திருவிழாக்களும்

தமிழகத்திற் பேரூர்களிலும் சிற்றூர்களிலும் சிவபெருமானுக்குரிய திருக்கோயில்கள் நிலைபெற்றிருந் தன. சங்ககாலத்தில் ஆட்சிபுரிந்த சோழன் செங்கணான் சோணாட்டிலுள்ள அகநாடுகள் தோறும் சிவபெரு மானுக்கு மாடக்கோயிலைக் கட்டினான் என்ற செய்தி திருத்தொண்டர் புராணத்தில் விரித்துரைக்கப்பெற்றது. கோச்செங்கணான் கட்டிய மாடக்கோயில்களிற் பல மூவரருளிய தேவாரத்திருப்பதிகங்களில் ஆங்காங்கே போற்றப்பெற்றுள்ளமை காணலாம். கோச்செங்கட் சோழன் சிவபெருமானுக்கு எழுபது மாடக்கோயில்களைக் கட்டியுள்ளான் என்பதும் சிறந்த சிவனடியானாகிய அவ்வேந்தர் பெருமானே திருநறையூர் மணிமாடமாகிய திருமாலுக்குரிய திருக்கோயிலையும் கட்டியுள்ளான் என்பதும்,

> "இருக்கிலங்குதிருமொழி வாய் எண்தோளீசற்கு
> எழில்மாடம் எழுபது செய்துலக மாண்ட
> திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்தகோயில்
> திருநறையூர்மணிமாடம் சேர்மின்களே"
> (பெரியதிருமொழி, 6-3-8)

எனவரும் திருமங்கையாழ்வார் அருளிச் செயலால் அறியப்படும்.

சோழநாட்டின் அகநாடுகளுள் ஒன்றாகிய புகார் நாட்டில் உலகம் முழுதும் பரவிய பொருள்சேர்புகழ்த்திறம் வாய்ந்த நான்மறைகளைத் திருவாய்மொழிந்தருளிய முக்கட் செல்வராகிய சிவபெருமானுக்குரிய திருக்கோயில் ஆலமுற்றம் என்ற இடத்தில் அழகுபெற அமைந்திருந்த தென்பதும் அக்கோயிலையடுத்துப் பொய்கையும் அதனைச் சூழச்சோலையும் அமைந்திருந்தன என்பதும்,

"ஞாலம் நாறு நலங்கெழு நல்லிசை
நான்மறை முதுநூல் முக்கட்செல்வர்
ஆலமுற்றங் கவின்பெறத்தைஇய
பொய்கைசூழ்ந்த பொழில் . . . . .
புகாஅர் நன்னாட்டதுவே" (அகம். 181)

எனவரும் அகநானூற்றுப்பாடற்பகுதியால் அறியப்படும்.

பாண்டிநாட்டின் தலைநகராகிய மதுரையில் சிவபெருமானுக்கு ஏழு நாள் திருவிழா நடந்தது என்பதும், ஏழாம் நாளின் அந்திக்காலத்தில் நாட்டு மக்கள் தீவினை நீங்கத் தீர்த்தமாடினர் என்பதும்,

"கழுநீர்கொண்ட எழுநாளந்தி
ஆடுதுவன்று விழவின் நாடார்த்தன்றே" (மதுரைக். 427-428)

எனவரும் மதுரைக் காஞ்சித் தொடராற் புலனாகும். "தீவினையைக் கழுவுதற்குக் காரணமான தீர்த்தநீரைத் தன்னிடத்தே கொண்ட ஏழாம்நாளின் அந்திக்காலத்தே வெற்றிநெருங்கும் திருவிழாவிற்குத் திரண்ட நாட்டிலுள்ளோர் ஆர்த்த ஆரவாரம்" என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும். "கால்கொள்ளத்தொடங்கிய ஏழாம் நாள் அந்தியிலே தீர்த்தமாடுதல் மரபு" என்றார் நச்சினார்க்கினியர். இனி, 'ஏழுநாள் அந்தி' என்பதற்கு 'ஏழாம்நாளின் அந்திப்பொழுது' எனப் பொருள் கொள்ளாமல் 'ஏழாம்நாளின் அந்தத்தில் (முடிவில்), அஃதாவது எட்டாம் நாளில் தீர்த்தமாடுதல் மரபு எனக் கொள்ளுதல் பொருத்தமுடையதாகும் இம்மரபு,

"தீர்த்தமாம் அட்டமிமுன்சீருடை ஏழுநாளுங்
கூத்தராய் வீதிபோந்தார் குறுக்கை வீரட்டனாரே"

எனவரும் திருநாவுக்கரசர் தேவாரத்திற் குறிக்கப் பெற்றுள்ளமை இங்கு ஒப்புநோக்கியுணர்தற்குரியதாகும்.

### அவிர்சடை முனிவர்

சங்கவிலக்கியத்திற் கூறப்படும் அவிர்சடைமுனிவர்

என்போர் செஞ்சடைக் கடவுளாகிய சிவபெருமானை வேள்வித் தீ வடிவிற் போற்றி வழிபடும் விரிசடை விரதிகள் எனக் கருதவேண்டியுள்ளது. அருந்தவ முனிவர்களாகிய இவர்கள் மலைகளிலும் காடுகளிலும் ஊர்ப்புறங்களிலும் தங்கித் தவம்புரியும் இயல்பினர். வேள்விக்குண்டத்தில் தீயினைவளர்த்து நறுநெய் ஆவுதி வழங்கி அழல் வண்ண னாகிய இறைவனை வழிபடுதல் இவர்தம் இயல்பாகும். தவமுனிவராகிய இவர்கட்கு யானை முதலிய விலங்குகளும் பணி செய்தல் உண்டு.

"இன்சீர்க்
கின்னரம் முயலும் அணங்குடைச்சாரல்
மஞ்ஞை யாலும் மரம்பயிலிறும்பின்
கலையாய்ந்துதிர்ந்த மலரவிழ்புறவின்
மந்தி சீக்கும் மாதுஞ்சுமுன்றிற்
செந்திப்பேணிய முனிவர் வெண்கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கும்
ஒளிறிலங்கருவிய மலைகிழவோனே"

(பெரும்பாண். 493-500)

எனவும்,

"கானயானை தந்த விறகின்
கடுந்தெறற் செந்தீவேட்டுப்
புறந்தாழ்புரிசடை புலர்த்துவோனே" (புறம். 251)

எனவும்,

"தாழ்காவின், அவிர் சடைமுனிவர் அங்கிவேட்கும்
ஆவுதி நறும்புகை" (பட்டினப். 53, 54)

எனவும்,

"சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தியந்தணர் அருங்கடன் இறுக்கும்
பொற்கோட்டிமயமும் பொதியமும் போன்றே" (புறம். 2)

எனவும் வரும் தொடர்கள் இத்தகைய அருந்தவ

முனிவர்களைக் குறிப்பன.

மிக்கதவத்தைச் செய்த பெருமக்கள் தமது உடம்பினை நிலத்தில் அழிய விடாமலே அவ்வுடம்போடு நெடுங்காலம் வாழ்ந்திருந்து தாம் செய்த தவப்பயனை நுகரும் சித்தர்களாகத் திகழ்ந்தனர். இச்செய்தி,

> "தவஞ்செய்மாக்கள் தம்முடம்பு இடாது
> அதன்பயம் எய்திய அளவை மான" (பொருந. 91, 92)

எனவரும் பொருநராற்றுப்படைத் தொடராற் புலனாகும்.

"மிக்க தவத்தைச் செய்கின்ற பெருமக்கள் தம்முடைய தவத்திற்கு உறுதுணையாகிய உடம்பினை நிலத்தில் இறக்கவிடாமல் அவ்வுடம்புடன் நெடுங்காலம் உயிர்வாழ்ந்திருந்து அத்தவத்தாற் பெறுதற்குரிய பயனைப் பெற்ற தன்மையை யொப்ப" என்பது மேற்குறித்த தொடரின் பொருளாகும்.

வான்மீகியார் என்னும் புலவர்பெருமான் தவத்தின் சிறப்பினை யுணர்த்துவதாக அமைந்தது,

> "பருதி சூழ்ந்த இப்பயங்கெழு மாநிலம்
> ஒருபகல் எழுவர் எய்தியற்றே
> வையமும் தவமும் தூக்கின் தவத்துக்கு
> ஐயவியனைத்தும் ஆற்றாது ஆகலின்
> கைவிட்டனரே காதலர் அதனால்
> விட்டோரை விடாள்திருவே
> விடாதோர் இவள் விடப்பட்டோரே" (புறம். 358)

எனவரும் புறநானூற்றுப் பாடலாகும். இது, மனையறம் துறவறம் என்னும் இருவகையறங்களுள் துறவறத்தின் சிறப்பினை விரித்து விளக்குவதாய் வீடுபேறடைதற்கு நிமித்தமாக விளங்குவது இருவகைப் பற்றுக்களையும் நீத்த துறவறமே என வற்புறுத்துகின்றது.

"சூரியனாற் சூழப்பட்ட பயன்நிரம்பிய இவ்வுலகம்

ஒருநாளில் எழுவரைத் தலைவராக எய்தியதனையொத்து நிலைமாறும் தன்மையதாகும். இவ்வுலகத்தையும் மக்கள் மேற்கொள்ளவேண்டிய தவத்தையும் இவற்றுள் எது சிறந்தது எனச் சீர்தூக்கிப் பார்ப்போமானால் இவ்வுலகம் தவத்தொடு வைத்து நோக்க வெண்சிறுகடுகளவும் நிறை நிற்பதன்றாம். ஆதலால் வீட்டின்பம் பெற விரும்பியோர் மனைவாழ்க்கையைத்துறந்து தவத்திற் புகுந்தார். அதனால் உலகப் பற்றினை விட்டோராகிய அவரைச் செல்வத்திற்குத் தெய்வமாகிய திருமகள் கைவிடமாட்டாள். உலகப் பற்றினை விடாத ஏனையோர் இத்திருமகளாற் கைவிடப் பட்டவர்களே" என்பது இப்பாடலின் பொருளாகும் இறைவன் திருவருளையே விரும்பி ஏனைப் பொருள்களிற் பற்று விட்டவர்களையே எல்லாச் செல்வங்களும் விரும்பித் தொடரும் என்பது,

> "நின்னையே தான்வேண்டி நீள் செல்வம் வேண்டாதான்
> தன்னையே தான்வேண்டும் செல்வம்"
>
> ( திவ். பெருமாள் திருமொழி 5

எனவரும் குலசேகரப் பெருமாள் அருளிச் செயல் உ பற்றினைத்துறந்து பற்றற்றானைப் பற்றுதலால் வ பயனைப் புலப்படுத்தல் காணலாம்.

## முக்கோலந்தணர்

எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகும் அறவோராகிய இவர்கள் உறியிலே தங்கின கமண்டலத் தையும் மூன்று கோல்களை ஒன்றாகச் சேர்த்துக் கட்டின முக்கோலையும் முறைமைப்படத் தோளிலே சார்த்திக் கொண்டு வெயில் வெம்மையினைத் தாங்கும் குடையினை யேந்திக் கொண்டு வெம்மையுடைய காட்டின்கண்ணே செல்லும் துறவிகளாவர். இவர்கள் கொண்டுள்ள முக்கோல் படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத் தொழிலுக்குரிய அயன் அரி அரன் என்னும் மூவரும் வடிவினாலும் தொழிலினாலும் வேறுபடினும் முழுமுதற் கடவுளாந் தன்மையில் ஒருவரே யென்பதனை யுணர்த்தும் அடையாளமாகும். இந்நுட்பம் 'உரைசான்ற முக்கோலும்'

என்ற கலித்தொகைத் தொடர்க்கு "அரிஅயன் அரன் அமைந்த முக்கோலையும்" என நச்சினார்க்கினியர் எழுதிய உரையால் நன்கு புலனாதல் காணலாம். இவர்தம் இயல்பினை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது,

"எறித்தரு கதிர்தாங்கி யேந்தியகுடைநீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்றமுக்கோலும்
நெறிப்படச் சுவல் அசைஇவேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல் செயல் மாலைக்கொளைநடை அந்தணீர்"

(கலி. 3)

எனவரும் பாலைக்கலியாகும.

"எறித்தலைச் செய்கின்ற ஞாயிற்றின் கதிர்களைத் தாங்குகையினாலே எடுக்கப்பட்ட குடைநீழலிலே உறியிலே தங்கின கமண்டலத்தையும் சொல்லுதல் அமைந்த முக்கோலையும் முறைமைப்படத் தோளிலேவைத்து (முத்தொழில் புரியும் கடவுளர் மூவரையும் ஒருவராக வல்லது) வேறாக நினையாத நெஞ்சத்தாலே (ஐம்பொறியும்) மனக்குறிப்பின்படி ஏவல் செய்யும் கோட்பாட்டையும் ஒழுக்கத்தையும் உடைய அந்தணர்களே" என்பது மேற்காட்டிய தொடரின் பொருள். 'வேறொராநெஞ்சத்து' என்பதற்கு "அரிஅயன்அரன் என்னும் மூவரையும் ஒருவனாக அல்லது வேறாக நினையாத நெஞ்சத்தாலே" எனவும், 'குறிப்பு ஏவல் செய்மாலைக் கொளைநடை அந்தணீர்' என்பதற்கு 'ஐம்பொறியும் நுமக்கு ஏவல் செய்தலை இயல்பாகவுடைய கோட்பாட்டையும் ஒழுக்கத்தையும் இயல்பாகவுடையீர்' எனவும் நச்சினார்க்கினியர் எழுதிய உரைவிளக்கம் மிகவும் பாராட்டுதற்குரியதாகும்.

முக்கோற்பகவராகிய இவர்கள் காவிக்கல் பொடியில் தோய்த்தெடுத்த கல்லாடையினையுடுக்கும் தவக் கோலம் உடையர் என்பது,

"கற்றோய்த் துடுத்த படிவப்பார்ப்பான்
முக்கோல் அசைநிலை கடுப்ப" (முல்லைப். 36-37)

எனவரும் முல்லைப்பாட்டடிகளாற் புலனாகும்.

சிவபெருமானை வழிபடுவோராகத் தேவார ஆசிரியர்களாற் குறிக்கப்படும் அகச்சமயத்தார் அறுவருள் அவிர்சடைமுனிவர் வழியொழுகும் திருவேடமுடையார் விரிசடை விரதிகள் எனவும், முக்கோலந்தணர் வழியொழுகும் தவவேடமுடையார் அந்தணர் எனவும் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

**வடக்கிருத்தல்**

உலகவாழ்க்கையில் தாம் செய்துமுடிக்க எண்ணிய அருஞ்செயலை இப்பிறப்பில் நிறைவேற்ற முடியாத நிலையினை அடைந்தவர்களும் ஆருயிர் நண்பரையிழந்தவர்களும் பிறவிப்பிணிப்பினை நீத்து உயர்ந்தவுலகமாகிய வீடுபேற்றினை விரும்பி இவ்வுலக வாழ்க்கையினைத் துறந்து உண்ணாநோன்பினை மேற்கொண்டு புண்ணியத்திசை யெனப்படும் வடதிசையினை நோக்கி ஓரிடத்து அமர்ந்திருந்து ஊனினுள் உயிரைவாட்டித் தம்முள்ளத்துள்ளே மெய்ப்பொருளை இடைவிடாது நினைந்திருந்து தம் உயிரைத்துறப்பர். வடதிசையினை நோக்கி மெய்ப்பொருளை நினைந்து உண்ணா நோன்பினராய்த் தமது உயிரைத் துறந்து வீடுபெறும் இத்தவ நிலை வடக்கிருத்தல் என்ற பெயராற் புறநானூற்றிற் குறிக்கப் பெற்றுள்ளது. உண்ணாநோன்பிருந்து உயிர் துறத்தல் சமண்சமயச் சான்றோர்களால் மேற்கொள்ளப் படுவது. எனினும் வடக்கு நோக்கித் தியானத்தில் இருத்தல் வேண்டும் என்னும் நியதி அவர்கட்கு இல்லை. தமிழகத்தின் தென்பகுதி கடலாற்கொள்ளப்பட்டு அத்திசை அழிவிற்கு இடமா னமையின் தென்திசை கூற்றுவன் திசையெனவும் தெற்கே குமரி கடலாற் கொள்ளப்பட்ட காலத்து வடக்கே இமயம் உயர்ந்து தோன்றி இடந்தந்தமையின் வடதிசை புண்ணிய திசையெனவும் மக்களாற் கருதப்படுவன வாயின. அன்றியும் இமயம் சிவபெருமான் வீற்றிருக்கும் கயிலைச் சிகரத்தைத் தன்கண் கொண்டமையாலும் அம்முதல்வன் ஆலின்கீழ் முனிவர்கட்கு அறமுரைத்த ஞான்று தென்திசை

நோக்கியிருந்தமையாலும் உலகப் பற்றினைத்துறந்து வீடெய்த விரும்பும் பெருமக்கள் வடதிசை நோக்கியிருந்து மெய்ப்பொருளை இடைவிடாது சிந்தித்திருந்து உயிர் துறத்தலைத் தமக்குரிய தவநோன்பாகக் கொண் டொழுகினர் எனக் கருதவேண்டியுள்ளது. உண்ணா நோன்புடையராம் வடக்கிருத்தலை மேற்கொள்வோர் வெயில் வெப்பந்தாக்காது ஆற்றிடைக்குறையினையும் சோலையினையும் வடக்கிருத்தற்குரிய இடமாகக் கொண்டனர். இதனைக் கூர்ந்து நோக்குங்கால் சுடுபாறையிற் கிடத்தல் முதலாக உடம்பினை வருத்தும் முறைகளைக் கொண்ட சமணரது உண்ணாநோன்பின் வேறுபட்டது வடக்கிருத்தலாகிய இந்நோன்பென்பது நன்கு புலனாகும்.

சேரமான் பெருஞ்சேரலாதன், சோழன் கரிகாற் பெருவளத்தானோடு வெண்ணிப்பறந்தலையிற் போர் செய்த நிலையில் கரிகாற்பெருவளத்தான் எய்த அம்புத் தன்மார்பில் தைத்து ஊடுருவிப்புறத்துச் சென்றநிலையில் தன்முதுகில்புறத்து உண்டாகிய புண் புறப்புண்ணாதலை யொக்கும் என நாணி வாளொடு வடக்கிருந்து உயிர் துறந்தனன் என்ற செய்தி புறநானூறு 65, 66ஆம் பாடல்களில் விரித்துரைக்கப் பெற்றுள்ளது. தன்மக்க ளொடு மாறுபட்டுப் போர்மேற் சென்ற கோப்பெருஞ் சோழன் புல்லாற்றூர் எயிற்றியனார் என்னும் புலவர் பெருமானால் தெருட்டப்பட்டு உள்ளந் தெளிந்து வடக் கிருந்து உயிர்துறந்தான் என்பதும் அவன் நினைத்த வண்ணம் அவனுடைய ஆருயிர் நண்பர் பிசிராந்தையாரும் ஆங்கு விரைந்துவந்து அவனுடன் வடக்கிருந்து உயிர் துறந்தார் என்பதும் மன்னன் பணித்த வண்ணம் இல்லறக் கடமை முடிந்தபின் மன்னன் நடுகல்லின் அருகே வடக்கிருந்து உயிர்துறந்தார் என்பதும் புறநானூறு 213, 215, 216, 217, 218, 219, 223ஆம் பாடல்களாற் புலனாகும். பாரிவேள் இறந்த பின்னர் அவனுடைய ஆருயிர் நண்ப ராகிய கபிலர் என்னும் புலவர் பெருமான் பாரி மகளிரைப் பார்ப்பாரிடத்தே அடைக்கலமாக ஒப்புவித்துத் திருக்கோவ லூரிற் பெண்ணையாற்றின் நடுவே வடக்கிருந்து உயிர்

துறந்தார் என்பது 236ஆம் புறப்பாட்டாலும் அதன் அடிக்குறிப்பாலும் திருக்கோவலூர் வீரட்டானேசுவரர் திருக்கோயிலிற் பொறிக்கப்பெற்றுள்ள முதல் இராசராச சோழன் காலத்துக் கல்வெட்டாலும் நன்கு விளங்கும்.

## அறஞ்செய்தலின் இன்றியமையாமை

வடக்கிருந்து உயிர்துறக்க முற்பட்ட கோப்பெருஞ் சோழன் பாடிய 214ஆம் புறப்பாடல் இருவினைப்பயனும் மறுபிறப்புண்மையும் பற்றித் தமிழ்முன்னோர் கொண்ட நம்பிக்கையைப் புலப்படுத்துவதாகும். நல்லறஞ் செய்வோர்க்கு மறுமையில் வானுலகநுகர்ச்சியும் அந் நுகர்ச்சியில் விருப்பில்லையெனில் மீண்டும் பிறவாமையாகிய பேறும், இம்மையில் நீண்ட புகழும் உண்டாகும் எனக் கூறுமுகத்தால் நல்லறஞ் செய்தலின் இன்றியமையாமையினை மறுபிறப்பில் நம்பிக்கையில்லாதவர்களும் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் அறிவுறுத்துவது இப்பாடலாகும்.

பாரி வள்ளலின் பிரிவாற்றாது வடக்கிருந்த கபிலர் பாரியை நினைந்து பாடிய பாடலில்,

> **“இம்மைபோலக் காட்டி உம்மை**
> **இடையில் காட்சிநின்னோடு**
> **உடனுறைவாக்குக உயர்ந்த பாலே”** (புறம். 236)

எனத் தமது விருப்பத்தை வெளியிட்டுள்ளார். “பெரிய வண்மையையுடைய பாரியே, இப்பிறப்பின்கண் நீயும் யானும் தோழமையாற் கூடியின்புற்றாற் போலக்காட்டி, மறுபிறப்பினும் தடைபடாது பேரறிவினையுடைய நின்னோடு கூடி வாழ்தலை உயர்ந்த நல்லூழ் கூட்டுவதாகுக” என நல்லூழின் விளைவையெண்ணி ஆறுதலடையும் நிலையில் அமைந்தது இப்பாடலாகும்.

> “வாழச் செய்த நல்வினை யல்லது
> ஆழுங்காலைப் புணைபிறிதில்லை” (புறம். 367)

எனவரும் ஔவையார் வாய்மொழி இங்கு நினைத்தற்

குரியதாகும்.

இவ்வுலக வாழ்க்கையில் இன்பம் துன்பம் என்னும் இருவினைப்பயன்களும் புணர்வும் பிரிவும் என்னும் நலந்தீங்குகளும் நாள்தோறும் வரும் பகலும் இரவும் போன்று வெவ்வேறியல்பினவாய் மாறிமாறி வருவன. இவ்வியல்பு

> **"இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்**
> **நண்பக லமையமும் இரவும்போல**
> **வேறுவேறியல வாகிமாறெதிர்ந்**
> **துளவென வுணர்ந்தனையாயின"** (அகம். 327)

எனவரும் அகநானூற்றுத் தொடரால் இனிது புலனாகும்.

இப்பிறப்பில் நல்லறங்களைத் தொடர்ந்து செய்து கொண்டிருக்கும் நிலையில் தீவினைப் பயன் தாக்குதல் இல்லையென்னும் பொதுவுண்மையினை வற்புறுத்தும் நிலையில் அமைந்தது, "இம்மை, நன்றுசெய் மருங்கில் தீதுஇல்" என்னும் தொன்றுபடு பழமொழி ஆகும்.

மக்களாற் செய்யப்பட்ட இருவினைமுதிர்ந்து பயன் கொடுக்கும் திறத்தில் நல்வினைப்பயனாகிய இன்பமும் தீவினைப் பயனாகிய துன்பத்துடன் கலந்துவரும் என்பது,

> **"நன்றிவிளைவும் தீதொடுவரும்"**

என்ற தொடராற் புலப்படுத்தப்பட்டது.

இப்பிறப்பிற் செய்த அறம் மறுபிறப்பில நற்பயன் விளைக்கும் என்பது முன்னோர் கொண்ட நம்பிக்கையாகும். இந்த நம்பிக்கையின் விளைவாக மறுமைப்பயன்களை எதிர்பார்த்து அறஞ்செய்வோரும் எந்தப்பயனையும் எதிர்பாராது நல்லவையெல்லாம் செய்தற்குரியவை என்ற கடமையுணர்வுடன் அறஞ்செய்வாரும் என அறஞ் செய்வார் இருதிறப்படுவர். அவருள் மறுமைப்பயனை எதிர்நோக்கி அறஞ்செய்வோர் அறத்தினை விலைக்கு விற்கும் வணிகர் போன்று கருதப்படுவர். பயன்கருதாது

சான்றோர் சென்ற நெறியிது வெனக்கொண்டு அறம் புரிதலே மெய்யுணர்ந்தோர் கடமையாகும். இக்கடமை யினை யுணர்ந்து நல்லறம் செய்பவன் ஆய் என்னும் வள்ளல் என்பதனை,

> "இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும்
> அறவினைவணிகன் ஆய் அலன்; பிறரும்
> சான்றோர் சென்ற நெறியென
> ஆங்குப்பட்டன்று அவன் கைவண்மையே" (புறம். 134)

எனவரும் பாடலால் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் பாராட்டிப் போற்றியுள்ளார். "இப்பிறப்பிற் செய்ததொன்று மறுபிறப்பிற்கு உதவும் என்று கருதிப் பொருளை விலையாகக் கொடுத்து அதற்கு அறங்கொள்ளும் வணிகன் ஆய் அல்லன்; குணங்களால் நிறைந்தோர் பிறரும் சென்றவழியென்று உலகத்தார் கருத அந்த நற்செய்கையிலே பொருந்தியது அவனது கைவண்மையாகும்" என்பது இப்பாடலின் பொருளாகும்.

நரிவெரூஉத்தலையார் உறுதிப்பொருள்களை உலக மக்களுக்கு அறிவுறுத்துவாக அமைந்தது,

> "பல்சான்றீரே பல்சான்றீரே
> கயல்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
> பயனில் மூப்பிற் பல்சான்றீரே
> கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
> பிணிக்குங்காலை இரங்குவிர்மாதோ
> நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
> அல்லது செய்தல் ஓம்புமின், அதுதான்
> எல்லாரும் உவப்பதன்றியும்
> நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே" (புறம். 195)

எனவரும் புறநானூற்றுப்பாடலாகும். தம் வாழ்நாளில் இளம் பருவத்தே பயனுடைய நல்லறங்களைச் செய்யாது வாழ்நாளை வீணே கழித்து முதுமைப்பருவம் எய்திய மாந்தரை நோக்கி "எத்தகைய அறங்களையும் செய்யாது வாழ்நாளை வீணே கழித்த பயனற்ற முதுமைப் பருவத்தின

ராகிய நீவிர் தமது உயிரைக் கூற்றுவன்கவர்ந்து கொள்ள வரும் இறுதிக்காலத்துப் பெரிதும் வருந்துவீர்கள். இப்பொழுது நல்லறங்களைச் செய்யும் ஆற்றலற்ற நிலையில் நீவிர் இருந்தாலும் பிறவுயிர்க்குத் தீமை செய்தலையேனும் ஒழிப்பீராக. அங்ஙனம் எவ்வுயிர்க்கும் தீமைசெய்யா திருப்பதே யாவராலும் உவந்து புகழப்படுவது மட்டுமன்றி நும்மை நன்னெறிக்கண் செலுத்தும் அறவழியும் ஆகும்" என அறிவுறுத்துவது பொருண்மைமொழிக்காஞ்சி யென்னுந் துறையிலமைந்த இப்பாடலாகும்.

அறச்செயலாகிய நல்வினையால் இன்பமும் தீவினையால் துன்பமும் ஆகிய நுகர்ச்சி வினைசெய்தார்க்கு உண்டு என்னும் சான்றோர் துணிபினை ஏற்றுக்கொள்ளாது உலகிற் செய்யப்படும் நன்றும் தீதும் ஆகிய வினைகளால் எந்தப் பயனும் விளைதல் இல்லையென்னும் இம்மைக் கொள்கையினராய்த் தம்மனம் போனவாறு செய்தொழுகும் தீவினையாளராகிய சிற்றினத்தாரோடு சேர்தலாகாது என அறிவுறுத்துவது,

> **"நல்லதன் நலனும் தீயதன் தீமையும்**
> **இல்லையென்போர்க்கு இனன் ஆகிலியர்"** (புறம். 29)

எனவரும் புறநானூற்றுத் தொடராகும். "நல்வினையினது நன்மையும் தீவினையினது தீமையும் இல்லையென்று சொல்லுவோர்க்கு இனமாகாது அவரைவிட்டு நீங்கு வாயாக" என்பது இத்தொடரின் பொருளாகும்.

வானத்திலுலவும் மேகம் பெருமழையைப் பெய்தமையால் உண்டாகிய வெள்ளப் பெருக்கு மலை முகட்டில் உள்ள கற்களையலைத்துக் கொண்டு போறராக இழியும் நிலையினையொத்தது, உலகினை இயக்கும் பேராற்றலினால் முறைப்படுத்தப்படும் ஊழாகிய நியதி என்பதும், அவ்வாற்றினால் ஈர்த்துச் செல்லப்படும் மிதவை (தெப்பம்) போன்றது மன்னுயிர்த்தொகுதி என்பதும், ஊழின்வயப்பட்ட உயிர்கள் உலகிற் பல்வேறு நாடுகளிலும் பல்வேறினங்களிலும் பிறந்தும் இறந்தும் உழன்று இரு

வினைப் பயன்களை நுகர்தலின் அவ்வுயிர்கட்கு யாதும் ஊரே, யாவரும் உறவினரே என்பதும், மக்கள் அடையும் நன்றும் தீதும் ஆகியன பிறரால் தரப்படுவன அல்ல, அவரவர் செய்த வினைப்பயனாகத் தாமே வருவன என்பதும், உலகியலிலே மக்கள் பெறும் உயர்வு தாழ்வுகட்கு அன்னோர் இயற்றிய இருவினைப் பயனாகிய ஊழ் என்னும் முறைமையே காரணமாதலால், நல்வினையால் உயர்ந்த பெருமக்களை வியந்து புகழ்தலையோ அன்றித் தீவினை யால் தாழ்வுற்ற சிறியவர்களை எண்ணி இகழ்தலையோ மெய்யுணர்ந்தோ ராகிய தத்துவ ஞானிகள் ஒருபோதும் மேற்கொள்ள மாட்டார்கள் என்பதும் ஆகியவுண்மை களைத் தம் அனுபவத்தில் வைத்து உணர்ந்த நிலையில் உலக மக்களுக்கு அறிவுறுத்துவதாக அமைந்தது,

> **"யாதும் ஊரே யாவரும் கேளிர்**
> **தீதும் நன்றும் பிறர்தர வாரா**
> **நோதலுந் தணிதலும் அவற்றோரன்ன**
> **சாதலும் புதுவதன்றே வாழ்தல்**
> **இனிதென மகிழ்ந்தன்று மிலமே முனிவின்**
> **இன்னாதென்றலும் இலமே, மின்னொடு**
> **வானந் தண்டுளி தலைஇ யானாது**
> **கல்பொரு திரங்கு மல்லற் பேரியாற்று**
> **நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்**
> **முறைவழிப் படூஉ மென்பது திறவோர்**
> **காட்சியிற் றெரிந்தன மாதலின் மாட்சியிற்**
> **பெரியோரை வியத்தலு மிலமே**
> **சிறியோரை யிகழ்தல் அதனினுமிலமே"** (புறம். 192)

எனவரும் கணியன் பூங்குன்றனார் பாட்டாகும்.

இதன்கண், 'ஆருயிர் முறைவழிப் படூஉம் என்பது, திறவோர் காட்சியின் தெரிந்தனம் ஆதலின்' எனவரும் தொடர் ஏதுமொழியாய் நின்று, "யாதும் ஊரே யாவரும் கேளிர், தீதும் நன்றும் பிறர் தரவாரா, நோதலும் தணிதலும் அவற்றோரன்ன, சாதலும் புதுவதன்றே" எனவரும் கருத்துக்களை முடித்து நின்றது. இங்கு எடுத்துக்காட்டிய

வினையுணர்வின் பயனாகத் தம் வாழ்விற் கடைப்பிடித்து வரும் கொள்கைகளாக, 'வாழ்தல் இனிதென மகிழ்ந்தன்று மிலமே, முனிவின் இன்னாதென்றலும், மாட்சியிற் பெரியோரை வியத்தலுமிலமே, சிறியோரை யிகழ்தல் அதனினும் இலமே' என்பவற்றைக் கணியன் பூங்குன்றனார் தம் வாழ்வியல் அனுபவத்தில் வைத்து எடுத்துக்காட்டி யுள்ளமை காணலாம். வினையுணர்வு பற்றிய இம்முடிவுகள் கடவுளுண்மையினையுடம் படாது உயிர்கள் உண்டெனக் கொண்ட சமணம் முதலிய பிற சமயங்களுக்கும் ஒத்தனவே யாகும். எனினும் கடவுளுண்மையினை வற்புறுத்தும் சமயங்களுக்கு, வினையுணர்வு பற்றிய இம்முடிவுகள் மிகவும் சிறப்புரிமையுடையனவென்பது 'பால்வரை தெய்வம் வினையே பூதம்' எனவரும் தொல்காப்பியத் தொடர்ப் பொருள் பற்றி முன்னர்க்கூறிய விளக்கத்தாற் புலனாகும். படைப்புக் காலந்தொடங்கி மன்னுயிர்கள் வினைவயத்தாற் பல்வேறிடங்களிலும் பல்வேறுடம்புகளிலும் பிறந்திறந்து அலமரும் நிலையில், அவ்வுயிர்களுக்கு யாதும் ஊராகவும் யாவரும் உறவினராகவும் அமைந்துள்ள திறத்தினை

"அகில லோகமும் அனந்தயோனியும்
நிகிலமும் தோன்ற நீ நினைந்த நாள்தொடங்கி
எனைப்பல யோனியும் நினைப்பரும் பேதத்து
யாரும் யாவையும் எனக்குத் தனித்தனித்
தாயராகியும் தந்தையராகியும்
வந்திலாதவர் இல்லை யான் அவர்
தந்தை யராகியும் தாய ராகியும்
வந்தி ராததும் இல்லை, முந்து
பிறவா நிலனும் இல்லை அவ்வயின்
இறவா நிலனும் இல்லை"

(பதினொராந்திருமுறை,
திருக்கழுமல மும்மணிக் கோவை, 7)

எனத் திருவெண்காட்டடிகள் விரித்துக் கூறியுள்ளார். இங்கு எடுத்துக்காட்டிய திருக்கழுமல மும்மணிக்கோவைப் பாடற்பகுதி 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' எனவரும் புறநானூற்று அடிக்குரிய உரைவிளக்கமாகத் திகழ்தல்

காணலாம். எனவே கணியன்பூங்குன்றனார் பாடலில் 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' என்று முதற்கண் காணப்படுந் தொடர் உலகவொற்றுமை பற்றி இக்காலத்திற் கூறப்பட்ட வெறும் உபசாரமொழி போல்வதன்று என்பதும் அத்தொடர் தமிழர் கண்ட தத்துவவுணர்வின் பயனாக உருவாகிய உண்மையினைப் புலப்படுத்தும் வாய்மொழி யாகும் என்பதும் இங்கு மனங்கொளத்தக்கனவாகும்.

உலக வாழ்க்கையில் மக்கள் அடையும் கேடும் ஆக்கமும் பிறரால் தரப்படுவன அல்ல, அவர்கள் செய்த இருவினை காரணமாக ஊழ்வயத்தால் தாமே வருவன என்னும் மெய்ம்மையினை வற்புறுத்துவது, 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்ற தொடராகும். களவொழுக்கம் ஒழுகும் தலைவன் தலைவியை மணந்து கொள்ளுதலில் நாட்டமின்றி அவ்வொழுக்கத்தில் நீட்டித்தொழுகியவழி அவனைத் தெருட்டும் தோழி அவன் சிறைப்புறத்தானாகத் தலைவிக்குக் கூறுவாளாய்ச் சொல்லியது, 'யாம் செய் தொல்வினைக்கு எவன் பேதுற்றனை' (நற். 88) எனவரும் நற்றிணைப் பாடலாகும். "நாம் செய்த பழவினைப் பயனாகிய நாம் செய்த வினையால் நாமே தேடிக் கொண்டது எனத் தெளிந்து நாமே நுகர்வதன்றிப் பிறரைக் காரணமாக எண்ணி ஏன் மயங்குகின்றாய்" எனத் தலைவியை நோக்கி வினவும் முறையில்அமைந்தது, மேற்குறித்த நற்றிணைத் தொடராகும். 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்னுங் கொள்கையினை வலியுறுத்தும் முறையில் இத்தொடர் அமைந்துள்ளமை இங்கு மனங்கொளத்தகுவதாகும்.

### உடம்பும் உயிரும்

காணப்படும் உருவுடையதாகிய உடம்பும் அதனை உடனிருந்து இயக்குவதாய்க் காணாத மரபினதாகிய உயிரும் பொருட்டன்மையால் வேறுபட்ட இருவேறு பொருள்கள் என்பதும் அவ்விரண்டும் ஒற்றுமைத் திறத்தால் ஒன்றெனத் தோன்றினும் அவற்றின் தன்மையால் வேறுபட்டன என்பதும், அவற்றுள் காணப்படும் உருவினதாகிய உடம்பு அறிவில் பொருளாய் அழியுமியல்பினதாம் என்பதும் காணா

மரபினதாகிய உயிர் அறிவுடைப் பொருளாய் என்றும் அழிவின்றி நிலைபெற்ற உள்பொருளாம் என்பதும் ஆசிரியர் தொல்காப்பியனார்க்கு முன்தொடங்கித் தமிழகத்தில் நிலவி வரும் மெய்யுணர்வுக் கொள்கையென்பது முன்னர் விளக்கப் பெற்றது. இத்தத்துவநுட்பத்தினைத் தமிழ் நெடுங் கணக்கினைப் பயிலும் இளஞ்சிறார்களும் எளிதில் உணர்ந்து கொள்ளும் முறையில் தானே இயங்கும் ஒலித்தற்றன்மை யுடைய அகர முதல் ஔகாரமீறாகிய பன்னிரண்டெழுத்துக் களையும் உயிர் எனவும் உயிர் உள்நின்று செலுத்தினாலன்றி யியங்காத உடம்பினைப் போன்று உயிரெழுத்துக்களின் துணையைப் பெற்றாலன்றி இயங்காத ககரமுதல் னகர மீறாகிய பதினெட்டெழுத்துக்களையும் மெய் எனவும் பெயரிட்டு வழங்கிய பண்டைத் தமிழிலக்கண நூலாரது மெய்யுணர்வுக் கொள்கையே தமிழர் சமயத் தத்துவக் கொள்கைகட்கெல்லாம் வேராக அமைந்தநுட்பமும் முன்னர் எடுத்துக்காட்டி விளக்கப்பெற்றது.

உடம்பினின்றும் உயிரைக் கவர்ந்து உடம்பையும் உயிரையும் வேறு பிரிக்கும் தெய்வ ஆற்றல் ஒன்று உண்டு என்னும் நம்பிக்கையுடையவர்கள் தமிழ் முன்னோர் என்பது 'கூற்று' என்னும் தலைப்பில் முன்னர்க் கூறப்பட்டது. உயிர்கள் பலவென்பதும் உடம்பினின்றும் உயிரைப் பிரிக்கும் கூற்று என்னும் தெய்வ ஆற்றல் ஒன்றேயென்பதும்,

> "மன்னுயிர்ப் பன்மையும் கூற்றத்து ஒருமையும்
> நின்னொடு தூக்கிய வெண்வேற்செழிய" (புறம். 19)

எனப் பாண்டியன் நெடுஞ்செழியனைக் குடபுலவியனார் பாடிய புறப்பாடலால் அறியலாம். "நிலைபெற்ற உயிரது பன்மையும் அவ்வுயிரைக் கொள்ளுங் கூற்றினது ஒருமை யையும் நின்னுடனே சீர்தூக்கிக் காட்டிய வென்றிவேலை யுடைய செழியனே" என்பது மேற்குறித்த புறப்பாடலடி களின் பொருளாகும். பழையதாய் நின்று தொன்மை யுடையது உயிர் எனவும் அவ்வுயிருடன் கூடி நின்று முதிர்ந்தது உடம்பு எனவும் எனவே உயிரும் உடம்பும் வேறு எனவும் அங்ஙனம் அவை பொருளால் வேறுபட்டன வேனும் கலப்பினால் ஒன்றுபட்டன எனவும் உணர்த்துவது,

"தொன்று மூத்தவுயிரினும் உயிரொடு
நின்று மூத்த யாக்கையன்ன" (புறம். 24)

எனவரும் புறப்பாடற்றொடராகும்.

உயிர் உடம்பை விட்டுப் பிரியுங்காலத்துத் தன்னை மறவாது அடுத்தவினை காட்டுங் கதிகளிற்புகும் நினைவுடையதாய்ச் செல்லும் என்பது,

"என்னுயிர் யாக்கையிற் பிரியும் பொழுதும்
என்னியான் மறப்பின் மறக்குவென்" (புறம். 175)

என ஆதனுங்கனைக் கள்ளில் ஆத்திரையனார் பாடிய புறப்பாட்டாலறியலாம். "ஆதனுங்கனே என்னுயிர் உடம்பை விட்டுப் போகும்போதும் யான் உன்னை மறப்பேனாயின் நின்னையும் மறப்பேன். அக்காலத்து உடம்பை விட்டுப் பிரியும் இடர் நிலையேனாகிய யான் என்னை மறவாமை போல எனக்குப் பேருதவிபுரிந்த நினையும் மறக்கமாட்டேன்" என்னுங் கருத்திற் கூறப்பட்டது இத்தொடராகும்.

பகைவர் பற்றிச் சென்ற ஆனிரையை மீட்டுச் செருக்களத்தில் இறந்து பட்டவீரனைக் குறித்து இரங்குவதாகிய கையறு நிலைச் செய்யுளில்,

"நிரையொடு வந்த வுரையனாகி
உரிகளையரவ மானத்தானே
அரிது செல்லுலகிற் சென்றனன், உடம்பே
கானச் சிற்றியாற்றருங்கரைக் காலுற்றுக்
கம்பமொடு துளங்கிய இலக்கம் போல
அம்பொடு துளங்கி யாண்டுப்பட்டன்றே" (புறம், 260)

எனவரும் பகுதி உயிரும் உடம்பும் வேறென்பதைத் தெளிவுபடுத்துகின்றது.

"ஆனிரையுடனே வந்த புகழையுடையனாய்த் தோல் உரித்த (சட்டை கழற்றிய) பாம்புபோல அரிது செல்லுலகமாகிய தேவருலகிற் போயினான். அவனது உடம்பு (வீரர்கள் அம்பு எய்து பழக) காட்டிற் சிற்றாற்றங்

கரையில் நடப்பட்ட இலக்காகிய கம்பம் காற்றினாற் சாய்ந்து வீழ்ந்தாற்போன்று அம்புகள் பட்டு அவ்விடத்தே வீழ்ந்தது" என்பது மேற்குறித்த தொடரின் பொருளாகும். சட்டை கழற்றிய பாம்புக்கும் அதனாற் கழற்றப்பட்ட சட்டைக்கும் சிறிதும் தொடர்பில்லாமை போலத் தேவருலகிற் புக்க வீரனது உயிர்க்கும் அவனது உயிர் பிரிதலால் நிலத்தில் வீழ்ந்து பட்ட உடம்புக்கும் சிறிதும் தொடர்பில்லை யென்பது இத்தொடராற் புலப்படுத்தப் பெற்றுள்ளமை அறியத் தகுவதாகும்.

"உடம்புந்தோன்றா உயிர்கெட்டன்றே" (புறம். 282) என்ற தொடரும் இக்கருத்தினதே.

உயிருக்கு என்றும் அழிவில்லையென்பதும் அருவாகிய உயிர்நிலைத்தற்குரிய உருவாகிய உடம்பு அழியுந்தன்மையது என்பதும், என்றும் அழியாது நிலைத்த உடம்பு இல்லையென்பதும்

> "வீயாது, உடம்பொடு நின்ற உயிரும் இல்லை
> மடங்கல் உண்மை மாயமோ அன்றே" (புறம். 363)

எனவரும் புறநானூற்றுத் தொடரால் நன்கு துணியப்படும். "நீங்காது ஓருடம்பிலேயே எக்காலத்தும் நிலைபெற்றுள்ள உயிரும் இல்லை, உயிரை உடம்பினின்றும் பிரிக்கும் கூற்று உண்டென்பது பொய்யும் அன்று" என்பது இத்தொடரின் பொருளாகும். எனவே, மன்னுயிர், ஓருடம்பில் நிலைத்து நில்லாது அவ்வுடம்பினை விட்டிறந்தும் வெவ்வேறு உடம்பினைப் பெற்றுப் பிறந்தும் பிறவிப் பெருங்கடலிற் சிக்குண்டு வருந்தும் இயல்பினது என்பதனை உய்த்துணர வைத்தாராயிற்று.

இவ்வாறு உயிரும் உடம்பும் வேறென்பது தொல்காப்பியனார் காலத்திற்கும் முன்னிருந்து வழங்கிவரும் தமிழர் தத்துவக் கொள்கையாதலின் அக்கொள்கையே சங்கச் செய்யுட்களிலும் பிற்காலத் தமிழ் நூல்களிலும் தொடர்ந்து நிலைபெற்று வருவதாயிற்று. உயிர் என்பதொன்று இல்லை எனக்கூறும் சூனியான்மவாதமும், தேகமே உயிர் எனக்கூறும்

தேகான்மவாதமும், ஐம்பொறிகளே உயிர் எனக்கூறும் இந்திரியான்மவாதமும் மனமுதலிய உட்கருவிகளே உயிர் எனக்கூறும் அந்தக் கரணான்ம வாதமும், நுண்ணுடலே உயிர் எனக்கூறும் விஞ்ஞானான்மவாதமும், உடம்பு, அந்தக்கரணம் முதலிய அனைத்துங்கூடிய திரட்சியே உயிர் என்னும் சமூகான்மவாதமும் பண்டைத் தமிழ்நூல்களில் யாண்டும் இடம்பெறவில்லை. இனி 'அறிவுடையோர்' (புறம்.197) எனவும் 'அறிவுகெட நின்ற நல்கூர்மை' (புறம்.266) எனவும் உயிர்கள் அறிவும் அறியாமையும் ஒருங்கு உடையனவாய்ப் பிறர் அறிவிக்கக் கருவிகளால் அறிந்து வருதலின், எக்காலத்தும் திரிபின்றி அறிந்தாங்கு அறிந்து நிற்கும் முழுமுதற்பொருளாம் இறைமைத்தன்மை உயிர்கட்கு இல்லை யென்பது நன்கு விளங்கும். எனவே பிரமப் பொருளே ஆன்மா என வாதிக்கும் பிற்கால விஞ்ஞானான்ம வாதத்திற்குப் பண்டைத் தமிழ் நூல்களிற் சிறிதும் இடமில்லை என்பது நன்கு தெளியப்படும்.

'உடம்பின் வேறாக உயிரென்பது உண்டு' எனப் பண்டைத்தமிழர் தெளிவாக வுணர்ந்து மேற்கொண் டொழுகிய தத்துவக்கொள்கையானது பிற்காலத்தில் தமிழகத்தில் வந்து புகுந்த பல்வேறு சமய விகற்பங்களால் கலக்குண்ட நிலையில் அக்கலக்கங்களைக் களைந்து நீக்கி உடலின் வேறாக உயிர் என்பது உண்டு என ஏதுக்காட்டி வற்புறுத்துவது,

> "உளதில தென்றலின் எனதுடல் என்றலின்
> ஐம்புலனொடுக்கம் அறிதலின், கண்படின்
> உண்டி வினையின்மையின் உணர்த்தவுணர்தலின்
> மாயாவியந்திர தனுவினுள் ஆன்மா"
>
> (சிவஞானபோதம், சூத். 3)

எனவரும் சிவஞானபோத மூன்றாஞ் சூத்திரமாகும்.

பத்துப்பாட்டு எட்டுத்தொகையாகிய சங்க விலக்கியங்களிலிருந்து இதுகாறும் எடுத்துக்காட்டிய குறிப்புக்களால் சங்க காலத் தமிழ்மக்கள் வாழ்வியலிற் காணப்பட்ட திருமால் முருகன் முதலிய தெய்வ வழிபாடு

களும் அவ்வழிபாடுகள் எல்லாவற்றுள்ளும் சிவவழிபாடு தலைமையும் சிறப்பும் வாய்ந்ததாக அக்காலத்து வேந்தர்களாலும் குடிமக்களிற் பெரும்பான்மையாராலும் மேற்கொள்ளப்பெற்று வந்தமையும் தமிழகத்திற்குச் சிறப்புரிமை வாய்ந்த சைவசித்தாந்தத் தத்துவக்கொள்கைக்கு மூலமாகிய உண்மைகள் பல சங்க இலக்கியங்களில் வேரூன்றி யுள்ளமையும் ஒருவாறு புலனாதல் காணலாம்.

▯

# திருவள்ளுவர் கூறும் வாழ்க்கை நெறிமுறைகளும் தத்துவவுண்மைகளும்

தமிழ் மக்களது வாழ்வியற் கூறுகளாகிய ஒழுக்கநெறி, கலை, நாகரிகம், பண்பாடு, மெய்ந்நூற்கொள்கை என்பன பிற மொழியாளரிடமிருந்து பிரித்துணர்தற்குரிய தனிச்சிறப்பு வாய்ந்தன என்பது, தொல்காப்பியம், பத்துப்பாட்டுப்பாடல், எட்டுத்தொகை முதலிய தொன்னூல்களால் நன்குணரப் படும். ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்திலும் அவர்க்குப் பின் கடைச்சங்க காலத்திலும் தமிழகத்திற் குடியேறிய வடமொழியாளர் தொடர்பினால் அன்னோர் தம் வேத நெறியானது, தமிழ்வேந்தர்களது ஆதரவுடன் தமிழ்நாட்டில் வேரூன்றித் தமிழர்சமுதாயத்திலும் இடம்பெற்று வளர்வ தாயிற்று என்பதற்குரிய குறிப்புகளும் தமிழ்த் தொன்னூல் களில் ஆங்காங்கே காணப்படுகின்றன. வடநாட்டில் வடமொழியாளர் மேற்கொண்ட வேத வேள்வி பற்றிய வைதிகநெறியினை யெதிர்த்து அந்நாட்டில் தோன்றிய புத்த சமண சமயங்களின் தாக்குதலால் வைதிகநெறியின் வளர்ச்சி தடைப்பட்டமையாலும் வேதத்தையே பற்றுக்கோடாகக் கொண்டுள்ள அந்நெறியானது தமிழகத்தில் மக்களது ஆதரவின்றித் தனித்துப் படர்தற்குரிய பற்றுக்கோடில்லாமை யாலும் தமிழ்மக்களால்போற்றப்பெறும் தொன்மைவாய்ந்த கடவுட்கொள்கையாகிய சிவநெறியின் சார்பினைப் பெற்றுத் தமிழகத்தில் நன்கு வேரூன்றி நிலைபெறுவதாயிற்று. இந்நிலையில் வைதிக நெறிக்கு மாறாக வேதவேள்விகளை எதிர்க்கும் நோக்குடன் வடநாட்டில் தோன்றி வளர்ந்த சமண பௌத்த சமயங்களும் சங்ககாலத்தில் தமிழகத்தில் நுழைந்து தமிழ்மக்களின் நன்மதிப்பினைப் பெற்றுத் தமிழகத்தில் நிலைகொள்வனவாயின. இவ்வாறு ஒன்றோடொன்று முரண்பாடுடையனவாகிய பல்வேறு சமயங்களும் தமிழகத்தில் இடம்பெற்றுப் பரவிவரும்

சூழ்நிலையிலேதான் தெய்வப்புலவர் திருவள்ளுவர் தமிழகத்தில் தோன்றினார். தமிழ்நாட்டில் தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாத அயலவர் நுழைவினாற் பரவி வளரும் பல்வேறு சமயக்கொள்கைகளும் தம்முள் முரண்பட்டு மோதித் தமிழகத்தின் பொதுவாழ்விலே பல்வேறு குழப்பங்களை உண்டுபண்ணாதபடி பல்வேறு சயங்களின் தாக்குதல்களால் விளையும் முரண்பாடுகளை முன்னுணர்ந்து விலக்கக்கருதிய திருவள்ளுவர் எல்லாச் சமயத்தாரும் நன்றென விரும்பியேற்றுக்கொள்ளும் வண்ணம் உலகமக்கள் அனைவரும் அன்பினால் ஒன்று பட்டு வாழ்தற்கு இன்றியமையாத மெய்ம்மையான ஒழுக்கநெறியினை அறிவுறுத்தும் முறையில் வாழ்வியல் நூலாகிய திருக்குறளை இயற்றியருளினார் என்பது திருக்குறளைப்பற்றிய வரலாறாகும்.

மக்களது நல்வாழ்வுக்கு உறுதியளிப்பனவாக உயர்ந்தோரால் உணர்த்தப் பெற்றவை அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றுமேயாகும். மக்கட்குலத்தார் தமது வாழ்க்கைக் கடமைகளில் ஈடுபட்டு உழைக்கும்போது தம்மாற் பிறர்க்கு எத்தகைய தீங்கும் நேராதபடி தம்முடைய மனம் மொழிமெய் என்னும் முக்கரணங்களையும் ஒரு நெறிப்படச் செலுத்தும் நல்லொழுக்க நெறியே 'அறம்' எனப்படும். இத்தகைய அறநெறியில் நின்று பொருளைச் சேர்த்து அப்பொருளைக்கொண்டு இன்பம் நுகர்தலே நன்றுந்தீதும் பகுத்துணரும் மனவுணர்வுடைய நன்மக்களின் வாழ்க்கை முறையாகும். இம்முறையினை 'மூன்றன்பகுதி' என்ற பெயராற் குறிப்பிடுவர் தொல்காப்பியர். தொல்காப்பியனார் குறித்தவண்ணம் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று பகுதிகளாக அமைந்த மக்களது நல்வாழ்க்கை முறையினை மூன்று பால்களாக விளக்கும் நோக்குடன் திருவள்ளுவர் அருளிச்செய்த அறநூல் திருக்குறள். அறிவுநலம் வாய்ந்த புலவர் பெரு மக்களால் இயற்றப்பெறும் இலக்கியங்கள் யாவும் வாழ்க்கைக்கு அடிப்படையாகிய அறம் பொருள் இன்பம் என்னும் உறுதிப்பொருள்கள் மூன்றனையும்தம்மகத்தே கொண்டு அமைதல் வேண்டும் என்பது தமிழ் இலக்கிய மரபாகும்.

எல்லாவுயிர்களாலும் விரும்பி நுகரப்படுவது இன்பம். இன்ப நுகர்ச்சிக்குச் சாதனமாக மக்களால் ஈட்டப்படுவது பொருள். அவ்வாறு பொருளை யீட்டுங்கால் பிறவுயிர்க்குத் தீங்கு நேராதவாறு மாசற்ற மனத்தாலும் தீமையில்லாத சொல்லாலும் செயலாலும்பொருள் செய்தொழுகும் நெறிமுறையே உயர்ந்தோரால் அறம் எனச் சிறப்பித் துரைக்கப்படும். ஏனைய பொருளும் இன்பமும் போல் இவ்வுலக வாழ்வில் மட்டும் பயன்தருமளவில் நின்று விடாமல் பிறப்புத்தோறும் உயிரொடு தொடர்ந்து சென்று இம்மை மறுமை வீடு என்னும் மும்மை நலங்களையும் ஒருங்கே தருதற்குரிய ஆற்றல் வாய்ந்தது அறம் ஒன்றேயாகும். எனவே பொருள் இன்பம் என்னும் இரண்டினும் அறமே வலியுடையது என்பதனைத் திருக்குறளில் அறன்வலியுறுத்தல் என்னும் அதிகாரத்தில் திருவள்ளுவர் தெளிவாக வலியுறுத்தியுள்ளார். தமிழ் மூவேந்தருள் சோழன் நலங்கிள்ளியின் வெண்கொற்றக்குடையானது சேரன் பாண்டியன் என்னும் ஏனையிருவர் குடைகளினும் முற்பட்டு உயர்ந்து விளங்கும் தோற்றத்திற்கு, அறம் பொருள் இன்பம் என்னும் உறுதிப்பொருள் மூன்றனுள் ஏனைப்பொருளும் இன்பமும் பிற்பட அறம் ஒன்றே முற்பட்டு விளக்குந் திறத்தினை உவமையாக எடுத்துக்காட்டும் முறையில் அமைந்தது,

> "சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
> அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல
> இருகுடை பிற்பட ஓங்கிய வொருகுடை
> உருகெழுமதியின் நிவந்து சேண் விளங்க" (புறம். 31)

எனவரும் புறப்பாடலாகும். அறமுதலாக எண்ணப்படும் இறுதிப்பொருள் மூன்றனுள் மன்னுயிர்களுக்கு நிலைபெற்ற ஆக்கத்தை வழங்கவல்ல வன்மையுடையது அறம் ஒன்றுமே என்பதும் ஏனைய பொருளும் இனபமும் முற்கூறிய அறத்தின் துணையினைக்கொண்டு பயனளித்தற் குரியன என்பதும் மேற்குறித்த கோவூர்கிழார் வாய்மொழியால் நன்கு புலனாகும்.

மக்களது மனத்திற்படிந்துள்ள அழுக்காறு, அவா,

வெகுளி என்னும் குற்றங்களையும் இன்னாச்சொல் முதலிய மொழிக்குற்றங்களையும் அகற்றிய நிலையில் நிகழ்வதே மெய்ம்மையான அறம் எனப்படும். நல்லறங்கட்கெல்லாம் நிலைக்களமாகத் திகழ்பவன் அறத்தின்கடலாகவும் அருளாளனாகவும் விளங்கும் இறைவன் ஒருவனே. அம்முதல்வனது திருவருள்நெறியாகிய ஒழுக்க நெறியின் வழுவாது ஒழுகுவோரே அறவோர் எனப்போற்றப்பெறும் சிறப்புடையோராவார் என்பன அறத்தின் தொடர்பாகத் திருவள்ளுவர் அறிவுறுத்திய கருத்துக்களாகும். அறத்திற்குப் பற்றுக்கோடாகிய இறைவனது அருள்வழி யடங்கிநின்று மாசற்றமனமும் தீமையில்லாத சொல்லும் உடையராய்ச் செய்யும் நற்செயல்களே அறமெனப்படும் என்பது திருவள்ளுவர் அறிவுறுத்திய அறத்தின் இலக்கணமாகும்.

அறத்தைப்பற்றிய நல்லுணர்வு, மக்களினத்தாரில் தனியொருவடைய கல்வி அறிவு செல்வம் செயல்திறன் முதலியவற்றால் மட்டும் உலகியல் வாழ்வில் நிலை பெறுதற்குரிய சுருங்கிய எல்லையுட்பட்டு அடங்குவதன்று; மக்கள் ஒவ்வொருவரும் தாம்தாம் வழிபட்டுப்போற்றும் இறைவனது அருளால் ஒன்றுகூடிப் பெறுதற்குரிய விரிந்த பரப்பினையுடையது அறமாகும். சுருங்கக்கூறின் உலக முதல்வனாகிய இறைவனது பேரருளும் அவ்வருளால் மக்கள் மனத்தகத்தே ஊற்றெடுத்துப் பெருகும் பேரன்பும் ஒருங்கு இணைந்த சமுதாய அமைப்பிற் கருக்கொண்டு நிலை பெறுவதே அறம் எனக்கூறுதல் மிகவும் பொருத்த முடையதாகும்.

ஆசிரியர் திருவள்ளுவனார், 'அறமுதலாகியமும் முதற்பொருள்' எனத் தொல்காப்பியனார் குறித்தவண்ணம் மூன்றன்பகுதியாக (முப்பால்களாக)த் தம் நூலை இயற்றி யுள்ளார். தொல்காப்பியனார் வாழ்ந்த காலத்திற்கும் திருவள்ளுவர் வாழ்ந்த காலத்திற்கும் பிறப்பட்ட காலத்தில் வாழ்ந்த பெருமக்கள் அறமுதலாக முன்னோர் எண்ணிய உறுதிப்பொருள் மூன்றனுள் இன்பத்தினைச் சிற்றின்பம் எனவும், பேரின்பம் எனவும் இரண்டாகப் பகுத்தனர். இப்பகுப்பு சிற்றின்பம் மற்றின்பம் (பேரின்பம்) எனத்

திருவள்ளுவர் பகுத்த முறையினை அடியொற்றியதாகும். சிற்றின்பம் என்றது ஐம்புலன்களால் இவ்வுலகில் நுகர்தற்குரிய இம்மையின்பத்தினை; மற்றின்பம் (பேரின்பம்) என்றது பிறப்பற்ற நிலையிற் பெறுவதற்குரிய வீடுபேற்றினை. இவற்றுள் முன்னதனை இன்பம் என்றும் பின்னதனை வீடு என்றும் பெயரிட்டு அறம் பொருள் இன்பம் வீடு என உறுதிப்பொருள்கள் நான்கெனக் கொண்டனர் பின் வந்தோர். இங்ஙனம் பிற்காலத்தில் நான்காவதாகப் பிரித்துரைக்கப்படும் பேரின்பமாகிய வீடுபேறு தொல்காப்பியனார் முதலிய முன்னைத் தமிழ்ச் சான்றோரால் மூன்றவதாகச் சுட்டப்பட்ட இன்பத்துள்ளேயே அடங்கும் என்பது,

> "சிற்றின்பம் வேண்டி அறனல்ல செய்யாரே
> மற்றின்பம் வேண்டுபவர்" (திருக். 175)

எனவும்,

> "இன்பம் இடையறாது, ஈண்டும் அவாவென்னும்
> துன்பத்துட்டுன்பங் கெடின்" (திருக். 369)

எனவும் வரும் திருவள்ளுவர் வாய்மொழிகளால் இனிது விளங்கும். எனவே வையத்து வாழ்வாங்கு வாழும் வாழ்க்கை நெறியினை அறிவுறுத்த எண்ணிய திருவள்ளுவர் தாம்கூற எடுத்துக்கொண்ட அறம் பொருள் இன்பம் என்னும் உறுதிப்பொருள்களை அறிவுறுத்தும் முப்பாலிலே பிற்காலத்தில் நான்காவதாகப் பகுத்துரைக்கப்படும் வீடுபேற்றின்பமும் அடங்கவே திருக்குறளை இயற்றியுள்ளார் என்பது ஆன்றோர் துணிபாகும். இது பற்றியே 'முப்பாலில் நாற்பால் மொழிந்தவர்' (திருவள்ளுவமாலை 19) எனவும், "அறம் பொருள் இன்பம் வீடென்னும் இந்நான்கின் திறந்தெரிந்து செப்பிய தேவு" (திருவள்ளுவமாலை 8) எனவும் திருவள்ளுவரைப் புலவர் பெருமக்கள் பலரும் உளமுவந்து போற்றியுள்ளார்கள். எனவே திருக்குறளின் அறம் பொருள் இன்பம் என்னும் மும்முதற் பொருள்களே விரித்துரைக்கப் படினும் அம்முப்பொருள்களின் வாயிலாக முடிந்த பேரின்ப நிலையாகிய வீடுபேற்றியல்பும் தெரிவிக்கப்பெற்றுள்ளமை

பெறப்படும். இந்நுட்பம்,

> "அறனறிந்தேம் ஆன்ற பொருளறிந்தேம் இன்பின்
> திறனறிந்தேம் வீடு தெளிந்தேம்"
>
> (திருவள்ளுவமாலை 50)

எனவரும் திருவள்ளுவமாலையால் இனிது புலனாதல் காணலாம்.

மேற்குறித்த உறுதிப்பொருள் நான்கினுள் இறுதிக் கண்ணதாகிய வீடுபேற்றுநிலை, திருக்குறளில் கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன்வலியுறுத்தல் என்னும் நான்கதிகாரங்களிலும் துறவற இயலில் அருளுடைமை, நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவுறுத்தல் என்னும் ஐந்து அதிகாரங்களிலும் தெளிவாக உணர்த்தப் பெற்றுள்ளன. இந்நுட்பத்தினைத் தெளிய வுணர்ந்த சைவசமய சந்தான ஆசிரியர் நால்வருள் ஒருவராகிய உமாபதி சிவாசாரிய சுவாமிகள், தெய்வப் புலமைத் திருவள்ளுவர் அருளிய திருக்குறளின் மெய்வைத்த சொற்பொருள் நுட்பங்களை விரித்து விளக்கும் நோக்குடன் வீட்டு நெறிப்பாலாகத் திருவருட் பயன் என்னும் சைவ சித்தாந்த நூலை அருளிச் செய்துள்ளார். தொல்காப்பியம் முதலிய பண்டைத் தமிழ் நூல்களால் அறிவுறுத்தப்பெறும் தெய்வங்கொள்கையில் உறுதியான நம்பிக்கையுடைய புலமைச்செல்வர் திருவள்ளுவர் என்பதும் அவர் இயற்றி யருளிய திருக்குறள் மெய்யுணர்வினால் உணர்ந்துரைத்த பேருண்மைகளைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் தமிழ் மறையென்பதும்,

> "தனியறிவை - முன்னந்
> தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
> வலைப்பட்டார் மற்றையவ ரென்று - நிலைத்தமிழின்
> தெய்வப் புலமைத் திருவள்ளுவர் உரைத்த
> மெய்வைத்த சொல்"
>
> (நெஞ்சு விடுதூது, கண்ணி 23 - 25)

எனவரும் உமாபதி சிவாச்சாரியார் வாய்மொழியால் நன்கு தெளியப்படும்.

கடவுள் உயிர் உலகம் என்னும் முப்பொரு ளுண்மையினை வற்புறுத்தும் சைவ சித்தாந்தத் தத்துவக் கொள்கை செந்தமிழ் நாட்டில் வாழ்ந்த திருமூலர், மெய்கண்டார் முதலிய அருளாசிரியர்களால் அறிவுறுத்தப் பெற்றதென்பதும், தமிழ்நாட்டிற்கே சிறப்புரிமையுடையதாக உருவாகி வளர்ந்துள்ள இத்தத்துவக் கொள்கைக்குரிய வேர்கள் தொல்காப்பியம் சங்க இலக்கியம் திருக்குறள் முதலிய தமிழ்த் தென்னூல்களில் ஆங்காங்கே ஆழ்ந்து ஊன்றிப்பரவி இடம் பெற்றுள்ளன என்பதும் தொல் காப்பியம் திருக்குறள் முதலிய பண்டைத் தமிழ் நூல்களையும் சைவத் திருமுறைகளையும் அவற்றின் பயனாகத் தோன்றிய சைவசித்தாந்த சாத்திரங்களாகிய மெய்கண்ட நூல்கள் பதினான்கினையும் ஒப்பிட்டு ஆராய்வார்க்கு இனிது விளங்கும். மெய்கண்ட நூல்கள் பதினான்கனுள் ஒன்றாகிய திருவருட்பயன் என்பது, சைவசமய சந்தான ஆசிரியர் நால்வருள் ஒருவராகிய உமாபதி சிவாச்சாரியாரால் இயற்றப்பட்ட எட்டு நூல்களுள் ஒன்றாகும். இந்நூல் தெய்வப் புலவர் திருவள்ளுவர் அருளின தமிழ் மறையாகிய திருக்குறளை அடியொற்றி இயற்றப்பெற்றதென்பது இதன்கண் உள்ள குறள் வெண்பாக்களின் சொற்பொரு ளமைப்பாலும், பத்துக்குறள் கொண்டது ஓர் அதிகாரமாக அமைந்த அதிகாரத்தொடர்பாலும் இந்நூலின் முதற்கண் உள்ள பதிமுதுநிலை என்னும் அதிகாரம் திருக்குறளின் முதலதிகாரமாகிய கடவுள் வாழ்த்தினைச் சொற்பொருட் கூறுகளால் அவ்வாறே அடியொற்றியமைந்திருத்தலாலும் திருவள்ளுவர் 'அகரமுதல' எனத் திருக்குறளைத் தொடங்கியது போலவே இந்நூலாசிரியரும் 'அகர வுயிர்போல்' என இந்நூலைத் தொடங்கியிருத்தலாலும் நன்கு துணியப்படும்.

திருவள்ளுவர் தாம் இயற்றிய திருக்குறளில் வீடு பேறடைவார் உணர்ந்து கொள்ளுதற்குரிய மெய்யுணர் வுண்மைகளை ஆங்காங்கே குறித்துள்ளமையுணர்ந்த உமாபதி சிவாச்சாரியார், சைவசித்தாந்தத் தத்துவத்திற்கு அடிப்படையாக அமைந்த அவ்வுண்மைகளை விரித்து விளக்கும் நோக்குடன் திருவருட்பயன் என்னும் சைவ

சித்தாந்த மெய்ந்நெறிப்பயனை இயற்றியுள்ளமை இங்கு சிறப்பாகக் குறிப்பிடத்தகுவதாகும். மெய்கண்டார் அருளிய சிவசித்தாந்தத் தனிமுதல் நூலாகிய சிவஞானபோதத்தின் சார்புநூலாக உமாபதி சிவாசாரியாரால் இயற்றப்பெற்றது சிவப்பிரகாசம் என்பதாகும். அந்நூலில் விரித்துரைக்கப் பெறும் சைவ சித்தாந்தவுண்மைகளைக் கற்றுணர விரும்புவோர் அப்பொருளைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் முதற்கண் புரிந்து கொள்ளும் முறையில் உமாபதி சிவாச்சாரியாரால் இயற்றப்பெற்றது திருவருட்பயன் என்பதாகும். இறைவனது திருவருள் ஞானம் பெற்ற திருமுறையாசிரியர்களால் அருளிச் செய்யப்பெற்ற மெய்ப் பொருளியல்பாகிய நற்பொருட்பயன்களைச் சிறப்புமுறையில் விளக்க எழுந்த திருவருட்பயன் என்னும் இந்நூலானது உலகு உயிர் கடவுள் என்னும் முப்பொருளுண்மையினை வற்புறுத்தும் பொதுநிலையில் உலகப் பொதுமறையாகிய திருக்குறளின் யாப்பினையும் சொற்பொருளமைப்பினையும் அவ்வாறே அடியொற்றிச் செல்கின்றது. இவ்வுண்மை,

> "எழிலீரைந்தும் வழுவறப்புணர்த்தித்
> தெள்ளுசீர்ப்புலமை வள்ளுவன் தனக்கோர்
> நற்றுணையுடைத்தெனக்கற்றவர் களிப்ப
> அருட்பயனென்னா அதற்கொருநாமந்
> தெருட்படப்புனைந்து செந்தமிழ்யாப்பிற்
> குறளடி வெள்ளை ஒரு நூறியம்பினன்"

எனவரும் நிரம்பவழகிய தேசிகர் உரைப்பாயிரத்தால் இனிது புலனாதல் காணலாம்.

"யாதானும் நாடாமல் ஊராமல்" (திருக். 397) என்றபடி உலக மக்கள் அனைவரும் ஒருநாட்டார் ஒரூரார் ஒரு குடும்பத்தார் என்னும் ஒருமையுணர்வுடன் அன்பினால் அளவளாவி இனிது வாழ்தல் வேண்டும் என்னும் உயர்ந்த ஒழுகலாற்றினை வற்புறுத்தும் முறையில் வாழ்வியல் நூலாகத் திகழ்வது திருக்குறள். உலகத்தில் எல்லா மக்களும் இன்பமாக வாழ்தல் வேண்டும் என்னும் உயர்ந்த குறிக்கோளையுடைய திருவள்ளுவர், உலகில் மன்னுயிர்களின் வாழ்வுக்கு அடிப் படையாகவுள்ள பொருள்களின் தன்மைகுறித்துத் தம்முள்

மாறுகோளுரை பகரும் சமயவாதிகளின் கருத்தின் வழியே சார்ந்து நின்று அவர்களுள் ஒருதிறத்தார்க்குரிய கொள்கையினை மட்டும் வற்புறுத்தும் நிலையில் ஒருபாற் சாயாமல், உலகமக்கள் எல்லோர்க்கும் உரிய இவ்வுலக வாழ்வினை அடிப்படையாகக் கொண்டு உயிர்கட்குச் சார்பாக எக்காலத்தும் மாறாதுள்ள செம்பொருளுண்மையினை உள்ளத்திற்கொண்டு உலகத்தார் உய்திபெறும் வண்ணம் வையத்து வாழ்வாங்கு வாழ்தற்குரிய நெறிமுறைகளை அறிவுறுத்தும் நிலையில் வாழ்வியல் நூலாகிய திருக்குறளை இயற்றியுள்ளார், இச்செய்தி,

> "சமயக்கணக்கர் மதிவழி கூறாது
> உலகியல் கூறிப் பொருளிது வென்ற
> வள்ளுவன்" (கல்லாடம் 14)

எனவும்,

> "ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
> அன்றென்ப ஆறு சமயத்தார் - நன்றென
> எப்பாலவரும் இயைபவே வள்ளுவனார்
> முப்பால் மொழிந்த மொழி" (திருவள்ளுவமாலை 9)

எனவும் வரும் ஆன்றோர் வாய் மொழிகளால் இனிது புலனாகும்.

பல சமயத்தவரும் தத்தமக்குரிய மறைநூலாக மதித்துப்போற்றும் நிலையில் உலக வாழ்க்கையில் அனைவர்க்கும் பயன் தரும் நல்லறங்கள் எல்லாவற்றையும் நடுநிலையில் நின்று அறிவுறுத்தும் பொதுநூலாக விளங்குவது திருக்குறள் என்னும் உண்மையினைச் சமயவேறுபாடின்றி எல்லோரும்ஏற்றுக்கொள்கின்றனர். எனினும் இப்பொதுமையுணர்வொன்றினையுமே கருதி ஒன்றோடொன்று முரண்பட்ட சமயக்கொள்கைகள் யாவும் திருக்குறள் நூலாசிரியராகிய திருவள்ளுவர்க்கு உடன்பாடாவனவே எனக் கூறத்துணிவார் எவரும் இலர். சமயவாதிகளுள் கடவுள் உண்டு என்னும் கொள்கையுடைவர்களும் கடவுள் இல்லை என்னும் கொள்கையாளர்களும், உயிர்கள் உள என்பாரும் இல என்பாரும்,

காணப்படும் உலகம் மெய் என்பாரும் வெறும் பொய்த் தோற்றமே என்பாரும், உயிர்கட்கு மறுபிறப்பும் இருவினைப் பயன்களும் உள என்பாரும் இல்லை என்பாரும் எனத் தம்முள் முரண்பட்ட கொள்கைகளையுடையராதலை அவரவர் சமய நூல்களால் அறிந்து கொள்ளலாம். இவ்வாறு பலசமயத்தாரும் தம்முள் மாறுகொண்டு கூறும் பல்வேறு முடிவுகளுக்கும் இடந்தரும் நிலையில் திருவள்ளுவர் திருக்குறளை இயற்றியிருத்தல் இயலாது. இங்ஙனம் பலதிறத்தாலும் முரண்பட்ட கொள்கையினவாகிய சமயங்கள் பலவற்றுள் ஏதேனும் ஒரு சமயத்தினைச் சார்பாகக் கொண்டு தமது நூலை இயற்றாமல் உலகமக்கள் அனைவரது வாழ்க்கையிலும் காணப்படும் இன்பத் துன்பங்களாகிய நுகர்ச்சிகளையும் அவற்றுக்குக் காரணமாய் மக்கள் செய்யும் நல்வினை தீவினைகளையும் அடிப்படையாய்க் கொண்டு நல்லதன் நலனும் தீயதன் தீமையும் இவையெனப் பகுத்துணர்ந்து தீவினையைத் தவிர்த்து நல்லனவே செய்தொழுகுதலாகிய அறநெறியினை உலக மக்கள் மேற்கொள்ளும்படி அறநூலாகிய திருக்குறளைத் திருவள்ளுவர் இயற்றியுள்ளார் என்பதும், நல்லதன் நலனும் தீயதன் தீமையும் ஆகிய இருவினைப்பயனும், அவை காரணமாக வரும் மறுபிறப்பும் இல்லையெனச் சாதிக்கும் இன்மைக் கொள்கைக்குத் திருக்குறளிற் சிறிதும் இடமில்லை யென்பதும் இந்நூலைக் கற்போர் உளங்கொளத்தக்கனவாம்.

திருவள்ளுவர் திருக்குறளிலே ஐயத்திற்கிடனின்றி அறிவுறுத்திய கருத்துக்களிற் பெரும்பாலன அவர்க்குமுன் நெடுங்காலமாகத் தமிழகத்தே வாழ்ந்த சான்றோர்கள் தமது வாழ்க்கை நுகர்ச்சியிற் கண்டு அறிவுறுத்திய தொன்மையுடையனவே. தமிழ்நாட்டில் இடைக்காலத்திற் குடியேறிய அயல்வர் கூட்டுறவால் பரவிய புதிய கொள்கைகளை 'எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்பதறிவு' (திருக். 423) எனத்தெளிந்த சிந்தனையுடன் நடுவுநிலையில் நின்று ஆராய்ந்து அவற்றுள் நல்லனவற்றை உடன்பட்டு ஏற்றுக்கொண்டும், இந்நாட்டில் நெடுங்காலம் நிலைத்துள்ள பழைமையுடையனவாயினும் தீமையுடையனவற்றைக் கண்டித்து அறவே விலக்கியும்

மக்களுக்கு நற்பயன்தரும் ஒழுக்கநெறியினை அறிவுறுத்தும் முறையினைத் திருவள்ளுவர் தம்நூலில் மேற் கொண்டுள்ளார். எனவே திருக்குறள் உலகப்பொதுமறை எனப் போற்றப்பெறுவதாயிற்று. உலகமக்கள் அனைவர்க்கும் பயன்படும் வகையில் பொதுநூலியற்றத் திருவுளங்கொண்ட திருவள்ளுவர், தாம் ஒரு நாட்டிற்கோ ஒரு மொழிக்கோ ஒரு சமயத்திற்கோ ஓரினத்திற்கோ உரியவர் என்ற நிலையில் தம்முடைய உள்ளத்தை ஒரு குறிப்பிட்ட சிறிய எல்லைக்குள் சுருக்கிக்கொள்ளாமல் 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்றாங்கு உலகிற் பலதிறப்பட்ட கொள்கையாளர்களின் கருத்துக்களுக்கும் விரிந்து இடங்கொடுக்கும் விசும்புதோய் உள்ளத்தினராய், உலகத்தார் உள்ளியதெல்லாம் நுனித் துணர்ந்து அறிவுறுத்தும் முறையில் திருக்குறளை இயற்றியுள்ளார். இதுபற்றியே 'எல்லாப் பொருளும் இதன் பாலுள இதன்பால், இல்லாத எப்பொருளும் இல்லையால்' (திருவள்ளுவமாலை) எனப் புலவர் பெருமக்கள் திருக்குறளைப் பாராட்டிப் போற்றியுள்ளார்கள்.

உலகப்பொது மறையாகத் திகழும் திருக்குறளில் தமிழ்நாட்டில் தொன்மைக் காலத்தே தோன்றி நிலைபெற்று வளர்ந்துள்ள சைவம் வைணவம் முதலிய தெய்வ வழிபாட்டு மரபுகளையும் தமிழர் கண்ட தத்துவவுண்மைகளையும் புலப்படுத்தும் குறிப்புக்களும் வடநாட்டில் தோன்றியனவாய் இடைக்காலத்தே தமிழகத்தில் வந்து பரவிய வைதிகம் சமணம் பௌத்தம் முதலிய சமயங்களுக்குரிய கருத்துக் களையும் கொள்கைகளையும் புலப்படுத்தும் குறிப்புக்களும் இடம் பெற்றிருத்தல் காணலாம். பன்னெடுங்காலமாகத் தமிழகத்தில் வாழும் சைவர் வைணவர் சமணர் பௌத்தர் முதலிய பல சமயச் சான்றோர்களும் திருவள்ளுவர் அருளிய திருக்குறளைத் தத்தம் சமயத்திற்கு அரண்செய்யும் பொதுமறையாகவே மதித்துப் போற்றி வந்துள்ளார்கள். இச்செய்தி இதுவரை தமிழ்நாட்டில் தமிழ்மொழியில் தோன்றி வழங்கும் பல்வேறு சமய நூல்களால் நன்கு புலனாகும்.

இவ்வாறு திருக்குறளானது பல்வேறு சமயத்தவ ராலும் பல்வேறினத்தவர்களாலும் மதித்துப் போற்றப்பெறும்

பொதுநூலாகக் கருதப்படினும் பன்னெடுங்காலமாகத் தமிழ் மக்கள் தம் வாழ்க்கையிற் கடைப்பிடித்தொழுகும் தெய்வக் கொள்கையினையும் அதனொடு தொடர்புடைய மெய் யுணர்வுக் கொள்கையினையும் ஐயத்திற்கிடனின்றித் தெளிவு படுத்தும் முறையில் இந்நூல் அமைந்துள்ளமை இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். தமிழ்நாட்டின் தொன்மைச் சமயங்களாகிய சைவ வைணவ சமயங்கட்குச் சிறப்புரிமையுடையனவாகவுள்ள நம்பிக்கைக்கும் தொன்மைச் செய்திகட்கும் வழிபாட்டு நெறிக்கும் தத்துவ வுண்மைக்கும் ஆதாரமாகிய பொருட் குறிப்புக்கள் பல திருக்குறளில் இடம் பெற்றுள்ளன.

கடவுள் உயிர் உலகு என்னும் முப்பொருள்களும் தோற்றமில் காலமாக (அநாதியே) உள்ள பொருள்கள் என்பது சைவ சித்தாந்தத் தத்துவநெறியின் அடிப்படைக் கொள்கையாகும். இக்கொள்கைக்கு நிலைக்களமாகத் திருக்குறள் அமைந்துள்ளது. இறைவன் மன்னுயிர், உலகு எனத் திருக்குறளில் வழங்கும்சொல்லாட்சியினைக் கூர்ந்து நோக்குங்கால் இம்மூன்று பொருள்களும் தோற்றமில் காலமாகவுள்ள உள்பொருள்களேயென்பது ஆசிரியர் திருவள்ளுவர் கோட்பாடாதல் நன்கு தெளியப்படும். திருக்குறளில் கடவுள் வாழ்த்து என்னும் முதலதிகாரத்தில் இறைவனாகிய பதியின் உண்மையும், வான்சிறப்பு என்னும் இரண்டாம் அதிகாரத்தில் உலகமாகிய பாசத்தின் உண்மையும் நீத்தார்பெருமை என்னும் மூன்றாம் அதிகாரத்தில் உயிர்களாகிய பசுவின் உண்மையும் முறையே உணர்த்தப்பெற்றன.

திருவள்ளுவர் அருளிச்செய்த திருக்குறளும் நான்மறைமுடிபாகிய உபநிடதங்களும் திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தரர் என்னும் மூவர் அருளிய தேவாரமும் திருவாதவூர் முனிவர் அருளிய கோவை திருவாசகமும் திருமூலர் அருளிய திருமந்திரமும் மேற்குறித்த முப்பொரு ளுண்மையினை அறிவுறுத்தும் திறத்தில் ஒத்த கருத்துடைய மெய்ந் நூல்களாகும். இவ்வுண்மையினை,

“தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்

மூவர்தமிழும் முனிமொழியுங் - கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்"

எனவரும் பாடலில் ஔவையார் விளக்கியுள்ளமை காணலாம். பன்னிரு திருமுறைகளிலும் திருக்குறள் பலவிடங்களிலும் எடுத்தாளப்பெற்றுள்ளது. திருமுறைகளின் பயனாகவமைந்த சைவ சித்தாந்தத் தத்துவ வுண்மைகளை விளக்கத் தோன்றிய திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் சிவஞானபோதம் முதலிய மெய்கண்ட நூல்களிலும் திருக்குறளின் பாடல்களும் தொடர்களும், சொற்களும் கருத்துக்களும் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. இவ்வாறு தமிழ்மறையாகிய திருக்குறளோடு சைவத் திருமுறைகள் பன்னிரண்டும் சைவ சித்தாந்த நூல்கள் பதினான்கும் நெருங்கிய தொடர்புடையனவாக அமைந்திருத்தலை உற்று நோக்குங்கால் மேற்குறித்த சைவத் திருமுறைகளாலும் மெய்கண்ட நூல்களாலும் அறிவுறுத்தப்பெறும் சைவ சித்தாந்தத் தத்துவங்கள் பலவற்றுக்கும் ஆதாரமாகத் திகழ்வது திருவள்ளுவர் அருளிய உலகப் பொதுமறையாகிய திருக்குறளே என்னும் உண்மை நன்கு புலனாகும்.

இவ்வுலக நிகழ்ச்சியைக் கூர்ந்து நோக்குங்கால் காணப்படும் உலகம் ஓர் ஒழுங்கு நிலையாகிய ஆணைக்கு உட்பட்டு நின்று செயற்படுதல் நன்கு புலனாகும். இத்தகைய நியதியொடு பொருந்திய உலகின் இயக்கத்திற்கு வினை முதலாய் உடனின்று இயக்கி நிற்கும் பேரறிவும் பேராற்றலும் பேரருளும் வாய்ந்த முழுமுதற் பொருள் ஒன்று உலகுயிர் கட்குச் சார்பாய் இருத்தல் வேண்டும் என்பது அறிஞர் பலர்க்கும் ஒப்பமுடிந்த உண்மையாகும். இங்ஙனம் எல்லார்க்கும் புலனாகும் நிலையிற் காணப்படும் உலக நிகழ்ச்சியாகிய காரியத்தை அடிப்படையாகக் கொண்டு இக்காரியத்திற்குரிய வினை முதலாய் உலகுயிர்களை உடனின்று இயக்கியருளும் முழுமுதற் பொருளாகிய கடவுளது உண்மையினை உணர்த்தக் கருதிய திருவள்ளுவர்,

"அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு" (திருக். 1)

எனக் காண்டற்கரிய கடவுளின் உண்மையினைக் கருத லளவையால் நிறுவிப்போந்தார். "எழுத்துக்கள் எல்லாம் தம்மை உடனிருந்து செலுத்தும் அகரவொலியினைத் தமக்கு முதலாகவுடையன. அதுபோல உலகமும் தன்னை உடனிருந்து இயக்கி நிற்கும் ஆதி பகவனாகிய இறைவனைத் தனக்கு முதலாகவுடையது" என்பது இதன்பொருள்.

இங்கு உலகு என்றது, உடம்பொடு காணப்படும் உயிர்த்தொகுதியினை. ஓர் வரையறையுடன் காணப்படும் இவ்வுலக இயக்கமாகிய காரியத்தினைக் கொண்டு இதற்கு நிமித்த காரணமாகிய பொருள் ஒன்று உண்டு எனத் துணிய வேண்டியிருத்தலால் 'உலகு ஆதி பகவனை முதலாக வுடையது' என உலகின் மேல் வைத்துக் கடவுளது உண்மை யினைப் புலப்படுத்தினார் ஆசிரியர். ஆயினும் தனக்கு முதல்வனாக ஆதிபகவனைத் தேர்ந்து கொள்ளும் உணர் வுரிமையும் உடைமைத்தன்மையும் உலகிற்கு இன்மையால், 'உலகிற்கு முதல்வன் ஆதிபகவன் என்பதே இத்திருக்குறளின் கருத்தாகக் கொள்ளுதல் வேண்டும்' என விளக்கம் கூறினார் பரிமேலழகர். ஆசிரியர் தொல்காப்பியனாரும்,

"எழுத்தெனப் படுப, அகர முதல" (நூன்மரபு 1)

எனவும், 'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்' (மொழி. 13) எனவும் வரும் நூற்பாக்களில் எழுத்துக்கள் எல்லாவற்றின் இயக்கத்திற்கும் காரணமாய் நிற்கும் அகரம் முதன்மை யுடையதாதலைத் தெளிவாகக் குறித்துள்ளார். "அகரம் தனியே நிற்றலானும் பல மெய்க்கண்நின்று அவ்வம் மெய்கட்கு இசைந்த ஓசைகளைப் பயந்தே நிற்றலாலும் வேறுபட்டதாக ஒன்றேயாயும் பலவேயாயும் நிற்பதோர் தன்மையுடைத்து என்று கோடும் (கொள்ளுதும்), இறைவன் ஒன்றேயாய் நிற்குந்தன்மையும் பல்லுயிர்க்குந்தானேயாய் நிற்குந்தன்மை போல" எனவும் "இறைவன் இயங்குதிணைக் கண்ணும் நிலைத்திணைக் கண்ணும் பிறவற்றின் கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற் போல அகரமும் உயிர்க்கண்ணும் தனிமெய்க் கண்ணும் கலந்து அவற்றின் தன்மையேயாய் நிற்கும் என்பது சான்றோர்க்கெல்லாம் ஒப்பமுடிந்தது. 'அகர முதல'

என்னுங் குறளால் 'அகரமாகிய முதலையுடைய எழுத்துக்க ளெல்லாம், அதுபோல இறைவனாகிய முதலையுடைத்து உலகம்' என வள்ளுவர் உவமை கூறியவாற்றானும், கண்ணன் 'எழுத்துக்களில் அகர மாகின்றேன் யானே எனக் கூறிய வாற்றானும் பிற நூல்களானும் உணர்க' எனவும் தொல் காப்பிய முதற்சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் அகரத்தைப் பற்றிக்கூறிய கருத்துக்கள் திருக்குறள் முதலதி காரத்தின் முதற்குறளில் விளக்கமாக அமைந்திருத்தல் காணலாம்.

இத்திருக்குறளைத் திருமூலர் முதலிய திருமுறை யாசிரியர்களும் மெய்கண்டார் முதலிய சைவ சித்தாந்த நூலாசிரியர்களும் தாம் வழிபடும் சிவபரம் பொருளுக்குரிய சிறப்பியல்பினை அறிவுறுத்தும் நிலையில் மேற்கோளாக எடுத்தாண்டுள்ளார்கள். திருவள்ளுவர் அருளிய திருக்குறளில் கடவுள் உயிர் உலகம் என்னும் முப்பொருள் களைப் பற்றிக் கூறப்பெற்றுள்ள தத்துவவுண்மைகளை அடியொற்றிச் சைவசித்தாந்த மெய்ந் நூற்பொருளை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது உமாபதி சிவாச்சாரியார் இயற்றிய திருவருட்பயன் என்னும் நூல் என்பது முன்னர்க் கூறப்பெற்றது. இந்நூல் திருக்குறளைப் போன்று பத்துக் குறளைத் தன்னகத்தே கொண்டது ஓர் அதிகாரமாகப் பதிமுது நிலைமுதல் அணைந்தோர் தன்மையீறாகப் பத்ததிகாரங்களையுடையது. திருவள்ளுவர் 'அகரமுதல' எனத் தொடங்கியது போலவே இந் நூலாசிரியரும்,

> "அகரவுயிர் போல் அறிவாகி எங்கும்
> நிகரிலிறை நிற்கும் நிறைந்து"

என இந்நூலைத் தொடங்கியுள்ளார். அகரம் நாத மாத்திரையாய் எத்தகைய விகாரமுமின்றி இயற்கையில் தோன்றுவதாய் எழுத்துக்கள் தோறும் நிறைந்து முதன்மை யுற்று நிற்ப, ஏனைய எழுத்துக்களெல்லாம் அவ்வகரத்தின் இயக்கத்தால் வெவ்வேறு முயற்சியிற்றோன்றித் திரிபுடைய வாய் நிலவுதல்போல, ஆதிபகவனாகிய இறைவன் இயற்கை யுணர்வினாய் முற்றுணர்ந்துயாண்டும் நீக்கமற நிறைந்து

முழுமுதல்வனாக விளங்கி உலக வுயிர்கள் யாவும் அவனது ஆணைக்குள் அடங்கி வினைக்கீடாக உலக உடல் கருவி நுகர்வினைப் பெற்றுத் திரிபுடையனவாய் நிலவா நின்றன என்பதாம். எழுத்துக்கள் எல்லாவற்றினும் நிறைந்து அவற்றிற்கெல்லாம் முதலாய் நிற்கும் பொதுவியல்புபற்றி அகரத்தை இறைவனுக்கு உவமையாகக் கூறினும் அப் பரம்பொருள் அறிவேயுருவாய் உலகப்பொருளனைத்தும் தனக்கு உடைமையாகக் கொண்ட தன்னேரில்லாத் தலைவனும் ஆதலால், உண்மையாக ஆராய்ந்து பார்க்குங்கால் அம்முதல்வன் தன் உடைமைப் பொருள்க ளாகிய பசுபாசங்கள் ஒன்றினோடும் உவமிக்கப்படுபவ னல்லன் என்பதே திருவள்ளுவர் கருத்தென்பது அறிவுறுத்துவார், 'அறிவாகி எங்கும்நிகிரிலிறை நிற்கும் நிறைந்து' என்றார். 'அகரவுயிர்போல்' 'அகர முதல' என்னும் முதற் குறளையும் 'அறிவாகி' என்பது 'வாலறிவன்' என்னும் இரண்டாம் குறளின் தொடரையும், 'நிகரிலிறை' என்பது 'தனக்குவமையில்லாதான்' (திருக். 7) என்னும் தொடரையும் 'எங்கும் நிறைந்து நிற்கும்' என்பது, 'இறைவன்' (திருக். 5, 10) பெயர்க் காரணத்தையும் விளக்கும் முறையில் அமைந்திருத்தல் ஒப்புநோக்கியுணரத்தகுவதாகும்.

எழுத்துக்கள் உயிர், மெய் என இருதிறத்தனவாய் அகரமுதல ஆதல் போன்று, உலகமும் உணர்வுடைய வுயிர்கள் உணர்வில்லாத உயிரல் பொருள்கள் என இரு திறத்தினதாய் ஆதிபகவனை முதலாகவுடையது என்று அறிவுறுத்துவது திருக்குறளின் முதற்குறளாகும். உயிரெழுத்து ஆன்மாவுக்கும் மெய்யெழுத்து தத்துவப் பிரபஞ்சத்திற்கும் அகரம் ஆதிபகவானாகிய இறைவனுக்கும் உவமை. ஆதிபகவன் என்பது இருபெயரொட்டுப் பண்புத்தொகை என்பர் பரிமேலழகர். அவர் கருத்துப்படி இத்தொடர் 'ஆதியாய பகவன்' என விரியும்; முதற்கடவுள் என்பது இதன்பொருளாகும். இனி, ஆதிபகவன் என்னும் இத்தொடர்க்கு 'ஆதியொடு கூடியபகவன்' எனப் பொருள் கொள்வர் ஆளுடையபிள்ளையார். இங்கு ஆதி என்றது, எப்பொருள்களையும்தோற்றுவிக்கும் அன்னையாகிய சக்தியை. உலகத்தோற்றத்திற்குக் காரணமானவள் என்ற

பொருளில் ஆதி என்னும் சொல் சக்தியாகிய அன்னையைக் குறிக்கும் காரணப் பெயராயிற்று. ஆதி என்ற சத்தியை ஒருபாகத்திற்கொண்டவன் இறைவன் என்பார் 'ஆதிபகவன்' என்றார் திருவள்ளுவர். 'சத்தியுள் ஆதியோர் தையல் பங்கன்' (1-115-4) எனவரும் திருஞான சம்பந்தர் தேவாரத்தொடர் 'ஆதிபகவன்' என்னும் திருக்குறள் தொடரின் விளக்கமாக அமைந்துள்ளமை அரியத்தகுவதாகும். எல்லாம் வல்ல இறைவனை அம்மையுடன் அமர்ந்த அப்பனாகப் பெண்ணொரு பாகனாகக் கருதிப்போற்றும் முறை தமிழ்நாட்டில் தொன்று தொட்டு நிலவி வரும் தெய்வ வழிபாட்டு மரபாகும். இம்மரபு

"நீலமேனி வாலிழை பாகத்து
ஒருவன்" (ஐங்குறுநூறு, கடவுள் வாழ்த்து)

எனவும்,

"பெண்ணுருவொரு திறனாகின்று அவ்வுரு
தன்னுளடக்கிக் கரக்கினும் கரக்கும்"
(புறநானூறு, கடவுள்வாழ்த்து)

எனவும்,

"ஊர்ந்தது ஏறே, சேர்ந்தோள் உமையே"
(அகநானூறு, கடவுள் வாழ்த்து)

எனவும் வரும் சங்கச் செய்யுட்களிலும் இடம்பெற்றுள்ளமை காணலாம். இயல்பாகவே பாசங்களின் நீங்கிய முற்றுணர்வின னாகிய இறைவன் உலகப்பொருள்களில் தோய்வின்றித் தானே திகழொளியாய்த் தனித்துநிற்கும்நிலையில் சிவம் (அப்பன்) எனவும் உலகெலாமாகி வேறாய் உடனுமாய் இவ்வாறு உலக உயிர்களொடு கலந்து நிற்கும் நிலையில் சத்தி (அம்மை) எனவும் ஒருமையின் இருமையினாய (தாதான்மிய சம்பந்தத்தால் இருதிறப்பட்டு) உலகினை இயக்கி நிற்றல் பற்றி அம்முதல்வனை ஆதிபகவன் (அம்மையப்பன்) எனத் திருவள்ளுவர் குறித்துள்ளார் எனக் கொள்ளுதல் பெரிதும் ஏற்புடையதாகும். இறைவன் அம்மையப்பனாய்ப் பிரிவற நின்றே உலகினைப் படைத்துக்காத்து அழித்து மறைத்து

அருள் புரிகின்றான் என்பது

"தன்னிற்பிரிவிலா எங்கோமான்" (திருவெம்பாவை)

எனவும்,

"எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்"
(சிவஞான சித்தியார் சுபக். 165)

எனவும்,

"சிவனெனும் பொருளும் ஆதிசத்தியொடு
சேரில் எத்தொழிலும் வல்லதாம்" (சௌந்தரியலகிரி)

எனவும் வரும் ஆன்றோருரைகளால் இனிதுணரப்படும்.

இறைவன் தனது அருவாகிய சிற்சத்தியுடன் வேறாதலும் (பேதமாதலும்) ஒன்றாதலும் (அபேதமாதலும்) இன்றி அவ்விரண்டற்கும் பொதுவாய் (தாதான்மிய சம்பந் தத்தால்) நீக்கமின்றி எங்கும் விரிந்து நிற்பன் என்பார் 'ஆணையின் நீக்கமின்றி நிற்பன்' (சிவஞானபோதம், இரண்டாம் சூத்திரம்) என்றார் மெய்கண்டார். எந்த எந்தப் பொருள் யாண்டும் விரிந்து நிற்கின்றதோ அந்த அந்தப் பொருள் ஒன்றாதலும் இரண்டாதலும் இன்றி அவ்விரண்டற்கும் பொதுமையில் நிற்கும், தன் எல்லை யளவும் விரிந்து பரவிநிற்கும் ஞாயிறு தன்னொளிக்கதிரோடு நீக்கமின்றி நிற்றல் போலும் என்னும் ஏதுவால் இறைவன் தானும் தன்சத்தியும் என இருதிறப்பட்டுத்தனது ஆணையாகிய சிற்சத்தியுடன் நீக்கமின்றி நிற்றலை வலியுறுத்தும் நிலையில் அமைந்தது 'ஆதிபகவன்' என்னும் இத்திருப்பெயர் என்பதும் இது மாதொருகூறாகிய அம்மை யப்பரைக் குறித்த பெயரென்பதும் நன்கு துணியப்படும்.

"அம்மையப்ப ரேயுலகுக் கம்மையப்பர் என்றறிக
அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர் - அம்மையப்பர்
எல்லா வுலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்
அல்லார்போல் நிற்பர் அவர்" (திருக்களிற்.1)

எனவரும் திருக்களிற்றுப்படியார் முதற்பாடல், 'ஆதிபகவன்

முதற்றேயுலகு' என்னும் திருக்குறள் தொடருக்குரிய விளக்கவுரையாக அமைந்துள்ளது.

உலகமெலாம் ஒடுங்கிய ஊழிக்காலத்தே, "பெண்ணுரு ஒரு திறனாகின்று அவ்வுருத் தன்னுளடக்கிக் கரக்கினுங் கரக்கும்" (புறநானூறு, கடவுள் வாழ்த்து) என்றபடி அம்மையின் வடிவினைத் தன்னுள் அடக்கி மறைத்துக் கொண்டு ஒருவனாக நின்ற இறைவன், உலகத்தை மீளத்தோற்றுவிக்கும் படைப்புக் காலத்தே உயிர்களின் வினைப்பயன்களை நுகர்வித்துக் கழித்தற்பொருட்டும், உயிர்களைத் தோற்றமில் காலமாகப் பிணித்துள்ள அக விருளாகிய ஆணவமலம் கழலும் பக்குவத்தை யடைதற் பொருட்டும் தன்னுள் அடக்கிய சத்தியினை மீண்டும் தன்னுருவில் வெளிப்படச்செய்து அம்மையப்பராகவிருந்து ஒடுங்கிக்கிடந்த மன்னுயிர்களை உலகுஉடல் கருவி நுகர் பொருள்களுடன் மீளவும் தோற்றுவித்தருள்வன் என்பார், 'அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர் என்றறிக' என்றார். இதனால் எல்லாவற்றையும் ஒடுக்குதற் கருத்தாவாகிய இறைவனே மீளவும் படைத்தற்குரியவன் என்பதனையும் புலப்படுத்தியவாறு. பல்லுயிர்க்கும் தாயுந் தந்தையுமாகிய இறைவர் மன்னுயிர்த்தொகுதிகளின் இயல்புக்குத் தக்கவாறு தன்மைக் கண்ணும் முன்னிலைக் கண்ணும் படர்க்கைக் கண்ணும் எழுந்தருளிவந்து நற்பொருளையறிவுறுத்தி ஆட்கொண்டு அருள்புரிவார் என்பார் 'அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர்' என்றார். இங்ஙனம் உயிர்கட்கு அருள்புரிதல் வேண்டி இவ்வுலகத்துத் திருமேனி கொண்டு எளிவந்து அருள்புரிவாராயினும் நிலமுதல் நாதமுடிவாக வுள்ள தத்துவங்களைக் கடந்து அப்பாற்பட்டு விளங்கும் அவ்விறைவரது உண்மையியல்பு யாவராலும் உணரவியலாத அருமையுடையது என்பார் 'எல்லாவுலகுக்கும் அப்புறத்தார்' என்றார். இவ்வாறு அண்டங்கடந்து அப்புறத்தாராயினும் தம்மின் வேறல்லாத அருள் என்னும் சத்தியாலே எல்லா வுலகங்களும் தொழிற்பட்டு இயங்கும் வண்ணம் உலகுயிர் களிற் பிரிவறக் கூடியிருந்தே அவற்றின் தன்மை தம்மைப் பற்றாதவாறு அவற்றுள் சிறிதும் தோய்வின்றி நிலைத் துள்ளார் என்பார், 'இப்புறத்தும் அல்லார்போல் நிற்பர்

அவர்' என்றார்.

அம்மையப்பராகிய இறைவர், தன்னிற்பிரிவிலா அருளாகிய சத்தியால் உலகுயிர்களோடு இரண்டறக்கலந்து நின்று ஐந்தொழில் நிகழ்த்தியருளுதலாகிய பொதுவியல்பும், இவ்வாறு உலகுயிர்களோடு பிரிவறக்கலந்து நிற்பினும் அவற்றின் தன்மை தானெய்தலின்றி இவை யெல்லா வற்றையுங் கடந்து சிந்தனைக்குரிய சிவமாகித்தனித்து மேற்பட்டு விளங்கும் தன்னுண்மையாகிய சிறப்பியல்பும் ஒருங்குணர்த்துவது திருக்களிற்றுப்படியார் முதற்பாட லாகும். இது திருக்குறள் முதற்பாடலிலமைந்த 'ஆதிபகவன் முதற்றேயுலகு' என்னுந் தொடரால் உணர்த்தப்படும். இறைவனது பொதுவும் சிறப்புமாகிய இருவகை இலக்கணங் களையும் நன்கு புலப்படுத்தும் நிலையில் அமைந்துள்ளமை இங்கு ஊன்றி நினைக்கத்தகுவதாகும்.

திருக்குறளின் முதலதிகாரமாகிய கடவுள் வாழ்த்தில் ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசையேகினான், வேண்டுதல் வேண்டாமையிலான், இறைவன், பொறிவாயில் ஐந்தவித்தான், தனக்குவமையில்லாதான், அறிவாழியந்தணன், எண்குணத்தான் என்பன எல்லாம்வல்ல கடவுளுக்குரிய திருப்பெயர்களாகக் குறிக்கப்பெற்றுள்ளன. இவற்றுள் எண்குணத்தான் என்ற பெயர் இறைவனுக்கே சிறப்புரிமை யுடைய குணங்கள் எட்டு என்பதனைப் புலப்படுத்துவதாகும். "எண்குணங்களாவன தன்வயத்தனாதல், தூயவுடம்பின னாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என இவை. இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது" எனப் பரிமேலழகர் தரும் முதல் விளக்கம் எண்குணத்தான் என்ற திருப்பெயர் சிவபெருமானுக்குச் சிறப்புரிமையுடையது என்பதனை நன்கு வலியுறுத்துவதாகும்.

எல்லா நூல்களையுங் கற்றவர்க்கு அக்கல்வி யறிவினா லாய பயன் ஞானமேயுருவாகிய இறைவன் திருவடிகளைத் தொழுது போற்றுதலேயாகும் எனவும், மெய்ந் நூல்கள் பல

கற்றுணர்ந்தும் கடவுள் திருவடியினைத் தொழாதார்க்கு அவர்கற்ற கல்வியறிவினாற் சிறிதும் பயனில்லை எனவும் அறிவுறுத்தும் முறையில் அமைந்தது,

> "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
> நற்றாள் தொழாஅ ரெனின்" (திருக். கட. வா. 2)

எனவரும் திருக்குறளாகும். எல்லாவற்றையும் இருந்தாங்கே உணரவல்ல முற்றுணர்வு ஞானமே திருமேனியாகவுடைய இறைவனொருவனுக்கேயுரிய தனிப்பண்பு என்பதனை 'வாலறிவன்' என்ற தொடராலும் உலகத்து உடம்பொடு கூடி வாழும் மக்கள் முதலிய உயிர்கள் யாவும் பிறர் அறிவித்தால் அறியும் சிற்றறிவுடையனவாதலின் மக்கள் தாம் பெற்ற கல்வியறிவாற்பயன் பேரறிவுப் பொருளாகிய இறைவன் திருவடிகளை வணங்கி அறிவினால் நிறைவு பெறுதலே என்பதனை 'இறைவன் நற்றாள் தொழாஅரெனின் கற்றதனாலாய பயன் என்கொல்' என்ற தொடராலும் திருவள்ளுவர் புலப்படுத்திய திறம் உய்த்துணரத் தகுவதாகும்.

அன்பினாற் கசிந்துருகிப் போற்றும் அடியார்களின் நெஞ்சத்தாமரையிலே சோதிப்பொருளாய்ச் சுடர்விட்டுத் தோன்றுதல் இறைவனது அருளின் நீர்மையாதலின் எல்லாம் வல்ல முதல்வனுக்கு 'மலர்மிசையேகினான்' என்பது ஒரு திருப்பெயராயிற்று. நினைப்பவர் நெஞ்சத்தினைக் கோயிலாக் கொண்டெழுந்தருளிய இறைவனது நல்ல திருவடிகளை இடைவிடாது நினைந்து போற்றுவார் எல்லாவுலகிற்கும் மேலாகிய வீட்டுலகின்கண்ணே எக்காலத்தும் அழிவின்றி வாழ்வார் என அறிவுறுத்துவது,

> "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
> நிலமிசை நீடுவாழ் வார்" (திருக். கட. வா. 3)

எனவரும் திருக்குறளாகும். உயிர்க்குயிராய்ப் பிரிவின்றி (இரண்டறக்கலந்து) நிற்றல் இறைவனது இயல்பு என்பதனை 'மலர்மிசை யேகினான்' என்னும் இத்தொடரால் திருவள்ளுவர் உய்த்துணர வைத்துள்ளமை உணர்தற் குரியதாகும். இறைவன் உலகுயிர்களோடு இரண்டறக்கலந்து

நிற்கும் இப்பெற்றியை அத்துவிதம் என்ற சொல்லால் வழங்குதல் சைவசித்தாந்த மரபாகும்.

குறைவிலா நிறைவாகிய முதல்வனுக்கு ஒன்றை விரும்புதலும் வெறுத்தலும் ஆகிய குற்றங்கள் இல்லை. வேண்டுதலும் வேண்டாமையும் இல்லாதவனாகிய இறைவன் திருவடியைச் சேர்ந்தார்க்கும் விருப்புவெறுப்பு என்னும் அவ்விருகுற்றங்களும் இல்லாதொழிதலால் அவை காரணமாக வரும் பிறவித்துன்பங்களும் அவர்கட்கு எக்காலத்தும் உளவாகா என்பர்,

> "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
> கியாண்டும் இடும்பை யில" (திருக். கட. வா. 4)

என்றார் திருவள்ளுவர்.

இறைவனது பொருள் சேர்ந்த புகழ்த்திறங்களை எக்காலத்தும் விரும்பிப் போற்றுவார்க்கு அகவிருளாகிய ஆணவத்தைப் பற்றிவரும் நன்றும் தீதும் ஆகிய இரு வினைகளும் உண்டாக மாட்டா என அறிவுறுத்துவது,

> "இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
> பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" (திருக். கட. வா. 5)

எனவரும் திருக்குறளாகும். இதன்கண் 'இருள்' என்றது அவிச்சையாகிய மயக்கத்தை எனவும் 'பொருள்' என்றது மெய்ம்மையை எனவும் கொண்டு, "மயக்கத்தைப் பற்றி வரும் நல்வினை தீவினையென்னும் இரண்டு வினையும் உளவாகா, இறைவனது மெய்ம்மை சேர்ந்த புகழை விரும்பினாரிடத்து" எனப் பரிமேலழகர் உரை வரைந்துள்ளார். "இன்ன தன்மைத்தென ஒருவராலுங் கூறப்படாமையின் அவிச்சையை 'இருள்' என்றும் நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாகலான் 'இருவினையுஞ்சேரா' என்றும் கூறினார். இறைமைக்குணங்கள் இலராயினாரை உடையர் எனக்கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேராவாகலின் அவை முற்றவும் உடைய இறைவன் புகழே பொருள் சேர் புகழெனப்பட்டது. புரிதல் - எப்பொழுதுஞ் சொல்லுதல்"

என்பது மேற்குறித்த குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய விளக்கவுரையாகும்.

உலகப்பொருள்கள் கட்புலனாகாதவாறு கண்ணொளியைத் தடைசெய்து நிற்கும் புறவிருளும் அதுபோலவே நுண்பொருள்களை உள்ளம் உணராதவாறு உயிரின் அறவினைத் தடைசெய்து நிற்கும் அகவிருளும் என இருளை இருவகையாகப் பகுத்துரைப்பர் பண்டைத் தமிழ்ச்சான்றோர். 'இருள் தூங்கு விசும்பு' (நற்றிணை 261) எனப் புறவிருளும் 'இருள்நீங்கியின்பம் பயக்கும்' (திருக்குறள் 52) 'இருள்தீர்காட்சி' (பெரும்பாண். 443) என அகவிருளும் குறிக்கப்பெற்றுள்ளமை காணலாம். உலகிற் புறத்தே காணப்படும் இருள் ஞாயிற்றின் ஒளிக்கதிர்களால் நீங்குமாறு போலவே, மக்களின் உள்ளத்தே அறிவினைத் தடைசெய்து நிற்கும் அகவிருளானது உயிர்க்குயிராய்த் திகழும் இறைவனது அருளொளியாகிய மெய்யுணர்வினால் நீங்கும் என்பது, "இறைவன் பொருள் சேர்புகழ் புரிந்தார் மாட்டு இருள்சேர் இருவினையும் சேரா" எனவரும் திருவள்ளுவர் வாய்மொழியால் நன்கு தெளியப்படும்.

சைவசமய சந்தானகுரவருள் ஒருவராகிய உமாபதி சிவாச்சாரியார் தோற்றமில் காலமாக (அநாதியாக) நிலைத்துள்ள பொருள்களை,

> "ஏகன் அநேகன் இருள்கருமம் மாயை யிரண்டு
> ஆக இவைஆறு ஆதியில்" (திருவருட்பயன் 5)

என ஆறாகப் பகுத்துக் கூறியுள்ளார். "உலகிற்கு முதல்வனாகிய இறைவனும் எண்ணிறந்தனவாகிய உயிர்த் தொகுதியும், அவற்றின் அறிவை மறைத்து நிற்கும் ஆணவ மலம் எனப்படும் இருளும், உயிர்கள் மீளப்பிறத்தற்குக் காரணமாகிய கன்மமும் சுத்தம் அசுத்தம் எனப்படும் மாயை இரண்டும் ஆக இவை ஆறும் அநாதியே (தோற்றமில் காலமாக) உள்ள உள்பொருள்களாகும்" என்பது இக் குறட்பாவின் பொருளாகும். ஆன்மாக்களின் அறிவாற்றலைத் தடைசெய்து நிற்கும் அகவிருளை ஆணவம் எனவும் மலம் எனவும் வழங்குதல் சைவசித்தாந்த மரபாகும். ஆணவம்

என்பது எண்ணிறந்த உயிர்கள் தோறும் கூடிநின்று அவற்றின் அறிவை மறைத்தும் தான் ஒன்றேயாயிருப்பது உயிர்களது வினைநுகர்ச்சியாகிய பக்குவம் இன்மை ஆகியவற்றுக்கு ஏற்ப அவரவர் இடங்களிலே அறிவைமறைத்து நின்று அந்தந்த ஆன்ம போதங்களின் மீட்சியிலே நீங்குவதாயிருக்கிறதன் செயல் வகையாகிய எண்ணிறந்த ஆற்றல்களையுடையது, செறிந்த இருளும் வெளியென்று சொல்லுமளவுக்கு மொய்த்து இருண்டு உயிர்களின் அறிவைப்பிணித்து நின்று மறைத்தலைச் செய்வது செம்போடு கூடிய களிம்பானது அந்தச் செம்பு உள்ளபொழுதே அதனை உள்ளும்புறம்பும் கலந்து அதன்வெட்டு வாய்தோறும் கூடிநின்றாற்போல உயிரறிவோடும் கலந்து மறைந்து நிற்கிற அழியாத அநாதிமலமாய் உயிர்களின் விழைவு அறிவு செயல் என்னும் மூவகை யாற்றலும் சிறிதும் நிகழாதபடி மறைத்து நிற்பது எனச் சைவசித்தாந்த மெய்ந்நூல்கள் ஆணவ மலத்தின் இயல்பினை விரித்துரைக்கின்றன. உயிர்களின் அகக்குற்ற மாகிய இவ்வாணவமலம் திருக்குறளிலும் சைவத்திருமுறை களிலும் 'இருள்' எனவே குறிக்கப்பெற்றுள்ளது. இந் நுட்பத்தினைத் தெளியவுணர்ந்த உமாபதி சிவாசாரியார் திருக்குறளை அடியொற்றித் தாம் இயற்றிய திருவருட்பயன் என்னும் சைவசித்தாந்த நூலில் இருள் என்பதனை ஆணவமலம் என்ற பொருளில் ஆள்கின்றார். ஆணவமலத் தின் இலக்கணத்தினை விரித்துக்கூறும் அதிகாரத்திற்கு 'இருள்மலநிலை' என அவர் பெயரிட்டமைக்கு 'இருள்சேர் இருவினையும் சேரா' எனவரும் தொடரில் திருவள்ளுவர் 'இருள்' எனக்குறித்தது ஆணவமலம் எனத் தெளிய வுணர்ந்தமையே காரணமாகும்.

> "இருள் நீங்கியின்பம் பயக்கும் மருள்நீங்கி
> மாசறு காட்சி யவர்க்கு" (திருக். 351)

எனவரும் குறளில் மயக்கத்தினை 'மருள்' என்ற சொல்லாற் குறித்த திருவள்ளுவர், மருளின் வேறாக இருள் என்றதோர் பொருளுண்மையினையும் உடன்குறிப்பிடுகின்றார். எனவே 'இருள்சேர் இருவினை' எனவரும் தொடரிலுள்ள 'இருள்' என்பதற்குப் பரிமேலழகர் கூறுமாறு மயக்கம் எனக்

கொள்ளுதல் பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை.

இவ்வுலகிற்புறத்தே காணப்படும் பூத இருளானது, ஒருபொருளையும் காண முடியாதபடிக் கண்களை மறைத்து நிற்பது. இவ்வாறே உயிர்களின் அகத்தே அறிவுக்கண்ணினை மறைத்து நிற்பதாகிய இருளொன்று உண்டெனவும், அகவிருளாகிய அது தன் தன்மையிதுவென உயிர்கள் உணராதவாறு உயிர்களது அறிவினை மறைத்து நிற்றலால், ஆன்மாவாகிய பொருளையும் காட்டாது அதனை மறைத்துள்ள தன்னையும் காட்டாது நிற்குந்தனித் தன்மையுடையதெனவும் சைவசித்தாந்த மெய்ந்நூல்கள் கூறும்.

"ஒருபொருளுங் காட்டா திருளுருவம் காட்டும்
இருபொருளுங் காட்டா திது" (23)

என்பது திருவருட்பயன். உலகத்திற் புலனாகும் பூதவிருளாகிய புறவிருளும் உயிர்களின் அகத்தே விரவி நிற்கும் ஆணவ மலமாகிய அகவிருளும் மறைத்தற்றொழிலால் தம்முள் ஒக்குமாயினும் பூதவிருளானது பண்ட பதார்த்தங்கள் எல்லாவற்றையும் மறைத்தாலும் மறைத்து நிற்பதாகிய தன்னை வெளிக்காட்டி நிற்கும், ஆணவ மலமாகிய அகவிருளோ ஆன்மாவாகிய பொருளை மறைத்தலோடு இன்ன தன்மைத்தென ஒருவரும் உணராதவாறு தன்னையும் மறைத்து நிற்கும் தனித்தன்மை யுடைய தென்பதனை மேற்குறித்த திருவருட்பயனில் உமாபதிசிவாசாரியார் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளமை காணலாம்.

அறியுந்தன்மையுடைய உயிர்களின் அறிவாற்றலைத் தடைசெய்து உயிர்கட்கு ஊனத்தை விளைத்து நிற்கும் 'இருள்' என்பதொரு மலம் அநாதியேயுண்டென்பதும், அவ்விருள்நீக்கத்திற்கு இறைவன் அருளும் சிவஞானமாகிய பொருளையே துணையாகக்கொண்டு இறைவனது புகழ்த் திறங்களைப் புகழ்ந்து போற்றி வழிபடுதல் இன்றியமையா தென்பதும்

"ஊனத்தி ருள் நீங்கிட வேண்டில்
ஞானப்பொருள் கொண்டடி பேணும்" (1-38-3)

எனவரும் ஆளுடையபிள்ளையார் வாய்மொழியால் அறியப்படும்.

ஆன்மாக்களை ஆணவ இருளாகிய திரை அநாதியே மறைத்து நிற்றலால் மெய்ஞ்ஞானமாகிய பெரும் பொருளை யுணருந்தகுதி வாய்ந்த அறிவாகிய கண்ணின் ஒளியினை யிழந்து நுகர்தற்குரிய பொருள் எதனையும் அடையப் பெறாது, அதனை நாடிப் பெறுதற்குரிய உபாயத்தினையும் இழந்து ஒன்றும் புரியாத குருடர்களாய் மன்னுயிர்கள் தம்மை அணுத்தன்மைப்படுத்தி மறைத்து நிற்கும் ஆணவவிருளில் அழுந்தித்தடுமாறிய கேவல நிலையில் இருந்தன. பேரருளாள னாகிய இறைவனது திருவடியெனப்பெறும் திருவருட் சத்தியானது உயிர்களது இடர்நிலைக்கு இரங்கி, கொடிய நரகமெனப்படும் அவ்விருளாகிய துன்பக்குழியில் துயருறும் அவ்வுயிர்களைத் தன் அருளாகிய கையினைக் கொண்டு பற்றியெடுத்து ஈறிலாப்பேரின்பவாழ்வாகிய இன்பக்கரையிலே ஏற்றி உய்வித்தருள்கின்றது. இறைவன் மன்னுயிர்கட்குச் செய்யும் அருளுபகாரமாகிய இந்நிகழ்ச்சியை,

"இருள்தரு துன்பப்படல் மறைப்பமெய் ஞானமென்னும்
பொருள்தரு கண்ணிழந்துண் பொருள்நாடிப் புகலிழந்த
குருடருந் தம்மைப் பரவக்கொடு நரகக்குழிநின்
றருள்தருகை கொடுத்தேற்றும் ஐயாறன் அடித்தலமே"

எனவரும் திருவிருத்தத்தில் திருநாவுக்கரசர் விரித்து விளக்கியருள்கின்றார்.

இத்திருவிருத்தத்தின் சொற்பொருளமைதியைக் கூர்ந்து நோக்குங்கால், திருவள்ளுவர் கூறிய 'இருள்சேர் இருவினை' என்ற தொடரில் 'இருள்' என்றது, மெய்யுணர் வினைப் பெறவொட்டாது உயிர்களின் அறிவுக்கண்ணை மறைத்து அணுத்தன்மைப்படுத்தி நிற்கும் ஆணவம் எனப்படும் இருள் மலத்தினையே என்பதும், தோற்றமில் காலமாக உயிர்களைப் பிணித்துள்ள அவ்விருள்படல

மறைப்பினாலேயே உயிர்கள் தாமேயறியுந்தன்மையையிழந்து அல்லற் படுகின்றன என்பதும், 'பொருள் சேர் புகழ்' என்ற தொடரிற் 'பொருள்' என்றது, இறைவனது திருவருள் ஞானத்தையே என்பதும் இறைவனது புகழ் அவன் அருள் புரியும் மெய்ஞ்ஞானத்தின் துணை கொண்டே உணர்தற் குரியதாதலின் அதனைத் திருவள்ளுவர் 'பொருள்சேர் புகழ்' என அடைகொடுத்தோதினார் என்பதும் நன்கு புலனாகும்.

ஆணவம் எனப்படும் அகவிருள் நீங்க நோக்கும் ஞானநாட்டம் உயிர்கட்கு இயல்பாக அமைந்ததன்று என்பதும், அநாதிமறைத்துள்ள அவ்விருளைநீக்கி உயிர்கட்கு மெய்யுணர்வும் பேரின்பமும் அளிக்கவல்ல பேரருளும் முற்றுணர்வும் முடிவிலாற்றலும் ஒருங்குடைய முதல்வன் இறைவன் ஒருவனே என்பதும் சிவநெறிச்செல்வர்கள் துணிபாகும். இந்நுட்பம்,

> **"இருளறுத்து நின்று, ஈசன் என்பார்க்கெல்லாம்**
> **அருள்கொடுத்திடும் ஆனைக்கா அண்ணலே" (5.31.8)**

எனவும்,

> **"இருளாயவுள்ளத்தின் இருளை நீக்கி**
> **இடர்பாவங் கெடுத்து"**

எனவும் அப்பர் அருள்மொழிகளால் இனிது புலனாதல் காணலாம்.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறி களின் வழியாக நிகழும் ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்னும் ஐம்புல நுகர்ச்சிகளிலும் விருப்புற்றுத் தம்முணர் வின்றித் தாழும் தன்மை மக்களது மனத்தியல்பாகும். ஐம்பொறிகளையும் அடக்கும் வன்மையின்றி ஐயுணர்வுகளின் வழியே செல்லும் மக்களது மனத்தினைத் திருத்தி அவ்வைந்தினையும் அடக்கி யாளவல்ல ஆற்றலை வழங்குதல் இறைவனது அருளியல்பாகும். நல்லொழுக்க நெறி நிற்பார்க்கு இன்றியமையாத புலனடக்கத்தையும் பொய்மையே பெருக்கும் பாசப்பிணிப்பின் நீக்கத்தையும் அளித்தற்பொருட்டு எல்லாம்வல்ல இறைவன் உயிர்க்

குயிராய் உள்நின்றுணர்த்திய மெய்ந்நெறியே பொய்தீர் ஒழுக்க நெறியாகும். உயிர்க்குயிராய் உள்நின்றுணர்த்தும் இறைவனது திருவருட்குறிப்புணர்ந்து அம்முதல்வன் அறிவுறுத்திய மெய்ம்மையான ஒழுக்கநெறியில் நிற்போர் பிறப்பிறப்பின்றி எக்காலத்தும் ஒரு தன்மையராய் நெடிது வாழ்வார் என்பர் பெரியோர். இவ்வுண்மை,

"பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடு வாழ்வார்" (திருக். 6)

எனவரும் திருவள்ளுவர் வாய்மொழியால் இனிது புலனாம். ஈண்டு இறைவனைப் 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்றது, இறைவன் தனக்கு ஐம்பொறிகளுடைய யாக்கை யமைந்திருந்து அவற்றின் வாயிலாக நிகழும் அவாக்கள் ஐந்தினையும் தன் ஞானத்தால் அடக்கி வென்றான் என்ற கருத்திற் கூறப்பட்டதன்று. இறைவன் ஏனைய உயிர்களைப் போன்று மாயையின் சம்பந்தமுடைய உடம்பினையுடைய பாசத்துள் அகப்பட்டவன் அல்லன் என்பது அவன் தூய மெய்யுணர்வினையே தன் மேனியாகக் கொண்டவன் என்பதும் 'வாலறிவன்' என்ற தொடரால் உணர்த்தப் பட்டன. ஐம்புல அவாக்களால் உந்தப்பட்டு எத்தகைய பொருள்களையும் விரும்புதலும் வெறுத்தலும் இறைவனுக்கு இல்லை என்பது 'வேண்டுதல் வேண்டாமையிலான்' என்ற தொடரால் முன்னரே வலியுறுத்தப்பட்டது. அருளே திருமேனியாகவுடைய இறைவனுக்கு ஐம்பொறிகள் இல்லை. எனவே ஐம்பொறிவாயிலாக நிகழும் ஐயுணர்வு இறைவனுக்கு இல்லாமையும் அவை இல்லையாகவே அவற்றையடக்குதல் வேண்டாமையும் நன்கு விளங்கும். விருப்பு வெறுப்புடைய உயிர்கள் ஐயுணர்வுகளால் மயங்கி அவற்றை யடக்க மாட்டாது அல்லற்படுந் துன்பநிலையிலே அருளாளனாகிய இறைவன் பொறிவாயில் ஐந்தினையும் அடக்கியாளும் மெய்ம்மையான ஒழுக்கநெறியினை அகத்தே அவர்தம் உள்ளத்திலிருந்து உணர்த்தியும் புறத்தே குருவாக எழுந்தருளி வந்து அறிவுறுத்தியும் நலஞ்செய்கிறான் என்பதும், இயல்பாகவே பாசங்களின் நீங்கிய இறைவனாலன்றி ஏனைப் புலனுணர்விலகப்பட்ட மாந்தர்களால் எடுத்துரைக்கப்படும் அவர்கள் சூழ்நிலைக்கேற்பக் குறுகிய வரம்புட்பட்

டமைவனவன்றி உலகவுயிர்கள் எல்லாவற்றுக்கும் மனநிறைவு தரும் மெய்ம்மை வாய்ந்த ஒழுக்கநெறியாக அமைதல் இயலாதென்பதும் இத்திருக்குறளால் அறிவுறுத்தப்படும் அரிய வுண்மைகளாகும். ஆகவே 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்னும் திருக்குறள் தொடர், 'தன்பாலுள்ள ஐம்பொறிகளையும் அடக்கினான்' என்ற பொருளில் வழங்கப்பெறவில்லையென்பதும் "தன்னை அன்பினால் வழிபடும் அன்பர்கட்கு அன்னோர் தம் ஐம்புலன்களையும் அடக்கி வெல்லும் நல்வழியினை அறிவுறுத்தினான்" என்ற பொருளிலேயே தெய்வப்புலவரால் ஆளப்பெற்றதென்பதும்,

> **"வறிதே நிலையாத இம்மண்ணுலகில்**
> **நரனாக வகுத்தனை நான்நிலையேன்**
> **பொறிவாயில் இவ்வைந்தினையும் அவியப்**
> **பொருது உன்னடியேபுகும் சூழல் சொல்லே"** (7.3.3)

எனவரும் நம்பியாரூரர் வாய்மொழியால் நன்கு தெளியப்படும். 'பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார்' என்ற தொடரைப் 'பொய்யிலா மெய்ந்நெறிக்கே தக்கிருந்தார்' (2.42.1) என ஆளுடைய பிள்ளையார் விரித்துப்பொருள் அருளிச்செய்துள்ளமையும் இங்கு நினைக்கத்தகுவதாகும்

தன்னின் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனி முதல்வனாகத் திகழும் இறைவனுடைய திருவடிகளை நினைந்து வழிபடும் இயல்புடையவர்களே, தம்மனத்தின்கண் நிகழுந் துன்பங்களாய கவலைகளை மாற்றவல்லவர் எனவும், இறைவன் திருவடியினை நினையாதார் காமவெகுளி மயக்கங்களாகிய மனமாசுகளை நீக்கமாட்டமையால் அவற்றால் வரும் துன்பங்களுள் அழுந்திக் கவலையுறுவர் எனவும் அறிவுறுத்துவது,

> **"தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்**
> **மனக்கவலை மாற்ற லரிது"** (திருக். 7)

எனவரும் திருக்குறளாகும். எவ்வகையாலும் தனக்கு ஒப்பாரும் மிக்காருமின்றி உயர்வறவுயர்ந்தோன் இறைவன் ஒருவனேயாதலின் அம்முதல்வனைத் தனக்குவமை

யில்லாதான் எனக் குறித்தார் திருவள்ளுவர். 'தனக்குவமை யில்லாதான்' என்னும் இத்தொடர்ப் பொருளை விளக்கும் முறையில் அமைந்தது,

"பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின்
அருமைக்கும் ஒப்பின்மை யான்" (திருவருட். 3)

எனவரும் திருவருட்பயனாகும். மிகப்பெரிய அண்டங்கள் அனைத்தும் தனது பரந்த விரிவுக்குள் அடங்கத்தான் அவை யெல்லாவற்றையும் கடந்து மேலாக விளங்கும் பெருமையி னாலும் மிகமிகச் சிறிய அணுக்கள்தோறும் ஊடுருவி யாண்டும் நீக்கமறக் கலந்து நிற்கும் நுண்மையினாலும், உயிர்தோறும் உயிர்க்குயிராய் நின்று பொருள்களைக் காட்டியும் கண்டும் அருள்சுரக்கும் பெருங்கருணைத் திறத்தாலும் உயிர்களின் முயற்சியாற் சென்றடையமுடியாத திருவாகிய வீடுபேற்றின்பத்தை மன்னுயிர்களின் அறிவெல்லைக்கு அப்பாற்பட்டு நின்று வழங்கும் அருமைத் திறத்தினாலும் தன்னையொப்பார் ஒருவருமில்லாத தம்முதல்வன் இறைவன் என்பது இதன் பொருளாகும். தனக்கு உவமையில்லாதான் (ஒருவாற்றானுந் தனக்கு ஒப்பில்லாதவன்) இறைவன் எனவே அம்முதல்வன் முற்றுணர்வும் அளவிலாற்றலும் பேரருளும் சுதந்திரமும் முதலிய உயர்வறவுயர்ந்த குணங்களையுடையன் என்பதும் பெறப்படும். இவ்வாறு இறைமைக்குணங்களாகிய இலக்கணத்தால் ஒருவாற்றானும் வேற்றுமையில்லாத நிலையில் அவ்வியல்புடைய பரம்பொருள் பலவாக இருத்தல் இயலாது, ஒன்றேயாய் இருப்பது என அறிவுறுத்துவார் அதனை 'ஒன்றலா ஒன்று' (சிவஞான போதம் சூ.2 அதிகரணம் 3) என்றார் மெய்கண்டார். ஒன்றலா ஒன்று - ஒப்பற்ற பரம்பொருள்.

தனக்குவமையில்லாத இறைவன் திருவருள் வழி நின்று தற்போதம் நீங்கிய அடியார்கள் கதிரவன் எங்கே தோன்றினாலும் எமக்கு ஆவதென்ன என்று எத்தகைய மனக்கவலையுமின்றி இனிதிருப்பார்கள் என்பது,

'எங்கெழிலென் ஞாயிறு எளியோ மல்லோம்'

எனவரும் அப்பரருள் மொழியால் அறியப்படும். "கண்ணுதல் தன்நிறைவதனிற் கலந்தார்க்குப் பண்டை ஏகதேசவுணர்வு தூர்ந்து போதலின் ஏகதேசவுடம்பில் நிகழும் இன்பத் துன்பத்திற்கு உற்பாத முதலியவற்றை நோக்கி வரக் கடவதோர் கவலையின்மையின், 'எங்கெழிலென் ஞாயிறெமக்கு' என்று குறைவின்றி நிற்பாராயினாரென்பது, 'தனக்குவமையில்லாதான் தாள்சேர்ந்தார்க்கல்லான், மனக்கவலை மாற்றலரிது' என எதிர்மறை முகத்தாற் கூறியதும் இதுபற்றியென்க" (சித்தியார். சுபக். சூ. 8. 31ஆம் செய்யுளுரை) எனச் சிவஞானமுனிவர் இத்திருக்குறளை மேற்கோளாகக் காட்டி விளக்கிய திறம் இங்கு மனங்கொளத் தகுவதாகும்.

அறத்தின் கடலாகவும் அருளேயுருவினனாகவும் திகழ்வோன் இறைவன். அம்முதல்வன் திருவடியாகிய புணையைப் பற்றினார்க்கல்லது பிறவியாகிய பெருங்கடலை நீந்திக் கடத்தல் இயலாது என அறிவுறுத்துவது,

> "அறவாழியந்தணன் தாள் சேர்ந்தார்க் கல்லாற்
> பிறவாழி நீந்தல் அரிது" (திருக். கட. வா. 8)

எனவரும் திருக்குறளாகும். நல்லறங்கள் எல்லாவற்றுக்கும் நிலைக்களமாய் நின்று, அவ்வறங்களை நிகழ்த்துதற்குரிய பேரருளாளனாகத் திகழ்வோன் இறைவன் ஒருவனே யாதலின் அம்முதல்வனை 'அறவாழியந்தணன்' எனக் குறித்தார் திருவள்ளுவர். அறக்கடலாகிய அருளாளன் என்பது இத்தொடரின் பொருளாகும். அறங்கள் எல்லாவற்றுக்கும் அருளே மூலம் (தயாமூலதனம்) ஆதலின் அறமும் அருளும் ஆகிய இவ்விரண்டின் திருவுருவாகவும் இறைவன் விளங்குகின்றான் என்பார் அறவாழி என்னாது 'அறவாழியந்தணன்' என்றார் தெய்வப்புலவர். கடலே யனைய அறமும் அழகிய தண்ணளியாகிய பேரருளும் ஒருவன் என்னும் ஒருவனாகிய இறைவனிடத்தன்றி ஏனையுயிர்த் தொகுதிகளிடத்தே முழுவதும் நிலைபெறுத லாகிய என்பது புலப்பட 'அறவாழியந்தணன்' என ஒருமையாற் கூறினார். இறைவனை அறவாழியந்தணன் என

ஒருவனாகவும் இறைவனருள் பெற்ற அறவோர்களாகிய நீத்தாரை 'அந்தணர் என்போர் அறவோர்' (திருக்.) எனப் பலராகவும் குறித்துள்ளமை 'இறைவன் ஒருவன் உயிர்கள் பல' என்னும் தமிழ் முன்னோரது தத்துவக்கொள்கையினைப் புலப்படுத்துதல் காணலாம்.

எண்குணங்களையுடையவன் இறைவன் எனவும் எண்குணத்தானாகிய அம்முதல்வனுடைய திருவடிகளை வணங்காத தலைகள் தமக்குரிய புலன்களையுணரும் ஆற்றலில்லாத பொறிகளைப் போலப் பயன்படாதனவே எனவும் அறிவுறுத்துவது,

> "கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
> தாளை வணங்காத் தலை" (திருக். கட. வா. 9)

எனவரும் திருக்குறளாகும்.

"எண்குணங்களாவன தன்வயத்தனாதல், தூய வுடம்பினனாதல் இயற்கையுணர்வினனாதல், முற்றுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என இவை. இவ்வாறு சைவாகமத்துக் கூறப்பட்டது. அணிமாவை முதலாகவுடையன எனவும் கடையிலா அறிவை முதலாக வுடையன எனவும் உரைப்பாருமுளர்" எனப் பரிமேலழகர் தரும் விளக்கம், சிவாகமத்துக் கூறப்படும் எண்குணங்களே இறைவனுக்குச் சிறப்புரிமையுடைய குணங்களாம் என்பதனை நன்கு புலப்படுத்துவதாகும். அன்றியும் அணிமா முதலியன எட்டும் யோகிகளால் முயன்று பெறுதற்குரிய எண்வகைச் சித்திகள் எனப்படுவனவல்லாது கடவுளுக்கே யுரிய சிறப்புடைக் குணங்களாகாமையும் ஆருகதர் கூறும் கடையிலா அறிவு (அநந்த ஞானம்) முதலிய எட்டினுள் அநந்தஞானம்,அநந்த வீரியம், அநந்ததரிசனம், அநந்தசுகம் என்னும் நான்குமே குணங்களாகக் கொள்ளத்தக்கன. நாமமின்மை, கோத்திரமின்மை ஆயுளின்மை அழியாவியல்பு என்னும் நான்கும் உயிர்க் குணங்களின் மறுதலை யெனப்படுவனவன்றி ஒரு பொருளின் பண்பெனப் படாமையானும் சிவபெருமானுக்குரிய சிறப்புடைப்

பண்புகளாகச் சிவநெறிச் செல்வர் கூறும் எண்குணங் களையே இறைவனுக்குச் சிறப்புரிமையுடைய எண்குணங்க ளாக முதற்கண் எடுத்துரைத்தார் பரிமேலழகர். இனி திருவள்ளுவர் கூறும் கடவுள் வாழ்த்து எல்லாச் சமயத்தார்க்கும் பொதுவாக அமைந்ததாதலின் இதன்கண் கடவுளுக்குரிய பெயர்களாக ஆளப்பெற்ற ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசை யேகினான், வேண்டுதல் வேண்டாமையிலான், இறைவன், பொறிவாயில் ஐந்தவித்தான், தனக்குவமையில்லாதான், அறவாழியந்தணன், எண்குணத்தான் என்னும் ஒன்பது திருப்பெயர்களுள் முதற்கண் உள்ள எட்டுப்பெயர்களால் அறிவுறுத்தப்பட்ட எட்டுக் குணங்களையே ஒன்பதாவது குறளில் எண்குணத்தான் என்ற பெயரால் திருவள்ளுவர் தொகுத்துக் கூறினார் எனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும்.

எண்குணத்தானாகிய இறைவனை வழிபட்டுப் பாசப்பிணிப்பறுத்து வீடுபெறுதற்கென்றே அமைந்தது இம்மக்கட்பிறவியாகும். மனிதப்பிறவியின் நோக்கத்தினை யுணர்ந்து இறைவன் திருவடிகளைத் தலையால் வணங்கிப் போற்றாதாரது வாழ்வு பயனுடையதன்று எனத் திருவள்ளுவர் எதிர்மறைவாய் பாட்டாற்கூறிய இக் கருத்தினை உடன்பாட்டு முகத்தால் அறிவுறுத்துவதாக அமைந்தது திருநாவுக்கரசர் அருளிய ‘தலையே நீவணங்காய்’ என்னும் திருஅங்கமாலைத் திருப்பதிகமாகும்.

காரணகாரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருவது பிறவிப்பிணிப்பாதலின் அது பிறவிப்பெருங்கடல் என உருவகித்துக் கூறப்படும். இறைவன் அடியாகிய புணையைப் பற்றினோர் பிறவியாகிய பெருங்கடலை எளிதின் நீந்திக் கடப்பர். இறைவன் திருவடியாகிய புணையின் துணை பெறாதார் அப்பெருங்கடலை நீந்தமாட்டாது அதனுள் வீழ்ந்து அழுந்துவர் என்பார்,

> “பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
> இறைவனடி சேரா தார்” (திருக். கட. வா. 10)

என்றார் திருவள்ளுவர். உலகியல்பை நினையாது

இறைவனடியையே நினைப்பார்க்குப் பிறிவியாதலும், இறைவனடியை நினையாது உலகியல்பையே நினைவார்க்குப் பிறவி ஆறாமையும் இக்குறளால் நியமிக்கப்பட்டன.

காணப்படும் இவ்வுலகம் ஆதிபகவனை முதலாகவுடையது எனவே உலகியற்கு முதல்வன் இறைவன் ஒருவனே என்பது பெறப்படும். அம்முதல்வன் தூய மெய்யுணர்வே தன் திருமேனியாகவுடையவன் எனவே அவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கிய இயற்கையுணர்வினன் என்பதும் பெறப்படும். உயிர்களின் நெஞ்சத் தாமரையில் எழுந்தருளியவன் இறைவன் எனவே அம்முதல்வன் உயிர்களோடு பிரிவின்றிக் கலந்துள்ளான் என்பதும் கூறினாராயிற்று. வேண்டுதல் வேண்டாமையிலான் இறைவன் எனவே குறைவிலா நிறைவாகிய அவனுக்குப் பகையும் நட்பும் இல்லையென்பது பெறப்படும். உலகு உயிர்கள் ஆகிய எல்லாப்பொருள்களிலும் நீக்கமறத் தங்கியிருத்தல் கடவுளிலக்கணமாதலின் இறைவன் என்பது கடவுளுக்குரிய காரணப்பெயராயிற்று. இறுத்தல் என்னும் வினையடியாகப் பிறந்த பெயர் இறை என்பதாகும். இறை - பொருள்கள்தோறும் நீக்கமறத் தங்கியிருப்பது. இறைவனுடைய பொருள் சேர் புகழ்த் திறங்களை இடைவிடாது புகழ்ந்து போற்றுவார்க்கு இருள்சேர் இருவினையும் சேரா எனவே இருவினைத் தொடக்குடையவை உயிர்கள் என்பதும் அவ்விருவினைத் தொடக்கினின்றும் இயல்பாகவே நீங்கி விளங்கிய முற்றறிவினன் இறைவன் என்பதும் உய்த்துணர வைத்தாராயிற்று. பொறிவாயில் ஐந்தவித்தான் எனவே ஐம்புலன்களையும் அடக்கவல்ல அறிவாற்றலை உயிர்கட்கு வழங்கவல்லவன் உயிர்க்குயிராகிய இறைவனே என்பதும் அவனருள் வலியின் துணைகொண்டு ஐம்புலவுணர்வின் நீங்கி மெய்ப்பொருளை யுணர்ந்து உய்தி பெறுதற்குரிய நெறியே பொய்தீர் ஒழுக்க நெறியெனப் போற்றப்படும் என்பதும், அந்நெறியில் நிலைநின்றொழுகுவார் எக்காலத்தும் அழிவின்றி வாழ்தலாகிய பேரின்ப நிலையைப் பெறுவர் என்பதும் அறிவுறுத்தியவாறாகும். ஒப்பாரும் மிக்காரும் இன்றி எல்லாவுயிர்கட்கும் ஒப்பற்ற தலைவனாகத் திகழ்தலே இறையியல்பாதலின் கடவுளாகிய

முழுமுதற்பொருள் ஒன்றேயென வலியுறுத்துவது 'தனக்குவமையில்லாதான்' என்ற தொடராகும். ஒருவன் என்னும் ஒருவனாகிய முதல்வனே பல்வகைப் பிறவியுட்பட்டு அல்லலுறும் மன்னுயிர்களின் மனக்கவலைகளை மாற்றி வாழ்வளிக்க வல்லவன் என்பது இக்குறளால் அறிவுறுத்தப் படும் தத்துவவுண்மையாகும். அறத்தின் கடலாகவும் அருள் வடிவினனாகவும் திகழ்வோன் இறைவன் என்பது 'அறவாழியந்தணன்' என்ற பெயராற் புலனாகும். மன்னுயிர் களின் பொருட்டு உலகினைப் படைத்து வாழ்வளிக்கும் வினைமுதலாகவுள்ள முழுமுதற்பொருள் ஒரு குணமும் இல்லாத வெறும் அறிவாக மட்டும்இருத்தல் இயலாது. அன்புடைய உயிர்களால் எண்ணிப் போற்றுதற்குரிய எல்லா நற்பண்புகளும் ஒருங்கே அமைந்த நல்ல குணிப்பொருளே என்று அறிவுறுத்துவார், இறைவனை எண்குணத்தான் என்ற பெயராற் குறித்தார் திருவள்ளுவர். இவ்வாறு திருக்குறள் முதலதிகாரத்தில் இறைவனைக் குறித்து வழங்கப்பெற்ற பெயர்களாகிய தொடர்கள் யாவும் இறைவனது பொது வியல்பும் உண்மையியல்பும் ஆகிய இலக்கணங்களைச் சுருக்கமும் தெளிவும் பொருந்த விரித்துரைக்கும் நிலையில் அமைந்துள்ளமையும் இங்குத் திருவள்ளுவர் விரித்துக் கூறிய கடவுள் இலக்கணமே சைவ சித்தாந்த மெய்ந்நூல்கள் கூறும் பதியிலக்கணமாக அமைந்துள்ளமையும் திருக்குறளின் முதற்கண் அமைந்த கடவுள் வாழ்த்து என்னும் இவ்வதி காரத்தையும் உமாபதி சிவாசாரியார் இயற்றிய திருவருட்பயனின் முதற்கண் அமைந்த பதிமுதுநிலை என்னும் அதிகாரத்தினையும் ஒப்புநோக்குவார்க்கு நன்குபுலனாகும்.

தாம் கூறக்கருதிய அறங்களுக்கெல்லாம் நிலைக் களமாகத் திகழும் முழுமுதற் கடவுளை முதற்கண் வாழ்த்தி வணங்குதல் இன்றியமையாதென அறிவுறுத்திய திருவள்ளுவர் நம்மனோர் கண்கட்குப் புலனாகாது அருவாய்த் தத்துவங் கடந்து நிற்கும் தனி முதற்பொருளாகிய இறைவனது அருளின் நீர்மையாக வெளிப்பட்டுக் கைம்மாறு கருதாது உலகிற்குப் பயன்பட மழையினைப் பொழியும் வானத்தின் சிறப்பினையுணர்த்தும் பகுதி திருக்குறளில் உள்ள

'வான்சிறப்பு' என்னும் இரண்டாம் அதிகாரமாகும். உலகத்துப் பயிர்கள் வளரப்பொழியும் மழையானது பல்லுயிர்க்கும் அருள்சுரக்கும் இறைவனது திருவருள் வண்ணமாகத் திகழும் சிறப்புடையதாகும். இவ் வுண்மையினை 'மன்னானவன் உலகிற்கொரு மழை யானவன்' (1.16.6) எனவும், 'சொரிவிப்பார் மழை' (5.15.3) எனவும், 'காக்கின்ற மழையாய்ப் பொழிவானை' (7.59.3) எனவும், 'முன்னியவள் நமக்கு முன் சுரக்கும் இன்னருளே என்னப்பொழியாய் மழையே லோரெம்பாவாய்' (திருவெம் பாவை 16) எனவும் வரும் திருமுறைத்தொடர்கள் நன்கு விரித்துரைத்தல் காணலாம். கடவுளது அருளின் நீர்மையதாய்ப் பயிர்முதலிய பல்லுயிர்களையும் உடம்பொடு கூடி வாழ்தற்கு நிலைக்களமாகத் திகழும் ஐம்பெரும் பூதமுதலிய தத்துவங்களின் திரட்சியாகிய உலகின் உண்மையினையும் உடன் உணர்த்துவதாக அமைந் துள்ளமை இங்கு மனங்கொள்ளத் தகுவதாகும்.

இறைவனது திருவருள் நீர்மையையுணர்ந்து அவனது திருவருளின் துணைகொண்டு ஐம்புலன்களையும் வென்று விருப்புவெறுப்பின்றி வாழும் அறவோர் 'நீத்தார்' எனப் போற்றப்பெறுவர். யான் எனது என்னும் இருவகைப் பற்றினையும் நீத்த பெரியோர்களாகிய அவர்தம் பெருமையினை விரித்துரைப்பது திருக்குறளில் உள்ள 'நீத்தார் பெருமை' என்னும் மூன்றாம் அதிகாரமாகும். பொறிவாயில் ஐந்தவித்தானாகிய இறைவன் அருளிய மெம்மையான ஒழுக்கநெறியில் வழுவாதொழுகி யான் எனது என்னும் இருவகைப் பற்றுக்களையும் அறுத்தவர்க ளாகிய நீத்தாரது பெருமையினையே விழுமிய பொருள்கள் பலவற்றுள்ளும் விழுமியது என எல்லாச் சமயநூல்களும் பாராட்டும் என்பார்,

"ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு" (திருக். நீத்தார். 1)

என்றார் திருவள்ளுவர். இங்கு ஒழுக்கம் என்றது, பொறி வாயில் ஐந்தவித்தான் அருளிய ஒழுக்கநெறியினை. அந்

நெறியில் நின்று துறத்தலாவது, மெய்ம்மையான ஒழுக்க நெறியில் வழுவாதொழுக அறம் வளரும். அறம் வளரத் தீவினை தேயும். தீவினை தேய அறியாமை நீங்கும். அறியாமை நீங்கவே நிலையுடையன நிலையற்றனவாகிய பொருள்களது வேறுபாட்டுணர்வும் அழியுந்தன்மையன வாகிய இம்மை மறுமையின்பங்களில் உவர்ப்பும் பிறவித் துன்பங்களும் தோன்றும். அவை தோன்றவே வீடு பெறுதலில் விருப்பம் உண்டாகும். அஃதுண்டாகப் பிறவிக்குக் காரணமாகிய பயனில்லாத முயற்சிகளெல்லாம் நீங்கி வீடுபேற்றிற்குக் காரணமாகிய யோகமுயற்சி யுண்டாகும். அஃதுண்டாகவே மெய்யுணர்வு பிறந்து புறப்பற்றாகிய எனதென்பதும் அகப்பற்றாகிய யான் என்பதும் விட்டு நீங்கும். ஆதலால் இவ்விருவகைப் பற்றுக்களையும் இம்முறையே உவர்த்து நீத்து விடுதலே முற்றத்துறத்தலாகும் என விளக்குவர் பரிமேலழகர்.

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று" (திருக். 22)

எனவரும் திருக்குறள், இருவகைப் பற்றுக்களையும் நீத்தாரது பெருமையினை அளவிட்டுரைத்தல் இயலாது என்பதனை அறிவுறுத்துவதாகும். "இருவகைப் பற்றினையும் விட்டாரது பெருமையினை என்னாற் கூறி அறிவிக்கத் தொடங்கின் அளவுபடாமையால் இவ்வுலகத்துப் பிறந்திறந்தார் இத்துணையர் எனக் கூறியளவிட்டுரைத்தாற் போலும் (முடியாத செயலாம்)" என்பது இதன்பொருளாகும். இதன்கண் 'துறந்தார்' என்றது, யான் எனது என்னும் இருவகைப் பற்றுக்களையும் விட்டொழிந்து வீடு பேற்றின்பத் தினை நுகர்தற்குரிய சான்றோர்களை. பெருமை - மிகுதி. இறந்தார் என்றது, இப்பிறப்பிற் பற்று நீங்காது மீளவும் இவ்வுலகிற் பிறந்து வீடுபெறும் நோக்கத்துடன் இருவகைப் பற்றும் நீங்கத் துறவறத்தினை மேற்கொள்ள வேண்டிய பாசப்பிணிப்புடைய உயிர்களை. துறந்தார் பெருமைகூறும் முகத்தால் உயிர்கள் எண்ணிலவாதலையுணர்த்துவது இத்திருக்குறளாகும். இதனடியொற்றி உயிர்களது உண்மையினையும் அவை எண்ணிலவாதலையும் கூறுவது,

"பிறந்தநாள் மேலும் பிறக்குநாள் போலும்
துறந்தோர் துறப்போர் தொகை" (திருவருட். 11)

எனவரும் திருவருட்பயனாகும். இக்குறளின் ஈற்றிலுள்ள தொகை என்பதனைப் பிறந்த நாள் பிறக்கும் நாள், துறந்தோர், துறப்போர் தொகை மேலும் பிறக்கும் நாள் தொகை போலும் எனவும், நிரனிறைப்பொருள் கொள்க. பிறந்தநாள் - உலகம் தோன்றியது முதல் இதுவரை உயிர்கள் பல்வகைப் பிறவிகளுட்பட்டுத் தோன்றிய நாள்கள். மேலும் பிறக்கும் நாள் இனிமேலும் உயிர்கள் பிறவியுட்பட்டுப் பிறத்தற்கு உளவாகும் நாள் துறந்தோர் - பிறவிப் பிணிப்பினின்றும் விடுபட்டு இருவகைப்பற்றினையும் நீத்து இறைவனடியைத் தலைப்பட்டு இன்புறும் உயிர்கள், துறப்போர் இனிமேலும் இறைவனருளால் பிறவிப் பிணிப்பிலிருந்தும் விடுபட்டு உய்திபெறுதற்கு உரியராக இப்பொழுது பாசப்பிணிப்புடன் கூடிப்பிறந்து துறவினை மேற்கொள்ளும் நிலையினரான உயிர்கள், "ஆன்மாக்கள் முன்பு பிறந்த நாளுக்கும் இனிமேல் பிறக்கப்போகிற நாளுக்கும் தொகை கூறமுடியாதவாறு போல இதுவரை தேகப் பிரபஞ்சத்தைத் துறந்து வீடுபெற்ற உயிர்களுக்கும் இனிமேல் துறந்து வீடடையப்போகிற உயிர்களுக்கும் தொகை அளவிட்டுக் கூறமுடியாது" என்பது இதன் பொருளாகும். படைப்புக்காலந்தொட்டுப் பலவகைப் பிறப்புக்களிற் பிறந்து வடுப்பெற்ற உயிர்களையும் இனிமேலும் பிறந்து இருவகைப் பற்றுக்களையுந் துறந்து வீடு பெறுதற்கு உரியனவாய்ப் பாசப்பிணிப்புடன் கூடியுள்ள ஏனைய உயிர்களையும் இத்துணையர் என அறிந்து கணக்கிட்டுக் கூறவதென்பது, உலகந்தோன்றியது முதல் இதுவரை எத்தனை நாட்கள் கழிந்தன, இனிமேல் வரக்கூடிய நாட்கள் எத்தனை என எண்ணித் தொகை கூறவொண்ணாதது போல இயலாத செயலாம் என்றவாறு. எனவே இதுவரை பாசப்பிணிப்பொழிந்து வீடுபெற்ற உயிர்களும் வீடுபெறாத நிலையிற் பாசப்பிணிப்புடன் கூடியுள்ள உயிர்களும் அளவற்றனவாம் என அவற்றின் மிகுதி கூறினாராயிற்று. துறந்தார், வையத்து இறந்தார் எனத் திருவள்ளுவர் பகுத்துக்கூறிய இருவகைவுயிர்களையும் துறந்தோர்

துறப்போர் என முறையே உமாபதி சிவாசாரியார் குறித்துள்ளார். இதனால் உயிர்கள் எண்ணற்றன எனச் சைவசித்தாந்தம் கூறும் கொள்கை திருக்குறளில் முன்னமே இடம் பெற்றுள்ளமை காணலாம்.

ஐம்பொறிகளாகிய கருவிகளின் துணையின்றி உலகப்பெருள்கள் எதனையும் உணர முடியாத நிலையில் அறிவினாற் குறைபாடுடைமை உயிர்களது இயல்பாகும். உயிர்களின் அறிவு வளர்ச்சிக்குச் செவி முதலிய பொறிகள் இன்றியமையாதன என்பதும் அவற்றின் துணையின்றி எதனையும் உணரமுடியாத அறிவுக்குறைபாடுடையன ஆன்மாக்கள் என்பதும் 'கோளில் பொறியிற்குணமிலவே' எனவரும் திருக்குறள் தொடராற் குறிப்பால் உணர்த்தப் பெற்றன. இக்குறிப்பினை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது,

> "பொறியின்றி யொன்றும் புணராத புந்திக்
> கறிவென்ற பேர்நன் றற" (திருவருட். 15)

எனவரும் திருவருட்பயனாகும். "செவி முதலிய கருவிகளின் துணையில்லாமல் யாதொரு பொருளையும் உணரமாட்டாத உயிர்களுக்கு நூல்வல்லோர் அறிவுடையன (சித்து) என்று இட்டு வழங்கும் பெயர் மிகவும் அழகிது என்பது இதன் பொருளாகும். 'அறிவு என்ற பேர் அறநன்று' என்ற தொடர் இங்கு இகழ்ச்சிக் குறிப்பாய் நின்று உயிர்கள் அறிவினாற் குறைபாடுடையன என்பதனைப் புலப்படுத்தி நிற்றல் காண்க. இறைவன் தூய அறிவேயுருவாகத் திகழ்வோன் என்னும் உண்மையினை 'வாலறிவன்' என்ற பெயராற் புலப்படுத்திய திருவள்ளுவர் அம்முதல்வனியல்புக்கு வேறான உயிர்த் தொகுதிகள் அறிவும் அறியாமையும் விரவப்பெற்றன என்னும் உண்மையினை,

> "அறிதோ றறியாமை கண்டற்றால் காமஞ்
> செறிதோறுஞ் சேயிழை மாட்டு" (திருக். 1110)

எனவரும் திருக்குறளில் உவமை வாயிலாகப் புலப்படுத்து கின்றார். அன்புடைய காதலியைப் பெற்றோர் அறியாதவாறு

உடன்போக்கில் அழைத்துக்கொண்டு செல்லும் தலைவன், தலைவியொடு கூடிச் செல்லுதலால் தனக்கு மேன்மேலும் உளவாம் இன்பமிகுதியினைத் தனக்குள்ளே சொல்லிக் கொள்வதாக அமைந்தது மேற்குறித்த திருக்குறட் பாடலாகும். "நூல்களாலும் நுண்ணுணர்வாலும் பொருள் களை ஆராய்ந்து அறியுந்தோறும் அதுவரை அவ்வுண்மை யினை யறிந்து கொள்ளாத தனது அறியாமை புலப்படுமாறு போல், செவ்விய அணிகலன்களையுடையளாய இவளை இடை விடாது செறியுந்தோறும் இவள்மாட்டு முன்னர் அறியப் படாத காதலின்பம் காணப்படாநின்றது" என்பது இதன் பொருளாகும். "அறிவிற்கு எல்லையின்மையால் மேன்மேல் அறிய அறிய முன்னைய அறிவு அறியாமையாய் முடியுமாறு போலச் செறிவுக்கு எல்லையின்றி மேன்மேற் செறியச் செறிய முன்னைச் செறிவு செறியாமையினாய் முடியா நின்றது எனத் (தலைவன்) தன் ஆற்றாமை கூறியவாறு" என இக்குறட் பாவுக்கு விளக்கம் தருவர் பரிமேலழகர். இவ்விளக்கம் மாந்தர் பொருள்களை அறியுந் தோறும் பெறும் அறிவு தாம் அதற்குமுன் அப்பொருள் களைப் பற்றி அறிந்திருந்த அறிவினைக் குறைபாடுடையதாகக் காட்டுதலால் உயிர்களது அறிவு குறைபாடுடையது என்னும் உண்மையினை நன்கு புலப்படுத்தல் காணலாம்.

பாசப்பிணிப்புடைய ஆன்மாக்கள் முற்றுணர் வுடைய இறைவனைப் போன்று எல்லாம் அறிந்தனவு மாகாமல் உலகத்தொகுதியாகிய உணர்வில்லாத சடப் பொருள்கள் போன்று ஒன்றும் அறியாதனவும் ஆகாமல் உணர்வுடைய பொருளைச் சார்ந்த நிலையில் உணர்வு விளக்கம் பெறுவனவும் உணர்வில்லாத பொருள்களைச் சார்ந்த நிலையில் உணர்வு விளக்கம் பெறாதனவாகவும் ஆக அவ்விருதிறப்பொருள்களிலும் தோய்ந்து சார்ந்ததன் வண்ணமாய் நின்றுணருந்தன்மையனவாகும் என்பது சைவ சித்தாந்த மெய்ந்நூல்கள் கூறும் ஆன்ம விலக்கணமாகும். ஆன்மாவின் உண்மையியல்பாகிய சிறப்பிலக்கணம் குறித்த இம்முடிவிற்கு ஆதாரமாக அமைந்தது,

> "நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
> கினத்தியல்ப தாகும் அறிவு" (திருக். 452)

எனவரும் திருக்குறளாகும். "நீரானது தான் சார்ந்த நிலத்தினது இயல்பினாலே தன் தன்மை திரிந்து அந்நிலத்தின் தன்மையினைப் பெறுவதாகும். அதுபோல மாந்தரது அறிவும் தான் சேர்ந்த இனத்தினது இயல்பினாலே தன் தன்மை திரிந்து அவ்வினத்தின் தன்மையினைப்பெறும்" என்பது இதன் பொருள். இதன்கண் 'மாந்தர்க்கு அறிவு இனத்து இயல்பது ஆகும்' எனக்குறித்த பொதுவகை முடிபிலிருந்து உய்த்துணர்ந்து கொள்ளப்பெற்றது உயிர்கள் யாவும் சார்ந்ததன் வண்ணமாந்தன்மையன என்னும் இச்சிறப்பு வகை முடிபாகும். ஆகவே உயிர்கள் முற்றுணர்வுடைய இறைவனைப் போன்று தாமே எல்லாம்அறிந்தனவும் ஆகாமல், உலகத்திலுள்ள அறிவில்லாத பொருள்களைப் போன்று ஒன்றும் அறியவியலாதனவுமாகாமல், அறிவுடைய பரம்பொருளைச் சார்ந்த வழி அறிவுடையனவாகவும், அறிவில்லாத சடப்பொருள்களைச் சார்ந்த வழி அறிவில்லாதனவாகவும் அதுவதுவாய்ச் சார்ந்ததன் வண்ணமாந் தன்மையெனச் சைவசித்தாந்தம் கூறும் ஆன்ம விலக்கணம் பற்றிய முடிவுக்கு மேற்காட்டிய திருக்குறள் ஆதாரமாயமைந்து அரண்செய்தல் இங்கு மனங்கொளத் தகுவதாகும்.

காணப்படும் உலகம் உள்ளபொருளாய்ப் பல்வேறு நுண்பொருள்களால் (தத்துவங்களால்) இயன்றது என்பது சாங்கியம் முதலிய தத்துவ நூலார் கண்டுணர்த்திய உண்மை முடிபாகும். உலகம் உள்பொருள் என்னும் இம்முடிவு தொல்காப்பியம் முதலிய தமிழ்த்தொன்னூல்களிலேயே இடம் பெற்ற தொன்மையுடையதாகும். உலகம் உள் பொருள் என்பது முப்பொருளுண்மை கூறும் சைவ சித்தாந்தக் கொள்கைக்கு ஏற்புடையதேயாகும். உலகினைப் பருப்பொருள்களாகப் பகுத்து ஆராயுமிடத்து நிலம், நீர், தீ, வளி, விசும்பு எனப்படும் ஐவகைப் பொருளின் திரட்சியே இவ்வுலகம் என்னும் உண்மை எளிதிற் புலனாகும். பருப்பொருள்களாகத் தோன்றும் நிலமுதலிய ஐம்பெரும் பூதங்களுக்கும் முதற்காரணமாய் நுண்ணிய நிலையில் உள்ளவை முறையே நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை என்னும் ஐந்துமாகும். ஐம்பெரும் பூதங்களுக்கு முதலாக

வுள்ள இவற்றைத் தன் மாத்திரை என வழங்குவர் தத்துவ நூலார். நுண் பூதங்களாகிய இவ்வைந்தினையும் கூர்ந்து ஆராயவல்ல மெய்யறிவினர்க்கு இவற்றிற்குக் காரணமாய் இவற்றினும் நுண்ணியவாகிய தத்துவங்கள் பலவுள்ளன என்பது இனிது புலனாகும். உலகின் நுண் கூறுகளாகிய தத்துவ வகையினைப் பகுத்துணரவல்ல நுண்ணுணர்வு என்பது இனிது புலனாகும். உலகின் நுண்கூறுகளாகிய தத்துவ வகையினைப் பகுத்துணரவல்லது நுண்ணுணர் வுடையோர் பொறிவாயில் ஐந்தவித்தானாகிய இறைவன் அறிவுறுத்திய ஒழுக்க நெறியில் வழுவா தொழுகுபவராய் ஐம்புலவுணர்வுகளையும் புறத்தே செல்லவொட்டது தம் அறிவின் திறத்தால் அடக்கி யாளவல்ல செம்புலச்செல்வர் களாய் யான் எனது என்னும் இருவகைப் பற்றுக்களையும் அறவே நீக்கிய அருளாளர்களே என்பதனை அறிவுறுத்துவது,

> "சுவை யொளியூறோசை நாற்றமென் றைந்தின்
> வகைதெரிவான் கட்டே யுலகு"

எனவரும் திருக்குறளாகும். சுவையும் ஒளியும் ஊறும் ஓசையும் நாற்றமும் என்று சொல்லப்படும் தன் மாத்திரைகள் ஐந்தின் கூறுபாட்டினையறிதலாவது ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என்னும் இவை ஐந்தும் முறையே விசும்பு, வளி, தீ, நீர், நிலம் என்னும் ஐம்பெரும் பூதங்கட்கும் முதற் காரணமாயின எனவும், நுண்பதங்களாகிய தன் மாத்திரை களிலிருந்தே மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் அறிவுப்பொறிகள் (ஞானேந்திரியம்) ஐந்தும் வாக்கு, கால், கை, எருவாய், கருவாய் என்னும் தொழிற்கருவிகள் (கன்மேந்திரியம்) ஐந்தும் தோன்றுவன எனவும் இவற்றைப் பகுத்துணரும் உணர்வுடையாரை 'வகைதெரிவான்' என்று உடன்பட்டுரைத்தமையால் ஆன்மா எனப்படும் அறிவுடைய பொருள் உண்டெனவும், பகுத்துணர்தற்கருவிகளாகிய புத்தி அகங்காரம் மனம் ஆகிய அகக்கருவிகளும் அவற்றிற்கு மூலமாகிய மூலப்பகுதியும் உண்டு எனவும் ஆராய்ந்து அறிதலாகும்.

'வகைதெரிவான் கட்டேயுலகு' எனத் திருவள்ளுவர் கூறுதலால் ஐம்பெரும் பூதங்கள் தன் மாத்திரைகள் முதலிய

தத்துவக்கூறுகளாக உலகினைப் பகுத்தாராய்ந்து பயன் கொள்ளும் உணர்வுரிமையுடைய உயிர்கள் உள்பொரு ளாதலும் இங்ஙனம் வகைப்படுத்து ஆராய்தற்குரிய செயப்படு பொருளாகிய உலகம் உணர்வில்லாத உள்பொருளாதலும் தமிழ் முன்னோர் கண்ட தத்துவவுண்மைகளாதல் நன்கு தெளியப்படும்.

காணப்படும் இவ்வுலகம் கடவுளால் தோற்றுவிக்கப் பட்ட உள்பொருளேயென்பது சைவ சித்தாந்தம் கூறும் தத்துவக்கோட்பாடாகும். உலகினைப் படைத்த முதல்வன் ஒருவன் உண்டென்பது,

> "இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
> கெடுக வுலகியற்றி யான்" (திருக். 1062)

எனவரும் திருக்குறளில் 'உலகியற்றியான்' என்ற தொடரால் உணர்த்தப்பட்டது. "உலகினைப் படைத்த இறைவன் இவ்வுலகின்கண் வாழ்வார்க்கு முயன்று தொழில்புரிந்து வாழ்தலையன்றிப் பிறர்பாற் சென்று இரந்து (யாசித்து) ஏற்று உயிர்வாழ்தலையும் ஒரு தொழிலாக விதித்திருப்பா னாயின் அக்கொடுந்தொழிலை விதித்த அவனும் இரப்போரைப் போன்று எங்கும் திரிந்து கெடுவானாக" என்பது இதன் பொருளாகும். இரத்தலின் இழிவினையும் வேறுதொழில் செய்யாது இரந்தே உயிர் வாழ்வோம் என்று வாழும் இரவலர் படுந்துயரத் தினையும் கண்டு வருந்திய திருவள்ளுவர், இவ்விழி நிலைக்கு இடனாக இவ்வுலகினைப் படைத்த இறைவனை வெகுண் டுரைப்பது போன்ற, மானங்கெட வரும் இரத்தலின் அச்சத்தைப் புலப்படுத்துவது இத்திருக்குறளாகும். இதன்கண் 'இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின்' என்ற தொடரிலுள்ள 'வேண்டின்' என்னும் வினையெச்சம் உலகியற்றியான் அங்ஙனம் வேண்டுவான் அல்லன் என்பதனையும் மக்கள் முயன்று தொழில்செய்து அறிவு திருவாற்றல்களால் உயர்வுபெறுதலே இறைவனது படைப்பின் நோக்கம் என்பதனையும் மக்கள் ஒரு தொழிலையுஞ் செய்யாது இரந்து உயிர்வாழ்வோம் என்று எண்ணும் இழிநிலை உலகினைப் படைத்த இறைவனது திருவுளக்குறிப்பிற்கு முரண்பட்ட தென்பதனையும் வற்புறுத்துங் குறிப்பினதாதல் ஆய்ந்துணரத் தகுவதாகும்.

திருவள்ளுவர் உலகு, உயிர், கடவுள் என்னும் முப்பொருளுண்மையுடன் பட்டநிலையிலேயே வாழ்வியல் நூலாகிய இத்திருக்குறளை இயற்றியுள்ளார். இச்செய்தி, உலகு, மன்னுயிர், இறைவன் ஆகிய முப்பொருள்களையும் உள்பொருளாகக் கொண்டு தாம் கூற எடுத்துக்கொண்ட அறம் பொருள் இன்பம் என்னும் உறுதிப்பொருள்களைத் திருவள்ளுவர் தம் நூலில் வற்புறுத்தலால் நன்கு தெளியப் படும். நல்லறிவுடைய சான்றோர் பலராலும் தம் வாழ்க்கை நுகர்ச்சிகளின் பயனாக உள்பொருள்களெனத் தெளிந் துரைக்கப்படும் கடவுளுண்மை, உயிருண்மை, இருவினைப் பயனுண்மை, மறுபிறப்புண்மை முதலிய உண்மைகளைத் தத்தம் சிற்றறிவுக்குப் புலனாகாமை காரணமாக இல்லை யென மறுத்துரைப்போர் திருவள்ளுவர் காலத்திலும் இருந்தாரெனத் தெரிகிறது. சிறுபான்மையினராகிய அன்னோர் மக்களினத்தினராய் வாழ்ந்தாலும் உலகத்து வாழும் பெரும்பாலோர் தம் வாழ்க்கை நுகர்ச்சியின் பயனாக உண்டெனத் தெளிந்த உண்மைகளைத் தம் சிற்றறிவுக்குப் புலனாகாமை யொன்றே கொண்டு இல்லையென மறுத்துரைக்கும் முகமாக உலகமாந்தர் பலரொடும் முரண் பட்டுத் திரிதலின் அன்னோர் மக்கள் வடிவிற்காணப்படினும் உலகிற்பலரும் கண்டு அஞ்சத்தக்க பேய் வடிவினராகவே கருதப்படுவர் என்பதும் அவர்கள் வற்புறுத்தும் இன்மைக் கொள்கையினை உலகமக்கள் பலரோடும் ஒத்துவாழும் நல்லுணர்வுடைய பெருமக்கள் ஒரு பொருளாக ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்பதும் தெய்வப்புலவர் கருத்தாகும். இக்கருத்து,

> "உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்(து)
> அலகையா வைக்கப் படும்" (திருக். 850)

எனவரும் திருக்குறளில் இடம் பெற்றுள்ளமை காணலாம்.

உலக மக்களுக்கு ஆக்கந்தரும் உறுதிப்பொருள் களுள் முதலாவதாக அறத்தினைக் கூறவே அறவுணர்வுக்கு நிலைக்களமாய அறவாழியந்தணனாகிய இறைவனது உண்மையும் அடுத்து உயிர்களது நுகர்ச்சிக்குக் காரணமாகிய பொருள்கூறவே அந்நுகர்ப்பொருள்களின் திரட்சியாகிய

உலகின் உண்மையும், மூன்றாவதாக இன்பம் கூறவே அவ்வின்பத்தினை நுகர்தற்குரிய உயிர்களது உண்மையும் உடன் கூறினாராயிற்று.

திருக்குறளில் முதற்கண் அமைந்த கடவுள் வாழ்த்து என்னும் அதிகாரம் உலகுயிர்களை இயக்கியருளும் கடவுள் ஆகிய முழுமுதற் பொருள் உண்டு என்னும் உண்மையினைக் கருதலளவையால் (அனுமானப் பிரமாணத்தால்) வலியுறுத்தி இறைவனது பொதுவியல்புடன் தன்னியல்பும் ஆகிய இருவகையிலக்கணங்களையும் சுருக்கமும் தெளிவும் பொருந்த விரித்து விளக்குந்திறன் முன்னர் எடுத்துக்காட்டப் பெற்றது. முதலதிகாரத்திற்கு அமைந்த கடவுள் வாழ்த்து என்னும் பெயர் 'கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே' (தொல். பொருள். புறத்.)என்னும் தொடரை அடியொற்றி யமைக்கப் பெற்றதாகும். இறைவனுக்கு வழங்கும் பெயர்கள் பலவற்றுள் கடவுள் என்ற பெயர் திருக்குறளில் இடம் பெறவில்லை. ஆயினும் கடவுளைக்குறித்துப் பலராலும் வழங்கப்பெறும் இறைவன் என்ற பெயர் இவ்வதிகாரத்தில் இருமுறை ஆளப்பெற்றுள்ளமை காணலாம். இறைவன் என்னும் தமிழ்ச்சொல் உலகுயிர்கள் தோறும் நீக்கமறத் தங்கியுள்ளவன் என்ற பொருளிற் கடவுளைக்குறித்து வழங்கும் காரணப் பெயராகும். இறுத்தல் - தங்குதல் உயிர்ப்பொருள் உயிரல் பொருள் ஆகிய எல்லாப் பொருள்களிலும் நீக்கமறத்தங்கியிருத்தல் கடவுளது இயல்பாதலின் இறைவன் என்ற சொல் கடவுளுக்குரிய காரணப்பெயராயிற்று.

உலக முதல்வனாகிய கடவுளுக்கேவுரிய இப்பெயர் அவனருளால் உலகத்தையாளும் உரிமை பெற்ற மன்னர்க்குரிய பெயராகவும் தொன்னூல்களில் ஆளப் பெற்றுள்ளது. முன்னுயிர்களாற் செய்யப்படும் நன்றும் தீதும் ஆகிய இருவினைகட்கேற்ப அவற்றின் பயனாகிய இன்ப துன்பங்களை வினைசெய்த உயிர்களே நுகரும்படி நடுநிலையில் நின்று முறைசெய்தல் இறைவனுக்குரிய இயல்பாகும் என்பது 'பால்வரை தெய்வம்' என்னும் தொல்காப்பியத் தொடர்க்குப் பொருள் காண்புழி முன்னர்

விளக்கப்பெற்றது. வேண்டுதல் வேண்டாமையின்றி நடுநிலையில் நின்று எல்லாவுயிர்களையும் அவற்றின் இருவினைப் பயன்களையருத்தி முறை செய்து காப்பாற்றும் இறைமைத் தன்மையாகிய முறைமை, மலர்தலையுலகுக்கு உயிரெனச் சிறந்த மன்னனிடத்தும் அமைந்திருத்தல் கொண்டு மன்னனையே கடவுளாக மதித்து இறைவன் என உயர்த்துப் போற்றுதலும் தமிழ்மரபாயிற்று. இறைவன் என்ற பெயர் கடவுள் ஒருவர்க்கேயுரிய காரணப்பெயரென்பதும் அப்பெயரால் மன்னனைக் குறித்தல் உபசார வழக்கென்பதும் ஆகிய இவ்வுண்மையினை,

> "முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
> கிறையென்று வைக்கப் படும்" (திருக். 388)

எனவரும் திருக்குறளில் திருவள்ளுவர் தெளிவாக விளக்கிய திறம் கூர்ந்துணரத் தகுவதாகும். 'தான் முறைசெய்து பிறர் நலியாமற் காத்தலையுஞ்செய்யும் அரசன் பிறப்பினால் மனிதனேயாயினும் செயலால் மனிதர்க்குக் கடவுள் என்று உயர்த்துப் போற்றப்படுவான்' என்பது இத்திருக்குறளின் பொருளாகும். 'இறை' என்னாது 'இறையென்று வைக்கப்படும்' எனத்தெரிந்து மொழிதலால் இறை என்பது கடவுளுக்கேயுரிய பெயரென்பதும் மன்னனை இறையென உயர்த்துக் கூறுதல் உபசாரவழக்கென்பதும் நன்கு தெளியப்படும்.

உயிரும் உடம்பும் தம்முள் கலப்பினால் ஒன்றாயும் பொருட்டன்மையால் வேறாயும் உள்ள இருவேறு பொருள்கள் என்பது ஆசிரியர் தொல்காப்பினார் காலத்துக்கு முற்பட்ட காலம் முதல் இன்றுவரை தமிழகத்தில் நிலைபெற்றுவரும் தத்துவக் கொள்கை யென்பது முன்னர் விளக்கப்பட்டது. உடம்பும் உயிரும் பொருட்டன்மையால் வேறாவன என்பது யாவரும் அறிந்ததே. உடம்பு உருவுடையது, நிலையின்றி அழியு மியல்பினது, அறிவில்லாதது, உயிரோ காணாமரபினதாய் அருவாயுள்ளது, என்றும் அழிவின்றி நிலைபெற்றுள்ளது, அறிவுடையது. அருவாய் அழிவில்லாததாய் அறிவுடையதாய் உள்ள உயிர்க்கும் உருவாய் அழிவுடையதாய்

அறிவில்லாததாய் உள்ள உடம்புக்கும் ஏற்பட்ட தொடர்பு அன்பு என்னும் உயிர்ப்பண்பினை வளர்த்தற்பொருட்டு ஏற்பட்டதாகும் என்பார்.

"அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்
கென்பொ டியைந்த தொடர்பு" (திருக். 73)

என்றார் திருவள்ளுவர். 'காணுதற்கரிய' அருவாகிய உயிர்க்கு உருவாகிய எற்புச் சட்டமாகிய உடம்போடு உண்டாகிய தொடர்ச்சி அன்பு என்னும் உயிர்ப்பண்பினோடு பொருந்துதற்கு வந்த நெறியின் பயன் என்று சொல்லுவர் அறிந்தோர்' என்பது இதன் பொருளாகும். அருவாகிய உயிர்கள் உருவாகிய உடம்பொடு கூடியல்லது அன்பு செய்யலாகாமையின் அன்பினை வளர்த்தற் பொருட்டே உயிர்க்கு உடம்பொடு கூடிய இத்தொடர்ச்சியுளதாயிற்று என்பதாம். ஆகவே உயிர் உடம்பினைப் பெற்றதன் பயன் அன்புடைமை என்பது கருத்து. 'ஆருயிர்க்கு என்போடு இயைந்த தொடர்பு அன்போடு இயைந்த வழக்கு என்ப' எனச் சான்றோர் கூறுவர். எனவே மன்னுயிர்கள் எற்புச் சட்டமாகிய உடம்பின் தொடர்ச்சி பெறாது இருள்நிலையி லிருந்த காலமும் உண்டு என உய்த்துணர வைத்தாராயிற்று. உயிர்கள் உடம்பின் தொடர்ச்சி பெறாது தனித்திருந்த இருள்நிலையினைக் கேவலநிலை எனச் சைவசித்தாந்த நூல்கள் கூறுகின்றன.

உயிர்கள் உடம்பொடு கூடி உலக நுகர்ச்சியைப் பெற்று வாழும் நிலையினைச் சகலநிலை எனச் சைவ சித்தாந்தம் கூறும். இந்நிலை உயிர்வேறு உடம்பு வேறு எனப் பிரித்துணராதவாறு உடம்பும் உயிரும் ஒன்றிவாழும் நிலையாகும். இந்நிலையில் உயிருக்கும் உடம்புக்கும் அமைந்த தொடர்பினை,

"உடம்போ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையோ டெம்மிடை நட்பு" (திருக். 1122)

எனவரும் திருக்குறளில் ஆசிரியர் உவமை முகத்தால் விளக்கியுள்ளார். தலைமகன் தலைவியெனத் தனக்குள்ள

காதன்மிகுதியைக் கூறுவதாக அமைந்தது இத்திருக்குறள். 'உடம்போடு உயிரிடையுளவாகிய நட்புக்கள் எத்தன்மையன அத்தன்மையன, இம்மடந்தையொடு எம்மிடையுளவாய நட்புக்கள்' என்பது இதன்பொருள். உடம்போடு, உயிர்க்கு உளவாகிய நட்புக்களாவன, உடம்பும் உயிரும் வேற்றுமை யின்றி இரண்டும் ஒன்றேயென எண்ணும்படி கலந்துவருதல், இன்பத் துன்பங்களை ஒக்க அனுபவித்தல், ஒன்றையொன்று இன்றியமையாமை என்பனவாம். இதனால் உயிர் உடம்புடன் கூடி வாழும் சகலநிலை விரித்துரைக்கப்பட்டது. உயிரும் உடம்பும் பொருட்டன்மையால் வேறாயினும் இன்ப துன்பங்களை நுகருந்திறத்தில் ஒன்றற்கொன்று இன்றியமை யாத கலப்பினால் ஒன்றாகவே கருதப்பட்டு வருதல் உலகியலிற்கண்டது. இத்தகைய கலப்பினை இருமையின் ஒருமை (அத்துவிதம்) என்றால் பொருந்தும். இவ்வுலகத்தில் ஒத்த அன்பினராய் இல்வாழ்க்கைக்கண் ஒழுகி மனையோடும் மக்களோடும் சுற்றத்தோடும் கூடி வாழ்ந்தவர்கள் பிறப்புப் பிணிப்பு நீங்கப்பெறும் சிறந்த பேரின்பத்தினை அன்புடைய ராய் இல்லறத்தில் ஒழுகிய நெறியின் பயன் என்று கூறுவர் பண்டைத்தமிழ்ச் சான்றோர். இவ்வுண்மை,

> "அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
> தின்புற்றார் எய்துஞ் சிறப்பு" (திருக். 75)

எனவரும் திருக்குறளில் விரித்துரைக்கப் பெற்றுள்ளமை காணலாம். ஈண்டுச்சிறப்பு என்றது எல்லாப் பேற்றினும் சிறந்த வீடுபேறாகிய இந்நிலை உயிர்களின் சுத்தநிலை எனப்படும். வீடுபயக்கும் உணர்வாகிய ஞானப்பகுதி திருக்குறளில் நிலையாமை, துறவு, மெய்யுணர்தல் அவாவறுத்தல் என்னும் நான்கதிகாரங்களில் விரித்துரைக்கப் பட்டது. அவற்றுள் நிலையாமையாவது, உலகில் தோற்றமுடையனவாய்க் காணப்படும் எல்லாப் பொருள்களும் என்றும் ஒருபெற்றியனவாய் நிலையுத லிலவாந்தன்மை. காணப்படும் உலகம் உள்பொருளாயினும் என்றும் ஒருபெற்றியதாய் நில்லாது மாறுந்தன்மையாதலின் 'நில்லாவுலகம்' என்றார் தொல்காப்பியனாரும். பிறப்பற்ற நிலையே வீடுபேறென்பதும் பிறவா நிலை பெறுதற்குத் தன்

உடம்பின் கண்ணும் ஏனைய உலகப்பொருளின் கண்ணும் வைத்த அவாவை அறவே துறத்தல் வேண்டுமென்பதும், புறமாகிய செல்வத்தின் கண்ணும் அகமாகிய உடம்பின் கண்ணும் உளதாம்பற்றின்ன அவற்றது நிலையின்மை நோக்கி அறவே விட்டொழித்தலே துறவுநிலையாம் என்பதும் ஆசிரியர் திருவள்ளுவர் அறிவுறுத்தும் தத்துவவுண்மை களாகும்.

> "மற்றுந்தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
> லுற்றார்க் குடம்பும் மிகை" (திருக். 345)

என்பது திருவள்ளுவர் வாய்மொழி. இதனால் பிறவா நிலையாகிய வீட்டினையடைதலே அறிவுடைய நன்மக்களின் நோக்கமாதல் வேண்டும் என்பதும் வீடுபேற்றுக்குச் சாதனமாவது இருவகைப் பற்றுக்களையும் அறவே விட்டு நீங்குதலாகிய துறவறமே என்பதும் நன்கு புலனாகும். "உடம்பு என்ற பொதுமையான் உருவுடம்பும் அருவுடம்பும் கொள்ளப்படும். அவற்றுள் அருவுடம்பாவது, பத்துவகை இந்தியவுணர்வோடும் ஐவகை வாயுக்களோடும் காமவினை விளைவுகளோடும் கூடியமனம். இது நுண்ணுடம்பு எனவும் படும். இத்துன்பங்களால் உயிரோடு ஒற்றுமைப்படுதலின் இவ்வுடம்புகளும் யான் எனப்படும்" என்பார் பரிமேலழகர்.

அகம் புறம் என்னும் இருவகைப் பற்றினையும் இறுகப் பற்றிக் கொண்டு அப்பற்றினை விடாதவர்களைப் பிறவித் துன்பங்கள் இறுக்கப்பற்றிக் கொண்டு நீங்காமல் வருத்துவன. இப்பற்றுக்களை அறவே விட்டொழித்தவர்களே வீடு பேற்றினைத் தலைப்பட்டவர்கள். அங்ஙனம் துறவாதவர்கள் மயங்கிப் பிறப்பாகிய வலையுட்பட்டு வருந்துவர் என்பார்.

> "தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
> வலைப்பட்டார் மற்றை யவர்" (திருக். 348)

என்றார் திருவள்ளுவர். 'முற்றத்துறந்தார் வீட்டினைத் தலைப்பட்டார். அங்ஙனம் துறவாதார் மயங்கிப் பிறப்பாகிய வலையுட்பட்டோராவார்' என்பது இதன் பொருள். தீரத் (முற்றுத்) துறத்தலாவது பொருள்களையும் (உரு, அரு

என்னும்) இருவகையுடம்பினையும் உவர்த்துப் பற்றறவிடுதல், ஈண்டுத் தலைப்படுதல் என்றது இறைவனது திருவருள் ஞானத்தை எய்தப்பெறுதல், இருவகைப்பற்றினையும் விட்டொழித்தவர்க்கே இறைவனது பற்றாகிய திருவருள் ஞானம் கைகூடும் என்னும் தெய்வப்புலவர் வாய்மொழி யினை,

> "தனியறிவை முன்னந்
> தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி
> வலைப்பட்டார் மற்றையவரென்று - நிலைத்தமிழின்
> தெய்வப் புலமைத் திருவள்ளுவர் உரைத்த
> மெய்வைத்த சொல்" (நெஞ்சுவிடு தூது, கண்ணி 23-25)

என உமாபதி சிவாசாரியார் தாம் இயற்றிய சித்தாந்த நூல்கள் எட்டினுள் ஒன்றாகிய நெஞ்சு விடு தூதில் எடுத்தாண்டுள்ளமை சைவசித்தாந்தத் தத்துவ வுண்மைகளுக்குத் திருக்குறள் நிலைக்களமாக விளங்குதலை நன்கு வற்புறுத்துவதாகும்.

ஒருவர்க்கு இருவகைப் பற்றும் அற்ற பொழுதே அப்பற்றறுதி அவரது பிறப்பையறுக்கும். பற்று அறாத பொழுது அவற்றாற் பிறந்திறந்து வருகின்ற நிலையாமை காணப்படும் என்பார்,

> "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
> நிலையாமை காணப் படும்" (திருக். 349)

என்றார் திருவள்ளுவர்.

பிறப்புக்குக் காரணமாகிய இருவகைப் பற்றும் நீங்கிய பொழுதே அவற்றின் காரியமாகிய பிறப்பும் அற்றதாம் முறைமைபற்றிப் 'பற்றற் கண்ணே பிறப்பறுக்கும்' என்றார். 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்பது நம்மாழ்வார் அருளிச்செயல்.

எல்லாப் பொருளையும் பற்றி நின்றே தனக்கென்று ஒருசார்பில்லாதவன் இறைவன். பற்றற்றானாகிய அம்

முதல்வன் ஓதிய வீட்டுநெறியினை இதுவே நன்னெறி யென்று மனத்துட் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனம் கொண்டு அதன்கண் உபாயமாகிய தியானச் சமாதிகளை மனத்தாற் செய்தல் வேண்டும். அங்ஙனம் செய்தால் அநாதியாய் வரும் உடம்பின் பற்றுத் தானே நீங்கிவிடும் என அறிவுறுத்துவது,

> "பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
> பற்றுக பற்று விடற்கு" (திருக். 350)

எனவரும் திருக்குறளாகும். எல்லாவற்றுக்குஞ் சார்பாய் நின்று தனக்கென்று ஒரு சார்பு வேண்டாதவன் இறைவன் எனப் பகுத்துணர்த்துவார் அம்முதல்வனைப் 'பற்றற்றான்' என்றார். துறவற நெறியினை மேற்கொள்ளுதற்கும் அநாதியே வந்த உடம்பின் பற்றினை விட்டொழித்தற்கும் இறைவன் திருவருளே துணை செய்வதாகும் என்பதும், அம்முதல்வனது அருளின்றி இருவகைப் பற்றுக்களையும் விட்டொழித்தலாகிய துறவறப்பயன் கைகூடாதென்பதும் ஆகிய உண்மைகள் இத்திருக்குறளில் நன்கு வலியுறுத்தப் பெற்றுள்ளமை மனங்கொளத் தகுவதாகும்.

மன்னுயிர்கள் பாசப்பிணிப்பிற் பட்டுப் பிறத்தலும் அப்பிணிப்பின் நீங்கி வீடு பெறுதலும் ஆகிய இருமை வகையினையும் அவற்றின் காரணங்களையும் ஐயந்திரிபின்றி உள்ளவாறுணர்தல் மெய்யுணர்தலாகும். இதனை வடநூலார் தத்துவ ஞானம் என்பர். திருக்குறளில் மெய்யுணர்தல் என்னும் அதிகாரம் தமிழ் முன்னோர் கண்டுணர்ந்த தத்துவ ஞானத்தினைச் சுருங்கச் சொல்லி விளங்கவுணர்த்தும் முறையில் அமைந்துள்ளமை காணலாம்.

என்றும் நிலைபேறுடைய மெய்ப் பொருளல்லாத வற்றை நிலையான மெய்ப்பொருள் என்று பற்றுச்செய்யும் (விபரீதவுணர்வாகிய) மயக்கவுணர்வானே இன்பமில்லாத பிறப்பு உண்டாவது என அறிவுறுத்துவது,

> "பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
> மருளானாம் மாணாப் பிறப்பு" (திருக். 351)

எனவரும் திருக்குறளாகும். விபரீதவுணர்வாவது, மறுபிறப்பும் இருவினைப் பயனும் கடவுளும் இல்லையெனவும் மற்றும் இத்தன்மையவுஞ்சொல்லும் மயக்கநூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்கெனத் துணிதல். குற்றியை மகவென்றும் இப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதலும் அது. மருள், மயக்கம், விபரீதவுணர்வு, அவிச்சையென்பன ஒருபொருட் கிளவி. நரகர், விலங்கு, மக்கள், தேவர் என்னும் நால்வகைப் பிறப்பினும் உள்ளது துன்பமேயாகலின் மாணாப்பிறப்பு என்றார். இதனாற் பிறப்புத்துன்பம் என்பதூம் அதற்கு முதற்காரணம் அவிச்சையென்பதூஉம் கூறப்பட்டன" என்பர் பரிமேலழகர்.

மயக்கவுணர்வின் நீங்கி மெய்யுணர்வுடையராயினார்க்கு அம்மெய்யுணர்வு எல்லாத் துன்பத்திற்குங் காரணமாயுள்ள ஆணவம் என்னும் அகவிருள் நீங்க வீட்டினைக் கொடுக்கும் என அறிவுறுத்துவது,

> "இருணீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி
> மாசறு காட்சி யவர்க்கு" (திருக். 352)

எனவரும் திருக்குறளாகும். ஈண்டு இருள் என்றது, உயிர்கள் அடையும் எல்லாத் துன்பத்திற்கும் காரணமாயுள்ள ஆணவவல்லிருளை. 'இருளாயவுள்ளத்தின் இருளை நீக்கி' என்பது அப்பரருள் மொழி. மருள் என்றது மயக்கவுணர்வினை. மாசறு காட்சியென்றது மெய்ப்பொருளுணர்வினை. வீடென்பது உயர்வறவுயர்ந்த பேரின்பநிலையென்பதும் அதனைப் பெறுதற்கு நிமித்தகாரணம் மெய்ப்பொருளுணர்வென்பதும் இதனால் கூறப்பட்டன. இனி, இங்கு இருள் என்றது நரகத்தினையெனவும் அஃது ஆகுபெயராய் அதற்குக் காரணமாகிய பிறப்பின் மேல் நின்றதெனவும் கூறுவர் பரிமேலழகர். ஆசிரியர் திருவள்ளுவர் 'இருள்' என்ற சொல்லினை ஆணவம் என்னும் அகவிருள் என்ற பொருளிலும் 'மருள்' என்ற சொல்லினை மயக்கவுணர்வு என்ற பொருளிலும் ஆண்டுள்ளார் என்பது 'இருள்சேர் இருவினையுஞ்சேரா', 'இருணீங்கியின்பம் பயக்கும்', 'மருளானாம் மாணாப்

பிறப்பு' எனவரும் திருக்குறள் தொடர்களை ஒப்புநோக்கி ஆராய்வார்க்கு இனிது விளங்கும்.

ஐயத்தினின்றும் நீங்கி மெய்ப்பொரு ளுண்மையை யுணர்ந்தார்க்கு அவர்கள் எய்தி நின்ற நிலவுலகத்தினும் இனி எய்துதற்குரிய வீட்டுலகம் மிகவும் அணிமைக்கண் நெருங்கியுள்ளது என்பார்.

"ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து" (திருக். 353)

என்றார் திருவள்ளுவர். ஐயமாவது ஒருபொருளைக் குறித்துப் பலவேறாக எண்ணி அவற்றுள் ஒன்றிலுந்துணிவு பிறவாது நிற்றல். ஒருவாற்றாற் பிறர் மதங்களை ந்து தமது மதத்தினை நிலைநாட்ட முயலுதல் எல்லாச் சமய நூல்கட்கும் இயல்பாதலின் அந்நூல்கள் கூறுகின்றவற்றுள் யாது மெய் என நிகழும் ஐயத்தினை யோக முதிர்ச்சி யுடையார் தமது அனுபவத்தால் நீக்கி அதன் மெய்மையை யுணர்வராதலின் அத்தகைய மெய்ப்பொருள் பயிற்சி யுடையோரை 'ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்' என்றார். மெய்ப்பொருளைத் தெளிந்தார்க்கு அவ்வனுபவவுணர்வு பயின்று மேற்படிப் பண்டையுலகியலுணர்வு தூர்ந்து மறையுமாதலின் இவ்வுலகியல் தொடர்பினும் வீட்டியல் தொடர்பே அவர்க்கு மிக நெருக்கமுடையதாய் வரும் என்பார் 'வையத்தின் வானம் நணியதுடைத்து' என்றார்.

மெய்ப்பொருளாகிய இறைவனையுணர்ந்து போற்றாதார்க்குப் புறத்தே செல்லுதற்குரிய புலன்களின் வேறுபாட்டால் ஐந்தாகியவுணர்வுடைய மனம் புலனடக்கத்தால் அவற்றை விட்டு நீங்கித் தம்வயத்ததாய வழியும் சிறிதும் பயனில்லையென்பது,

"ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு" (திருக். 354)

எனவரும் திருக்குறளால் வலியுறுத்தப்பட்டது. ஐயுணர்வு- ஐந்தாகிய உணர்வு என்றது ஐம்புலவுணர்வுடைய மனத்தினை

எய்துதலாவது, புறத்தே செல்லாது மடங்கி ஒருநிலைப்பட்டு அடங்கித்தாரணைக்கண் நிற்றல். மெய்யுணர்வு - மெய்ப் பொருளாகிய இறைவனையுணரும் உணர்வு. செம்பொரு ளாகிய இறைவனைச் சிந்தித்துப் போற்றாதார்க்கு மனம் ஐம்புலன் வழிச் செல்லாது அடங்கி நின்றாலும் அதனாற் சிறிதும் பயனில்லையெனவே தெளிந்த மெய்ப்பொருட் சிந்தனையுடையார்க்கே வீடுபேறாகிய பேரின்பநிலை எய்தும் என்பது பெறப்படும். உலகத்து யாதொரு பொருள் யாதோரியல்பிற்றாய்த் தோன்றினும் தோன்றிய அவ்வெளித் தோற்றத்தைக் கண்ட அளவில் அமைந்துவிடாது அப் பொருளின் உள்நின்று இயக்கும் மெய்ப்பொருளைக் (இறைவனைக்) கண்டுணர்வதே உண்மையான அறிவாகும் என்பர் சான்றோர். இந்நுட்பம்,

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" (திருக். 355)

எனவரும் திருக்குறளில் வலியுறுத்தப்பெற்றுள்ளமை காணலாம். இதன்கண் 'எப்பொருள்' என்றது புறத்தே காணப்படும் மாறுந்தன்மையதாய உலகப்பொருள்களை. அப்பொருள் மெய்ப்பொருள் என்றது, அவ்வுலகப் பொருள்களின் உள்நின்றியக்கும் மாறாவியல்பினதாகிய செம்பொருளை.

"யாதொரு பொருள் யாதோரியல்பிற்றாய்த் தோன்றினும் அத்தோன்றியவற்றைக் கண்டொழியாது அப்பொருள்களினின்று மெய்யாய பொருளைக் காண்பதே மெய்யுணர்வாவது" எனப் பொருள் வரைந்து இதனை மெய்யுணர்வது இலக்கணங் கூறியதாகக் கூறினார் பரிமேலழகர். பொருள்தோறும் உலகத்தார் கற்பித்துக் கொண்டு வழங்குகின்ற கற்பனைகளைக் கழித்து நின்ற வுண்மையைக் காண்பதே மெய்யுணர்வு என்றவாறு, "அஃதாவது சோச்சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ் சேரலிரும்பொறை என்றவழி அரசன் என்பதோர் சாதியும் சேரமான் என்பதோர் குடியும் வேழநோக்கினையுடையான் என்பதோர் வடிவும், சேஎய் என்பதோர் இயற்பெயரும், மாந்தரஞ் சேரலிரும்பொறை என்பதோர் சிறப்புப்பெயரும்

ஒரு பொருளின்கட் கற்பனையாகலின் அவ்வாறு (உலகத்தார் கற்பித்துக் கொண்ட கற்பனையினை மெய்ம்மையென) உணராது நிலமுதல் உயிரீறாகிய தத்துவங்களின் தொகுதியெனவுணர்ந்து அவற்றை நிலமுதலான காரணங்களுள் ஒடுக்கிக் கொண்டு சென்றாற் காரண காரியங்கள் இரண்டுமின்றி முடிவாய் நிற்பதனை யுணர்தலாம். எப்பொருள் என்ற பொதுமையான் இயங்கு திணையும் நிலைத்திணையுமாகிய பொருள்களெல்லாம் இவ்வாறே யுணர்ப்படும். இதனால் மெய்யுணர்வினது இலக்கணம் கூறப்பட்டது" எனப் பரிமேலழகர் தரும் விளக்கம் சாங்கிய நூலார் கொள்கையினை அடியொற்றி யமைந்ததாகும். மெய்யுணர்தல் என்ற தொடர், மெய்மையான் (ஒரு பொருளை ஆராய்ந்து) உணர்தல் என்ற பொருளுடைய அதிகாரத் தலைப்பாகும். சொல்லின் முடியும் இலக்கணத்ததாகிய மெய்யுணர்தல் என்ற தொடர் மெய்ம்மையான் ஒன்றனை ஆராய்ந்துணர்தல் என்ற பொதுப்பொருளோடு மெய்ப்பொருளாகிய இறைவனை இடைவிடாது சிந்தித்துணர்தல் என்ற சிறப்புப் பொருளையும் தருவதாகும். அத்தகைய சிறப்புப்பொருளை விரித்துரைக்கும் நிலையிலமைந்தனவே இவ்வதிகாரத்தில் நான்கு முதல் ஒன்பது முடியவுள்ள குறள்கள். ஐந்தாங் குறளாகிய இதன்கண் புறத்தே காணப்படும் பொருள்களையெல்லாம் எப்பொருள் என்ற வினாவில் அடக்கியும் அங்ஙனம் அடக்கியவற்றை அப்பொருள் எனச் சுட்டி 'அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு' என அவற்றை உள்நின்றியக்கும் செம்பொருளைக் கண்டு தெளிதலே மெய்யுணர்வின் சிறப்பியல்பாகும் என்று ஆசிரியர் வலியுறுத்தினார் எனக் கொள்ளுதலே ஏற்புடையதாகும்.

இம்மக்கட்பிறப்பின் கண்ணே அருளனுபவமுடைய ஆசிரியனிடத்தே உபதேசமொழிகளைக் கேட்டு அதனால் மெய்ப்பொருளையுணர்ந்தவர் மீண்டும் இப்பிறப்பின்கண் வாராத நெறியை எய்துவர் என்பது,

> "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
> மற்றீண்டு வாரா நெறி" (திருக். 356)

எனவரும் திருக்குறளால் உணர்த்தப்பட்டது.

கற்றலாவது பலரிடத்தும் பலகாலும் நற்பொருளைக் கேட்டுப் பயிலுதல். மெய்ப்பொருள் காணுதலாவது, என்றும் மாறாத மெய்ப்பொருளாகிய முழுமுதற் பொருளை உள்ளத்திற் சிந்தித்துப் போற்றுதல். ஈண்டு வாரா நெறி - இவ்வுலகத்து மீண்டும் வந்து பிறவாமைக்கு ஏதுவாகிய வீட்டு நெறி. 'மீண்டு வாரா வழியருள் புரிபவன்' (திருவாசகம்) எனவும் 'வாராவுலகருளவல்லான்' (திருத்தாண்டகம்) எனவும் வரும் திருமுறைத் தொடர்கள் இத்திருக்குறள் தொடருடன் வைத்து ஒப்பு நோக்கத்தக்கன. மெய்ப் பொருளை யுணர்தற்கரிய கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னும் உபாயம் மூன்றனுள் கேட்டல் இதனாற் கூறப்பட்டது

ஆசிரியன்பாற் கேட்ட உபதேச மொழிகளை உள்ளமானது அளவைகளாலும் பொருந்து மாற்றானும் தெளிய ஆராய்ந்து அதனால் என்றும் உள்ளதாகிய முழுமுதற்பொருளையுணருமானால் அங்ஙனம் உணர்ந்த உயிர்க்கு மீண்டும் பிறப்புளதாக நினைக்கவேண்டா என்பார்,

> "ஓர்த்துள்ளம் உள்ள துணரின் ஒருதலையாய்ப்
> பேர்த்துள்ள வேண்டா பிறப்பு" (திருக். 357)

என்றார் திருவள்ளுவர். இதன்கண் உள்ளம் என்றது ஆன்மாவை. உள்ளது என்றது என்றும் மாறாது உள்ளதாகிய சத்தாகிய முழுமுதற் பொருளை. உள்ளம் ஒருதலையாய் ஓர்த்து உணரின் பேர்த்துப்பிறப்பு (உளதாக) உள்ள வேண்டா என இசையும். ஆன்மாவை உள்ளம் என்றும் முழுமுதற் பொருளை உள்ளது (சத்து) என்றும் வழங்கும் சைவசித்தாந்தச் சொற்பொருள் மரபு இத்திருக்குறளில் இடம்பெற்றுள்ளமை கூர்ந்துணரத் தகுவதாகும். இத்திருக்குறளின்படி உள்ளது எனப்படும் முழுமுதற் பொருளைத் தெளியவுணர்ந்து வழி படாதவர்கள் சமணர்கள் என்ற செய்தியை 'ஓர்த்துள்ளவாறு நோக்கி யுண்மையையுணராக் குண்டர் வார்த்தையை மெய் யென்றெண்ணி மயக்கில் வீழ்ந்தழுந்து வேனை' எனவரும்

திருநேரிசையில் திருநாவுக்கரசர் குறித்துள்ளமை காணலாம். இதனால் இறைவனைச் சிந்தித்தலாகிய உபாயம் கூறப்பட்டது.

பிறப்பிற்குக் காரணமாகிய பேதைமைகெட வீட்டிற்கு நிமித்த காரணமாகிய செவ்விய முழுமுதற் பொருளைக் கண்டு தெளிவதே ஒருவர்க்கு மெய்யுணர்வாகும் என அறிவுறுத்துவது,

> "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
> செம்பொருள் காண்ப தறிவு" (திருக். 358)

எனவரும் திருக்குறளாகும்.

'பிறப்பென்னும் பேதைமை' எனவும் 'சிறப்பென்னுஞ் செம்பொருள்' எனவும் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். ஐவகைக் குற்றங்களுள் அவிச்சை ஏனைய நான்கிற்குங் காரணமாதலுடைமையின் அச்சிறப்புப் பற்றி அதனையே பிறப்புக்குக் காரணமாக்கிக் கூறினார். எல்லாப் பொருளினுஞ் சிறந்ததாதலால் வீடு சிறப்பெனப்பட்டது. தோற்றக்கேடுகளின்மையின் நித்தமாய், நோன்மையால் தனியென்றுங் கலத்தலின்மையின் தூய்தாய்த் தான் எல்லாவற்றையுங்கலந்து நிற்கின்ற முதற்பொருள் விகாரமின்றி எஞ்ஞான்றும் ஒருதன்மைத்தாதல் பற்றி அதனைச் செம்பொருள் என்றார். மேல் மெய்ப்பொருள் எனவும் உள்ளது எனவும் கூறியதூஉம் இது பற்றியென வுணர்க. அதனை (செம்பொருளை)க் காண்கையாவது உயிர் தன்அவிச்சை கெட்டு அதனோடு ஒற்றுமையுற இடைவிடாது பாவித்தல்; இதனைச் சமாதியெனவும் சுக்கிலத் தியானம் எனவும் கூறுவர். உயிர் உடம்பின் நீங்குங்காலத்து அதனால் யாதொன்று பாவிக்கப்பட்டது அஃது அதுவாய்த் தோன்றும் என்பது எல்லா ஆகமங்கட்கும் துணிபாகலின் வீடெய்து வார்க்கு அக்காலத்துப் பிறப்பிற்கேதுவாகிய பாவனை கெடுதற்பொருட்டுக். கேவலப் பொருளையே பாவித்தல் வேண்டுதலால் அதனை முன்னே பயிறலாகிய இதனின் மிக்க உபாயம் இல்லையென்பது அறிக. இதனாற் பாவனை கூறப்பட்டது என இத்திருக்குறளுக்குப்

பரிமேலழகர் தரும் விளக்கும் சைவசித்தாந்தக் கோட்பாட்டிற்கு ஒத்ததேயாகும். பரிமேலழகர் இங்குக் கேவலப் பொருள் என்றது முதற்பொருளாகிய 'செம்பொருளாகிய சிவமெனலாமே' (திருமந்திரம்) எனவரும் திருமூலர் வாய்மொழியாலும் 'செம்பொருட்டுணிவே' (திருவாசகம்) எனவரும் திருவாதவூரடிகள் வாய்மொழியாலும் நன்கு தெளியப்படும்.

ஒருவர் எல்லாப் பொருட்குஞ் சார்பாகிய செம்பொருளையுணர்ந்து தம்மைச் சார்வனவாகிய இருவகைப் பற்றும் அறஒழுகவல்லராயின் அவரை முன்னர்ச் சாரக் கடவனவாய் நின்ற துன்பங்கள் அவர்தம் உணர்வொழுக்கங் களையழித்துச் சாரமாட்டா என்பார்,

"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மாற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்" (திருக். 359)

என்றார் தெய்வப்புலவர். இத்திருக்குறளில் முதற்கண் உள்ள சார்பு என்பது உலகுயிர்களாகிய எல்லாப் பொருட்கும் சாரும் நிலைக்களமாகத் திகழும் செம்பொருளையும் அடுத்து நின்ற சார்பு என்பது உயிர்களைச் சார்வனவாகிய இருவகைப் பற்றுக்களையும் உணர்த்தின. ஆகுபெயர் 'சைவனாரவர் சார்பலால் யாம் சார்பிலோம் நாங்களே' என்பது ஆளுடைய பிள்ளையார் அருளிச் செயல். இத்திருக்குறளில் சார்புணர்தல் என்றது எல்லாப் பொருட்குஞ் சார்பாய் நின்ற முழுமுதற் பொருளை இடைவிடாது உணருந் தியானத்தையும் சார்பு கெடவொழுகல் என்றது சமாதியையுங் குறிப்பன. இத்திருக்குறட்பொருளை விரித்துரைக்கும் நிலையில் அமைந்தது,

"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் என்றமையான்
சார்புணர்தல் தானே தியானமுமாம் - சார்பு
கெடவொழுகின் நல்ல சமாதியுமாம் கேதப்
படவரு தில்லைவினைப் பற்று"

எனவரும் திருக்களிற்றுப்படியார் வெண்பாவாகும்.

"சாரக்கடவனவாய் நின்ற துன்பங்களாவன : பிறப்பு

அனாதியாய் வருதலின் உயிரான் அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளான் அனுபவித்தனவும் பிறந்தவுடம்பான் முகந்து நின்றனவும் ஒழியப்பின்னும் அனபவிக்கக் கடவனவாய்க்கிடந்தன. அவை விளக்கின் முன் இருள்போல் ஞானயோகங்களின் முன்னர்க் கெடுதலான், அழித்துச் சார்தரா என்றார். . . . . . பிறப்பிற்குக் காரணமாகலான் நல்வினைப் பயனும் நோயெனப்பட்டது. மேல்மூன்று உபாயத்தானும் பரம்பொருளையுணரப் பிறப்பறும் என்றார். அஃது அறும் வழிக்கிடந்த துன்பங்களெல்லாம் என்செய்யும் என்னும் கடாவை ஆசங்கித்து, அவை ஞானயோகங்களின் முதிர்ச்சியுடைய உயிரைச் சாராமாட்டாமையானும் வேறு சார்பின்மையானும் கெட்டுவிடும் என்பது இதனாற் கூறப்பட்டது" எனப் பரிமேலழகர் தரும் விளக்கம். மெய்யுணர்தல் என்னும் இவ்வதிகாரத்திற் கூறப்படும் கருத்துக்கள் யாவும் கடவுள், உயிர், உலகம் என்னும் முப்பொருளுண்மையை வற்புறுத்தும் சைவ சித்தாந்தக் கொள்கையினர்க்கே முற்றிலும் பொருந்துவனவாதலை நன்கு புலப்படுத்துகின்றது.

மேற்கூறியவாறு சார்புணர்ந்து சார்புகெட வொழுகுதலாகிய ஞானயோகங்களின் முதிர்ச்சி யுடையார்க்கு விழைவு, வெறுப்பு, மயக்கம் என்னும் இக்குற்றங்கள் மூன்றனுடைய பெயருங்கூட அறவே கெடுதலால் அவற்றின் காரியமாகிய வினைப்பயன்கள் அவர்க்குச் சிறிதும் உளவாகா என அறிவுறுத்துவது,

> "காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
> நாமங் கெடக்கெடும் நோய்" (திருக். 360)

எனவரும் திருக்குறளாகும்.

மக்கள்பால் அமைந்த காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களுள் ஏனையிரண்டிற்கும் அடிப்படை யாகஅமைந்தது மயக்கம். இது ஒன்றும் அறியாமையாகிய பேதைமை எனவும், தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்துப் பெரியோரை அவமதித்தொழுகும் புல்லறிவாண்மையும் என இருவகைப்படும். இவ்

விரண்டினையும் இரண்டதிகாரங்களில் திருவள்ளுவர் விரித்துரைத்தலால் சிற்றறிவுடைமை உயிர்களது இயல்பு என்பதனைத் திருவள் ளுவர் அறிவுறுத்தினாராவர்.

"அநாதியாய அவிச்சையும், அதுபற்றி யான் என மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்குஇதுவேண்டும் என்னும் அவாவும், அதுபற்றி அப்பொருட்கட் செல்லும் ஆசையும் அதுபற்றி அதன் மறுதலைக்கண் செல்லும் கோபமும் எனவடநூலார்க் குற்றம் ஐந்து என்றார். இவர் அவற்றுள் அகங்காரம் அவிச்சைக்கண்ணும் அவாவுதல் ஆசைக்கண்ணும் அடங்குதலான் மூன்று என்றார். இடையறாத ஞானயோகங்களின் முன்னர் இக்குற்றங்கள் மூன்றும் காட்டுத்தீ முன்னர்ப் பஞ்சுத் துய்ப்போலு மாகலின் அம்மிகுதி தோன்ற 'இவை மூன்றன் நாமம் கெட' என்றார் . . . .காரணமாய அக்குற்றங்களைக் கெடுத்தார் காரியமாகிய இருவினைகளைச் செய்யாமையின், அவர்க்கு வரக்கடவ துன்பங்களும் இல்லை என்பது இதனாற்கூறப்பட்டது. முன்கிடந்த துன்பங்களும் மேல் வரக்கடவதுன்பங்களும் இல்லாதல் மெய்யுணர்வின் பயனாகலின் இவையிரண்டு பாட்டும் இவ்வதிகாரத்தவாயின. இவ்வாற்றானே மெய்யுணர்ந்தார்க்கு நிற்பன எடுத்தவுடம்பும் அது கொண்ட வினைப்பயன்களுமேயென்பது பெற்றாம்" என இக்குறளுக்கு விளக்கங்கூறுவர் பரிமேலழகர். மெய்யுணர்ந்தாராகிய சிவஞானிகளுக்கு ஓதுகன்மும் இல்லை என்பது,

> "ஏன்ற வினையுடலோ டேகும் இடையேறும் வினை
> தோன்றில் அருளே சுடும்" (திருவருட்பயன் 98)

எனவரும் சித்தாந்த நூலால் நன்கு தெளியப்படும்.

உயிர்களால் முன்னர் ஈட்டப்பட்டு நுகர்ச்சிக்கு எடுத்துக் கொள்ளப்படாது சேர்ந்துள்ள பழவினையைச் சஞ்சிதம் எனவும், அவற்றுள் இப்பிறப்பில் நுகர்தற்கென உடம்பினால் முகந்து கொள்ளப்பட்ட நுகர்வினையைப் பிராரர்த்தம் எனவும், பிராரர்த்தம் நுகரும் பொழுதே அந்நுகர்ச்சியினுடன் தோன்றும் விருப்பு வெறுப்புக் காரணமாகப் புதியனவாய் வந்து ஏறும் வினையினை

ஆகாமியம் எனவும் வழங்குதல் சைவசித்தாந்த மரபு. சஞ்சிதவினை ஆசிரியன் செய்யும் தீக்கையினாற் கெட்டொழியும், ஆகாமியம் சிவஞானத்தினால் வெந்தொழியும் என்பர். இப்பிறவியில் எடுத்தவுடம்பில் நுகர்தற்குரிய பிராரர்த்தமும் அது காரணமாக வந்தேறும் ஆகாமியமும் அற்றொழியப் பிறவாநிலை வந்தெய்தும். எனவே இனிவரும் பிறவிக்குரியனவாகிய சஞ்சிதம் கெட்டொழியும் என்பது கூறாமலேயே விளங்கும். இம்மூவகை வினைக்கும் சார்புணர்ந்து சார்புகெட வொழுகும் மெய்ஞ்ஞானிகளைச் சாராமாட்டா என்பார் 'சார்தரும் நோய் சார்தரா' எனவும் 'நாமங்கெடக்கெடும் நோய்' எனவும் கூறினார் திருவள்ளுவர்.

யோகஞானங்களையுடையராய் முன்னும் பின்னுமுள்ள வினைத்தொடர்பு அறுத்தார்க்கு அவர்தம் உடம்பும் அதுமுகந்து கொண்ட வினைப்பயன்களும் எஞ்சி நின்றமையின் வாதனை பற்றி ஒரோவழி முன்னர்த் துறக்கப்பட்ட புலன்கள் மேற்பழைய பயிற்சி வயத்தால் நினைவு செல்லுதல் உண்டு. அந்நினைவும் மருள் (அவிச்சை) எனப்படும் மாணா பிறப்பிற்கு வித்தாகும். அம்மயக்கத்தினை இடைவிடாத மெய்ப்பொருளுணர்வினால் அறுத்தல் வேண்டும் என அறிவுறுத்துவது அவாவறுத்தல் என்னும் அதிகாரமாகும். எல்லாவுயிர்க்கும் பிறப்பிற்குக் காரணம் அவாவே என்பதனையும், அத்தகைய அவா அறவே பிறவாமைதானே வரும் என்பதனையும் விளங்க அறிவுறுத்துவது,

> "அவாவென்ப எல்லாவுயிர்க்கும் எஞ்ஞான்றும்
> தவாஅப் பிறப்பினும் வித்து" (திருக். 361)

எனவரும் திருக்குறளாகும்.

உடம்பு நீங்கிப் போங்காலத்து அடுத்தவினையும் அது காட்டுங்கதி நிமித்தங்களும் அக்கதிக்கண் அவாவும் உயிரின்கண் முறையே வந்து உதிப்ப, அறிவை மோகம் மறைப்ப, அவ்வுயிரை அவா அக்கதிக்கண் கொண்டு செல்லும் ஆகலான் பிறப்பீனும் அவா என்றார். தேவகதி,

மானுடகதி, விலங்குகதி, நரககதி என்னும் பிறப்புவகையான் உளதாய உயிர் வேறுபாட்டினும் அவை தம் தன்மைதிரியும் வளர்காலம் தேய்காலம் எனும் காலவேறுபாட்டினும் அவா பிறவிக்கு வித்தாதல் வேறுபடாமையின் 'எல்லாவுயிர்க்கும் எஞ்ஞான்றும்' என்றார். பிறவிக்கு வித்தாவது அவா என்னும் இக்கொள்கை எல்லாச் சமயங்கட்கும் ஒத்தலால் என்ப எனப் பொதுப்படக் கூறினார். இதனால் அவா பிறப்பிற்கு வித்தாதல் கூறப்பட்டது. பிறப்புத்துன்பமாதல் அறிந்தவர் ஒரு பொருளை வேண்டுவராயின் பிறவாமையை வேண்டிப் பெறுதல் வேண்டும். அங்ஙனம் வேண்டப்பெறும் பிறவாமை தானும் ஒருபொருளையும் அவாவாமையை வேண்ட அவர்க்குத் தானேயுண்டாகும் என்பார்,

> "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
> வேண்டாமை வேண்ட வரும்" (திருக். 362)

என்றார் திருவள்ளுவர். தோற்றமில் காலமாகத் தாம் பிறப்பு பிணி மூப்பு இறப்புக்களால் துன்பமுற்று வருகின்றமையை யுணர்ந்தவர்க்கு ஆசை இன்பத்தின் கண்ணே யாகனான் 'பிறவாமையை வேண்டும்' என்றார். இவ்வுலகிற்குச் சிற்றின்பங்கருதி ஒரு பொருளை அவாவின் அவாவானது பிறப்பீனும் வித்தாய்ப் பின்பும் முடிவில்லாத துன்பமே விளைத்தலின் பிறவாமையாகிய அப்பேறு ஒன்றையும் வேண்டாமையாகிய அவாவின்மையை வேண்டத் தானே வரும் என்றார். இத்திருக்குறட்பொருளைப் பகுத்து விளக்கும் முறையில் அமைந்தது,

> **"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்மையால்**
> **வேண்டின தொன்றுமே வேண்டுவது வேண்டினது**
> **வேண்டாமை வேண்டவரும் என்றமையால் வேண்டிடு**
> **வேண்டாமை வேண்டுமவன்பால்"**
>
> (திருக்களிற்றுப்படியார் 40)

எனத் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் அருளிய திருக்களிற்றுப்படியார் பாடலாகும்.

"வேண்டுவார் வேண்டுவதே யீந்தருளும் இறைவன்

பால் ஒன்றை விரும்பி வேண்டுங்கால் பிறவாமையாகிய பேறொன்றுமே வேண்டத்தகுவதாகும் எனத் திருவள்ளுவ நாயனார் அறிவுறுத்தினமையால் பிறவாமையாகிய அஃதொன்றுமே வேண்டிப் பெறுதற்குரியதாகும். பிறவாமையாகிய அப்பேறுதானும் உலகப்பொருள்களில் வைத்த அவாவையறுத்தலாகிய வேண்டாமையினை வேண்டத்தானேவரும் என்ற திருவள்ளுவர் வாய்மொழி யினால் யாவரும் விரும்பி வேண்டத்தக்க முதல்வன்பால் பிறவாமைக்குக் காரணமாகிய அவாவறுத்தல் ஒன்றுமே விரும்பிவேண்டத்தகுவதாகும்" என்பது மேற்காட்டிய பாடலின் பொருளாகும்.

அவாவின்மையே உயிர்களைத்தோற்றமில் காலமாகப் பற்றியுள்ள மலமாசினை நீக்கித் தூய்மையுடைய துறவறமாகிய வீட்டு நெறியினை நல்கி ஆன்மாவைத்தூய்மை செய்வதாதலின் இத்தகைய அவா வறுத்தலாகிய மனத்தூய்மை வாய்மைப்பொருளாகிய இறைவனை இடைவிடாது சிந்தித்தலாலேயே பெறுதற்குரியதாகும். இவ்வுண்மையினை,

> "தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
> வாஅய்மை வேண்ட வரும்" (திருக். 364)

எனவரும் திருக்குறளில் திருவள்ளுவர் குறிப்பிட்டுள்ளார். உயிர் அநாதியே தன்னைப் பற்றியுள்ள மலமாகிய மாசு நீங்குதலே வீடாதலின் அவ்வீடுபேற்றினைத் 'தூஉய்மை' என்றும் திரிபின்றியுள்ள மெய்ப்பொருளாகிய இறைவனை 'வாஅய்மை' என்றும் கூறினார் திருவள்ளுவர். தூஉய்மை யாகிய வீடுபேறு அவாவின்மைக் காரணமாகப் பெறுதற்குரியது என்பார் 'தூஉய்மை' என்பது அவாவின்மை எனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார். வாய்மை என்றது மெய்ப்பொருளாகிய இறைவனை. வேண்டுதல் - இடைவிடாது நினைத்துப் போற்றுதல், இதனால் அவாவறுத்தல் என்பது வீடடைதற்கு வழிமுறையானன்றி நேரே ஏதுவென்பதும், அத்தகைய அவாவறுத்தல் தானும் இறைவனை இடைவிடாது நினைந்து போற்றுதல் வாயிலாகவே ஒருவர்க்குக் கைகூடும் என்பதும் இத்

திருக்குறளில் வலியுறுத்தப் பெற்றுள்ளமை கூர்ந்துணரத் தகுவதாகும்.

அவாவினை முற்ற அறுத்தவனுக்குச் செய்தன வெல்லாம் தவமாம். அவா இல்லாதார்க்கு வரக்கடவதொரு துன்பமுமில்லை. அவாவே துன்பத்திற்குக் காரணமாகும். அவா என்று சொல்லப்படுகின்ற மிக்க துன்பம் ஒருவர்க்குக் கெடுமாயின் அவர் வீடுபெற்ற பின்னர் என்பதின்றி இவ்வுலகத்து உடம்பொடு கூடிநின்ற நிலையிலும் இன்பம் இடையறாது என்பார்,

"இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னும்
துன்பத்துட் டுன்பங் கெடின்" (திருக். 369)

என்றார் திருவள்ளுவர். 'அவா என்னும் துன்பத்துள் துன்பம் கெடின் ஈண்டும் இன்பம் இடையறாது' என இயைத்துப் பொருள் கொள்வர் பரிமேலழகர், துன்பத்துள் துன்பமாவது வாழ்க்கையில் நேரும் பிறதுன்பங்களெல்லாம் இன்பம் என்று எண்ணுமாறு வரும் மிக்க துன்பம். ஈண்டு - இவ்வுலகத்து உடம்பொடு கூடியுள்ள நிலையிலும், அவாவறுத்தார்க்கு மனமானது உலகப்பொருள் மேற் சிறிதும் பற்றின்மையால் தடுமாற்றமின்றி நிறைவு பெற்று நிற்றலால் இடையறாத இன்ப நிலையினையுடையதாயிற்று என்பார். 'இன்பம் இடையறாது' என்றார். அவாவறுத்தார் இவ்வுலகில் உடம்பொடு கூடிவாழும் நிலையிலேயே மெய்ப் பொருளாகும் இறையொடு கலந்து வீடுபேற்றின்பத்தினை நுகர்வர்என்னும் சைவசித்தாந்தக் கொள்கைக்கு இத்திருக்குறள் அரண்செய்தல் அறியத்தகுவதாகும்.

நம்மிடத்து உள்ளது போதும் எனும் மன நிறைவினைத் தராத இயல்பினதாகிய அவாவினை ஒருவர்அறவே நீக்குவராயின் அத்தகைய நீத்தல், அவர்க்கு அப்பொழுதே எக்காலத்தும் திரிபின்றி ஒரு நிலையராம் வீடுபேற்றியல்பினைக் கொடுக்கும் என்பார்,

"ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்" (திருக். 370)

என்றார் தெய்வப்புலவர். ஆராமையாவது நமக்கு உள்ளது போதும் என மனம் நிரம்பாமை. தாமேயன்றித் தம்பயனும் நிலையாமை வேண்டாதனவாய பொருள்களை வேண்டி மேன்மேல் வளர்தல். பெற்றது போதும் என மனம் நிரம்பாது பெறாத பொருளின் மேற் பற்றுவைப்பதே அவா எனப்படும் என அதன் இயல்பினைப் புலப்படுத்தும் முறையில் அமைந்தது, 'ஆராவியற்கை அவா' என்னும் தொடராகும். "பேரா வியற்கை என்றது என்றும் மாறாது அழியாவின்ப நிலையினதாகிய வீடு பேற்றினைக் களிப்புக்கவற்சிகளும் பிறப்புப் பிணிமூப்பு இறப்புக்களும் முதலாயின இன்றி உயிர் நிரதிசய (உயர்வறவுயர்ந்த இன்பத்ததாய் நிற்றலின், வீட்டினைப் 'பேராவியற்கை' என்றும், அஃது அவா நீத்தவழிப் பெறுதல் ஒருதலை (உறுதி)யாதலின் அந்நிலையே தரும்" என்றும் கூறினார்.

"நன்றாய் ஞானங்கடந்து போய் நல்லிந்திரிய மெல்லா மீர்த்
தொன்றாய்க்கிடந்த அரும் பெரும் பாழ் உலப்பிலதனை
யுணர்ந்துணர்ந்து
சென்றாங்கின்ப துன்பங்கள் செற்றுக் களைந்து
பசையற்றால்
அன்றே அப்போதே வீடும் அதுவே வீடு வீடாமே"
(திருவாய்மொழி 78.5)

என்பதும் இக்கருத்தேபற்றி வந்தது. இந்நிலைமை யுடையவனை வடநூலார் சீவன் முத்தன் என்ப எனப் பரிமேலழகர் தரும் விளக்கம் தெய்வத் திருவருளால் வீடு பேற்றின்பம் உளதாம் என்னும் கடவுட் கொள்கையுடைய சமயங்கட்கெல்லாம் ஏற்புடையதாகும். இவ்வாறு உடம்பொடு கூடியுள்ள நிலையிலேயே அவா வறுத்து வீட்டின்ப நிலையெய்திய சீவன் முத்தர்களைப் 'பராவு சீவர்' (தேவாரம் 3.67.6) எனவும் 'நடமாடுங்கோயில் நம்பர்' (திருமந்திரம் 1857) எனவும் போற்றுதல் சைவசித்தாந்தத் தமிழ் மரபாகும்.

இவ்வுலகில் உடம்புடன் கூடிவாழும் விழிப்பு நிலையிலேயே உலகப்பொருள்களின் அவாவை முற்றக்

களைந்து உலக வாழ்க்கையில் சிறிதும் தோய்வின்றிச் செம்பொருளாய சிவத்துடன் கூடி நின்று தன் செயலறச் சிவமே தாமாகத் திகழும் திருவருள் நலம் வாய்க்கப்பெற்ற சீவன் முத்தர்களை,

"சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகிற்
சருவசங்க நிவிர்த்தி வந்த தபோதனர்கள் இவர்கள்
பாக்கியத்தைப் பகர்வது என்இம்மையிலே உயிரின்
பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவரன்றோ"

எனப் போற்றுவர் அருணந்தி சிவாசாரியார். பராவுதல் சஞ்சரித்தல் மக்கள் வடிவினை மேற்கொண்டு உலகிற் சஞ்சரிக்கும் சிவ பரம் பொருள்களாகத் திகழ்பவர் என்னும் கருத்தில் சிவஞானிகளுக்கு வழங்கும் பெயர் பராவுசிவர், நடமாடுங்கோயில் நம்பர் என்பனவாகும்.

இம்மை மறுமை வீடு என்னும் மும்மைப் பயன் களையும் ஒருங்கே பயக்கும் பொருளும் இன்பமும் கூறத்தொடங்கி அவற்றிற்குக் காரணமாகிய ஊழின் வலிமையினை 'ஊழ்' என்னும் அதிகாரத்திற் கூறியுள்ளார். ஊழைப்பற்றித் திருவள்ளுவர் கூறியுள்ளவற்றைத் தொகுத்து நோக்குவோமாயின் சைவசித்தாந்தக் கொள்கையின் வேர்கள் இவ்வதிகாரத்திற் கால்கொண்டுள்ளமை இனிது புலனாகும்.

உயிர்கள் செய்த நன்றுந்தீதுமாகிய இருவினைப் பயன்கள் அவ்வினை செய்த உயிர்களையே சென்றடையு மாறு அமைந்த முறைமையே ஊழ் எனப்படும். பால்முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி என்பன ஊழினைக்குறித்து வழங்கும் மறுபெயர்களாகும். அறத்தொடு நெருங்கிய தொடர்புடையதாய்ப் பொருள் இன்பங்கட்கு ஏதுவாதலின் அறத்துப்பாலின் இறுதிக்கண் ஊழைப் பற்றிய அதிகாரம் வைக்கப்பட்டது.

உலக வாழ்க்கையில் ஒருசாரார் இடைவிடாமுயற்சி யுடையவராகவும் மற்றொரு சாரார் சோம்பர்களாகவும் இருக்கக் காண்கிறோம். முயற்சி ஆக்கத்திற்கும் சோம்பல் (மடி) அழிவிற்கும் காரணம் என்பது யாவரும் அறிந்த

உண்மை. மக்கள்பால் அசைவின்மை - தளரா முயற்சி தோன்றுதற்கும் அவர்கள்பால் மடி - சோம்பல் குடி கொண்டிருத்தற்கும் ஊழ் காரணம் என்பதும் முயற்சிக்குக் காரணமாகிய ஊழ் ஆகூழ் எனவும் சோம்பற்குக் காரணமாக ஊழ் போகூழ் எனவும் ஊழ் இருவகைப்படும் என்பதும்,

> "ஆகூழாற் றோன்றும் அசைவின்மை கைப்பொருள்
> போகூழாற் றோன்றும் மடி" (திருக். 371)

எனவரும் இவ்வதிகாரத்து முதற்குறளால் விளக்கப்பெற்றன. ஆகூழ் - ஆகுஊழ் - பொருளும் இன்பமும் அதற்குக் காரணமாகிய ஊழ், பொருள் இன்பம் ஆகியவற்றின் ஆக்க அழிவுகட்குத் துணைக்காரணமாகிய தளராமுயற்சியும் சோம்பலையும் ஒருவர்க்கு ஊழ் காரணமாகவே அமைவன என்பது இதனால் வலியுறுத்தப்பட்டது. மக்களது வாழ்விலே புறத்தே வெளிப்படும் முயற்சி சோம்பல் என்பனவற்றுக்கேயன்றி அகத்தே தோன்றும் இயற்கை யறிவின் தொழிற்பாட்டிற்கும் அவ்வறிவு விரிவடையாத நிலையாகிய பேதைமைக்கும் ஊழே காரணமாவது என்பார்,

> "பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
> ஆகலூழ் உற்றக் கடை" (திருக். 372)

என்றார் திருவள்ளுவர். ஒருவர்க்கு எல்லா அறிவும் உளவாயினும் கைப்பொருளிழக்கும் இழவூழ்வந்தவிடத்து அவ்வூழ் அவரது அறிவைப் பேதைமைக்கு உட்படுத்தும். ஆகலூழ் வந்தவிடத்து அவரது அறிவு சுருங்கிய நிலையின தாயினும் அவ்வறிவை விரிவடையச் செய்யும் என்பது இதன் பொருளாகும். ஒருவர்க்கு இயற்கையானாய அறிவினை வேறுபடுத்தும் வன்மையுடையது ஊழென்பது இதனால் வலியுறுத்தப்பட்டது. ஒருவர் நுண்ணிய பொருள்களை யுணர்த்தும் நூல்கள் பல கற்றாராயினும் பேதைமைப் படுத்தும் ஊழ்வந்துற்றவிடத்து அவர்க்குத் தாம் முன்கற்ற கல்வியறிவு வெளிப்படாது பின்னும் தம் ஊழினாலாகிய பேதைமையறிவே வெளிப்பட்டுத் தோன்றும் என்பார்,

> "நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
> உண்மை யறிவே மிகும்" (திருக். 373)

என்றார். இயற்கையறிவையேயன்றிச் செயற்கையானாகிய கல்வியறிவையுங் கீழ்ப்படுத்து மேற்படுந் தன்மையது ஊழ் என்பது இதனால் வலியுறுத்தப்பட்டது.

உலகத்து ஊழினாலாகியஇயற்கை இரண்டுபடும். ஆதலாற் செல்வமுடையராதற்குக் காரணமான ஊழ் வேறு, அறிவுடையராதற் காரணமான ஊழ் வேறு என ஊழினை வகைப்படுத்துரைப்பது,

> "இருவே றுலகத் தியற்கை திருவேறு
> தெள்ளிய ராதலும் வேறு" (திருக். 374)

எனவரும் திருக்குறளாகும். செல்வத்தினை ஈட்டுதலும் அதனைக் காத்தலும் அறிவுடையார்க்கல்லது இயலா தல்லவா? அங்ஙனமாயினும் அறிவுடையார் வறியராகவும் அறிவிலார் செல்வராகவும் உலகியலிற் காணப்படுதலால் அறிவுடையராதற்குக் காரணமான ஊழ் செல்வ முடைமைக்குக் காரணமாகாமையும் செல்வமுடைய ராதற்குக் காரணமான ஊழ் அறிவுடைமைக்குக் காரண மாகாமையும் நன்கு தெளியப்படும் என்பார் 'திருவேறு தெள்ளியராதலும் வேறு' என்றார். எனவே உலகிற் பொருளீட்டுதற்கு அறிவாகிய துணைக்காரணமும் வேண்டப்படாது ஊழே காரணமாம் என்பது வலியுறுத்தப் பட்டது.

உலகிற் பொருளீட்டுதற்கு நல்ல துணைக் காரணங்களாகக் காலம், இடம், கருவி, தொழில் முதலாயின என்பதும் பலரும் அறிந்த உண்மையாகும். இவையெல்லாம் நல்லனவாய்த் திருந்தும் மூலகாரணமாயுள்ள ஊழ் துணை செய்யாது இழவூழாயவழி நல்லவை யெல்லாம் தீயவாய் முடியும். மேற்குறித்த காலம், இடம், கருவி, தொழில் முதலிய துணைக்காரணங்கள் தீயனவாயினும் ஆகலூழ் உற்றவழித் தீயனவும் நல்லனவாய் முடியும் என்பார்.

> "நல்லவை யெல்லாஅந் தீயவாம் தீயவும்
> நல்லவாம் செல்வஞ் செயற்கு" (திருக். 375)

என்றார். ஊழால் என்பது அதிகாரத்தால் வந்து இயைந்தது.

அழிக்கும் ஊழ் உற்றவழிக்காலம் இடம் முதலியன நல்லனவாயினும் எடுத்தசெயல் பயன்தராது அழியும். ஆக்கும் ஊழ் உற்றவழி காலம் முதலிய துணைக்காரணங்கள் தீயனவாயினும் ஆக்கம் உண்டாகும். ஆகவே காலம் முதலிய துணைக் காரணங்களையும் வேறுபடுத்தும் வன்மை ஊழுக்கு உண்டென்பது இதனாற் பெறப்படும்.

ஊழ்வயத்தால் தமக்குத் தொடர்பில்லாத பொருள்களை ஒருவர் எத்துணை வருந்திக் காத்தலும் அப்பொருள்கள் அவரிடத்துநில்லாது ஒழிந்து போகும். ஊழ் வயத்தால் தமக்கேயுரியவாய பொருள்களைக்காவாது புறத்தே கொண்டு போய்ச் சொரிந்தாலும் அவை அவர்களை விட்டு நீங்கமாட்டா. இவ்வுண்மை,

"பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம" (திருக். 376)

என்ற குறளில் வலியுறுத்தப்பெற்றது. பரிதல் - வருந்திக் காத்தல். பால் அல்ல ஊழால் தம்மொடு தொடர்பில்லாதன. தம - ஊழால் தம் நுகர்ச்சிக்கு உரியவாய பொருள்கள் உய்த்துச்சொரிதல் - வீட்டிற் பாதுகாப்பாக வையாது புறத்தே கொண்டு போய்க்கொட்டுதல். மக்களிடத்தே பொருள்கள் நிலைத்துத் தங்குதற்கண் தங்காது அழிந்து போவதற்கும் முறையே அவற்றைக் காத்தலும் காவாமையும் காரணமாத லின்றி அவரவர்தம் ஊழ்வினையே காரணமாம் என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

இவ்வாறு பொருளின் ஆக்கத்திற்கும் அழிவிற்கும் ஊழ்தானே மூலகாரணமாதலை விளக்கிய திருவள்ளுவர் பொருள்களை ஈட்டுதற்கேயன்றி அவற்றை நுகர்தற்கும் ஊழின் துணை இன்றியமையாதது என்பதனை,

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது" (திருக். 377)

எனவரும் குறளில் தெளிவாகக் குறித்துள்ளார். "இறைவன் ஒவ்வோருயிர்க்கும் வகுத்தருளிய ஊழ்முறைமையானன்றிக்

கோடிக்கணக்கான நுகர்பொருள்களை முயன்று தொகுத்தார்க்கும் அவற்றை நுகர்தல் என்பது இயலாது" என்பது இதன் பொருளாகும். ஒருயிர் செய்த வினையின் பயன் பிறிதோறுயிரின் கட்செல்லாமல் (வினைசெய்த) அவ்வுயிர்களே வகுத்து நுகர்வித்தல் இறைவன் ஆணை யாதலின் அங்ஙனம் வகுத்தளிக்கும் இறைவனை 'வகுத்தான்' என்ற பெயராற் குறிப்பிட்டார் திருவள்ளுவர். ஒருவரது வினையின் பயனாகிய ஊழ்வினை தானே யுருவெடுத்து வினைசெய்தாரைப் பற்றி நுகர்விக்கும் உணர்வும் ஆற்றலும் உடையதன்றென்றும் உலகினையும் உலகத்து எல்லாப் பொருள்களையும் ஒழுங்குபெற வகுத்து இயக்கியருளும் இறைவன் உயிர்கள் செய்த இருவினை கட்கேற்ப வகுத்த முறைமைதானே 'ஊழ்' எனப்படு மென்றும் தெளிவுபடுத்தக் கருதிய திருவள்ளுவர் 'வகுத்தான் வகுத்த வகை' என்ற தொடரால் ஊழ்வினையாவது இதுவென விளக்கியுள்ளார். இத்தொடரில் 'வகுத்தான்' என்னுஞ்சொல் இறைவனைக் குறிப்பதாகும். 'வகுத்தவகை என்றது இறைவனால் வகுக்கப்பட்ட நியதியாகிய ஊழினைக் குறிப்பதாகும். பகுத்தது பால் என வழங்கினாற்போல வகுத்தது வகை யென்றாயிற்று. தெய்வத்தின் இயல்பினைப் புலப்படுத்தக் கருதிய தொல்காப்பியனார் அதனைப் 'பால்வரை தெய்வம்' என்ற தொடராற் சுட்டினமையும் தொல்காப்பியனார் கருத்துப்படி ஊழின் இயல்பினை விளக்கக்கருதிய திருவள்ளுவர் அதனை 'வகுத்தான் வகுத்தவகை' என்ற தொடராற் சுட்டினமையும் தெய்வத்தைக் குறித்தும் ஊழினைக் குறித்தும் முறையே தொல்காப்பியனாரும் திருவள்ளுவனாரும் கூறிய கருத்துக்கள் முன்னர் விளக்கப்பெற்றன.

வகுத்தான் வகுத்த வகை எனவரும் இத்தொடர்ப் பொருளைக் கூர்ந்து நோக்கின், இருவினைகளைச் செய்யும் உயிர்களும் அவ்வுயிர்களாற்செய்யப்படும் வினைகளும் அவ்வினைப் பயன்களாக உயிர்கள் நுகர்தற்குரிய இன்ப துன்பங்களாகிய நுகர்ச்சிகளும், இருவினைப்பயன்களை வினைசெய்த உயிர்களே பிறழாது நுகரும்படி நியமித்து நுகர்விக்கும் முதல்வனாகிய இறைவனும் என நான்கு

பொருள்கள் மெய்ந்நூற் கொள்கையினாற் குறிக்கொண்டு கருதத் தக்கனவாம் என்பது நன்கு புலனாகும். மேற்குறித்த நான்கு பொருள்களையும் சிவநெறியாளர்கள்தம் சமயத்துக் குரிய சிறப்புடைப் பொருள்களாகக் கொண்டுள்ளனர். இப்பொருள் நான்கினையும் சைவ சமயத்துக்கேயுரிய சிறப்புடையனவாகச் சாக்கிய நாயனார் தெளிந்துணர்ந்த திறத்தினை,

> "செய்வினையும் செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும்
> மெய் வகையால் நான்காகும் விதித்தபொருள்
> எனக்கொண்டே
> இவ்வியல்பு சைவ நெறியல்லவற்றுக் கில்லையென
> உய்வகையாற் பொருள்சிவ மென்றருளாலே
> யுணர்ந்திருந்தார்"
> (பெரிய. சாக்கிய. 5)

எனச் சேக்கிழார் நாயனார் வகுத்து அருளிச் செய்துள்ளமையும் அவர் அருளியவண்ணமே சைவசமய சந்தான ஆசிரியருள் ஒருவராகிய உமாபதி சிவனாரும் இந்தப் பொருள்களையும்,

> "செய்வானுஞ் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பானும்
> உய்வான் உளனென் றுணர்" (திருவருட்பயன் 5)

எனச் சைவசமயத்தத்துவ நுண்பொருள்களாக எடுத்தாண்டுள்ளமையும் திருக்குறள் கூறும் தத்துவ நெறியினை அடிப்படையாகக் கொண்டது சைவசித்தாந்தத் தத்துவ நெறி என்னும் உண்மையை நன்கு தெளிவுபடுத்துதல் காணலாம்.

உயிர்கள் முன்செய்த வினையின் பயனாகிய ஊழினால் உறுதற்பாலனவாகிய இன்பத் துன்பநுகர்ச்சிகளை ஊழ்ஊட்டாது கழியுமானால் உலகில் வறுமை காரணமாக நுகர்தற்குரிய பொருள்கள் இல்லாதவர்கள் இவ்வுலக வாழ்வைத் துறக்குங் கருத்துடையராவர் என்பார்,

> "துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால
> ஊட்டா கழியு மெனின்" (திருக். 378)

என்றார் திருவள்ளுவர். இவ்வுலகத்து நுகர்பொருள் வாய்க்கப்பெறாத வறியோர்களும் குடும்பத் தொடர்பினை மேற்கொண்டு பண்டை நல்வினைப் பயனால் உண்டுடுத்து இனிது வாழக்காண்கின்றோமாதலின் இன்பதுன்ப நுகர்ச்சிக்கு நேரே காரணமாவது அவர்தம் முன்வினைப் பயனாகிய ஊழேயன்றிச் செல்வ வறுமைகள் காரணமல்ல என்பது இக்குறளால் வலியுறுத்தப்பட்டது.

மக்கள் தாம் முன்னர்ச் செய்த தீவினையும் நல்வினையும் காரணமாகவே நல்வினைப் பயனாகிய இன்ப நுகர்ச்சியும் தீவினைப் பயனாகிய துன்பநுகர்ச்சியும் ஊழால் ஊட்டப்படுகின்றன என்னும் உண்மையையுணரப் பெறுவீர்களாயின் 'தீதும் நன்றும் பிறர்தரவாரா' என்னும் தெளிவுடையராய்த் தம்மையடைந்த இருவினைப் பயன்களாகிய இன்பதுன்பங்களை விருப்பு வெறுப்பின்றி ஒப்ப நுகரும் உணர்வுடையராதலே மெய்யுணர்வுடையார் இயல்பாதல் வேண்டும். ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமாதலின்றிப் புண்ணியபாவம் இரண்டிலும் அவற்றின் பயன்களிலும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து அவ்வினைத்தொடர்பினை விடுவோனது அறிவின்கண் அவ்விருவினையும் அவ்வாறு ஒப்பநிகழ்தலே இருவினையொப்பு என்பார் சைவசித்தாந்திகள். மெய்த்திரு வந்துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும் ஒத்திருக்கும் உள்ளத்துரனுடைமையாகிய இவ்விருவினையொப்பு மெய்யுணர்வுடையார்க்கு இன்றியமையாதது என வற்புறுத்துவது,

> "நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
> அல்லற் படுவ தெவன்" (திருக். 379)

எனவரும் திருக்குறளாகும். 'தாம் செய்த நல்வினை முதிர்ந்து இன்பமாகிய பயனைத் தரும்பொழுது அதனை இனிது எனவிரும்பி நுகர்பவர்கள், தாம் செய்த தீவினை முதிர்ந்து துன்பமாகிய பயனைத்தரும்பொழுது அதனையும் அவ்வாறு நுகர முற்படாது வெறுத்து அதனை அகற்ற முயன்று அல்லற்படுவது எற்றுக்கு?' என்பது இதன் பொருளாகும்.

நன்று ஆங்கால் நல்லவாக்காணுதல் போலவே அன்று ஆங்காலும் அல்லற்படாது அனுபவித்தல் வேண்டும் என்பது கருத்து. காணுதல் - அனுபவித்தல். மக்கள் தாமே முன்செய்துகொண்டன இருவினையாதலாலும் அவை தத்தம் பயன்களாகிய இன்பதுன்பங்களை ஊட்டாது கழியமாட்டா ஆதலாலும், இருவினைப்பயன்களாகிய இன்பம் துன்பம் என்னும் இரண்டுமே வினைசெய்த மக்களால் மனம் பொருந்தி நுகரத்தக்கனவாகும். அங்ஙனமாகவும் அவற்றுள் நல்லதன் பயனாகிய இன்பத்தை மட்டும் உளம் இயைந்து அனுபவித்துத் தீயதன் பயனாகிய துன்பத்திற்கு உளம்பொருந்தி நுகராது வெறுத்து வருந்துதல் அறிவுடையார் செய்கையன்றாம் என ஆசிரியர் இத் திருக்குறளால் அறிவுறுத்தியுள்ளமை காணலாம். இறைவனது திருவருட்பதிவால் இருள் மலந்தேயும் நினையினராகிய மெய்யுணர்வுடையார்க்குரியதாகச் சைவசித்தாந்தம் கூறும் இருவினையொப்பின் இயல்பு இத்திருக்குறளில் இடம் பெற்றுள்ளமை நுணுகி நோக்கற்பாலதாகும்.

உலகத்துவாழும் உயிர்கள் நுகர்தற்குரிய இன்ப துன்பங்களாகிய நுகர்ச்சிகள் எல்லாம் அவ்வவ்வுயிர்கள் செய்த இருவினைகளின் மேலிட்டு அவற்றின் பயனாய் ஊழ்வழியாக வருதலுடைமையின் மன்னுயிர்கள் செய்யும் பல்வேறுவகை முயற்சியினைவிட ஊழே மிகவும் வலிமை வாய்ந்தது என்பதனை அறிவுறுத்துவார்,

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்" (திருக். 380)

என்றார் திருவள்ளுவர். ஊழாகிய தன்னை விலக்குதற் பொருட்டுத் தனக்கு மறுதலையாவதோர் உபாயத்தை ஆராய்ந்தாலும் அச்சூழ்ச்சியின் வழியாகவோ அன்றிப் பிறிதொன்றன் வழியாகவோ முற்பட்டு நிற்பது ஊழ்வினை யாகும். அதனால் ஊழ்போல் வலிமையுடையனயாவை என ஊழின் வன்மையினை வற்புறுத்திக்கூறும் நிலையில் அமைந்தது இத்திருக்குறளாகும்.

வேண்டுதல் வேண்டாமையிலானாகிய கடவுளைக் குறித்து வழங்கும் 'இறை' என்னும் சொல் நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்று நீதிவழங்கும் இறைவனது தன்மையாகிய நடுவுநிலைமை என்ற பொருளிலும் ஆளப்பெறுதல் உண்டு. இந்நுட்பம்,

> "ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்தி யார்மாட்டும்
> தேர்ந்துசெய் வஃதே முறை" (திருக். 541)

எனவரும் திருக்குறளாலும், "நடுவுநிற்றல் இறைக்கு இயல்பாதலின் அதனை 'இறை' என்றும்", எனவரும் பரிமேலழகர் உரைவிளக்கத்தாலும் இனிது புலனாம்.

உயிர்கள் இயல்பாகவே அறிவுடையனவாயினும் தோற்றமில் காலமாகத் தம்மைப் பற்றியுள்ள பாசப் பிணிப்பினால் மறைக்கப்பட்டு அறியாமையில் அகப் பட்டுள்ளன என்பதும் தோண்டத்தோண்ட மணற்கேணி நீர் ஊறுமாறு போன்று மக்கள் இடைவிடாது கல்வி பயிலுந்தோறும் அவர்தம் அறிவு மேம்பட்டு விளங்கும் எனவும் ஒரு பிறப்பிற் கற்ற கல்வியறிவு அவர் பெறும் எழுபிறப்புக்களிலும் தொடரும் எனவும் மக்கள் ஒவ்வொரு பொருளையும் பற்றி அறியுந்தோறும் அதற்கு முன் அப்பொருளைப் பற்றியறியாதிருந்தமை அவர்க்குப் புலப்பட்டு மேலும் மேலும் பொருளையறிதற்கு முற்படும் அறிவுநாட்டம் தோன்றி அவர்கட்கு இன்பம் தரும் என்பதும் அறனறிந்து மூத்த அறிவுடையாராகிய சான்றோர்கள் பிறர் உற்ற நோய்களை நீக்கி அந்நோய்கள் மீண்டும் வந்தடையாதவாறு தடுத்து நிறுத்தும் தகைமையுடையார் என்பதும் அத்தகைய சான்றோரினத்திற் சார்ந்தால் மக்கள் உயர்வு பெறலாம் என்பதும்,

> "தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
> கற்றனைத் தூறும் அறிவு" (திருக். 396)

> "ஒருமைக்கண் தான்கற்ற கல்வி யொருவற்
> கெழுமையும் ஏமாப் புடைத்து" (திருக். 398)

> "அறிதோ றறியாமை கண்டற்றால்" (திருக். 1110)

"அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்" (திருக். 441)

"உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்" (திருக். 442)

எனவரும் திருக்குறளால் உணர்த்தப்பட்டன.

சேர்ந்தாரது அறிவைத் திரித்து இம்மை மறுமை யின்பங்களைக் கெடுக்கும் காமம் வெகுளி மயக்கம் ஆகிய சிறுமை யியல்பினரைச் சேர்தலாகாது என அறிவுறுத்துவது திருக்குறளிலுள்ள சிற்றினஞ்சேராமையென்னும் அதிகார மாகும். பெரியாரைத் துணையாகக் கொள்ளுதலால் வரும் நன்மையினை அறிவுறுத்திய திருவள்ளுவர் அவர்க்கு மாறாகிய சிற்றினத்தைச் சேர்தலால் உளவாகும் தீமையினைச் சிற்றினஞ்சேராமை யென்னும் அதிகாரத்திலும் விரித்துரைக் கின்றார். விசும்பின கண்ணே மழையுருவில் தன் தன்மைய தாய் நின்ற நீரானது நிலத்தொடு சேர்ந்தபொழுது தனது நிறம் சுவை முதலிய தன்மைகள் திரிந்து வேறுபட்டாற்போன்று தனிநிலைமைக்கண் தன்தன்மைத்தாய உயிரினது அறிவு பிறவினத்தோடு சேர்ந்த பொழுது அவ்வினத்தின் சார்பால் பண்பு தொழில் முதலிய வேறுபடும் என்பது திருவள்ளுவர் உயிரின் சிறப்பியல்பாகக் கண்டுணர்த்திய தத்துவ வுண்மையாகும். இந்நுட்பம்,

"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
கினத்தியல்ப தாகும் அறிவு" (திருக். 452)

எனவும், 'இனத்தான் ஆம் இன்னான் எனப்படுஞ் சொல்'(திருக். 453) எனவும், 'இனத்துளதாகும் அறிவு' (திருக். 454) எனவும், 'மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டும், இனந்தூய்மை தூவா வரும்' (திருக். 455) எனவும் வரும் திருவள்ளுவர் வாய்மொழிகளால் நன்கு தெளியப்படும்.

மக்கள் உயிர்வாழ்க்கையினை இம்மை (பிறப்பு), மறுமை (மறுபிறப்பு), அம்மை (பிறப்பறுநிலை) என மூவகையாகப் பகுத்துரைப்பர் அறிஞர். 'வையத்துள்

வாழ்வாங்கு வாழ்பவன்' (திருக். 50) என்ற தொடரால் இம்மை வாழ்வைக் குறித்தார். இவ்வுலகிற் பிறந்தோர் நன்றுந்தீதும் ஆகிய இருவினைகளைப் புரிதலும் நல்லதன் பயனாகிய இன்ப நுகர்தற்குத் தேவருலகினையும் தீயதன் பயனாகிய துன்ப நுகர்தற்கு நரகத்தினையும் அடைந்து எஞ்சிய வினை காரணமாக மீளவும் பிறத்தலும் உடையர் என்பது இப்பரத கண்டத்தில் பன்னெடுங்காலமாகச் சான்றோர் அனைவரும் உடன்பட்டு வரும் தத்துவக் கொள்கையாகும். இன்பமே நுகரும் தேவருலகினைப் 'புத்தேளிர் வாழும் உலகு' (திருக். 58), 'புத்தேளுலகு' (திருக். 213, 234), 'அவ்வுலகம்' (திருக். 247) எனவும் துன்பமே நுகரும் நரகருலகினை 'இருள்சேர்ந்த இன்னாவுலகம்' (திருக். 243), 'ஆரிருள்' (திருக். 121) எனவும் வானோர்க்குத் தலைவனாகிய இந்திரனை 'அகல் விசும்புளார் கோமான் இந்திரன்' (திருக். 25) எனவும் திருவள்ளுவர் குறித்துள்ளார். உயிர்கள் தாவரம், ஊர்வன, நீர்வாழ்வன, விலங்கு, பறவை, மனிதர், தேவர் என்னும் எழுவகைப் பிறப்புக்களிலும் வினைவயத்தால் தொடரும் எழுமை முறையினவாய்ப் பிறப்பன என்பது, 'எழுமை எழுபிறப்பும்' (107) 'எழுபிறப்பும் தீயவைதீண்டா' (62) எனவும் வரும் திருக்குறள் தொடர்கள் பிறப்பு வகையினையும் வினைத்தொடர்பால் உளதாம் எழுமை யினையும் புலப்படுத்துவன.

'மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றாக் குடம்பு மிகை' (திருக். 345)

'பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்' (திருக். 349)

'வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்' (திருக். 38)

'யானெனெ தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்' (திருக். 346).

'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்' (திருக். 362)

என்புழிப் பிறப்பறுநிலையே பேரின்பமாகிய வீடுபெறுதலும்

அந்நிலையடைதற்கு அவா வறுத்தலே சாதனமாதலும் குறிக்கப்பெற்றுள்மை காணலாம். பேதைமை காரணமாக நிலையுதலிலாவாகிய பொருள்களில் வைத்த பற்றுக்களே பிறப்பிற்குக் காரணமாம் என்பது,

'பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு' (திருக். 351)

'பொருளானாம் எல்லாமென் றீயா திவறும்
மருளானாம் மாணாப் பிறப்பு' (திருக். 1002)

என்பவற்றாற் புலப்படுத்தப்பட்டது.

மெய்யுணர்வினால் உளதாம் அவாவறுதியே வீடு பேற்றுக்குக் காரணமாம் என்பதும் அத்தகைய அவாவை அறுத்தற்குரிய துறவுநிலையாகிய உறுதிப்பாடு தூயதாகிய முழுமுதற் பொருளை இடைவிடாது சிந்தித்தலினாலே உளதாகும். என்பதும்

'தூஉய்மை என்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்' (திருக். 364)

'பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு' (திருக். 350)

என்பவற்றால் விரித்துரைக்கப்பெற்றன.

உயிர்கள் எண்ணிறந்தன என்பதும், உலகமக்கள் தாம்தேடியவுணவைத் தாமே தனித்துண்ணாது இல்லாதார் பலர்க்கும் பகுத்துக்கொடுத்து உண்டுவாழ்தலே முன்னைச் சான்றோர் வகுத்த உலகியல் அறம் (திருக். 322) என்பதும், கொல்லாமையொன்றே சிறப்புடைய அறம் (திருக். 321, 323) எனவும், கொல்லா அறத்தினை மேற்கொண்டோரே இருவகைப் பற்றினையும் நீத்தாருள் தலையாயவர் (திருக். 325) என்பதும், கொல்லா அறத்தினை மேற்கொண்டோர்பால் உயிருண்ணுங்கூற்று செல்லாது (திருக். 326) எனவும், தனது உயிர் உடம்பினின்று நீங்கும் நிலையேற்பட்டாலும் பிறிதொன்றன் உயிரை நீக்குதல் கூடாது (திருக். 327) எனவும், தேவர்பொருட்டு வேள்விக்கண் பிறவுயிரைக் கொன்றால்

இன்பமிகும் செல்வம் பெரிதாகும் என்று இல்வாழ்வார்க்கு வேதத்துட் கூறப்பட்டதாயினும் துறவால் அமைந்தோர்க்கு ஒருயிரைக் கொல்லுதலால் வரும் செல்வம் இழிவாம் (திருக். 328) என்பதும் கொலைத்தொழிலையுடைய மாந்தர் அதன் புன்மையை அறியாராயினும் மெய்யுணர்ந்தார் நெஞ்சத்து அன்னோர் புலைத்தொழிலராகவே இழித் தொதுக்கப்படுவர் (திருக். 329) என்பதும் அருவருக்கும் உடம்பினராகவும் இழிதொழில் வாழ்க்கையினராகவும் இவ்வுலகில் வறுமை நிலையிற் காணப்படுவோர் முன்னைப் பிறப்பில் உயிர்களை அவை நின்ற உடம்பினின்றும் நீக்கியவர் (திருக். 330) என்பதும் திருக்குறளிற் கொல்லாமை என்னும் அதிகாரத்தில் விரித்துரைக்கப்பட்டன.

உயிரின் அறிவு இருள்மலத்தின் சேர்க்கையால் மயக்கமும் வஞ்சனையும் உடையதாய்ப் பிறர்பொருளைக் களவிற்கவர்தல், பிறவுயிர்களைக் கொல்லுதல் முதலிய தீச்செயல்களுக்குக் காரணமாதல் பற்றிக் 'களவென்னுங் காரறிவு' என்றார் திருவள்ளுவர். இங்கு இருள் மலத்தின் காரியத்தினைக் காரணமாகவுபசரித்தார் ஆசிரியர். பிறர் பொருளைக் கவர என்னும் களவு பற்றிய கருத்தும் தனக்குரிய பொருள்களையெல்லாம் பற்றுக்களையும் துறவுபற்றிய எண்ணமும் இருளும் ஒளியும் போலத் தம்முள் மாறுபட்டன வாகும்.

'தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்' (திருக். 293)

எனவும்,

'உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன்' (திருக். 294)

எனவும் வரும் பாக்களில் நெஞ்சு, உள்ளம் என்பன இடவாகுபெயராய் உயிருணர்வையும் அவ்வுணர்வுக் குணர்வாய் எவ்வுயிர்க்குஞ் சான்றாயுள்ள முழுமுதற் பொருளையும் குறித்து நின்றன. 'எவ்வுயிர்க்குஞ் சான்றாம் ஒருவனை' என்பது அப்பர் அருள்மொழி.

"கண்டவர் இல்லென உலகத்துள் உணராதார்
தங்காது தகைவின்றித் தாஞ்செய்யும் வினைகளுள்
நெஞ்சறிந்த கொடியவை மறைப்பினும் மறையாவாம்
நெஞ்சத்துக்குறுகிய கரியில்லையாதலின்"

(நெய்தற்கலி 8)

எனவரும் கலித்தொகைத் தொடரிலும் நெஞ்சு என்பது நெஞ்சத்தில் நிலைபெற்றுள்ள முழுமுதற் பொருளைக் குறித்து நிற்றல் ஒப்பு நோக்கற்பாலதாகும்.

செல்வத்தையும் அதற்கு ஏதுவாகிய நன்முயற்சியையும் நல்கும் தெய்வம் செந்தாமரை மலரில் வீற்றிருந் தருளும் திருமகள். திருமகள் சிவந்த திருமேனியுடைய தெய்வம் என்பதும் அகமலர்ச்சியுடையராய் விருந்தோம்புவோர் வீட்டில் திருமகள் விரும்பித் தங்குவாள் என்பதும்,

'அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல்விருந் தோம்புவான் இல்' (திருக். 84)

எனவரும் திருக்குறளிற் குறிக்கப்பெற்றன. பிறர் செல்வங் கண்டு பொறாமைப்படுகின்றவனைத் திருமகள் தானும் பொருளாய்த் தனக்கு மூத்தாளாகிய மூதேவிக்கு இடமாகக் காட்டிவிட்டுத்தான் நீங்கிவிடுவாள் என்பார்,

'அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்' (திருக். 167)

என்றார் திருவள்ளுவர். செய்யவள் - திருமகள், தவ்வை - தமக்கை, என்றது மூதேவியை. கரியவளாகிய மூதேவி மெய்ம் முயற்சியில்லாத சோம்பரிடத்தே தங்குவாள். அவள் தங்கையாய்ச் செந்தாமரை மலரில் வீற்றிருக்குந்திருமகள் சோம்பலில்லாதானது முயற்சியின்கண்ணே தங்கியிருப்பாள் என்பார்,

'மடியுளாள் மாமுகடி யென்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள்' (திருக். 617)

என்றார் தெய்வப்புலவர். மடி - சோம்பல், தாள் - முயற்சி.

மாமுகடி - கரிய நிறத்தாளாகிய மூதேவி, சேட்டை. தாமரையினாள் - திருமகள், இங்கு எடுத்துக் காட்டிய குறள்களால் மக்கள் நன்முயற்சியாலடைதற்குரிய செல்வத்திற்குத் தெய்வம் திருமகள் என்பதும் சோம்ப லடைதற்குரிய வறுமைக்குத் தெய்வம் திருமகளின் தமக்கையாகிய சேட்டை என்பதும் திருவள்ளுவர் காலத்திற்கு முற்றொட்டுவரும் நம்பிக்கையாதல் நன்கு விளங்கும்.

சோம்பல் இல்லாத மன்னன் மண்ணுலகும் வானுலகும் ஆகிய உலகம் முழுவதனையும் தனது ஆட்சியின் கீழ் வைத்து ஆளும் ஆற்றலையும் சிறப்பினையும் பெறுவான் என மடியின்மை சோம்பலின்மையாகிய இடையறா முயற்சியின் பெரும்பயனை வற்புறுத்துவது,

> ‘மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
> தாஅய தெல்லாம் ஒருங்கு’ (திருக். 610)

எனவரும் திருக்குறளாகும். ‘சோம்பல் இல்லாத மன்னன் தன் அடியின் அளவினாலே எல்லாவுலகங்களையும் தாவி அளந்த இறைவனாகிய திருமால் கடந்து பெற்ற உலகப் பரப்பு முழுவதனையும் பெறுவான்’ என்பது இதன் பொருள். இதன்கண் அடியளந்தான் என்றது, ‘மூவுலகும் ஈரடியால் முறை நிரம்பாவகை முடியத்தாவிய சேவடி’ யுடையனாகிய திருமாலை. ‘தாஅயது’ என்றது, அம்முதல்வன் குறளுருவாகிய வாமனவடிவாய் மாவலி என்னும் அசுரமன்னன் பாற்சென்று தன் காலடியால் மூவடிமண் இரந்து பெற்று, யாவர்க்கும் அடங்காத பெருவன்மை படைத்த மன்னனைத் தன் அடிக்கீழ் அடக்கிக் கவர்ந்து கொண்ட மூவுலக மரபினை. காத்தற்கடவுளாகிய திருமால் உலகவுயிர்களை உய்வித்தல் கருதித் தன்னருளால் மேற்கொண்ட அருட்பிறப்புக்கள் பத்தினுள் ஒன்றாகிய வாமனாவதாரமாகிய புராணச்செய்தியினை இத்திருக்குறளில் திருவள்ளுவர் குறித்துள்ளமை காணலாம்.

திருக்குறள் காமத்துப்பாலில்,

> ‘தாம்வீழ்வார் மென்றோட் டுயிலின் இனிதுகொல்
> தாமரைக் கண்ணான் உலகு’ (திருக். 1103)

எனவரும் திருக்குறள், 'உயர்வற வுயர்ந்த பேரின்பத்தை யடைதற்கு முயலவேண்டிய நீ பெண்ணொருத்தியை விரும்பிக் களவொழுக்கமாகிய இச்சிற்றின்பத்திற்கு முயலுதல் தகாது' எனக்கூறிய பாங்கனை நோக்கித் தலைவன் ஒருவன் கூறுவதாக அமைந்ததாகும்.

"ஐம்புலன்களையும் நுகர்வார்க்குத் தம்மால் விரும்பப் பெறும் மகளிரின் மெல்லிய தோளின்கண் துயிலும் துயில் போல, ஐம்புல நுகர்ச்சிகளைத் துறந்த தவயோகிகள் எய்தும் செங்கண்மாலுலகம் வருந்தாமல் எய்துதற்குரியதாமோ" என்பது இதன் பொருளாகும். தாமரைக்கண்ணனாகிய செங்கண் மாலுலகம் உயர்வறவுயர்நல முடையனாகிய திருமால் வீற்றிருந்தருளும் நிலையில் அவன்பால் மெய்யன்புடைய அடியார்களாகிய அயர்வறும் அமரர்கள் அவனது திருமேனியழகில் இடைவிடாது திளைத்துமகிழும் நிலையில் அம்முதல்வனைக் கண்ணிமையாதுகண்டு இன்புறும் இயல்பினதென்பதும், உறக்கத்தைவிட்டுத் தவயோகங்களால் வருந்திய பெருமுயற்சியுடைய பெரு மக்களே அதனைப் பெறுதற்குரியார் என்பதும், அத்தகைய இன்பம் உலகவாழ்க்கையில் திளைத்து மகிழும் ஏனையோரால் எளிதில் அடையத் தக்கதன்றென்பதும் இதனால் புலனாம். ஒத்த அன்புடைய தலைவியின் காதலின்பத்தில் திளைத்த தலைவன், அவன்பால் வைத்துள்ள இன்ப அன்பின் திறத்தைப் புலப்படுத்தும் நிலையில் தலைமகள் மென்றோளில் உறங்கிப்பெறும் காதலின்பத் தினும் செங்கண்மாலுலகத்து விழித்துப்பெறும் பேரின்பம் அத்துணைச் சிறந்ததாமோ எனச் செங்கண்மாலுலக இன்பத்தினை உவமையாகக் காட்டித்தான் பெறும் இம்மை யின்பத்தினை உயர்த்துக்கூறும் முறையில் திருமாலுலகத்து நித்திய சூரிகளாகிய அடியார்கள் பெறும் பேரின்ப நிலையினைத் திருவள்ளுவர் அத்திருக்குறளிற் சுட்டி யுள்ளமை கூர்ந்துணரத்தக்கதாகும். இனி இக்குறளில் 'தாமரைக்கண்ணான் உலகு' என்பதற்கு இந்திரனுலகு எனப் பொருள் கூறுவர் மணக்குடவர். வானோர் வேந்தனாகிய இந்திரன் ஐம்புலன்களிற் செல்லும் அவாவை அடக்கும் வலியற்றவனாய்க் கோதமமுனிவர் மனைவி அகலியையினை

வஞ்சனையாற்கூடி அம்முனிவரால் வெகுண்டு சபிக்கப்பட்டு உடல் முழுவதும் அருவருக்கத்தக்க ஆயிரம் புண்களை யுடையனாய்ப் பின்னர் அம்முனிவர் தம் அருளால் அப்புண்கள் தாமரைமலர் போலும் அழகிய கண்களைப் பெற்று ஆயிரங்கண்ணோன் ஆனான் என்பது இராமாயணத்தில் வரும் ஒருகதை. இக்கதையை எடுத்துக்காட்டாகக் கொண்டமைந்தது,

> 'ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
> இந்திரனே சாலுங் கரி' (திருக். 25)

எனவரும் திருக்குறளாகும். நீத்தார் பெருமையுணர்த்தும் இக்குறள் ஐம்புலன்களிற் செல்லும் அவாவையடக்காமல் அவற்றையடக்கிய கோதம முனிவனது சாபமும் அருளும் பெற்று நிறைமொழிமாந்தருள் ஒருவனாகிய அம்முனிவனது ஆற்றலை உலகம் உணரச் செய்தவன் வானோர் வேந்தனாகிய இந்திரனாதலின் அவனே ஐந்தவித்த நீத்தாரது ஆற்றிற்குச் சான்றாயினான் என்பார் இந்திரனே சாலுங்கரி என்றார். கரி - சான்று; சாட்சி.

ஒத்த காதலர் இருவருள்ளத்தே காமவுணர்வினைத் தோற்றுவிக்கும் காமன் (1199) என்னுந் தெய்வத்தையும், வினைவயத்தாலாய உடம்பில் வாழும் உயிரினை வினை நுகர்ச்சி முடிந்த காலம் பார்த்து உடம்பினின்றும் பிரிக்கும் கூற்றம் (269, 765, 894, 1085) என்னும் தெய்வ ஆற்றலையும் திருவள்ளுவர் திருக்குறளிற் குறிப்பிட்டுள்ளார்.

இதுகாறும் எடுத்துக்காட்டியவற்றால் தெய்வப் புலமைத் திருவள்ளுவர் தம்காலத்தில் நிலவிய தெய்வங் கொள்கையினையும் தமிழ் முன்னோர் தமது வாழ்க்கையில் பெற்ற முதிர்ந்த அறிவின் திறத்தால் உண்டெடன நம்பிய புத்தேளிர் வாழும் உலகு, இருள் சேர்ந்த இன்னாவுலகம், வானோர்க்கு உயர்ந்தவுலகம், தாமரைக்கண்ணான் உலகு ஆகியவற்றையும் பிறவிப் பெருங்கடலில் வீழ்ந்து அல்லற் படும் மாந்தர்கள் மீண்டும் பிறவாநிலையாகிய வீடுபேற்றினை யடைதற்குச் சாதனமான தவமும் ஞானமும் ஆகிய மெய்ந் நெறி முறைகளையும் அந்நெறியினால் மக்கள் அடைதற்குரிய

பேராவியற்கையாகிய பேரின்பநிலை யினையும் அதனையடைதற்குத் துணைபுரியும் முழுமுதற் பொருளாகிய இறைவனது இயல்பினையும் தாம் இயற்றிய உலகப் பொதுமறையாகிய திருக்குறளில் சுருக்கமுந் தெளிவும் பொருந்த விளக்கியுள்ளமை ஒருவாறு விரித்துரைக்கப் பட்டது. சமயங்கடந்த நிலையில் நின்ற திருவள்ளுவர் விளக்கிய இறைவனியல்பு சைவசித்தாந்தம் கூறும் பொதுவும் உண்மையும் ஆகிய பதியிலக்கணத்துடன் பெரிதும் ஒத்து நிற்றலும் ஒருவாறு உணர்த்தப்பட்டது.

திருவள்ளுவர் ஆன்மாவை உள்ளம் எனவும் பரம் பொருளை உள்ளது (சத்து) எனவும் குறித்து வழங்கியுள்ளார் (திருக். 357). இம்மரபு சைவசித்தாந்த நூல்களிலும் தொடர்ந்து இடம் பெற்று வந்துள்ளது. திருவள்ளுவர் 'செம்பொருள்' என்ற சொல்லால் வழங்கிய பரம் பொருளையே சைவசித்தாந்திகள் சிவம் என்னும் செந்தமிழ்ப் பெயராற் பரவிப் போற்றுகின்றனர் என்பது, 'செம்பொரு ளாய் சிவமெனலாமே' (2573) எனவரும் திருமந்திரத்தாலும், 'செம்பொருட்டுணிவே சிவபெருமானே' (திருவாசகம்-பிடித்தபத்து) என்னும் திருவாசகத் தொடராலும் நன்கு வலியுறுத்தப்பெற்றது. திருக்குறள் கடவுள் வாழ்த்தில்.

'மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்' (திருக். 3)

'வேண்டுதல் வேணடாமை யிலானடி சேர்ந்தார்க்கு' (திருக். 4)

'தனக்குவமை யில்லர்தான் தாள்சேர்ந்தார்க்கு' (திருக். 7)

'அறவாழி யந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்த லரிது' (திருக். 8)

என்றாங்கு வலியுறுத்தப்படும் இறைவனடி சேர்தலே வீடுபேறு என்னும் அடிசேர்முத்தியே சைவசித்தாந்தக் கொள்கையினரது முடிந்த முடிபாக அமைந்துள்ளமையும் இங்கு மனங்கொளத்தகுவதாகும். எனவே தென்னாட்டின் சிறப்புடைய தத்துவக்கொள்கையாகத் திகழும் சைவ சித்தாந்தக் கொள்கைகளுக்கு நிலைக்களமாகத் திகழ்வது

தமிழ் மறையாகத் தெய்வப்புலவர் அருளிய திருக்குறள் என்று கூறுதல் பெரிதும் ஏற்புடையதாகக் காணலாம். மேலை நாட்டுக் கிறித்துவப் பாதிரியாராகிய ஜி.யூ. போப்பையர் அவர்கள் 'திருவள்ளுவர் தாம் கூறும் அறநெறியை (சைவசித்தாந்தம் கூறும் பதி பசு பாசம் என்னும்) மாண்புடைய முப்பொருளுண்மையை அடியாகக் கொண்டு வகுத்துள்ளார் எனத்தம் துணிவினைப் புலப்படுத்தியுள்ளார். டாக்டர் ஜி.யூ. போப்பையர் அவர்கள் 'திருக்குறள் நுதலும் அறம்' என்ற தலைப்பில் ஆற்றிய விரிவுரையில் இக்கொள்கை வலியுறுத்தப்பட்டது என்பதனை ஜே. எம். நல்லசாமி பிள்ளையவர்கள் திருக்குறளிலுள்ள 'மெய்யுணர்தல்' என்னும் அதிகாரத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த் தெழுதிய கட்டுரையொன்றில் மேற்குறித்த போப்பையர் கருத்தை வெளியிட்டதுடன் 'உண்மையில் திருவள்ளுவர் கொள்கை புத்தர் சமணர் கொள்கைகளைப் போல் கடவுளின்மைக் கொள்கையன்று. இவ்வகையில் திருக் குறளுக்கும் நாலடிக்கும் வேறுபாடுளது' (ஆங்கில நூல் பக்கம் 147) என எழுதியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கி யுணரத்தகுவதாகும்.



# சிலப்பதிகாரத்தில் காணப்பெறும் தெய்வ வழிபாடுகளும் சிவநெறிக் கோட்பாடுகளும்

மக்கள் வாழும் நிலத்தியல்புக்கு ஏற்ப அவர்தம் மனத்தியல்பாகிய தெய்வங்கொள்கையும் வழிபாட்டு முறைகளும் தோன்றி நிலைபெறுவனவாதலின் தெய்வங் கொள்கையினைத் திணைக் கருப்பொருள்களுள் ஒன்றாக அடக்குவர் பண்டைத்தமிழாசிரியர். முல்லை நிலத்தில் திருமால் வழிபாடும், குறிஞ்சி நிலத்தில் முருகன் வழிபாடும், மருத நிலத்தில் வேந்தன் (இந்திரன்) வழிபாடும், நெய்தல் நிலத்தில் கடற்றெய்வமாகிய வருணன் வழிபாடும் தோன்றி நிலைபெற்றன. இவ்வாறு நான்கு நிலத்தவர்களும் தாங்கள் வாழும் சூழ்நிலைக்கேற்பத் தம் உள்ளத்து வகுத்து அமைத்துக் கொண்டனவே திணைக்கருப்பொருளாகிய இத்தெய்வ வழிபாடுகளாம். இத்தெய்வவழிபாடுகள் உருப்பெறுதற்குத் துணையாய் முன்னின்றவை ஞாயிறு, திங்கள், மழை, நிலம் என்னும் ஐம்பூதங்களின் சார்புடைய இயற்கைப் பொருள்களாம். வாழ்க்கைக்கு நேர்முறையிற் பயன்படும் இவ்வியற்கைப் பொருள் வணக்கமே மக்கட் சமுதாயத்தில் முதன்முதலில் தோன்றித் திணைக் கருப்பொருளாகிய தெய்வ வழிபாட்டின் தோற்றத்திற்குத் துணைசெய்திருத்தல் வேண்டும். இவ்வியற்கைப்பொருள் வணக்கம் எக்காலத்தும் மாறாது நிலை பெறுவதாகும்.

'திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதுங்
கொங்கலர்தார்ச் சென்னிகுளிர்வெண் குடைபோன்றிவ்
அங்கண் உலகளித்த லான்'

'ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
காவிரி நாடன் திகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்'

'மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்
நாமநீர் வேலியுலகிற் கவனளிபோல்

மேனின்று தான்சுரத்த லான்'

'பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோடு
ஓங்கிப் பரந்தொழுக் லான்'

எனவரும் மங்கல வாழ்த்துப் பாடலால் இளங்கோவடிகள் இவ்வியற்கைப் பொருளை வழிபட்டு முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தைத் தொடங்குகிறார்.

அடிகள் தம் காலத்தில் தமிழ்நாட்டில் நிலவிய சமயங்களையும் அவற்றை மக்கள் மதித்தொழுகிய திறத்தையும் தம் நூலில் தெளிவாக விளக்குகின்றார். நானிலத்தவருள் ஒரு நிலத்தார் மற்றைய நிலத்தவருடன் சேர்ந்து தொழில்புரியும் நிலையேற்பட்ட பின்னர்த் திணைக்கருப் பொருளாகிய தெய்வ வழிபாடுகள் ஒருங்குநேர்ந்து வளரும் நிலைமையைப் பெற்றன. இத்திணை வகை வழிபாடுகளே பண்டைத் தமிழ்நாட்டில் சமய வளர்ச்சிக்கு அடிப்படையாய் அமைந்தன. இவ் வழிபாடுகள் வளர்ந்து சிறந்த நிலையினைச் சிலப்பதிகாரம் நன்கு விளக்குகின்றது.

குன்றக்குரவையில் குறிஞ்சி நிலத்தெய்வமாகிய முருகவேள் வழிபாட்டினையும், ஆய்ச்சியர் குரவையில் முல்லைநிலத் தெய்வமாகிய திருமால் வழிபாட்டினையும், இந்திரவிழவூரெடுத்த காதையில் மருதநிலத் தெய்வமாகிய இந்திர வழிபாட்டினையும், கானல்வரியில் நெய்தல்நிலத் தெய்வமாகிய வருணன் வழிபாட்டினையும், வேட்டுவ வரியில் முல்லையுங் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து நல்லியல்பு இழந்த பாலைநிலத் தெய்வமாகிய கொற்றவை வழிபாட்டினையும் இளங்கோவடிகள் சிறப்பு முறையில் வைத்துப் பாராட்டுகின்றார்.

### முருகன் வழிபாடு

அறுமுக ஒருவனாகிய முருகனுக்கு அஞ்சுடர் நெடுவேல் படையாக விளங்குவதென்றும், அவனது வேலை

நிறுத்தி வழிபடும் கோயில் வேற்கோட்டம் என்னும் பெயருடையதென்றும், இத்தகைய வேற்கோட்டமும் இதனை யேந்திய பழந்தமிழ்த் தெய்வமாகிய அறுமுகச் செவ்வேள் எழுந்தருளிய அணிதிகழ் கோயிலும் சேவலைக் கொடியாக ஏந்தியவனென்றும், கோழிச்சேவற் கொடியோ னாகிய அப்பெருமானது கோயில் மதுரை நகரத்தே சிறப்புற்றுத் திகழ்ந்ததென்றும், மதுரை நகரத்தை யெரியூட்டி வையைக் கரையின் வழியாக மேற்கு நோக்கிச் செல்லும் கண்ணகியார்,

> ‘கடல்வயிறு கிழித்து மலைநெஞ்சு பிளந்தாங்
> கவுணரைக் கடந்து சுடரிலை நெடுவேல்
> நெடுவேள் குன்றம் அடிவைத் தேறி’

அக்குன்றத்தே வேங்கை மர நிழலில் குன்றவாணர் காணக் கோவலனோர்டு வானவர் போற்றத் துறக்கம் புக்காரென்றும் இளங்கோவடிகள் கூறுகின்றார். மேற்காட்டிய தொடரில் முருகன் கிரவுஞ்சம் என்னும் மலையைப் பிளந்து கடல்நடுவே நின்ற சூர்மாவை வேலாற் கிழித்து அவுணர்களை வென்று அமரரைக் காப்பாற்றிய அருட்செயல் குறிப்பிட்டுள்ளமை காணலாம்.

திருச்செங்குன்றென்னும் மலையில் வேங்கை மரத்தின் நிழலிலே வந்து நின்ற கண்ணகியாரைக் கண்ட மலைவாண ராகிய குறவர் ‘மலைவேங்கை நறுநிழலில் வள்ளி போல்வீர்’ என அவ்வம்மையை அழைக்கின்றார்கள். இதனால் குறவர் குலத்தில் தோன்றிய வள்ளி நாச்சியாரை முருகப்பெருமான் அருந்தமிழ்க் களவொழுக்க முறைப்படி மணந்து கொண்ட புராண நிகழ்ச்சியில் அக்குறவர்களுக் கிருந்த ஈடுபாடு நன்கு விளங்குகின்றது. கண்ணகியார் வானவர் போற்றக் கொழுநனொடும் வானகம் புக்க வியப்புடை நிகழ்ச்சியைக் கண்டு மகிழ்ந்த மலைவாணர் தம் மகிழ்ச்சி மிகுதியால் வரையுறை தெய்வமாகிய முருகவேளை வழிபட்டுச் சூர்மாவைக் கொன்ற வேலனையேந்திக் குரவைக் கூத்தாடும் இயல்பினை விளக்குவது குன்றக் குரவையாகும். முருகப்பெருமான் சிறப்புப்பொருந்திய திருச்செங்கோடு, வெண்குன்றென்னும் பெயருடைய சுவாமிமலை,

திருவேரகம் ஆகிய இத் திருப்பதிகளில் என்றும் நீங்காத கோயில் கொண்டு எழுந்தருளியிருத்தலையும் அப்பெருமான் முன்னொரு காலத்தில் கடல்நடுவிற் புகுந்து சூரபதுமனாகிய மாமரத்தை வேலால் தடிந்தருளிய அருட்செயலையும், அணி முகங்கள் ஓராறும் ஈராறு கையுமுடைய முருகவேள் பிணிமுகம் என்னும் பெயருடைய மயிலின் மீது எழுந்தருளிப் பகைவர்களாகிய அவுணர்களை வென்ற திறத்தையும், சரவணப் பொய்கையில் தாமரை மலராகிய பள்ளியிடத்தே கார்த்திகைப் பெண்கள் அறுவராலும் பாலூட்டி வளர்க்கப் பெற்றவனாகிய அறுமுகப்பெருமான் திருக்கையிலேந்திய வேலே குருகு (கிரவுஞ்சம்) என்னும் பெயருடைய மலையைக் காவலாகக் கொண்டு அதனைச் சூழ்ந்து வரும் இயல்புடைய தாரகனாகிய அவுணனது மார்பகத்தையும் அம்மலையையும் பிளந்ததென்னும் வெற்றித் திறத்தையும் மலைவாணர் மகளிர் எடுத்துரைத்துப் போற்றும் நிலையில் பின்வரும் பாடல்கள் அமைந்துள்ளன.

"சீர்கெழு செந்திலுஞ் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமு நீங்கா விறைவன்கை வேலன்றே
பாரிரும் பௌவத்தி னுள்புக்குப் பண்டொருநாட்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே.

அணிமுகங்க ளோராறு மீராறு கையும்
இணையின்றித் தானுடையா னேந்திய வேலன்றே
பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ண
மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே.

சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மா ரறுவர்
திருமுலைப்பா லுண்டான் றிருக்கைவே லன்றே
வருதிகிரி கோலவுணன் மார்பம் பிளந்து
குருகு பெயர்க்குன்றம் கொன்ற நெடுவேலே."

இவை மூன்றும் குன்றக்குரவர் தம் கருத்து நிறைவேறும் வண்ணம் தெய்வத்தைப் பரவிய பாடல்களாம்.

தலைவனாலுளதாய தலைவியின் மெலிவுக்குரிய காரணத்தை ஆய்ந்து பாராத செவிலித்தாய், அம்மெலிவு கடம்பனாகிய முருகனால் உண்டாயதெனத் தவறாக

எண்ணி வேலனைக் கொண்டு வெறியாடச் செய்கின்றாள். அவள் பேச்சைக்கேட்டு முருகபூசை செய்யும் வேலன் வருவானாயின் அவன் மடமையுடையவனாவனென்றும் அவன் மேற்கொண்டு நிகழ்த்தும் வெறியாடலில் கிரவுஞ்ச மலையைப் பிளந்தவனும் ஆலமர் செல்வன் புதல்வனும் கடப்ப மலர்மாலையை அணிந்தவனும் மலைவாணர் தொழும் கடவுளும் ஆகிய முருகப்பெருமான் வெளிப்படின் நம் நிலையை அவன் உள்ளவாறு அறியாதவனென்றும், அன்பர் மலர்தூவி வழிபடுமிடத்தே எழுந்தருளி வருதல் அவனது அருளின் இயல்பாதலால் அப்பெருமான் வேலனார் வந்து வெறியாடும் இடத்திலே நீலநிறமமைந்த மயிலின் மேலே வள்ளி நாச்சியாருடன் எழுந்தருளி வருதல் திண்ணம் என்றும், அவ்வாறு ஆலமர் செல்வன் புதல்வன் எழுந்தருள்வானாயின் அவனை வணங்கி மலைநாட்டுக்குரிய தலைவனது திருமணத்தினை முடித்தருளும்படி வேண்டு வோமாக என்றும் எண்ணிய தோழி, வெறியாட்டு விழாவில் முருகக் கடவுளை நோக்கி, 'கயிலை மலையில் எழுந்தருளிய இறைவனுடைய திருமகனே, மலைமகளாகிய உமை யம்மையார் பெற்ற அரும்பெறல் மகனே, ஆறு முகங்களை யுடைய பெருமானே, எங்கள் குல முதல்வியாகிய வள்ளி நாச்சியாருடைய திருவடிகளோடு நின் திருவடி களையும் இறைஞ்சிப் போற்றுகின்றோம். நின் திருவடிகளை வணங்கிச் சூளுரைத்த தலைவர் துன்பமாகிய களவொழுக்கத்தை விட்டொழித்துப் பலர் அறியத் தலைவியைத் திருமணஞ் செய்து வாழ்வாராக' எனச் செவிலிக்கு அறத்தொடு நிற்பதாக அமைந்த குன்றக் குரவைப் பகுதி, வேலன் முருகனை வழிபட்டு வெறியாடும் இயல்பினையும் அதன் பயனையும் வெளிப்படுத்துகின்றது.

இதன்கண் முருகக் கடவுள் தந்தையாகிய இறைவன் ஆலின்கீழ் அமர்ந்து முனிவர்களுக்கு அறமுரைத்தருளியதும், அப்பெருமான் கயிலை மலையில் வீற்றிருத்தலும், மலையரசன் மகளாரை மணந்தருளியதும், மலைமகளாகிய அம்மையார்க்கு முருகன் மகனாகியதும், குறமகளை மணந்து கொண்டருளியதும், ஆறு திருமுகங்களுடன் குறமகளுடன் மயில் மீது எழுந்தருளி அன்பர்க்கு அருள்செய்தலும் ஆகிய

செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

முருகப்பெருமான், தன்னை அன்பினால் வழிபடும் அடியார்களின் முன் தோன்றியருளுங்கால் அவர்கள் அச்சமின்றிக் கண்டு வழிபடுதற்கேற்றவாறு தன் தெய்வத் தன்மையை உள்ளடக்கிக் கொண்டு மக்கள் வடிவில் இளையோனாக வந்து அருள்புரியும் இயல்பினையும் உடையான் என்பதனை,

> 'அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
> மணங்கமழ் தெய்வத்து இளநலங் காட்டி'
>
> (திருமுருகு. 289-290)

என்ற தொடரால் நக்கீரனார் குறிப்பாக அறிவுறுத்தியுள்ளார்.

இவ்வியல்பினை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத் தின்கண் சிறிது வெளிப்பட விளக்கிய திறம் இவண் கருதத் தகுவதாம். களவொழுக்கத்தில் இரவுக்குறியின் கண்ணே அடிக்கடி வந்து செல்கின்றான் தலைமகன். அவனை நோக்கித் தோழி கூறுவதாக அமைந்தது,

> "கடம்பு சூடி யுடம்பிடி யேந்தி
> மடந்தை பொருட்டால் வருவ திவ்வூர்
> அறுமுக மில்லை அணிமயி லில்லை
> கடம்பூண் தெய்வ மாக நேரார்
> மடவர் மன்றவிச் சிறுகுடி யோரே"

என வருங் குன்றக் குரவைப் பகுதி, "தலைவ, நீ தலைவியைப் பெறுதல் கருதிக் கடப்ப மலர் மாலையை யணிந்து வேற்படையைத் தாங்கிக்கொண்டு இரவில் இவ்வூர்க்கண் அடிக்கடி வந்து செல்வது, கண்டார் நின்னை முருகனெனக் கருதி ஆராயாது விடுவர் என்னுங் கருத்தினாலென அறிகின்றேன். கடவுளாகிய முருகன் நின்னைப் போன்று ஒரு முகமும் இரு கையும் உடைய தனது பழைய திருமேனியாகிய இளையவடிவுடனும் வருதல் கூடும் என்னும் உண்மையினை அறிந்து கொள்ள மாட்டாது, ஆறுமுகமும் பன்னிரண்டு கைகளுங் கொண்ட வடிவுடனன்றி முருகன் இத்தகைய-

மக்கள் வடிவில் வருதலியலாது எனக் கருதும் அறியாமை உடையோர் இச்சிறுகுடியோர் ஆதலின், நீ இங்ஙனம் வருங்கால் உனக்கு ஆறுமுகங்கள் இல்லை என்றும், அழகிய மயிலாகிய ஊர்தி இல்லையென்றும், பக்கத்தில் குறமகளாகிய வள்ளிநாச்சியார் இல்லையென்றும், பன்னிரண்டு தோள்கள் இல்லையென்றும் கூறி, இவ்வூரார் வழிபாட்டினை ஏற்றுக்கொள்ள வந்த முருகனாக நின்னை உடன்பட மாட்டார்கள்" எனத் தோழி தலைவனுக்கு அறிவுறுத்து முகத்தால் இக்களவொழுக்கத்தினை விட்டுத் தலைவியை மணந்து கொள்ளத் தூண்டினாள் என்பது மேலெடுத்துக் காட்டிய அடிகளின் பொருளாகும். இவ்வாறு தலைமகன் முருகனுக்கு உரிய கடப்ப மலர்மாலையை அணிந்து கையில் வேற்படையினையேந்தி வருதற்குக் காரணம் தன்னைக் கண்டார் மணங்கமழ் தெய்வத்து இளையோனாகிய முருகன் என்றெண்ணி, விலக்காதிருப்பர் என்பது கருதியே என்பதனை, "தலைமகள் கடம்பு சூடி உடம்பிடி யேந்தித் தன்னைக் குமரனென்று பிறர் கருத வந்த காரணம் பண்டைத் தன் மணங்கமழ் தெய்வத்திள நலங்காட்டி யென்றா ராதலால்" என்ற உரைக்குறிப்பால் அரும்பதவுரையாசிரியர் இனிது விளக்கியுள்ளார். அன்றியும் அறுமுகமுடைய வடிவமொன்றே அக்காலத்து முருகனுக்கு உரிய வடிவமாயிருந்திருப்பின், அவ்வடிவமில்லாமை கருதித் தலைவனை முருகனென உடன்படாத சிறுகுடியோரை மடவர் மன்ற இச்சிறு குடியோரே எனத்தோழி இகழ்ந் துரைத்ததாக இளங்கோவடிகள் கூறியதற்கு ஒரு சிறிதும் இயைபில்லாமையறிக. ஒரு முகமும் இருகையும் உடைய முருகன் திருவுருவமே சங்க காலத்திற்கு முன்னுள்ள பழைய வடிவம் என்றும், இளங்கோவடிகள் காலத்து அப்பழைய வடிவம் மக்களால் மறக்கப்படும்படி பிற்றை நாளில் புராணங்களில் சொல்லப்பெற்ற ஆறுமுகத் திருமேனியே பொது மக்கள் வழிபாட்டில் இடம்பெறத் தொடங்கிய தென்றும் மேற்காட்டிய சிலப்பதிகாரத் தொடராலும் அதற்கு அரும்பதவுரையாசிரியர் எழுதிய உரைக்குறிப்பாலும் இனிது புலப்படுத்தியுள்ளமை காண்க.

பத்தினிக்கோட்டம் அமைத்து வழிபட்ட

செங்குட்டுவனுக்குக் கண்ணகியார் தமது கடவுள் தோற்றத்தைப் புலப்படுத்தியருளி,

'தென்னவன் தீதிலன் தேவர்கோன் றன்கோயில்
நல்விருந் தாயினான் நானவன் றன்மகள்
வேன்வேலான் குன்றில் விளையாட்டு யானகலேன்'

எனக் கூறியருளுதலால் குறிஞ்சி நிலத்திற்கு உரிமையுடைய தெய்வம் முருகனே என்னும் தொன்மை நன்கு வலியுறுத்தப் பெறுதல் காணலாம்.

கருங்கடலின் நடுவே சூரனது வேற்றுருவாகிய வஞ்சத்தையறிந்து அவனைக் கொன்ற முருகன் அக்கடல் நடுவே திரையாகிய அரங்கத்தில் துடிகொட்டி ஆடிய கூத்து துடியென்னும் ஆடலாகும். அவுணர்கள் தாம் பொருதற் கெடுத்த படைகளைக் கீழே எறிந்துவிட்டு வருந்திய நிலையிலே முருகன் தன்முன் குடையைச் சாய்த்து அக்குடையினை மறைப்புத் திரையாகக் கொண்டு நின்றாடிய கூத்து குடைக் கூத்தாகும். இவ்விரு கூத்தினையும் முறையே,

'நீர்த்திரை யரங்கத்து நிகர்த்துமுன் னின்ற
சூர்த் திறங் கடந்தோன் ஆடிய துடியும்'

எனவும் இளங்கோவடிகள் விளக்கினமை காண்க.

## திருமால் வழிபாடு

திருமால் கோயில் கொண்டுள்ள இடங்களாகத் திருவரங்கம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, மதுரை, காவிரிப்பூம்பட்டினம், வஞ்சி நகரத்தே ஆடக மாடம் என ஆறு திருப்பதிகள் சிலப்பதிகாரத்திற் கூறப்பெற்றுள்ளன.

கோவலனும் கண்ணகியும் ஊழ்வினை செலுத்த வைகறைப் பொழுதிலே காவிரிப்பூம்பட்டினத்தை விட்டுப் புறப்பட்டுத் தோரண வாயிலைக் கடந்து, அரவணையின் மீது அறிதுயில் கொள்ளும் மணிவண்ணன் என்னும் திருநாமத்தை உடைய திருமால் கோயிலை வலஞ்செய்து

மதுரைக்குப் புறப்பட்டார்கள் என இளங்கோவடிகள் கூறுகின்றார். கோவலன் என்னும் பெயர் திருமாலுக்குரிய திருநாமங்கள் பலவற்றுள் ஒன்று; அச்சொல் கோபாலன் என்னும் பெயரொடு ஒத்த பொருளுடையது. மதுரையில் கோவலனைக் கண்ட மாடலமறையோன் அவனைக் கோபால என அழைக்கின்றான். பரிபாடல் 'கோவல' எனத் திருமாலைப் பரவுகின்றது. ஆகவே கோவலன் பிறந்த காலத்து அவனுடைய பெற்றோர்கள் திருமால் வழிபாட்டில் பற்றுடையவர்களாயிருந்தனர் என்பது பெறப்படுகின்றது. கோவலனும் கண்ணகியும் காவிரிப்பூம்பட்டினத்தை விட்டுப் புறப்படும்பொழுது மணிவண்ணப் பெருமாள் கோயிலை வலம் வந்தார்கள் என அடிகள் குறித்தலால் அவ்விருவர்க்கும் திருமால் வழிபாட்டில் பற்றுள்ளமை விளங்கும்.

இனி மதுரைக்குச் செல்லும் கோவலன் சோழநாடு கடந்து பாண்டி நாட்டெல்லையில் மாங்காட்டு மறையோனைச் சந்தித்த பொழுது அம்மறையோன் தனது யாத்திரையின் நோக்கத்தைக் கோவலனுக்குத் தெரிவிக்கின்றான்.

"நீலமேகமானது பொன் மலையின்மேல் பக்கங்களில் விரிந்து ஒருசேரப் படிந்தாற்போன்று ஆயிரந் தலையையும் அணுகுதற்கரிய வன்மையையுமுடைய பாம்பணைப் பள்ளியின்மேல் திருமகள் தங்கும் மார்பையுடைய திருமால் திரை தவழும் காவிரியாற்றின் இடைக்குறையாகிய திருவரங்கத்திலே பள்ளி கொண்டருளிய திருக் கோலத்தையும், திருவேங்கடமென்னும் மலையுச்சியின் மீதே ஞாயிறும் திங்களும் இரண்டு பக்கங்களிலும் விளங்க அவற்றின் நடுவே நீல மேகமானது தன் மின்னலைப் புத்தாடையாக வுடுத்துத் தன்னிடத்தேயுள்ள வானவில்லை ஆரமாகப் பூண்டு நின்றாற் போலச் சக்கரம் படையையும் சங்கினையும் அழகிய தாமரை மலர்போலும் வலக்கையிலும் இடது கையிலும் முறையே ஏந்தி அணிகிளரும் ஆரத்தை மார்பிற் பூண்டு பொன்னாடை யுடுத்துச் சிவந்த கண்களை யுடைய நெடியோனாகிய அப்பெருமான் நின்ற திருக் கோலத்தையும் எனக்குக் காட்டுவாயாக என்று என்னுடைய

கண்கள் என்னுள்ளத்தைக் கவற்றுதலாலே அப்பெருமானது இருவகைக் கோலங்களையும் காணுதற் பொருட்டு வந்தேன்?" என மாங்காட்டு மறையோன் கோவலனுக்குக் கூறும் பகுதி :

"நீல மேகம் நெடும்பொற் குன்றத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறற்
பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த
விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தித்
திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்,
வீங்குநீ ரருவி வேங்கட மென்னும்
ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து
மின்னுக்கொடி யுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்
என்கண் காட்டென் றென்னுளங் கவற்ற
வந்தேன் குடமலை மாங்காட் டுள்ளேன்"

(காடுகாண் காதை 35 -53)

என்பதாகும். மதுரைக்கு வழி கூறும் அம்மறையோன், மதுரைக்குச் செல்லும் வழி கொடும்பாளூர் நெடுங்குளத்தின் பக்கத்திலே மூன்று கிளையாய்ப் பிரிகிறதென்றும், அது பிறைமுடிக்கண்ணிப் பெரியோனாகிய சிவபெருமான் ஏந்திய முத்தலைச் சூலத்தையொத்ததென்றும் அவற்றின், இடப்பக்கத்தே யமைந்த வழியே சென்றால் திருமால் குன்றத்தை அடையலாமென்றும், அக்குன்றத்தின்கண் பிலத்துவழி உண்டென்றும், அப்பிலத்துக்குள்ளே புண்ணிய சரவணம், பவகாரணி, இட்ட சித்தியென்னும் மூன்று பொய்கைகள் உளவென்றும், அவற்றுள் புண்ணிய

சரவணத்தில் மூழ்கினால் இந்திரானற் செய்யப்பட்ட ஐந்திர வியாகரணத்தை உணரலாம் என்றும், பவகாரணியில் மூழ்கினால் பழம் பிறப்பையுணரலாமென்றும், இட்ட சித்தியில் ஆடினால் நினைத்ததெல்லாம் பெறலாம் என்றும் கூற, அப்பிலத்துக்குள்ளே நுழைய விரும்பினால் சிலம்பாற்றின் கரையில் அமைந்த கோங்கமரநிழலின் கண்ணே இயக்கியாகிய ஒருத்தி தோன்றி, 'இப்பிறப்பிற் கின்பமும் மறுபிறப்பிற்கின்பமும் இவை இரண்டுமொழிந்து எக்காலத்தும் ஒன்றாந் தன்மையாய்த் திறம்பாது அழிவற நிற்பதுமாகிய பொருள்கள் யாவை? என் பெயர் வரோத்தமை; இவற்றையுரைத்தார்க்கு யானுரியேன் ஆதலின் திருவுடையீர்நீவிர் உரைத்தீராயின் இப்பில வாயிற் கதவம் திறந்து தருவேன்' என்று கூறுவாள். அவள் கேட்ட வினாவுக்கு மறுமொழி கூறின், அவள் கதவைத் திறந்து வழி விடுவாள், அவ்வழியே நீண்ட இடைகழிகள் பல உள்ளன. அவற்றைக் கடந்தால் இரட்டைக் கதவுடைய வாயிலொன்று தோன்றும். அதற்கு மேலாகச் சென்றால் மற்றொருத்தி தோன்றி 'ஈறில்லாத இன்பம் யாது? அதனை உரைத்தீராயின் நீங்கள் இம்மூன்று பொருளினும் விரும்பிய பொருளைப் பெறுவீர்' என்பாள். அவ்வாறு வினவிய அவள், 'யான் கேட்டதற்கு நும் பேதைமையான் மறுமொழி கூறீராயினும் நும்மை வருத்தம் செய்யேன், நீங்கள் போதற்குரிய வழியிலே செலுத்துவேன்' என்பாள். அவள் கேட்ட பொருளை உரைத்தாருளராயின், முற்கூறிய பொய்கைக் கரைகளிலே அவர்களைச் செலுத்தி அவற்றைக் காட்டி மீள்வாள். அருமறையிடத்தே ஐந்தெழுத்தாலும் எட்டெழுத்தாலும் ஓதப்பட்டு வருகிற மந்திரமிரண்டையும் ஒருமையுடன் மனத்தால் நினைந்து வாக்கினால் துதித்து அப்பொய்கை மூன்றனுள் நீங்கள் விரும்பிய பொய்கையில் முழுகினால் அவற்றால் வரும் பயன் தவத்தால் முதிர்ந்தவர்களாலும் காணத் தகுவன அல்ல. அப்பொய்கைகளின் பயனை நீங்கள் விரும்பாவிட்டால் அம்மலை மீது நின்றோனுடைய பொலிவு பொருந்திய தாமரை மலர் போலும் பாதங்களை நினைந்து வழிபடுவீராக. அப்பொழுதே அவனது கருடப்புள் எழுதிய கொடிமரம் நிற்குமிடத்தைக் காண்பீர்கள். கண்டபொழுதே அவன் திருவடிநிலை நும்மை எடுத்துக்கொண்டு பிறவித்

துன்பத்தைக் கெடுக்கும்' என்று திருமால் குன்றத்தின் வழியியல்பினையும் ஏனையிரண்டு வழிகளின் இயல்பினையும் சொல்லி முடித்து, நீணிலம் கடந்த நெடுமுடியண்ணல் தாள் தொழுதகையேன் யானும் போகுவல். கண்கூடாகக் காணத்தகும் பிலத்தின் இயல்பு இதுவாகும்' என மறையோன் வழி சொல்லி முடிக்கின்றான். இம்மறையோன் கூறியவற்றைக் கோவலனுக்கு வழித் துணையாக வந்த சமணத் துறவியாகிய கவுந்தியடிகள் கேட்டு "நலம்புரி கொள்கை நான்மறையாளா! இந்திரவியாகரணத்தை எம்முடைய அருககுமாரன் அருளிச் செய்த பரமாகமங்களிற் காண்கின்றிலையோ? அதன் பொருட்டுப் புண்ணிய சரவணத்தில் முழுக வேண்டிய தில்லை. முற்பிறப்பிற் செய்தவற்றை இப்பிறப்பின் நிகழ்ச்சியாற் காணுதல் உண்டு. எய்தாத பொருள் எதுவு மில்லை யாதலின் இட்ட சித்தி எய்துதல் வேண்டா. அதனால் நீ கூறிய பிலத்தில் புகவேண்டிய இன்றியமையாமை எங்களுக்கு இல்லை. நீ காமுற்று வந்த தெய்வத்தைக் கண்டு வழிபடுதற்கு நீ போவாயாக. யாங்களும் எங்களுக்குப் பொருத்தமான வழியிற் போகிறோம்" என்று அம் மறையோனை நோக்கிக் கூறுகின்றார். இவ்வாறு கவுந்தியடிகள் கூறிய மொழி சமண சமயத்தவர்களின் சமயப்பற்றினையும் வைதிக நெறியில் அவர்களுக்கிருந்த வெறுப்பினையும் நன்கு புலப்படுவதாக அமைந்துள்ளமை காணலாம்.

கோவலன் கவுந்தியடிகளின் துணைகொண்டு கண்ணகியை அழைத்துக்கொண்டு மதுரைக்குச் செல்லும் வழியில் அவனைத் தேடிக் கொணர்தற்பொருட்டு மாதவியால் அனுப்பப்பட்ட கோசிகன் என்னும் மறையவன், இடைவழியில் கோவலனைக் கண்டு மாதவி கொடுத்த ஓலையைக் கொடுத்து, அவனது பிரிவால் காவிரிப்பூம் பட்டினத்திலுள்ளார் வருந்தும்துயர்நிலைக்கு இராமபிரான் பிரிவால் அயோத்தி நகர மக்கள் அடைந்த துயர் நிலையை உவமையாக எடுத்துரைக்கின்றான். மதுரைநகரப் புறஞ்சேரியில் தங்கிய கோவலன் கவுந்தியடிகளை நோக்கி யான் மாதவியால் வைத்த பெரு வேட்கையால் பொருள் முழுவதையும் இழந்து மனைவியுடன் வேற்று நாடடைந்து

சிறுமையுற்றேன் என்று வருந்திய பொழுது, "காமம் சார்பாகக் கடுந்துயருழந்தோர் இன்று நின்னளவினரல்லர்; முன்னும் எண்ணிறந்தோருளர். தன் தந்தையாகிய தசரதனது ஏவலாலே மனைவியொடும் வனத்திற் போய் அவளைப் பிரிதலால் கொடுந் துன்பத்தை அனுபவித்தவன் வேத முதல்வனாகிய நான்முகனைப் பெற்ற திருமால் என்பதனை உலகம் எல்லாம் அறியும். நீ அறிந்திலையோ? அது நெடு நாளாக வழங்கும் செய்தியன்றோ" என இவ்வாறு இராமாயணக் கதையினையும்; சூதாடி நாடிழந்து மனைவியைப் பிரிந்து வருந்திய நளன் கதையினையும் எடுத்துக் காட்டித் தேற்றுகிறார். இவ்விடத்து வேத முதல்வன் தந்தையாகிய இராமபிரானைக் காமம் சார்பாக வினையிற் கட்டுண்டு துன்புற்றவராகக் கவுந்தியடிகள் கூறும் குறிப்பு அவர் மொழிகளிற் புலனாதல் காணலாம்.

கோவலனுக்குக் கண்ணகி வாழையிலையில் அடிசில் படைத்த தோற்றத்தையும், கோவலன், வணிகர்க்கு வேதத்தில் கூறிய முறைப்படிப் பலியிடுதல் வாய் பூசுதல் முதலிய செய்த பின் உண்ணுந் தோற்றத்தினையும் கண்டு மகிழ்ந்த ஆயர்மகளிர், அவ்விருவரையும் முறையே ஆயர் பாடியில் அசோதை பெற்றெடுத்த காயாம்பூ நிறத்தவனாகிய கண்ணனாகவும், அவனைத் தொழுநையாற்றில் வருத்தமகற்றி மணந்து கொண்ட ஆயர் மகள் நப்பின்னையாகவும் ஐயுற்று வியந்து பாராட்டுகின்றார். இச்செய்தி,

> "குமரி வாழையின் குருத்தகம் விரித்தீங்
> கமுத முண்க வடிக ளீங்கென
> அரசர் பின்னோர்க் கருமறை மருங்கின்
> உரிய வெல்லா மொருமுறை கழித்தாங்கு
> ஆயர் பாடியி னசோதைபெற் றெடுத்த
> பூவைப் புதுமலர் வண்ணன் கொல்லோ
> நல்லமு துண்ணும் நம்பி ஈங்குப்
> பல்வளைத் தோளியும் பண்டுநங் குலத்துத்
> தொழுனை யாற்றினுட் டூமணி வண்ணனை
> விழுமந் தீர்த்த விளக்குக் கொல்லென
> ஐயையும் தவ்வையும் விம்மித மெய்திக்
> கண்கொளா நமக்கிவர் காட்சி யீங்கென

உண்டினி திருந்த உயர்பே ராளன்"

(கொலைக்களக் காதை 42-54)

எனவரும் தொடரிற் குறிக்கப் பெற்றுள்ளமை காணலாம்.

இவ்வாறு இடைச்சேரியில் மாதரி வீட்டில் தங்கிக் கண்ணகியார் படைத்த உணவினையுண்டு அவரது காற் சிலம்பில் ஒன்றை மதுரையில் விற்றற்குச் சென்ற கோவலன், ஊழ்வினை வயத்தால் கள்வன் எனக் கருதப்பட்டுக் கொல்லப்படுகிறான். அந்நிலையில் கண்ணகி தங்கிய இடைச்சேரியில் தீய நிமித்தங்கள் பல நிகழ்கின்றன. அவற்றைக் கண்டு அஞ்சிய ஆயர் மகளிர் சாந்தி செய்யும் பொருட்டாகத் தம் வழிபடு கடவுளாகிய திருமாலைப் போற்றிக் குரவைக் கூத்தாடுகின்றனர். அதனைக் குறிப்பது ஆய்ச்சியர் குரவையாகும். இதன்கண் முல்லைநிலத் தெய்வமாகிய திருமால் வழிபாடு பலதிறத்தாலும் விரித்து விளக்கப்படுகின்றது. கண்ணனாகிய திருமால் கன்றால் விளாமரத்தை யெறிந்தது, ஆநிரை மேய்த்தது, ஆயர் மகளிர்க்காகக் குருந்தினை வளைத்துக் கொடுத்தது, கடல் வண்ணனாகிய அக்கடவுள், வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிப் பாற்கடலைக் கடைந்து தேவர்க்கு அமுதீந்தது, கடல் வயிறு கலக்கிய தன் கைகளை ஆயர் பாடியில் அசோதையார் உரலிற் பிணித்துக் கட்டும்படி எளியனாய் விளையாடியது, உலகத்தை யுண்டது, களவினால் உறிவெண்ணெய் உண்டது, மூவுலகும் ஈரடியால் அளந்தது, நூற்றுவரால் துரியோதனாதியர்பால் நாற்றிசையும் போற்றப் பாண்டவர்க்காகத் தூது சென்றது, வாணன் பேரூராகிய சோநகரத்தை யழித்தது, இராமவதாரத்தில் தம்பியாகிய இலக்குவனோடும் காடடைந்தது, பேருலக மெல்லாம் தமது விரிகமலவுந்தியிடை விரிந்து தோன்றச் செய்தது, கண்ணனும் பலதேவனும் ஆகிய இருபெருந் தெய்வமாக மக்களால் வழிபடப் பெற்று அருள் செய்வது, மாமனாகிய கம்சனது வஞ்சனையைக் கடந்து வென்றது, கருடக்கொடியுயர்த்தது, நாராயணனென்னும் திருநாமத்தின் சிறப்பு ஆகியவற்றையெல்லாம் ஆயர் மகளிர் உளமுவந்து போற்று முகமாக இளங்கோவடிகள் விரித்துரைத்துள்ளார்.

அஞ்சன வண்ணனாகிய கண்ணன் தன் மாமனாகிய கம்சனது வஞ்சனையால் வந்த யானையின் கொம்பை ஒடித்து நின்றாடிய கூத்தினை அல்லித் தொகுதியென்றும், காமன் மகன் அநிருத்தனைத் தன் மகள் உழை காரணமாக வாணாசூரன் சிறைப்படுத்திய பொழுது அவனுடைய சோநகர வீதியிலே திருமால் குடங்கொண்டு ஆடிய கூத்தினைக் குடக்கூத்து என்றும், திருமால் வாணனை வெல்லுதற்கு மல்லனாய் நின்று பொருது கொன்றாடிய கூத்து மல்லாடல் என்றும், அந்நாளில் காமன் ஆண்மைத் தன்மையிற் றிரிந்த பேடிக் கோலத்தோடு ஆடிய கூத்தினைப் பேடு என்றும், அவுணர்கள் போர் செய்யலாற்றாது மயங்கி வீழும்படி திருமகள் ஆடிய ஆடலைப் பாவைக் கூத்தென்றும், சோநகரத்து வடக்கு வாயிலிலே இந்திராணி வயலிடத்தே நின்றாடிய கூத்தினைக் கடையமென்றும் அடிகள் குறிப்பிடுகின்றார்.

## இந்திரன் வழிபாடு

மருதநிலத் தெய்வமாகிய இந்திரனைத் தேவர் கோமான், விண்ணவர் முதல்வன், விண்ணவர் தலைவன், ஆயிரங்கண்ணோன், மலைச்சிறகரிந்த வச்சிர வேந்தன், இடிப்படை வானவன், விறல்வேல் வானவன் என அடிகள் புகழ்கின்றார். இந்திரனை வழிபடுங் கருத்துடன் காவிரிப்பூம் பட்டினத்தில் இந்திரவிழாக் கொண்டாடப்பெற்றது. இந்த விழாவின் நிகழ்ச்சியை இந்திரவிழவூ ரெடுத்த காதையில் இளங்கோவடிகள் விரித்துரைத்துள்ளார்.

சித்திரை மாதத்துச் சித்திரை விண்மீன் கூடிய பூரணை நாளிலே மருவூர்ப் பாக்கத்திற்கும், பட்டினப் பாக்கத்திற்கும் நடுவேயமைந்த பொது நிலமாகிய நளங்காடியிலே, வெற்றி பொருந்திய வேலையுடைய முசுகுந்தனுக்கு வந்த இடையூற்றை ஒழித்தற் பொருட்டு இந்திரனால் அனுப்பப்பட்டுத் தேவருலகிலிருந்தும் போந்து பலிகொள்ளும் பூதத்தின் பீடிகையிலே, புழுக்கல் முதலிய பலிகளைச் சொரிந்து மறக்குடிப் பெண்டிரும் வீரர்களும் பலியிட்டு வழிபடுகின்றனர். அதன்பின் ஐவகை

மன்றங்களிலும் பலியிட்டு இந்திரனது வச்சிராயுதம் நிற்கும் கோயிலாகிய வச்சிரக்கோட்டத்திலிருக்கும் முரசையானை மீது ஏற்றி, அவனது ஐராவதம் நிற்கும் கோயிலிலே சென்று விழாவின் தொடக்கத்தையும் முடிவையும் அறைந்து சாற்றி, கற்பகதரு நின்ற கோயிலிலே ஐராவதமெழுதிய கொடியை யேற்றி ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் அரச குமாரரும் பரதகுமாரரும் கூடி ஆயிரத்தெட்டு அரச தலையிற் சுமப்பித்துக் கொண்ட காவிரியின் நன்னீரைப் பொற் குடத்தேந்தி விண்ணவர் தலைவனாகிய இந்திரனை நீராட்டி வழிபடுகின்றனர். இவ்விழா இருபத்தெட்டு நாள் நடந்து, விழா முடிவில் கடலாட்டு நிகழுமென்றும், இப்பெரிய விழாவைக் காணுதற் பொருட்டு வடநாட்டவரும் இங்கு வருவரென்றும் அடிகள் விளக்கியுள்ளார்.

### வருணன்

நெய்தல் நிலத் தெய்வம் வருணனாவான். கரிய மலர் நெடுங்கண் காரிகையாகிய தலைவியின் முன்னர்க் கடற்றெய்வங் காட்டிக்காட்டி நின்னைப் பிரியேன் என்று தலைவன் தலைவிக்குச் சபதஞ் செய்கின்றான். அச்சபதத்தை அவன் மறந்து விடுகிறான். அந்நிலையில் தலைவர் அறனில்லாதவர் என்பது எமக்கு முன்னமே எப்படித் தெரியும் என்று தோழி தலைவன் முன்னின்று முன்னிலைப் படர்க்கையாகப் பேசுகின்றாள். இப்பேச்சில் தலைவன் கடற்றெய்வத்தின் முன் நின்னைப்பிரியேன் எனத் தலைவிக்குச் சபதஞ் செய்து கொடுத்தமை குறிக்கப்பட்டது. மாலைப்பொழுது கண்டு வருந்திய தலைவி, தலைவன் நின்னைப் பிரியேன் என்று தனக்குச் சொன்ன சபதத்தினைப் பொய்த்தமை கருதி, அவனைக் கடற்றெய்வம் சினந்து வருத்தாதபடி அத்தெய்வத்தைப் பணிந்து வேண்டுகின்றாள்.

> 'பூக்கமழ் கானலிற் பொய்ச்சூள் பொறுக்கென்று
> மாக்கடற் றெய்வம்நின் மலரடி வணங்குதும்'

என்பது தலைவியின் வேண்டுகோள்.

இதனால் கடற்றெய்வமாகிய வருணன் வழிபாடு

நெய்தல் நிலத்தில் மேற்கொள்ளப்பட்டமை விளங்கும்.

## கொற்றவை

பாலைக்குத் தெய்வம் கொற்றவை என்பதனை இளங்கோவடிகள் வேட்டுவ வரியில் விரித்துரைத்துள்ளார். கொற்றவை வழிபாடு ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்திலேயே சிறப்புற்று விளங்கியதாகும். 'சிறந்த கொற்றவை நிலை' என்பது தொல்காப்பியம். கொற்றவைக்குப் பழையோள் என்று ஒரு பெயருண்டு. எனவே தெய்வத்தைத் தாயாகக் கருதி வழிபடும் இவ்வழிபாடு மிகமிகப் பழைமையுடையதென்பதும் துணியப்படும். இக்கொற்றவை வழிபாடு சிவ வழிபாட்டுடன் மிகவும் நெருங்கிய தொடர்புடைய தென்பதையும் முல்லைநில வழிபாடாகிய திருமால் வழிபாட்டினைத் தனக்கு அங்கமாகக் கொண்டதென்பதையும், முருகவேள் வழிபாட்டுடன் சம்பந்தமுடையதென்பதையும் இளங்கோ வடிகள் வேட்டுவவரியில் நன்கு விளக்குகின்றார்.

> 'மதியின் வெண்டோடு சூடுஞ் சென்னி
> வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை'

எனவரும் தொடரில் இறைவன் பிறை சூடியதனைக் கொற்றவை மேல் ஏற்றிக் கூறினார். நெற்றிக் கண்ணுடைமை, நஞ்சுண்டு கண்டங்கறுத்தமை, நாகம் நாணாக மேரு மலையை வில்லாக வளைத்தமை, திரிசூலமேந்தினமை, பெண்பாகத்திற் சிலம்பும் ஆண்பாகத்திற் கழலும் அமைய மங்கைபாகரானமை ஆகிய இவை யாவும் பிறவா யாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானுக்கு உரியனவாம். அப்பெருமானுடன் பிரிப்பின்றி உடனாதல் பற்றி - இச்செயல்களெல்லாவற்றையும் சத்தியாகிய சொற்றவையின் மேலேற்றிச் சிலப்பதிகாரம் போற்றுகின்றது.

எருமையின் தலையும் அவுணன் உடம்பும் பெற்ற மகிடாசுரன் தலைமீது நின்ற வெற்றித் தெய்வமாகிய கொற்றவையைத் திருமாலின் தங்கையென அடிகள் பாராட்டியுள்ளார்.

'கண்ணுதல் பாகம் ஆளுடையாள்' என்றும், 'திங்கள் வாழ் சடையாள்' என்றும் 'திருவமாற்கு இளையாள்' என்றும், 'கொற்றவை', 'ஐயை', 'பாய்கலைப் பாவை' என்றும் பாராட்டிய அடிகள்,

'ஆனைத் தோல் போர்த்துப் புலியின் உரியுடுத்துக்
காணத் தெருமைக் கருந்தலை மேல் நின்றாயால்'

என்றும்,

'வரிவளைக்கை வாளேந்தி மாமயிடற் செற்றுக்
கரிய திரிக்கோட்டுக் கலைமிசை மேல் நின்றாயால்'

என்றும்,

'சங்கமுஞ் சக்கரமுந் தாமரைக் கையேந்திச்
செங்க ணரிமான் சினவிடைமேல் நின்றாயால்'

என்றும் சிவபெருமான் செய்தனவெல்லாம் சத்தி செய்தன வாகக் கூறி உள்ளார். அப்பெருமாட்டி வானோர் வணங்க மறைமேல் மறையாகிய ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றி நிற்குமியல்பினையும், அரி, அரன், அயன் என்னும் முத்தேவர்கள் உள்ளக் கமலத்தே விரிந்த சோதிப்பொருளாக விளங்கி நிற்கும் இயல்பினையும், கங்கையைச் சடைமுடியில் அணிந்த கண்ணுதற் கடவுளின் இடப்பாகத்தே உமா தேவியின் உருவாய்த் திகழுமியல்பினையும், விண்ணோர் அமுதுண்டுஞ் சாவ ஒருவரும் உண்ணாத நஞ்சமுண்டு இருந்தருள் செய்யும் இயல்பினையும் வேட்டுவர்கள் எடுத்துரைத்துப் போற்றுகின்றார்கள். சிவபெருமானுக்குரிய கொன்றை மலரும் திருமாலுக்குரிய துளவமும் ஒருசேரத் தொடுத்த மாலையைக் கொற்றவையின் தோள்மேல் வேட்டுவர் அணிகின்றனர். இவ்வாறு அணியுங் குறிப்பு சிவ வழிபாடும் திருமால் வழிபாடும் கலந்த நிலையில் அமைந்தது கொற்றவை வழிபாடென்பதனை வலியுறுத்துகின்றது.

'கொன்றையுந் துளவமுங் குழுமத் தொடுத்த
துன்று மலர்ப் பிணையல் தோள்மே லிட்டு ......'

என்பது நோக்கத்தக்கது.

'மருதில் நடந்துநின் மாமன்செய் வஞ்சம்
உருளுஞ் சகடம் உதைத்தருள் செய்குவாய்'

எனக் கொற்றவையைத் திருமாலாகவே கருதிக் கஞ்சன் செய்த வஞ்சனையைக் கடந்த கண்ணன் செயலைக் கொற்றவை மீதேற்றிப் போற்றுகின்றனர். திருமாலைக் குறித்த மாயவன் என்ற பெயரும் கொற்றவையைக் குறித்த மாயவள் என்ற பெயரும் ஒரே முதனிலையில் தோன்றினவை. இக்குறிப்பினால் சிவசத்தியில் ஒன்றாகிய புருஷசத்தியே திருமால் என்னும் குறிப்பினை அக்காலச் சைவர் கொண்டிருந்தமை புலனாகும். இதனை 'மாதொருபாலும் மாலொருபாலும் மகிழ்கின்ற நாதர்' என வரும் திருஞான சம்பந்தர் வாய்மொழியும் வற்புறுத்தல் காணலாம்.

கோவலன், பாய்கலைப்பாவை மந்திரத்தை ஓதுமியல் புடையவன் என்றும், அம்மந்திரத்தால் காட்டில் மயக்குந் தெய்வத்தை ஆற்றல் கெடச் செய்தனனென்றும் மதுரை நகர்க்கருகேயமைந்த சிற்றூரில் மறைநூல் வழுக்கத்துப் புரிநூல் மார்பர் பாடிய பாய்கலைப் பாவை பாடற் பாணியினைக் கேட்டு மகிழ்ந்தனனென்றும் சிலப்பதிகாரம் கூறுதலால், கொற்றவை வழிபாட்டில் கோவலன் நம்பிக்கையுடையவன் என்பது நன்கு விளங்கும். இறைவனை 'ஆடல் கண்டருளிய அணங்கு' எனப் பத்திரகாளியையும், 'அடர்த்தெழு குருதியடங்காப் பசுந்துணிப் பிடர்த்தலைப் பீடம் ஏறிய மடக்கொடி வெற்றி வேற்றடக்கைக் கொற்றவை' எனத் துர்க்கையையும், 'அறுவர்க்கிளைய நங்கை' எனச் சத்த மாதர்களில் ஒருத்தியாகிய பிடாரியையும் அடிகள் குறித்துள்ளார். மதுரை நகரத்தே கொற்றவைக்குக் கோயிலிருந்தமையும், அக்கொற்றவை கோயில் வாசலில் கண்ணகி பொற்றொடி தகர்த்தமையும் அடிகள் குறிப்பிடுவர். உலகுக்கு இடர்செய்யும் அவுணரொடு துர்க்கை செய்த போரிலே அவுணர் பாம்பு தேள் முதலிய உருவில் வஞ்சனையால் வந்து எதிர்க்க, அது பொறாளாகி மரத்தினால் கால் கட்டிக் கொண்டு ஆடி அவற்றைச் சிதைத்த ஆடல், மரக்கால் ஆடல் எனப்படும். இதனை,

'காய்சின அவுணர் கடுந்தொழில் பொறாஅள்
மாயவள் ஆடிய மரக்கா லாடல்'

என்று குறிப்பிடுவர் அடிகள்.

## சிவவழிபாடு

இவ்வழிபாடு எல்லா நிலத்துக்கும் பொதுவாக வுரியது. சோழநாட்டுக் காவிரிப்பூம்பட்டினத்தில்

'பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீல மேனி நெடியோன் கோயிலும்
மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்
மாமுது முதல்வன் வாய்மை யின்வழா
நான்மறை மரபின் தீமுறை யொருபால்
நால்வகைத் தேவரும் மூவறு கணங்களும்
பால்வேறு தெரிந்த பகுதித் தோற்றத்து
வேறுவேறு கடவுளர் சாறுசிறந் தொருபால்
அறவோர் பள்ளியும் அறனோம் படையும்
புறநிலைக் கோட்டத்துப் புண்ணியத் தானமும்
திறவோ ருரைக்குஞ் செயல்சிறந்த தொருபால்'

சிறந்து விளங்கின எனவும், பாண்டிய நாட்டு மதுரை நகர்ப் புறத்தே அருந்தெறற் கடவுளாகிய திருவாலவாய்ப் பெருமான் திருக்கோயிலில் ஓதிய நான்மறையோசையும், மாதவர் கூறிய பொருளுரையும் முழுங்கின எனவும், மதுரை நகரிலே

நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்
உவணச் சேவல் உயர்த்தோன் நியமமும்
மேழிவல னுயர்த்த வெள்ளை நகரமும்
கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்
அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளியும்
மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்

விளங்கின எனவும் சிலப்பதிகாரம் கூறும். பிறவா யாக்கைப்

பெரியோன் எனவும் சிலப்பதிகாரம் அருந்தெறற் கடவுள் எனவும் நுதல்விழி நாட்டத்திறையோன் எனவும் சிவபெருமான் ஒருவனையே அடிகள் முதலில் வைத்துப் போற்றுதலை நோக்குங்கால், அவர் காலத்தில் தமிழ் நாட்டிலே பெரும்பான்மை மக்களால் மேற்கொள்ளப்பட்ட சிறப்புடைய வழிபாடு சிவ வழிபாடென்பது நன்கு துணியப்படும்.

செங்குட்டுவன், அருந்தமிழ் இகழ்ந்த ஆரிய அரசரை வெற்றி கோடல் கருதி இமயஞ் செல்லப் புறப்பட்ட பொழுது. திங்களைச் சூடிய நீண்ட பெருஞ் சடைமுடியினையும் உலக முழுவதனையும் தன்னுள் அடக்கிய திருவுருவத்தினையும் உடைய யாவர்க்கும் உயர்ந்தோனாகிய சிவபெருமானுடைய திருவடிகளை வெற்றி பொருந்திய வஞ்சி மாலையுடன் தன்முடி மீதணிந்து எவர்க்கும் தாழாத தலையால் அப்பெருமானை இறைஞ்சிப் போற்றி, அந்தணர் ஏந்திய வேள்விப்புகை தன் மார்பில் அணிந்த மாலையின்கண்ணே புகுந்து மணங்கமழப் பட்டத்து யானை மீதமர்ந்து போந்தான் எனவும், அந்நிலையில், 'குடதிசைக் கோவாகிய செங்குட்டுவன் வெற்றி பெறுவானாக' என வாழ்த்திக் கொண்டு ஆடகமாடம் என்னும் திருக்கோயிலில் அறிதுயில் கொள்ளும் திருமாலின் பிரசாதத்தைக் கையிற் கொண்டு திருமாலடியார் சிலர் செங்குட்டுவனை ஏத்தி நின்றனர் எனவும், அதனை உணர்ந்த வேந்தர் பெருமான் கங்கையைச் சடையிற் கரந்தருளிய செஞ்சடைக் கடவுளாகிய சிவபெருமானுடைய அழகிய திருவடிகளைத் தன் தலைமேற் புனைந்திருத்தலால் திருமாலின் பிரசாதத்தை வாங்கித் தன் தோள்களிற் புனைந்து சென்றான் எனவும் இளங்கோவடிகள் கூறுகின்றார்.

நிலவுக்கதிர் முடித்த நீளிருஞ் சென்னி
உலகுபொதி யுருவத் துயர்ந்தோன் சேவடி
மறஞ்சேர் வஞ்சி மாலையொடு புனைந்து
இறைஞ்சாச் சென்னி யிறைஞ்சி வலங்கொண்டு
மறையோ ரேந்திய வாகுதி நறும்புகை
நறைகெழு மாலையி னல்லகம் வருத்தக்

கடக்களி யானைப் பிடர்த்தலை யேறினன்
குடக்கோக் குட்டுவன் கொற்றங் கொள்கென
ஆடகமாத் தறிதுயில் அமர்ந்தோன்
சேடங் கொண்டு சிலர்நின் றேத்தத்
தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்
ஆங்கது வாங்கி யணிமணிப் புயத்துத்
தாங்கின னாகித் தகைமையிற் செல்வுழி

(கால்கோட்காதை 54-67)

எனவரும் தொடர்களால் அடிகள் இச்செய்தியை விளக்கியுள்ளார். அங்ஙனம் செல்லும் செங்குட்டுவனை நோக்கி இமயத்தினின்றும் வந்த முனிவர்கள்,

செஞ்சடை வானவன் அருளினில் விளங்க
வஞ்சித் தோன்றிய வானவ!

என அழைக்கு முகமாக அவ்வேந்தன் சிவபெருமான் திருவருளாற் பிறந்த சிறப்பினைக் கூறுதலாலும், அவ்வேந்தனை நோக்கி

ஆனேறூ ர்ந்தோன் அருளினில் தோன்றி
மாநிலம் விளக்கிய மன்னவன்

என மாடல மறையோன் கூறுதலாலும், செங்குட்டுவ னுடைய முன்னோர்களாகிய சேரவேந்தர்களும் அவர்கள் வழியிற்றோன்றிய அவ்வேந்தர் பெருமானும் சிவவழிபாட்டில் அழுந்திய பற்றுடையோராய் விளங்கினமையும் இனிது விளங்கும்.

செங்குட்டுவன் செய்த போரில் எதிர் நிற்ற லாற்றாராகிய மன்னர், சடைமுடியுடையராய் உடல் முழுதும் முழுநீறு பூசிய சிவனடியாராகவும், மயிற் பீலியைக் கையிலேந்திய சமண நோன்பிகளாகவும்; பாடும் பாணராகவும் ஆடுங்கூத்தராகவும் தாந்தாம் கற்று வல்ல தொழில் நிலைக்கேற்ப வெவ்வேறு கோலமணிந்து தப்பிப் பிழைத்தார்கள் எனவும் வெற்றி பெற்ற செங்குட்டுவன்,

'வடதிசைக் கண்ணே மறைகளைப் பாதுகாக்கும் அந்தண ருடைய வேள்விக் குண்டத்தின் முத்தீயை அவியாது பேணும் பெரிய அருள் வாழ்க்கையைப் போற்றிப் பாதுகாத்திடுமின்' எனத் தூதர்க்குச் சொல்லி வில்லவன் கோதை முதலிய படைத்தலைவர்களை ஏவி இமயமலையிலே கண்ணகியார் வடிவமைத்தற்குரிய சிலையினைக் கொண்டான் எனவும் இளங்கோவடிகள் கூறுதலால் அவர் காலத்து வடநாட்டில் சிவவழிபாடும் சமணசமயமும் வைதிக வேள்வி முறைகளும்மேற்கொள்ளப் பெற்றமை நன்கு விளங்கும்.

ஆரிய மன்னரை வணங்கி வஞ்சி நகரத்தையடைந்த செங்குட்டுவன், தன் பட்டத்தரசி இளங்கோ வேண்மா ளுடன் ஒருங்கு வீற்றிருந்த காலத்துப் பறையூர் என்னும் ஊரிற் பிறந்த கூத்தச் சாக்கையன் என்பான், எல்லாச் செல்வங்களுக்கும் நிலைக்களனாகிய சிவந்த திருவடியிலே சிலம்பென்னும் காலணி ஒலிக்கவும், சிவந்த கையின் கண்ணே துடியென்னும் பறை முழங்கவும், சிவந்த நிறமுடைய கண்கள் அன்பராயினார்க்கு ஆயிரந்திருக் குறிப்புகளைப் புலப்படுத்தியருளலும் செந்நிறமுடைய சடைக்கற்றைகள் திசை முழுதும் பரந்து அலையவும், உமாதேவியார் தாமணிந்த பாடகம் ஒலிக்காமலும் தோள்வளைகள் நடுங்காமலும் காதணி அசையாமலும் கூந்தல் அவிழாமலும் தன் இடப்பாகத்தே அமையவும் பெரியோனாகிய சிவபெருமான் ஆடிய 'கொடு கொட்டி'. யென்னும் கூத்தை ஆடிக்காட்டினன். இச்செய்தியை,

> திருநிலைச் சேவடிச் சிலம்புவாய் புலம்பவும்
> பரிதரு செங்கையிற் படுபறை யார்ப்பவும்
> செங்கணாயிரந் திருக்குறிப் ப'ருளவும்
> செஞ்சடை சென்று திசைமுகம் அலம்பவும்
> பாடகம் பதையாது சூடகந் துளங்காது
> மேகலை யொலியாது மென்முலை யசையாது
> வார்குழை யாடாது மணிக்குழல் அவிழாது
> உமையவள் ஒருதிற னாக வோங்கிய
> இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்

எனவருந் தொடரால் இளங்கோவடிகள் விளக்குகின்றார்.

கொடுகொட்டி ஆடல் சிவபெருமானால் ஆட்டப்பெற்ற கூத்தாகும். இது, தேவர் தமக்குத் துன்பம் விளைக்கும் திரிபுரத்தவுணர்களை யழிக்கும்படி வேண்டத் தேவர் யாவரினுமுயர்ந்த இறைவனாகிய சிவ்பெருமான் வடவைத் தீயைத் தலையிலேயுடைய பெரிய அம்பு ஏவல் கேட்ட அளவிலே திரிபுரத்தவுணர் வெந்து நீறாக விழுந்த வெண்ணீற்றுக் குவியலிலே பைரவிக்குரிய சுடுகாடாகிய அரங்கத்திலே உமாதேவி ஒருபக்கத்தில் நின்று பாணி, தூக்கு, சீர் என்னுந் தாளவகைகளைச் செலுத்த வெற்றிக்களிப்பால் கைகொட்டி நின்று ஆடிய கூத்தாகும். திரிபுரந் தீப்பற்றி எரியக்கண்டும் இரங்காது கை கொட்டி நின்று ஆடிய கொடுமையுடையதாதல் பற்றி இது கொடு கொட்டி எனப் பெயர் பெற்றது. இதனியல்பினை

பாரதி யாடிய பாரதி யரங்கத்துத்
திரிபுர மெரியத் தேவர் வேண்ட
எரிமுகப் பேரம் பேவல் கேட்ப
உமையவள் ஒருதிற னாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொடுகொட் டியாடல்

என விரித்துரைப்பர் அடிகள். திரிபுரத்தை யழித்தற் பொருட்டு வானோராகிய தேரில் நால்வேதமாகிய குதிரைகளைப் பூட்டிக் கூர்முள் பிடித்துச் சாரதியாயிருந்து ஓட்டிய நான்முகன் காணும்படி பாரதி வடிவாகிய இறைவன் வெண்ணீற்றை யணிந்தாடிய கூத்து பாண்டரங்கம் எனப்படும். இதனியல்பினை,

தேர்முன் நின்ற திசைமுகன் காணப்
பாரதி யாடிய வியன்பாண் டரங்கம்

என விளக்குவர் அடிகள்.

இங்கு எடுத்துக்காட்டிய பகுதிகளால் சிவபெருமா னாகிய இறைவன் என்றும் பிறவா யாக்கை யாகிய அருள் திருமேனியுடையான் என்றும், தேவர் போற்றத் திங்கள் சூடிய செல்வன் என்றும், யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான் ஆதலின் பெரியோன் என்னும் திருப்பெய

ருடையான் என்றும், நெற்றிக் கண்ணுடையான் என்றும், உமையை ஒரு பாகத்திற்கொண்ட அம்மையப்பன் என்றும், ஆலின் கீழ் அறமுரைத்தருளிய ஆசான் என்றும், முருகவேட்குத் தந்தையென்றும், நஞ்சுண்டு கண்டத் தடக்கித் தேவர்களை உய்வித்த பேரருளாளன் என்றும், உமையவள் காண ஆடினான் என்றும், திரிபுரத்தை எரித்தருளியவன் என்றும், திருக்கயிலையில் வீற்றிருப்பவன் என்றும், அவனே அட்டமூர்த்தியாகிய உலகு பொதி யுருவத்து உயர்ந்தோன் என்றும், அவனது வழிபாடு சேர சோழ பாண்டியர்களாகிய மூவேந்தர் நாட்டிலும் பெருக வழங்கியது என்றும், வடநாட்டிலும் பரவியிருந்தது என்றும், இமயமலையின் உச்சியிலே குயிலாலுவம் என்னுமிடத்தே உமையொரு பாகனாகிய இறைவனுக்குத் திருக்கோயில் அமைந்திருந்ததென்றும் அடிகள் விளக்கிய திறம் அறியத் தகுவதாகும்.

பிற தெய்வங்கள்

பலதேவன் : கண்ணனுக்கு முன்னோனாகிய பலதேவனை வால்வளைமேனி வாலியோன் எனவும், புகர் வெள்ளை எனவும் குறிப்பிட்டு அத்தெய்வத்துக்குரிய கோயில் புகார் நகரத்திலும், மதுரையிலும் அமைந் திருந்ததனை அடிகள் கூறியுள்ளார்.

காமன் : திருமாலுக்கு மகனாகிய காமனைக் காமக் கடவுள், மகர வெல்கொடி மைந்தன், மகரத்தின் கொடியோன், மீனேற்றுக் கொடியோன், உருவிலாளன் எனக்குறித்த அடிகள், காவேள் கோட்டம் காவிரிப்பூம் பட்டினத்தில் அமைந்திருந்ததனையும், காமன் தன் மகன் அநிருத்தன் பொருட்டு வாணன் பேரூரில் பேடிக் கூத்தாடிய இயல்பினையும் குறித்துள்ளார். காமனுக்குக் கரும்பு வில்லென்றும்,தென்றலும் குயிலும் துணைசெய்வன வென்றும் மகளிர் காமன் சேனையென்றும் சிலப்பதிகாரம் கூறும்.

ஞாயிறு : 'பலர் தொழத் தோன்றிய உலகுதொழு

மண்டிலம்' என அடிகள் ஞாயிற்றைப் புகழ்தலால் ஞாயிறு வணக்கம் அவர் காலத்தில் எல்லாச் சமயத்தவராலும் மேற்கொள்ளப் பெற்றமை விளங்கும். அடிகளே, 'ஞாயிறு போற்றுதும்' என இறைஞ்சுதலும் கண்ணகியார் 'காய்கதிர் செல்வனே கள்வனோ என் கணவன்' என அத்தெய்வத்தை வினவ, அது 'ஒள்ளெரி யுண்ணுமிவ் வூர்' என மறுமொழி கூறியதும், புகார் நகரத்தே கதிரவனுக்குரிய கோயிலாகிய பகல் வாயில் உச்சிக் கிழான் கோட்டம் அமைந்திருந் தமையும் தமிழ்நாட்டில் அடிகள் காலத்து ஞாயிறு வழிபாடு நிலைபெற்ற செய்தியைப் புலப்படுத்துவனவாகும்.

திங்கள் : 'திங்களைப் போற்றுதும்' எனக் காப்பியத்தைத் தொடங்கும் பொழுதே திங்களைத் தெய்வமாகக் கொண்டு அடிகள் போற்றுதலாலும், நிலாக்கோட்டம் என்ற பெயரால் சந்திரனுக்குரிய கோயில் புகார் நகரத் துண்மையை அடிகள் விளக்குதலாலும், பெரியோனாகிய இறைவன் இமையவர் ஏத்த அழகொடு முடித்த அருமை யுடையது பிறையெனக் குறித்தலாலும், மகளிர் பிறைதொழுதலாகிய வழக்கம் உள்ளமையானும் திங்கள் வணக்கம் தமிழ்நாட்டில் பண்டுதொட்டு நிலவியிருந்தமை யுணரப்படும்.

## தீ வழிபாடு

மதுரை நகரத்தே கண்ணகியாரது ஏவலால் மாலையெரியங்கி வானவனாகிய தீக்கடவுள் தோன்றி, அந் நகரத்தில் வாழ்ந்த நல்லோரை விடுத்துத் தீயோரைச் சுட்ட திறத்தினை அடிகள் விளக்குவதாலும், சோழ நாட்டில் புகாரிலுள்ள கோயில்களில் நான்முகன் கூறிய வேத நெறிப்படி ஓமங்கள் நடந்தன என்றும், மங்கல மறையோர் வாழும் ஊர்களில் அரசனது வெற்றியுடனே மழைக்குக் கருப்பத்தைத் தோற்றுவிக்கும் அழலை வளர்க்கின்ற வேள்விச் சாலையிலுண்டான மறையோரால் உண்டாக்கப் பட்ட தேவருணாவின் ஆவி, மலைகளை மூடிய மேகத்தைப் போன்று மாடங்களை மூடி நிற்கும் என்றும் நாட்டுவளங் கூறுதலாலும், மாடலமறையோன் செங்குட்டுவனை நோக்கி

மறக்கள வேள்வி செய்யாது அறக்கள வேள்வியைச் செய்தல் வேண்டும் என அறிவுறுத்தலாலும், அக்காலத்து வேதநூல் முறைப்படி அழற்கடவுளைப் போற்றி வேள்வி செய்யும் வழக்கம் வேத நெறியாளர்பால் நிலைபெற்றிருந்தமை நன்கு புலனாகும்.

வசுக்கள் எண்மரும், அருக்கர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், மருத்துவர் இருவரும் ஆகிய முப்பத்து முக்கோடித் தேவர்களுக்கும், பதினெண்வகைப் பட்ட தெய்வ கணங்களுக்கும் புகார் நகரத்தே திருவிழா நடைபெற்றன என்றும் ஊர்ப்புறத்தே பாசண்டச் சாத்தனுக்குக் கோயில் அமைந்திருந்தது என்றும் சிலப்பதிகாரம் கூறும்.

### புறச்சமயங்கள்

காவிரிப்பூம்பட்டினத்தில் அருகர் பள்ளியும் புத்தர் பள்ளியும் இருந்தன. நிக்கந்தக் கோட்டம் என்பது அருகன் கோயில். கோவலன் புகார் நகரத்தை விட்டு மனைவியுடன் வைகறையில் புறப்பட்டு வந்தபொழுது ஐந்து கிளைகளை யுடைய அரசமரமாகிய மாபோதி நிழலில் எழுந்தருளிய புத்தன் அருளிச் செய்த ஆகமங்களை உணர்ந்த ஆகாய சாரிகள் மறைய இருந்து எல்லோர்க்கும் உண்மைப் பொருளை யுபதேசித்தற் பொருட்டு இந்திரனால் அமைக்கப்பட்ட புத்த விகாரங்கள் ஏழினையும் முறையே கண்டானென்றும், புலாலுணவைத் துறந்து பொய் கூறாமையாகிய விரதத்தோடு அழுக்காறு முதலிய குற்றங்களை நீக்கி ஐம்பொறிகளை அடக்கி மெய்ப்பொருள் உணர்ந்த பெரியோர் கூடிய ஸ்ரீகோயிலில் அருகர், சித்தர், உபாத்தியார், ஆசிரியர், சாதுக்கள் என்னும் பஞ்ச பரமேட்டிகள் நிலைபெற்ற ஐந்து சந்துங் கூடிய நடுவிடத்தே அமைந்த மன்றின் கண்ணே அசோகின் நிழலிலே விழாக் காலங்களில் ஆகாய சாரிகளாகிய சாரணர்கள் வருவார்க ளென்று சமணரில் இல்லறத்தாராகிய சாவகர்கள் இட்ட சந்திர காந்தக் கல்லாகிய சிலாவட்டத்தைக் கோவலன் தொழுது வலங்கொண்டான் என்றும், பின்னர்க் காவிரிக்

கரையில் ஒரு பொழிலகத்தே தங்கிய சமண சமயத் தவச் செல்வியாகிய கவுந்தியடிகளைக் கண்டு வணங்கி இவ்வம்மையார் கூறிய முறையிலே எவ்வுயிர்க்கும் தீங்கு நிகழாதபடியும், சமண சமய ஒழுக்கம் சிதையாதபடியும் அவ்வம்மையாரைத் துணையாகக் கொண்டு மதுரைக்குச் சென்றானென்றும், செல்லும் வழியில் கவுந்தியடிகள் உறையூரில் அருகனைத் துதித்து வழிபட்டாரென்றும் அங்கு வான்வழியே வந்த சாரணர் கவுந்திக்கு ஊழ்வினைத் திறத்தை யறிவுறுத்தினார்கள் என்றும், மதுரை நகரத்தே கோவலன் ஊழ்வினையால் கொல்லப்பட்டு இறந்த காலத்துக் கவுந்தி யடிகள் உண்ணாநோன்போடு உயிர் துறந்தாரென்றும் அடிகள் விரித்துரைத்துள்ளார்.

சமணமும், புத்தமும் தமிழ்நாட்டில் தோன்றிய மதங்களல்ல. வைதிக நெறியிற் காணப்பட்ட வழுக்களை நீக்குதற்பொருட்டு வடநாட்டில் தோன்றிய இவ்விரு சமயங்களும் கடைச்சங்க காலத்தின் பிற்பகுதியிலே தமிழ் நாட்டிற் பரவத் தொடங்கின. பத்துப்பாட்டில் மதுரைக் காஞ்சியில்தான் முதன் முதலாகச் சமண சமயத்தைப் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது. அதனை யடுத்துச் சமண சமயத்தைப் பற்றி விரிவாகக் கூறுவது இச்சிலப்பதிகாரந்தான். எனவே, இந்நூல் தோன்றிய காலத்துச் சமணசமயம் சோழநாட்டிலும் பாண்டி நாட்டிலும் நிலைபெறத் தொடங்கிய முறையினையும் அச்சமயத்தார் மக்களிடையே பரப்பிய அருளற நெறியாகிய சீவகாருண்ணிய ஒழுக்கம் ஊழ்வினை யுருவெடுத்து ஊட்டும் முறையாகிய அவர்தம் சமய உண்மைகளையும் கவுந்தியடிகள் வாழ்க்கை முறையிலும் கோவலன் கண்ணகி வாழ்க்கை முறைகளிலும் வைத்து இளங்கோவடிகள் உணர்த்துதலை நோக்குங்கால் அடிகள் சமண சமயச் சீலங்களிலே கொண்டுள்ள பெருமதிப்பு நன்கு விளங்கும். சமண சமயம் பற்றிய கருத்துக்களை விரித்துரைத்தாற் போலப் புத்த சமயக் கருத்துக்களைச் சிலப்பதிகாரம் விரித்துரையாமையை நினைக்குங்கால் இளங்கோவடிகள் காலத்துப் புத்த சமயம் தமிழகத்தில் நன்றாக வேரூன்றவில்லையென்பது விளங்கும்.

கோவலன் தீவினையாற் கொல்லப்பட்டு இறந்த கடுந்துயர் கேட்டுத் துயரமுற்றவர்களுள் கோவலன் தந்தை மாசாத்துவான் என்பான், தன் பெரும்பொருளைத் தானம் செய்து விட்டு இந்திரவிகாரமாகிய புத்தர் கோயிலை வணங்கித் துறவு மேற்கொண்டான் என்றும், கண்ணகியின் தந்தையாகிய மாநாய்கன் என்பான், தன் பொருளைத் தானம் செய்துவிட்டுச் சமண சமயத்தின் பகுதியாகிய ஆசீவக சமயத்தைச் சார்ந்து துறவு மேற்கொண்டான் என்றும் சிலப்பதிகாரம் கூறும். இக்குறிப்புக்களால் சமண புத்த சமயங்கள் தமிழ்நாட்டில் பரவி நிலைபெறத் தொடங்கிய காலம் இளங்கோவடிகள் வாழ்ந்த காலமேயென்பது நன்கு தெளியப்படும். சமண சமயத்தார் தமிழ் நாட்டில் தங்கள் சமயத்தைப் பரப்ப நேர்ந்த பொழுது அவர்கள் வருவதற்கு முன் இத்தமிழ் நாட்டிலே குடிபுகுந்து வேதநெறியைப் பரப்பிய வைதிகர் கொள்கையைச் சமயம் நேர்ந்த பொழுதெல்லாம் மறுத்துரைக்கத் தவறியதில்லை. இச்செய்தி கவுந்தியடிகள் மாங்காட்டு மறையோனை நோக்கி அவன் கூறிய தீர்த்தச் சிறப்பையும் தெய்வ வழிபாட்டையும் வன்கண்மையாக மறுத்துரைத்தமையாற் புலனாகும்.

இவ்வாறு வேதநெறிக்குத் தடையான புறச்சமயங்கள் தலையெடுத்த இக்காலத்தே வைதிக நெறியைப் பேணுதலையே தொழிலாகவுடைய வேதியர்கள் சோம்பி யிருந்துவிடவில்லை. அவர்கள், வட இமயம் முதல் தென் குமரி வரை தீர்த்த யாத்திரை சென்று நாட்டு மக்களையும் நாடாள் வேந்தரையும் கண்டு வேத நெறியினை விரித்துரைத்து அவர்களால் பெரிதும் ஆதரிக்கப்பெற்றுத் தமக்குரிய வேத வேள்விகளையும் நெகிழ விடாது நிலை நாட்டியுள்ளார்கள். இச்செய்தியினை மாடலன், மாங்காட்டு மறையோன், பராசுரன் என்னும் மறையவர்களின் செயல் மூலமாக இளங்கோவடிகள் தம் நூலில் விரிவாக விளக்கியுள்ளார்.

இந்த நாட்டில் புதிய புதிய சமயங்களை வரவேற்று ஆதரிக்கும் மக்களுக்குள் வணிகர் முதலிடம் பெற்றுள்ளனர். அவர்கள் கடல் கடந்து வெளி நாடெங்கும் சென்று பல சமய

மக்களோடும் அளவளாவி அவர்களோடு கொண்டும் கொடுத்தும் வாணிகம் செய்யும் இயல்புடையோராதலின் அவர்கள் எல்லாச் சமயங்களையும் ஆதரிக்குமுகத்தால் அவ்வச் சமய மக்களுடன் அன்பினாற் கலந்து உறவாடி யுள்ளனர்.

இச்செய்தியைக் காவிரிப்பூம் பட்டினத்து வணிக னாகிய கோவலன் குடும்பத்தில் வைத்து இளங்கோவடிகள் தெளிவுபடுத்துகின்றார். கோவலன், பெயரால் திருமால் சமயத்தவன். கொள்கையால் சாவகநோன்பி (சமணரில் இல்லறத்தான்). வேதியர்களுக்குப் பொன்னும் பொருளும் தந்து ஆதரித்தமையால் வைதிக சமயத்தில் ஈடுபாடுடையவ னாய்த் தோன்றுகின்றான். கொற்றவை மந்திரத்தைச் செபிக்கும் இயல்பினால் சிவசமயத் தொடர்புடையவனாகக் காணப்படுகின்றான்.

கோவலன் கொலையுண்டமைக்கு ஆற்றாது கண்ணகியின் தந்தை மாநாய்கன் ஆசீவகமாகிய சமண சமயத்தைச் சார்கின்றான். கோவலன் தந்தை மாசாத்துவான் புத்த சமயத்தைச் சார்கின்றான். கோவலன் காதற்கிழத்தி யாகிய மாதவியும் அவள் மகள் மணிமேகலையும் புத்த சமயத்தைச் சார்கின்றனர். இச்செய்திகள் யாவும் வணிக குடும்பத்தில் அக்காலத்தமைந்த சமயவுரிமையை நன்கு புலப்படுத்துகின்றன.

இவ்வாறு தமிழகத்தே பல்வகைச் சமயங்கள் நிலவினவாயினும், தமிழ் வேந்தர்கள்மட்டும் பிறவாயாக்கைப் பெரியோனாகிய இறைவனை வழிபடும் உறுதியில் தவறாது, ஏனைச் சமயங்களையும் நடுநிலையில் நின்று ஆதரித்து வந்துள்ளார்கள். ஆனேறுயர்த்தோன் அருளால் சேரர் குடியில் தோன்றிய செங்குட்டுவனுக்குத் தம்பியாகிய இளங்கோவடிகள் தம் தெய்வக் கொள்கையில் சிறிதும் பிறழாத உள்ளமுடையவராய்ச் சமயவாதிகள் கருத்தின்வழிச் செல்லாது தம் காலத்தே நிலவிய உலகியல் வாழ்க்கையை உள்ளவாறு எடுத்துரைத்துள்ளார். அதனால் எல்லாச் சமயத்தவராலும் தம் தம் சமயத்தவரெனப் பாராட்டிப்

போற்றும் ஆசிரியர் திருவள்ளுவரைப் போன்று சமயப் பொது நோக்குடையவராகத் திகழ்கின்றார்.

அரச நீதியில் தவறியவர்களை அறக்கடவுள் வருத்து மென்பதும், புகழமைந்த பத்தினிப் பெண்களை மக்களே யன்றித் தேவரும் போற்றுவர் என்பதும், ஒருவன் ஒரு பிறப்பிற் செய்த வினைப்பயன் அவனை நிழல் போல் தொடர்ந்து வந்து மறுபிறவியிலும் வருத்துமென்பதும் ஆகிய இம்மூன்று உண்மைகளையும் கருவாகக் கொண்டு இந்நூல் இயற்றப்பட்டுள்ளது. இந்நூலின் உறுதிப் பொருளாகிய இம்மூன்று பொருள்களிலும் 'புகழமைந்த பத்தினியை மக்களே யன்றித் தேவரும் போற்றுவர்' என்ற கருத்தே நடுநாயகமாக ஆசிரியரால் எடுத்துரைக்கப் பெறுகிறது. எனவே பத்தினிப் பெண்டிரைத் தம் தெய்வமாகக் கொண்டு வழிபடும் வழிபாட்டு முறையினைப் பரப்புதற்குத் தோன்றிய நூலே இச்சிலப்பதிகாரம் என்பது பெறப்படும்.

மதுரை நகரத்திற்குப் புறப்பட்டுச் செல்லும் கோவலனும் கண்ணகியும் கவுந்தியடிகளுடன் வேட்டுவர் வாழும் சிற்றூரிலே கொற்றவை கோயிலில் தங்கி யிருக்கிறார்கள். அப்பொழுது அவ்வூரில் கொற்றவைக்குத் திருவிழா நடைபெறுகிறது. அவ்விழாவிலே கொற்றவை கோலங்கொண்டு நின்ற வேட்டுவப் பெண்ணாகிய சாலினியின்மேல் அத்தெய்வம் ஆவேசித்து, மலர் போலும் பாதங்கள் வழிநடையால் தளர்ந்து வருந்த, அவ்வருத்தம் தீரும்படிக் கணவனுடனே இருந்த கண்ணகியைப்பார்த்து, 'இங்கிருக்கின்ற இவள் கொங்குநாட்டினை ஆளும் செல்வி; குடநாட்டினை ஆளும் பாவை; தென்றமிழ் நாடாகிய பெண் செய்த தவப்பயனால் முளைத்த கொழுந்து போல்வாள். இவ்வுலகிற்கு முழு மாணிக்கம் போன்று, உயர்ச்சி பெற்ற பெண்ணுருக் கொண்டதோர் திருமணி' எனப் பாராட்டிப் போற்றுகின்றது.

> "கணவனோ டிருந்த மணமலி கூந்தலை
> இவளோ, கொங்கச் செல்வி குடமலை யாட்டி
> தென்றமிழ்ப் பாவை செய்ததவக் கொழுந்து
> ஒருமா மணியா யுலகிற் கோங்கிய

திருமா மணியெனத் தெய்வமுற் றுரைப்ப"

எனவரும் தொடரில் தெய்வத்தால் போற்றப்படும் சிறப்பு கண்ணகியார்பால் அமைந்திருத்தலை அடிகள் விளக்கினமை காணலாம். வீட்டைவிட்டுப் புறப்படாத மெல்லிய இயல்பினையுடைய கண்ணகியார், தம் கணவன் கோவலனோடு மதுரைக்குச் சென்ற காலத்து, ஞாயிற்றின் கொடிய வெம்மையினால் துன்பமுற்ற தம் கணவன் பொருட்டுத் தாம் கண்டார் நடுங்கத் தக்க துன்பத்தை யடைந்து, நாப்புலர வாட்டமுற்று வழிநடைத் துன்பத்தைச் சிறிதும் நினையாது மகளிர்க்கு இன்றியமையாத கற்பாகிய கடமையினை மேற்கொண்ட திறத்தை, அவர்களுடன் துணையாக வந்த சமணத் துறவியாராகிய கவுந்தியடிகள் நேரிற் கண்டவராதலின், கற்புக்கடம் பூண்ட இக்கண்ணகி யாகிய தெய்வத்தைத் தவிர வேறு தெய்வத்தைத் தாம் காணாமையினை மாதிரியாகிய ஆயர்மகளிடம் எடுத்துரைக் கின்றார். அப்பகுதி,

"என்னொடு போந்த இளங்கொடி நங்கைதன்
வண்ணச் சீறடி மண்மக ளறிந்திலள்
கடுங்கதிர் வெம்மையிற் காதலன் றனக்கு
நடுங்குதுய ரெய்தி நாப்புலர வாடித்
தன்றுயர் காணாத் தகைசால் பூங்கொடி
இன்துணை மகளிர்க்கு இன்றி யமையாக்
கற்புக் கடம்பூண்டஇத் தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண் டிலமால்"

என்பதாகும். இதனால் துறவிகளாலும் போற்றத்தகும் சிறப்பு கற்புடைத் தெய்வமாகிய கண்ணகியின்பால் அமைந்த இயல்பினை அடிகள் நன்கு விளக்கினமை காணலாம்.

பிறதெய்வம் தொழாது தன் தெய்வமாகிய கணவனையே தொழுது துயிலெழும் இயல்புடைய கற்புடைய மகள் பெய்யென்று சொல்லிய அளவிலே மழை பெய்யும் என்பதையும், இங்ஙனம் கணவனைப் பேணி வழிபடும் மகளிர் இவ்வியல்பினைத் தமக்குரிய கடமையாகப் பெறுவராயின், அவர்கள் தேவர்கள் வாழும் உலகிலே

அவர்களாற் பாராட்டிப் போற்றப் பெறுவார்கள் என்பதனையும்,

> "தெய்வந்த தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யு மழை" (திருக். 55)

> "பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
> புத்தேளிர் வாழும் உலகு" (திருக்.58)

எனவரும் குறள்களால் தெய்வப்புலவர் அறிவுறுத்துகின்றார். திருவள்ளுவர், வாழ்க்கைத் துணைநலம் என்ற அதிகாரத்திற் கூறிய கற்பென்னும் திண்மையுடைய மகளிர்க்குரிய நற்குண நற்செய்கைகள் யாவும் கண்ணகியார்பால் நன்கமைந்த திறத்தைச் சிலப்பதிகாரம் பலவிடங்களிலும் விரித்துரைக் கின்றது.

தேவந்தியென்னும் பார்ப்பனத் தோழி கணவனைப் பிரிந்து வருந்திய கண்ணகியை அடைந்து, 'சோமகுண்டம் சூரியகுண்டம் என்னும் தீர்த்தங்களில் மூழ்கிக் காமவேள் கோயிலைத் தொழுதவர்கள் இப்பிறப்பில் தம் கணவரோடு பிரியா வாழ்க்கையைப் பெறுவதோடு மறுபிறப்பிற் போக பூமியிலும் போய் இன்புறுவார்கள். ஆதலால் நாம் ஒருநாள் அத்தீர்த்தங்களில் ஆடுவோம்' என்று கூற அது கேட்ட கண்ணகியார், 'அது பெருமையுடைய செயலன்று' என மறுத்துக் கூறுகின்றார். இவ்வாறு கண்ணகியார் தம் கணவனைத் தவிர வேறு தெய்வம் தொழா உள்ளத்து உறுதியினால் அழற்கடவுளும், மதுராபதியும், வானோரும் வணங்கும் சிறப்புற்ற திறத்தை,

> "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
> தெய்வந் தொழுந்தகைமை திண்ணிதாற் - றெய்வமாய்
> மண்ணக மாதர்க் கணியாய் கண்ணகி
> விண்ணகமா தர்க்கு விருந்து" (கட்டுரை காதை)

என்னும் வெண்பாவினால் அடிகள் வற்புறுத்துரைக்கின்றார்.

தம்நாட்டின் வளர்ச்சி குறித்தும் தம்மையாதரித்த வேந்தர்க்குச் செஞ்சோற்றுக் கடன் கழித்தற் பொருட்டும்

போர்க்களத்தே பகைவரொடு பொருது வெற்றி தந்து உயிர் துறந்த தறுகண் வீரர்களின் புகழைக் கல்லிலே எழுதி, அக்கல்லை நட்டுத் தெய்வமாக வழிபடும் வழக்கம் நம் தமிழ்நாட்டில் தொல்காப்பியர் காலத்திற்கு முற்பட்டு நிலவிவரும் பழைய வழக்கமாகும். இத்தகைய நடுகல் வழிபாடு சங்கத்தொகை நூல்களிற் பலவிடங்களிலும் குறிப்பிடப்படுகின்றது. போர்க்களத்தில் இறந்த வீரரைத் தெய்வமாக நிறுத்தற்குரிய கல்லினைக் காணுதலும், அவ்வாறு காணப்பட்ட கல்லைக் கொள்ளுதலும், அதனை நீரில் அமிழ்த்தித் தூய்மை செய்தலும், அதனைக் குறித்த இடத்தில் நடுதலும், அவ்வாறு நாட்டிய கல்லிற்குக் கோயிலெடுத்துப் படைத்து வணங்குதலும், அக்கல்லில் உறையுந் தெய்வத்தின் புகழ் கூறி வாழ்த்துதலும் என ஆறு பகுதியாக இவ்வீரர் வழிபாடு நிகழுமென்பதனை,

> "காட்சி கால்கோல் நீர்ப்படை நடுதல்
> சீர்த்தகு மரபிற் பெரும்படை வாழ்த்தலென்று
> இருமூன்று மரபிற் கல்"

எனவரும் தொல்காப்பியச் சூத்திரத்தால் அறியலாம்.

இவ்வாறு தறுகண்மை மிக்க வீரர்களுக்குச் செய்யும் இவ்வழிபாட்டினைக் கற்பென்னும் திண்மையால் மன்னவன் முன் வழக்குரைத்து வென்று கணவற்குற்ற பழிதுடைத்து மதுரையைத் தீக்கிரையாக்கிய வீரபத்தினியாகிய கண்ணகியார்க்கும் செய்யவேண்டுமென எண்ணியவர்கள் சேரவேந்தனாகிய செங்குட்டுவனும் அவன் மனைவி வேண்மாளுமாவார். அவர்களது நல்லுளத்தால் தொடங்கிய இப் பத்தினி வழிபாடு சேரநாட்டிலேயன்றித் தமிழ்நாட்டின் ஏனைய பகுதிகளிலும் மாளுவ நாட்டிலும் கடல்சூழ்ந்த இலங்கையிலும் பரவி நிலைபெற்ற வரலாற்றினை இளங்கோவடிகள் தம் நூலில் திறம்பட விளக்குகின்றார்.

இதுகாறும் கூறியவற்றால் கற்புடையமகளிரைத் தெய்வமாக எண்ணிக் கோயிலெடுத்து வழிபடும் வழக்கம் இளங்கோவடிகள் காலத்திலேதான் சிறப்பு முறையில் நிலைநாட்டப்பட்டதென்பதும், கண்ணகியார்க்குக்

கற்கோயிலை அமைத்த செங்குட்டுவனாகிய தம் தமையன் கருத்தினைப் பின்பற்றி அவ்வம்மையார்க்குச் சொற்கோயிலமைத்து வழிபட்டவர் இளங்கோவடிகள் என்பதும் நன்கு விளங்கும்.

அடிகள் தாம் சொல்லக் கருதிய பொருளைக் கற்போர் மனத்தில் நன்கு பதியச் செய்தல் வேண்டிக் கூறிய தெய்வத்தின் ஆவேச மொழிகளும் தெய்வத் தோற்றங்களும் பண்டைப்பிறப்பின் நிகழ்ச்சிகளும் அற்புதங்கள் சிலவும் இளங்கோவடிகள் காலத்தும் மக்களிடையே நிலை பெற்றிருந்த தெய்வ ஆவேசத்தின் நம்பிக்கையைப் புலப்படுத்துவனவாகும்.

தீக்கடவுள் பார்ப்பனக் கோலத்துடன் கண்ணகி முன் தோன்றினான் எனவும், பார்ப்பனப்பூதம், அரசபூதம், வணிகப்பூதம், வேளாண்பூதம் ஆகிய நால்வகை வருணப் பூதங்களும் மதுரை நகரத்தே இருந்தன எனவும், வணிகரை மன்னர் பின்னோர் எனவும் சிலப்பதிகாரம் குறிப்பிடுதலால், அக்காலத்து வேதநெறியைப் பின்பற்றிய நால்வகைச் சாதி வேறுபாடு இத்தமிழகத்தே புகுந்து நிலைபெறத் தொடங்கினமை நன்கு புலனாம். மேற்குறித்த நால்வகைப் பூதங்களைப் பற்றிக் கூறிய வருணனைப் பகுதிகள் சிலப்பதிகார ஏடுகள் எல்லாவற்றிலும் காணப்படவில்லை. கவுந்தியடிகள் மாதரியை நோக்கித் தானத்தின் பயனைப் கூறுமிடத்தும் மதுராபதி என்னும் தெய்வம் கண்ணகியின் முன்தோன்றிக் கோவலன் கொலையுண்டிறந்தமைக்குக் காரணமாகிய ஊழ்வினையை எடுத்துரைக்குமிடத்தும் மறுபிறப்பின் உண்மையினை இளங்கோவடிகள் வற்புறுத்துகின்றார்.

மதுரை நகரின் காவற்றெய்வமாகிய மதுராபதியைக் கொற்றவையின் வடிவுடையவளாக இளங்கோவடிகள் புனைந்துரைக்கின்றார். இதனால் ஒவ்வோர் ஊருக்கும் காவல் தெய்வமாகக் கொற்றவையின் உருவில் ஊர்காவல் தெய்வத்தைத் தமிழ் மக்கள் போற்றி வழிபட்டு வரும் வழக்கம் நன்கு புலனாகின்றது. இக்காலத்தும் சிற்றூர்கள்தோறும்

பிடாரி என்னும் எல்லைத்தெய்வம் வழிபடப் பெற்று வருகின்றமை இங்கு நினைத்தற்குரியதாகும்.

கோசல நாட்டு வேந்தனாகிய தயரதனும் அயோத்தி நகர மக்களும் அல்லலுற்று வருந்தத் திருமாலின் அவதாரமாகிய இராமபிரான் தம்பி இலக்குவனொடும் காடடைந்ததும், சீதையைப் பிரிந்து வருந்தியதும், இராவணனது இலங்கையை அழித்ததும் ஆகிய இராமாயணக் கதையையும்; கண்ணன் பாண்டவர் பொருட்டுத் துரியோதனன்பால் தூது சென்றது, கதிரவனை அழியால் மறைத்தது முதலிய பாரதக் கதையினையும், நளன் சூதாடி ஆட்சியையிழந்து மனைவியைப் பிரிந்து துன்புற்ற கதையினையும் இளங்கோவடிகள் தாம் இயற்றிய காப்பித்தியத்திற் குறிப்பிடுதலால் வடமொழியிலுள்ள புராண இதிகாசங்கள் இளங்கோவடிகள் காலத்தில் தமிழகத்திற் பரவி எல்லோராலும் பயிலப் பெற்றமை நன்கு தெளியப்படும்.

காவிரிப்பூம்பட்டினத்தில் சோமகுண்டம் சூரிய குண்டம் என்ற தீர்த்தங்களும், திருமாலிருஞ்சோலையாகிய அழகர்மலையில், புண்ணிய சரவணம், பவகாரணி, இட்டசித்தி என்னும் பெயருடைய பொய்கைகளும் சிறந்த பயனளிப்பனவாகக் கூறப்படுதலாலும், பாவந்தீரக் குமரியாடுதலும் கங்கையாடுதலும் ஆகிய செய்தி குறிப்பிடப் படுதலாலும், அக்காலத்தில் தீர்த்த யாத்திரையும், தெய்வ வழிபாடு கருதிய தலயாத்திரையும் சமய வொழுகலாற்றின் கூறுகளாக மக்களால் மேற்கொள்ளப்பெற்றன என்பது நன்கு புலனாகும்.

சமண சமயத்தினை மேற்கொண்ட கோவலன் தன் மகள் மணிமேகலைக்குப் பெயரிடும் நாளில் தானம்வாங்க வந்து தெருவே மதயானையால் வருத்தமுற்ற அந்தணனை யானையின் பிணிப்பினின்றும் மீட்டுக் காப்பாற்றிப் பொருள் அளித்தமையும் அறியாமையால் கீரிப்பிள்ளையைக் கொன்ற பார்ப்பனியின் பாவத்திற்குக் கழுவாய் செய்யப் பொருள் அளித்தமையும், செங்குட்டுவன் என்னும் வேந்தன் மாடல மறையோனுக்குத் தன் நிறையளவாகிய பொன்னினைத்

தானமாக்க் கொடுத்தலும் அக்காலத்துப் பொது மக்களும் வேந்தர்களும் நான்மறைவல்ல வேதியர்களை நன்கு மதித்துச் சிறப்பாக ஆதரித்தனர் என்பதனை நன்கு புலப்படுத்து வனவாகும்.

மண்ணுலக வேந்தன் முசுகுந்தன் பொருட்டு வானோர் தலைவன் இந்திரனால் அனுப்பப்பட்ட பூதம் காவிரிப்பூம்பட்டினத்தில் கோயில் கொண்டிருத்தலும், அப்பூதம் தீமைசெய்தோரை ஒறுத்தலும், மயன் என்னும் தெய்வத்தச்சன் மன்னர்க்குப் பட்டி மண்டபம் முதலிய நிருமித்துக் கொடுத்தலும், இந்திர விழாவைக் காண வித்தியாதரர்களும் தேவர்களும் காவிரிப்பூம்பட்டினத்திற்கு வந்து போதலும், அந்நகரத்திலுள்ள ஐவகை மன்றங்கள் தெய்வச் சிறப்புடையவாகத் திகழ்தலும் ஆகிய வியப்புடைய செய்திகளை இளங்கோவடிகள் தமது காப்பியத்திற் குறித்துள்ளார். இவற்றால் அக்கால மாந்தர்களுக்குத் தெய்வச் செயல்களில் நிரம்பிய ஈடுபாடுண்மையை இளங்கோவடிகள் விளக்கினாராவர்.

இளங்கோவடிகள் காலத்தே சிவன், திருமால், முருகன், கண்ணன், பலதேவன், அருகன், புத்தன் முதலிய தெய்வங்கள் பலவற்றுக்கும் நகர்தோறும் பெருங்கோயில் அமைத்து வழிபடும் வழக்கம் நிலைபெற்றிருந்தமை சிலப்பதிகாரத்தால் நன்குணரப்படும். இக்கோயில்கள் எல்லாவற்றுள்ளும் தலைமையும் சிறப்பும் உடையதாய் விளங்கியது சிவபெருமான் திருக்கோயிலே என்பதனை, ‘பிறவாயாக்கைப் பெரியோன் கோயிலும்’ என்று முதற்கண் வைத்துக் கூறுதலால் உய்த்துணரப்படும்.

வம்பப் பரத்தனும் பரத்தையும் கூடி எள்ளி நகையாடிய நிலையில் சமணத் துறவியாகிய கவுந்தியடிகள் அவ்விருவரையும் நரியாகித் திரியும்படி சபிக்கின்றார். அச்சாபம் பெற்ற இருவரும் நரியாகிக் கூக்குரலிடுகின்றனர். இச்செய்தியால் தவறு செய்தோரைச் சபிக்க வல்ல துறவிகளின் பேராற்றல் புலப்படுத்தப்படுகின்றது.

திங்கட் குலத்தவராகிய பாண்டியர்கள் மறைமுது

முதல்வனாகிய சிவபெருமானது திருவருள் வழியில் வந்தவர்கள் என்பது,

"மறைமுது முதல்வன் பின்னர் மேய
பொறையுயர் பொதியிற் பொருப்பன்"

எனவரும் தொடரால் உய்த்துணரப்படும். இத்தொடர்பு,

"தென்னவற் பெயரிய துன்னருந்துப்பிற்
றொன்முது கடவுட் பின்னர்மேய
வரைத்தாழருவிப் பொருப்பிற் பொருந" (மதுரைக்.)

எனவரும் மதுரைக்காஞ்சியிற் கூறப்பட்டமை முன்னர்க் குறிக்கப்பட்டது.

"வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி
திங்கட் செல்வன் திருக்குலம் விளங்கச்
செங்க ணாயிரத்தோன் திறல்விளங் காரம்
பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி
முடிவளை யுடைத்தோன் முதல்வன் சென்னியென்
றிடியுடைப் பெருமழை எய்தாது ஏகப்
பிழையா விளையுட் பெருவளஞ் சுரப்ப
மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்க"

(சிலப். காடுகாண். 18-29)

என்று கூறி மாங்காட்டு மறையோன் பாண்டியனை வாழ்த்துகின்றான். இவ்வாழ்த்தின்கண், திங்கட் குலத்தினனாகிய பாண்டியன் முன்னொரு காலத்தில் வேலால் கடலை வென்றதும், ஆயிரங்கண்ணானாகிய இந்திரன் வஞ்சனையால் அணிவித்த பெரிய ஆரத்தினைத் தாங்கிய பெருமையும், வளையினால் எறிந்து இந்திரனுடைய மணி முடியை வீழ்த்தியதும், பாண்டியனுக்குத் தோற்ற இந்திரன் தன் ஊர்தியாகிய மேகத்தைப் பாண்டிய நாட்டிற் பெய்யாதபடி

தடுத்தலும், அந்நிலையிற் பாண்டியன் மேகத்தை விலங்கிட்டுச் சிறையிலடைத்ததும் ஆகிய செய்திகள் குறிக்கப் பெற்றுள்ளன. பழைய வரலாறுகளாகிய இவையனைத்தும் திருவிளையாடற் புராணத்தில் இடம்பெற்றுள்ளமை திங்கட்குலத்திற் பிறந்த பாண்டியர்கள் சிவபெருமானுடைய திருவருள் வழியில் வந்தவர்கள் என்னும் புராணத் தொடர்பினை வற்புறுத்தல் காணலாம்.

கண்ணகியார் பாண்டியன் அவையில் வழக்கு உரைக்குமிடத்துத் தான் பிறந்த சோழநாட்டினையாண்ட வேந்தர்களின் நீதிமுறையினை எடுத்துரைக்கும் நிலையில் சோழ மன்னன் தன்னை அடைக்கலம் புகுந்த புறாவினைக் காப்பாற்றுதற்பொருட்டும் அதனைத் துரத்திவந்த பருந்தின் பசியினைத் தீர்த்தற்பொருட்டும் தன்னுடம்பின் தசையினை அரிந்து கொடுத்த இரக்கச் செயலையும், தன்மகனது தேர்க்காலில் அரைபட்டிறந்த இளங்கன்றின் பிரிவாற்றாது கண்ணீர்விட்டுக் கதறிய தாய்ப்பசுவின் துயரத்தைக் கண்டு பொறாது, தன்னுடைய ஒருமைந்தனையே தேர்க்காலிற் கிடத்தி முறைசெய்த சோழமன்னனது நீதிமுறையையும் பாராட்டிக் கூறுவதாக இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார். இவ்வாறே தம் குடியிற் பழையோராகிய சேரமன்னர் புகழ் பெற்ற செய்திகளையும் இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார்.

வேண்டுதல் வேண்டாமையிலாத அரசத்துறவி இளங்கோவடிகள் அவர் தம் காலத்தில் தமிழகத்தில் நிலவிய பல சமயச் சார்புடைய தெய்வவழிபாட்டு முறைகளை யெல்லாம் தாம் இயற்றிய முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்தில் நடு நிலை பிறழாமல் எடுத்துரைத் துள்ளார். எனவே கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகிய இளங்கோவடிகளால் இயற்றப்பெற்ற சிலப்பதிகாரம் அவர்காலத் தமிழ்நாட்டின் சமய நிலையை உள்ளவாறு உணர்தற்குத் துணைபுரியும் எனக் கொள்ளலாம்.



# மணிமேகலையிற் காணப்படும் தெய்வ வழிபாடுகளும் சிவநெறிக் கொள்கையும்

முத்தமிழ்க் காப்பியமாகிய சிலப்பதிகாரத்துடன் வரலாற்று நிகழ்ச்சியாலும் காப்பியத் தலைவர்களின் உறவாலும் இடவகையாலும் காலத்தாலும் மிக நெருங்கிய தொடர்புடையது, மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் இயற்றிய மணிமேகலை யென்னும் செந்தமிழ்க் காப்பியமாகும். சோழநாட்டின் கடற்றுறைப்பட்டினமாகிய புகார் நகரத்தில் மாசாத்துவான் என்னும் வணிகனுடைய மைந்தன் கோவலன் என்பானுக்கு, ஆடல் பாடல் அழகு என்னுந்திறத்தாற் சிறந்த நாடகக் கணிகைபாற் பிறந்த மகள் மணிமேகலை. இவள் தன் தந்தை கோவலன் மதுரையிற் கொலையுண்டிறந்த துயரச் செய்தி கேட்டு வருந்தித் தன் தாய் மாதவியுடன் புத்த சமயத்தைச் சார்ந்து இளம் பருவத்திலேயே துறவு பூண்ட வரலாற்றை விரித்துரைப்பது சாத்தனார் இயற்றிய செந்தமிழ்க் காப்பியமாதலின் இது 'மணிமேகலை துறவு' என்னும் பெயருடையதாயிற்று.

மணிமேகலை துறவு என்னும் இப்பொருட்டொடர் நிலைச்செய்யுள் பரந்த மொழியால் அடிநிமிர்ந்தொழுகிய தோல் என்னும் வனப்பினையுடையது, முப்பது அகவற் பாக்களால் இயன்றது, ஒவ்வோர் அகவலும் னகரமெய் யீற்றால் முடிதலின் இயைபு எனப்படும் வனப்புக்கு இக் காப்பியம் இலக்கியமாக அமைந்துள்ளது. கோவலன் மகள் மணிமேகலையைப் பாட்டுடைத் தலைவியாகக் கொண்டு அவளது வரலாற்றின் வழிப் புத்தசமய நல்லறங்களையும் ஒழுகலாறுகளையும் புத்த சமயத் தத்துவங்களையும் விரித்து விளக்கும் புத்த சமயக் காப்பியமாகவே சாத்தனார் இதனை இயற்றியுள்ளார். இக் காப்பிய நிகழ்ச்சிகளிற் பெரும்பாலன தமிழகத்திற் சோணாட்டின் தலைநகராகிய காவிரிப்பூம் பட்டினத்திலும் சேரர்க்குரிய வஞ்சி நகரத்திலும் சோழர்க்

குரிய காஞ்சியிலும் நிகழ்ந்தன. ஆதலின் மணிமேகலை பிறந்து வளர்ந்து துறவடைந்த தமிழகத்தைச் சொல்லோவியஞ் செய்து காட்டும் முறையில் தமிழகத்தில் நிலவிய பல்வேறு தெய்வ வழிபாடுகளையும் தம் காலத்தில் வாழ்ந்த பல்வேறு சமய வாதிகளையும் தம் காப்பியத்திற் குறித்துச் செல்லுதல் இக்காப்பிய ஆசிரியராகிய சாத்தனாரது கடமையாயிற்று. அம்முறையில் இக் காப்பியத்தில் சிவன், முருகன், திருமால், குமரி, கொற்றவை, இந்திரன் முதலிய தொன்மைத் தெய்வ வழிபாடுகளும், மணிமேகலா தெய்வம், சதுக்கப்பூதம், சம்பாபதி, சிந்தா தேவி, தீவதிலகை, கந்திற்பாவை முதலிய பிற தெய்வங்களின் வழிபாடுகளும் இடம் பெற்றுள்ளன.

தமிழகத்தில் நெடுங்காலமாக நிலவிவரும் சைவம் வைணவம் ஆகிய தொன்மைச் சமய நூல்களை விரித்துரைக்கும் சைவ வைணவ சமயவாதிகளுடன் வேத நெறியினைப் பின்பற்றியொழுகும் அளவைவாதி, பிரமவாதி ஆகியோர் கொள்கைகளும் தெய்வங் கொள்கையினை யுடன்படாத ஆசீவகவாதி, நிகண்டவாதி, சாங்கியவாதி, வைசேடிகவாதி, பூதவாதியென்னும் ஐவகைச் சமயவாதி களின் தத்துவக் கொள்கைகளும் பிறர் மதங்களைப் பூர்வ பக்கமாக எடுத்துரைக்கும் முறையில் இக்காப்பியத்தில் மணிமேகலை சமயக்கணக்கர் தம் திறங்கேட்ட காதையில் விரித்துரைக்கப் பெற்றுள்ளன. பிறர் மதம் களைந்து தம் மதத்தினை (புத்த சமயத் தத்துவத்தினை) நிறுவும் நிலையில் அமைந்தது, மணிமேகலை தவத்திறம் பூண்டு தருமங்கேட்ட காதையாகும். இதன்கண் பௌத்த சமயத்தார் தம் கொள்கையினை நிறுவுதற்கு மேற்கொண்ட தருக்கநெறி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. பௌத்த சமய வுண்மைகளைத் தெளிவாக விளக்கும் முறையில் அமைந்தது இக் காப்பியத்தின் இறுதிக் கண்ணதாகிய 'பவத்திறமறு கெனப்பாவை நோற்ற காதை'யாகும்.

## மணிமேகலைக் காலத்துச் சமயவாதிகள்

மெய்ப்பொருள்களையுணர்த்துவனவாகிய நூல்கள்,

உலகியல், தத்துவம், முத்தி நிலை என்னும் இத்திறங்களைத் தங்கள் தங்கள் இயல்பினால் எடுத்துக்காட்டி மக்களை நன்னெறிப் படுத்தவல்ல சமயக்கணக்கராகிய சான்றோர்கள் காவிரிப்பூம்பட்டினம் முதலிய தமிழகத் தலைநகரங்களில் நிகழும் இந்திரவிழா முதலிய திருவிழா நிகழ்ச்சிகளிற் கலந்து கொண்டு அறிஞர் பலரும் குழுமிய பட்டி மண்டபத்தில் அமர்ந்து தத்தம் சமயவுண்மைகளைப் பலரும் தெளிவாக உணர்ந்து கொள்ளும்படி விளங்க விரித்துரைத்தனர். இச்செய்தி,

> "மெய்த்திறம், வழக்கு, நன்பொருள், வீடுஎனும்
> இத்திறம் தத்தம் இயல்பினிற் காட்டும்
> சமயக் கணக்கரும்"
>
> (மணிமேகலை, விழாவறைகாதை, 11-13)

எனவும்,

> "ஒட்டிய சமயத்துற பொருள் வாதிகள்
> பட்டிமண் டபத்துப் பாங்கறிந் தேறுமின்" (மேலது, 60-61)

எனவும் வரும் மணிமேகலைத் தொடர்களால் இனிது புலனாம்.

## தமிழகத்திற் சிவவழிபாட்டின் முதன்மை

சங்க காலத்தில் தமிழகத்தில் நிலவிய தெய்வ வழிபாடுகள் எல்லாவற்றுள்ளும் தலைமையும் சிறப்பும் வாய்ந்தது சிவவழிபாடு ஒன்றுமே என்பது முன்னர் விளக்கப் பெற்றது. சிலப்பதிகாரம் மணிமேகலை தோன்றிய காப்பிய காலத்தும் இந்நிலை தொடர்ந்து வந்துளது. இந்திர விழாவினைப் புகார் நகரமக்களுக்கு முரசறைந்து அறிவிக்கும் முரசறைவோன் கூறுவதாக அமைந்தது,

> "நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலாப்
> பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக
> வேறுவேறு சிறப்பின் வேறு வேறு செய்வினை
> ஆறறிமரபின் அறிந்தோர் செய்யுமின்"
>
> (மணிமேகலை 1. 54-57)

எனவரும் விழாவறை காதைத் தொடராகும். (மலைமகளா ராகிய உமாதேவியார் கண்புதைத்து விளையாடிய பொழுது உலகெலாம் இருள் மூடிய நிலையில்) "நெற்றியிலே புறப்பட்டுத் தோன்றிய நெற்றிக் கண்ணினையுடைய சிவபெருமான் முதலாகக் காவிரிப் பூம்பட்டினத்திலுள்ள சதுக்கப்பூதம் இறுதியாக வேறு வேறு விழாச் சிறப்பினையும் வேறு வேறு வழிபாட்டு முறையினையும் செய்யும் நெறியினையறிந்த பூசகர்கள் செய்வீர்களாக" என்பது இத்தொடரின் பொருளாகும். எனவே இத்தொடர் மணிமேகலைக் காப்பியம் இயற்றப்பெற்ற காலத்தில் காவிரிப்பூம்பட்டினம் முதலாகத் தமிழகத்திலுள்ள பேரூர்களிலும் சிற்றூர்களிலும் நிலவிய தெய்வவழிபாடுகள் எல்லாவற்றுள்ளும் நுதல்விழி நாட்டத்து இறைவனாகிய சிவபெருமானைப் பரவிப் போற்றும் சிவவழிபாடே முதன்மை பெற்று விளங்கிய திறத்தை நன்கு புலப்படுத்துதல் காணலாம்.

மதுரை நகரத்திலேயமைந்துள்ள திருக்கோயில்களிற் காலைப் பொழுதில் வழிபாடு நிகழ்ந்த திறத்தைக் கூறும் இளங்கோவடிகள்,

> **"நுதல்விழி நாட்டத் திறையோன் கோயிலும்**
> **உவணச்சேவல் உயர்த்தோன் நியமமும்**
> **மேழிவலனுயர்த்த வெள்ளை நகரமும்**
> **கோழிச் சேவற்கொடியோன் கோட்டமும்**
> **அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளியும்**
> **மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்**
> **காலைமுரசம் கனைகுரல் இயம்ப"**
>
> (சிலப். ஊர்காண் 7-12)

என நுதல்விழிநாட்டத் திறையோனாகிய சிவபெருமான் திருக்கோயிலையே முதன்மையுடையதாகக் குறித்துள்ளமை இங்கு ஒப்புநோக்கத்தகுவதாகும்.

## சாத்தனார் காலத் தமிழ் மக்களின் சமயப் பொதுநோக்கு

தமிழகத்தில் வாழ்ந்த சமயவாதிகள் பலரும் தத்தம்

சமய நுண்பொருள்களை உறுதிப்படுத்திக் கூறுந்திறத்தில் ஏனைய சமயவாதிகளுடன் உறழ்ந்து (வாதிட்டு) ஏதுவும் எடுத்துக்காட்டும் தந்து தத்தம் சமயமே அமைவுடையதாக நிலைநிறுத்தும் தருக்கநெறிமுறையும் சொல்வன்மையும் உடையவர்களாக விளங்கினார்கள் என்பதனையும் அன்னோர் பட்டிமண்டபத்து ஏறியமர்ந்து பலவாறாக விரித்துக் கூறுவனவற்றையெல்லாம் அமைதியாகவிருந்து கேட்டு மகிழும் நிலையில், 'எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு' எனத் தெய்வப்புலவர் அறிவுறுத்திய வண்ணம் பல சமயத் தத்துவநுட்பங்களையும் இகலின்றிக் கேட்டுணரும் மெய்யுணர்வு வேட்கையுடையராய் விளங்கினார்கள் என்பதனையும் நன்கு புலப்படுத்தும் நிலையில் அமைந்தது,

> "ஒட்டிய சமயத்துறு பொருள் வாதிகள்
> பட்டி மண்டபத்துப் பாங்கறிந் தேறுமின்
> பற்றாமாக்கள் தம்முடனாயினும்
> செற்றமுங்கலாமுஞ் செய்யாதகலுமின்" (மணி. க. 90-93)

எனவரும் விழாவறை காதைப் பகுதியாகும்.

மணிமேகலையாசிரியர் சாத்தனார் தம் காப்பியத்துள் புத்த சமய வுண்மைகளையே விரித்துரைக்கும் குறிக்கோள் உடையவராயினும் தமிழ் நாட்டு நிகழ்ச்சிகளையே கருவாகக் கொண்டு தம்மால் இயற்றப்பெறும்தமிழ்க்காப்பியம் தமிழகத்திற் பெரும்பான்மையினராகவுள்ள சைவர் வைணவர் முதலிய ஏனைச் சமயத்தோராலும் போற்றிப் பயிலப்பெறுதல் வேண்டும் என்னும் விருப்புடையராய்த் தமிழகத்தில் நெடுங்காலமாக நிலைபெற்று வழங்கும் சிவன், திருமால், முருகன், நான்முகன், கொற்றவை, திருமகள், முதலிய தெய்வங்களைப் பற்றிய செய்திகளையும் வழிபாடு களையும் ஆங்காங்கே குறித்துள்ளமை காணலாம்.

## ஆலமர் செல்வன் மகன் (முருகன்)

ஆலமரநிழலில் அமர்ந்திருந்து முனிவர்க்கு அருமறைப் பொருளை யறிவுறுத்திய முதல்வன்

சிவபெருமான் என்பதும் அவ்விறைவனுக்கு மகனாகத் தோன்றியருளியவன் முருகப் பெருமான் என்பதும் முன்னர்க் கூறப்பட்டன. மணிமேகலையாசிரியர் சாத்தனாரும் இக் குறிப்பினைத் தம் காப்பியத்தில் எடுத்துரைத்துள்ளார். மணிமேகலையும் சுதமதியும் பூக்கொய்தற்பொருட்டு மலர்வனத்திற்குச் செல்லும்போது புகார் நகரவீதியிற் கண்ட நிகழ்ச்சிகளாகச் சிலவற்றை ஆசிரியர் புனைந்து கூறியுள்ளார். அவற்றுள் ஒன்று,

> "தளர்நடை தாங்காக் கிளர்பூட் புதல்வரைப்
> பொலந்தேர் மீமிசைப் புகர்முக வேழத்து
> இலங்குதொடி நல்லார் சிலர்நின்றேற்றி
> ஆலமர் செல்வன் மகன் விழாக் கால்கோள்
> காண்மினோவென்று கண்டுநிற்குநரும்"
>
> (மணிமேகலை 3. 141-145)

என்பதாகும். மகளிர் சிலர் தளர்நடையினராய்ப் பொறுக்க லாற்றாத அணிகலன்கள் அணியப்பெற்ற இளம் புதல்வர்களைப் பொன்னாலியன்ற தேர்மீதமைக்கப்பட்ட யானையின் மேல் அமரச்செய்து 'ஆலின் கீழமர்ந்த சிவபெருமானுக்கு மைந்தனாகிய முருகவேளின் விழாத் தொடங்கப் பெற்றதனைக் காண்பீராக' என்று சொல்ல, அவ்வழகிய காட்சியை மற்றையோர் கண்டு மகிழ்ந்து நிற்குந் தோற்றத்தை இத்தொடர் புலப்படுத்துவதாகும். சிவபெருமான் ஆலநீழலில் அமர்ந்தருளி முனிவர் பெரு மக்களுக்கு அருமறைப் பொருள்களை உபதேசித்தருளிய தொன்மைச் செய்தியும் அம்முதல்வன் ஈன்ற மைந்தனாகிய முருகப் பெருமானுக்கு ஊர்தோறும் திருவிழா நிகழ்த்தும் வழக்கமும், அத்திருவிழா நாட்களில் முருகப்பெருமான் தேரிலும் யானையிலும் எழுந்தருளித் திருவுலாப்போதும் தெய்வக் காட்சியும் மேற்காட்டிய தொடரால் நன்கு புலனாதல் காணலாம்.

முருகப்பெருமானுக்குச் சிறப்பாகவுரியது கார் காலத்து மலரும் கடப்பமலர் மாலையாகும். இது 'காரலர் கடம்பன்' (மணிமேகலை 4. 49) எனவரும் தொடராற் குறிக்கப்பட்டது.

முருகப்பெருமான் கிரவுஞ்சம் என்னும் மலையுருக் கொண்டு உலகிற்கு இடர்விளைத்த அவுணனைத் தனது வேற்படையால் இருகூறாகப் பிளந்து கொன்றான் என்ற புராணச்செய்தி,

"குருகுபெயர்க் குன்றங்கொன்றோன் அன்னநின்
முருகச் செவ்வி" (மணிமேகலை 13-14)

எனவரும் தொடரிற் குறிக்கப்பட்டது.

திருமால்

கடலின் வண்ணமாகிய கரிய திருமேனியையுடைய தெய்வம் திருமால் என்பதனைக் 'கடல்வண்ணன்' (மணி. எ 98) என்ற பெயராற் குறித்தார் சாத்தனார்,

"பொன்னணிநேமி வலங்கொள் சக்கரக்கை
மன்னுயிர் முதல்வன்" (மணி. க 57-58)

என மணிமேகலை திருமாலைக் குறிப்பிடுகின்றது. பொன்னால் இயன்ற வட்டத்தினையுடைய சக்கரப் படையை வலப்பக்கத்தில் ஏந்தி மன்னுயிர்கட்கு இறைவனாகத் திகழ்வோன் திருமால் என்பது இத்தொடரின் பொருளாகும்.

திருமால் மாவலி என்னும் அவுணர்வேந்தன்பால் குறள்வடிவுகொண்டு மூவடிமண் வேண்டிப்பெற்று நெடியோனாய் நிமிர்ந்து மூவுலகையும் ஈரடியால் அளந்து கொண்ட புராணச்செய்தி,

"நெடியோன் குறளுருவாகி நிமிர்ந்துதன்
அடியிற்படியை அடக்கிய அந்நாள்" (மணி. 19. 52-52)

எனவரும் தொடரில் விரித்துரைக்கப்பெற்றது. திருமால் அவதாரமாகிய கண்ணபிரானும் பலதேவரும் நப்பின்னையும் ஆகிய மூவரும் துவராபதியில் எருமன்றத்தே குரவைக் கூத்தாடிய திறத்தை,

"மாமணி வண்ணனும் தம்முனும் பிஞ்ஞையும்
ஆடிய குரவையிஃதாமென நோக்கியும்"
(மணி. க. 65-66)

எனவரும் தொடரில் ஆசிரியர் புலப்படுத்தியுள்ளார்.

பசிய மூங்கிலும் வெண்பூக்களையுடைய கடம்பும் ஒருங்கே நின்றதோற்றமானது, பசுமைநிறம் வாய்ந்த திருமேனியையுடைய கண்ணபிரானும் வெள்ளை நிறம் வாய்ந்த திருமேனியையுடைய தமையனாகிய பலதேவரும் ஒருங்கு நின்ற தெய்வத்தோற்றத்தைப் புலப்படுத்துதலால் அதனைக் கைகூப்பி வணங்கியசெய்தி,

"பாசிலை செறிந்த பசுங்காற் கழையொடு
வால்வீ செறிந்த மராஅஞ் கண்டு
நெடியோன் முன்னொடு நின்றனனாம் எனத்
தொடிசேர் செங்கையிற் றொழுது நின்றேத்தியும்"
(மணி. க. 75-78)

எனவரும் தொடரிற் குறிக்கப்பெற்றது.

திருமால் இராமனாக அவதரித்தபொழுது, கடல் சூழிலங்கை வேந்தனாகிய இராவணனைப் பொருது அழித்தல் வேண்டிக் குரங்குகளைக் கொண்டு மலைகளால் கடலில் அணை கட்டியசெய்தி,

"நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி
அடலரு முந்நீர் அடைத்த ஞான்று
குரங்கு கொணர்ந்தெறிந்த நெடுமலை யெல்லாம்
அணங்குடை யரக்கர் வயிறுபுக்காங்கு" (மணி. க. 8-11)

எனவரும் தொடரில் உவமையாக எடுத்தாளப் பெற்றுள்ளமை காணலாம். 'மன்மருங்கறுத்த மழுவாள் நெடியோன்' (மணி. 32-25) என்பதனாற் பரசுராம் அவதாரம் குறிக்கப்பட்டது.

### திருமகள்

திருமாலின் தேவியாகிய திருமகள் தாமரை மலரில் வீற்றிருந்தருள்பவள் என்பதும் பொன்னிறத் திருமேனியினை யுடையவள் என்பதும்,

> "விரைமலர்த் தாமரையொரு தனியிருந்த
> திருவின் செய்யோள் போன்று" (மணி. 16. 33-34)

எனவும், 'பொன்னேரனையாய்' (மணி. 2.16) எனவும் வரும் தொடர்களாற் புலனாம். வாணாசுரன் தன் மகள் உழை காரணமாக அநிருத்தனைச் சிறைப்படுத்திய நிலையில் அவனையழித்தற் பொருட்டுத் திருமால் மேற்கொண்ட போரில் திருமகள் அசுரர்கள் மயங்கி மூர்ச்சித்து விழும்படி கொல்லிப்பாவை வடிவு கொண்டு ஆடிய கூத்து பதினோராடல்களுள் ஒன்றாகிய பாவைக்கூத்தாகும். இதனை,

> "திருவின் செய்யோள் ஆடிய பாவையும்" (மணி.5. 4)

என்ற தொடரால் ஆசிரியர் குறித்துள்ளார்.

### திருமால் மகன் காமன்

வாணாசுரனுடைய பேரூராகிய 'சோ' என்னும் நகரத் தெருவில் நீன் நிலம் அளந்த திருமாலின் மகனாகிய காமன் ஆண்மை திரிந்த பெண்மைக்கோளமுடையனாய் ஆடிய ஆடல் பதினோராடல்களுள் ஒன்றாகிய 'பேடு' என்னும் கூத்தாகும்.

> "வாணன் பேரூர் மறுகிடை நடந்து
> நீணில மளந்தோன் மகன் முன் ஆடிய
> பேடிக்கோலத்துப் பேடுகாண்குநரும்" (மணி.3. 123-125)

என மணிமேகலை மலர்வனம் புக்க காதையில் இக்கூத்துக் குறிப்பிடப்பெற்றுள்ளமை காணலாம். 'காமனுக்கு வானில் உலவும் தென்றற் காற்றாகிய தேரும் மீன்கொடியும் கரும்பு வில்லும் மலர்க்கணையும் உரியன' என்பது,

"வான்தேர்ப்பாகனை மீன் திகழ்கொடியனைக்
கருப்பு வில்லியையருப்புக்கணை மைந்தனை"
(மணி. 20, 91-92)

எனவரும் தொடரால் உணர்த்தப்பட்டது.

## திருமால் மகன் பிரமன்

படைப்புக் கடவுளாகிய நான்முகனைத் திருமாலின் மகனெனவும் அவனருளிய நன்னூல் அருமறையெனவும் உணர்த்துவது,

"பொன்னணிநேமி வலங்கொள் சக்கரக்கை
மன்னுயிர் முதல்மகன் எமக்கருளிய
அருமறை நன்னூல்" (மணி. 13. 57-59)

எனவரும் மணிமேகலைத் தொடராகும். 'முதுமறை முதல்வன்' என்பதும் நான்முகனுக்குரிய பெயர்.

"தெய்வக்கருவும் திசைமுகக் கருவும்
செம்மலர் முதியோன் செய்த அந்நாள்"

என மணிமேகலைப் பதிகம் கூறுதலாலும்,

"ஊழிமுதல்வன் உயிர்தலின் அல்லது
ஆழித்தாழியக வரைத்திரிவோர்
தாந்தரின் யானுந்தருகுவன்" (மணி. 6. 172-174)

எனச் சம்பாபதி கூறுதலானும் படைப்புக் கடவுளாகிய பிரமனைக் கடவுளாக வேதவாதிகள் உடன் பட்டுரைக்குமாறு போன்று புத்தர்களும் உடன் பட்டுரைத்தல் காணலாம்.

## குமரித்தெய்வம்

குமரித்துரையில் கன்னியாகுமரி என்ற தெய்வம் பண்டுதொட்டு மக்களால் வழிபடப்பெற்று வருகின்றது. இவ்வழிபாடு மணிமேகலை காலத்திலும் தொடர்ந்து நிலை பெற்றிருந்தமையினை,

'குமரிபாதங்கொள்கையின் வணங்கி' (மணி. 13. 74)

எனவரும் தொடராற்புலனாம்.

## கொற்றவை

விந்தமலையில் வெற்றிவெல்போர்க் கொற்றவை யாகிய துர்க்கைக்குக் கோயில் உண்டு என்பதும் அம்மலை யைக் காக்கும் காவற்றெய்வமாகிய விந்தாகடிகை என்பவள் யாரேனும் அம்மலை மேலுள்ள கோயிலின்மேல் வான்வழியே சென்றால் வெகுண்டு அவர்களை இழுத்துத் தன் வயிற்றின் அகத்திடுவாள் என்பதும்

"அந்தரஞ் செல்வோர் அந்தரியிருந்த
விந்தமால்வரை மீமிசைப்போகார்
போவாருளரெனிற் பொங்கியசினத்தள்
சாயையின் வாங்கித்தன் வயிற்றிடூஉம்
விந்தங் காக்கும் விந்தா கடிகை" (மணி.20.116-120)

எனவரும் மணிமேகலைப் பகுதியால் அறியப்படும். சக்கரவாளக் கோட்டத்தில் காடமர் செல்வியாகிய கொற்றவைக்குக் கோயிலமைந்திருந்ததென்பது,

'காடமர் செல்விகழி பெருங்கோட்டமும்'

என்ற தொடராற் புலனாகும்.

## சிந்தாதேவி

பாண்டிய நாட்டு மதுரையம்பதியில் சிந்தா தேவியாகிய கலைமகளுக்குக் கோயில் இருந்ததென்பதும், அங்கு எழுந்தருளிய சிந்தாதேவி என்றும் நாடுவறங்கூரினும் வறுமையடையாது உணவளிக்கும் பிச்சைப் பாத்திரத்தைத் தந்தருளியதென்பதும் மணிமேகலை ஆபுத்திரன்திறம் அறிவித்த காதையாலும் பாத்திரமரபு கூறிய காதையாலும் புலனாம். "சிந்தாதேவி செழுங்கலை நியமித்து, நந்தா விளக்கே நாமிசைப்பாவாய், வானோர் தலைவி மண்ணோர் முதல்வி" என அத்தெய்வத்தை ஆபுத்திரன் போற்றுதலால்

வேதநெறியாளர் போற்றும் நாமகளாகிய சரசுவதியே இங்குச் சிந்தாதேவி என்ற பெயராற் போற்றப்பெறுகின்றாள் எனக் கருத வேண்டியுள்ளது.

## மணிமேகலை கேட்டறிந்த சமயக் கொள்கைகள்

வேற்றுருக் கொண்டு வஞ்சி நகரத்தையடைந்த மணிமேகலை அந்நகரத்தில் வாழும் சமய வாதிகள் பலருடைய தத்துவக் கொள்கைகளையும் தெரிந்துகொள்ள விரும்பி அவர்களுள்ளே வைதிகநெறியைச் சார்ந்த அளவை வாதியைக் கண்டு 'நினது கொள்கை யாது? சொல்லுக' என வினவுகின்றாள். அவன் தனது கோட்பாட்டைக் கூறக் கேட்ட பின் முறையே சைவவாதி, பிரமவாதி, வைணவவாதி, வேதவாதி ஆகியவர்களையடைந்து அன்னோர் தம் சமயக் கொள்கைகளை முறையே கூறக்கேட்டு மெய்த்திறம், வழக்கு என்னும் எத்திறத்திலும் இவர்களது உரை பொருந்தாது என்று எண்ணி அவர்களை விட்டு நீங்கிப் பின்பு ஆசீவகவாதி, நிகண்டவாதி, சாங்கியவாதி, வைசேடிகவாதி, பூதவாதி என்போரை யணுகி வினவி ஐவகைச் சமயங்களையும் அறிந்து கொண்டனள் எனச் சாத்தனார் கூறுகின்றார். எனவே வைதிகநெறியினையும் கடவுட் கொள்கையையும் ஏற்கும் விருப்பின்றி வேதநெறியொடு மாறுபட்டனவும் கடவுட் கொள்கையில்லாதனவும் புத்த சமயத்தோடு உடன் எண்ணப்படுவனவுமாகிய புறச்சமயங்களைப் பற்றிய விளக்கமே சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதையில் விரிவாக இடம் பெற்றுள்ளன என்பதும் தெய்வங்கொள்கை யின்னையுடைய சைவம் வைணவம் முதலிய அகச் சமயம் பற்றிய தத்துவ விளக்கங்கள் இக்காதையில் ஓரளவே சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன என்பதும் இங்கு மனங் கொள்ளத்தக்கனவாகும்.

## மணிமேகலையிற் காணப்படும் சைவவாதியின் கூற்று

மணிமேகலை 'இறைவன் ஈசன்' எனக்கூறிய சைவ வாதியை நேர்பட்டு, 'நின்னால் வழிபடப்பெறும் தெய்வம் எத்தன்மையது' என வினவிய பொழுது, அதனைக் கேட்ட

சைவவாதி தான் வழிபடும் சிவபரம்பொருளாகிய ஈசனது பொதுவியல்பினையும் சிறப்பியல்பாகிய உண்மை யிலக்கணத்தினையும் தொகுத்துக் கூறுவதாக அமைந்தது,

> "இருசுடரோடு இயமானன் ஐம்பூதமென்
> றெட்டுவகையும் உயிரும் யாக்கையுமாய்க்
> கட்டிநிற்போனும் கலையுருவினோனும்
> படைத்து விளையாடும் பண்பினோனும்
> துடைத்துத் துயர்தீர் தோற்றத்தோனும்
> தன்னில்வேறு தானொன்றில்லோனும்
> அன்னோன் இறைவனாகும்" (மணி. 27. 89-95)

எனவரும் பகுதியாகும். "ஞாயிறு திங்கள் என்னும் கதிர்கள் இரண்டுடன் வேள்வித் தலைவனாகிய ஆன்மா, நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பெரும் பூதங்கள் ஆகிய எண்வகைப் பொருள்களிலும் தான் அவற்றின் உயிர் போன்று ஊடுருவிக் கலந்தும், அவையெல்லாவற்றுக்கும் தானே உடம்பாக அவற்றையெல்லாம் தனக்குள் அடக்கிக் கொண்டு அவற்றின் மேற்பட விரிந்தும் பிரிவின்றி உலகுயிர்களைப் பிணித்து நிற்பவனும், எல்லாக் கலைகளையும் தனது உருவாகயுடையவனும், உலகெலாம் படைத்து (மன்னுயிர்கட்கு இன்பம் விளைய) ஆடல் புரிந்தருளும் அருட்பண்பினையுடையவனும் உலகங்களை யெல்லாம் அழித்து ஒடுக்குந்திறத்தால் (உயிர்களின்) துயரத்தைத் தீர்த்தருளும் உயர்ச்சியையுடையவனும், தன்னையின்றித் தனித்து நிற்கும் பொருள் வேறொன்றும் இல்லை யென்னும்படி எல்லாப் பொருட்குஞ் சார்பா யுள்ளவனும் ஆகிய அத்தன்மையுடையவனே உலகுயிர்கட்கு இறைவனாவன்" என்பது மேற்காட்டிய தொடரின் பொருளாகும்.

### சைவவாதியின் கூற்றில் இடம்பெற்றுள்ள சைவ சமய வுண்மைகள்

சைவவாதியின் சமயக் கொள்கையினைக் குறிக்க எண்ணிய மணிமேகலையாசிரியர் சாத்தனார் 'இறைவன் ஈசன் என நின்ற சைவவாதி' என அடைமொழி புணர்த்துக்

கூறியுள்ளார். இறைவன் - உலகு உயிர்கள் ஆகிய எல்லாப் பொருள்களிலும் நீக்கமின்றி நிலைத்துள்ளவன். ஈசன் - உலகப் பொருள் எல்லாவற்றையும் தனது உடைமையாகக் கொண்ட தலைவன். ஈசன் என்னும் பெயர் ஈண்டுச் சிவபெருமான் என்னுஞ் சிறப்புப்பொருளில் ஆளப் பெற்றுள்ளது. 'சங்கரன் ஈசன் சயம்பு' எனவரும் சிலப்பதிகாரத் தொடரில் சிவபெருமானுக்குரிய சங்கரன் ஈசன் சயம்பு எனவரும் சிறப்புப் பெயர்கள் இறைவன் என்னும் பொதுப்பொருளில் வழங்கப்பெற்றுள்ளன. இப்பெயர்களின் ஆட்சியைக் கூர்ந்து நோக்குங்கால், சிவவழிபாடு தமிழ் நாட்டில் மக்கள் எல்லோரும் மதித்துப் போற்றும் சிறப்பு வழிபாடாகவும் பொது வழிபாடாகவும் யாண்டும் பரவியிருந்தமை இனிது புலனாகும்.

இனி, மணிமேகலையில் இடம்பெற்றுள்ள சைவவாதி கூற்றிலமைந்த கடவுளிலக்கணத்தினை ஒரு சிறிது நோக்குவோம். ஞாயிறு திங்கள் ஆன்மா ஐம்பெரும்பூதம் என்னும் எண்பேருருவினனாக (அட்ட மூர்த்தியாக) இறைவன் விளங்குந்திறத்தினை,

> "இருசுடரோடு இயமானன் ஐம்பூதம் என்று
> எட்டுவகையும் உயிரும் யாக்கையுமாய்க்
> கட்டிநிற்போன்"

என்ற தொடர் விரித்துரைப்பதாகும். இருசுடர் என்பது ஞாயிறும் திங்களுமாகிய ஒளிப்பொருள்கள். இயமானன் வேள்வித்தலைவன், என்றது ஆன்மாவை. ஐம்பூதமாவன நிலம், நீர், தீ, வளி, விசும்பு என்பன. மேற்குறித்த எண்வகைப் பொருள்களையும் இறைவன் தனக்குரிய திருமேனிகளாகக் கொண்டு அவற்றுடன் பிரிவின்றி ஒன்றுபட்டு விளங்கும் திறத்தை,

> "இருநிலனாய்த் தீயாகி நீருமாகி
> இயமானனாய் எறியுங்காற்றுமாகி
> அருநிலைய திங்களாய் ஞாயிறாகி
> ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகி (6.91.1)

எனவரும் நின்ற திருத்தாண்டகத்தில் திருநாவுக்கரசர்

அருளிச்செய்துள்ளமை இங்கு ஒப்புநோக்கற்பாலதாகும். இங்ஙனம் இறைவன் அட்டமூர்த்தியாகத் திகழ்கின்றான். எனவே கடவுள், உயிர், உலகம் என்னும் முப்பொருட் கொள்கை அக்காலச் சைவவாதிக்கு உடன்பாடாதல் நன்கு தெளியப்படும். உலகாகிய சடப்பொருளோடும் உயிராகிய சித்துப்பொருள்களோடும் இரண்டறக் கலந்து நிற்குந் திறத்தில் இறைவனுக்குள்ள அத்துவித சம்பந்தத்தை உவமங்காட்டி விளக்கும் முறையில் அமைந்தது, 'உயிரும் யாக்கையுமாய்க் கட்டி நிற்போன்' என்ற தொடராகும். உலகுயிர்களோடு இறைவன் பிரிவின்றி ஒன்றாய்க் கலந்து நிற்குந் திறத்திற்கு, உயிரானது உடம்போடு பிரிவின்றி ஒன்றாய்க் கலந்து நிற்கும் திறம் உவமையாகக் கூறப்பட்டது. 'உயிரும் யாக்கையும் ஆய்' என்புழி ஆக்கச்சொல் 'ஆள்வாரிலி மாடு ஆவேனோ' (திருவாசகம்) என்புழிப் போல உவமவுருபின் பொருள் குறித்து நின்றது. உயிரானது உடம்பெனவும் தான் எனவும் பிரித்தறியவொண்ணாதவாறு உடம்பேயாய்க் கலந்துநின்ற அவ்வுடம்பினை இயக்கி நிற்றல் போல இறைவனும் உலகமே தனது உருவமாகக் கலந்து ஒன்றாய் நின்று உலகுயிர்களை இயக்கியருள்கின்றான் என்பது சைவசமயத்தின் துணிபாகும். 'உயிரும் யாக்கையு மாய்க் கட்டி நிற்போன்' எனவே, உயிரும் உடம்பும் கலப்பினால் ஒன்றாயினும் உணர்வுடைமையும் உணர் வின்மையும் ஆகிய பொருட்டன்மையால் தம்முள் வேறாதல் போன்று, இறைவனும் உலகுயிர்களோடு கலப்பினால் ஒன்றாயினும் பொருட்டன்மையால் வேறென்பதும் உய்த்துணரப்படும். இங்ஙனம் இறைவனாகிய சிவபெருமான் உலகமேயுருவமாக எவ்வகைப் பொருள்களும் விரித்துப் பரவியதன் அருள் எல்லைக்குள் அடங்கி யமைத்தான் அவற்றின் மேற்பட விரிந்து விளங்கும் இயல்பினனாதலை,

> "நிலவுக்கதிரணைந்த நீள்பெருஞ் சென்னி
> உலகுபொதியுருவத் துயர்ந்தோன்" (சிலப். கால்கோட்.)

எனவரும் தொடரில் இளங்கோவடிகள் தெளிவாகக் குறித்துள்ளார்.

உயிர்களின் அகத்திருளை நீக்கி அறிவினை விளக்கும்

கலைகளின் உருவாகத் திகழ்ந்து இருளாயவுள்ளத்தின் இருளை நீக்கி மன்னுயிர்களுக்கு இன்னருள் சுரப்பவன் கண்ணுதற்கடவுளாகிய சிவபெருமானே என்பதனைப் புலப்படுத்துவது, 'கலையுருவினோன்' என்ற தொடராகும். 'கலையாகிக் கலைஞானந்தானேயாகி' (6.94.2) எனவரும் அப்பர் அருள்மொழியும், 'ஐயாறதன்மிசையெட்டுத் தலையிட்டமையில் வான்கலை மெய்யுடன் பொருந்தி' (திருச்சிற்றம்பலக் கோவை-க பேர் உரை) எனவரும் பேராசிரியர் உரையும் இங்கு ஒப்புநோக்கற் பாலனவாகும்.

கட்புலனாகக் காணப்படும் இவ்வுலகம், தானே தோன்றியதன்று, மன்னுயிர்களின் நலங்கருதி ஒருவன் என்னும் ஒருவனாகிய இறைவனால் தோற்றுவிக்கப்பெற்று உள்ளதாகிய உள்பொருளே என்பதும், சங்கார காரணனாகவுள்ள முதல்வனையே முதலாகவுடையது இவ்வுலகம் என்பதும் சைவசமயத்தின் கொள்கையாகும். இக்கொள்கையினை வலியுறுத்தும் முறையில் அமைந்தது,

> "படைத்து விளையாடும் பண்பினோனும்
> துடைத்துத் துயர்தீர் தோற்றத்தோனும்"

எனவரும் சைவவாதியின் கூற்றாகும். செம்பிற்களிம்பு போன்று உயிர்களைத் தோற்றமில் காலமாகப் பற்றியுள்ள இருளாகிய ஆணவமலத்தினை நீக்குதற்பொருட்டு அருளாளனாகிய இறைவன், உலகு உடல் கருவி நுகர் பொருள்களைப் படைத்து உயிர்கட்கு இன்பம் விளைய ஆடல்புரிகின்றான் என்பதும், அம்முதல்வனே உயிர்களின் கன்மமலம் நீங்குதற்பொருட்டு உளதாகிய உலகத்தை ஒடுக்கி உயிர்களின் பிறப்பு இறப்புத் துன்பங்களைத் துடைத்து மன்னுயிர்கட்கு அமைதி வழங்குகின்றான் என்பதும் மேற்குறித்த இரண்டடிகளாலும் முறையே புலப்படுத்தப் பெற்றுள்ளமை உய்த்துணரத் தகுவதாகும்.

தனது விரிவெல்லையினைக் கடந்து தன்னின் வேறாக ஒருபொருளும் இல்லையென்னும்படி உலகுயிர் களாகிய எவ்வகைப்பொருள்கட்கும் சார்பாயுள்ளவன் இறைவன் ஒருவனே என்பதும், 'தன்னில் வேறுதானொன்று

இல்லோனும் அன்னோன் இறைவன்' என்ற தொடரால் முடித்துக் கூறப்பட்டது. இறைவனைச் 'சார்பு' என்ற சொல்லால் திருவள்ளுவர் குறித்துள்ளமையும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

இறைவனும் உயிர்களும் பொன்னும் அதனாலாய அணிகலன்களும் போல அபேதம் என்பர் ஏகான்மவாதிகள். ஒளியும் இருளும் போலப் பேதம் என்பர் மாத்துவர். சொல்லும் பொருளும் போலப் பேதாபேதம் என்பர் பாஞ்சராத்திரிகள். இறைவன் உயிர்களோடு பேதம் அபேதம் பேதாபேதம் என்னும் மூன்றுமாய் அத்துவிதமாய்க் கலந்து நிற்பன் என்பர் சைவசித்தாந்திகள். அபேதம் - ஒன்றாதல் பேதம் - வேறாதல் பேதாபேதம் - ஒருவகையால் ஒன்றாகியும் மற்றொரு வகையால் வேறாகியும் நிற்றல். என்றும் உள்ள உயிர்கட்கு நிலைபேறாகிய சார்பும் அறிதலும் செய்தலும் என்னும் இம்மூன்றும் இன்றியமையாதன. இறைவன் உயிரும் உடம்பும்போல உயிர்களோடு ஒன்றாய் நிற்றலால் நிலைபேறாகிய சார்பும், கண்ணும் கதிரவனும் போல வேறாய்நின்று பொருள்களைக் காட்டுதலால் அறிதலும், கண்ணொளியும் உயிரறிவும் போல உடனாய் நின்று காட்டிக்காணுதலால் செயலும் நிகழும் என்பர் அறிஞர். இவ்வாறு ஒன்றாதல், வேறாதல், உடனாதல் என்னும் முத்திறங்களும் ஒருங்கமைந்த அத்துவித சம்பந்தமே (இருமையின் ஒருமையே) இறைவனுக்கும் உயிர்களுக்கும் இடையேயுள்ள நீங்காத்தொடர்பு என்பது தம்காலத்தில் வாழ்ந்த சைவவாதியின் கருத்தாதலை மணிமேகலையாசிரியர் மேற்குறித்த சைவவாதியின் கூற்றில் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளமை காணலாம்.

'எட்டுவகையும் உயிரும் யாக்கையுமாய்க் கட்டி நிற்போன்' என்ற தொடரால் அபேதமும் 'படைத்து விளையாடும் பண்பினோன்', 'துடைத்துத் துயர்தீர் தோற்றத்தோன்' என்ற தொடர்களாற் பேதமும், 'தன்னில்வேறு தானொன்றில்லோன்' என்ற தொடராற் பேதாபேதமும் ஆக இம்மூவகையும் விரவிய அத்துவித நிலையில் இறைவன் உயிர்களோடு தொடர்புடையனாகத்

திகழுந்திறம் இங்குப் புலப்படுத்தப் பெற்றுள்ளமை கூர்ந்துணரத் தகுவதாகும்.

## மணிமேகலை கூறும் சைவக்கொள்கை திருமுறைகளில் அமைந்துள்ளமை

இறைவன் எண்பேருருவினனாய்ப் பொருள்தோறும் யாண்டும் நீக்கமறக்கலந்து உடனாய் நிற்கும் அத்துவித இயல்பினை விளக்குவது,

> "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
> புலனாய மைந்தனோடெண் வகையாய்ப்
> புணர்ந்துநின்றான்
> உலகேழெனத்திசை பத்தெனத் தானொருவனுமே
> பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ"

எனவரும் திருவாசகச் செழும்பாடலாகும். ஒருபொருளே பலபொருள்களாக விரிந்து தோற்றுதலும், ஒருபொருளே பல பொருள்களிலும் ஊடுருவிக் கலந்து நிற்றலும் தம்முள் மாறாகிய இருவேறு தன்மைகளாகும். இவ்விரண்டினுள் முழுமுதற் பொருள் ஒன்றே தானல்லாத பலபொருள்களிலும் ஊடுருவி இரண்டறக் கலந்து நிற்கும் இயல்பினை அறிவுறுத்துவது, 'தான் ஒருவனுமே பலவாகி நின்றவா' என்ற தொடராகும். இத்திருப்பாடலில் எண்வகையாய் நின்றான் என்னாது 'எண்வகையாப் புணர்ந்து நின்றான்' எனத் திருவாதவூரடிகள் தாம் கூறும் பொருள் இனிது விளங்க விரித்துக்கூறிய நுட்பம் இங்கு நினைக்கத் தக்கது. 'புணர்ந்து நிற்றல்' என்றது, ஒருபொருள் தானல்லாத பிறபொருளுடன் கூடிநிற்றலையே குறிப்பதாகும். இங்ஙனமன்றி ஒருபொருளே பலவாக விரிந்து தோன்றுதலையோ, ஒன்று மற்றொன்றாகத் திரிந்து தோன்றுதலையோ அத்தொடர் குறிப்பதன்று. ஓர் உடம்பினுட் கலந்து நிற்கும் உயிர், அவ்வுடம்பின் ஐம்பொறிகளிலும் ஐம்புலவுணர்வுகளைத் தோற்றுவித்தல் பற்றி உடம்போடு ஒன்றாய்க் கூடி நிற்பினும் அதன் தன்மையினைக் கூர்ந்து நோக்குங்கால் அவ்வுயிர் உடம்பின் வேறாதல் போன்று, இறைவனும் எண்பேருருவினனாக

உலகுயிர்கள் எல்லாவற்றினும் நீக்கமறக்கூடி அவை பலவுமாய் விரவியிருப்பினும் அவற்றின் தன்மை தனக்கெய்த லின்றித் தான் அவற்றின் வேறாய் நிற்பன் என்னும் மெய்ம்மையினையே 'தான் ஒருவனுமே பலவாகி நின்றவா' எனவரும் இத்தொடரில் திருவாதவூரடிகள் விளக்கி யருள்கின்றார். 'ஒருவன்' எனவே ஒருவன் என்னும் ஒருவனாகிய இறைவனும், 'பல' எனவே அவனல்லாத அவன் அவள் அதுவெனப்படும் உலகுயிர்களும், 'ஆகி' எனவே அவற்றொடு பிரிவின்றி (அத்துவிதமாய்)க் கலந்து விளங்கும் அம்முதல்வனது தன்மையும் புலப்படுத்தப் பெற்றுள்ளமை காணலாம்.

இதுகாறும் எடுத்துக்காட்டிய குறிப்புக்களால் மணிமேகலையிற் சைவவாதியின் கூற்றாக அமைந்த இறைவனது இலக்கணமும் திருவாசகம் முதலிய திருமுறைகளிற் கூறப்படும் இறைவனிலக்கணமும் ஒத்தமைந்துள்ளமையும் சைவசித்தாந்த நூல்களால் விரித்துரைக்கப்பெறும் அத்துவித இலக்கணத்திற்குரிய அடிப்படைக் கொள்கைகள் மணிமேகலை கூறும் சைவவாதியின் கூற்றில் இடம் பெற்றுள்ளமையும் இனிது புலனாதல் காணலாம்.

மணிமேகலை சமயக்கணக்கர் தம் திறம் கேட்ட காதையில் வேதவாதியின் வேறாகச் சைவவாதியும் வைணவ வாதியும் பிரமவாதியும் பிரித்துக் கூறப்பட்டுள்ளனர். சைவசமயத்தின் உட்பகுதிகளாகிய பாசுபதம் காபாலிகம் மாவிரதம் முதலிய சமயங்கள் மணிமேகலையிற் கூறப்பட வில்லை. அவை வடநாட்டிற் சிவனை வழிபடும் கூட்டத்தினரிடையே காணப்படும் பல்வேறு நோன்பு களையும் கோலங்களையும் குறிப்பனவன்றித் தமக்கெனச் சிறப்புரிமையுடைய தத்துவக் கொள்கையின் வழியமைக்கப் பெற்ற சமயங்களன்மையின் அவற்றை மணிமேகலையாசிரியர் இங்குக் குறிப்பிடவில்லையென எண்ணவேண்டியுள்ளது.

சுதமதியென்பாள் மணிமேகலையை அழைத்துக் கொண்டு மலர்கொய்தற்கென மலர்வனம் நோக்கிச் செல்லும்பொழுது புகார் நகர வீதியிலே பித்தனொருவன்

அலரி மாலையினையணிந்த தோளினனாய் குவிந்த முகிழாகிய எருக்க மலர்களைக் கோத்த மாலையை யணிந்தவனாய், உயர்ந்த கிளைகளிலுள்ள பூங்கொத்துக் களையும் சுள்ளிகளையும் ஒடித்துக் கிழிந்த உடையிற் கட்டிக்கொண்டு உடல் முழுவதும் வெண்ணீறணிந்து அழுதும் தொழுதும் சுழன்றும் ஓடியும் ஒருபக்கத்தில் நின்று தன்னிழலைக் கண்டு மாறுபட்டுத் தாமதித்தும் நின்ற காட்சியை,

> "கணவிரமாலையிற் கட்டியதிரள் புயன்
> குவிமுகிழெருக்கிற் கோத்த மாலையன்
> சிதவற்றுணியொடு சேணோங்கு பெருஞ்சினைத்
> ததர் வீழ்பொடித்துக் கட்டியவுடையினன்
> வெண்பலிச் சாந்தம் மெய்ம்முழுதுரீ இ
> மையலுற்றமகன்" (மணி.3. 104-114)

எனவரும் தொடரிற் சாத்தனார் புனைந்துரைக்கின்றார். இதன்கண் மையலுற்ற மகனாகிய பித்தன் கொண்டுள்ள வேடம் முழுநீறுபூசிய சிவனடியார் திருவேடத்தை நினைவுபடுத்தும் நிலையில் அமைந்துள்ளமை உய்த்துணரத் தகுவதாகும்.

இவ்வாறே சக்கர வாளக்கோட்டம் உரைத்த காதையில்,

> "சுடலை நோன்பிகள் ஒடியாவுள்ளமொடு
> மடைதீயுறுக்கும் வன்னிமன்றமும்" (6. 86-87)

எனக் காபாலிக சமயத்தாரையும்,

> "விரதயாக்கையர் உடைதலை தொகுத்தாங்
> கிருந்தொடர்ப்படுக்கும் இரத்திமன்றமும்" (6. 88-89)

என மாவிரத சமயத்தாரையும் சாத்தனார் குறித்துள்ளமை இங்கு நினைக்கத்தக்கதாகும்.

அரியதவச் செல்வர்களும் நாடாளும் அரசர்களும், கணவனோடு ஒருங்குயிர் விடும் கற்புடைமகளிரும் இறந்துபட்டால் அவர்கட்குக் கோயிலெடுத்து வழிபடும்

பழக்கம் தமிழகத்தில் தொன்றுதொட்டு வருவதாகும். இச்செய்தி,

> "அருந்தவர்க்காயினும் அரசர்க்காயினும்
> ஒருங்குடன் மாய்ந்த பெண்டிர்க்காயினும்
> இறந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த
> குறியவும் நெடியவும் குன்றுகண்டன்ன
> சுடுமணோங்கிய நெடுநிலைக் கோட்டமும்"

எனவரும் தொடரால் அறியப்படும்.

இருவகைப் பற்றுக்களையும் விட்டொழித்த துறவிகள் இறந்தால் வீடுபேற்றுக்குரியராகிய அவர்களை உலகமக்கள் தொழுது போற்றுதலும், உலகப்பற்றுடைய பிறர் இறந்தால் அவர்களது பிரிவால் சுற்றத்தார் முதலியோர் அழுது அரற்றுதலும் இயல்பு. இவ்வியல்பினை,

> "துறவோர் இறந்த தொழுவிளிப்பூசலும்
> பிறவோர் இறந்த அழுவிளிப்பூசலும்" (6. 72-73)

என்ற தொடராற் சாத்தனார் குறிப்பிடுதலால், இருவகைப் பற்றுக்களையும் விட்டொழித்த துறவிகள் எந்தச் சமயத்தவராயினும் அவர்களைத் தெய்வமாக எண்ணி வழிபட்டுப் போற்றுதல் தமிழகத்தில் தொன்றுதொட்டு நிலவிவரும் சமய ஒழுகலாறாகும் என்பது நன்கு புலனாகின்றது.



# தமிழாகமம் எனப் போற்றப்பெறும் திருமூலர் திருமந்திரம் கூறும் சைவ சித்தாந்தச் செந்நெறியும் தத்துவவுண்மைகளும்

பன்னிரு திருமுறையாசிரியர்களுள் காலத்தால் முற்பட்டவர் திருமூலதேவநாயனார் ஆவர். இவரை 'நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்' எனத் திருத்தொண்டத் தொகையில் நம்பியாரூரர் பரவிப் போற்றியுள்ளார். திருத்தொண்டத் தொகையின் வகையாகத் திருத்தொண்டர் திருவந்தாதி பாடியருளிய நம்பியாண்டார் நம்பிகள்,

"குடிமன்னு சாத்தனூர் கோக்குல மேய்ப்போன்
குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற்பிறையாளன் றன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படியே பரவிட்டெனுச்சி
அடிமன்ன வைத்தபிரான மூலனாகிய அங்கணனே" (36)

எனவரும் பாடலில் திருமூலர் வரலாற்றை வகுத்துக் கூறியுள்ளார். "நற்குடிகள் நிலைபெற்ற சாத்தனூரிலே பசுநிரையை மேய்ப்போன் ஆகிய ஆயனது உடம்பிற் புகுந்து, முடியிலே நிலைபெற்ற வளைந்த பிறைச் சந்திரனைச் சூடியவனாகிய சிவபெருமானை முழுமை வாய்ந்த தமிழ்கூறிய வண்ணமே நிலைபெற்ற வேதங்கள் சொல்லியபடியே பரவிப் போற்றி எனது சென்னியிலே தன் திருவடிகளை நிலைபெறச் செய்த பெருமான் மூலன் என்னும் பெயருடைய அருளாளனாவன்" என்பது இத்திருவந்தாதியின் பொருளாகும்.

இப்பாடலில், 'பரவிட்டு' என்னும் வினையை, முழுத்தமிழின்படியே பரவிட்டு எனவும், வேதத்தின் சொற் படியே பரவிட்டு எனவும் ஈரிடத்தும் சென்றியையும்படி

நம்பியாண்டார் நம்பி கூறியிருத்தலால், திருமூலநாயனார் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருளும் நிரம்பிய தமிழ் மறைகளையும் வடமொழி வேதங்களையும் தழுவித் தமிழாகமம் ஆகிய இத்திருமந்திரமாலையை அருளிச் செய்துள்ளார் என்பது இனிது புலனாகும். அம்மையப்பராகிய இறைவன் தமிழும் ஆரியமும் ஆகிய இருமொழிகளிலும் பொருள் ஒத்து அமையும்படி ஞானநூற்பொருள்களை உமையம்மையார்க்குத் திருவாய் மலர்ந்தருளினன் என்பதனை,

> "மாரியும் கோடையும் வார்பனி தூங்கநின்
> றேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்து
> ஆரியமும் தமிழும் உடனே சொல்லிக்
> காரிகை யார்க்குக் கருணை செய்தானே"
>
> (திருமந்திரம் 65)

எனத் திருமூலர் தெளிவாகக் குறித்துள்ளார். இப்பாடற் பொருளைக் கூர்ந்து நோக்குங்கால் முற்காலத்தில் சிவபெருமானால் அருளிச் செய்யப்பெற்ற ஞானநூல்களாகிய சிவாகமங்கள் தமிழிலும் வடமொழியிலும் ஒப்ப அமைந் திருந்தன என்பது நன்கு புலனாம். உலக மக்கள் உணர்ந்து உய்யும்படிப் பண்டைநாளில் தமிழிலும் வடமொழியிலும் இறைவனூலாகிய ஆகமங்கள் இயற்றப்பெற்று வழங்கின என்பதனை,

> "அவிழ்க்கின்ற வாறும் அதுகட்டு மாறும்
> சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறும்
> தமிழ்ச் சொல் வடசொல் லெனுமிவ்விரண்டும்
> உணர்த்துமவனை யுணரலுமாகும்" (திருமந்திரம் 66)

என ஆகமச் சிறப்புணர்த்தும் பகுதியில் திருமூலர் விளங்கக் கூறியுள்ளார். வழிபாட்டுக்குரிய மந்திரங்கள் தமிழிலும் பிறமொழிகளிலும் அமைந்திருந்தன. இச்செய்தி வயிரவி மந்திரம் என்ற பகுதியில்

> "அந்த நடுவிரல் ஆதி சிறுவிரல்
> வந்த வழிமுறை மாறியுரை செய்யும்

செந்தமிழாதி தெளிந்து வழிபடு
நந்தியிதனை நலமுரைத்தானே" (திருமந்திரம் 1089)

எனத் திருமூலர் அறிவுறுத்துதலால் அறியப்படும்.

திருமூலநாயனார் தமது வரலாறு கூறுவதாக அமைந்த திருமந்திரப் பாயிரப் பகுதியில்,

"நந்தியிணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியினுள்ளே புகப்பெய்து போற்றிசெய்து
அந்திமதிபுனை அரனடி நாடொறுஞ்
சிந்தை செய்தாகமஞ் செப்பலுற்றேனே" (திருமந்திரம் 73)

எனவும்,

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே" (திருமந்திரம் 81)

எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகள் திருமந்திர மாலையாகிய இந்நூல் தமிழாகமமாக அருளிச் செய்யப்பெற்ற திறத்தைப் புலப்படுத்துவனவாகும்.

திருமந்திரத்திற் கூறப்படும் சைவசித்தாந்தத் தத்துவ வுண்மைகள் செந்தமிழ் நாட்டில் தொன்றுதொட்டு வாழ்ந்த சிவஞானிகளால் அருளிச் செய்யப்பெற்ற தொன்மை யுடையனவாகும். இவ்வுண்மையினை,

"சதா சிவதத்துவம் முத்தமிழ்வேதம்
இதாசனியா திருந்தேனின்ற காலம்" (திருமந்திரம் 76)

எனவும்,

"தமிழ் மண்டலம் ஐந்துந் தழுவிய ஞானம்
உமிழ்வது போல உலகந் திரிவர்
அவிழும் மனமும் எம்ஆதி யறிவுந்
தமிழ் மண்டலம் ஐந்துந் தத்துவமாமே"
(திருமந்திரம் 1646)

எனவரும் திருமூலர் வாய்மொழிகள் நன்கு வலியுறுத்தல் காணலாம்.

வடமொழியிலுள்ள வேதத்தைப் பொதுநூலாகவும் தமிழிலும் வடமொழியிலும் உள்ள சிவாகமங்களைச் சிறப்பு நூலாகவும் கொண்டு பொதுவும் சிறப்புமாகிய இவ்விரு திறப்பொருள்களும் ஒருங்கமைய அருளிச்செய்யப் பெற்ற செந்தமிழ்ச் சிவாகமம் திருமந்திரமாலையாகும். இவ்வுண்மை,

> "வேதமோடாகமம் மெய்யாம் இறைவனூல்
> ஓதும் பொதுவுஞ் சிறப்புமென்றுள்ளன
> நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
> பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே" (51)

எனவரும் திருமூலர் வாய்மொழியாலும், "முழுத்தமிழின் படி, வேதத்தின் சொற்படியே பரவிட்டு என் உச்சி, அடிமன்ன வைத்தபிரான் மூலனாகிய அங்கணனே" என நம்பியாண்டார் நம்பிகள் திருமூலநாயனாரைக் குறித்துப் போற்றிய தொடராலும் நன்கு துணியப்படும்.

திருக்கயிலாயத்தில் நந்திதேவர்பால் ஞானோபதேசம் பெற்ற நான்மறை யோகிகளுள் ஒருவர், பொதியமலையில் அகத்திய முனிவரைக் கண்டு அளவளாவும் விருப்புடன் கயிலையினின்றும் புறப்பட்டுத் திருக்கேதாரம், பசுபதி நேபாளம், அவிமுத்தம், விந்தம், திருப்பருப்பதம் முதலிய தலங்களைப் பணிந்து தமிழ்நாட்டையடைந்து திருக் காளத்தி, திருவாலங்காடு, காஞ்சி, திருவதிகை ஆகிய தலங்களை வணங்கித் தில்லைப் பதியையடைந்து இறைவனது திருக்கூத்துத் தரிசனம் கண்டு மகிழ்ந்தார். பின்பு அங்கிருந்தும் புறப்பட்டுக் காவிரியையடைந்து நீராடித் திருவாவடுதுறை யிறைவரை வணங்கிச் செல்லும் வழியில் சாத்தனூரையடுத்துக் காவிரியின் தென்கரையில் உள்ள சோலையில் ஆநிரை மேய்க்கும் மூலன் என்னும் பெயருடைய ஆயன் இறந்துபட, அந்நிலையில் அவனால் மேய்க்கப்பெற்ற பசுக்கள் அவனுடம்பைச் சூழ்ந்து நின்று கதறின. அப்பசுக்களின் துயரத்தைப் போக்கத் திருவுளங் கொண்ட சித்தராகிய யோகியார் தமது உடம்பை அச் சோலையின் ஒருபுறத்தே பாதுகாப்பாக மறைத்து வைத்து விட்டுத் தாம் கற்றுவல்ல பரகாயப் பிரவேசம் (கூடுவிட்டுக் கூடுபாய்தல்) என்னும் சித்தித் திறத்தால் தமது உயிரை மூலன்

என்னும் இடையனது உயிர் நீங்கிய உடம்பிற்புகச் செய்து உயிருடன் எழுந்தார். அது கண்டு பசுக்களெல்லாம் துயர்நீங்கி மகிழ்ந்தன. மூலனுடம்பு புகுந்த சித்தர் பசுக்களை யெல்லாம் சாத்தனூரிற் செலுத்திவிட்டு மீண்டு வந்து தமது பழையவுடம்பினை மறைத்து வைத்த இடத்திற்சென்று பார்த்தார். அவ்வுடம்பு அவர் அங்குத் திரும்பி வருவதற்கு முன்னரே இறைவனால் மறைக்கப்பட்டு ஒழிந்தது. அந்நிலையில் தாம் பாதுகாப்பாக மறைத்து வைத்த தம்முடம்பு காணாது போயினமைக்கு இறைவன் திருவருளே காரணம் எனவுணர்ந்து தமது முன்னையவுடம்பினாற் சிறிதும் பயனில்லையெனத் தெரிந்து கொண்டு மூலனாகிய இடையனது உடம்பினையே தமக்குரிய உடம்பாகக் கொண்டு திருவாவடுதுறைத் திருக்கோயிலையடைந்து அங்குள்ள அரசமரத்தின் அடியில் எண்ணில்லாத பல ஆண்டுகள் சிவயோக நிலையில் அமர்ந்திருந்து சிவபரம் பொருளைத் தியானித்துத் தாம் உணர்ந்த மெய்யுணர் வுண்மைகளைச் செந்தமிழ் மொழியில் ஓராண்டுக்கு ஒரு திருப்பாடலாக மூவாயிரம் திருப்பாடல்கள் அடங்கிய திருமந்திரமாலை என்னும் பனுவலை அருளிச்செய்து திருக்கயிலாயத்தையடைந்து சிவபெருமான் திருவடிநீழலில் என்றும் பிரியாதுறையும் பேரின்பநிலையினைப் பெற்றார் என்பது திருமூலநாயனார் வரலாறாகும். இவ்வரலாறு சேக்கிழார் நாயனார் இயற்றிய திருத்தொண்டர் புராணத்தில் இருபத்தெட்டுத் திருப்பாடல்களால் விரித்துக் கூறப்பெற்றது. இவ்வரலாற்று நிகழ்ச்சிகள் பலவற்றுக்கும் திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திரமாலையில் சிவயோகியாராகிய அவர் தமது வரலாறு கூறும் முறையிலமைந்த பாயிரப் பகுதியிலுள்ள திருப்பாடல்கள் அகச் சான்றுகளாக அமைந்துள்ளன.

திருமந்திரமாலையின் நூலாசிரியர்க்குத் திருமூலர் என வழங்கும் இப்பெயர் அவர் மூலனுடம்பிற் புகுந்த பின்னரேயுளதாயிற்று. நந்தி திருவருள் பெற்ற நான் மறையோகியராய் இருந்த இவர்தம் முன்னைய நிலையில் இவர் பிறந்த ஊர், குடி, பேர் முதலியவற்றை உள்ளவாறு அறிந்துகொள்ளுதற்கேற்ற வரலாற்றுச் சான்றுகள்

கிடைக்காமையால் சிவயோகியார் திருமூலராதற்கு முன்னுள்ள அவர்தம் ஊர் குலம் பேர் முதலிய வரலாற்றுச் செய்திகளைக் குறித்துச் சேக்கிழாரடிகள் எதுவும் கூறாது விட்டார்.

திருமூலராகிய சிவயோகியார் திருக்கயிலையில் நந்தியெம் பெருமான்பால் ஞானநூற்பொருள்களை ஓதியுணர்ந்த நான்மறை யோகிகளுள் ஒருவர் என்பது,

"நந்தியருள் பெற்ற நாதரை நாடிடின்
நந்திகள் நால்வர் சிவயோகமாமுனி
மன்றுதொழுத பதஞ்சலி வியாக்கிரர்
என்றிவர் என்னோ டெண்மரு மாமே" (திருமந். 67)

எனவரும் அவர் தம் வாய்மொழியால் அறியப்படும். சிவயோகியாராகிய இவர் அட்டமா சித்திகளும் கைவரப் பெற்றவர் என்பது,

"அரியதெனக்கில்லை அட்டமாசித்தி
பெரிதருள் செய்து பிறப்பறுத்தானே" (திருமந். 641)

என அவர்கூறுதலாற் புலனாகும்.

மூலன் இறந்தமையால் பசுக்கள் உற்றதுயரத்தை நீக்குதற் பொருட்டு இறைவனருளால் மூலனது உடம்பிற் புகுந்து பசுக்களைச் சாத்தனூரிற் சேர்த்து விட்டு மீண்டு வந்து தமது பழையவுடம்பினை மறைத்து வைத்தவிடத்திற் பார்த்தபோது அவ்வுடம்பு இறைவனருளாற் காணாது போகவே அவ்வுடம்பினாற் பயனில்லை யென்றுணர்ந்து, இறைவன் திருவருட்குறிப்பின் வண்ணம் மூலனுடம்பிலேயே தங்கிச் சிவயோக நிலையில் நெடுங்காலம் இருந்தார் என்பது,

"நந்தியருளாலே நாதனாம் பேர்பெற்றோம்
நந்தியருளாலே மூலனை நாடினோம்
நந்திஅருளா அது என் செய்யும் நாட்டினில்
நந்திவழிகாட்ட நானிருந்தேனே" (திருமந். 68)

எனத் தம்மைப் பற்றிக் கூறுதலால் அறியப்படும். இதன்கண்

'நந்தி அருளா அது' என ஆசிரியர் சுட்டியது, இறைவனால் மறைத்தொழிக்கப்பட்ட தமது பழையவுடம்பினை. இவ்வாறு இறைவன் தம்முடைய பழையவுடம்பினை மறைத்து மூலனுடம்பிற் புகச் செய்தருளிய இப்படைப்பு, அம்முதல்வனது பொருள்சேர் புகழ்த்திறங்களைச் செந்தமிழ்ப் பாக்களால் புனைந்து போற்றுதற்கேற்ற நல்லதொரு படைப்பாகும் என்பார்,

> "பின்னை நின்றென்னே பிறவி பெறுவது
> முன்னை நன்றாக முயல்தவஞ் செய்திலர்
> என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
> தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே" (திருமந். 81)

என்றருளிச் செய்தார்.

சிவபெருமான் திருவருளால் மூலனுடம்பிற் புகுந்து திருமூலர் எனப் பெயர் பெற்ற சிவயோகியார் திருவாவடு துறைத் திருக்கோயிலையடைந்து அம்மையப்பராகிய இறைவரைப் பணிந்து அங்குள்ள சிவபோதியாகிய அரசமரத்தின் நீழலில் எண்ணில்லாத பல்லாண்டுகள் சிவயோகத்தில் அமர்ந்திருந்தார் என்பது,

> "சேர்ந்திருந்தேன் சிவமங்கைதன் பங்கனைச்
> சேர்ந்திருந்தேன் சிவனாவடு தண்டுறை
> சேர்ந்திருந்தேன் சிவபோதியினீழலிற்
> சேர்ந்திருந்தேன் சிவன் நாமங்கள் ஓதியே" (திருமந். 79)

எனவும்,

> "இருந்தேன் இக்காயத்தே எண்ணிலிகோடி
> இருந்தேன் இராப்பகல் அற்றவிடத்தே
> இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
> இருந்தேன் என்னந்தி இணையடிக் கீழே" (திருமந். 80)

எனவும்,

> "ஞானத் தலைவிதன் நந்திநகர் புக்கு
> ஊனமில் ஒன்பது கோடியுகந்தனுள்

ஞானப்பாலாட்டி நாதனையர்ச்சித்து
நானும் இருந்தேன் நற்போதியின் கீழே" (திருமந். 82)

எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகளால் இனிது விளங்கும். இப்பாடலில் 'நந்திநகர்' என்றது திருஆவடு துறையினை.

சிவயோகத்தமர்ந்த திருமூலர் இறைவன் திருவருளை இடைவிடாது சிந்தித்திருந்து தமிழ் மூவாயிரம் ஆகிய ஆகமத்தை அருளிச் செய்தார் என்பதும் இவ்வருள் நூலுக்கு ஆசிரியர் இட்டபெயர் திருமந்திமாலை என்பதும்,

"நந்தியிணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியினுள்ளே புகப்பெய்து போற்றிசெய்து
அந்திமதிபுனை அரனடிநாள்தொறும்
சிந்தை செய்தாகமஞ் செப்பலுற்றேனே" (திருமந். 73)

எனவும்,

"பிறப்பிலி நாதனைப் பேர்நந்திதன்னைச்
சிறப்பொடுவானவர் சென்றுகைகூப்பி
மறப்பிலர் நெஞ்சினுள் மந்திரமாலை
உறைப்பொடுங் கூடிநின்றோதலுமாமே" (திருமந். 86)

எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகளால் நன்கு புலனாம்.

சிவயோகியாராகிய திருமூலர் தமிழாகமமாகிய திருமந்திர மாலையை அருளிச் செய்த காலத்தில் தமிழ் மொழியிற் சைவசமய நுண்பொருள்களை விரித்துரைக்கும் சாத்திர நூல்கள் சிலவாக அருகிக் காணப்பட்டன. எனினும் அத்தமிழ் நூல்களில் இல்லாத பொருள்கள் வேறெம் மொழிகளிலும் இல்லையென்று சொல்லும்படி உலகமக்கள் அனைவரும் உணர்ந்து உய்திபெறுதற்குரிய அரும் பொருள்கள் அனைத்தும் அத்தமிழ் நூல்களில் நிரம்பி யிருந்தன. இவ்வுண்மையினை,

"அங்கி மிகாமை வைத்தான் உடல்வைத்தான்
எங்கு மிகாமை வைத்தான் உலகேழையும்

தங்கி மிகாமை வைத்தான் தமிழ்ச்சாத்திரம்
பொங்கிமிகாமை வைத்தான் பொருள்தானுமே"
(திருமந். 87)

எனவரும் திருப்பாடலில் திருமூலர் தெளிவாக வெளியிட்டுள்ளமை காணலாம்.

திருமூலர் தம்முடன் நந்தியெம்பெருமான்பால் உபதேசம் பெற்றவர்களாக நந்திகள் நால்வரையும் (சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் நால்வரையும்) சிவயோகமாமுனி, தில்லையில் திருக்கூத்துத் தெரிசனம் கண்ட பதஞ்சலி, வியாக்கிர பாதமுனிவர் ஆகியோரையும் சேர்த்து எண்மராகக் குறித்துள்ளதனை (திருமந்திரம்-67) நோக்குங்கால் இவர் மேற்குறித்த முனிவர் பெருமக்கள் காலத்தையொட்டி வாழ்ந்தவர் என்பது நன்கு புலனாகும். தில்லையிற் பதஞ்சலி வியாக்கிரபாதர் ஆகிய முனிவர் களுடன் இறைவனது திருக்கூத்தினைக் கண்டபின்னர் இவர் இவ்வுலகில் நெடுங்காலம் இருந்தவர் என்பது,

"செப்புஞ் சிவாகமம் என்னும் அப்பேர்பெற்றும்
அப்படி நல்கும் அருள்நந்திதாள் பெற்றுத்
தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பில் எழுகோடி யுகமிருந்தேனே" (திருமந். 74)

என இவர் தமது வரலாறு கூறுதலால் இனிது விளங்கும்.

திருமூலர் இவ்வாறு இவ்வுலகில் நெடுங்காலம் தங்கியிருந்ததன் காரணம் இறைவனுடன் பிரிப்பின்றி விளங்கும் அருட்சத்தியாகிய புவனாபதியென்னும் அருந்தவச் செல்வியை வழிபட்டு அவ்வன்னையின் திருவருளால் இவ்வுலகிற் பத்திநெறியையும் யோக நெறியையும் ஞானநெறி யையும் நிலைபெறச்செய்து இறைவனது அருட்கூத்தினை விளக்கும் தமிழ்மறையாகிய திருமந்திரப் பனுவலை அருளிச் செய்தற்பொருட்டேயாம்.

"இருந்தவக் காரணம் கேள்இந்திரனே
பொருந்திய செல்வப் புவனாபதியாம்

அருந்தவச் செல்வியைச் சேவித்துஅடியேன்
பரிந்துடன் வந்தனன் பத்தியினாலே" (திருமந். 75)

எனவும்,

"மாலாங்கனே யிங்குயான் வந்தகாரணம்
நீலாங்கமேனியன் நேரிழையாளொடு
மூலாங்கமாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்ப வந்தேனே" (திருமந். 77)

எனவும் திருமூலர் தன் மாணாக்கர்களாகிய இந்திரன், மாலாங்கன் என்பவர்களை நோக்கிக் கூறும் முறையில் அமைந்த திருப்பாடல்களால் இக்காரணத்தினை நன்கு புலப்படுத்தியுள்ளார்.

திருமூலர் அருளிய திருமந்திரப் பனுவலைக் கேட்டுணர்ந்த மாணவர்கள் மாலாங்கன், இந்திரன், சோமன், பிரமன், உருத்திரன், கந்துரு, காலாங்கி, கஞ்சமலையன் என்னும் பெயருடைய எழுவராவர். இச்செய்தி,

"மந்திரம் பெற்றவழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன்பிரமன் உருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்சமலையனோடு
இந்த எழுவரும் என்வழியாமே" (திருமந். 69)

எனவரும் பாடலால் அறியப்படும். மூலனுடம்பிற் புக்குத் திருமூலராயெழுந்த சிவயோகியார், சிவபெருமான் திருவருளால் சதாசிவமூர்த்தியையொத்துச் சிவாகமப் பொருளை அறிவுறுத்தவல்ல முற்றுணர்வும் தேவர்க்கெல்லாம் முதன்மையும் பெற்று விளங்கிய திறத்தினை,

"நந்தியருளாலே மூலனைநாடிப்பின்
நந்தியருளாலே சதாசிவனாயினேன்
நந்தியருளால் மெய்ஞ்ஞானத்துள் நண்ணினேன்
நந்தியருளாலே நானிருந்தேனே" (திருமந். 92)

எனவரும் திருப்பாடலிற் குறித்துள்ளார்.

கி. பி. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த நம்பியாரூரர்

நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன் எனப் போற்றியிருத்தலாலும் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தருடன் திருநாவுக்கரசரும் அருளிய தேவாரப் பதிகங்களில் திருமந்திரப் பாடல்களின் சொற்றொடர்களும் பொருள்களும் பலவிடங்களில் எடுத்தாளப்பெறுதலாலும் திருமூலநாயனாரது காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முற்பட்டது என்பது நன்கு தெளியப்படும். திருமூலர் திருவாவடுதுறையில் மூவாயிரம் ஆண்டுகள் சிவயோகத்தில் அமர்ந்திருந்து ஆண்டுக்கு ஒருபாடலாக மூவாயிரந் திருப்பாடல்களை அருளிச் செய்தார் எனத் திருத்தொண்டர் புராணம் கூறும். இக் கூற்றுக்குத் தெளிவான சான்றுகள் கிடைக்காமற்போயினும் சேக்கிழாரடிகள் கூறுமாறு திருமூலர் நெடுங்காலம் சிவயோகத்தமர்ந்திருந்து திருமந்திரப் பனுவலைப் பாடியருளினார் என்பது,

> 'ஒப்பில் எழுகோடியுகம் இருந்தேனே' (திருமந். 74)

எனவும்,

> 'இருந்தேன் இக்காயத்தே எண்ணிலிகோடி' (திருமந். 80)

எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகளால் நன்கு துணியப்படும். 'இக்காயத்தே' எனத் திருமூலர் சுட்டியது சிவயோகியாராகிய அவர் தமதுடம்பைத் துறந்து மூலன் என்னும் இடையனது உடம்பிற் புகுந்து நிலைபெற்ற பின்னராதலின் அவரால் இக்காயம் எனச் சுட்டப்பட்ட உடம்பு மூலனுடம்பு எனக் கொள்ளுதல் பொருந்தும். மேற்குறித்த பாடல்களில் 'எழு கோடியுகம்', 'எண்ணிலி கோடி' என்ற தொடர்கள் 'அளவுபடாத பல்லாண்டுகள்' எனப் பொருள் தந்து நின்றன.

திருக்குறளிலுள்ள சொற்றொடர்களும் பொருள் களும் திருமந்திரத்தில் எடுத்தாளப் பெறுதலாலும், தொல் காலத்தில் மூன்று பகுதிகளாக இருந்த தமிழகம் திருமந்திரத்தில் ஐந்து மண்டலங்களாகப் பகுத்துணரப்படுத லாலும் கடைச்சங்க காலத்திற்குப் பின் கொங்குமண்டலம் அயலவர்க்கு இடந்தந்து கள்வர்பயத்தால் வழிப்போவார்க்கு

இடர் விளைவிக்குமியல்பினதாய் மாறிய செய்தியைத் திருமந்திரம் குறிப்பிடுதலாலும் திருமூலர் அருளிய திருமந்திர மாலை மூவாயிரம் பாடல்களால் முழுமை பெற்ற காலம் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டெனக் கொள்ளுதல் பொருந்தும். திருமூலர் திருஆவடுதுறையிற் சிவபோதியின்கீழ்ச் சிவயோகத்து அமர்ந்த காலம் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டுக்குப் பன்னூறாண்டுகள் முற்பட்டிருத்தல் வேண்டும். எனவே எண்ணிலிகாலம் சிவயோகத்தமர்ந்த திருமூலர் கடைச் சங்கம் நிலவிய காலத்திலும் தமிழ்நாட்டில் இருந்திருத்தல் கூடும் என எண்ணுதற்கு இடமுண்டு. தொல்காப்பியம் புறத்திணையியல் 20-ஆம் சூத்திரவுரையில்,

"யோகிகளாய் உபாயங்களான் முக்காலமும் உணர்ந்த மாமூலர் முதலியோர் அறிவன் தேயத்து அனநிலை வகையோராவர். அவர்க்கு மாணாக்கராகத் தவஞ் செய்வோர் தாபதப் பக்கத்தராவர்" என நச்சினார்க்கினியர் கூறும் விளக்கம் பெருமை வாய்ந்த சிவயோகியாராகிய திருமூல நாயனாரையும் அவர்தம் மாணாக்கர்களையும் குறித்ததெனக் கருதவேண்டியுள்ளது.

திருமூலர், வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் தெளிந்துணர்ந்த சிவஞானச் செல்வராய்த் தாம் சிவனருளாற் சிந்தித்துணர்ந்த சிவாகம உண்மைகளை இமய முதற் குமரி வரையுள்ள பாரத நாட்டவர் பலரும் ஓதியுணர்ந்து உய்தி பெறுதல் வேண்டும் என்னும் அருளுள்ளத்தால் இத்திருமந்திரமாலையை அருளிச் செய்துள்ளார். எனவே அவர் அருளிய திருமந்திரப் பாடல்களில் சைவ சித்தாந்தக் குறியீடுகளாகிய பதி, பசு, பாசம், ஆணவம், கன்மம், மாயை, சித்து, அசித்து, சரியை, கிரியை, யோகம், ஞானம், சத்து, அசத்து, சதசத்து, வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம், நாதம், விந்து, சத்தி, சாத்துமான், வயிந்தவம், சத்தாதி, வாக்குமனாதிகள், சாக்கிராதீதம், சுத்தம், துரியம், விஞ்ஞானர், பிரளயாகலத்து அஞ்ஞானர், சகலத்தின் அஞ்ஞானர், இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி,

கவச நியாசங்கள் முத்திரை, பத்மாசனம், பத்திராசனம், சிங்காதனம், பூரகம், கும்பகம், ரேசகம் என்றாற்போலும் வடசொற்களும் தொடர்களும், அக்காலத்திற் பொது மக்களிடையே வழங்கிய வழக்குச் சொற்கள் சிலவும் ஆங்காங்கே இடம் பெறுவனவாயின. தமிழ் வடமொழி யென்னும் இருமொழி களையும் கலந்து திருமூலர் தாமே படைத்துக்கூறிய அணுவன் (திருமந். 2051), மாயாள் (399) என்றாற்போலும் புதுச்சொற்களும் திருமந்திரத்தில் இடம் பெற்றுள்ளன. வேத சிவாகமங்களின் முடிந்த முடிபாகிய சைவம் என்ற பொருளிற் 'சித்தாந்தம்' என்ற வடசொற் றொடர் திருமூலர் திருமந்திரத்திலேதான் முதன்முதலாகக் காணப்படுகின்றது. சுந்தரர் காலத்துப் பல்லவ வேந்தனாகிய இரண்டாம் நரசிங்கவர்மன் தான் காஞ்சியில் எடுப்பித்த கயிலாயநாதர் கோயிலிற் பொறித்துள்ள வடமொழிக் கல்வெட்டில் சைவசித்தாந்த நெறியைப் பின்பற்றியவன் எனத் தன்னைக் கூறிக் கொள்கின்றான். இம்மன்னன் திருமூலநாயனார் காலத்திற்குப் பின் தோன்றியவன் ஆதலின் இவன் பின்பற்றிய சைவசித்தாந்தம் என்பது திருமூலர் திருமந்திரத்தில் விரித்துக் கூறப் பெற்றுள்ள சைவ சித்தாந்தத் தத்துவக் கொள்கையே எனக் கருதுதல் பெரிதும் பொருத்தமுடையதாகும்.

ஆரியமும் தமிழுமாகிய இருமொழிகளையும் நன்கு தேர்ந்து குமரி முதல் இமயம் வரை போக்குவரவு புரிந்த சிவயோகியாராகிய திருமூலர் அருளிய திருமந்திரத்தில் இருமொழிக்கும் பொதுவாகிய சமய சாத்திரக் குறியீடுகளும் பொதுமக்களிடையே பயின்ற வழக்குச் சொற்களும் விரவிக் காணப்படுதல் இயல்பு. ஆகவே திருமந்திரப் பாடல்களின் சொல்லமைப்பு ஒன்றே பற்றித் திருமூலர் காலத்தின் தொன்மையினைக் குறித்து ஐயுறுதற்குச் சிறிதும் இடமில்லையென்க.

## திருமந்திர நூலமைப்பு

திருமூலர் அருளிச் செய்த திருமந்திரம், தமிழ்ச்

சிவாகமம் என்பதனை அறிஞர் பலரும் நன்கறிவர். சிவாகமங்கள் தந்திரம், மந்திரம், உபதேசம் என்னும் மூவகை உரையளவைகளையும் உறுப்பாகக் கொண்டன. அவற்றுள் தந்திரகலையாவது, வேத சிவாகமங்களின் வகையாகிய கருமகாண்டம் ஞானகாண்டம் உபாசனாகாண்டம் என்னும் மூன்றனுள் கருமகாண்டம் பற்றி முன்னொடுபின் மாறுகோளின்றி அனுட்டித்தலை அறிவுறுத்துவது. மந்திரகலை என்பது, உபாசனாகாண்டம் பற்றி மன முதலிய அடக்கித் தெய்வத்தை வழிபடு முறையினை விரித்துரைப்பது. உபதேசகலை என்பது ஞானகாண்டம் பற்றித் தனக்கு முதலும் முடிவுமில்லாத இறைவன் தன்னின் வேறல்லாத எண்குணங்களையுடையனாதல், தன்னின் வேறாகிய பசு பாசங்களையுடையனாதல் முதலிய இறைவனுடைய இயல்புகளைத் தான் உணருமாறும் பிறர்க்கு உணர்த்து மாறும் விளங்க அறிவுறுத்துவதாகும். இனி, "சாத்திரங்களை முன்னொடுபின் மலைவறக் கொள்ளுகிறது தந்திரகலையாம் என்றும், கரணங்களுடைய வியாபாரங்களை அடக்கி அவரவர் தங்களுக்கு வேண்டின தெய்வங்களை அந்தந்த மந்திரங்களினாலே வழிபடுகிறது மந்திரகலையாம் என்றும், தனக்கு முதலும் முடிவுமில்லாத பரமேசுவரனுடைய சிவஞானத்தைப் பக்குவான்மாக்களுக்குப் போதிப்பது உபதேசகலையாம் என்றும்" ஞானகாண்டம் ஒன்றே பற்றி இம்மூவகைக் கலைகளின் இலக்கணங்களைப் பகுத்துரைத்தலும் ஏற்புடையதேயாகும். ஆகமங்களுக்கு அங்கமாகிய இம்மூவகை உரையளவைகளையும்,

> "அனாதியேயமலனாய அறிவனூலாக மந்தான்
> பினாதிமாறின்றிப் பேணல் தந்திரம், மந்திரந்தான்
> மனாதிகளடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மையாகும்
> தனாதியீறிலான்தன் தன்மை யுணர்த்துதல்
> உபதேசந்தான்" (சித்தியார். சுபக்கம். 13)

எனவரும் திருவிருத்தத்துள் அருள்நந்தி சிவாசாரியார் சுருக்கமும் தெளிவும் பொருந்த விளக்கியுள்ளார்.

மேலே கூறப்பட்ட தந்திரம் மந்திரம் உபதேசம் என்னும் மூவகை உரைத்திறங்களும் ஒருங்கமைந்த

செந்தமிழ்ச் சிவாகமமாகத் திகழ்வது திருமூலர் அருளிய இத்திருமந்திரமாலையாகும். தந்திரம் மந்திரம் உபதேசம் எனப்படும் மூன்றனுள் நடுவேயுள்ள மந்திரம் என்பது, முன்னுள்ள தந்திரத்தோடும் பின்னுள்ள உபதேசத்தோடும் பிரிவின்றியமைந்த தொடர்பினதாகிய தலைமை பற்றி இத்தமிழாகமத்தை 'மந்திரமாலை' எனக் குறித்துள்ளார். தமிழ் மூவாயிரமாகிய இத்திருமந்திரத்தின் பாடல்கள் ஒன்பது தந்திரங்களாக வகுக்கப்பெற்றன என்பது, 'தந்திரம் ஒன்பது சார்பு மூவாயிரம் சுந்தரஆகமச் சொல்மொழிந்தானே' (திருமந். 101) எனவரும் இந்நூலின் பாயிரப்பாடலால் அறியப்படும்.

சைவ சமயத்துட் கூறப்படும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளையும் அறிவுறுத்தக் கருதிய திருமூலர், நாற்சீரடி நான்கு கொண்ட கலிவகை யாப்பினால் இதனை இயற்றியுள்ளார். செப்பலோசை தழுவிய இக்கலிப்பாவகை திருமந்திரத்தில்தான் முதன்முதற் காணப்படுகிறது. எனவே இதனைத் திருமந்திரயாப்பு என்பர் விபுலாநந்த அடிகளார்.

இந்நூலுக்குத் திருமூலர் இட்டபெயர் திருமந்திர மாலை என்பதாகும். 'மறப்பிலர் நெஞ்சினுள் மந்திரமாலை, உறைப்பொடுங்கூடி நின்றோதலுமாமே' (திருமந்.86) எனவரும் இந்நூற் பாயிரப்பகுதியாலும் 'ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந்திரமாலை' எனச் சேக்கிழாரடிகளும் 'மூலர் திருமந்திரமாலை' என உமாபதி சிவமும் கூறுதலானும் இப்பெயர் வழக்கம் இனிது புலனாகும். இது, மூவாயிரம் தமிழ்ப் பாடல்களையுடைமை பற்றித் 'தமிழ் மூவாயிரம்' எனவும் வழங்கப்பெறும். 'முன்னிய அப்பொருண்மாலைத் தமிழ் மூவாயிரஞ்சாத்தி' என்பது பெரிய புராணம்.

இந்நூல், தொல்காப்பியனார் கூறிய எழு நிலத் தெழுந்த செய்யுட்களுள் 'மறைமொழிகிளந்த மந்திரத் தான' என்ற செய்யுளின் பாற்படுதலின் திருமந்திரம் என வழங்கப்பெறுவதாயிற்று. தாம் சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டும் குறைவின்றிப் பயன் தரச் சொல்லும் ஆற்றல் வாய்ந்த நிறைமொழி மாந்தராகிய

பெரியோர், 'இஃது இவ்வாறாகுக' எனத் தமது ஆணையாற் சொல்லப்பட்டு, அவ்வாற்றல் அனைத்தையும் தன்கட் பொதிந்து வைத்துள்ள செறிவுடைய நன்மொழிகளே மந்திரம் எனப்படும். இதன் இயல்பினை ஆசிரியர் தொல்காப்பியனார்,

> "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
> மறைமொழி தானே மந்திரம் என்ப" (செய்யுளியல்)

என்ற நூற்பாவில் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளார். இந்நூற்பாவை அடியொற்றியதே,

> "நிறை மொழி மாந்தர் பெருமை நிலத்து
> மறைமொழி காட்டி விடும்" (திருக்குறள் 28)

எனவரும் திருக்குறளாகும். "நிறைமொழி என்பது அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களைப் பயந்தே விடும் மொழி" என்றார் பரிமேலழகர். நிறைமொழி மாந்தராவார், இருவகைப் பற்றுக்களையும் நீக்கி ஐந்து புலன்களையும் அடக்கி எவ்வுயிர்க்கும் அருளுடையராய் வாழும் பெரியோர். ஆணையிற்கிளத்தலாவது, 'இஃது இவ்வாறு ஆகுக' எனத் தமது ஆற்றல் தோன்றச் சொல்லுதல். மறைமொழி புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லும் சொற்றொடர் என்பர் பெரியோர். இனி, மறைமொழி என்பதற்குப் பலர்க்கும் புலப்படாது மறைந்துள்ள அரிய உண்மைகளைத் தன்னகத்தே பொதிந்துள்ள மொழி எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். சான்றோர் எண்ணியவண்ணம் செயற்படுத்தற் குரிய ஆற்றல் முழுவதும் தன் கண் வாய்க்கப் பெற்ற மொழியே மந்திரம் எனப்படும் என்பார், அதனை 'வாய்மொழி' (செய்யுளியல் 75) என்ற பெயராலும் குறித்தார் தொல்காப்பியனார்.

இவை தமிழ்மந்திரம் என்றற்கும், மந்திரந்தானே பாட்டாகி அங்கதம் எனப்படுவனவும் உள. அங்கதப்பாட்டு அல்லாத மறைமொழியே மந்திரம் என ஈண்டுச் சிறப்பித்துரைக்கப்படும் என்றற்கும் 'மறைமொழிதானே' எனப் பிரித்துரைத்தார். எனவே சபித்தற்பொருளில் வரும்

மந்திரச் செய்யுளை அங்கதப்பாட்டு எனவும் வசைப் பொருளில் வாராது உலக நலங்குறித்து வரும் மறைமொழி யினையே மந்திரம் எனவும் வழங்குதல் ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தென்பது நன்கு விளங்கும். திருமூல நாயனார் திருவாய் மலர்ந்தருளிய இத் திருமந்திரமாலை முற்குறித்த தொல்காப்பிய இலக்கணத்தின்படி அமைந்த தமிழ் மந்திரங்களுக்குரிய சிறந்த இலக்கியமாகத் திகழும் சிறப்புடையதாகும். 'ஊன் பற்றி நின்ற உணர்வுறும் மந்திரம்' (85) எனத் திருமூல நாயனாரும், 'சிவயோகமிகு மந்திரமாம் முறையொன்று' எனத் திருமுறை கண்ட புராண ஆசிரியரும் இதனை மந்திரப்பனுவலாகக் குறித்துள்ளமை இங்கு நினைக்கத் தக்கதாகும்.

தமிழ் மூவாயிரமாகிய இந்நூல் பொருள் தொடர்பு உடையதாய் மாலை போன்று அமைந்திருத்தலின் இதனை 'முன்னிய அப்பொருண்மாலைத் தமிழ் மூவாயிரம்' என்றார் சேக்கிழார். இறைவன் சிவயோகியாரது பண்டைய வுடம்பினை மறைப்பித்துச் சாத்தனூர் மூலனுடம்பில் நின்றவாறே திருவாவடுதுறையில் சிவயோகத்து அமரும் வண்ணம் செய்தருளியது, இறைவனூலாகிய சிவாகமங் களை இந்நிலவுலகில் தமிழால் வகுத்தருளிச் செய்ய வேண்டும் என்னும் திருவுளக்குறிப்பினாலேயென்பதும் இத்திருவருட் குறிப்பினையுணர்ந்த திருமூலர் திருவாவடு துறையில் அம்மையப்பரை வணங்கிச் சிவயோகத் தமர்ந்து தமிழாகமம் ஆகிய இத்திருமுறையினை அருளிச் செய்தார் என்பதும்,

> "தண்ணிலவார் சடையார் தாம்தந்த ஆகமப்பொருளை
> மண்ணின் மிசைத்திருமூலர் வாக்கினால் தமிழ் வகுப்பக்
> கண்ணிய அத்திருவருளால் அவ்வுடலைக் கரப்பிக்க
> எண்ணிறைந்த வுணர்வுடையார் ஈசரருள்
> எனவுணர்ந்தார்" (பெரிய. திருமூலர்)

எனவரும் சேக்கிழார் வாய்மொழியாலும்,

> "சிந்தைசெய்தாகமஞ் செப்பலுற்றேனே" (திருமந். 73)

எனவும்,

"என்னை நன்றாக இறைவன் படைத்தவன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே" (திருமந். 81)

எனவும் மேல் எடுத்துக்காட்டிய திருமூலர் வாய்மொழி களாலும் நன்குணரப்படும்.

மூவாயிரந் திருப்பாடல்களையுடைய திருமந்திரத்தில் காப்புச் செய்யுளோடு சேர்த்து 3048 பாடல்கள் உள்ளன. இவையன்றிப் பிறநூலுரைகளில் மேற்கோளாகக் காட்டப் பட்டு இந்நூலுட் சேர்க்கப்படாதவை 11 பாடல்கள். ஏட்டுச் சுவடிகளிலிருந்து வெளிவராதனவாய்ச் சைவசித்தாந்த சமாசப் பதிப்பிற் காட்டப்பெற்ற பாடல்கள் 17. இவற்றின் மேலாக வெள்ளியம் பலவாணத் தம்பிரான் சுவாமிகளால் ஞானாவரணபாடியத்திலும் முத்திநிச்சயப் பேருரையிலும் காட்டப்பட்ட திருமந்திரப் பாடல்களில் இதுவரை வெளிவராதன ஏறக்குறைய 30 திருப்பாடல்கள். இவை யெல்லாவற்றையும் சேர்த்து எண்ணுங்கால் திருமந்திரத்தின் பாடற்றொகை மூவாயிரத்து நூறு என்னும் எண்ணையும் கடந்துவிடும். இவ்வாறு திருமந்திரப்பாடல்கள் மூவாயிரத்துக்கும் மேலாக மிகுந்து காணப்படுதற்கு, இவற்றுட்சில இந்நூலில் இருமுறையும் மும்முறையுமாக இடம்பெற்றிருத்தலும், சில பாடல்கள் பாடபேதங்களால் உருத்திரிந்து வெவ்வேறு பாடல்களாக எழுதப் பெற்றிருத்தலும் இவ்வருள் நூலின் யாப்பினை யடி யொற்றிப் பிற்காலத்திற் பாடப்பெற்ற பாடல்கள் சில யாப்பு ஒப்புமை பற்றித் திருமந்திரம் என்ற பெயராற் குறிக்கப் பட்டிருத்தலும், அவற்றுட் சில இந்நூலினுள்ளே இடைச் செருகலாக இடம் பெற்றிருத்தலும் காரணங்களாகும்.

திருமூலநாயனார் இத்திருமந்திரமாலையை 'ஒன்றவன்றான்' என்ற திருப்பாடலை முதலாகக் கொண்டு தொடங்கி மூவாயிரம் திருப்பாடல்களால் நிறைவேற்றி யருளினார் என்பது,

"ஏனவெயிறணிந்தாரை 'ஒன்றவன்றான்' என் றெடுத்து", "முன்னிய அப்பொருண்மாலைத் தமிழ் மூவாயிரஞ்சாத்தி" எனவரும் சேக்கிழார் வாய்மொழிகளால்

இனிது விளங்கும். 'ஒன்றவன்றான்' எனவரும் இத்திருப் பாடலுக்கு முன்னேயுள்ள 'ஐந்துகரத்தனை' என்னும் விநாயகர் வணக்கத் திருப்பாடல் இந்நூற்குக் காப்புச் செய்யுளாகப் பின்வந்த சான்றோரொருவராற் பாடிச் சேர்க்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்பர் அறிஞர்.

இனி, திருமந்திரம் பாயிரப்பகுதியிலுள்ள 112 பாடல் களில் 67 பாடல்களே திருமூலர் வாக்கென்றும் ஏனைய 45 பாடல்களும் இடைச்செருகல் என்றும் கருதுவாரும் உளர். திருமந்திர நூலின் தொடக்கத்திலமைந்த கடவுள் வாழ்த்துப் பாடல்களும், திருமூலர் தமது குருமரபின் வழிமுறை கூறும் குரு பாரம்பரியமும் ஆசிரியர் தாம் இந்நூலை இயற்றுதற் குரிய சூழ்நிலையும் நோக்கமும் ஆகிய இயைபினைப் புலப்படுத்தும் முறையில் தமது வரலாற்றினைத் தாமே கூறுவதாக அமைந்த திருமூலர் வரலாறும், ஆசிரியர் கூறும் அவையடக்கமும் ஆகிய பகுதிகள் இந்நூலின் தொடக்கத்தே விரித்துக் கூறுதற்குரிய பாயிரப் பொருள்களாதலின், இவை திருமூலர் வாக்காகவே கொள்ளத்தக்கன.

"சிந்தை செய்தாக மஞ்செப்ப லுற்றேனே" (திருமந். 73)

"ஒப்பில் எழுகோடி யுகமிருந் தேனே" (திருமந். 74)

"சேர்ந்திருந்தேன் சிவன் ஆவடுதண்டுறை" (திருமந். 79)

"இருந்தேன் இக்காயத்தே எண்ணிலிகோடி" (திருமந். 80)

"தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே" (திருமந். 81)

"நானுமிருந்தேன் நற்போதியின் கீழே" (திருமந். 82)

எனத் திருமூலர் தன்மையொருமையில் வைத்துத் தம்மைப் பற்றிக் கூறிய இவ்வகைச் சான்றுகளைப் பின்வந்தோர் கூற்றாக ஒதுக்கி விடுதல் ஒரு சிறிதும் பொருந்தாது. இத்திருப்பாடல் களையே ஆதாரமாகக் கொண்டு சேக்கிழார் திருமூலர் வரலாற்றை விரித்துக் கூறியுள்ளமையும் இங்குக் கருதத் தக்கது. இப்பாயிரத்திறுதியில் திருமந்திரப் பாடல் தொகை யினையும் பொருட்சிறப்பினையும் கூறும் 99, 100ஆம் பாடல்களும், குரு வரலாறு கூறும் 101, 102 ஆம் பாடல்

களும் பிற்காலச் சான்றோராற் பாடப்பெற்றுப் பாயிரத்திறுதி யிற் சேர்க்கப்பட்டனவாகும்.

> "மூலனுரை செய்த மூவாயிரந்தமிழ்
> மூலனுரை செய்த முந்நூறு மந்திரம்
> மூலனுரை செய்த முப்பதுபதேசம்
> மூலனுரை செய்த மூன்றுமொன் றாமே" (திருமந். 3046)

என்ற பாடலை ஆதாரமாகக் கொண்டு திருமூலர் தமிழ் மூவாயிரமாகிய திருமந்திரத்தின் வேறாக முந்நூறுமந்திரம், முப்பது உபதேசம் என்ற இரண்டு நூல்களையும் இயற்றினார் எனவும் இவையிரண்டும் அவர் மூலனுடம்பிற் புகுவதற்கு முன் இயற்றப்பட்டனவென்றும் கூறுவாருமுளர். திருமூலர் திருமந்திரமாலையின் வேறாக இரண்டு நூல்களைச் செய்துள்ளதாகச் சேக்கிழாரடிகள் திருமூலநாயனார் புராணத்திற் குறிப்பிடவில்லை. மேற்குறித்த பாடலிற் குறிப்பிடப்பட்ட மூவாயிரந்தமிழ், முந்நூறுமந்திரம், முப்பது உபசேதம் என்னும் இம்மூன்றும் திருமந்திரமாலை யாகிய இந்நூலில் அமைந்துள்ள மூவகைப் பொருட் கூறுகளையே குறித்தன எனக் கருதவேண்டியுள்ளது. இக்கருத்தினை உறுதிப்படுத்தும் முறையில் இந்நூல் முதல் தந்திரத்தின் தொடக்கத்தில் 'உபதேசம்' என்ற தலைப்பில் முப்பது திருப்பாடல்கள் அமைந்திருத்தல் காணலாம். இதுபோலவே 'முந்நூறுமந்திரம்' என்பதும் இதன்கண் அமைந்த மற்றொரு பகுதியாய் அடங்கியிருத்தல் வேண்டும். மூவாயிரந்தமிழ் என்றது மூவாயிரந்தமிழ்ப் பாடல் தொகையைச் சுட்டி நின்றதாகும். மூவாயிரம் தமிழ்ப்பாடல்களையுடைய இந்நூல், முப்பது உபதேசமும் முந்நூறு மந்திரங்களும் உடையதாய்த் தந்திரம் மந்திரம் உபதேசம் எனப்படும் மூவகையுறுப்புக் களையும் பெற்று ஒப்பற்ற தமிழாகமமாகத் திகழ்கின்றது என்பதே இப் பாடலின் கருத்தாகும். திரு விசுவநாத பிள்ளையவர்கள் வெளியிட்ட திருமந்திரப் பதிப்பில், நான்காந் தந்திரத்தில் திருவம்பலச்சகரம் 89 பாடல்கள், வயிரவிமந்திரம் 50 பாடல்கள், ஏரொளிச்சக்கரம் 36 பாடல்கள், வயிரவச்சக்கரம் 6 பாடல்கள், சாம்பவி மண்டலச் சக்கரம்

10 பாடல்கள், புவனாபதிச் சக்கரம் 12 பாடல்கள், நவாக்கரி சக்கரம் 100 பாடல்கள் ஆக 303 பாடல்களே இங்குக் குறிக்கப்பட்ட முந்நூறு மந்திரம் எனவும், முதல் தந்திரத்தில் உபதேசம் என்ற தலைப்பிலுள்ள முப்பது பாடல்களே முப்பதுபதேசம் எனவும் வெளியிடப் பெற்றுள்ளமை இக்கருத்தினை வலியுறுத்தல் காணலாம்.

தமிழ் மொழியில் முதல்நூலாக அருளிச்செய்யப் பெற்றது திருமந்திரமாலை என்பது தொன்றுதொட்டு வழங்கிவரும் வரலாற்றுண்மையாகும். திருமூலராகிய சிவயோகியார் தாம் கயிலையிலிருந்து வரும்பொழுதே 'மந்திரமாலிகா' என்றொரு வடமொழி நூலைக் கொண்டு வந்து தமிழில் மொழிபெயர்த்தாரென்றும், உபமன்யு பத்தவிலாசத்திற் கூறப்படும் அவரது வரலாற்றை நோக்கின் இதன் முதனூல் வடமொழியில் உள்ளதென்பது போதரும் என்றும் அறிஞர் ஒருவர் எழுதியுள்ளார். உபமன்யுபத்த விலாசம் என்பது சேக்கிழார் இயற்றியருளிய பெரிய புராணத்தை அடியொற்றி வடமொழியில் அமைந்த மொழி பெயர்ப்பு நூலென்பது, காய்தலுவத்தலகற்றி ஆராயவல்ல நல்லறிஞர் பலர்க்கும் ஒப்ப முடிந்த உண்மையாகும். வடமொழியில் அமைந்த அந்நூலில் திருமந்திரமாலை என்னும் இந்நூலின் பெயர், 'ஸ்ரீமந்த்ர மாலிகா' எனக் குறிக்கப்பட்டிருத்தலை ஆதாரமாகக் கொண்டு திருமூலரால் முதனூலாக அருளிச்செய்யப்பெற்ற திருமந்திரத்தை வடநூலொன்றின் மொழிபெயர்ப்பாகத் துணிந்து கூறுதல் நடுநிலையில் நின்று உண்மை காணும் ஆராய்ச்சியாளர்க்கு அடாத செயலாம். ஆரியமும் தமிழும் வல்ல சிவயோகியா ராகிய திருமூலர் இறைவன் திருவருளால் தியானநிலையி லிருந்து அருளிய திருமந்திரம் வடநூலின் மொழிபெயர்ப் பாக இருக்குமானால் இந்நூல் அருளிச் செய்த வரலாற்றை விரித்துரைக்கும் இந்நூற்பாயிரப் பகுதியில் இச்செய்தியைத் தெளிவாகக் குறித்திருப்பர். அவ்வாசிரியருடைய வாய் மொழிகளை அகச்சான்றுகளாகக் கொண்டு அவரது வரலாற்றினை விரித்துரைத்த சேக்கிழார் நாயனாரும் இக்குறிப்பினைத் திருத்தொண்டர் புராணத்தில் தெளிவாக விளக்கிக் கூறியிருப்பர். 'சிந்தை செய்து ஆகமஞ்

செப்பலுற்றேன்' (73) எனவும், 'பெருஞ்சுடர் ஒன்றின் வேரறியாமை விளம்பு கின்றேன்' (96) எனவும் திருமூலர் இந்நூற்பொருளைத் தாம் சிந்தித்துணர்ந்த அனுபவ மொழிகளில் வைத்து அருளிச் செய்திருத்தலாலும், திருவாவடுதுறையில் மூவாயிரம் ஆண்டுகள் சிவயோகத்து அமர்ந்திருந்த திருமூலர் உலகமக்கள் உய்திபெறுதல் வேண்டும் என்னும் பேரருளால் தம் திருவுள்ளத்தே தோன்றிய எண்ணங்களை ஓராண்டுக்கு ஒரு திருப்பாட லாகக் கொண்டு மூவாயிரந் திருப்பாடல்கள் அருளிய திறத்தைத் திருமூலநாயனார் புராணம் 24, 25, 26 ஆம் பாடல்களில் சேக்கிழாரடிகள் விளக்கியிருத்தலாலும் திருமந்திரத்தை வடநூல் மொழிபெயர்ப்பெனக் கருது தற்குச் ஸ்ரீமந்த்ரமாலிகா என்னும் பெயரைத் தவிர அப்பெய ருடன் வடமொழியில் ஒருநூல் இருப்பதாகவோ அன்றி இருந்த தாகவோ கொள்ளுதற்குரிய சான்றினை அவர் குறிப்பிடாமையும் இங்குக் கருதத்தகுவதாகும்.

இறைவனூலாகிய சிவாகமங்கள் இருபத்தெட் டென்பதும், அவை அம்முதல்வனது ஈசான முகத்தி லிருந்து அருளிச் செய்யப்பெற்றன என்பதும்,

"அஞ்சனமேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொடிருபத்து மூன்றுள ஆகமம்
அஞ்சலிகூப்பி அறுபத்தறுவரும்
அஞ்சாமுகத்தில் அரும் பொருள் கேட்டதே"

(திருமந். 57)

எனவும் வரும் திருமந்திரத்தாற் புலனாம். சிவபெருமான் அருளிய ஆகமங்கள் இருபத்தெட்டிற்கு மேலும் எண்ணிலவாக உள்ளன என்பதும் அவ்வாகமப் பொருள் களை யெல்லாம் பல ஆண்டுகளாக சிந்தித் துணர்ந்ததன் பயனாகவே திருமூலர் இத்திருமந்திரப் பனுவலை அருளிச் செய்துள்ளார் என்பதும்,

"அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்
எண்ணில் இருபத்தெண்கோடி நூறாயிரம்
விண்ணவர் ஈசன் விழுப்பொருள் உரைத்தனர்
எண்ணிநின்றப் பொருள் ஏத்துவன் நானே" (திருமந். 58)

என வரும் அவரது வாய்மொழியால் அறியப்படும்.

சிவபெருமானிடமிருந்து சத்தியும், சத்தியிடமிருந்து சதாசிவமும் அவர்பால் மகேசுவரரும் அவரிடமிருந்து ஸ்ரீகண்ட உருத்திரரும், அவர்பால் திருமாலும், அவரிடமிருந்து பிரமதேவரும் அவரிடமிருந்து உருத்திரரும் இம்முறையே உபதேசம் பெற்றனரென்றும், இவர்கள் தனித்தனியே உபதேச வாயிலாகப் பெற்றுணர்ந்த காரணம் காமிகம், வீரம், சிந்தியம், வாதுளம், வியாமளம், காலோத்திரம், சுப்பிரம், மகுடம் என்னும் இவ்வொன்பது ஆகமங்களையும் திருநந்திதேவர் ஒருங்கு கைவரப்பெற்றார் என்றும் ஆகமச் சிறப்பினை அறிவுறுத்தும் முறையில் அமைந்தன,

> **"சிவமாம் பரத்தினிற் சத்திசதாசிவம்**
> **உவமா மகேசர் உருத்திர தேவர்**
> **தவமால் பிரமீசர் தம்மில் தாம்பெற்ற**
> **நவஆகமம் எங்கள் நந்தி பெற்றானே"** (திருமந். 62)

எனவும்,

> **"பெற்ற நல்லாகமங் காரணங்காமிகம்**
> **உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம்**
> **மற்றநல்வியாமள மாகுங்காலோத்திரம்**
> **துற்றநற் சுப்பிரமம் சொல்லும் மகுடமே"** (திருமந். 63)

எனவும் வரும் திருமந்திரப் பாடல்களாகும். இங்குக் குறித்த ஒன்பது ஆகமங்களின் சாரமாகவே திருமந்திரத்தில் ஒன்பது தந்திரங்கள் அமைந்துள்ளன எனக் கருதுவாரும் உளர். இங்ஙனங் கூறுவதைக் காட்டிலும் சிவாகமங்களின் நுண்பொருள்களை ஒன்பது தந்திரங்களாகத் திருமூலர் வகைப்படுத்து உணர்த்தினார் எனக் கொள்ளுதலே ஏற்புடையதாகும் என்பர் அறிஞர்.

சிவாகமங்கள் தாம் கூறும் பொருள்களைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு பாதங்களாக வகுத்துரைப்பன. தமிழகாமமாகிய திருமந்திரத்தில் வேதச் சிறப்பும் ஆகமச் சிறப்பும் ஒருங்கே உணர்த்தப்பெற்றன.

வேதம் ஆகமம் என்னும் இருவகை நூல்களும் இறைவனால் அருளிச் செய்யப்பெற்றன எனவும், வேதம் உலகிய லொழுக்கத்தினை யுணர்த்தும் பொதுநூல் எனவும் ஆகமம் நிலவும் மெய்ந்நெறியாகிய சிவநெறியையுணர்த்தும் சிறப்பு நூல் எனவும் ஆசிரியர் குறித்தலால் இத்திருமந்திர மாலையிற் பொதுவாக வேதநூற் பொருளும் சிறப்பாகச் சிவாகம நூற்பொருளும் எடுத்தோதப் பெற்றன எனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். இந்நூலின் பெரும் பிரிவினைத் தந்திரம் எனவும் இவற்றுள் உள்ள திருப்பாடல் களை மந்திரம் எனவும் வழங்குதல் மரபு. இத்திருமந்திர மாலையின் ஆசிரியர் திருமூலர், உலகிய லொழுக்க நெறியினை விரித்துக் கூறும் பாடல்களில் தெய்வப்புலவர் திருவள்ளுவர் அருளிய திருக்குறளிலுள்ள சொற்றொடர் களையும் கருத்துக்களையும ஆங்காங்கே எடுத் தாண்டுள்ளமை காணலாம்.[1] இதனைக் கூர்ந்து நோக்குங்கால், தமிழாகமமாகிய இத்திருமந்திரத்திற்கு வேத சிவாகமங்களாகிய இறைவனூற்பொருளேயன்றிப் பண்டைத் தமிழ் நூற்பொருள்களும் மூலமாக அமைந் துள்ளமை இனிது புலனாகும்.

சிவாகமங்களின் ஞானபாதத்தில் உளவாகவும் மலைவுதீர்த்தற் பொருட்டு இறைவர் அருளத் தாம் கேட்டுணர்ந்த நுண்பொருள்களை நந்திபெருமான் சனற்குமாரர் முதலிய முனிவர்களுக்கு உபதேசித்தருளினார். நந்திதேவர்பால் உபதேசம் பெற்றவர் திருமூலராகிய சிவயோகியார் நந்திதேவர்பால் தாம் உணர்ந்த சிவாகமப் பொருளைத் திருமந்திரப் பாடல்களாக்கி அவற்றை ஒன்பது தந்திரங்களாக வகுத்துத் தமிழ்மூவாயிரமாக அருளிச் செய்தார். இத்திருமந்திரமாலை பதி பசு பாசம் என்னும் முப்பொருளுண்மையினையும் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளையும் அறிவுறுத்தும் நிலையில் அமைந்துள்ளது. இவ்வுண்மை,

---

1. க. வெள்ளைவாரணனார் எழுதிய பன்னிரு திருமுறை வரலாறு, இரண்டாம் பகுதி, பக்கம் 452 முதல் 456 முடியவுள்ள பகுதி பார்க்க.

"உள்ளுணர் வானஞான முதலிய ஒருநான்குண்மை
தெள்ளுதீந் தமிழாற் கூறுந்திருமூலர்"

எனவும்,

"நலஞ்சிறந்த ஞானயோகக் கிரியா சரியையெலாம்
மலர்ந்தமொழித் திருமூலர்"

எனவும் இந்நூலாசிரியரைக் குறித்தும்,

"ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந்திர மாலை"

என இந்நூலைக் குறித்தும் சேக்கிழாரடிகள் சிறப்பித்துப் போற்றுதலால் இனிது விளங்கும். 'ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந்திரமாலை' என்றமையால் சைவ சமயத்தின் ஞானநன்னெறியினை விளக்கும் முறையில் ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் ஆகிய நால்வகை நன்னெறிகளையும் திருமூலதேவர் இத்திருமந்திரப் பனுவலில் அருளிச் செய்துள்ளார் என்பது நன்கு விளங்கும்.

திருமூலர் தாம் கூறும் மந்திரப் பொருளை மக்கள் எல்லோரும் விரும்பிக் கேட்பதிலும், கேட்டு அவ்வழியில் ஒழுகிப் பயன்பெறுவதிலும் மனவெழுச்சியும் உறுதிப்பாடும் உடையராதற்பொருட்டுத் தாம் இந்நூல் வாயிலாக உணர்த்த எடுத்துக்கொண்ட சிவாகமப் பொருள்களின் சிறப்பும், சிவாகமம் தமக்குக் கிடைத்த வழிமுறையும், தாம் கேட்டுணர்ந்த ஆகமப் பொருளைத் திருமந்திரமாலையாகத் தமிழிற் சொல்ல நேர்ந்த காரணமும் என இந்நூலைப் பயில்வோர் இன்றியமையாது முதற்கண் அறிந்து கொள்ளுதற்குரிய செய்திகளை அறிவுறுத்தும் முறையில் அமைந்தது திருமந்திரத்தின் முதற்கண் அமைந்த பாயிரப் பகுதியாகும்.

வேதம் பொதுநூல், ஆகமம் சிறப்புநூல் என்பது முன்னர் உணர்த்தப்பெற்றது. இங்கு வேதம் எனப்படுவன வேதசிரம் எனவும் வேதாந்தம் எனவும் போற்றப்பெறும் ஞானபாதங்களாகிய உபநிடதங்களையென்பர் பெரியோர்.

"பிறவித் துன்பத்தினின்றும் நீங்கி வீடு பேறடைதலே அறிவுடைய நன்மக்களின் கடமையும் செயலும் ஆகும். பிறப்பறுத்து வீடு பெறும் நிலை ஆருயிர் முதல்வனாகிய சிவனையடைந்தாலன்றிக் கை கூடாது. சிவன் ஒருவனே எல்லார்க்குந் தலைவன். சிவனோடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை. அவன் படைத்தளித்தழிக்கும் மூவர்க்கும் முதல்வன். தாயினும் நல்லன். தேவர் முதலிய யாவரும் அவனையே தொழுவர். அவனால் தொழப்படுவார் ஒருவருமிலர். இடியும் முழக்கமும் ஈசன் உருவம். அயன் அரி அரன் மூவரும் ஆராய்ந்து நோக்குங்கால் இறைவனது அருளாகிய தொடர்ச்சியால் ஒருவரேயாவர். சிவனருளல்லது வேறு தெய்வமில்லை. சிவபெருமான் உயிர்கள் மேல் வைத்த பெருங்கருணையால் மன்னுயிர்கள் பாசப்பிணிப்பினின்றும் நீங்கி வீடுபேறடைதற்பொருட்டு வேதசிவாகமங்களை அருளிச் செய்துள்ளார். அவற்றின் வழியொழுகிப் பிறவிப் பெருங்கடல் நீந்தி வீடு பெறுதற்குரிய நற்செயல்களே அறிவுடைய நன்மக்களால் மேற்கொள்ளத்தக்கன. சிவபெருமான் ஆகமப்பொருளை நந்திதேவர்க்கு உபதேசித்தருளினார். அவர் கயிலையில் சனற்குமாரர் முதலிய முனிவர் நால்வர்க்கும் பதஞ்சலி வியாக்கிரர் ஆகிய முனிவர்க்கும் எனக்கும் உபதேசித்தருளினார். ஆகமப் பொருளைத் தமிழிற் சொல்லும் பொருட்டே என்னை இம்மூலனுடம்பில் இருக்கும்படி இறைவன் படைத் தருளினார். இறைவர் அருளின் வழியான் மூலனுடம்பிற் புகுந்து திருவாவடுதுறையிற் பல்லாண்டுகள் சிவயோகத்து அமர்ந்திருந்தேன். அரனடி நாள்தோறும் சிந்தை செய்து ஆகமம் செய்யலுற்றேன். இறைவன் ஆடியருளும் திருக்கூத்தின் சிறப்பினை அறிவுறுத்தும் மறைநூலாகிய இதனைச் செப்புதற்பொருட்டே யான் இங்கு வந்தேன். நான்பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுவதாகுக. யான் கூறிய ஞானம் மிக்க இம்மந்திரங்களை உளம் பொருந்திக் கேட்டுணர்வோர் இறைவனுடைய திருவடிகளில் தலைப்பெய்து இன்புறுவர்" என இப்பாயிரப் பகுதியில் திருமூலர் அறிவுறுத்தியருள்கின்றார்.

இந்நூலில் உள்ள ஒன்பது தந்திரங்களுள் முதற்கண்

உள்ள நான்கும் சிவஞானத்தைப் பெறுதற்கு விரும்பியவர் தம்மை உள்ளும் புறம்பும் தூய்மையுடையவராக்கிக் கொள்ளுதற்குரிய சாதனங்களை உணர்த்துவன. இடையிலுள்ள ஐந்தாந்தந்திரம் சமயங்களின் முடிந்த முடிபாகிய சைவ சித்தாந்த உண்மைகளை விரித்துரைப்பது. ஆறு முதல் ஒன்பது முடியப் பின்னுள்ள நான்கு தந்திரங்களும் ஞானம் பெறும் நிலையில் உணர்ந்து பெறத்தக்கனவாயுள்ள நற்பயன்களை விரித்துக் கூறுவன.

இந்நூலின் முதலாந் தந்திரம், ஞானம் பெற முயல்வோர் அதற்குரியவாறு தம்மைத் தூய நல்லொழுக்க நெறியில் நிலைக்கச் செய்து கொள்ளுதல் வேண்டும் என வற்புறுத்தி அதற்கு வேண்டிய சாதனங்கள் இவையென அறிவுறுத்துவதாகும். இஃது இருபத்துநான்கு அதிகாரங் களாகப் பகுக்கப் பெற்றுள்ளது. இதன் தொடக்கத்திலுள்ள முப்பது திருப்பாடல்களும் உபதேசம் என்ற தலைப்பில் அமைந்துள்ளன. இதனையடுத்து யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை என்பன உலகியல் வாழ்க்கை யனுபவங்களை எடுத்துக்காட்டி வற்புறுத்தப் பெற்றுள்ளன. அடுத்து உயிர் நிலையாமை யென்ற தலைப்பில் பத்துப் பாடல்கள் உள்ளன. உயிர்கட்கு என்றும் அழிவில்லையென்பது சைவ சித்தாந்தக் கொள்கை என்பதனை யாவரும் அறிவர். அங்ஙனமாகவும் இங்கு உயிர்நிலையாமையென்றது மன்னுயிர் தான் தங்கியுள்ள ஓருடம்பிலேயே என்றும் விரும்பி நிலைபெற்றிருக்க மாட்டாத தன்மையது என்பதனைக் கூறுவதாகும். 'வீயாது, உடம்பொடு நின்றவுயிரும் இல்லை' (புறம். 363) எனவரும் புறப்பாடல் தொடர் ஓருடம்பிலேயே நிலைத்திருக்க மாட்டாத தன்மையினை வற்புறுத்தல் காண்க. உயிர் நிலையாமையை யடுத்துக் கொல்லாமை, புலால்மறுத்தல், பிறன்மனை நயவாமை, மகளிர்இழிவு, நல்குரவு என்னும் அதிகாரங்களில் அமைந்த பாடல்கள் முறைப்படுத்தப் பெற்றுள்ளன. இவை தமிழ் மறையாகிய திருக்குறளில் அதிகாரத் தலைப்பினையும் அறப்பொருட் பகுதிகளையும் அடியொற்றியமைந்திருத்தல் காணலாம்.

இவற்றையெடுத்து, அக்கினிகாரியம், அந்தண

ரொழுக்கம் என்ற தலைப்பிலுள்ள பாடல்கள் வேதப் பொருளையுளங்கொண்டு கூறியனவாகும்.

அரசாட்சிமுறை, வானச்சிறப்பு, தானச்சிறப்பு, அறஞ்செய்வான்திறம், அறஞ்செயான்திறம், அன்புடைமை, கல்வி, கேள்வி, கல்லாமை, நடுவுநிலைமை, கள்ளுண்ணாமை ஆகிய தலைப்புக்களில் அமைந்த திருமந்திரப் பாடல்கள் உலகியலொழுக்கமாகத் தெய்வப் புலவர் திருவள்ளுவர் அருளிய பொருளுரைகளை அகத்துட்கொண்டு, அப் பொருள்களை உலகியலின் உயிர்நிலையாய் நிலவும் மெய்ந்நெறியாகிய சைவ சித்தாந்தத்திற்குப் பொருந்தும் வண்ணம் விரித்துக் கூறும் நிலையில் அமைந்துள்ளன. இங்குத் திருமூலர் கூறும் கல்வியாவது சிவபரம்பொருளைச் சிந்திக்கும் நிலையிலமைந்த கல்வியே. கேள்வி யென்றது அவ்விறைவனது பொருள்சேர் புகழ்த்திறங்களைக் கேட்டுணரும் கேள்வியினை. இவ்வாறே நடுவு நிலைமை, அன்புடைமை முதலாக இத்தந்திரத்திலுள்ள ஏனைய அதிகாரப் பொருள்களையும் சிவநெறியில் ஒழுகுவோர்க் குரிய சிறப்பியல்பினவாக ஆசிரியர் கூறியுள்ளமை கருதத் தகுவதாகும்.

வேத சிவாகமங்களின் ஒன்றுபட்ட துணிபு சிவனே பரம்பொருள் என்று முன் பாயிரத்திற் கூறிய பொருளைச் சிறப்புமுறையில் பிரித்துரைப்பதாக அமைந்தது திருமந்திரத் தின் இரண்டாந் தந்திரமாகும். இஃது அகத்தியம் என்பது முதல் பெரியாரைத் துணைக்கோடல் என்பது ஈறாக இருபத்தைந்து தலைப்புக்களையுடையது. இறைவன் வேண்டுதல் வேண்டாமையிலானாயினும் நம்மைப்போன்ற எண்ணில்லா உயிர்கள் உய்திபெறுதற்பொருட்டுத் தனது இயல்பாகிய பேரருளால் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களைச் செய்து கொண்டு இருக்கிறான். அம்முதல்வன் செய்யும் ஐந் தொழில்களுட்படுவன உயிர்கள் எடுத்துள்ள உடம்பும், அதன் அகக்கரணங்களும் புறக்கரணங்களும் உயிர்கள் வாழ்தற்கு இடனாகிய புவனங்களும், உயிர்கள் நுகர்தற்குரிய நுகர் பொருள்களும் ஆகும். உடலும் உயிருமாகச்

சேர்த்துப் படைக்கப்பெறும் நிலை 'கருவுற்பத்தி' என்ற தலைப்பில் பேசப்படுகிறது. உயிர்கள் ஒருமலமுடையன, இருமல முடையன, மும்மலமுடையன என்னும் பாகுபாட்டினால் முறையே விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகைப்படும் என்றும், அவற்றுள் வீடுபேற்றில் விருப்ப முடைய சகலவர்க்கத்தார் நூற்பொருளைக் கேட்டற்குரியர் என்றும், அறிவுறுத்தும் நிலையில் அமைந்தது 'மூவகைச் சீவவர்க்கம்' என்ற பகுதியாகும்.

சகல வர்க்கத்தாராகிய மக்கட் குலத்தார், இவ்வுலகில் நன்னெறியறிந்து ஒழுகிப் பிறவாநெறியாகிய வீடுபேற்றின்பத் தை அடைதற்கு உரியராதலின் தம்மால் வேண்டும் பொருளளித்து வழிபட்டு நற்பொருளைக் கேட்டுணர்தற் குரிய மெய்யுணர்வுடைய பெரியோர்களை அறிந்து வழிபட்டும் மனமாசகற்றும் தீர்த்தத்தின் இயல்பு தெரிந்தும் தம்மைத் தூய்மை செய்துகொள்ளுதல் வேண்டும் என்பதும், மன்னுயிர்கள் உய்தற்பொருட்டு இறைவன் அன்பர்க்கு எளிவந்து அருள்புரியும் அருள் நிலையங்களாகிய திருக்கோயிலின் பண்பு தெரிந்தும், அங்கு நிலையாக எழுந்தருளி யிருந்து உயிர்களின் இடரகற்றி இன்பமளிக்கும் இறைவனது அதோமுகத்து (கீழ்நோக்கிய முகத்தின்) இயல்பு கண்டும், அம்முதல்வனை வழிபட்டுச் சிவநிந்தை, குருநிந்தை, மாகேஸ்வரநிந்தை ஆகிய தீமைகளினின்றும் நீங்கி பொறை யென்னும் அணிகலனைப் பூண்டு, பெரியோரை அறிந்து, அவர்களைத் துணையாகக் கொண்டு, நன்னெறியில் ஒழுகி உய்தி பெறுதல் வேண்டுமென்றும் ஆசிரியர் இத்தந்திரத்தில் அறிவுறுத்தி உள்ளார்.

மூன்றாந்தந்திரம் அட்டாங்க யோகம் முதல் சந்திரயோகம் ஈறாக இருபத்தொரு தலைப்புக்களை யுடையது. இதன்கண் எண்வகை யோக உறுப்புக்களாகிய இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பனவும், இவற்றை மேற் கொண்டோர் அடையும் பேறுகளும் கூறப்பெற்றுள்ளன.

உயிர்களைக் கொல்லாதவனும், பொய்கூறாதவனும்,

பிறர் பொருளைத் திருடாதவனும், மதிக்கத்தக்க நற்பண்பு களை யுடையவனும், பிறவுயிர்க்கு நலஞ்செய்பவனும், மனமொழி மெய்கள் தீயவற்றிற் செல்லாது அடங்குத லுடையவனும், ஒருபக்கம் கோடாத நடுவு நிலைமை யுடையவனும், தன்பாலுள்ளவற்றை வறியோர்க்குப் பகுத்தளித்து உண்ணுபவனும், மனத்தின்கண் அழுக்கில்லாத வனும், கழிகாமம் ஆகிய குற்றங்கள் இல்லாதவனும் ஆகிய இயல்புடையவனே இயமம் என்னும் யோகவுறுப்பில் நிலைபெற்று ஒழுகுபவன் (திருமந்திரம் 554) என்பர் திருமூலர்.

தனக்குற்ற துன்பங்களைப் பொறுத்து, பிறவுயிர்க்குத் துன்பஞ் செய்யாமையாகிய தவமும், இறைவன் திருப்பெய ராகிய மந்திரத்தைச் செபித்தலும், என்றும் சிந்தையின் நிறைவாகிய மனமலர்ச்சியுடைமையும், மறுபிறப்பும் இருவினைப் பயனும் அதனையறிந்து உண்பிக்கும் இறைவனும் உண்டென்னும் உறுதிப்பாடும், வறியார்க்கு ஈதலும் சிவனை நினைந்து மேற்கொள்ளும் விரதமும் முடிந்த முடிவாகிய மெய்ந்நூற்பொருளைக் கேட்டுணர்தலும், சிவவேள்வியும், சிவபூசனையும், ஒளியுடைய பொருளைக் கூர்ந்துணரும் மெய்யுணர்வும் எனச் சொல்லப்பட்ட உயர்ச்சியுடைய இப்பத்துச் செயல்களையும் செய்யும் இயல்புடையோர், நன்றே புரிதலாகிய நியமத்தில் நிற்போர் ஆவர் (திருமந்திரம் 557) எனத் திருமந்திரம் கூறும்.

யோகத்திற்கு இன்றியமையாத இருக்கை 'ஆதனம்' எனப்படும். பத்திரம், கோமுகம், பங்கயம், கேசரி, சொத்திரம், வீரம், சுகாசனம் எனச் சொல்லப்பட்ட ஏழும் உத்தம ஆசனமாகும். இவற்றுடன் தொன்மையுடைய பிற ஆசனங்களையும் கூட்டி எண்ண எட்டு எனவும் பத்து எனவும் அறுபத்து நான்கு எனவும் நூறு எனவும் பலவாகும் (திருமந்திரம் 563) என்பர் திருமூலர்.

பிராணாயாமமாவது உந்திக்கமலத்திலிருந்து எழும் இடகலை பிங்கலையாகிய இருவகை உயிர்ப்பினையும், தத்தம் இயக்கத்திலிருந்து தடுத்து நிறுத்துதல் ஆகும். மெய்ப்பொருளை நினைந்து பிராணாயாமம் செய்வோர் தம்மனத்தை அடக்க வல்லவர் ஆவர். பிராணாயாமப்-

பயிற்சியின் பயன் குருவின் அருள்வழியே பெறத்தக்கது என்பதனை,

> "ஆரியன் நல்லன் குதிரை இரண்டுள
> வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை
> கூரிய நாதன் குருவின் அருள்பெற்றால்
> வாரிப் பிடிக்க வசப்படுந் தானே"

எனவருந் திருமந்திரத்தில் ஆசிரியர் அறிவுறுத்தியுள்ளார்.

(இ-ள்) குதிரைச் சேவகன் நல்லவன். குதிரைகளும் இரண்டுள்ளன. அவனைக் கொண்டு அக்குதிரைகளைத் தத்தம் புலங்களிற் செல்லுமாறு செலுத்தி இழுத்துப் பிடிக்கும் உபாயம் அறிபவர்கள் இல்லை. மெய்யுணர்வு மிக்க ஞானத்தலைவனாகிய குருவின் திருவருளைப் பெற்றால் சேர்த்துப் பிடிக்க (அக்குதிரைகள்) வசப்படும். எ-று.

ஆரியன் - குதிரைச் சேவகன், என்றது மனத்தினை. குதிரை இரண்டாவன இடகலை, பிங்கலை என்னும் இருநாடிகளில் செல்லும் வளிகள். வீசிப்பிடித்தல் - நெடுந்தூரம் செல்லுமாறு விட்டு இழுத்தல். விரகு - உபாயம், கூரிய - மெய்யுணர்வு மிக்க. வாரிப்பிடித்தல் - (இடகலை, பிங்கலை என்னும் இருவகை வளியையும்) சேர்த்துப் பிடித்தல். வசப்படுத்தல் - சுழுமுனை வழிச் சென்று கும்பித்தல்.

பிரத்தியாகாரமாவது மனத்தை ஐம்புலப் பொருள் களில் புறத்தே போகவிடாது அகமுகமாகத் திருப்பும் பயிற்சி. இது தொகைநிலையெனவும் கூறப்படும். மூக்குக்குக் கீழே பன்னிரண்டு அங்குல எல்லையிலுள்ள அநாகத்தானத்திலே சாதகனாகிய நீ உள்ளத்தை ஒருமை நிலையில் வைத்துப் பரம்பொருளைத் தியானித்தலையும் செய்ய வல்லாயாயின் பெருமை வாய்ந்த சித்தியும், பெருமை பொருந்திய (இராச) யோகமும் வந்து நின்னைப் பொருந்தும். உன்னுடைய உடம்புக்கு எக்காலத்தும் அழிவில்லை (திருமந்திரம் 581) என்பர் திருமூலர்.

தாரணையாவது தாங்கி நிற்றல், இது பொறை எனவும் பெயர் பெறும். 'மனத்தினை ஒருவழி நிறுப்பது பொறை நிலை' என்பது சிலப்பதிகார உரை மேற்கோள். புலன்வழிப் படாமல் அகமுகப்பட்டு நிற்கும் மனத்தினைக் குறிக்கத் தக்க பொருளாகிய சிவத்தினிடத்தே கொண்டு செலுத்தி அது கீழ்நோக்கிச் செல்லாதபடிப் பிணித்து நடுநாடியின் உள்வழியாக ஆறு ஆதாரங்களையும் கடந்து மேலைப் பெருவெளியை நோக்கிக் காணாத கண்களும் கேளாச் செவிகளும் எனக் கண்டோர் கருதும்படி இறைவனை அகத்தே நோக்கி நிற்கும் தாரணைப் பயிற்சி யுடையார்க்கு அப்பயிற்சி வாழ்நாள் வீணே கழியாதபடி அடைத்துக் காக்கும் உபாயமாகும் (திருமந்திரம் 568) என்பர் திருமூலர்.

தியானமாவது தாரணையில் நிறுத்தப்பட்ட உள்ளமானது ஐம்புலன்களாலும், அவற்றால் எய்தும் நுகர்ச்சிகளாலும் திரிபு அடையாமல் மெய்ப்பொருளாகிய இறைவனுடன் ஒன்றித் தொடர்புறும் நீளநினைதலாகும்

எண்ணாயிரம் ஆண்டுகள் யோகநிலையில் (உள்ளத்தை ஒருமைப்படுத்தி) இருந்தாலும் (தியானிப்போர்) கண்களாற் பருகுதற்கினிய அமுதமாகக் காட்சி நல்கும் இறைவனைக் கண்ணாரக் கண்டறிவார் இல்லை. (அம் முதல்வனை அவனருளால்) தம் உள்ளத்துள்ளே நாடி அகத் தெழுஞ் சோதியின் ஒளி தோன்றுமாறு இருந்து நோக்கி னால் கண்ணாடியினுள்ளே வடிவந்தோன்றுமாறு போல அம்முதல்வன் உள்ளத்துள்ளே கலந்து தோன்றுவான் எனத் தியானமாமாறும் அதன் பயனும் பற்றித் திருமூலர் நவின்றுள்ளார்.

சமாதி என்பது இயமம் முதலான யோக அங்கங்கள் ஏழிலும் பயிற்சி நிரம்பிய ஆன்மா, தன்னை மறந்து சிவத்துடன் ஒன்றியுணரும் நிலையாகும். ஞானத்தின் நுண்மை நிலையாகிய இதனை 'நொசிப்பு' என வழங்குதல் தமிழ் மரபாகும்.

**"கற்பனை யற்றுக் கனல்வழி யேசென்று**
**சிற்பனை யெல்லாஞ் சிருட்டித்த பேரொளிப்**

பொற்பினை நாடிப் புணர்மதி யோடுற்றுத்
தற்பர மாகத் தகுந்தண் சமாதியே"

என்பர் திருமூலர். (இ-ள்) பொருள்தோறும் உலகத்தார் கற்பித்து வழங்குகின்ற கற்பனைகளை யொழிந்து மூலாக்கினிவழியே மேற்சென்று (உலகினைச் சிருட்டித்த) சிற்பனும் பேரொளியாய்த் திகழும் அழகனும் ஆகிய இறைவனைத் தேடிப் புணர்ந்த சந்திரமண்டலத்தோடு பொருந்தித் தனக்கு மேலான பரம்பொருளே தான் ஆகும் நிலையில் தற்போதமிழந்து ஒன்றியுடனாகும் தகுதிவாய்ந்ததே உள்ளத்தைக் குளிர்விக்கும் தன்மையினதாகிய சமாதி (திருமந்திரம் 628).

கற்பனை - உலகத்தார் பொருள்தோறும் புனைந்து வழங்கும் பெயர், வடிவு முதலிய வேற்றுமைகள். கனல்- மூலாக்கினி. சிற்பன் - உலகினைப் படைத்த சிற்பி. என்றது உலகியற்றியானாகிய இறைவனை. புணர்மதி - மூலாக்கினி யின் வெம்மை சென்று சார்தற்கு இடனாகிய சந்திர மண்டலம். தற்பரம் - தனக்குப்பரம் என்றது, ஆன்மாவாகிய தனக்கு மேலான பொருள் என்றவாறு. தண்மை - குளிர்ச்சி. 'சிராப்பள்ளிக் குன்றுடையானைக் கூற என்னுள்ளங் குளிரும்மே' எனவும் 'உளங்குளிர் தமிழ்மாலை' எனவும் வரும் திருமுறைத் தொடர்கள், பிறவித் துயராகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்குவது இறைவன் திருவருள் நினைவாகிய சிவஞானம் என்னும் மெய்ம்மையை வற்புறுத்துவனவாகும்.

எண்வகை யோக உறுப்பினையடுத்து அணிமா, லகிமா, மகிமா, பிராத்தி கரிமா, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் ஆகிய எண்வகைச் சித்திகளின் இயல்பும் பயன்களும் கூறப்பெற்றுள்ளன.

அணிமா தம் உடம்பினை அணுவினும் மிக நுண்மையதாக்கிக் கொள்ளும் வன்மை. மகிமா- மலையினும் மிக்க பெருமையுடைய வடிவினைக் கொள்ளுந்திறன். கரிமா- இலேசான பஞ்சினையும் அளவிடமுடியாத கன முடையதாகச் செய்யும் ஆற்றல். இலகிமா - எத்துணைக்

கனமுடைய பொருளையும் ஆகாயத்தினும் நொய்தாகச் செய்யும் திறன். பிராப்தி - வேண்டியவெல்லாம் விரும்பிய வாறு அடையப்பெறுதல். பிராகாமியம் - விரும்பிய நுகர் பொருள்களைப் படைத்து விரும்பிய பலவடிவிற் புகுந்து அவற்றை நுகர்தல். ஈசத்துவம் - தத்துவங்களை நீங்காமல் நின்று அவற்றை நடத்தும் இயல்பினால் தேவர் முதலியோரால் வழிபடப் பெறுதல். வசித்துவம் - எல்லா உலகங்களையும் தன்வசப்படுத்துதல். இவ்வெண்வகைச் சித்திகளையும்,

> "தானே அணுவும் சகத்துத்தன் நோன்மையும்
> மானாக் கணமும் பரகாயத் தேகமும்
> தானாவதும் பரகாயஞ் சேர் தன்மையும்
> ஆனாத வுண்மையும் வியாபியும் ஆம்எட்டே"

(திருமந். 649)

எனத் திருமூலர் விளக்கியுள்ளமை காணலாம்.

நன்னெறியினை நாடிய சாதகன், தான் இப்பிறப்பிற் கொண்டுள்ள ஓர் உடம்பில் இருந்து கொண்டே தான் வேண்டிய பயன்களைப் பெறுதல் வேண்டும். அதற்கு உபாயம் தனது உடம்பினை நெடுங்காலம் நிலைபெறச் செய்தலேயாகும் மூன்றாந் தந்திரத்தின் உள்ளுறையாவது சரீரசித்தி உபாயமாகும். உடம்பின்றி உயிர்த் தனித்து நின்று தொழில் புரிதல் இயலாது. அறம் முதலிய உறுதிப் பொருள்களை உயிர் பெறவேண்டுமாயின் அதற்குரிய முயற்சிகளை உடம்பொடு கூடி நின்றே செய்தல்வேண்டும். ஆகவே ஞானசாதனமாகிய உடம்பினைப் பேணுதல் உயிருக்கு இன்றியமையாதது என்னும் உண்மையினை,

> "உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
> திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவுமாட்டார்
> உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
> உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"

(திருமந்திரம் 724)

> "உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
> உடம்பினுக்குள்ளே யுறுபொருள் கண்டேன்

உடம்புளே யுத்தமன் கோயில் கொண்டானென்
றுடம்பினை யானிருந் தோம்பு கின்றேனே"

(திருமந்திரம் 725)

எனவரும் திருமந்திரங்களால் திருமூலர் அறிவுறுத்தி யருள்கின்றார்.

மேற்குறித்த வண்ணம் இயமம் நியமம் முதலிய எண்வகை யோக வுறுப்புறுப்புக்களால் உடம்பினைப் பேணி மனத்தினை ஒருமை நிலையிற் கொணர்ந்து சிந்தையில் எழுந்தருளிய முழுமுதற்பொருளை நினைந்து போற்றும் தவநெறியினை 'நாலிருவழக்கின் தாபதப்பக்கம்' (தொல். புறத்.) என்பர் தொல்காப்பியனார். உடம்பினைத் தூய முறையில் நன்கு பேணிச் சரியை கிரியை ஆகிய நெறிகளிற் பயின்ற பின்னர்ச் சிவயோகத்தில் நிலைபெற்று அமர்ந்து சிவஞானமாகிய பயனைப் பெறுதற்கு நிறைமொழி மாந்தராகிய பெருமக்கள் அருளிய மறைமொழிகளாகிய மந்திரங்களின் பயிற்சியும் அவற்றின் வன்மையுமே பெறுதல் இன்றியமையாததாகும். எனவே இத்திருமந்திரத்தின் நாலாந் தந்திரத்தில் திருவம்பலச் சக்கரம் முதலிய மந்திரச் சக்கரங்களின் உபாசனை முறைகள் விரிவாக விளக்கப் பெற்றுள்ளன. நாலாந்தந்திரம் அசபை முதல் நவாக்கரி சக்கரம் ஈறாகப் பதின்மூன்று தலைப்புக்களையுடையது. இதன்கண் தெய்வம் நிலைபெறும் மந்திரச் சக்கரங்களின் வடிவம், அளவு, வரைகள், அவ்வரைகளினுள்ளே அடைக்கப்பெறும் மந்திர எழுத்துக்கள், உரிய மந்திரங்கள், அவற்றை அருச்சிக்கும் முறைகள், அவ்வவற்றின் அதி தெய்வங்கள், வலிமை, பயன் முதலியன விரித்துரைக்கப் பெற்றுள்ளன. இன்ன சக்கரத்தை இன்ன சாதனத்தில் எழுதி இன்ன இடத்தில் இன்னவாறு மேற்பூச்சும் அணியும் மலரும் முதலியன சாத்தி இன்னபடி இத்தனை காலம் வழிபட்டால் வசியம் முதலாகச் சொல்லப்படும் உலகியற் பயன்களுள் இன்னின்ன பயன்களை எளிதிற் பெறலாம் என்ற செயல் முறைகளைத் திருமூலதேவர் இத்தந்திரத்தில் விரித்துக் கூறியுள்ளார். இறைவன் தனது திருவருளாகிய சத்தியின் மூலமாகவே மன்னுயிர்கட்கு அருள்புரிவா

னாதலால் இத்தந்திரத்திற் கூறப்படும் மந்திரச் சக்கரங்களிற் பெரும்பாலன இறைவன் திருவருளாகிய சத்தி பேதங்களைப் பற்றியனவாக அமைந்துள்ளன.

உலகியல் வாழ்விலும் மறுமையிலும் உலக மக்கள் விரும்பிய பயன்களை அளிக்கவல்ல மந்திரங்கள் தமிழகத்தில் நெடுங்காலமாக நிலைபெற்று வழங்கி வந்துள்ளன என்பது,

> "கோவலன் நாவிற் கூறிய மந்திரம்
> பாய்கலைப் பாவை மந்திரமாதலின்"
>
> (சிலப். காடுகாண். 196-7)

எனவும்,

> "அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்
> வருமுறை மரபின் மந்திர மிரண்டும்
> ஒருமுறையாக வுளங்கொண்டோதி"
>
> (சிலப். காடுகாண். 128-130)

எனவும்.

> "ஆறெழுத்தடங்கிய அருமறைக்கேள்வி
> நாவியல் மருங்கின் நவிலப்பாடி" (திருமுருகு.)

எனவும் வரும் தொடர்களால் இனிது விளங்கும், இக்குறிப்புக் களைக் கூர்ந்து நோக்குங்கால் இத்தகைய தெய்வ மந்திரங்கள் பல உபதேச முறையில் தமிழகத்தில் நெடுங்காலமாக நிலைபெற்று வழங்கி வந்துள்ளன என்பது இனிது புலனாகும். ஆகவே திருமூலநாயனாரால் திருமந்திரத்திற் குறிக்கப் பெற்றுள்ள மந்திரங்கள் பலவும் தென்றமிழ் நாட்டில் மக்களிடையே உபதேச முறையிற் பயிலப்பெற்று வழங்கிய தொன்மையுடையன என்பது நன்கு துணியப்படும். திருமந்திரமாலையினை அருளிய திருமூலர் ஆரியமும் செந்தமிழும் கற்று வல்ல சிவயோகியாராதலின் இமயம் முதல் குமரி வரையுள்ள நிலப்பகுதியாகிய பரத கண்டத்தில் வாழும் மக்கள் அனைவருக்கும் பயன்படும் முறையில் தமிழும் ஆரியமும் ஆகிய இருமொழி யெழுத்துக்களும் விரவிய நிலையில் அகரமுதல் க்ஷகர மீறாகிய ஐம்பத்தோ ரெழுத்துக்களால் ஆகிய மந்திரங்களை இந்நூலில் வகுத்துக் கூறியுள்ளார்.

*அசபை*

ஓரெழுத்து மந்திரமாகிய இது, மந்திரங்களுக் கெல்லாம் அடிப்படையானது. நாவினாற் செபிக்கப் படாமல் உயிர்வளியாகிய பிராணனுடன் இழைந்து இயங்கும் மந்திரமாதலின் அசபை (செபிக்கப்படாதது) எனப் பெயர் பெற்றது. ஹம்ஸ் என்றும் இதனை அம்ச மந்திரமென்றும் அன்னமந்திரம் என்றும் அங்குசம் என்றும் வழங்குதல் உண்டு. ஓரெழுத்து மந்திரமாகிய அசபையின் இயல்பும் அதனைச் செபிக்கும் முறையும் 884, 906ஆம் திருமந்திரப் பாடல்களில் உணர்த்தப்பெற்றன.

*திருவம்பலச்சக்கரம்*

மந்திரங்களின் மேம்பட்ட திருவைந்தெழுத்திற் கமைந்த சக்கரங்களுள் சிறப்புடையது திருவம்பலச் சக்கரமாகும். சிதாகாசப்பெருவெளியில் அற்புதத் தனிக் கூத்தாடும் அம்பலவாணர் அருட் சத்தியாகிய சிவகாமி யம்மையுடன் மந்திரவடிவாய் நின்று நிலவுவது, இந்த யந்திரமாகும். மந்திரத்தலையாக விளங்குவது இத்திரு வம்பலச் சக்கரமாகும். திருவைந்தெழுத்தே இறைவனுக் குரிய திருமேனியாகத் திகழ்கின்றதென்பதனை விளக்குவது,

"அஞ்செழுத்தாலே யமர்ந்தனன் நந்தியும்
அஞ்செழுத்தாலே யமர்ந்த பஞ்சாக்கரம்
அஞ்செழுத்தாகிய அக்கர சக்கரம்
அஞ்செழுத்தாலே யமர்ந்திருந்தானே" (திருமந். 934)

எனவரும் திருமந்திரமாகும். "நந்தியாகிய இறைவன் அஞ்செழுத்தாகிய மந்திர வடிவாக அமர்ந்துள்ளான். அவன் விரும்பியமர்ந்த பஞ்சாக்கரமும் ஐந்தெழுத்தால் ஆகியதே. ஐந்தெழுத்தாகிய அக்கரங்கள் அடைக்கப்பெற்ற சக்கரத் துள்ளே ஐந்தெழுத்தையே மனது திருமேனியாகக் கொண்டு இறைவன் எழுந்தருளியுள்ளான்" என்பது இத்திருப்பாடலின் பொருளாகும். இதனை அடியொற்றி யமைந்தது,

"அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுராண மனைத்தும் - அஞ்செழுத்தே
ஆனந்தத் தாண்டவமும் ஆறாறுக் கப்பாலாம்
மோனந்த மாமுத்தியும்" (44)

எனவரும் உண்மை விளக்கச் செய்யுளாகும். எல்லாம் வல்ல இறைவன் நாதமுடிவிலே திருவைந்தெழுத்தினையே தனக்குரிய திருமேனியாகக் கொண்டு ஆடல் புரிந்தருளும் முறைமையினை அறிவுறுத்துவது,

"ஆகின்ற பாதமும் அந்நவாய் நின்றிடும்
ஆகின்ற நாபியுள் அங்கே மகாரமாம்
ஆகின்ற சீயிரு தோள் வவ்வாய்க் கண்டபின்
ஆகின்ற வச்சுடர் அவ்வியல் பாமே" (திருமந். 941)

எனவரும் திருமந்திரமாகும். "உயிர்கட்கு ஆக்கமளிக்குந் திருவடியும் அந்த நகாரமாய் நிலைபெறும். உந்திச்சுழியுள் அவ்விடத்திலே மகாரம் பொருந்துவதாகும். சிகாரம் இரண்டு தோள்களாகவும் வகாரம் வாயாகவும் கண்டபின், திருமுடிக்கண் விளங்குகின்ற சுடர் யாகாரத்தின் தன்மைய தாகும்" என்பது இதன் பொருள்.

"நவ்விரண்டு காலதாய் நவின்றமவ் வயிறதாய்
சிவ்விரண்டு தோளதாய்ச் சிறந்த வவ்வு வாயதாய்
யவ்விரண்டு கண்ணதாய் எழுத்துநின்ற நேர்மையிற்
செவ்வையொத்து நின்றதே சிவாய மஞ்செழுத்துமே" (97)

எனவரும் சிவவாக்கியர் பாடல் இத்திருமந்திரத்தை அடியொற்றியதாகும்.

பொன்னம்பலத்திலே ஆடல் புரிந்தருளும் இறைவன், தன் திருவடியிலே நகரமும், திருவுந்தியிலே மகரமும், திருத்தோள்களிலே சிகரமும், திருமுகத்திலே யகரமும் ஆகவும் திகழுந்திறத்தினை,

"ஆடும்படிகேள்நல் வம்பலத்தான் ஐயனே
நாடுந்திரு வடியிலே நகரம் - கூடும்

மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வா,முடியப் பார்" (உண்மை விளக்கம் 32)

எனவரும் பாடலிலும்,

"ஒலிக்கின்ற உடுக்கை ஏந்திய திருக்கையிலே சிகாரமும் நன்றாக வீசிய திருக்கையிலே வகாரமும், அமைத்த திருக்கையிலே யகாரமும், அக்கினியேந்திய கையிலே நகாரமும், முயலகனை மிதித்துள்ள பாதத்திலே மகாரமும் கொண்டருளி நிருத்தஞ் செய்தருளுந்திறத்தினை,

"சேர்க்குந் துடிசிகரம், சிக்கெனவா வீசுகரம்,
ஆர்க்கும் யகரம் அபயகரம் - பார்க்கிலிறைக்கு
அங்கி நகரம், அடிக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்" (உண்மைவிளக்கம் 33)

எனவரும் பாடலிலும், திருவாசி ஓங்காரமாகவும், அதன்கண் உள்ள சுடர்கள் ஓங்காரத்தை விட்டு நீங்காத திருவைந் தெழுத்தாகவும் அமைய அழகிய திருவம்பலத்தில் இறைவன் செய்தருளும் நிருத்தத்தை யான் எனது என்னும் செருக்கற்றுக் கண்டவர்கள் பிறப்பிறப்பற்ற பேரின்பமுத்தி யினைப் பெறுவார்கள் என்பதனை,

ஓங்கார மேநற்றிருவாசி உற்றதனில்
நீங்கா வெழுத்தே நிறைசுடராய் - ஆங்காரம்
அற்றார் அறிவரணி அம்பலத்தான் ஆடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின்" (உண்மைவி..

எனவரும் பாடலிலும் திருவதிகை மனவாசகங்கடந்த விரித்துக் கூறியுள்ளமை இங்கு மனங்கொளத்தகுவதாகும்.

எவ்வகைப் பொருள்களுக்கும் பரந்து இடங் கொடுக்கும் ஆதாரமாகவும் இடந்தொறும் பரவியுள்ள பொருள்களாகவும் சிவமும் சத்தியும் இரண்டறக் கலந்து விளங்குந்திறத்தினை உணர்த்துவது,

"வாயும் மனமுங் கடந்த மனோன்மணி
பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை

ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத்
தாயும் மகளும் நற்றாரமும் ஆமே" (திருமந். 1178)

எனவரும் திருமந்திரமாகும். "சொல்லையும் நினைப்பையுங் கடந்த மனோன்மணியாகிய அன்னையும், அச்சம் விளைக்கும் பேய்க் கூட்டத்தினையும் ஆக்கம் நல்கும் பூதகணங்களையும் தனக்கு ஏவற் சுற்றமாகவுடைய கன்னிமைப் பருவத்தினளும் ஆகிய பராசத்தி நூலறிவினையும் உயிருணர்வையும் கடந்து அப்பாற்பட்டு விளங்கும் சிவபரம்பொருளுக்குத் தாயாகவும் மகளாகவும் நல்ல மனைவியாகவும் திகழ்கின்றாள்" என்பது இத்திருப் பாடலின் பொருளாகும்.

வாய், மனம் என்பன ஆகுபெயராய்ச் சொல்லையும் நினைவையும் குறித்தன. வாயும் மனமும் கடத்தலாவது சொல்லுக்கும் சிந்தனைக்கும் எட்டாது (மாற்றம் மனம் கழிய) அப்பாற்பட்டு விளங்குதல், மனோன்மணி - பெண்பிள்ளை - கன்னி என்பன இறைவியைக் குறித்தன. ஆய்தல் என்றது நூலறிவினையும் அறிவு என்றது உயிருணர்வையும் குறித்தன. அரன் - உயிர்களின் பாசங்களை நீக்குபவன்.

இறைவனும் அவனின் வேறல்லாத திருவருளும் மன்னுயிர்களை உய்வித்தல் வேண்டிச் சிவமும் சத்தியுமாகத் திகழ்தல் பற்றிச் சிவமும் சத்தியும் கணவனும் மனைவியும் ஆகவும், சிவதத்துவத்தினின்றும் சத்திதத்துவம் தோன்றும் முறைபற்றி அவ்விரண்டும் முறையே தந்தையும் மகளும் ஆகவும், சத்திதத்துவத்தினின்றும் சதாசிவத் தத்துவம் தோன்றும் முறைபற்றிச் சத்திதாயாகவும் சதாசிவம் மகனாகவும், சுத்த மாயையினின்றும் இறைவனது ஞான சத்தியின் தூண்டுதலால் சிவதத்துவமும் கிரியா சத்தியின் தூண்டுதலால் சத்திதத்துவமும் முன்னும் பின்னும் ஆக முறையே தோன்றுதல் பற்றி அவ்விரண்டும் முறையே தமையனாகவும் தங்கையாகவும் இவ்வாறு உலகியற்பிறப்பு முறை உறவில் வைத்து உருவகம் செய்யப் பெற்றன. உலக

முதல்வனாகிய அப்பனோடு அம்முதல்வனின்றும் பிரிக்க வொண்ணாத அருளாகிய அம்மைக்கு உள்ள தொடர் பினைத் தத்துவநெறியில் விளக்கும் முறையில் உருவக அணிநலந்தோன்றத் திருமூலநாயனார் அருளிய திருமந்திரப் பொருளை உளங்கொண்ட திருவாதவூரடிகள்,

"எம்பெருமான் இமவான் மகட்குத்
தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன் தமையன்"
(திருவாசகம், திருப்பொற்சுண்ணம் 13)

எனவும்,

"தவளத்த நீறணியுந் தடந்தோளண்ணல் தன்னொருபா
லவள் அத்தனாம் மகனாம் தில்லையான்"
(திருக்கோவையார் 112)

எனவும் இறைவனை உமையம்மையுடன் உறவுமுறை குறித்தும் போற்றியருளினார். திருமூலநாயனார் சைவ சித்தாந்தத்தின் சிறப்புடைய தத்துவங்களாகக் கண்டுணர்த் திய சுத்த தத்துவத் தோற்றம் பற்றிய இவ்வுருவகத்தின் கருத்தினை விரித்து விளக்கும் முறையில் அமைந்தது,

"சிவம்சத்தி தன்னையீன்றும் சத்திதான் சிவத்தையீன்றும்
உவந்திருவரும் புணர்ந்திங் குலகுயிரெல்லா மீன்றும்
பவன்பிரம சாரியாகும் பான்மொழி கன்னியாகும்
தவந்தரு ஞானத்தோர்க்கித் தன்மைதான் தெரியுமன்றே"
(சிவஞான சித்தியார் சுபக்கம் 166)

எனவரும் சிவஞான சித்தியாராகும்.

"கனகமார் கவின்செய் மன்றில்
அனகநாடகற்கெம் அன்னை
மனைவிதாய் தங்கை மகள்" (சிதம்பரச் செய்யுட்கோவை)

எனவரும் குமரகுருபரர் பாடலும் இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும்.

முழுமுதற்பொருளாகிய இறைவன் புறமாகிய

பொருள்களை நோக்காது தன்னளவில் அறிவுப்பிழம்பாய் நிற்கும் நிலையிற் சிவம் எனவும், தனது அருளால் மன்னுயிர்களை நோக்கும் நிலையிற் சத்தி எனவும், அப்பனும் அம்மையும் என இருதிறமாகக் கூறப்பெறுவன். இறைவனது திருவருள் ஞானசத்தியாய்ச் சுத்தமாயையில் தோய்ந்த பகுதி சிவதத்துவம் எனவும், கிரியா சத்தியாய்த் தோய்ந்த பகுதி சத்தி தத்துவம் எனவும், ஞானமும் கிரியையும் சமநிலையில் தோய்ந்த பகுதி சதாசிவ தத்துவம் எனவும், ஞானமும் கிரியையும் ஆகி ஒத்துத் தோய்ந்த பகுதி மகேசுர தத்துவம் எனவும், கிரியை குறைந்து ஞானம் மிகுந்து தோய்ந்த பகுதி சுத்தவித்தை எனவும் இவை ஐந்தும் சுத்ததத்துவங்கள் எனவும் வழங்கப்பெறும். இத் தத்துவங்கள் ஐந்தும் இறைவனுக்குச் சுதந்திர வடிவங்களாகும்.

சிவம், சத்தி, நாதம், விந்து என்னும் நான்கும் அருவத் திருமேனிகள்.

சதாசிவம் ஒன்றும் அருவுருவத்திருமேனி.

மகேசன், உருத்திரன், மால், அயன் என்னும் நான்கும் உருவத் திருமேனிகள். இறைவன் இவ்வொன்பது வகையாக நின்று உயிர்கட்கு அருள் புரிவன் என்பார்.

**சிவஞ்சத்தி நாதம்விந்து சதாசிவன்திகழும் ஈசன்**
**உவந்தருள் உருத்திரன்றான் மால் அயன்**
**ஒன்றினொன்றாய்ப்**
**பவந்தரும் அருவம் நாலிங்குருவம் நால்உபயம் ஒன்றாம்**
**நவந்தருபேதம் ஏகநாதனே நடிப்பன் என்பர்"**
**(சிவஞானசித்தி. சுபக்கம். 164)**

என்றார் அருணந்தி சிவாசாரியார்.

திருமந்திரத்தின் ஐந்தாந்தந்திரம் சுத்தசைவம் முதலாக உட்சமயம் ஈறாக இருபது உட்பிரிவுகளை யுடையதாகும். இதன்கண் நால்வகைச் சைவமும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நன்னெறி களும், அவைபற்றியமைந்த தாச மார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்னும் நெறி

முறைகளும், மேற்குறித்த நெறிகளில் நிலைபெற்றொழுகி னோர் பெறுதற்குரிய சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்னும் நால்வகைப் பேறுகளும், மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்னும் நால்வகைச் சத்தி நிபாதப் பக்குவ நிலைகளும் அறிவுறுத்தப்பெற்றுள்ளன. புறச்சமயங் களின் ஒவ்வாத்தன்மைகளைப் புலப்படுத்துவது புறச்சமய தூடணம் என்ற பகுதியாகும். இத்தந்திரத்தில் திருமூலர் கூறியுள்ள பொருட்பகுதிகளை அடியொற்றியே அருணந்தி சிவாசாரியாக தாம் இயற்றிய சிவஞானசித்தியாரில் சரியை முதலிய நால்வகை நன்னெறிகளையும் இந்நான்கும் ஒவ்வொன்றும் நந்நான்காய் விரியும் முறைமையினையும் பிறவற்றையும் பிரித்துக் கூறியுள்ளமை இங்கு ஒப்புநோக்கி யுணரத்தக்கதாகும்.

பதி பசு பாசம் (கடவுள், உயிர், உலகம்) என்னும் முப்பொருள்களும் என்றும் உள்ளனவாகும். அவற்றுள் பதி- இறைவன், இறைவன் ஒருவனே, பசு - உயிர். உயிர்கள் எண்ணில்லாதன. அவை அநாதியே (தோற்றமில் கால மாகவே) மலத்தாற் பிணிக்கப்பட்டுள்ளன; அருளாள னாகிய இறைவன் உயிர்கள் இருள் மலப்பிணிப்பினின்றும் விடுபட்டு உய்யும் பொருட்டு உடல் கருவி உலகு நுகர்பொருள்களைத் தந்து அவற்றின் வழி நன்றும் தீதும் ஆகிய இருவினைகட் கீடாகிய பிறவிகளில் உயிர்களைச் செலுத்துகின்றான். உயிர்கள் பல்வகைப் பிறவிகளிலும் வந்து பிறந்து நல்வினை தீவினைகளைச் செய்து உழல்கின்றன. இவ்வாறு வினை வயத்தால் மாறிமாறிப் பிறந்திறந்துவரும் உயிர்கள் பிறவித் துன்பங்களினின்றும் நீங்கி என்றும் பேராவியற்கையாகிய நிலையான பேரின்பத்துள் இருக்க முயல்வதுவே நல்லுணர்வு பெற்ற உயிர்களின் குறிக்கோளாக அமைதல் வேண்டும். அத்தகைய நன்முயற்சிகளையும் நற்பணிகளையும் மேற் கொள்ளுதற்குக் குருவின் அருளும் திருவைந்தெழுத்து திருநீறு முதலிய சிவசாதனங்களுமே துணையாவன. அத்தகைய துணையினைக் கொண்டு சிவநெறியில் ஒழுகினால் உலகமக்கள் பிறவித்துன்பம் நீங்கி நிலையான பேரின்பத்தைப் பெறலாம். அவ்வருளனுபவம் மாறாதிருக்க

நால்வகை முத்திகளின் இயல்பினை விளக்குவது,

> "பாசம் பசுவான தாகும் இச்சாலோகம்
> பாசம் அருளான தாகும் இச்சாமீபம்
> பாசம் சிவமான தாகும் இச்சாரூபம்
> பாசம் கரைபதி சாயுச் சியமே" (திருமந். 1509)

எனவரும் திருமந்திரமாகும். சடமாகிய பாசம் ஆன்மாவின் அறிவெல்லைக்குள் அடங்கி நிற்க இறைவனை வழிபட்டு மகிழும் நிலை இறைவனுலகில் ஒப்ப உறைதலாகும். உயிரைப் பிணித்துள்ள பாசம் உயிரறிவை மறைத்தலாகிய தன்மை யினை யிழந்து அருளினால் விலகத்தான் இறைவனையணுகி நிற்றல் இறைவனது அருகிருத்தலாகும். பசுகரணங்களாகிய பாசப்பகுதி பதிகரணங்களாக மாறுதல் இறைவனுருப் பெறுதலாகும். பாசஞானமான நூலறிவும் பசுஞானமான ஆன்மபோதமும் கரைந்தொழியப் பதியாகிய பரம் பொருளுடன் இரண்டறக்கலந்து ஒன்றாதல் சாயுச்சியம் எனப்படும்.

சிவம் என்னும் பெயரடியாகப் பிறந்தது சைவம் என்னும் பெயராகும். சிவன் என்ற சொல் தனித்தமிழ்ச் சொல் என்பது 'செம்மேனிப் பேராளன் வானோர்பிரான்' என்னும் காரைக்கால் அம்மையார் வாய்மொழியாலும் 'சிவனெனும் நாமந்தனக்கேயுடைய செம்மேனியம்மான்' எனவரும் அப்பரருள்மொழியாலும் நன்கு வலியுறுத்தப் பெற்றுள்ளமை காணலாம். திருவுருவநிலையிற் சிவன் என அன்னீறாக வைத்துப் போற்றப்பெறும் இறைவனை உருவங்கடந்த நிலையில் செம்பொருள் எனவும் சிவம் எனவும் போற்றுதல் நெடுங்காலமாக நிலைபெற்று வரும் தமிழ்மரபாகும்.

> 'செம்பொருளாய சிவமெனலாமே'

எனவரும் திருமந்திரம் இம்மரபினை இனிது புலப்படுத்துவ தாகும். சிவம் என்ற தமிழ்ச் சொல்லின் அடியாக வடமொழித் தந்திதாந்த விதியை யொட்டியுருவாகிய சொல்லே சைவம் என்பதாகும். இதனால் ஆரியம் தமிழ் என்னும் இருமொழி நூல்களிலும் சிவ வழிபாடு பற்றிய

தத்துவ நூல்கள் தோன்றி வழங்கினமை நன்கு புலனாம். இச் சொல்லுக்குப் பொருள் விளக்கம் கூறுமுகமாகச் சைவ சமயங்கூறும் அத்துவிதமுத்தியின் இயல்பினை விளக்குவது,

"சைவஞ் சிவனுடன் சம்பந்தமாவது
சைவந் தனையறிந்தே சிவஞ்சாருதல்
சைவஞ் சிவமன்றிச் சாராமல் நீவுதல்
சைவஞ் சிவானந்தஞ் சாயுச்சியமே" (திருமந். 1512)

எனவரும் திருமந்திரமாகும்.

"சைவமாவது உலகுயிர்களுடன் ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் சம்பந்தத்தினையுடையது. சைவமாவது ஆன்மா தன்னைச் சிவத்துக்கு அடிமையென்றுணர்ந்து சிவத்தினை வழிபட்டுச் சாருதல். சைவமாவது, சித்தாகிய பரம்பொருளன்றி அசித்தாகிய பாசங்கள் தன்னைச் சாராதவாறு நீங்கியொழுகுதல். சைவமாவது சிவத்துடன் இரண்டறக்கலந்து அம்முதல்வன் வழங்கும் சிவானந்தமாகிய பேரின்பத்தினைத் துய்த்து மகிழ்தலாகிய சாயுச்சிய நிலையாகும்" என்பது இத்திருப்பாடலின் பொருளாகும்.

சிவமாகிய முழுமுதற்பொருளோடு உலகுயிர்களுக்கு உளதாகிய தொடர்பினை விளக்கும் சமயநெறியே சைவம் என்பது உணர்த்துவார். 'சைவம் சிவத்தோடு சம்பந்தம் ஆவது' என்றார். சிவமயம் என்பது இத்தொடர்பினையே குறிப்பதாகும். சார்ந்ததன் வண்ணமாம் தன்மையதாய ஆன்மா சதசத்தாகிய தன்னியல்பினையறிந்து அசத்தாகிய பாசங்களைச் சாராது சத்தாகிய சிவத்தினைச் சார்ந்து உய்திபெற வகுத்தநெறியே சைவம் என்பது அறிவுறுத்துவார் 'சைவம் தனையறிந்தே சிவம் சாருதல்' என்றார். பாச நீக்கமும் சிவப்பேறும் ஆகிய இருவகைப் பயன்களுள், உயிர்க்குயிராய் உள்நின்று உதவிவரும் இறைவனருளால் அல்லது தான் ஒன்றையுஞ் செய்யாமையாகிய இறை பணியினால் பாசநீக்கம் உண்டாகும் என்பார் 'சைவம் சிவமன்றிச் சாராமல் நீவுதல்' என்றார். நீவுதல் - நீங்குதல். ஒரு பொருளைக் காட்டக் காணுந்தன்மையதாய கண்ணுக்கு ஒன்றைக் காணும்படி

உடனிருந்து காட்டி அதனைத்தானும் காணும் உயிரைப்போன்று, அறிவிக்க அறியுந்தன்மையதாகிய ஆன்மா பொருள்களை அறியும்படி இறைவன் அதனோடு உடனாய்நின்று உயிர்க்கு அறிவித்துத் தானும் அவ்விடயங் களிற் கலந்து அறிந்து உதவி செய்தலால், இவ்வாறு உயிருடன் அத்துவிதமாய் நின்று உதவி செய்தருளும் இறைவனது பெருங்கருணைத்திறத்தை மறவாது நினைந்து செய்யும் பேரன்பினாலே அம்முதல்வனுடைய திருவடி யாகிய சிவானந்த அநுபவத்தை ஆன்மா தலைப்பட்டு மகிழ்தலே சைவசமயம் கூறும் வீடுபேறாகும் என்பது அறிவுறுத்துவார், 'சைவஞ்சிவானந்தஞ் சாயுச்சியமே' என்றார் திருமூலர். இத்திருமந்திரத்தின் முதலடியில் முப்பொருள்களின் உண்மையும் இலக்கணமும், இரண்டாமடியிற் சாதனமும், மூன்றாமடியிற் பாசநீக்கமும், நான்காமடியிற் சிவப்பேறும் குறிப்பாக விளக்கப் பெற்றுள்ளமை கூர்ந்துணரத்தகுவதாகும்.

உயிர்களைத் தோற்றமில் காலமாகப் பிணித்துள்ள அகவிருளாகிய ஆணவமலம் உயிரைவிட்டுக் கழலும் பக்குவத்தினை அடைதற்பொருட்டு அதற்குத் துணையாய் நின்று நடத்திய இறைவனது மறைப்பாற்றலாகிய திரோதான சத்தியானது, இருள் மலம் கழலும் பக்குவத்தினை யடைந்தபோது கருணைமறமாக இருந்த தன்னுடைய செய்கை மாறிக் கருணை யெனப்படும் பண்டைப் பராசத்தி யுருவேயாய் உயிர்கள்பாற் பதிதல் சத்தி நிபாதம் எனப்படும். சத்தி நிபாதம் - திருவருட்சத்தி உயிர்களிற் பதிதல். அதுபடிகால் முறையால் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நால்வகைப்பட்டு நிகழும். அவற்றின் இயல்பினை 1514 முடியவுள்ள திருமந்திரப் பாடல்கள் விரித்துரைக்கின்றன.

ஆணவமாகிய மலவிருளால் தடைப்பட்டிருக்கின்ற ஆன்ம சத்தியாகிய அறையின் மூலையிற் சிறிதும் தோன்றா வண்ணம் கட்டுநிலையிலிருந்த ஆன்மாவை அதன் இயல்புக் கேற்பச் செலுத்தும் மறைப்பாற்றலாகிய திரோதான சத்தியானது, ஆன்மாவின் ஆணவமலம் கழலும்

அளவில் முன்னர்க் குருட்டுக் கிழவனாக்கிடந்த ஆன்மாவுக்கு முன்னின்று அருள்செய்ய நினைந்து அவனது இருள்மலத் தன்மையாகிய குருட்டினை நீக்கி இறைவனது திருவருளாகிய தன் இயல்புகள் பலவற்றையும் புலப்படுத்திக்காட்டி, ஆன்மா உற்ற தற்போதத்தை மழுங்கச் செய்து தனது அருளாரின் பத்தினை ஆன்மா வுணர்ந்து நுகரும்படி சிவத்துடன் ஒன்றச் செய்தருளியது என்பார்,

> "இருட்டறை மூலை யிருந்த குமரி
> குருட்டுக் கிழவனைக் கூடல்குறித்துக்
> குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
> மருட்டி அவனை மணம்புரிந்தாளே" (திருமந். 1514)

என்றார் திருமூலநாயனார். இப்பாடலில் 'இருட்டு' என்றது ஆணவ இருளை. 'அவ்விருளாற்பற்றப்பட்ட அறைமூலை' என்றது, ஆணவல்லிருளால் அடர்க்கப்பட்டிருந்த ஆன்ம சிற்சத்தியை. அதிலிருந்த குமரி என்றது, ஆணவமலம் கழலும் பக்குவத்தையடையும்படி மறைந்து நின்று ஆன்மா வைச் செலுத்திய திரோதான சத்தியினை. குருட்டுக்கிழவன் என்றது, தோற்றமில் காலமாக ஆணவல்லிருளிலகப்பட்டு அறிவாகிய கண்ணொளியிழந்த ஆன்மாவை, அதனைக் கூடுதலாவது, ஆணவ மலத்துடன் மறைந்து நின்ற திரோதான சத்தியானது அருட் சத்தியாக மாறி ஆன்மாவின் முன்னிற்றலை, குறித்தல் என்றது, ஆன்மாவின்கண் அருளாய்ப் பதிதலை, குருடு என்றது, ஆணவ மலமாகிய படலத்தால் மறைக்கப்பட்டு ஒளியிழந்த தன்மையினை. குணம்பல காட்டுதலாவது, அருளாகிய தன்னியல்புகள் பலவற்றையும் புலப்படுத்தித் தெருட்டுதல். மருட்டுத லாவது, ஆன்ம போதத்தை மழுங்கச் செய்தல். மணம் புரிதலாவது, சிவபோகத்தை நுகர்தற்கு உரிய நிலையில் ஆன்மாவைச் சிவத்தோடு கூட்டுதல்.

இருவினையொப்பும் சத்தி நிபாதமும் எய்தினோர் பெறும் பயனை விரித்துரைப்பது,

> "இருவினை நேரொப்பில் இன்னருட்சத்தி
> குருவென வந்து குணம்பல நீக்கி

தரும் அரன் ஞானத்தால் தன்செயல் அற்றால்
திரிமலந் தீர்ந்து சிவனவன் ஆமே" (திருமந். 1527)

எனவரும் திருமந்திரச் செய்யுளாகும். "புண்ணியம் பாவம் என்னும் இருவினைகளிலும் அவற்றின் பயன்களிலும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து விடுவோனது அறிவின்கண் அவ்விரு வினைப் பயன்களும் சமம் என்னும் உணர்வு தோன்றிய நிலையில் இனிய திருவருளாகிய சத்தி குருவாக எழுந்தருளி உயிரின் பசுபோத குணங்களை நீக்கித் தந்தருளும் சிவஞானத்தால் தன்செயல் அற்றால் அவ்வான்மா மும்மலங்களும்கெட்டுச் சிவமே ஆவன்" என்பது இத்திருப் பாடலின் பொருளாகும்.

இருவினை நேரொத்தல் - நன்றுந் தீதும் ஆகிய இரு வினைகளிலும் சமபுத்தியுண்டாதல். இருவினையொப்பாவது நல்வினை தீவினைகளிலும், அவற்றின் விளைவாகிய புண்ணிய பாவங்களிலும், அவற்றின் பயனாகிய இன்பத் துன்பங்களிலும் ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்புமின்றி ஆன்ம அறிவின்கண் ஒப்ப உவர்ப்பு நிகழ்தல். இன் அருட் சத்தி என்றது, முன்னர் உயிரின் ஆணவமலம் பக்குவமாதற் பொருட்டுச் சினம்பொருந்திய திரோதாயியாயிருந்த மறைப்பாற்றலாகிய சத்தியே உயிரின் மலம் கழலும் பக்குவத்தினை யுண்டாக்கியபின் இனிய அருட்சத்தியாயிற்று என்பதாம். குணம்பல நீக்கித் தரும் அரன்ஞானம் என்றது, உயிரின் தாழ்ந்த குணங்களைப் போக்கி மேலான சிவகுணம் பொருந்தும்படி சிவஞானத்தைத் திருவருட்சத்தியே தந்தருளும் என்பதாம். தன்செயலறுதலாவது, ஆன்ம போதம் கெடுதலால் 'நன்றெசெய்வாய் பிழைசெய்வாய் நானே இதற்கு நாயகமே' எனத் தன்செயல் ஒழிந்து இறைவன் செயலில் அடங்கிநிற்றல். திரிமலம் - ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்கள். சிவம் ஆதலாவது, ஆன்மா தன்பொருட்டன்மையழிந்து சிவம் ஒன்றாயே ஒழியாமலும் சிவத்தின்வேறாய் ஆன்மா தனித்து நில்லாமலும், பாலொடு அளாவிய நீரானது தன் உண்மை கெடாமல் பாலின்தன்மையதாய் அதனுடன் பிரிவறக்

கலந்து ஒன்றாதல் போன்று, ஆன்மா தன் உண்மை கெடாமல் சிவத்துடன் இரண்டறக் கலந்து ஒன்றாதலாகும்.

உயிர் இருவினையொப்பும் மலபரிபாகமும் திருவருட் பதிவும் பெற்றுக் குருவருளால் தூய்மை பெற்றுச் சிவமேயாய்த் திகழும் இந்நிலையினை விளக்குவது,

> "இருவினைச் செயல்கள் ஒப்பினீசன்றன் சத்திதோயக்
> குருவருள் பெற்று ஞானயோகத்தைக் குறுகி முன்னைத்
> திரிமலமறுத்துப் பண்டைச் சிற்றறிவொழிந்து ஞானம்
> பெருகிநாயகன்றன் பாதம்பெறுவது சுத்தமாகும்" (230)

எனவரும் சிவஞானசித்தியார் திருவிருத்தமாகும்

கடவுளுண்மையினை உடன்படாத புறச்சமயங்களின் பொருந்தாமையை அறிவுறுத்துவது, திருமந்திரத்திலுள்ள புறச்சமய தூடணம் என்ற பகுதியாகும். உணர்வில் திருந்தாத புறச்சமயங்கள் ஆறும் கடவுளுண்மையினை யுணரும் உணர்வுடையன அல்ல என அறிவுறுத்துவது,

> "ஆயத்துள் நின்ற அறுசமயங்களும்
> காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலா
> மாயக் குழியில் விழுவர் மனைமக்கள்
> பாசத்துள் உற்றுப் பதைக்கின்ற வாறே" (1530)

எனவரும் திருமந்திரப்பாடலாகும். "சமயத்தொகுதியுட் கூறப்பட்டு நின்ற புறச்சமயங்கள் ஆறும், உயிர்களின் உடம்பினுள்ளே எழுந்தருளிய முழுமுதற்பொருளாகிய கடவுளைக் கண்டுணரமாட்டா; அச்சமயங்களை மேற்கொண்டொழுகுவோர் மனைவிமக்கள் என்னும் பாசத்தில் அகப்பட்டு இவ்வுலகவாழ்க்கையில் இடர்ப்படுமாறு போலவே மறுமையிலும் பொய்ம்மையே பெருக்கும் பாச வலையுள் அகப்பட்டு வருந்துவர்" என்பது இப்பாடலின் பொருளாகும்.

ஆயம் - கூட்டம்; சமயத்தொகுதி, மணிமேகலைக் காப்பியத்தில் உலோகாயதம், பௌத்தம், சாங்கியம்,

நையாயிகம், வைசேடிகம், மீமாஞ்சகம் என்னும் ஆறும், சைவவாதி, பிரமவாதி, வைணவவாதி, வேதவாதி, ஆசீவக வாதி, நிகண்டவாதி, பூதவாதி என்னும் ஏழும் மதக் கோட்பாடுகளாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இவற்றுள் பூதவாதி கூறுவன உலேகாயதத்துள் அடங்குதலின் பிற்கூறிய மதங்களும் ஆறேயாகும். இனி, திவாகரத்துள் வைசேடிகம், நையாயிகம், மீமாஞ்சை, ஆருகதம், பௌத்தம், உலோ காயதம் என்பன ஆறு சமயங்கள் எனக்குறிக்கப்பட்டன. இவை ஆறும் கடவுட் கொள்கையில்லாத சமயங்களாதலின் புறச்சமயங்கள் ஆயின. இவற்றை 'இருமுச்சமயத்தொரு பேய்த்தேர்' எனக் குறித்தார் திருவாதவூரடிகள். காயம் - உடம்பு. 'உடம்புளே யுத்தமன் கோயில் கொண்டானென்று, உடம்பினையானிருந் தோம்புகின்றேனே' எனத் தாம் பெற்ற அருளனுபவத்தினை முன்னர்க் கூறியவாறே 'காயத்துள் நின்ற கடவுள்' என இங்கும் எடுத்துரைத்தார் சிவயோகியாராகிய திருமூலதேவர். காண்கிலா - காணும் ஆற்றலற்றனவாயின. கில் என்பது ஆற்றலுணர்த்தும் இடைநிலை தெய்வங் கொள்கையில்லாத அறுசமயத் தவரும் அச்சமயங்களிற் கூறப்படும் பொய்ம்மைக் கொள்கைகளை இன்பந்தரும் மெய்ம்மைக் கொள்கைகள் என்று நம்பித்தம் வாழ்நாட்களை வீணே கழித்தாற் போலவே மறுமையிலும் எல்லையற்ற துன்பக்குழியில் வீழ்ந்து இடர்ப்படுவர் என்பார், 'மனைமக்கள் பாசத்துள் உற்றுப்பதைக்கின்றவாறே மாயக்குழியில் விழுவர்' என்றார். மாயக்குழி -பொய்ம்மைக் கொள்கையினால் விளைந்த துன்பக்குழியாகிய நிரயம்.

இறைவன் சமயங்கடந்த தனிமுதற்பொருள் என அறிவுறுத்துவது,

"ஆறு சமயமுங் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவனவன்
தேறுமின் தேறித்தெளிமின் தெளிந்தபின்
மாறுத லின்றி மனைபுக லாமே" (1533)

எனவரும் திருமந்திரமாகும். ஆறுசமயம் - உலோகாயதம் முதலாக முற்கூறப்பட்ட புறச்சமயங்கள்; என்றது, அவற்றின்

தத்துவக் கொள்கைகளை விரித்துரைக்கும் நூல்களை. காணுதல் - கற்றுணர்ந்து அவற்றின் மெய்ம்மையினைக் கண்டு தெளிதல். தேறுதல் - ஆராய்தல். தெளிதல் - துணிதல். 'தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்பதோர் உள்ளத்தேறல்' என்பர் திருநாவுக்கரசர். மாறுதல் - பிறப்பு இறப்பில் அகப்பட்டு அலைதல். மாறுதலின்றிப் புகும் மனை என்றது, பேராவியற்கையாகிய வீட்டினை. களிப்புக் கவற்சிகளும் பிறப்புப் பிணி மூப்பிறப்புக்களும் முதலாயின இன்றி உயிரானது தனக்கு ஒப்பில்லா துயர்ந்த பேரின்பத்ததாய் ஒருநிலையில் அமைந்தே விடும் புக்கிலாக விளங்குவது வீடு பேறாகிய அந்நிலையென்பது உணர்த்துவார் 'மாறுதலின்றி மனைபுகலாமே' என்று அருளிச் செய்தார் திருமூலர்.

கடவுளுண்மையினை யுடன்பட்டொழுகும் அகச் சமயங்கள் ஆறும் ஒருவன் என்னும் ஒப்பற்ற பரம் பொருளை யடைதற்கு வகுத்த நெறிகளே என்பதும், இவ்வுண்மை யுணராது சமயத்தார் பலரும் தம்மிற் பிணங்கி மற்றைச் சமயங்களை இகழ்ந்துரைத்தல் அறிவுடைமையாகாது என்பதும் ஆகிய வுண்மைகளை அறிவுறுத்துவது,

"ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது வென்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயை யொத்தார்களே" (1558)

எனவரும் திருமந்திரமாகும்.

"அறிவுடைய நன்மக்கள் சென்று அடைதற்குரிய பெருமை வாய்ந்த ஊர் ஒன்றேயாகும். அவ்வூரை யடைதற்குரிய வழிகள் ஆறுள்ளன என்றாற்போன்று, கடவுளுண்மையைக் கூறும் ஆறு சமயங்களும் முழுமுதற் பொருள் ஒன்றையேயடைதற்குச் சாதனமாகவுள்ளன. 'யாம் கூறும் இதுவே நன்று? பிறர்கூறும் இது தீது' என்று இவ்வாறு தம்முட்பிணங்கும் சமயவாதிகள் மலையைப் பார்த்துக் குரைத்து ஓடும் நாயையொத்தவராவர்" என்பது இத் திருமந்திரத்தின் பொருளாகும்.

உட்சமயங்களிற் கூறப்படும் உண்மைகள் புறங் கூற்றாகிய வெற்றுரைகளால் மறுக்கப்படாதன என்பதும், அவற்றின் பொருளொருமையினையுணரவல்ல அறிவு மதுகையின்றிப் புறத் தோற்றத்தினைக் கண்டு மருண்டு வாதித்துப் பிணங்குவோர், மலையைக் கண்டு மருண்டு குரைத்துக் கொண்டு கடிக்க ஓடும் நாயினைப் போன்று, பிறர்கூறுவனவற்றை உள்ளவாறுணர்ந்து கொள்ளும் தெளிவின்றித் தம் சொற்களைப் பயனிலவாகச் செய்வார்கள் என்பார், 'குன்றுகுரைத்தெழும் நாயை யொத்தார்களே' என அவர்தம் இழிவினைப் புலப்படுத்தி னார். ஞானமே திருமேனியாக வுடைய இறைவன், சமயங்கள் தோறும் அருளிச் செய்த ஆகமங்களிலெல்லாம் கூறப்பட்ட மெய்யுணர்வு முடிபுகள் எல்லா ஆகமங்களிலும் ஒத்துச்சென்று முழுமுதற் பொருளாகிய இறைவனொரு வனையே நோக்கி முடிவன என அறிவுறுத்துவார், 'ஒன்று அது பேரூர், வழி ஆறு அதற்கு உள' என்றார். இத்திரு மந்திரத்தை அடியொற்றியது,

> "சுத்தவடி வியல்பாகவுடைய சோதி
> சொல்லிய ஆகமங்களெல்லாம் சூழப்போயும்
> ஒத்துமுடியுங்கூட ஓரிடத்தே
> ஒருபதிக்குப் பலநெறிகள் உளவானாற்போல்
> பித்தர்குண மதுபோல ஒருகாலுண்டாய்ப்
> பின்னொரு காலறிவின்றிப் பேதையோராய்க்
> கத்திடும் ஆன்மாக்களுரைக் கட்டிற்பட்டோர்
> கனகவரை குறித்துப் போய்க்கடற்கே வீழ்வார்"
>
> (சித்தியார். பரபக்கம். 9)

எனவரும் சிவஞான சித்தியார் பாடலாகும்.

சமய பேதங்களையே மனத்துட்கொண்டு முரண் பாடுடையராய்ச் சமயப் பொதுமையினை நாடாதோர் பேரின்பநிலையாகிய வீட்டினை அடைதற்குத் தகுதி யில்லாதோர் என அறிவுறுத்துவது,

> "இத்தவம் அத்தவம் என்றிரு பேரிடும்
> பித்தரைக் காணின் நகுமெங்கள் பேர்நந்தி

எத்தவ மாகிலென் எங்குப் பிறக்கிலென்
ஒத்துணர் வார்க்கொல்லை யூர்புகலாமே" (1568)

எனவரும் திருமந்திரமாகும். "இறைவனையடைதற்கு வகுக்கப்பெற்ற சமய நெறிகளில் இதுவே தவநெறி, அதுவே தவநெறி என இருவகையாக வேறுபடுத்திப் பேசும் மன மயக்கமுடைய சமயவாதிகளைக் கண்டால் எங்கள் குரு முதல்வராகிய சிவபெருமான் அவர்தம் பேதைமையினை யெண்ணித் தன்னுள்ளத்துள்ளே நகுவான். மக்கள் மேற்கொண்ட தவநெறியாகிய சமயம் எதுவாயிருந்தால் என்ன? அத்தவமுடையோர் எந்த நாட்டில் எந்த இனத்திற் பிறந்தால் என்ன? எல்லா நெறிகளும் இறைவனையடைந்து உய்தி பெறுதற்கு அமைக்கப் பெற்றனவே என்னும் உண்மையினை யுடன்பட்டுப் பிணக்கின்றி இறைவனை யுணர்ந்து போற்றுவார்க்கு விரைவிற் சிவமாநகர் எனப்படும் வீட்டினையடைதல் மிகவும் எளிதாம்" என்பது இதன் பொருளாகும்.

"எங்கேனும் யாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்கு
இங்கேயென்றருள் புரியும் எம்பெருமான்"

என ஆளுடையபிள்ளையாரும்,

"ஆறு சமயத்தவரவரைத் தேற்றுந் தகையன"

என ஆளுடைய அரசரும்,

"அறிவினான் மிக்க அறுவகைச் சமயம்
அவ்வவர்க்கங்கே யாரருள் புரிந்து"

என ஆளுடையநம்பியும்,

"வேறுபடு சமயமெலாம் புகுந்துபார்க்கின்
விளங்கு பரம்பொருளே நின் விளையாட்டல்லால்
மாறுபடுங் கருத்தில்லை முடிவில் மோன
வாரிதியில் நதித்திரள் போல் வயங்கிற்றம்மா"

எனத் தாயுமானாரும்,

"கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையில் மறைகளாலும் இயம்பரும் பொருளீதெனத்
தொல்லையின் ஒன்றேயாகித் துறைதொறும் பரந்த
சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்
போற்பரந்தவன்றே"

எனக் கம்பரும் கூறுவன மேற்குறித்த திருமந்திரப் பொருளை அடியொற்றியமைந்துள்ளமை காணலாம். திருமூலர் அறிவுறுத்திய சமயப்பொது நெறியாகிய இதனை, 'ஒத்துச் சென்று தன் திருவருள் கூடிடும் உபாயம்' (திருவாசகம்) என்பர் திருவாதவூரடிகள்.

## *சிவனே குருவாய் வந்து நற்பொருளை அறிவுறுத்தல்*

சைவ சித்தாந்த வுண்மைகளை உபதேச வாயிலாகக் கேட்டறிந்தோர், அவற்றைச் சிந்தித்துத் தெளிந்துணர்தற் குரிய பொருள்களாகிய ஞானம் பெறும் சாதனங்களை உணர்த்துவது திருமந்திரப்பனுவலின் ஆறாந்தந்திரமாகும். இது, சிவகுரு தரிசனம் முதல் 'பக்குவன்' என்பது முடியப் பதினான்கு உட்பிரிவுகளையுடையது. இதன்கண் சிவகுரு தரிசனம், திருவடிப்பேறு, ஞாதிரு ஞான ஞேயம், துறவு, தவம், அருளுடைமையின் ஞானம் வருதல், அவவேடம், தவவேடம், அபக்குவன், பக்குவன் என்ற தலைப்புக்களில் வைத்து மெய்யுணர்வுக்குரிய சாதனங்கள் விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

ஆன்மாக்கள் உய்திபெறுதல் வேண்டி இறைவன் தன்னடியார் திறத்தே நிகழச் செய்யும் தசகாரியமென்னும் அடியார் செய்கை பத்தும் ஆறாந்தந்திரமாகிய இதன் கண்ணும் ஏழு எட்டு ஒன்பது ஆகிய தந்திரங்களிலும் கூறப்படும் பொருள்களால் உணர்த்தப் பெறுகின்றன.

சிவகுரு தரிசனம் என்பது, காண்டற்கரிய கடவுளாகிய சிவபெருமான் தன்னை அன்பினாற் கசிந்துருகிப் போற்றும் அடியார் திறத்து வைத்த பெருங்கருணைத் திறத்தால் நம்மைப் போலும் மானிட

வுருவினை மேற் கொண்டு குருவாகி எளிவந்து நற்பொருளை உபதேசித் தருளப் பொருள்களின் உண்மையினை உள்ளவாறு காணுதலாகும். உயிர்க்குயிராய் உள்நின்றுணர்த்திய சிவபெருமானே புறத்தே ஆசிரியத் திருமேனிதாங்கிக் குருவாய் வந்து அருள்புரிவன் எனத் தெளிவிக்கும் முறையில் அமைந்தது,

> "பத்தி பதித்துப் பரவும் அடிநல்கிச்
> சுத்த வுரையால் துரிசறச் சோதித்துச்
> சத்தும் அசத்தும் சதசத்தும் காட்டலால்
> சித்தம் இறையே சிவகுரு வாமே" (1573)

எனவரும் திருமந்திரமாகும். "(அருச்சனை வயலுள்) அன்பாகிய விதையை விதைத்து யாவரும் பரவிப் போற்றும் திருவடியை அடியேனுக்கு நல்கித் தனது தூய மெய்யுணர்வு உபதேசத்தால் எனது மலமாயா கன்மங்களாகிய குற்றங்கள் கெட்டொழிய (மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்னும் அறுவகை நெறிகளையும்) சோதித்துப் போக்கிச் சத்தாகிய இறையியல்பினையும் அசத்தாகிய பாசத்தின் இயல்பினையும் (சத்தியைச் சார்ந்தவழிச் சத்தாகியும், அசத்தினைச் சார்ந்தவழி அசத்தாகியும் சார்ந்ததன் வண்ணமாம் இயல்புடைமை பற்றிச்) சதசத்து எனப்படும் ஆன்மாவின் இயல்பினையும் உள்ளவாறு புலப்படுத்திக் காட்டுதலால் அகத்தே உயிர்க்குயிராய்ச் சிந்தையில் எழுந்தருளியுள்ள சிவபரம்பொருளே புறத்தேயும் குருவாக எழுந்தருளி வந்தது" என்பது இதன் பொருளாகும்.

பத்தி - அன்பு, பதித்தல் - விதைத்தல், பரவும் அடி நல்குதலாவது, யாவரும் போற்றிப் பரவும் திருவருளாகிய திருவடி மாணாக்கரது சிந்தையிலும் சென்னியிலும் பொருந்திப் பதியும்படி ஆசிரியத் திருமேனிகொண்டு எழுந்தருளித் தீக்கை புரிதல், 'சிந்தையினும் என்றன் சிரத்தினிலும் சேரும்வகை, வந்தவனை' என்பது திருக்களிற்றுப்படியார். சுத்த உரையாவது, மலமாயா கன்மங்களைக் கழுவும் ஞான நன்னீராகிய உபதேசமொழி. துரிசு - குற்றம். சோதித்தலாவது உயிர்கள் அறிந்தும்

விரும்பியும் செயற்படும் நெறிகளாகிய மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்னும் அறுவகை வழிகளையும் குற்றம் நீங்கச் சோதித்துத் தூய்மை செய்தல். சத்து என்பது, என்றும் ஒரு தன்மையினதாய் மாறாதுள்ள செம்பொருளாகிய சிவம்; சுட்டுணர்வினாலே உணரப்படாத தூய்மையும் சிவஞானம் ஒன்றினாலே யுணர்தற்குரிய மெய்ம்மையும் உடைய பரம்பொருள். அசத்து என்பது உயிருணர்வாற் சுட்டியறியப்பட்டு அடிக்கடி நிலமாறுந் தன்மையதாகிய உலகத்தொகுதி. சதசத்து என்பது, சத்தினைச் சார்ந்த நிலையிற் சத்தின் தன்மையதாகவும் அசத்தினைச் சார்ந்த நிலையில் அசத்தின் தன்மையதாகவும் இவ்வாறு சார்ந்ததன் வண்ணமாந்தன்மையினையுடைய ஆன்மா. 'சித்தம் இறையே' என்றது, உயிர்க்குயிராயுள்ள பரம்பொருளை. 'சித்தம் இறையே சிவகுருவாமே' என்றது, உயிர்களின் அகத்தே யெழுந்தருளிய சிவமே புறத்தே குருவாகவும் வெளிப்பட்டு அருளும் என்பதாம். இத் தொடர்ப் பொருளை அடியொற்றியமைந்ததே,

> "அகத்துறுநோய்க் குள்ளின ரன்றி அதனைச்
> சகத்தவரும் காண்பரோ தான்"

எனவரும் திருவருட்பயனாகும்.

உலகெலாங்கடந்தும் மன்னுயிர்கட்கு உயிராகிய அகத்துள் நின்றும் அருள்புரியும் சிவபரம்பொருளே உபதேச குருவாகவும் புறத்தே எழுந்தருளி வந்து இன்னருள் புரிவன் என அறிவுறுத்துவது,

> "எல்லாவுலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்
> நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்
> எல்லாரும் உய்யக் கொண்டிங்கே யளித்தலால்
> சொல்லார்ந்த நற்குருச் சுத்த சிவமே" (1576)

எனவரும் திருமந்திரமாகும். "எல்லாவுலகங்களையுங் கடந்து அப்பாற்பட்டு விளங்கும் முதல்வன் இவ்வுலகின் இப்புறத்தானாக பரிபாகமுடைய நல்லோருள்ளத்திலே விளங்கித் தோன்றி மிக்க திருவருளைச் சுரத்தலாலும்

எல்லோரும் பிறவிப் பெருங்கடலினின்றும் நீங்கி உய்தி பெறுதல் வேண்டி ஆசிரியத் திருமேனி கொண்டு இங்கே எழுந்தருளி வந்து நன்ஞானத்தை வழங்குதலாலும் உபதேசித்தலைப் பொருந்திய நல்லகுரு தூய சிவபெருமானே என்பது நன்கு தெளியப்படும்" என்பது இதன் பொருள். பரிபாகமுடைய நல்லோர்க்கு உயிர்க் குயிராய் உள்நின்றுணர்த்தும் சிவபெருமானே புறத்தே வெளிப்படாத் தோன்றிச் சிவஞானத்தை வழங்கும் குரு ஆவன் என்பதாம்.

**"இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழைபால்**
**நல்லாய் உளவாமால் நீர்நிழல்போல் - இல்லா**
**அருவாகித் தோன்றானை யாரறிவார் தானே**
**உருவாகித் தோன்றானேல் உற்று"**
**(சிவஞானபோதம், 8ஆம் சூத்திரம், 2ஆம் அதிகரணம்)**

எனவரும் மெய்கண்டார் வாய்மொழி இங்குச் சிந்தித்தற் குரியதாகும்.

திருமூலநாயனார் தம்பிறவி வேரறக் குருவின் திருவருளால் திருவடிப்பேறு எய்தினமை குறித்து மகிழ்ந்துரைப்பதாக அமைந்தது,

**"திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கிப்**
**பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னைக்**
**குருவடி விற்கண்ட கோனையெங் கோவைக்**
**கருவழி மாற்றிடக் கண்டுகொண் டேனே"**

எனவரும் திருமந்திரமாகும். "அடியேனை அருட் கண்ணால் நோக்கி என்தலைமேல் தன்திருவடியைச் சூட்டி, எங்குமாய் நீக்கமற நிறைந்திருக்கும் தனது பெரிய வடிவினை அடியேன் உள்ளத்திற்கொள்ளும்படி தந்தருளிய பேர்நந்தியாகிய சிவபெருமானைக் குருவடிவில் எம்மனோர் காண எழுந்தருளிய எமது தலைவனை மீண்டும் கருவிற்செலுத்தும் பிறவி வழியினை மாற்றிப் பிறவாநெறியாகிய பெருநெறியிற் செல்லும் நிலையிற்

காணப்பெற்றுப் பயன்கொண்டேன்" என்பது இதன் பொருள்.

அருள்நோக்கி என்சிரத்தில் திருவடி வைத்துப் பெருவடிவைத் தந்தபேர்நந்தி என இயையும். அருள்நோக்கி - அருட்கண்ணாற்பார்த்தருளி. "அத்தாவுன் அடியேனை அன்பால் ஆர்த்தாய், அருள்நோக்கால் தீர்த்த நீராட்டிக் கொண்டாய்" என்பது திருநாவுக்கரசர் வாய்மொழி.

"ஆகமங்கள் எங்கே அறுசமயந்தா னெங்கே
யோகங்கண் எங்கே யுணர்வெங்கே - பாகத்து
அருள்வடிவுந் தானுமாய் ஆண்டிலனேல் அந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு"

எனவரும் திருக்களிற்றுப்படியாரும்,

"நானுமென் சிந்தையும் நாயகனுக்கெவ் விடத்தோம்
தானுந்தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல்"
(திருவாசகம். கோத்தும்பி)

எனவரும் திருவாசகமும் இங்கு நினைக்கத்தக்கன.

கருவழி மாற்றிடுதலாவது, கடலின் அலைபோல் மேன்மேல் தொடர்ந்து வரும் பிறவி வழியை யடைத்துப் பிறவாநெறியினைத் தலைப்படுதல்.

"திருவார்பெருந்துறை மேயபிரான் என்பிறவிக்
கருவேரறுத்தபின் யாவரையுங் கண்டதில்லை"

எனவும்,

"பிறவிவேரறுத் தென்குடிமுழு தாண்டபிஞ்ஞகா"

எனவும் வரும் திருவாசகத் தொடர்கள் இங்கு நோக்கத் தக்கன.

குருவின் அருளால் திருவடிஞானம் பெற்றமையால் உளதாம் பெரும்பயனைக் கூறுவது,

"கழலார் கமலத் திருவடி யென்னும்
நிழல்சேரப் பெற்றேன் நெடுமாலறியா

அழல்சேரும் அங்கியுள் ஆதிப்பிரானும்
குழல்சேரும் என்னுயிர்க் கூடுங்குலைந்ததே" (1600)

எனவரும் திருமந்திரமாகும். "வீரக்கழல் பொருந்திய செந்தாமரைமலர் போலும் இறைவன் திருவடியாகிய நிழலைச் சேரப்பெற்றேன். உலகினையளந்த நெடியோனாகிய திருமாலாலும் அறியவொண்ணாத வெம்மை பொருந்திய தீப்பிழம்பினுள் விளங்கிய முதல்வனாகிய சிவபெருமானும் அற்புதமான அமுததாரைகளாக எனதுடம்பின் எற்புத் துளைகள்தோறும் வந்து சேர்ந்தான். (அதனால்) அழியுந்தன்மையாதாகிய என்னுடம்பில் வைத்த பற்றும் சிதைந்தழிந்தது" என்பது இதன்பொருள். குழல்-நரம்பின்துளை. ஆதிப்பிரான் குழல் (தோறும்) சேரும். அதனால் உயிர்க்கூடும் குலைந்தது என்க.

"அற்புதமான அமுத தாரைகள்
ஏற்புத்துளைதொறும் ஏற்றினன், உருகுவது
உள்ளங்கொண்டு ஓர் உருச்செய்தாங்கு எனக்கு
அள்ளூ றாக்கை யமைத்தனன்"

எனவும்,

"அழிதரும் ஆக்கை ஒழியச் செய்த ஒண்பொருள்"

எனவும் வரும் திருவாசகத்தொடர்களும்,

"சுழலார் துயர்வெயிற் சுட்டிடும்போதடித் தொண்டர்
துன்னும்
நிழலாவன என்றும் நீங்காப் பிறவிநிலை கெடுத்துக்
கழலா வினைகள் கழற்றுவ காலவனங் கடந்த
அழலார் ஒளியன காண்க ஐயாறன் அடித்தலமே"

என அப்பரடிகள் அருளிய திருவிருத்தமும் இங்கு ஒப்புநோக்கியுணரத்தக்கனவாகும்.

கழல் என்பது, வீரர்கள் தமது வெற்றிக்கு அடையாளமாகக் காலில் அணிந்து கொள்ளும் அணியாகும். அழல்சேரும் அங்கியுள் ஆதிப்பிரான் ஆயினும் அவனுடைய திருவடி குளிர்ந்த நிழலைச் செய்யும் என்பது ஓர்நயம்.

'மாசில் வீணையும்' எனவரும் திருக்குறுந்தொகையும் 'உராஅத்துணைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத், தண்ணிழ லாம் பதி' (சிவஞானபோதம் சூத். 9) எனவரும் சிவஞான போதமும் இத்திருமந்திரப்பொருளை அடியொற்றி யமைந்துள்ளமை ஒப்பவைத்துணர்தற்குரியதாகும்.

## ஞாதுருஞானஞேயம்

அறியும் உயிராகிய ஆன்மா, அறிதற்கருவியாகிய உயிரறிவு, அறிதற்குரிய பொருளாகிய முழுமுதற்கடவுள் என்னும் இம்மூன்றனுள் ஞாதுரு (அறிவான்) ஆகிய தன்னையும், ஞானம் (அறிவு) ஆகிய கருவியினையும் மறந்து, ஞேயம் (அறியத்தகுபொருள்) ஆகிய இறையுணர்வில் ஏகனாகி ஒன்றுதலை உணர்த்துவது, ஞாதுருஞான ஞேயம் என்னும் இப்பகுதியாகும். ஞாதுரு - அறிவான்; ஆன்மா. ஞானம் - அறிவு, ஞேயம் - அறியத் தகுபொருள் ஆகிய சிவம். ஆன்மா தற்போதம் இழந்து சிவஞானத்தால் இறை யுணர்வில் அழுந்தி நிற்றலை உணர்த்துவது இப்பகுதியாகும். ஆன்மா இம்முறையில் ஞேயத்து அழுந்துதலால் பாச நீக்கமும் சிவப்பேறும் உளவாம் என்பதனை உணர்த்துவது,

> "நீங்காச் சிவானந்த ஞேயத்தே நின்றிடப்
> பாங்கான பாசம் படரா; படரினும்
> நீங்கா அமுத நிலைபெறலாமே" (1605)

எனவரும் திருமந்திரமாகும். "உயிர்களை விட்டு என்றும் நீங்காத நலம் வளர்பேரின்பத்தை நல்கும் சிவபரம் பொருளைத் தியானித்தலாகிய உண்மை நிட்டையில் நிலைத்து நிற்கவே, ஆன்மாவைச் சார்ந்துள்ள மலமாயை கன்மங்களாகிய பாசங்கள் (முன்னர்ப் பிணிப்பவிழ்ந்து நீங்கினவை) மீளவும் தொடர்ந்து பற்றமாட்டா; அவை ஒரோவழி முன்னை வாசனைவயத்தால் மீண்டுவந்து பற்ற முற்படினும் அகங்காரமாகிய தற்போதத்தின்நீங்கி ஞேய மாகிய மெய்ப்பொருளில் அழுந்துதலாகிய அந்நிலையிற் பிறழாது நிற்கவே தன்னைச் சார்ந்தாரை என்றும் புறத்தே நீங்கவிடாத சிவானந்தமாகிய பேரின்பத்தில் திளைத்து மகிழும் பேராவியற்கையாகிய வீட்டுநிலையினைப்பெறலாம்"

என்பது இதன் பொருளாகும்.

சிவமாகிய முழுமுதற்பொருள், உயிர்களின் கட்டு நிலையிலும் வீட்டு நிலையிலும் அவ்வுயிர்களைவிட்டு நீங்காது அவையேதானேயாய் என்றும் ஒட்டிநிற்கும் இயல்பினது என்பார், 'நீங்காச் சிவானந்தஞேயம்' என்றார். 'இன்பமே என்னுடைய அன்பே' எனப் போற்றுவர் மாணிக்கவாசகர். ஞேயம் என்றது, சிவஞானத்தின் துணை கொண்டு உயிர்களால் உணர்ந்து பயன்கொள்ளுதற்குரிய கடவுளை. ஞேயத்தே நிற்றலாவது, அப்பரம்பொருள் நல்கிய நிறைந்த சிவஞானத்திலே தாம் அடங்கித் தமது அறிவினுள்ளே சிவானந்தமாகிய பேரின்பம் குடி கொள்ளும்படி அம்மெய்ப்பொருளுணர்வில் அழுந்தி இன் துயில் (ஆனந்தநித்திரை)கொள்ளுதல். இதன் இயல்பினை,

> "ஓங்குணர்வின் உள்ளடங்கி உள்ளத்துள் இன்பொடுங்கத்
> தூங்குவர்மற் றேதுண்டு சொல்" (91)

எனவரும் திருவருட் பயனில் உமாபதிசிவம் இனிது விளக்கியுள்ளார்.

வினை ஒழிவுபெற்ற நல்லுயிர்கள் பழைய வாசனைத் தொடர்பால் மலமாயை கன்மங்கள் மேல்வந்து அடராத வாறு உயிர்க்குயிராய் நிற்கின்ற திருவருள் ஞானத்தோடும் கூடி ஞேயமாகிய பொருளிற்பிரிவற அழுந்தி நிற்றலாகிய அணைந்தோர் தன்மையினையுணர்த்துவது மேற்குறித்த திருவருட் பயனாகும். இதன்கண் 'ஓங்குணர்வு' என்றது, உயிர்களைத் தோற்றமில்காலமாக மறைத்து வந்துள்ள ஆணவ இருள் விட்டு நீங்கத்தக்கதாகப் பக்குவமுடைய உயிர்களின் உள்ளத்திலே பேரொளியாய் விரிந்து பரவி மேலிட்ட சிவஞானத்தினை. அவ்வுணர்வினுள் அடங்க லாவது, உயிரானது சிவஞானமாகிய அப் பேரறிவுக்குள்ளே அடங்கித் தற்போதும் தோன்றாமல் நிற்றல். 'உள்ளத்தில் இன்பு ஒடுங்க' என்றது, சீவன்முத்தராயுள்ள அவர்கள் தங்கள் உள்ளத்திலே சிவனைத் தியானிக்கும்போது சிவன் அங்கே பதிந்து நிற்றலால் அவர் தமது உள்ளத்திலே பேரின்பம்

விளையும் வண்ணம் சிவத்தில் அழுந்தி இன்புறுதலை. தூங்குதலாவது, மயக்க விகற்பங்களிற் படாமல் தூங்காமல் தூங்குதல் என்றது. புண்ணிய பாவங்களைப் பயக்கும் விருப்பு வெறுப்புக்களாக வந்துபொருந்தும் கன்மமும், மண் முதல் மாயையீறாகக் காணப்படும் மாயையும், சுட்டியறிவதாகிய விபரீதவுணர்வையுண்டுபண்ணும் ஆணவமும் ஆகிய இம்மும்மலங்களும் சிவஞானிக்கு ஆகாதன என்றுணர்ந்து தற்போதம் தோன்றாதவாறு நீக்கிச் சிவஞானத்துள் அடங்கிச் 'சிவானுபவம் சுவானுபூதிகம்' ஆமாறு ஞான நிலையில் உறைத்து நிற்றல். அருளோடு ஒன்றியுறங்குதலாகிய இதனியல்பினை,

> "சொற்பாவும் பொருள் தெரிந்து தூய்மை நோக்கித்
> தூங்காதார் மனத்திருளை வாங்காதானை"

எனவும்,

> "அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே
> அறிவுதனை யருளினா னறியாதேயறிந்து
> குறியாதே குறித்தந்தக் கரணங்களோடும்
> கூடாதே வாடாதே குழைந்திருப்பையாகின்"
>
> (சித்தியார், 382)

எனவும் சான்றோர் அறிவுறுத்தியுள்ளார்கள்.

எல்லாமலங்களும் பற்றறத்துடைத்து மெய்யுணர்ந்து நிட்டை கூடினார்க்கு எடுத்தவுடம்பு நிற்குமளவும் நுகர் (பிராரத்த) வினையானது அவ்வுடம்பைப்பற்றி நின்று அவரை வாசனை வயத்தால் ஒரோவழி வந்து தாக்கும். அது சார்பாக விருப்பு வெறுப்புக்கள் உண்டாகும். அவையுண்டாகவே நிலமுதலாகிய பொருள் ஏகதேசப்படும். படவே அவற்றைச் சுட்டியறிவதாகிய விபரீதவுணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாகும். இவ்வாறு தாம் நீங்கிய நிலையிலும் மீண்டு பற்றி வருத்தும் வகையில் உயிரை அணுகிப்படர்வன பாசமாம் என்பது தோன்றப் 'பாங்கானபாசம்' என்றார். பாங்கு ஆனபாசம் என்றது, அற்றம் பார்த்து மீண்டும் பற்றுதற்கு அணுகி நிற்கும் பாசம் என்னும் கருத்தினது. படர்தல் - மேலூர்ந்து அடர்தல்.

படாரினும் என்புழி உம்மை எதிர்மறை. ஆங்காரம் - யான் எனது என்னும் தன்முனைப்பு. அது என்றது ஞேயத்தை, அதன் நிலைநிற்றலாவது ஞேயமாகிய மெய்ப்பொரு ளுணர்வில் அடங்கிநிற்றல். நீங்காநிலை, அமுதநிலை எனத்தனித்தனி இயைத்துப்பொருள்கொள்க. நீங்காநிலை - தன்னைச் சார்ந்தாரைப் புறத்தே நீங்கவிடாது பிரிவறத்தன்னோடு உடனாக்கிக் கொள்ளும்நிலை. அமுதநிலை - பேராவியற்கையாகிய பேரின்பநிலை. இந் நிலையினை,

> "பாசிபடுகுட்டத்திற் கல்லினைவிட்டெறியப்
> படும்பொழுதுநீங்கி அதுவிடும் பொழுதிற் பரக்கும்
> மாசுபடு மலமாயை யருங்கன்ம மனைத்தும்
> அரனடியை யுணரும்போதகலும், பின் அணுகும்
> நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும்
> நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவேயாகி
> ஆசையொடும்அங்குமிங்குமாகி யலமருவோர்
> அரும்பாசம் அறுக்கும்வகை அருளின்வழி
> யுரைப்பாம்." (சித்தியார். 291)

எனவரும் பாடலில் அருணந்தி சிவனார் தெளிவாக விளக்கியுள்ளவை அறியத்தகுவதாகும்.

மேற்காட்டிய திருமந்திரத்தில் 'பாசம் படரார்' எனப் பாச நீக்கமும், 'நீங்கா அமுதநிலைபெறலாம்' எனச் சிவப்பேறும் ஆகிய இருவகைப் பயன்களும் தெரித் துணர்த்தப் பெற்றமை காண்க.

காண்பான் காட்சியுணர்வு காணத்தகுபொருள் என்னும் வேற்றுமையற்று மெய்ப்பொருளில் அழுந்தி நிற்றலின் இயல்பினையும் அதனைக் குரு தமக்கு உபதேசித் தருளிய திறத்தையும் விளக்குவது,

> "காணாத கண்ணுடன் கேளாத கேள்வியும்
> கோணாத போகமுங் கூடாத கூட்டமும்
> நாணாத நாணமும் நாதாந்த போதமும்
> காணா யெனவந்து காட்டினன் நந்தியே" (1610)

எனவரும் திருமந்திரமாகும். காணாத கண், கேளாத கேள்வி என்றது, தத்தம் உணர்வு நிகழ்தற்குரிய வாயிலாகக் கண் முதலிய பொறிகள் இருந்தும், அப்பொறிகள் உலகப் பொருள்களைப் பற்றாது 'காணுங்கரணங்களெல்லாம் பேரின்ப மெனப் பேணும்' நிலையில், உயிர் சிவானந்தத்தில் திளைக்கும்படி தத்தம் செயல் மடங்கிய திறத்தினை. 'விழித்தகண் குருடாய்த் திரிவீரரும் பலரால்' என்பது பெரிய புராணம். கோணாதபோகம் என்றது, விருப்பு வெறுப்புக் களால் மனம் மாறுபடாது திருவருளில் ஒன்றிநுகரும் சிவாநுபவமாகிய நுகர்ச்சி. கோணுதல் - மாறுபடுதல். கூடாத கூட்டம் என்றது, பின்பிரிந்து கூடும்நிலையின்றி எக் காலத்தும் உடனாய் ஒன்றியிருத்தலாகிய அத்துவிதநிலை. நாணாவது, செய்யத்தகாதனவற்றின்கண் உள்ளம் ஒடுங்குதல். நாணாத நாணாவது, அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யாது தான் என்னும் உணர்வு ஒடுங்குதல்; தன்பணிநீத்து இறைபணி நிற்றல். நாதாந்தபோதம் என்றது, நாததத்துதவம் முடியவுள்ள முப்பத்தாறு தத்துவங்களையுங் கடந்து அதன்மேலாக விளங்கும் சிவஞானத்தினை. காணாய் - கண்டறிய மாட்டாதாய், காண்பாயாக. காட்டினன் - உபதேசித்துப் பொருளின் இயல்பினை யான் காணும்படி உடனிருந்து காட்டியருளினான். நந்தி - சிவபெருமான்.

இறைவனது திருவருளாலேயே உயிர்கட்கு ஞானம் உண்டாகும் என்னும் உண்மையினை உணர்த்துவது, அருளுடைமையின் ஞானம் வருதல் என்னும் பகுதியாகும். இறைவன் திருவருள் கிடைத்தால் எல்லா நலங்களும் எளிதிற் கிடைக்கும் என அறிவுறுத்துவது,

> "பிரானரு ளுண்டெனின் உண்டுநற் செல்வம்
> பிரானரு ளுண்டெனின் உண்டுநன் ஞானம்
> பிரானரு ளிற்பெருந் தன்மையும் உண்டு
> பிரானரு ளிற்பெருந் தெய்வமும் ஆமே" (1645)

எனவரும் திருமந்திரமாகும். நற்செல்வம் - கெடுதலும் ஆதலும் இல்லாத நல்லசெல்வம். நன்ஞானம் - குறையாத பேரறிவாகிய சிவஞானம். பெருந்தன்மை - பெருங்குணம்; என்றது இறைவனுக்குரிய எண்குணங்களை. பெருந்தெய்வம்-

பெருந்தெய்வமாகிய சிவமாந்தன்மைப் பெருவாழ்வு. இத்திருமந்திரப் பாடலை ஒத்து அமைந்தது,

"அருளே யுலகெலாம் ஆள்விப்ப தீசன்
அருளே பிறப்பறுப்ப தானால் - அருளாலே
மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்
எப்பொருளு மாவ தெனக்கு" (அற்புதத்திருவந்தாதி)

எனவரும் காரைக்காலம்மையார் அருளிச் செயலாகும்.

நற்பொருளைக் கேட்டற்குரிய பக்குவனாகிய நன்மாணாக்கனது இயல்பினைக் கூறுவது,

"சத்தும் அசத்தும் எவ்வறெனத் தானுன்னிச்
சித்தை யுருக்கிச் சிவனருள் கைகாட்டப்
பத்தியின் ஞானம் பெறப்பணிந் தானந்தச்
சத்தியில் இச்சைத் தருவோன் சற்சீடனே" (1697)

எனவரும் திருமந்திரமாகும். "என்றும் மாறாதுள்ள மெய்ப்பொருளும், ஒருநிலையில் நில்லாது மாற்றமடையும் பொய்ப்பொருளும் எத்தன்மையவெனத் தான் சிந்தித் துணர்ந்து, சித்தத்தை யுருகச் செய்து சிவபெருமானது திருவருள் உய்யும் நெறியிது வெனக் காட்டித் துணை செய்ய, அம்முதல்வன் கைம்மாறு கருதாது செய்துவரும் உபகாரத்தை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் பேரன்பினாலே அதன்பயனாகிய சிவஞானம் கைவரப் பெறுதல் வேண்டி இறைவனைப் பணிந்து பேரானந்தத்தை வழங்கும் அம்முதல்வனது திருவருளிற் படிதற்குப் பெரு விருப்புடையோன் பரிபாக முடைய நல்ல மாணாக்கனாவன்" என்பது இதன்பொருளாகும். சத்து என்றது, சுட்டறிவினால் அறியப்படாது சிவஞானம் ஒன்றினாலே அறிதற்குரியதாய் என்றும் மாறாவியல்பினையுடைய உள்பொருளாகிய சிவம். அசத்து என்றது, உயிரறிவினாற் சுட்டியறியப்படுவதாய் அழியுந்தன்மையதாகிய உலகத்தொகுதி. சித்து - சித்தம்; அம்முக்கெட்டுச்சித்து என உகரவீறாய் நின்றது. திருமூல நாயனார் கூறிய சத்து, அசத்து என்பவற்றின் இயல்பினை,

"உணருரு வசத்தெனின் உணரா தின்மையின்

இருதிறனல்லது சிவசத்தாம் என
இரண்டு வகையின் இசைக்குமன்னுலகே" (சிவ.சூ. ம)

எனச் சிவஞான போத ஆறாஞ்சூத்திரத்தும், சதசத்தின் இயல்பினை,

"யாவையுஞ் சூனியம் சத்தெதிராகவிற்
சத்தேயறியாதசத்தில தறியா
திருதிறன் அறிவுள திரண்டலா ஆன்மா" (சிவ. சா. 7)

என ஏழாஞ்சூத்திரத்தும் ஆசிரியர் மெய்கண்டார் விளக்கியுள்ள திறத்தைக் கூர்ந்து நோக்குங்கால் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார் முதலாகவுள்ள சித்தாந்த சாத்திரம் பதினான்கிற்கும் முதல்நூலாகத் திகழ்வது திருமூலர் அருளிய திருமந்திரமாகிய திருமுறையே என்பது நன்கு புலனாகும்.

## ஏழாந் தந்திரம்

இஃது ஆறாதாரம் முதல் இதோபதேசம் ஈறாக முப்பத்தெட்டு உட்பிரிவுகளையுடையது. இதனுட் கூறப்படும் பொருள்களுள், ஆறாதார நிலைகள், சிவலிங்க பேதங்கள், அருளொளி, குருலிங்க சங்கம வழிபாடு, ஆதித்தர் வகை. ஐம்பொறிகளை யடக்கும்முறை, சற்குரு, இதோப தேசம் என்பன சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இவை மேற்குறித்த தசகாரியங்களுள் சிவரூபம், சிவதரிசனம் என்னும் இரண்டையும் விளக்குவன. போசனவிதி, பிட்சாவிதி, பூரணக் குகைநெறிச் சமாதி, சமாதிக்கிரியை, விந்துச்சயம் என்பன, ஞானம் பெறுதற்குத் துணையாக வுள்ள நல்லொழுக்க நெறிகளை யறிவுறுத்துவனவாகும். மூலாதாரம் முதலிய ஆறு ஆதாரங்களுள் வைத்து அண்ட லிங்கம் முதலிய அறுவகை இலிங்கங்களையும் கண்டு வழிபடுதலும், அருளொளிக்குள் ஒடுங்கியிருந்து குருலிங்க சங்கமம் என்னும் மூன்றிடங்களிலும் சிவபெருமானை வெளிப்படக்கண்டு வழிபடுதலும் ஆகிய இவை, அகமும் புறமுமாகச் செய்தற்குரிய வழிபாடுகள் எனச் சைவநூல்கள் கூறும். ஐந்திந்திரியம் அடக்கும் முறை, கூடாவொழுக்கம் நீத்தல், கேடுகண்டிரங்கல் என்ற தலைப்புக்களிலுள்ள

திருமந்திரப் பாடல்கள், நல்லொழுக்க நெறியில் நின்று இறைவனை வழிபடுவார்பால் குற்றங்கள் நீங்க இன்றியமையாது இருத்தற்குரிய நற்பண்புகளை விளக்குவன. இத்தந்திரத்தின் இறுதியிலுள்ள இதோபதேசம் என்ற பகுதி, பொதுவாக உலகமக்கள் அனைவரும் சிறப்பாகச் சிவநெறிச் செல்வர்களும் அன்புடன் கடைப்பிடித்தொழுகி உய்தி பெறுதற்குரிய நல்லுரைகளைத் தன்னகத்தே கொண்டு திகழ்கின்றது.

இறைவனை யோகநெறி நின்று உணர்தற்கு நிலைக் களமாகிய ஆதாரங்கள் ஆறின் இயல்பினைக் கூறுவது,

> "நாலும் இருமூன்றும் ஈரைந்தும் ஈராறும்
> கோலிமேல் நின்ற குறிகள் பதினாறும்
> மூலங்கண்டாங்கே முடிந்து முதலிரண்டுங்
> காலங்கண்டானடி காண்லு மாமே" (1704)

எனவரும் திருமந்திரமாகும். "நாலிதழ்த்தாமரைவடிவாகிய மூலாதாரமும், ஆறிதழ்த் தாமரை வடிவாகிய சுவாதிட்டான மும், பத்திதழ்த் தாமரை வடிவாகிய மணிபூரகமும், பன்னீரிதழ்த் தாமரைவடிவாகிய அநாகதமும். அவற்றின் மேல்நின்ற பதினாறிதழ்த் தாமரை வடிவாகிய விசுத்தியும் ஆகிய இவற்றின் மூலத்தைத் தரிசித்து அங்கங்கே முடிந்த நிலையெய்தி, இவற்றின் முதலாயுள்ள இரண்டிதழ்த் தாமரைவடிவாகிய ஆஞ்ஞையில் காலத்தை வென்றவனாகிய சிவபெருமானுடைய திருவடிகளைக் கண்டு வழிபடும்பேறு உளதாம்" என்பது இதன் பொருளாகும்.

அண்டம் முழுவதும் சிவலிங்கவடிவாகக் காணும் காட்சி அண்டலிங்கம். மக்கள் உடம்பே சிவலிங்கமாதலை யுணர்த்துவது பிண்டலிங்கம். 'மானுடராக்கை வடிவு சிவலிங்கம்' (1726) என்றார் திருமூலர். இறைவன் அருவுருவத் திருமேனியாகத் திகழ்வது, சதாசிவலிங்கம். அருள்நிலை பெற்ற ஆன்மாவே சிவலிங்கமாகக் கொண்டு வழிபடப் பெறுவது ஆத்மலிங்கம் ஆகும். 'ஒன்றியென் உள்ளத்தின் உள்ளிருந்தானே' (1762) என்றார் திருமூலர். ஆன்மா பெற்றுள்ள சிவஞானத்தையே சிவலிங்கமாகக் கொண்டு

வழிபடப்பெறுவது, ஞானலிங்கம். எல்லாமாய் விளங்கும் பரசிவத்தை ஒரு தறியின் இடமாக எழுந்தருளச் செய்து வழிபாடு செய்யப்பெறுவது சிவலிங்கமாகும். இத்தகைய சிவலிங்கத் திருமேனியே ஒன்பான் வகையாகி அவரவர் பக்குவ நிலைக்கேற்ப நற்பயன் தந்தருளும் என்பது,

> "மலர்ந்த அயன், மால், உருத்திரன், மகேசன்,
> பலந்தரும் ஐம்முகன், பரவிந்து, நாதம்,
> நலந்தரும் சத்தி சிவன் வடிவாகிப்
> பலந்தரு லிங்கம் பராநந்தியாமே" (1776)

எனவரும் திருமந்திரமாகும். "தாமரைமலரிடத்தே தோன்றிய பிரமன், திருமால், உருத்திரன், மகசேன், ஞானவன்மையினை நல்கும் ஐந்து திருமுகங்களையுடைய சதாசிவன், மேலான விந்து, நாதம், நலத்தினையருளும் சத்தி, சிவன் என்னுந் திருமேனியாகி உயிர்கட்கு முத்திப்பயனைநல்கும் இலிங்கத் திருமேனி பராசத்தியுடன் பிரிவின்றியுள்ள சிபெருமானது திருவுருவமாகும்" என்பது இதன் பொருளாகும்.

இங்குத் தனிமுதல்வனாகிய இறைவனுக்குச் சொல்லப்பட்ட ஒன்பது வடிவங்களையும்,

> "சிவஞ்சத்திநாதம் விந்து சதாசிவன் திகழுமீசன்
> வந்தருள் உருத்திரன்தான் மால் அயன் ஒன்றினொன்றாய்ப்
> பவந்தரும் அருவம்நால் இங்குருவம் நால் உபயம் ஒன்றாய்
> நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்"
>
> (சித்தியார் சுபக். 164)

எனவரும் பாடலில் அருவம்,[4] அருவுருவம்,[1] உருவம்[4] எனவகைப்படுத்துக் கூறுவர் அருணந்திசிவாசாரியார்.

மேற்குறித்த ஒன்பது வகையுள் சிவம் என்பது, புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய் நிற்கும்நிலை. சத்தி என்பது, உயிர்களை நோக்கி நிற்கும் அருள்நிலை. நாதம் என்பது, சிவசத்தி உயிர்களின் பொருட்டு அருள்புரிய முன்னிற்குங்கால் ஞானசத்தி வடிவாய் நிற்கும் நிலை. பரநாதம் என்பதும் இதுவே. விந்து என்பது, மேற்குறித்த ஞானசத்தியால் தோற்றுவிக்கப்பெறும்

கிரியாசத்தியாகும். இது பரவிந்து எனவும் படும். (இந்தக் கிரியாசத்தி சுத்தமாயைக் கூடிய விடத்து நாதம் தோன்றும் நாதத்தினின்று விந்துதோன்றும். இவை முறையே அபரநாதம் எனவும் அபரவிந்து எனவும் கூறப்படும்).

இங்குக் கூறப்பட்ட அறிவுநிலை, அருள்நிலை, ஞானசத்தி, கிரியாசத்தி இவை நான்கும் இறைவனுக்குரிய அருவத்திருமேனிகள்.

சதாசிவன் என்பது, தூலலயநிலையில் நின்று பொதுவகையாற் சங்கற்பித்த இறைவன், போகநிலையில் நின்று தனது ஞானசத்தியாற் சிறப்பு வகையால் நோக்கிக் கிரியா சத்தியாற் சிறப்புவகையாற் சங்கற்பித்து நிற்கும் நிலையாகும். ஞானமும் கிரியையும் சிறப்புவகையிற் கலந்து நிற்கும் போகநிலையாகிய இது சிவபெருமானுக்குரிய அருவுருவத்திருமேனியாகும்.

இனி, மகேசன் என்பது, சுத்தமாயையில் சூக்கும மாய்க் காரியந் தோன்றுதற்கு அதிகாரநிலையில் நின்று கிரியாசத்தியை மிக்குச் செலுத்திநிற்கும் நிலை. கிரியை மிகுந்து நின்ற அதிகார நிலை இதுவாகும். உருத்திரன் என்பது உலகினை ஒடுக்குந்தொழிலில் நின்ற திருமேனி யாகும். மால் என்பது, உலகினை நிலைபெறுத்திக் காக்குந் தொழிலில் நின்ற திருமேனியாகும். அயன் என்பது, உலகினைத் தோற்றுவிக்கும் நிலையில் மேற்கொண்ட திருமேனி. இவை நான்கும் உருவத்திருமேனிகள்.

பரமசிவத்துடன் பிரிவின்றியிருக்கும் பராசத்தியாகிய அருள்காரணமாகவே இங்குச் சொல்லப்பட்ட ஒன்பது வகைத் திருமேனிகளும் அமைந்தன என அவிவுறுத்துவார், 'பலந்தருலிங்கம் பராநந்தியாமே' என்றார் திருமூலர்.

"மலைமகள் பாகமாக அருள்காரணத்தின் வருவார்"

எனவரும் தேவாரமும் இங்கு நினைத்தற்குரியதாகும்.

"காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்கம்"

எனவரும் சேக்கிழார் வாய்மொழி, மேற்குறித்த திருமந்திரப் பொருளை அடியொற்றி யமைந்ததாகும்.

சிவனை வழிபடுவோர் குருவின்பால் உபதேசம் பெற்று மனமொழி மெய்களால் தூய்மையுடையராய் நல்லொழுக்க நெறியில் ஒழுகும் மரபுவழி வந்த வழிபாட்டு முறைகளை யுணர்த்துவது, சம்பிரதாயம் என்ற பகுதியாகும்.

"உடல்பொருள் ஆகி உதகத்தாற் கொண்டு
படர்வினை பற்றறப் பார்த்துக்கை வைத்து
நொடியின் அடிவைத்து நுண்ணுணர் வாக்கிக்
கடியப் பிறப்பறக் காட்டினன் நந்தியே" (1778)

எனவரும் திருமந்திரம் ஆசிரியன் மாணவனுக்குத் தீக்கை செய்து உபதேசித்தருளுந்திறத்தை உணர்த்துகின்றது. "நந்தியாகிய சிவபெருமான், பக்குவமுடைய மாணவனது படர்ந்த வினைத்தொடர்பு அற்று நீங்கும்படி அவனை அருட்கண்ணால் நோக்கி அவனது தலையின்மேல் தன் கையை வைத்து, விரைவில் தனது திருவடியை அவனது முடிமேற்சூட்டி, நுண்ணுணர்வாகிய சிவஞானத்தை உபதேசித்தருளி, அம்மாணவனுடைய உடல் பொருள் உயிர் அனைத்தையும் அவன் வார்த்த நீருடன் தன்னுடைமையாக ஏற்றுக்கொண்டு, விரைந்துவரும் வெள்ளம் போன்று தொடர்ந்து வரும் பிறவி அற்றொழியும்படி நன்னெறியைக் காட்டிய ருளினன்" என்பது இதன் பொருளாகும்.

நந்தி, பார்த்துக் கைவைத்து அடிவைத்து, நுண்ணுணர்வாக்கி, உடல் பொருள் ஆவி உதகத்தாற் கொண்டு, பிறப்பு அறக்காட்டினன் என இயைத்துப் பொருள் கொள்க. நந்தி - சிவன், பார்த்தல், சக்ஷு தீக்ஷை. 'அருள் நோக்கில் தீர்த்த நீராட்டிக் கொண்டாய்', 'கண்ணால் நோக்கிக் காண்ணப்பர் பணிகொள்ளுங் கபாலியாரே' எனவரும் திருநாவுக்கரசர் வாய்மொழிகள் திருக் கண்ணோக்கமாகிய இத்தீக்கையினைக் குறிப்பனவாகும். கை வைத்தலு முடிமேல் அடிவைத்தலும் பரிசதீக்கையாகும். நுண்ணுணர்வாக்கி எனவே அவ்வுணர்வினைத் தோற்று வித்தற்குக் காரணமாகிய மானச தீக்கை. உடல்பொருள்

ஆவி உதகத்தாற் கொள்ளுதலாவது, மாணவன் யான் எனது என்னும் செருக்கறுதற் பொருட்டுத் தன்னுடைய உடல் பொருள் உயிர் அனைத்தையும் குருவின் கையில் நீர்வார்த்துக் கொடுக்க, அவர் அவையனைத்தையும் தம் உடைமையாக ஏற்றுக் கொண்டருளுதல் (உதகம் - நீர்) தீக்கையில் நிகழும் இச்சம்பிரதாயத்தினை,

> "அன்றே யென்றன் ஆவியும் உடலும் உடைமையெல்லாமும்
> குன்றேயனையாய் என்னை ஆட்கொண்டபோதே
> கொண்டிலையோ"

எனவரும் திருவாதவூரடிகள் வாய்மொழியால் நன்குணரலாம்.

திருவருள்வைப்பு என்பது, குருவின் உபதேசத்தின் வழிநின்று முன்னையோரது ஒழுக்கநெறியினைப் பின்பற்றி ஒழுகுவார்க்கு இறைவனது திருவருளே எல்லாவற்றுக்கும் ஆதாரமாகவும் உள்ளீடாகவும் வைக்கப்பெற்ற திறத்தை யுணர்த்தும் பகுதியாகும். இறைவன் உயிர்களின் பொருட்டு நிகழ்த்தும் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களும் உயிர்கள் பால் வைத்த திருவருளை நிலைக்களமாகக் கொண்டே நிகழ்வன என்பது,

> **"அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்**
> **டருளில் அழிந்திளைப் பாறி மறைந்திட்**
> **டருளான ஆனந்தத் தாரமு தூட்டி**
> **அருளாலென் னந்தி யகம்புகுந்தானே"** (1800)

எனவரும் திருமந்திரத்தால் உணர்த்தப்பெற்றது. "உயிராகிய யான் அருளின் உதவியாற் பிறந்து, அதன் துணையால் வளர்ந்து, (கன்மத்தால் பிறந்தும் இறந்தும் அலைப்புண்ட அயர்வுநீங்க) அருளால் ஒடுங்கி இளைப்பாறி, (இருவினைப் பயன்களை நுகர்ந்து தொலைத்தற்பொருட்டு) அவ்வருளால் மறைக்கப்பட்டு நின்றநிலையில் என் குருநாதனாகிய சிவபெருமான் தனது திருவருளாகிய இன்பமயமான நிறைந்த அமுதத்தை உண்பித்துத் தனது திருவருளால் என் அகத்துட்புகுந்து என்னுள்ளமே கோயிலாகக் கொண்டு எழுந்தருளினான் என்பது இதன் பொருளாகும்.

பிறத்தல், வளர்தல், இளைப்பாறுதல் ஆகிய இவை உயிர்களின் தொழில்களாயினும், இவற்றை உயிர்களே செய்து கொள்ளும் ஆற்றல் அற்றன என்பதும் இத்தொழில்களின் நிகழ்வுக்கு இறைவனது திருவருளே ஏதுவாகும் என்பதும் புலப்பட 'அருளிற் பிறந்திட்டு .......... வளர்ந்திட்டு ........ மறைந்திட்டு' என்றார். இத்திருமந்திரத்தில் இறைவன் செய்யும் ஐந்தொழில்களும் முறையே குறிக்கப் பெற்றிருத்தலும், இறுதியிற் கூறப்பட்ட அருளே யன்றி முன்னர்க் கூறப்பட்ட ஏனைய நான்கும் அருளின் நிமித்த மாகவே இங்குத் தெளிவாக விளக்கப் பெற்றுள்ளமையும் காணலாம். இத்திருமந்திரப் பொருளை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது,

"ஏற்ற இவை அரனருளின் திருவிளையாட்டாக
 இயம்புவர்கள், அணுக்கள் இடர்க்கடல்நின்றும் எடுத்தே
ஊற்றமிக அருள்புரிதல் ஏதுவாக
 உரைசெய்வர், ஒடுக்கம் இளைப்பொழித்தல், மற்றைத்
தோற்றம் மலபாகம்வரக், காத்தல் போகந்
 துய்ப்பித்தல், திரோதாயி நிறுத்தலாகும்,
போற்றலரும் அருள் அருளேயன்றி மற்றுப்
 புகன்றவையும் அருளொழியப் புகலொணாதே" (6)

எனவரும் சிவப்பிரகாசச் செய்யுளாகும். கன்மத்தினால் அலைப்புண்ணும் உயிர்களை இளைப்பாற்றுதலே அழித்தல். நீங்காதுள்ள ஆணவமலம் நீங்குதற்பொருட்டு மீளவும் தனுகரணபுவன போகங்களோடு கூட்டுதலே படைத்தல். கன்மங்களை நுகர்ந்து மலம் நீங்குதற்குரிய பக்குவம் உண்டாக்குதலே காத்தல். அந்தப் போகங்களைப் புசிப்பித்துக் கன்மங்களைத் தொலைப்பித்தற்காகக் குறிப்பிட்ட கால அளவுகளிலே அவற்றில் நிறுத்துதலே மறைப்பு. உயிர்களைப் பாசப்பிணிப்பகற்றித் திருவடியிலே கூட்டிக்கொள்ளுதலே அருளல்.

"போற்றி யெல்லாவுயிர்க்குந் தோற்றமாம் பொற் பாதம், போற்றி யெல்லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள், போற்றியெல்லாவுயிர்க்கும் ஈறாம் இணையடிகள், போற்றி

மால் நான்முகனும் காணாத புண்டரிகம், போற்றியாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன்மலர்கள்" (திருவெம்பாவை 20) என இறைவன் செய்யும் ஐந்தொழில்களும் திருவாசகத்திற் குறிக்கப்பெற்ற திறத்தை மதுரைச் சிவப்பிரகாசர் மேற் காட்டிய சிவப்பிரகாசவுரையில் எடுத்துக்காட்டி விளக்கி யுள்ளார். 'அருளால் என் நந்தி அகம்புகுந்தானே' என்பதனை 'என்மனமே யொன்றிப்புக்கனன் போந்த சுவடில்லையே' (4) என்ற தொடரில் அப்பரடிகள் குறித்துள்ளமை இங்கு ஒப்புநோக்கி யுணரத்தகுவதாகும்.

சிவபரம்பொருள் தன்னிற்பிரிவில்லாத பராசத்தியின் சொரூபமாகிய அருளொளியாய் ஞாயிறு திங்கள் முதலிய புறப்பொருள்களிலும் மன்னுயிர்களின் அகத்திலும் தோன்றும் சோதியாய்ச் சுடர்விட்டு விளங்கிப் புற விருளையும் அகவிருளையும் நீக்கி உயிர்களின் அறிவினை விளக்கி நிற்றலை விளக்குவது அருளொளி என்னும் பகுதியாகும். அருளொளியால் உயிர்கள் எய்தும் பயனை உணர்த்துவது,

> **"விளக்கினை யேற்றி வெளியை அறிமின்**
> **விளக்கினின் முன்னே வேதனை மாறும்**
> **விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்**
> **விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே"** (1818)

எனவரும் திருமந்திரமாகும். "திருவருள் ஞானமாகிய விளக்கினையேற்றி எல்லையற்ற தூயவெளியாகிய பரம் பொருளை யுணர்ந்து போற்றுவீராக. தூண்டாவிளக்காகிய அதன் சுடரொளியின் முன்னே உயிரை அநாதியே பற்றியுள்ள மலமாயை கன்மங்களாகிய துன்பங்கள் நில்லாது நீங்கும். உயிரின் அறிவினை விளக்கும் ஒளிவளர் விளக்காகிய அருளொளியினைத் தன்கண் பெற்றுடையவர்கள் அவ்வொளியினாற் சூழப்பெற்று விளங்கும் தூய ஞானச்சுடர் விளக்காக ஒன்றி ஒளியுடன் திகழ்வார்கள்" என்பது இதன் பொருளாகும்.

இத்திருமந்திரத்தின் முதலடியில் விளக்கு என்றது, சிவஞானத்தினை. ஏற்றுதல் - கொளுத்துதல்; உயிரது

அறிவிற் பற்றும்படி அதனோடு இயைந்து ஆன்மபோதம் அடங்க நிற்றல். இம்முறையில் இறைவனைக் கண்டு வழிபடும் முறையினை,

"ஊனி லுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்துவார்க் கிட
ரான கெடுப்பன அஞ்செழுத்துமே" (3.22.4)

எனத் திருஞானசம்பந்தரும்,

"உடம்பெனு மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படும் உணர்நெய்யட்டி உயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே" (4.75.5)

எனத் திருநாவுக்கரசரும் அருளிய திருப்பாடல்களால் இனி துணரலாம். இனி, இத்திருமத்திரத்தின் இரண்டாமடியில் விளக்கு என்றது, இறைவனது அருளொளியினை. 'மெய்கிளரும் ஞானவிளக்குக் கண்டாய்' (6.23.2) எனவும், 'தூண்டாவிளக்கின் சுடரனையாய்' (திருவாசகம்) எனவும், 'ஒளிவளர்விளக்கே' (9.1.1) எனவும் அருளாளர் இறைவனை விளக்காக அழைத்துப் போற்றியுள்ளமை காணலாம். மூன்றாமடியின் முதற்கண் விளக்கு என்றது, உயிரறிவினை. அவ்விளக்கை விளக்கும் விளக்காவது இறைவனருளாகிய சுடரொளி. அதனையுடையவர்கள் என்றது, அவ்வொளி உள்ளும் புறம்புந் தோன்றக் காணும் அருளாளர்களை. அப்பெருமக்கள் சோதியும் சுடரும் சூழொளி விளக்கும் ஆகிய அவ்வொளியினால் உள்ளும்புறம்பும் ஒருதன்மைக் காட்சியராய் விளங்கும் நன்ஞானம் பெற்றுடையராய் ஆணவ இருள் நீங்க ஈறில் பெருஞ்சோதியினிற் பிரிவறக் கலந்தொளிரும் சுடர் விளக்காகத் திகழ்வர் என்பார், "விளக்கை விளக்கும் விளக்குடையார்கள், விளக்கில் விளங்கும் விளக்கவர்தாமே" என்றருளிச் செய்தார்.

சிவபூசை என்பது, பூ, நறும்புகை, விளக்கு, திருமஞ்சனம், திருவமுது முதலியன கொண்டு, பூதசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி என்னும்

ஐந்து சுத்திசெய்து, ஆசனம் இட்டு மூர்த்தியை அதன்கண் எழுந்தருளச் செய்து மூர்த்திமானாகிய இறைவனைப் பாவனை செய்து அத்திருவுருவின்கண் ஆவாகித்து மெய்யன்புடன் அருச்சித்து விருப்புடன் சிவவேள்வியினைச் செய்து வழிபடுதலாகும். இப்பூசை புறப்பூசை (கிரியை), அகப்பூசை (ஞானம்) என இருவகைப்படும். பூசைப் பொருள்களைப் புறத்தே சேமித்துக் கொண்டு இறைவனை வழிபடுவது புறப்பூசை. இவற்றை மனத்தாலே படைத்துக் கொண்டு வழிபடுதல் அகப்பூசையாகும். அகப்பூசைக்குரிய அங்கங்களை உணர்த்துவது,

> "உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலாயம்
> வள்ளற் பிரானார்க்கு வாய்கோபுர வாசல்
> தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
> கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே" (1823)

எனவரும் திருமந்திரமாகும். "பேரருள்வள்ளலாகிய இறைவனுக்கு ஊனுடம்பே கோயில் வளாகமாகிய ஆலயமாகும். உள்ளமே இறைவன் வீற்றிருந்தருளும் கருப்ப இல்லாகிய பெருங்கோயிலாகும். அவ்வாலயத்தின் கோபுர வாசலாகத் திகழ்வது வாயாகும். இறைவனைப் பூசிக்கும் முறையினைத் தெளிவாகவுணர்ந்த சிவஞானிகட்கு அவர்தம் ஆன்மாவே' இறைவனை ஆவாகித்துப் பூசித்தற்கேற்ற சிவலிங்கத் திருமேனியாகும். வஞ்சனையை விளைக்கும் ஐம்புலன்களும் அடங்கிய நிலையே அவ்வழிபாட்டிற்குரிய உள்ளொளியினைத் தரும் தூண்டாத மணிவிளக்காகும்" என்பது இதன்பொருளாகும். இவ்வகப்பூசையின் இயல்பினை விளக்குவது,

> "காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
> வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
> நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமையஆட்டிப்
> பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே" (4)

எனவரும் திருநேரிசையாகும்.

சிவஞானத்தை உபதேசித்தருளிய சிவகுருவைப் பூசித்தலின் சிறப்பினையுணர்த்துவது குருபூசை என்னும்

பகுதியாகும். சிவனடியார்களைச் சிவனெனவே கண்டு வழிபடுஞ் சிறப்பினை யுணர்த்துவது மகேசுவரபூசை என்பதாகும். இறைவனுக்குத் தாம் எக்காலத்தும் அடிமையே என்னும் தொன்மையினை யுணர்ந்து வழிவழி இறைவனுக்குத் தொண்டுபுரியும் சிவனடியாரது பெருமையினை யுணர்த்துவது அடியார் பெருமை என்ற பகுதியாகும். சிவனை வழிபடுவோர் உணவுண்ணும் முறையினை உணர்த்துவது போசனவிதி. தான் உண்ணுதல் வேண்டும் தனக்கென்று உலையேற்றாமல் சமைக்கும்பொழுதே அடியார்க்கென்று சமைத்த உணவே விரும்பியுண்ணத்தக்க நல்லமிழ்தமாகும். பிட்சாவிதி என்னுந்தலைப்பில்,

> "பரந்துல கேழும் படைத்த பிரானை
> இரந்துணி என்பார்கள், எற்றுக் கிரக்கும்
> நிரந்தரமாக நினையும் அடியார்
> இரந்துண்டு தன்கழல் எட்டச் செய்தானே" (1888)

எனவரும் திருமந்திரம் இறைவன் பிச்சைத்தேவனாதற்குரிய காரணம் கூறுகின்றது.

"விரிந்து பரவிய ஏழுலகங்களையும் படைத்தருளிய சிவபெருமானை இரந்து பிச்சையேற்று உண்பவன் என்று கூறுவர் (அறியாதார்). உலகெல்லாமுடையானாகிய அவ்விறைவன் எதற்காக இரத்தற்றொழிலை மேற்கொள்ள வேண்டும்? இடைவிடாது தன்னைத் தியானிக்கும் அடியார்கள் பிறர்பால் இரந்து அன்னோர் இட்ட வுணவினையுண்டு தன்திருவடியை அடையும் வண்ணம் இவ்விரத்தற்கோலத்தை மேற்கொண்டருளினான்" என்பது இத்திருமந்திரத்தின் பொருளாகும்.

இறைவனை இடைவிடாது போற்றுந் தொழிலின ராய சிவனடியார்கள் ஆக்கைக்கே இரைதேடி அலையாமல் அன்புடையாரது மனைக்கண் சென்ற அவர் உவந்தளிக்கும் உணவை அளவாக வுண்டு தன் பொன்னார்திருவடியை அடைதற்பொருட்டே இறைவன் பிச்சையேற்குந் தவ வேடத்தினைத் தான் மேற்கொண்டு தன்னடியார்க்கு வழிகாட்டியதல்லது, பசியும் பிணியும் பகையுமில்லாத ஈசன்

வறுமையினாலோ நுகர்ச்சி வேண்டும் என்னும் ஆராமையி னாலோ இரத்தற்றொழிலை மேற்கொண்டான் அல்லன். ஏற்பதிகழ்ச்சி என்னுந் தாழ்வுரை உலக மக்களால் அடியார்க்கு எய்தாமற் பரிகரித்தற்பொருட்டே உலகெலா முடைய இறைவன் இரத்தற்றொழிலை மேற்கொண்டு பிச்சைத் தேவனாகத் திகழ்கின்றான் என்பது இத்திருப் பாடலாற் புலனாம்.

> "படிமுழுதும் வெண்குடைக்கீழ்ப் பாரெலொம் ஆண்ட
> முடியரசர் செல்வத்து மும்மை - கடியிலங்கு
> தோடேந்து கொன்றையந்தார்ச் சோதிக்குத் தொண்டுபட்
> டோடேந்தி யுண்ப துறும்" (க்ஷேத்திரத் திருவெண்பா)

என ஐயடிகள் காடவர்கோன் நாயனாரும்,

> "அங்கையோ டேந்திப் பலிதிரி கருவூர்" (திருவிசைப்பா)

எனக் கருவூர்த்தேவரும் அருளிய வாய்மொழிகள் அப்பெருமக்கள் காலத்தில் வாழ்ந்த சிவனடியார்களது பற்றற்ற துறவுநிலையை நன்கு புலப்படுத்துதல் காணலாம்.

> "செஞ்சுட ரோன் முதலாகிய தேவர்கள்
> மஞ்சுடை மேரு வலம்வரு காரணம்
> எஞ்சுட ரீசன் இறைவன் இணையடி
> தஞ்சுட ராக வணங்குந் தவமே" (1975)

எனவரும் திருமந்திரம் இறைவன் அண்டத்துள் ஞாயிறாய் விளங்குந் திறத்தினை உணர்த்துவதாகும். செங்கதிரோன் முதலிய ஒளிமண்டிலங்கள் மேருமலையை வலம்வருவதன் காரணம், கயிலாய நாதன் கழல்களாகிய திருவடிகளை வணங்கி அத்திருவடியின் ஒளியினைத் தாம் பெற்று ஒளிர்தல் வேண்டும் என்னும் நோக்கமேயாம் என்பது இதனால் வலியுறுத்தப்பட்டது. எனவே அண்டங்களிலுள்ள ஞாயிறு முதலிய எல்லாச் சுடர்களுக்கும் ஒளிவழங்கும் ஆதித்தன் சிவனே என்பது பெறப்படும்.

> "மெய்ச்சுடருக் கெல்லாம் ஒளிவந்த பூங்கழல்
> உத்தரகோசமங்கைக் கரசே" (திருவா. நீத்தல்)

எனவரும் திருவாசகமும்,

> "நாயகன் கண்ணயப்பால் நாயகிபுதைப்ப எங்கும்
> பாயிருளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித்
> தூயநேத்திரத்தி னாலே சுடரொளிகொடுத்த பண்பிற்
> றேயமா ரொளிகளெல்லாம் சிவனுருத்தேசதென்னார்"
>
> (72)

எனவரும் சிவஞானசித்தியாரும் இங்கு நினைக்கத் தக்கனவாகும்.

பசுவிலக்கணம் என்ற தலைப்பில், சிவனும் சீவனும் பிரியாது உடனாய் விளங்குந் திறத்தினை விரித்து விளக்கும் முறையில் அமைந்தது,

> "அன்னம் இரண்டுள ஆற்றங் கரையினில்
> துன்னி இரண்டுந் துணை பிரியாதன
> தன்னிலை யன்னம் தனியொன்ற தென்றக்கால்
> பின்ன மடவன்னம் பேறணு காதே" (2006)

எனவரும் திருமந்திரமாகும். "ஆற்றங்கரையிலே இரண்டு அன்னப்பறவைகள் ஒருங்கே உடனமர்ந்துள்ளன. அவையிரண்டும் தம்முள் பிரிப்பின்றி நெருங்கித் துணை பிரியாதுள்ளன. அவற்றுள் தன்னியல்பினதாகிய ஆண் அன்னம் வேறு பிரிந்திருப்பது என்றக்கால் அது பிரிய வேறுபட்ட பெண் அன்னம் வாழ்க்கைப் பேறாகிய இன்பத்தினை அடையமாட்டாது" என்பது இதன் பொருளாகும்.

"வாழ்க்கையாகிய ஆற்றின்கரை யெனப்படும் உடம்பின்கண்ணே உயிரும் சிவமும் ஒன்றியுள்ளன. தன்னியல்பினதாகிய சிவம் உயிரின்வேறாகப் பிரிந்து விடுமானால், அது பிரியத் தனிப்பட்டுள்ள ஆன்மா சிவப்பேற்றினை அடைதல் இயலாது" என்னும் பொருள் தோன்ற நின்றமையின், இத்திருமந்திரம் பிறிதுமொழிதல் என்னும் அணியின்பாற்படும்.

இரண்டும் அன்னமாயினும் அவற்றின் வேற்றுமை

தோன்றத் தன்னிலையன்னம் என்றும் மடவன்னம் என்றும் அடைபுணர்த்து ஓதினார். தன்னிலையன்னம் என்றது, எக்காலத்தும் தன்னியல்பில் மாறாதுள்ள மெய்ப்பொருளா யுள்ள சிவபரம்-பொருளை. மடவன்னம் என்றது, அநாதியே ஆணவமலத்தால் மறைக்கப்பட்ட அறிவினதாகிய ஆன்மாவை. துன்னுதல் - பொருளால் வேறுபடினும் கலப்பினால் ஒன்றாய் நெருங்குதல், பேறு என்பது, வீடு பேறாகிய இன்பத்தினை.

"பிரியாநண்பினையுடைய இருபறவைகள் ஒரே கிளையில் அமர்ந்துள்ளன. அவற்றுள் ஒன்று இனிய பழத்தைத் துய்க்கின்றது. மற்றது உண்ணாது பார்த்துக் கொண்டிருக்கிறது" (இருக்கு வேதம் 1.164.20) என்னும் மறைமொழிப்பொருள் இத்திருமந்திரத்தோடு ஒப்புநோக்கற் பாலதாகும். இதனால் என்றும் மாறாத இயல்பினது சிவம் என்பதும் அது மன்னுயிர்க்குச் சார்பாயுள்ளது என்பதும் அதன் சார்பின்றி அறியாமையையுடைய உயிர் பேரின்ப வாழ்வினைப் பெறுதல் இயலாதென்பதும் உணர்த்தப் பெற்றன.

கூடாவொழுக்கம் என்ற தலைப்பில் தவத்தொடு பொருந்தாத தீயவொழுக்கத்தை நீக்குதற்குரிய உபாயம் கூறுவதாக அமைந்தது,

> **"கண்காணி யில்லென்று கள்ளம் பலசெய்வார்**
> **கண்காணி யில்லா இடமில்லை காணுங்கால்**
> **கண்காணி யாகக் கலந்தெங்கு நின்றானைக்**
> **கண்காணி கண்டார் களவொழிந் தாரே"** (2067)

எனவரும் திருமந்திரமாகும். "தம்மைக் கண்காணிக்கும் தலைவராவார் இவ்விடத்து எவரும் இல்லையென்று எண்ணிக் கூடாவொழுக்கத்தினராய்க் கள்ளச்செயல்கள் பலவற்றையும் செய்வார் உண்மையறியாதார். ஆராய்ந்து நோக்குங்கால் நல்லனவும் தீயனவுமாக நாம் செய்யுஞ் செயல்களை உடனிருந்து கூர்ந்து நோக்கும் இறைவன் இல்லாத இடம் எதுவும் இல்லை. உயிர்கள் செய்யும் செயல்களைக் கண்காணித்து முறைவழங்கும் தலைவனாக

(உயிர்களின் உள்ளத்தும் ஆக) எங்கும் கலந்து நின்ற இறைவனைக் காணும் கண்ணுக்குக் காட்டும் கதிர்போன்று உயிரின் அகத்தும் நுகரும் பொருள்களிடத்தும் ஒப்பத்தங்கிக் கண்காணிக்குந் தலைவனாகக் கண்டுணர்ந்தவர்கள், முன்னம் அவனைத் தாம் காணாமையால் மறைவிற் செய்த தீய செயல்களை விட்டொழியும் நல்லுணர்வினராவர்" என்பது இதனால் அறிவுறுத்தப்பட்ட பொருளாகும்.

கண்காணி - தம்கீழுள்ளோர் செய்யும் தொழில்களின் நன்மை தீமைகளை உடனிருந்து மேற்பார்த்து அவர்களது குற்றங்களைந்து நெறிப்படுத்தும் அதிகாரி. கள்ளம் - பிறர் அறியாதபடி வஞ்சனையால் மறைவிற்செய்யும் செயல். காணுதல் - அறிவினாற்கூர்ந்து நோக்குதல். கண்காணி - கண்ணுள் (உயிரறிவில்) உடனின்று காணுபவன். 'மனத் தகத்தான் ........காளத்தியான் அவன் என்கண்ணுளானே' எனவும், 'நானேதும் அறியாமே என்னுள்நின்று நல்லனவும் தீயனவும் காட்டாநின்றாய்' எனவும்

"கள்ளனேன் கள்ளத்தொண்டாய்க் காலத்தைக் கழித்துப்போக்கித்
தெள்ளியே னாகிநின்று தேடினேன் நாடிக்கண்டேன்
உள்குவா ருள்கிற்றெல்லாம் உடனிருந்தறிதியென்று
வெள்கினேன் வெள்கிநாணும் விலாவிறச் சிரித்திட்டேனே" (4)

எனவும் வரும் அப்பர் அருளிச் செயல்கள், இறைவன் உயிர்கள் செய்யும் செயல்களை உள்ளும் புறம்பும் நின்று மேற்பார்த்து நெறிப்படுத்தும் கண்காணியாய் எவ்விடத்தும் நீக்கமறக் கலந்து நிற்றலையும் அவ்வுண்மையினையுணர்ந்தார், அதுகாறும் அறியாமையால் தாம்மறைவிற் செய்த தவறுகளுக்கு நாணிவருந்தி அத்தீச்செயலை அறவே விட்டு நீங்குவர் என்பதனையும் அறிவுடைமாந்தர்தம் கூடா வொழுக்கத்தை விட்டு நீங்குதற்குரிய உபாயம் இதுவே என்பதனையும் இத்திருமந்திரம் நன்கு புலப்படுத்தல் அறியத்தகுவதாகும்.

ஏழாந்தந்திரத்தில் இதோபதேசம் என்றதலைப்பில் அமைந்துள்ள திருமந்திரப் பாடல்கள் யாவும் மக்கள் இம்மை மறுமைப் பயன்களை எய்துதற்குரிய உயர்ந்த கோட்பாடு

களையும் சிறந்த வழிமுறைகளையும் இனிய மொழிகளால் அறிவுறுத்துவனவாகும். "பிறப்புவகையாகிய குலமும் ஒன்றே. வழிபடுதற்குரிய பரம்பொருளாகிய இறைவனும் ஒருவனே. ஆதலால் எல்லாவுயிர்கட்கும் நலம் பயக்கும் எண்ணங் களையே எண்ணுங்கள். அவ்வாறு எண்ணுவீராயின் நமனால்வரும் சிறப்புத்துன்பம் நுமக்கில்லை. நாணமின்றிப் பலவிடத்துஞ்சென்று பலரையும் நாடியடைதற்குரிய நற்கதி பிறிதொன்றுமில்லை. எனவே நீவிர் (ஒழுக்கநெறியிற் பிறழாது) நின்று நுமது உள்ளத்தே இறைவனை நிலைபெற நினைந்து உய்திபெறுவீராக" என உலகினர்க்கு அறிவுறுத்துவ தாக அமைந்தது,

> **"ஒன்றே குலனும் ஒருவனே தேவனும்**
> **நன்றே நினைமின் நமனில்லை நாணாமே**
> **சென்றே புகுங்கதி யில்லை நுஞ்சித்தத்து**
> **நின்றே நிலைபெற நீர் நினைந்துய்மினே"** (2104)

எனவரும் திருமந்திரமாகும். இத்திருப்பாடல், தெய்வங் கொள்கையுடைய எல்லாச் சமயத்தார்க்கும் ஏற்றபொதுமை வாய்ந்த உபதேசமாக அமைந்துள்ளமை குறிக்கத் தகுவதாகும்.

குலம் - உயர்திணை மாந்தரின் பிறப்புப்பற்றிய பிரிப்பு. வினை வயத்தால் உளவாம் பிறப்பு மக்களிடையே பல்வேறு இனமாகப் பிரித்துப் பேசப்படினும் உயிர் நிற்றற்குரிய உடம்பு என்னும் பொதுமையால் நோக்கும்பொழுது பிறப்பு வகைபற்றிய சிறப்பு எதுவும் இல்லையென்பார் 'ஒன்றே குலமும்' என்றார். 'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்' என வரும் திருக்குறள் இத்தொடரில் நிலைபெற்றுள்ளது. 'எல்லாவுயிர்களும் ஓரினமே. அவ்வுயிர்கட்குத் தலைவனாக நின்று அருள்புரியும் இறைவனும் ஒருவனே' என்னும் இவ்வுண்மையினை உள்ளவாறுணர்ந்தோர் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் ஆன்மநேய ஒருமைப் பாடுடைய ராய் எவ்வுயிர்க்கும் நன்றே நினைந்து உய்திபெறும் நல்லியல்பினராவராதலின் அன்னோர்க்கு இறத்தல் துன்பம் என்றும் நேராது என்பார், 'நன்றே நினைமின் நமன் இல்லை' என்றார். நலம்பெற விரும்பியவர்கள் நாணமின்றிப்

பலரிடத்துஞ்சென்று நற்பொருளை வினவிப்பெறுதல் உலகியல்பு. அவ்வாறு எங்கும் அமைந்து திரிந்து அடைதற்குரிய நற்கதி நுமக்குப்புறம்பாக எதுவுமில்லை; நும்மனத்தகத்திலேயே நிலைபெற்றுள்ளது. ஆதலின் இறைவனை மனத்தின்கண் மறவாது நினைத்தலொன்றே போதுமானது என்பார், 'சென்றே புகுங்கதிஇல்லை' என்றும், 'நும்சித்தத்து நின்றே நிலைபெற நீர் நினைந்துய்மினே' என்றும் கூறினார். சென்றே புகுங்கதி இல்லை எனவே நீர் அக்கதியை நாடிச் செல்லவேண்டிய இன்றியமையாமை யில்லை, சென்றடையாத திருவாகிய அச்சிவகதி நும்முள்ளத் திருந்து வெளிப்பட்டுத் தோன்றி நும்மை அகத்திட்டுக் கொள்ளும் என அறிவுறுத்தினாராயிற்று,

உயிர்கட்குச் சார்பாயுள்ள சிவபெருமானை அன்பால் நினைவார் எய்தும் பயனும் நினையாதார்அடையும் தீமையும் உணர்த்துவது,

> **"சார்ந்தவர்க் கின்பங்கொடுக்குந் தழல்வண்ணன்**
> **பேர்ந்தவர்க் கின்னாப் பிறவி கொடுத்திடும்**
> **கூர்ந்தவர்க் கங்கே குரைகழல் காட்டிடும்**
> **சேர்ந்தவர் தேவரைச் சென்றுணர் வாரே"** (2114)

எனவரும் திருமந்திரமாகும்.

"தீவண்ணனாகிய சிவபெருமான் தன்னை அன்பினாற் சார்ந்து ஒழுகுவார்க்கு இன்பத்தை நல்கி யருள்வான். தன் திருவருள் ஆணையின் வழிச்சாராது விலகி நடப்பார்க்குத் துன்பமே விளைக்கும் பிறவியைக் கொடுப்பான். தன்பால் அன்பு மீதூரப் பெற்றார்க்கு ஒலிக்கின்ற கழலணிந்த திருவடியைக் காட்டி அருள் புரிவான். அவனது திருவடியாகிய சிவஞானம் சேரப் பெற்றவர்கள் இறைவனை அணுகிச் சென்றுணர்ந்து இன்புறுவோராவர்" என்பது இதன் பொருள்.

சார்தல் - இருவகைப் பற்றும் நீங்க இறைவனை அடைக்கலமெனச் சார்ந்து தன் செயலற்று இறைவனது அருள்வழி யொழுகுதல்; அவனருளாலன்றித் தானாக ஒன்றையுஞ் செய்யாமை. தீயானது தன்னை மதித்து அகலாது

சார்ந்தொழுகுவாரது குளிரை நீக்கி நலஞ்செய்தும் தன்னைவிட்டு விலகினார்க்குப் பயன்தராதும் அமைதல் போன்று, தீவண்ணனாகிய இறைவனும் அன்பினால் தன்னை அகலாதொழுகுவார்க்கு நடுக்கம் அகற்றி நலம்புரிதலும் விலகியொழுகுவார்க்குப் பிறவிப்பிணியுட்பட்டு வருந்தப் பயன்தராதொழிதலும் ஆகிய இருநிலைமையும் உடையன் என்பார், 'தழல் வண்ணன் சார்ந்தவர்க்கு இன்பங்கொடுக்கும், பேர்ந்தவர்க்கு இன்னாப் பிறவிகொடுத்திடும்' என்றார். 'சார்ந்தவர்க்கின்பங்கள் தழைக்கும் வண்ணம். நேர்ந்தவன்' (1.113.5) எனவும், 'தன்னடைந்தார்க் கின்பங்கள் தருவானை' (2.4.11) எனவும், 'சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால் நலமிலன் நாடொறும் நல்குவானலன்' (4.11.6) எனவும் வரும் அருளிச்செயல்கள் இத்திருமந்திரத்தின் சொற்பொருள்களை அடியொற்றியமைந்தனவாகும்.

இறைவன் அருள்வழி நிற்பார்க்கு இன்பமும், அங்ஙனம் நில்லாது தாம் விரும்பியவ்ழி ஒழுகுவார்க்குத் துன்பமும் செய்தல் அருளாளனாகிய இறைவனுக்கு நடுவுநிலைமையன்று என்பாரை நோக்கி, அவர்தம் மொழியை உடன்பட்டே அமைதி கூறுவதாய்ச் சார்ந்தாரைக் காத்தல் தலைவர்கடன் என்னும் பழமொழியை எடுத்துக்காட்டி இச்செயல் உயிர்களைத் திருத்திப் பணிகொள்ளும் இறைவனுக்கு நடுவன்மையும் அன்று என வலியுறுத்துவது,

> **"சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்**
> **சார்ந்தாரைக் காத்தும் சலிமிலனாய்ச் - சார்ந்தடியார்**
> **தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்தல்**
> **ஆய்ந்தார்முற் செய்வினையும் ஆங்கு"**
>
> **(சிவஞானபோதம் சூத். 10, வெண்பா. 44)**

எனவரும் சிவஞானபோத உதாரணவெண்பாவாகும். இது மேற்காட்டிய திருமந்திரத்தைத் தழுவியமைந்ததாகும்.

### *எட்டாந்தந்திரம்*

திருமந்திரத்தின் எட்டாந்தந்திரம், உடலிற்

பஞ்சபேதம் என்பது முதல் சோதனை என்பது ஈறாக நாற்பத்துமூன்று உட்பிரிவுகளையுடையது. இவற்றுள் உடலிற் பஞ்சபேதம் சாக்கிரம் முதலிய அவத்தைபேதங்கள், கேவல சகலசுத்தம் என்னும் மூவகைநிலைகள் அறிவுதயம், ஆறந்தம், மகாவாக்கியம், வாய்மை, அவாவறுத்தல், பத்தியுடைமை, சோதனை முதலிய பொருள்கள் சிறப்பாகக் குறிக்கத்தக்கனவாகும். சிவதரிசனத்தின் பின் சிவனொடு கூடுதல் என்னும் சிவயோக நிலையினையுணர்த்துதல் எட்டாந் தந்திரத்தின் கருத்து என்பர் பெரியோர். இத் தந்திரத்திற் கூறப்படும் சிவயோக நிலைகள் பற்றிய அரும் பொருள்களும் மேற்கூறப்பட்ட அட்டாங்கயோகம் பற்றிய நுண்பொருள்களும் அனுபவமுடைய ஆசிரியர்களை வழிபட்டு அவர்கள் அறிவுறுத்திய நெறியில் நின்று உணர்ந்து கொள்ளத்தக்கனவன்றி ஏனையோரால் உணர்ந்து கூறப்படும் எளிமையுடையன அல்ல. எனவே அப்பொருள்களைப் பற்றி இவ்வாய்வு நூலில் விளக்கம் தருதற்கு இயலவில்லை.

'அடித்தலை யறியுந்திறங்கூறல்' என்ற பகுதி, ஆன்மா இறைவன் திருவருளில் தலைப்பட்டுத் தாடலைப் போல் அடங்கி நிற்றலாகிய அத்துவிதநிலையினைப் புலப்படுத்துவ தாகும். மகாவாக்கியம் என்ற பகுதியில் 'தத்துவமசி' எனவும் 'சிவாத்துவிசும்' எனவும் அருமறைகளிற் கூறப்படும் தத்துவ நுண்பொருள் விரித்துரைக்கப்பெற்றுள்ளது. வாய்மைவழி நின்று தன்னை யறிந்திடுந் தத்துவஞானிகள், உலகப் பொருள்களிலுள்ள அவாவையறுத்து, உயிர்க்குயிராகிய முதல்வன்பால் எல்லையற்ற பத்தியுடையராய்ச் சிவ யோகத்தின் முடிந்த நிலையில் நிற்குந்திறத்தினை விளக்குவன இத்தந்திரத்தினுள் வாய்மை, ஞானிசெயல், அவாவறுத்தல் பத்தியுடைமை, சோதனையென்ற தலைப்புக்களில் அமைந்த திருமந்திரப் பாடல்களாகும்.

ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலங்களும் நெல்லில் (அரிசியைச் சூழ்ந்து) அமைந்துள்ள முளைதவிடு உமி என்பவற்றைப் போன்று ஆன்மாவை முறையே பிணித்துள்ளன. அவ்வாறு மலத்தினால் அநாதியே மறைக்கப்பட்டுள்ள ஆன்மாவும், என்றும் ஒருநிலையின

தாகிய பரம்பொருளைப் போன்று வியாபக நிலையை யுடையதாகாமல், முளை, தவிடு, உமியினால் மறைக்கப்பட்ட அரிசியினைப் போன்று மும்மலங்களால் மறைக்கப்பட்டுக் கட்டுற்றுநிற்கும். ஆகவே ஆன்மாவாகிய நீ நின்னின் வேறாகிய இப்பாசங்களைப் பிரித்துணர்தற்பொருட்டுத் தாணுவாகிய சிவபெருமான் திருவடியை விரும்பிப் போற்றுவாயாகஎன மாணாக்கற்கு அறிவுறுத்துவதாக அமைந்தது,

"ஆணவ மாயையுங் கன்மமு மாமலம்
தாணு முளைக்குத் தவிடுமி, ஆன்மாவும்
தாணுவை யொவ்வாமல் தண்டுல மாய்நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே" (2192)

எனவரும் திருமந்திரமாகும்.

"மும்மலம் நெல்லினுக்கு முளையொடு தவிடுமிபோல்
மம்மர்செய்தணுவி னுண்மை வடிவினை மறைத்துநின்று"
(சித்தியார் சுபக். 172)

எனவரும் சிவஞானசித்தியாரும்,

"உயிருண்டாவே யுளதுமலம், மலமுளதாய் ஒழிந்தவெல்லாம்
நெல்லின் முளைதவிடுமிபோல் அநாதியாக
நிகழ்த்திடுவர் இதுசைவம் நிகழ்த்துமாறே" (சிவப். 25)

எனவரும் சிவப்பிரகாசமும் இத்திருமந்திரத்தை அடியொற்றி யமைந்தன. 'நெல்லின் முளைதவிடுமிபோல்' என்னும் இவ்வுவமையில் நெல்லினுள்ளேயுள்ள அரிசி ஆன்மாவிற்கு உவமை. அரிசியைப் பற்றியுள்ள தவிடு ஆணவமலத்திற்கு உவமை. உமி மாயைக்கு உவமை என விளக்கந்தருவர் மதுரைச் சிவப்பிரகாசர்.

"ஆணவம் பிண்டி, அருமாயை தான்உமி,
காமியம் மூக்கென்று காண்"

என்பது வீட்டு நெறிப்பால், "நெல்லின் உமிபோனால் முளைசீவியாதாற்போலக் கன்மமும் மாயை ஆதாரமாக ஒடுங்கி மீளவும் மாயை ஆதாரமாகச் சீவிக்கும். கன்ம

மில்லாத போது மாயையும் சீவிப்பற்றுப்போம்" என்பர் சிவப்பிரகாசர். ஆணவம் உமியையும் கன்மம் முளையையும் மாயை தவிட்டையும் ஒக்கும் என உரை கூறுவாருமுளர். 'நெல்லிற் குமியும் நிகழ்செம்பினிற் களிம்பும் சொல்லிற் புதிதன்று தொன்மையே' எனவரும் சிவஞான போத வெண்பாவில் வல்லி (மாயை)க்கு உவமையாக உமியும், ஆணவமலத்திற்கு உவமையாகக் களிம்பும் கூறப்படுதலால் சிவப்பிரகாசர் தந்த விளக்கமே பொருத்தமுடையதாகும். ஆணவத்துக்குத் தவிட்டினை உவமையாகக் காட்டுவர் உமாபதி சிவாசாரியார்.

ஆன்மாக்கள் இறைவன் திருவருளால் உய்திபெறும் முறையினைப் பிறிதுமொழிதல் என்னும் அணிநலம் அமைய எடுத்துரைப்பது,

> **"பசுக்கள் பலவண்ணம் பாலொரு வண்ணம்**
> **பசுக்களை மேய்க்கின்ற ஆயன் ஒருவண்ணம்**
> **பசுக்களை மேய்க்கின்ற ஆயன் கோல்போடிற்**
> **பசுக்கள் தலைவனைப்பற்றி விடாவே"** (2193)

எனவரும் திருமந்திரமாகும். "பசுக்களோ பலநிறத்தன. ஆயினும் அவற்றின் பாலானது வெண்மையாகிய ஒரே நிறமுடையதாகும். அப்பசுக்களைப் புலங்களிற் செலுத்தி மேய்ப்போனாகிய இடையன் ஒரே தன்மையன். பசுக்களை மேய்க்குந் தொழிலை மேற்கொண்ட ஆயன் தான் கையிற் கொண்ட கோலைக் கீழே போடுவானாயின் (முன்னர் அக்கோலினால் மொத்துண்டு பயந்து ஓடிய) அப்பசுக்கள் தம் தலைவனாகிய அவனை அன்பினாற் பற்றிச் சூழ்ந்து கொண்டு அவனை விட்டு நீங்கமாட்டா" என்பது இதன் பொருளாகும்.

பாசத்தாற் கட்டுண்டமையின் பசுவெனப்பெயர் பெற்ற உயிர்கள் ஆணவமலம் ஒன்றேயுடைய விஞ்ஞானா கலர், ஆணவம் கன்மம் என்னும் இருமலமுடைய பிரளயா கலர், ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலமுடைய சகலர் எனப் பலதிறத்தனவாயினும் அவை யாவும் சார்ந்த தன் வண்ணமாந்தன்மையாகிய ஓரியல்பேயுடையன என்பார்,

'பசுக்கள் பலவண்ணம், பால் ஒருவண்ணம்' என்றார். பாலின் நிறம் வெண்மை; இங்குச் சார்ந்ததன் வண்ணமாந் தன்மையினைக் குறிப்பால் உணர்த்திற்று. உயிர்கள் பல, இறைவன் ஒருவனே என்பது உணர்த்துவார், 'பசுக்களை மேய்க்கின்ற ஆயன் ஒருவண்ணம்' என்றார். கோல் என்றது, உயிர்களை அவை செய்த இருவினைகளின் வழி மறைந்து நின்று செலுத்தும் சினமருவு திரோதாயியாகிய சத்தியினை, கோலைப் போடுதலாவது, அக்கோலினால் உயிர்களின் மலங்கழலும் பக்குவம் எய்தியபின், முன்னர் வெகுண்டு வினைப்பயன் அருத்திய திரோதான சத்தியே தன் சினந் தவிர்ந்து நலம்புரியும் அருட்சத்தியாக மாறுதல் அடைதல். அத்திருவருட்சத்தி பதிந்தபின் உயிர்கள் யாவும் தம் அச்சத்திற்கு ஏதுவாகிய பாசப் பிணிப்பின் நீங்கிச் சிவஞானமாகிய தெளிவு பெற்றுச் சிவபரம்பொருளை அன்பினால் அணுகி இன்புறும் நிலையினவாகும் என்பார், 'பசுக்களை மேய்க்கின்ற ஆயன்கோல் போடிற், பசுக்கள் தலைவனைப் பற்றிவிடாவே' என்றார். சாத்தனூரில் ஆனிரை மேய்த்த மூலன் என்னும் ஆயன்பாற் பசுக்கள் கொண்ட அன்பினை நேரிற்கண்ட சிவயோகியார், தாம் கண்ட காட்சியினை உவமையாகக் கொண்டு பசுபதியாகிய இறைவன்பால் ஆன்மாக்கள் கொள்ளும் நேயத்தினையும் எடுத்துக்காட்டிய திறம் உணர்ந்து போற்றத்தகுவதாகும்.

ஆன்மா தோற்றமில் காலமாக ஆணவமலத்தால் மறைக்கப்பட்டுத் தனக்குரிய விழைவு அறிவு செயல் என்னும் மூவகை ஆற்றல்களும் வெளிப்படுத்தற்குரிய வாய்ப்பின்றித் தனித்துக் கிடந்த இருள்நிலை கேவலாவத்தை எனப்படும். இவ் அவத்தையில் இயல்பினை உணர்த்துவது,

> "அறிவிலன் அமூர்த்தன் அராகாதி சேரான்
> குறியொன் றிலான்நித்தன் கூடான்கலாதி
> செறியுஞ் செயலில்லோன் திண்கர்த்தா அல்லோன்
> கிறியின் மலன் வியாபி கேவலத்தோனே" (2247)

எனவரும் திருமந்திரமாகும். "கேவல நிலையினனாகிய ஆன்மா (அந்தக்கரணம் முதலிய கருவிகளைப் பெறாமையால்) அறியுந்திறமில்லாதான்; தனக்கென வடிவ

மில்லாதான்; அராக முதலிய குணங்கள் சேரப்பெறாதான்; ஒன்றிலும் இச்சையில்லாதான்; தோற்றக்கேடுகள் இல்லாமையால் என்றும் நிலைத்துள்ளவன்; கலைமுதலிய தத்துவங்களோடு கூடாப்பெறாதான்; தனக்கென்று பொருந்திய செயல் எதுவும் இல்லாதான்; எனவே திண்மை யுடைய வினைமுதலாந் தன்மையில்லாதான்; வஞ்சனையைச் செய்யும் ஆணவமலத்தோடு கூடியவன்; வியாபகத் தன்மைய னாயினும் மலவிருளில் அழுந்தியுள்ளான்" என்பது இத் திருமந்திரத்தின் பொருளாகும்.

இங்குக் குறி என்றது, முதனிலைத் தொழிற்பெயராய் இச்சையை உணர்த்தியது. அராகாதிகுணம் என்றது, தருமம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதர்மம், அஞ்ஞானம், அவைராக்கியம், அநைசுவரியம் என்னும் புத்திகுணம் எட்டினையும். அராகாதிகுணங்கள் இல்லான் இனம் பற்றி ஏனைய போநுகர்ச்சிக்குரிய கருவிகளும் இல்லாதவன் என்பதும் கொள்ளப்படும்.

உயிரானது இருள்மலத்தினால் மறைக்கப்பட்டு எத்தகைய கருவிகளும் பெறாமல் ஒருசெயலுமின்றிக் கிடந்த கேவலாவத்தையின் இயல்பினை விளக்கும் இத்திருமந்திரப் பொருளை கூர்ந்துணர்ந்த அருணந்திசிவாசாரியர், இத்திருப்பாடற்கு உரை விளக்கம் தரும் முறையில்,

> **"அறிவிலன் அமூர்த்தன்நித்தன் அராகாதி குணங்களோடுஞ்**
> **செறிவிலன் கலாதியோடுஞ் சேர்விலன் செயல்கள் இல்லான்**
> **குறியிலன் கருத்தாவல்லன் போகத்திற் கொள்கையில்லான்**
> **பிரிவிலன் மலத்தினோடும் வியாபிகேவலத்தில் ஆன்மா"**
> **(சித்தியார் சுபக். 288)**

எனக் கேவலநிலையின் இயல்பினை விரித்துரைத்துரைத்தார்.

ஆன்மா உடம்பு முன் இல்லாதவன்; கலை முதலிய தத்துவங்களோடு முன் சேராதவன்; புத்திகுணம் எட்டினை யும் முன்பொருந்தாதவன்; எதிலும் இச்சை இல்லாதவன்; அறிவுமுன் இல்லாதவன்; ஒரு தொழிலும் முன் இல்லாதவன்; தனக்கென முன் ஒரு சுதந்தரம் இல்லாதவன்; போகத்தில்

முன்கொள்கை இல்லாதவன்; தோற்றக்கேடுகள் முன் இல்லாதவன்; ஏகதேசி யாதல் முன் இல்லாதவன்; கேவல அவத்தையில் ஆணவ மலத்தோடும் மட்டுமே கூடியுள்ளவன் என்பன கேவல நிலையில் ஆன்மாவின் இயல்புகளாகக் கூறப்பட்டன.

ஆன்மா, மாயையின் காரியப்பொருள்களாகிய உடல் கருவி உலகு, நுகர்பொருள் ஆகியவற்றைப் பெற்றுள்ள இவ்வுலகியல்நிலை சகலாவத்தை எனப்படும், இதன் இயல்பினைக் கூறுவது,

> "உருவுற்றுப் போகமே போக்கியந்துற்று
> மருவுற்றுப் பூத மனாதியான் மன்னி
> வருமச் செயல்பற்றிச் சத்தாதிவைகிக்
> கருவுற் றிடுஞ் சீவன் காணுஞ் சகலத்தே" (2261)

எனவரும் திருமந்திரமாகும்.

"மாயாகாரியமான உடம்பினைப் பொருந்தி உடுத்த வுடம்பிற்குரிய போக போக்கியங்களை நுகர்ந்து பூதங்களைச் சார்ந்து மனம் முதலிய அகக்கருவியோடு நிலைத்து அவற்றால் வருகின்ற செயல்களைப் பொருந்தி ஓசை முதலிய விடயங்களில் விரும்பித்தங்கிக் கருவுற்றுப் பிறந்தவுயிர் காணப்பெறும் சகலாவத்தையினையுடையதாகும்" என்பது இதன்பொருளாகும்.

உயிர், உடல் கருவி முதலியவற்றைப் பெற்று உலகிற் பிறந்து போகம் நுகர்ந்து வரும் இவ்வுலகியல் வாழ்வு சகலாவத்தை என்பதாம். இத்திருமந்திரச் சொல்லையும் பொருளையும் அடியொற்றியது,

> "உருவினைக் கொண்டுபோக போக்கியத் துன்னல் செப்பல்
> வருசெயல் மருவிச் சத்தமாதியாம் விடயந்தன்னிற்
> புரிவதுஞ் செய்திங் கெல்லாயோனியும் புக்குழன்று
> திரிதரும் சகலமான அவத்தையிற் சீவன்சென்றே" (230)

எனவரும் சிவஞான சித்தியாராகும்.

"உருவினைக் கொண்டும் நுகர்ச்சிப் பகுதியாகிய

கலை முதலியவற்றோடு செறிந்தும் இச்சையுற்றும் நால்வகை வாக்குக்களால் நிகழும் அறிவினையடைந்தும் தொழிலைப் பொருந்தியும் ஓசை முதலிய நுகர்பொருள்களில் விருப்பஞ் செய்தும் போகம் நுகர்ந்தும் இவ்வுலகிற் பிறப்பு இறப்புக்களிற் புக்கு உழன்றும் ஏகதேசியாய்ச் சகலாவத்தையிற் சீவித்து நிற்பவன் சீவன் என்னும் ஆன்மா" என்பது இதன்பொருள். போகம் நுகர்ச்சி போக்கியம் - நுகர்பொருள். நுகர்ச்சிக்குரிய கருவியாகிய கலை முதலியவற்றைப் போககாண்டம் என்றும், நுகர் பொருட்பகுதியாகிய புந்தி முதலியவற்றைப் போக்கிய காண்டம் என்றும் வழங்குதல் மரபு.

ஆன்மா இறையருளாற் பாசப்பிணிப்பினின்றும் நீங்கித் தூயதாகிய நிலை சுத்தாவத்தையெனப்படும். இதன் இயல்பினை விளக்குவது,

> **"இருவினை யொத்திட இன்னருட்சத்தி**
> **மருவிட ஞானத்தின் ஆதனமன்னி**
> **குருவினைக் கொண்டருட் சத்திமுன் கூட்டிப்**
> **பெருமலம் நீங்கிப் பிறவாமை சுத்தமே" (2262)**

எனவரும் திருமந்திரமாகும். "இருவினையொப்பு நிகழ இனிய திருவருளாகிய சத்தி பதிய, ஞானயோகத்தில் ஒன்றி யிருத்தலா[illegible] நிலைத்து உபதேச குரு வாய்க்கப்பெற்று அவரால் திருவருட் சத்தியாகிய சிவஞானம் கூடப்பெற்றுப் பெரிய குற்றமாகிய ஆணவ மலம் நீங்கிப் பிறவாநிலையை யடைதலே சுத்தாவத்தையாகும்" என்பது இதன்பொருள்.

ஓசை முதலிய நுகர்பொருள்களின் விருப்பங்கழிதற்கு ஏதுவாவது இருவினையொப்பு. போக போக்கியக் கருவிகளின் செறிவு நீங்குதற்கு ஏதுவாவது சத்திநிபாதம். உருவங்கழிதற்கு ஏது குருவருள். பிறந்து திரிதல் கழிதற்கு ஏது ஞானசாதனம். ஏகதேசத் தன்மை கழிதற்கு ஏது மும்மலநீக்கம். ஓசை முதலிய பொருள் நுகர்ச்சி கழிதற்கு ஏது வாதனை நீக்கம். பாச அறிவிச்சை செயல்கள் கழிதற்கு ஏது ஞானப்பெருக்கம்.

**இருவினையொப்பு :** ஒன்றில் விருப்பும் ஒன்றில்

வெறுப்பும் ஆதல் இன்றிப் புண்ணியபாவம் இரண்டினும் அவற்றின் பயன்களினும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து விடுவோனது அறிவின்கண் அவ்விருவினையும் அவ்வாறு ஒப்ப நிகழ்தல்.

மலபரிபாகம் : ஆணவமலம் தனது ஆற்றல் தேய்தற்குரிய துணைக் காரணங்கள் எல்லாவற்றோடும் கூடுதல்.

சத்திநிபாதம் : ஆணவமலத்திற்கு அனுகூலமாய் நின்று நடாத்திய திரோதானசத்தி ஆணவமலம் ஆன்மாவை விட்டுக்கழலும் பக்குவத்தினையடைந்தபோது கருணை மறமாகிய தன் செய்கை மாறிக் கருணையெனப்படும் முன்னைப் பராசத்தி உருவாய் ஆன்மாக்களிடத்துப் பதிதல். சத்தி நிபாதம் - சத்தியதுவீழ்ச்சி. நி என்பது ஏற்றமாக என்னும் பொருள் குறித்து நின்றதோர் இடைச்சொல்.

ஆ்ன்மா, இறைவனருளால் கேவலநிலையினின்றும் சகலநிலையை எய்திச் சுத்த நில்லயை அடையுமாறு கூறுவது,

> "மாயை கைத்தாயாக மாமாயை யீன்றிட
> ஆய பரசிவன் தந்தையாய் நிற்கவே
> ஏயும் உயிர் கேவல சகலத்தெய்தி
> ஆய்தரு சுத்தமுந் தான்வந்தடையுமே" (2268)

எனவரும் திருமந்திரமாகும். "எவ்விடத்துமாய் நீக்கமறக் கலந்துள்ள பரம்பொருளாகிய சிவபெருமான், அப்பனாக நின்று அருள்புரியப் பொருந்திய ஆன்மா, சுத்தமாயை (தன்னைப் பிள்ளையாய்ப்) பெற, அசுத்தமாயை செவிலித் தாயாய் நின்று வளர்க்க, கேவலநிலையின் நீங்கிச் சகலநிலையை யடைந்து (சிவஞானத்தால்) ஆய்ந்து தெளியப் பெறும் சுத்த நிலையையும் தான் வந்தடையும் என்பது இதன்பொருள்.

இறைவன் கேவலமாகிய இருள்நிலையிற் கிடந்த ஆன்மாவைச் சுத்தமாயையின் இடமாகத் தோன்றச் செய்து, அசுத்தமாயையைக் கொண்டு வளரச்செய்து, தூய்மைப் படுத்தித் தன் திருவடிக்கீழ்ச் சேர்த்தருள்வன் என்பது இதன்

கருத்தாகும்.

ஆய பரசிவன் தந்தையாய் நிற்கவே, ஏயும் உயிர், மாமாயை ஈன்றிட மாயை கைத்தாயாகக் கேவலத்தின் (நீங்கிச்) சகலத்து எய்தி ஆய்தரு சுத்தமும் தான்வந்து அடையும் என இயையும். மாமாயை - சுத்தமாயை. மாயை- அசுத்தமாயை. கைத்தாய் - செவிலித்தாய்.

ஆன்மதரிசனம் செய்யும் உபாயம் உணர்த்துவது,

"பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தன் கரணங்களாந்
தன்னின் மறைந்தது தன் கரணங்களே" (2289)

எனவரும் திருமந்திரமாகும்.

"பொன்னால் இயன்ற அழகிய அணிகலம் அணிகலம் என்ற வடிவில் தன்னைக் காண்பார்க்குத் தனக்கு முதற்காரணமானது பொன் என்னும் உண்மையினை உலகத்தார் காணாதவாறு தன் வினைத் திறத்தால் பொன்னை மறைத்து விட்டது. அவ்வணிகலத்தில் மேற்பட்டுத் தோன்றும் தொழில்நுட்பத்திற் கருத்தைச் செலுத்தாமல் அதற்கு முதற்காரணமாவது யாது எனக் கூர்ந்துணர்வார்க்கு அவ்வணிகலத்தின் வடிவம் தனித்துத் தோன்றாமல் பொன் என்ற அளவிலேயே அதற்குள் அடங்கி மறைந்தது. அது போல, ஆன்மாவாகிய தன்னை மறைத்தது தன்கரணங்க ளாகிய மாயேயம். (நானார் என்னுள்ளமார் எனக் கூர்ந்து நோக்கிய நிலையில்) தன்னுடைய கருவிகரணங்களாகிய அத்தொகுதியானது ஆன்மாமேற்பட்டுத் தோன்ற அதன் வியாபகத்துள் அடங்கி மறைந்தது என்பது இதன் பொருள்.

ஆன்மா தனுகரணங்களே தானாகப் பேதமின்றி எண்ணிய நிலையில் ஆன்மா என்னும் சித்துப்பொருள் மறைய அது பெற்றுள்ள கருவிகரணங்களாகிய சடப் பொருளே மேற்பட்டுத் தோன்றுவதாம். அவற்றைச் சடம் என உணர்ந்த நிலையில் ஆன்மாவாகிய சித்துப் பொருளின் வியாபகமே மேற்பட்டுத் தோன்றத் தன்னியல்பினை உள்ளவாறு உணர்தலாகிய ஆன்மதரிசனம் உளதாகும்

என்பது கருத்து.

"ஆன்மா தன்னை இந்திரியத்தின் வேறாவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையும்" என்றார் மெய்கண்டதேவரும். இத்திருமந்திரம் எடுத்துக்காட்டுவமை என்னும் அணியமைந்ததாகும்.

எல்லாஞ்சிவனென்ன நின்ற நிலையைத் தரிசிக்குமாறு உணர்த்துவது,

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே" (2290)

எனவரும் திருமந்திரமாகும்.

மரத்தாற் செய்யப்பட்ட மதயானையின் வடிவமானது தொழில் வன்மையால் தன்னை உயிருடைய யானைபோலக் காட்டி மயக்கித் தனக்கு முதற்காரணமாகிய மரத்தின் தன்மையினை மறைத்து நின்றது. அதன் மெய்ம்மைத் தன்மையைக் கூர்ந்து நோக்குவார்க்கு முன்பு மெய்ம்மையுடையது போன்று காணப்பட்ட யானையின் தோற்றம், ம ரத்தினுள் மறைந்து போயிற்று. அதுபோல, நில முதலாகக் காணப்படும் பூதகாரியமாகிய உலகத் தொகுதி தனக்குப் பற்றுக்கோடாகிய பரம்பொருளின் மெய்ம்மைத் தன்மை தோன்றாதபடி மறைத்துத் தானே மெய்ப்பொருள் என்பது போன்று விரிந்து தோன்றுகின்றது. என்றும் உள்ளதாகிய மெய்ப்பொருள் எதுவென்று உண்மையான் நோக்குவார்க்குப் பரம்பொருளின் வியாபகமே மேற்பட்டுத் தோன்றுதலால் இப்பிரபஞ்சம் அசத்துப் பொருளாய்ச் சத்தாகிய பரம்பொருளினுள் அடங்கிவிடும் என்பது இத்திருமந்திரத்தால் விரித்துரைக்கப்பெற்றது.

அசத்தாகிய உலகப் பொருளின் வழி நின்று அதன் புறத்தோற்றமே காண்பார்க்குஅதன் உள்ளீடாகிய பரம்பொருள் காணப்பெறாது. சத்தாகிய பரம்பொருளின் அருள்வழி நின்று உலகின் உள்ளீடாகிய மெய்ம்மையினைக்

காணவல்லார்க்கு அசத்தாகிய பிரபஞ்சத்தின் தோற்றம் கட்புலனாகாது என்பது கருத்து.

> "பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர்
> பதார்த்தங்கள் பாரார் ...............................
> சீவன்முத்தர் சிவமே கண்டிருப்பர்" (சித்தியார்)

என்றார் அருணந்தி சிவனாரும்.

இறைவனது உடைமைப் பொருளாகிய தம் (ஆன்மாவின்) இயல்பினை உணர்ந்து தம்மை அடிமையாக வுடைய இறைவனையும் உள்ளவாறு உணர்பவர்களே சித்தாந்தசைவர்களாவர் என்பது, 'தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்' (சிவஞானபோதம் அவை யடக்கம்) எனவரும் மெய்கண்டார் வாய்மொழியால் இனிது புலனாகும். ஆன்மா தன்னையறிதலால் வரும் பயன் உணர்த்துவது,

> "தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
> தன்னை யறியாமல் தானே கெடுகின்றான்
> தன்னை யறியும் அறிவை யறிந்தபின்
> தன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே" (2355)

எனவரும் திருமந்திரமாகும்.

"ஆன்மா தனது இயல்பை உள்ளவாறு அறிந்து கொள்ளுதலால் தனக்கு வரக்கூடியது ஒரு துன்பமும் இல்லை. ஆன்மா தன்னியல்பினை உள்ளவாறு உணராமையினாலேயே தானே (வாழ்க்கைப் பயனையிழந்து வீணே) கெடுகின்றான். தனதியல்பினை உள்ளவாறு உணர்தற்கு ஏதுவாகிய சிவஞானத்தைத் தந்தருளும் இறைவனை அறிந்து பின்பு தன் தலைவனாகிய இறைவனையே பூசிக்கத் தான் அவனுடன் பிரிப்பின்றி யிருத்தலாகிய பேரின்ப நிலையைப் பெறுகின்றான்" என்பது இதன் பொருளாகும்.

தன்னை அறிதலாவது, ஆன்மாவாகிய தன்னை இறைவனுக்கு அடிமையென்று அறிதல், தனக்கு -

ஆன்மாவுக்குத் தன்னையறிதலால் தனக்கு வருவது ஆன்ம லாபமாகிய ஊதியமேயன்றி எத்தகைய இழப்பும் இல்லை என அறிவுறுத்துவார் 'தன்னையறியத் தனக்கொரு கேடில்லை' என்றார். தன்னியல்பை யறியாமையால் தலைவனையும் அறியப்பெறாது ஆன்மசுத்திக்குப் பின் உண்டாகும் சிவப்பேறாகிய பெரும்பயனை யிழந்து ஆன்மாவாகிய தனக்கே கேடு சூழ்கின்றான் என்பார், 'தன்னையறியாமல் தானே கெடுகின்றான்' என்றார். 'தன்னையறியும் அறிவு' என்றது அறிவே யுருவாகிய இறைவனை. ஆன்மா தன்னை அறியும்பொழுதே தானே முதல்வன் அல்லன் தனக்கு மேலாக முதல்வன் ஒருவன் உளன் என்பதனையும் அறிந்து கொள்வான் ஆதலால் தனக்குச் சார்பாயுள்ள அத்தலைவ னில்லாமல் தானில்லை என்பதனையுணர்ந்து அவனருளிய சிவஞானத்தைப் பெற்று அம்முதல்வனையே வழிபட்டு அவனோடு இரண்டறக் கலந்து என்றும் பொன்றாப் பெருவாழ்வைப் பெறுவான் என்பார் 'தன்னையே அர்ச்சிக்கத்தான் இருந்தானே' என்றார். இதன் நான்காமடியில் 'தன்னை' என்றது, தன் ஐ - தன் தலைவன் என்ற பொருளில் ஆளப்பெற்றதாகும். 'தன்னிற் றன்னையறியுந் தலைமகன்' (2349) எனத் திருமந்திரத்திலும், திருக்குறுந்தொகையிலும் 'தன்னை' என்பது தன்தலைவன் என்ற பொருளிற் பயின்றுள்ளமை காணலாம். இங்குத் தன்னையறிதல் என்றது, சிவரூபத்தால் ஆன்மதரிசனமும், சிவதரிசனத்தால் ஆன்மசுத்தியும் பெறுதலை.

குருவின் அருளால் ஆன்மா தன்னை அறிவுடைய சித்துப்பொருள் என்று அறிந்து கொண்டமை கூறுவது.

> **"அறிவு வடிவென் றறியாத என்னை**
> **அறிவு வடிவென்றருள் செய்தான் நந்தி**
> **அறிவு வடிவென் றருளா லறிந்தே**
> **அறிவு வடிவென் றறிந்திருந் தேனே"** (2357)

எனவரும் திருமந்திரமாகும். "அறிவுருவே ஆன்மா என்று அறியும் ஆற்றலில்லாத என்னை என் குருமுதல்வனாகிய நந்தி அறிவே ஆன்மாவின் உருவம் என்னும் உண்மையை அறிவுறுத்தியருளினான். அவனது திருவருளால் என்னுயிரின்

உருவம் அறிவு என்பதனையுணர்ந்து (இவ்வுண்மையை அறிவுறுத்திய) அம்முதல்வனது திருமேனி ஞானமே என்பதனையுணர்ந்து அறிவே வடிவாகிய அவனுடன் பிரியாது ஒன்றியிருக்கும் நிலையினைப் பெற்றேன்" என்பது இதன்பொருளாகும்.

உயிர்க்கு அறிவே வடிவென்று அறிவுறுத்திய இத்திருமந்திரப் பொருளையுளங்கொண்டு விளக்கும் முறையில் அமைந்தது,

> "ஆறு சுவையும் அருந்தி அவைதம்மை
> வேறொருவன் கூறியிடும் மேன்மைபோல் - ஆறாறும்
> ஒன்றொன்றா நாடியுணர்ந் தோதியதில் உற்றறிவாய்
> நின்றபொருள் தானேகாண் நீ" (உண்மை 26)

எனவரும் உண்மை விளக்கச் செய்யுளாகும்.

> "பாராதி பூதம் நீயல்லை - உன்னிப்
> பாரிந்திரியங் கரண நீயல்லை
> ஆரா உணர்வு நீயென்றான் - ஐயன்
> அன்பாயுரைத்த சொல் ஆனந்தந்தோழி"

எனத் தாயுமானார் கூறும் குருமொழியும் இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும்.

திருமூலர் காலத்தில் வேதாந்தம் அதன் மேற்பட்ட சித்தாந்தம், நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம் என்னும் அறுவகைச் சமயத் தத்துவ முடிபுகள் அச்சமயத்திற் குரியனவாக வழங்கின என்பது, 'வேதத்தன் அந்தமும் மிக்க சித்தாந்தமும்' (2370) எனவரும் திருமந்திரத்தால் அறியப்படும். உடல் கருவிகளோடு கூடியும் அவற்றில் அழுந்தாமல் சீவன் முத்தராம் நிலை சித்தாந்தச் செந்நெறிக் குரியதென்பதும் சித்தாந்தமும் வேதாந்தமும் பொருளொற்றுமையுடையன என்பதும்,

> "சித்தாந்தத்தே சீவன் முத்தி சித்தித்தலால்
> சித்தாந்தத்தே நிற்பர் முத்தி சித்தித்தவர்
> சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலால்
> சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே" (2394)

எனவரும் திருமந்திரத்தால் அறியப்படும். "சித்தாந்தச் செந்நெறியிலே இவ்வொரு பிறவியியே சீவன் முத்தி கைவரப்பெறுதலால் அந்நெறியிற் பிறழாது நின்றொழுக வல்லவர் சீவன் முத்தி கைவரப்பெற்றவராவர். மெய்ந்நெறி யாகிய சைவ சித்தாந்தமும் உலகியல் நெறியாகிய வேதாந்த மும் ஆகிய இவற்றிற் கூறப்படுவன சிறப்பும் பொதுவுமாகிய செம்பொருளாதலால் அவ்விருவகை நெறியும் சிவனது சிறப்பியல்பும் பொதுவியல்புமாகிய உண்மைகளை விளக்கிக் காட்டுவன" என்பது இதன் பொருளாகும்.

சித்தாந்தம் என்பது சிவாகமங்களின் முடிந்த முடிபு. சீவன் முத்தியாவது, உயிரானது உடம்பு முதலிய மாயேயத் தோடு கூடிய நிலையிலும் அவற்றிற் பற்றுச் சிறிதுமின்றிச் சிவத்தோடு அழுந்தி நிற்றல். சித்தித்தல் - எண்ணியபடியே கைவரப்பெறுதல், செம்பொருள் - முரண்படாத இயை புடைய பொருள். சித்தாந்தம் வேதாந்தம் சிவனைக்காட்டும் எனத் திருமூலர் இருவகை நெறிகளையும் சிறப்பாக எடுத்துரைத்தலால், தென்னாட்டில் உருவாகி வழங்கிய சித்தாந்தமும் வடநாட்டில் உருவாகி வழங்கிய வேதாந்தமும் பொருளொருமையால் ஒத்த தத்துவமுடிவுகளாகக் கருதப்படும் நிலை திருமூலநாயனார் காலத்திற்கு முன்னரேயே தமிழகத்தில் உருவாகியதென்பது நன்கு புலனாகும். ஆயினும் வேதாந்தத்தினும் சித்தாந்தமே உயர்வுடையது என்னும் கொள்கை தமிழகத்தில் வேரூன்றி யிருந்ததென்பது, 'வேதத்தின் அந்தமும் மிக்க சித்தாந்தமும்' என்ற தொடரில் 'மிக்க சித்தாந்தமும்' எனத் திருமூலர் அடைபுணர்த்து ஓதுதலாலும் இத்திருமந்திரத் தொடரை யுளங்கொண்டு, 'வேதநெறி தழைத்தோங்கமிகு சைவத்துறை விளங்க' எனச் சேக்கிழார் பெருமான் 'மிகு சைவத்துறை' எனச் சிறப்பித்துக் கூறுதலாலும் உய்த்துணரப்படும்.

வேதம் ஆகமம் என இறைவன் அருளிய மெய்ந் நூல்கள் முறையே உலகியல் நூலாகிய பொதுநூல் எனவும் சைவம் ஆகிய சிறப்புநூல் எனவும் இருவகைப்பட உள்ளன. இறைவன் வாய்மொழிகளாகிய இவ்விருவகை நூல்களும் இருவேறு முடிபின ஆதலால் இவை தம்முள் வேறுபா

டுடையன என்பர் சிலர். இறைவனருள் பெற்ற பெரியோர்க்கு இவ்விரு நூற்பொருள்களும் ஒருதன்மையனவே என அமைதி கூறும் நிலையில் திருமூலர் அருளியது,

> "வேதமோ டாகமம் பொய்யாம் இறைவனூல்
> ஓதும் பொதுவுஞ் சிறப்பு மென்றுள்ளன
> நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
> பேதமதென்பர் பெரியோர்க் கபேதமே" (2397)

என்னும் திருமந்திரமாகும். இத்திருமந்திரப் பொருளை அடியொற்றி,

> "உலகியல் வேதநூ லொழுக்க மென்பதும்
> நிலவு மெய்ந்நெறி சிவநெறிய தென்பதும்"
> (பெரிய. சம்பந்தர்)

எனவும்,

> "வேதப்பயனாஞ் சைவமும் போல்" (பெரிய. சண்டேசர்)

எனவும் சேக்கிழார் கூறும் வாய்மொழிகள் இங்கு உளங்கொளத் தக்கனவாகும். வேதங்களே பிரமாண நூல்கள் எனக்கொண்டு சிவாகமங்களைப் பிரமாணமாக ஏற்றுக் கொள்ளாதாரும் சிவாகமமே பிரமாண நூல்கள் எனக்கொண்டு வேதங்களைப் பிரமாண நூல்களாக ஏற்றுக் கொள்ளாதாரும் ஆகிய வேதவாதிகளும் ஆகமவாதிகளும் தம்முன் முரணின்றி வேதம் பொதுவும் ஆகமம் சிறப்பும் என உடன்பட்டு வைதிக சைவராய் வாழ்தற்குரிய ஒற்றுமை யுணர்வைத் தமிழகத்தில் நிலைநாட்டிய பெருமை திருமூல நாயனார்க்குரிய தனிச்சிறப்பாகும்.

சிவபெருமான் குருவடிவாய் எழுந்தருளிவந்து அருள் நோக்கமாகிய தீக்கை செய்து இப்பிறப்பிலேயே சீவன்முத்த ராகச் செய்து ஆட்கொண்டு மும்மல அழுக்கைக் கழுவி ஞானக்கடலில் மூழ்கச்செய்து சிவானந்தம் மேலிடச் செய்து, மேல்வரும் பிறவியையொழித்து முத்தி வடிவாகிய திருவடிக் கீழ்வைத்தருள்வன் என்பது சைவ சித்தாந்தம் கூறும் மெய்யுணர்வுக் கொள்கையாகும். இதனைச்

"சித்தாந்தத்தே சீவன் முத்தி சித்தித்தலால்
சித்தாந்தத் தேநிற்போர் முத்தி சித்தித்தவர்"
(திருமந். 2394)

எனவரும் திருமந்திரத்தில் திருமூலர் தெளிவாகக் குறித்துள்ளார். இதனை,

"சித்தாந்தத் தேசிவன்றன் றிருக்கடைக்கண் சேர்த்திச்
சென்னமொன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்ப னென்று
மொழிந்திடவும் உலகரெல்லாம் மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவர் இதுவென்ன பிராந்தி"
(சித்தி. சுபக். 268)

எனவரும் திருவிருத்தத்தில் அருணந்திசிவனார் எடுத்தாண்டுள்ளமை காணலாம்.

திருவடி வைப்பாம் ஞானதீக்கையாமாறு உணர்த்துவது, அடித்தலையறியுந்திறங் கூறல் என்ற பகுதியாகும். கால், தாள் என்னுஞ்சொற்கள் இறைவனது திருவருளாகிய திருவடியைக் குறிப்பன. தலை என்பது அத்திருவருளால் ஆன்மா பெறும் சிவஞானத்தைக் குறிப்பதாகும். இந்நுட்பம்.

"காலுந் தலையும் அறியார் கலதிகள்
காலந்தச் சத்தியரு ளென்பர் காரணம்
பாலொன்று ஞானமே பண்பார் தலையுயிர்
காலந்த ஞானத்தைக் காட்ட வீடாகுமே" (2425)

எனவரும் திருமந்திரத்தால் விரித்துரைக்கப்பெற்றது.

"தாள்தந் தளிக்குந் தலைவனே சற்குரு
தாள்தந்து தன்னையறியத் தரவல்லோன்
தாள்தந்து தத்துவாதீதச் சதாசிவன்
தாள்தந்து பாசந் தணிக்குவமன் சத்தே" (2049)

எனவரும் திருமந்திரமும் இங்கு நினைத்தற்குரியதாகும்.

"தருவாயெனக்குன் திருவடிக்கீழொர் தலைமறைவே"

என்பது அப்பர் அருள்மொழியாகும்.

இறைவனது திருவருள் உள்நின்று உணர்த்தினால் தான் இறைவனை நினைந்து போற்றுதல் இயலும். அம்முதல்வனது திருவருட் குறிப்பின்றி உயிர்கள் இறைவனை நினைதல் இயலாது என அறிவுறுத்துவது,

"சிந்தையி னுள்ளே எந்தை திருவடி
சிந்தையும் எந்தை திருவடிக் கீழது
எந்தையும் என்னை அறியகி்லா னாகில்
எந்தையை யானும் அறியகி லேனே" (2428)

எனவரும் திருமந்திரமாகும். இதன்பொருளை அடியொற்றி யமைந்தன

"என்னை யேதும் அறிந்திலன் எம்பிரான்
தன்னை நானும் பிரானென் றறிந்திலேன்
என்னைத் தன்னடி யானென் றறிதலும்
தன்னை நானும் பிரானென் றறிந்தேனே"

எனவரும் திருக்குறுந்தொகையும்,

"என்னை நினைந்தடிமை கொண்டென்னிடர் கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான்"

எனவரும் நம்பியாண்டார் நம்பிகள் அனுபவமொழியும் ஆகும்.

மனத்தகத்தானாகிய இறைவனைத் தலைமேலானாக வைத்து வணங்குமாறு உணர்த்துவது,

"ஊறும் அருவி உயர்வரை யுச்சிமேல்
ஆறின்றிப் பாயும் அருங்குளம் ஒன்றுண்டு
சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரைப்
பூவன்றிச் சூடான் புரிசடை யோனே" (2335)

எனவரும் திருமந்திரமாகும். "உள்ளிருந்து ஊற்றெடுத்துப் பெருகும் உயர்ந்த மலையின் உச்சியின்மேல், நதியில்லாமலே வெள்ளம் பெருகும் அரிய தடாகம் ஒன்றுளது. அத் தடாகத்தினுள்ளே சேற்றின் தொடர்பின்றிப் பூக்கும் செழித்த கொடியிலுள்ள தாமரைப் பூவையன்றிக் கட்டமைந்த சடையினையுடைய எம்பெருமான் வேறுமலர்களை விரும்பியணிய மாட்டான்" என்பது இதன்பொருளாகும்.

இப்பாடலில், ஊறும் அருவி உயர்வரையுச்சி என்றது, புருவநடுவாகிய ஆஞ்ஞைத் தானத்தினை. அதன்மேல் குளம் என்றது உச்சிக்குமேல் பன்னிரண்டங்குல நிலையில் உள்ளதெனப்படும் மீதானத்தினை. சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரைப்பூ என்றது சுழுமுனை முடிவி லுள்ள ஆயிரவிதழ்த் தாமரையை. தலைமேலுள்ள தெனப்படும் மீதானமாகிய அரிய குளத்திலே மலர்ந்த தாமரப்பூவே இறைவன் விரும்பியணியும் நறும்பூவாகும் என்பதாம். 'மனத்தகத்தான் தலைமேலான்' எனவும் 'அப்பூதி, குஞ்சிப்பூவாய் நின்ற சேவடியாய்' எனவும் வரும் அப்பர் அருள்மொழிகள் இங்குஒப்புநோக்கியுணரத்தக்கன.

வினைநீக்கமே மெய்யுணர்வு பெறுதற்கும் வீடு பேற்றிற்கும் வழிசெய்யும் என அறிவுறுத்துவது,

> **"வினையா லசத்து விளைவ துணரார்**
> **வினைஞானந் தன்னில் வீடலுந் தேரார்**
> **வினைவீட வீடென்னும் வேதமும் ஓரார்**
> **வினையாளர் மிக்க வினைவறி யாரே"** (2557)

எனவரும் திருமந்திரமாகும்.

"மக்களுக்கு வினைத்தொடர்பு உள்ளவரையிலும் அதனால் வரும் விருப்பு வெறுப்புக்களும் அவைபற்றி நிகழும் விபரீதவுணர்வும் ஆகிய அசத்துக்கள் விளையும் என்பதனை உணரமாட்டார். மெய்யுணர்வுடைய ஆசிரியன் அருள்பெற்ற நிலையில் வினை ஒழிந்துபோம் என்பதனையும் உணர மாட்டார். வினையொழியவே பாசங்களினின்றும் விடுபடுத லாகிய வீடுபேறு தாம் என்னும் மெய்ந்நூற்பொருளையும் ஓதியுணர்ந்திலர். வினைத்தொடர்பிற்பட்டோர் வினை

காரணமாகவுளவாம் மிக்க துன்ப விளைவினை அறிய மாட்டாராயினர்" என்பது இதன் பொருளாகும்.

உடம்பின் கண்ணதாகிய நுகர்வினை (பிராரத்த) வாதனை உயிரைத் தாக்குவதாகவுள்ள வரையிலும் அதனால் வரும் விருப்பு வெறுப்புக்களும் அவைபற்றிக் காட்சிப்படும் மண்முதல் மாயைகளும் அவைபற்றி நிகழும் விபரீத வுணர்வும் ஆகிய அசத்துக்கள் நீங்கிய பின்னரும் மீண்டும் உயிரை வந்து கூடுவன ஆதலால் அதற்கெல்லாம் மூலமாகிய பிராரத்த வாசனை முற்றிலும் நீங்கினாலன்றி அவ் அசத்துப் பொருள்களைக் கீழ்ப்படுத்து மெய்யுணர்வு மேலோங்குதல் இயலாது. ஆகவே பிராரத்த வாசனை பற்றறக் கழிதற் பொருட்டு மெய்யுணர்வுடையாரை நாடிவழிபடுதல் வேண்டும். அவ்வழிபாட்டினால் வினைநீங்கி மெய்யுணர்வு மேம்பட்டு நிகழும். ஆதலால் மெய்யுணர்வுடைய சிவஞானிகளை அன்பினால் வழிபடுக என அறிவுறுத்துவது,

"வினையா லசத்து விளைதலான் ஞானம்
வினைதீரி னன்றி விளையா - வினைதீர்
ஞானத்தை நாடித்தொழவே அதுநிகழும்
ஆனத்தால் அன்பிற் றொழு" (79)

எனவரும் சிவஞானபோத உதாரண வெண்பாவாகும். இதன் கண் ஞானம் என்றது சிவஞானிகளை. இவ்வெண்பா மேற்குறித்த திருமந்திரத்தினை அடியொற்றியமைந்துள்ளமை காணலாம்.

வேதத்துட் கூறப்படும் மகாவாக்கியப் பொருளைக் குருமுகமாகவுணர்ந்து பயன் பெறுமாறு கூறுவது,

"நீயது வானாயென நின்ற பேருரை
ஆயது நானானேன் என்னச் சமைந்தறச்
சேய சிவமாக்கும் சீர்நந்தி பேரருள்
ஆயது வாயனந் தானந்தி யாகுமே" (2577)

எனவரும் திருமந்திரமாகும்.

"'நீ அது ஆனாய்' என்னும் பொருளில் ஆசிரியன்

மாணவனை நோக்கி அறிவுறுத்திய 'தத்துவமசி' என்னும் மகாவாக்கியம் மாணவனது உள்ளத்திற்பொருந்தி 'அதுநான் ஆனேன்' என்னும் பொருளில் சிவோகம் பாவனையாக அமைய அதனால் தற்போதம் கெட, சீர்த்திமிக்க நந்தியாகிய குருவின் பெருங்கருணை ஆன்மாவைச் செம்பொருளாகிய சிவத்தோடு இரண்டறக் கலக்கும்படி ஒன்றுவிக்கும். (குருவின் திருவருளால்) சிவமாகிய அவ்வுயிரானது எல்லையற்ற பேரின்பநிலையை எய்தி இன்புறுவதாகும்" என்பது இதன் பொருளாகும்.

நீ அது ஆனாய் என்பது தத்துவமசி மகா வாக்கியம். தத் - அது. துவம் - நீ. அசி - ஆனாய். மகாவாக்கியம் - பேருரை. தத்துவமசி என்பது ஆசிரியன் மாணவனை நோக்கி அறிவுறுத்தும் நிலையிலமைந்த மகாவாக்கியமாகும். இதன்பொருளை மாணவன் சிந்திக்கும் முறையில் அமைந்தது, 'அது நான் ஆனேன்' என்பதாகும். சமைந்து அறுதலாவது, உள்ளத்திற் பொருந்தித் 'தான்' என்னும் தற்போதம் கெடுதல், சேய சிவம் - செம்மையேயாய சிவபரம்பொருள், சிந்தைக்கும் மொழிக்கும் எட்டாத நிலையில் தூராதிதூரமாக அப்பாற்பட்டுள்ள சிவ பரம்பொருள் எனினும் அமையும். 'நணியானே சேயானே' எனப் போற்றுவர் நாவுக்கரசர். சீர்நந்தி பேரருள் சேய சிவமாக்கும் என இயையும். ஆயது - அவ்வாறு சிவத்தோடு ஒன்றாகிய ஆன்மா. ஆனந்த ஆனந்தி - எல்லையற்ற பேரானந்தத்தையுடையது.

> "கண்டஇவை யல்லேன் நான்என் றகன்று காணாக்
> கழிபரமும் நானல்லேன் எனக்கருதிக் கசிந்த
> தொண்டினொடும் உளத்தவன்றான் நின்றகலப் பாலே
> சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி
> விண்டகலு மலங்களெலாம் கருடதியா னத்தால்
> விடமொழியும் அதுபோல விமலதையும் அடையும்
> பண்டைமறை களும்அதுநான் ஆனேன் என்று
> பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே" (298)

எனவரும் சிவஞான சித்தியார் இத்திருமந்திரத்தினை யடியொற்றி வேதத்திற் கூறப்பட்ட மகாவாக்கியத்தின்

பொருளைச் சைவசித்தாந்த மரபுக்கேற்ப விளக்கியுள்ளமை இங்கு ஒப்பு நோக்கியுணர்தற்குரியதாகும்.

மேற்குறித்த மகாவாக்கியமாகிய பெரும்பெரும் பெயர்ப் பொருளாகத் திகழ்வது சிவபரம் பொருளே யென்னும் உண்மையினைத் தெளிவுபடுத்தும் வாயிலாகச் சிவபரம்பொருளைத் தரிசிக்குமாறு உணர்த்துவது,

> "அறிவறி யாமை யிரண்டு மகற்றிச்
> செறிவறி வாய்எங்கும் நின்ற சிவனைப்
> பிறிவறியாது பிரானென்று பேணுங்
> குறியறி யாதவர் கொள்ளறி யாரே" (2580)

எனவரும் திருமந்திரமாகும்.

சுட்டறிவாகிய சகலாவத்தையும் எதனையும் அறியாமையாகிய கேவலாவத்தையும் ஆகிய இரண்டினையும் (சிவஞானத்தினால்) நீக்கிப் (பொருள்தோறும்) செறிவுடையதாய் அறிவேயுருவாய் எங்கும் நீக்கமறக் கலந்து நின்ற சிவபெருமானை ஆன்மபோதத்தால் வேறாக நின்றுணராது அவனருளோடு ஒன்றியிருந்து எம்முயிர்க் குயிராய பெருமான் என்று அன்பினாற் பேணிப் போற்றும் அருளாகிய இலக்கினை யுணராதவர்கள் சிவபரம் பொருளைக் கண்டு கொள்ளும் திறமறியாதார் என்பது மேற்குறித்த திருமந்திரத்தின் பொருளாகும்.

ஆசிரியனது அருள் நோக்கத்தால் இருவகைப் பாசமும் நீங்கிக் கேட்கும் முறையிற் கேட்டுச் சிந்திக்கும் முறையிற் சிந்தித்து அன்புசெய்து அருள்வழி அடங்கிநிற்கும் இயல்பினர்க்கு இறைவனியல்பு கேட்குங்காலத்துப் பொருட்டன்மை பற்றிப் பேதமாய்த் தோன்றியும், சிந்திக்குங் காலத்துக் கலப்புப் பற்றி அபேதமாய்த் தோன்றியும் தெளிந்த பின்னர் இவ்விரண்டுமின்றி நுண்ணியனும்பரியனுமாயதோர் முறைமை பற்றி எவற்றினும் ஒற்றித்து நின்றே ஒன்றிலுந் தோய்விலனாய்ப் பேதாபேதமாய்த் தோன்றியும் நிற்கும் அம்முதல்வனது தன்மை இனிது விளங்கும் என இவ்வாறு தெளிதலின் இயல்பினை விளக்குவது,

"அறியாமை யறிவகற்றி யறிவி னுள்ளே
அறிவுதனை அருளினான் அறியாதே யறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகில்
பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெலாந் தானாய்த் தோன்றி
நெறியாலே இவையெல்லாம் அல்ல வாகி
நின்றென்றுந் தோன்றிடுவன் நிராதார னாயே" (282)

எனவரும் சிவஞான சித்தியாராகும். குழைந்திருத்தல் என்றது, ஆன்மசுத்தியை, மேற்கூறியவாறு கேவல சகலங்களிற் பொருந்துதலும் தற்போதம் முனைத்தலும் ஆகிய இரண்டு மின்றி அருளிலேயழுந்தி எங்கும் சிவமயமே காண்டல் சிவதரிசனமாம் என்னும் இவ்விருத்தம் மேற்குறித்த திருமந்திரத்தின் விளக்கமாதல் காணலாம்.

"அறிவறி யாமை யகன்ற வாருயிர்
அறிவறி யாத பேரருளைக் கூடடின்
பிறிவறி யாதவப் பிரானுட் கொண்டுபோய்ப்
பிறிவறி யாவகை வைக்கும் பின்னையே"

எனவரும் பதி பசு பாச விளக்கம் இங்கு நினைத்தற் குரியதாகும்.

உயிர்கள் வாழ்க்கை நுகர்ச்சிகளை நுகர்தற்குரிய வழிகளாக அமைந்தன மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்னும் ஆறும் ஆம். இவற்றுள் முதல் மூன்றும் சொல்லுலகம் எனவும் பின் மூன்றும் பொரு ளுலகம் எனவும் கூறப்படும். இங்குச் சொல்லப்பட்ட சொல்லும் பொருளும் ஆகிய அறுவகை நெறிகளுள், மந்திரம் பதத்திலும், பதம் வன்னத்திலும், வன்னம் புவனத்திலும், புவனம் தத்துவத்திலும், தத்துவம் கலையிலும் அடங்க ஒடுக்கிக் கலையைத் திரோதான சத்தியிலும், திரோதான சத்தியைச் சிவத்திலும் அடங்குமாறு குரு வானவர் தீக்கையினால் மாணாக்கனைச் சோதித்துத் தூய்மை செய்தல் அத்துவா சோதனை எனப்படும்.

அத்துவா - வழி.

> "பொல்லாத என்னழுக்கிற் புகுவான் என்னைப்
> புறம்புறமே சோதித்த புனிதன்" (6)

என்பது திருநாவுக்கரசர் அருளிச்செயல்.

ஆசிரியன் அத்துவாக்களைச் சோதித்துத் தீக்கை செய்ய அதனால் மாணவனிடத்தே சிவம் பிரகாசிக்குமாறு உணர்த்துவது,

> "அறிவறி வென்றங் கரற்றும் உலகம்
> அறிவறி யாமையை யாரும் அறியார்
> அறிவறி யாமை கடந்தறி வானால்
> அறிவறி யாமை அழகிய வாறே" (2637)

எனவரும் திருமந்திரமாகும்.

சுட்டுணர்வாகிய குறையுடைய அறிவினையே அறிவு என்று சொல்லி அரற்றுவர் உலகத்தார். அறிவு இத்தகையதென்பதனையும் அறியாமை இத்தகைய தென்பதனையும் அவருள் யாரும் அறியமாட்டார். அறிவும் அறியாமையும் விரவிய தம் நிலையைக் கடந்து அறிவே யுருவாகிய சிவத்தின் வழி அடங்கி நிற்பாராயின் அவர்தம் சுட்டறிவினாலறிதலாகிய அறியாமைகெட நிற்கும் நிலை சிவப்பிரகாசமாகிய பேரழகினைத் தருவதாகும் என்பது மேற்குறித்த திருமந்திரத்தின் பொருள் ஆகும்.

இங்கு அறிவு என்றது, கருவிகளின் நீங்கிச் சிவஞானத்தினால் முற்றிலும் அறிவே விளங்கப் பெறும் சுத்தாவத்தையினை. அறியாமை என்றது, கருவிகளுடன் கூடாமையால் ஒன்றும் விளங்காமையாகிய கேவலா வத்தையினை. அறிவறியாமை என்றது, அறிவும் அறியாமை யும் விரவிய சகலாவத்தையினை, அறிவாதல் சுத்த அறிவாகிய சிவஞானத்துடன் பொருந்துதல். அறிவு அறியாமை என்றது, சுட்டுணர்வாகிய உயிரறிவினால் அறியாமை, என்றது ஓங்குணர்வாகிய சிவஞானத்துள் ஒடுங்கித் தற்போதம் கெடுதல்.

*ஒன்பதாந்தந்திரம்*

திருமந்திரத்தின் முடிவில் உள்ள ஒன்பதாந் தந்திரம், தசகாரியத்துள் ஒன்றாகிய சிவபோகம் என்னும் பேரின்ப நிலையை விளக்கும் முறையில் அமைந்துளது. இங்குச் சிவபோகம் என்றது, உயிர் சிவயோகத்தாற் சித்துடன் கூடிய நிலையில் தன்னை மறந்து சிவனது பேரருளில் திளைத்தின்புறுதலாகிய சிவசாயுச்சிய நிலையினை. இத்தந்திரத்துட் குருமடதரிசனம் என்பது முதலாகச் சர்வ வியாபி என்பதீறாக இருபத்திரண்டு உட்பிரிவுகள் உள்ளன. இவற்றுட் குருமட தரிசனம், ஞானகுரு தரிசனம், திருக் கூத்துத் தரிசனம், ஆகாசப்பேறு, ஞானோதயம், சத்திய ஞானானந்தம், சொரூபஉதயம், சிவதரிசனம் என்னும் பகுதிகள் சிவயோகிகளின் அநுபவநிலையைக் குறிப்பன. பிரணவசமாதி, தூலசூக்கும அதிசூக்கும பஞ்சாக்கரங்கள், மோனசமாதி என்னும் பகுதிகள் எல்லாப்பொருள்களையுந் தன்னகத்தே அடக்கியுள்ளன திருவைந்தெழுத்தினை அவ்வத்தானத்தில் வைத்துத்தியானிக்கும் நிலையில் சிவபோகத்து அழுந்துந் திறத்தினைத்தெளிய விளக்குவன. இப்பகுதிகளிற் கூறப்படும் தத்துவநுட்பங்கள் உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன் முதலிய மெய்கண்ட நூல்களில் எடுத்தாளப்பெற்றன. திருக்கூத்துத் தரிசனம் என்ற பகுதி சைவத்தின் மிகச் சிறந்த நுண்பொருள் களை விளக்குவது. இதிற்கூறப்படும் சிவானந்தக்கூத்து என்பது, சிவஞானிகள் என்றும் தம் மெயயுணர்விற் கண்டு களிக்கும் ஆனந்தக் கூத்தாகும். இதனை,

> "அண்ணலார் தமக்களித்த மெய்ஞ்ஞானமே
> யான அம்பலமுந்தம்
> உண்ணிறைந்த ஞானத்தெழும் ஆனந்த
> ஒருபெருந்திருக் கூத்தும்" (பெரிய. திருஞான. 150)

எனக் குறிப்பிடுவர் சேக்கிழார் நாயனார்.

> "குறியொன்றுமில்லாத கூத்தன்றன் கூத்து"
> (திருவா. அச்சோ.)

என்பர் திருவாதவூரடிகள்.

பக்குவமுடைய சிவஞானிகளுக்குச் சிறப்புமுறையில் அவர்தம் மெய்யுணர்வில் நின்று நிகழ்த்தப்பெறும் இத்திருக் கூத்தினையன்றி, உலகவுயிர்கள் யாவும் நலம் பெற்றுய்தல் வேண்டும் என்னும் பொதுநிலையில் இறைவனால் நிகழ்த்தப் பெறுந் திருக்கூத்து சுந்தரக்கூத்து பொற்பதிக்கூத்து பொற்றில்லைக் கூத்து, அற்புதக்கூத்து என்னுந் தலைப்புக் களில் இத்தந்திரத்தில் விரித்துரைக்கப்பெற்றுளது. இதன்கணுள்ள சூனிசம்பாஷணை என்ற பகுதி உணர்தற்கரிய நுண்பொருள்களைக் கேட்போர் எளிதின் மனங்கொள்ளும் படி உருவகவாய்பாட்டால் பிறிது மொழிதல் என்னும் அணி நலம் அமைய மறைத்துக்கூறும் முறையில் அமைந்துளது. இதன் இறுதியிலுள்ள வரையுறை மாட்சி, அணைந்தோர் தன்மை, தோத்திரம், சர்வவியாபி என்னுந் தலைப்பிலமைந்த திருமந்திரப் பாடல்கள், பசுகரணங்க ளெல்லாம் பதி கரணங்களாகப் பெற்றுச் சிவபோகத்தில் திளைத்து இன்புறும் அருளாளர்களாகிய சீவன்முத்தர்களது இயல்பினைப் புலப்படுத்துவன.

'நகார முதலாகும் நந்திதன் நாமமே' (திருமந்திரம் 2699) எனத் தூலபஞ்சாக்கரத்தினைக் குறித்த திருமூலர்,

> **"சிவனரு ளாய சிவன் திருநாமம்**
> **சிவனரு ளான் மாத்திரோத மலமாயை**
> **சிவன் முதலாகச் சிறந்து நீரோதப்**
> **பவமத கன்று பரசிவ னாமே"** (2711)

எனச் சூக்கும பஞ்சாக்கரத்தின் இயல்பினையும் அதனை விதிப்படி ஓதுவார் பெறும் பயனையும் உணர்த்தியுள்ளார்.

இறைவனது திருவருளாகிய ஞான நடனத்தை யுணர்த்தும் திருப்பெயராகிய திருவைந்தெழுத்தின் சிகாரம் இறைவனையும் வகாரம் அருளாகிய சத்தியினையும் யகரம் ஆன்மாவையும் நகாரம் (அதனைமறைத்த) திரோதான சத்தியையும் மகாரம் ஆணவமலத்தினையும் குறிப்பன. நீவிர் (அவ்வைந்தெழுத்தின் பொருளையுணர்ந்து) சிகார முதலாகச் சிறப்புடன் ஓதுவீராயின் நுமது உயிர் பிறவித் துன்பத்தி னின்றும் நீங்கிப் பரம்பொருளாகிய சிவத்துடன் இரண்டறக் கலந்து ஒன்றாகும் என்பது இதன் பொருளாகும்.

கன்மம் திரோதான சத்திக்குக் கருவியாய் அதனுள் அடங்குதலின் வேறு கூறப்படவில்லை. மகாரம் ஆணவ மலத்தையே குறிப்பது. ஆயினும் அழுக்கு நீக்கும் உவர்மண் போன்று அம்மலத்தைக் கழுவுதற்கென இறைவனாற் கூட்டப்பட்டது மாயை என்பார் அதனையும் மலத்தோடு இணைத்து மலமாயை என ஒருங்கு குறித்தார் எனக் கருத வேண்டியுளது. இத்திருமந்திரத்தை அடியொற்றி இதன் விளக்கமாக அமைந்தது

"சிவனரு ளாவி திரோதமலம் ஐந்தும்
அவனெழுத் தஞ்சின் அடைவாம் - இவனின்று
நம்முதலா ஓதிலருள் நாடாது, நாடும்அருள்
சிம்முதலா ஓது நீ சென்று" (உண்மை. 41)

எனவரும் உண்மை விளக்கமாகும். இதன்கண் கன்மமும் மாயையும் தனித்துச் சொல்லப்படவில்லை. "மாயையும் கன்மமும் திரோதானசத்திக்குக் கருவியாய் அதனுள் அடங்குதலின், திரோதான சத்தியின் இலக்கணங் கூறவே மாயை கன்மங்களது இலக்கணமுங் கூறியவாறாதலறிக" (சிவ. பாடியம் சூ5) என விளக்கந்தருவர் சிவஞான முனிவர். எனவே மேற்குறித்த திருமந்திரத்தின் இரண்டாமடி,

'சிவனருளான் மாத்திரோத மலமாம்'

என்றிருத்தல் வேண்டுமெனத் தோன்றுகின்றது.

திருவைந்தெழுத்து இறைவன் திருவருளின் வண்ணமாயது என்பார் 'சிவனருளாய சிவன் திருநாமம்' என்றார் திருமூலதேவர். 'ஆதியார் அருளாய அஞ்செழுத்து, ஓதியேறினார் உய்யவுலகெலாம்' (பெரிய. திருஞான) எனவரும் சேக்கிழார் வாய்மொழி இக்கருத்தினை வலியுறுத்துவதாகும்.

'திருவாய்ப் பொலியச் சிவாநமவென்று நீறணிந்தேனே' (4)

எனவும்,

'நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன்'
(திருவாசகம்)

எனவும் வரும் திருமுறைத் தொடர்கள் சூக்கும பஞ்சாக்கரத்தின் உருவினைப் புலப்படுத்தல் காண்க.

அதிசூக்கும பஞ்சாக்கரத்தின் அமைப்பும் அதனை விதிப்படி எண்ணுதலால் வரும் பயனும் உணர்த்துவது,

"சிவாய நமவெனச் சித்தம் ஒடுக்கி
அவாயம் அறவே அடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ என்றென்றே சிந்தை
அவாயங்கெட நிற்க ஆனந்த மாமே" (2718)

எனவரும் திருமந்திரமாகும். "சிவாயநம என்னுஞ் சூக்கும பஞ்சாக்கரத்தின் துணையால் சித்தத்தை ஒருவழிப்பட நிறுத்தித் தற்போதத்தால் உளதாம் அச்சம் அறவே நீங்க (திரோதத்தையும் மலத்தையும் உணர்த்தும் நம என்பதனை விலக்கி) ஆன்மாவை இறைவனுக்கு மீளாவடிமையாக்கிச் சிவாய சிவசிவ என்ற இவ்வாறு திருவைந்தெழுத்தைச் சிந்தையில் எண்ணித் தற்போதத்தால் உண்டாகும் அச்சம் அகன்றொழியச் சிவபரம்பொருளை ஒன்றி நின்று உணர்தலால் சிவானந்தமான பேரின்பம் விளையும் என்பது இத்திருமந்திரத்தின் பொருளாகும்.

ஆன்மா ஆணவமலமாகிய குற்றத்துடன் கூடிய நகாரத்திற்கும் அருளாகிய வகாரத்திற்கும் இடையே நிற்கும் நிலையினையுணர்த்தும் பருமைநிலையில் அமையாது, யகரமாகிய உயிர் வகரமாகிய அருளினாலே அவ்வகரத் திற்கும் சிவமாகிய சிகரத்திற்கும் இடையே நிற்கும் தூய நிலையினை யுணர்த்துவது, சிவாயசிவ என்னும் அதிசூக்கும பஞ்சாக்கரமாகும் என்பது குருமுகமாகத் தெளியத் தக்கதாகும். மிக நுண்ணிய இத்திருவைந்தெழுத்தினை,

"ஆகினவா நாப்பண் அடையா தருளினால்
வாசியிடை நிற்கை வழக்கு" (89)

எனவரும் திருவருட்பயனில் உமாபதி சிவம் உணர்த்தி யுள்ளமை கூர்ந்துணர்தற்பாலதாகும்.

"விண்ணினார் பணிந்தேத்த வியப்புறு
மண்ணினார் மறவாது சிவாயவென்

றெண்ணினார்க் கிடமா வெழில் வானகம்
பண்ணினாரவர் பாலைத் துறையரே"

எனத் திருநாவுக்கரசு நாயனாரும்,

"நண்பாற் சிவாயவெனா நாலூர் மயானத்தே
இன்பாயிருந்தானை யேத்துவார்க் கின்பமே" (2.46.10)

எனத் திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் அருளிய திருப் பாடல்களில் அதிசூக்கும பஞ்சாக்கரம் உபதேசிக்கப் பெற்றுள்ளமை உணர்ந்து போற்றத் தகுவதாகும்.

"உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்பதானால் அடியேன் உன்
அடியார் நடுவுள் இருக்கும்
அருளைப்புரியாய் பொன்னம்பலத்தெம்
முடியா முதலே என்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே" (கோயில்மூத்த. 1)

எனவரும் திருவாசகம் "சத்தியும் சிவமும் ஒத்திருபாலுற, முத்தியாரும் முறைமையருளிய உண்மையை அறிவுறுத்துவது" என்பர் சீகாழித் தாண்டவராயர்.

இறைவன் செய்தருளும் ஞானமயமான திருக்கூத்தின் இயல்பினை விரித்துரைக்கும் அற்புதக்கூத்து என்னும் தலைப்பில் அமைந்தது,

"நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்கவொளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடஞ்
சிற்றம்பலமென்று தேர்ந்துகொண்டேனே" (2770)

எனவரும் திருமந்திரமாகும். திருமூலதேவநாயனார் அற்புதத் திருக்கூத்தினைத் தாம் கண்டு தரிசித்த திறத்தை இத் திருப்பாடலால் அருளிச் செய்கின்றார்.

"நெற்றிக்கு நேரே இருபுருவங்களின் இடைவெளி

யாகிய ஆகாயத்திலே தியான நிலையில் அழுந்திக்கூர்ந்து நோக்குதலால் ஒளியுருவாய்த் திகழும் மந்திரப் பொருளாய் உயிர்கள் பற்றி நிற்றற்குரிய பற்றுக்கும் பற்றாய்ப் பரம் பொருளாகிய இறைவன் இருக்கும் இடம் நுண்ணிய ஞான வெளியாகிய திருச்சிற்றம்பலமே என்னும் மெய்ம்மையினை இறைவன் திருவருளால் தேர்ந்து அறிந்து கொண்டேன்" என்பது இத்திருமந்திரத்தின் வாயிலாகத் திருமூலர் அறிவுறுத்தும் அருளனுபவவுண்மையாகும்.

நெற்றிக்குநேரே புருவத்து இடைவெளி என்றது, ஆறாதாரங்களுள் ஆஞ்ஞை எனப்படும் இடத்தினை. உற்றுப் பார்த்தல் - ஒருவழிப்பட இருந்து கூர்ந்து நோக்குதல். அங்ஙனம் தியானிக்கும் நிலையில் நாதாந்தத்தின் அஞ்செழுத்து மந்திர நிலையில் நின்று ஒளியுருவில் ஆடல் புரியும் இறைவனது திருக்கூத்துப் புலனாகும் என்பார், 'உற்று உற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்' என்றார். உயிர்கள் பற்றிய எல்லாப் பொருள்கட்கும் பற்றுக்கோடு இறைவனே என்பது அறிவுறுத்துவார் 'பற்றுக்குப் பற்றாய்' என்றார். 'பண்மயத்த மொழிப் பரவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாயபெருமானே' எனப் போற்றுவர் நம்பியாரூரரும். இத்தகைய அற்புதக் கூத்து நிகழ்தற்குரிய நிலைக்களமாகத் திகழ்வது நுண்ணிய பரவெளியாகிய சிதாகாசமே என்பார், 'பரமன் இருந்திடம் சிற்றம் பலமென்று தேர்ந்துகொண்டேனே' என்றார்.

ஆன்மாவின் இடமாக ஐந்தெழுத்தே திருமேனியாக நாதமுடிவிலே நற்றவத்தோர்காண இறைவன் நிகழ்த்தும் இவ்வற்புதத் திருக்கூத்தினைக் குருவின் அருளால் காணுதல் வேண்டும் என்பதனை,

> **"நற்றவத்தோர் தாம்காண நாதாந்தத் தஞ்செழுத்தால்**
> **உற்றுருவாய் நின்றாடல் உள்ளபடி - பெற்றிடநான்**
> **விண்ணார் பொழில்வெண்ணெய் மெய்கண்ட நாதனே**
> **தண்ணார் அருளாலே சாற்று"** (உண்மை. 30)

என மாணவர் வினாவும் வினாவாகவும்,

> **"எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே**
> **நட்டம் புதல்வா நவிலக்கேள் - சிட்டன்**

சிவாயநம வென்னுந் திருவெழுத் தஞ்சாலே
அவாயமற நின்றாடு வான்" (உண்மை. 31)

என ஆசிரியர் கூறும் விடையாகவும் திருவதிகை மனவாசகங் கடந்தார் அறிவுறுத்தியுள்ளமை இங்கு நோக்கத்தகுவதாகும். கூத்தப்பெருமானது ஆடல் திருமேனி, படைத்தல் , காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களின் அமைப்பினைத் தன்னகத்தே கொண்டது என்பது,

"அரன்துடி தோற்றம், அமைத்தல் திதியாம்,
அரன் அங்கி தன்னில் அறையில் சங்காரம்
அரனூற் றணைப்பில் அமருந் திரோதாயி
அரனடி யென்றும் அனுக்கிரகந் தானே" (2799)

எனவரும் திருமந்திரமாகும். "கூத்தப்பெருமான் (வலக் கையில்) ஏந்திய உடுக்கை படைப்புத்தொழிலைக் குறிப்பதாகும். அமைத்த (வலக்) கை காத்தற்றொழிலை யுணர்த்தும். அம்முதல்வன் (இடக்கையில்) ஏந்தியதீயின் அமைப்பினைக் கூறின் அழித்தற்றொழிலாகும். இறைவன் ஊன்றிய திருவடியினால் (முயலகனை) அணைத்துள்ள நிலையில் மறைத்தற்றொழில் பொருந்தியுள்ளது. அவ் விறைவனது தூக்கியதிருவடி எக்காலத்தும் மன்னுயிர்கட்கு அருள் புரியுந் திறத்தைக் குறிப்பதாகும்" என்பது இதன் பொருள். இத்திருமந்திரப் பொருளை விரித்துரைப்பது,

"தோற்றந் துடியதனில், தோயுந்திதி யமைப்பில்,
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோதம், முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு" (35)

எனவரும் உண்மை விளக்கமாகும். உடுக்கையேந்திய கையிலே படைத்தலும், அமைத்த திருக்கையிலே காத்தலும், தீயேந்திய கையிலே அழித்தலும், உறுதியாக ஊன்றிய திருவடியிலே மறைத்தலும், தூக்கிய திருவடியிலே அருளலாகிய வீடுபேறும் நிகழ இறைவன் ஆடல் புரிதலை நாடியுணர்வாயாக என்பது இதன்பொருள்.

இறைவன் வகுத்த நியதியின் வழியே அடியார்கள் இசைந்து நடக்குமாறு உணர்த்துவது 'ஊழ்' என்னும் பகுதியாகும். மெய்யுணர்வுடைய பெரியோர்கள் தமது உடம்பைச் செதுக்கினாலும் வெட்டினாலும் செஞ் சந்தனத்தைப் பூசினாலும் தலையில் உளியினால் அடித்தாலும் ஞானமே திருமேனியாகவுடைய இறைவனது அருளின் வழி நிற்றலல்லது தம் உள்ளத்தே கவற்சியும் களிப்பும் இன்றித் தம் இயல்பாகிய பெருமையில் வழுவாது நிற்பர் என அறிவுறுத்துவது,

> "செற்றிலென் சீவிலென் செஞ்சாந் தணியலென்
> மத்தகத்தேயுளி நாட்டி மறிக்கிலென்
> வித்தகன் நந்தி விதிவழியல்லது
> தத்துவ ஞானிகள் தன்மை குன்றாரே" (2847)

எனவரும் திருமந்திரமாகும்.

சிவனைத் தரிசிக்குமாறு உணர்த்துவது சிவதரிசனம் என்ற பகுதியாகும். ஆன்மா எனவும் சிவன் எனவும் பிரித்து உணரக்கூடிய நிலையில் அவ்விருபொருளும் வேறாய் நிற்றல் இல்லை. ஆன்மாவின் உணர்வினுள்ளே உயிர்க்குயிராகிய சிவனும் வெளிப்பட்டுத் தோன்றுவான். (அம்முதல்வனைச் சிந்தித்தற் கருவியாகிய) சிந்தை தெளிவுபெறும்படி சிவஞானத்தால் தெளிந்துணர வல்லார்க்கு அவர்தம் சிந்தையினுள்ளே சிவபெருமான் வீற்றிருந்தருள்கின்றான் என அறிவுறுத்துவது,

> "சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை
> சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படும்
> சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
> சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே" (2853)

எனவரும் திருமந்திரமாகும். இதன் முதலிரண்டடிகளிலும் சிந்தை என்றது ஆன்மாவை; பின் இரண்டடிகளிலும் சிந்தை என்றது அகக்கருவியாகிய சித்தத்தை. ஆன்மாவும் சிவ[illegible] பொருட்டன்மையால் வேறுபொருளாயினும் உயிர்க[illegible] பிரிப்பின்றி அவையே தானேயாய்க் கலந்துள[illegible]

தன்மையால் ஒன்றாதலின் உயிரையும் சிவத்தையும் வேறு பிரித்தல் இயலாதென்பார், 'சிந்தையதென்னச் சிவனென்ன வேறில்லை' என்றார். சிந்தையது என்புழி அது பகுதிப் பொருள் விகுதி. உயிர்களோடு இறைவன் கொண்டுள்ள அத்துவித நிலையாகிய இத்தொடர்பினை,

"அண்டமோ ரணுவாம் பெருமை கொண்டணுவோர்
அண்டமாம் சிறுமை கொண்டடியேன்
உண்டவூண் உனக்காம் வகையெனதுள்ளம்
உள்கலந்தெழு பரஞ்சோதி" (9)

எனவரும் கருவூர்த்தேவர் திருவிசைப்பா விளங்க உணர்த்துதல் அறிந்து மகிழத்தக்கதாகும்.

"எங்கு கிறைவனுளனென்பாய் மனனேயான்
எங்கு கெனத் திரிவாரின்"

(நன்னூல். சங்கர. உரைமேற்கோள்)

என்பதும் இதனையே வலியுறுத்தும். சிவஞானத் தெளிவுடையோர் சிந்தையிலே இறைவன் வெளிப்பட்டுத் தோன்றுவான் என்னும் உண்மையினை,

"சிந்தையும் தெளிவுமாகித் தெளிவினுட் சிவமுமாகி"

எனவரும் அப்பர் தேவாரம் இனிது விளக்குகின்றது.

சிவபெருமானது உண்மையியல்பினைக் காணுமாறு உணர்த்துவது,

"உணர்வும் அவனே உயிரும் அவனே
புணரும் அவனே புலவி அவனே
இணரும் அவன்தன்னை எண்ணலு மாகான்
துணரின் மலர்க்கந்தம் துன்னிநின் றானே" (2857)

எனவரும் திருமந்திரமாகும்.

"உயிருணர்வில் விளங்குபவனும் அவ்விறைவனே. அவ்வுணர்வினைத் தோற்றுவித்து உயிரில் நிலைத்திருப்பவனும் அவனே. எல்லாப் பொருள்களோடும் பிரிவின்றிப்

புணர்ந்திருப்பவனும் அவனே. அவற்றின் தன்மை தனக்கு எய்தலின்றி அவற்றுள் ஒன்றினுந்தோயாது பிரிந்திருப்பவனும் அவனே. பூங்கொத்தினைப் போன்று எப்பொருள்களும் தன்கண் பூத்து விளங்குதற்கு ஆதாரமாயுள்ள அம்முதல்வன் தன்னை உயிர்கள் சிந்தித்துணர்தற்கு இயலாதவாறு அப்பாற் பட்டுள்ளான். (ஆயினும்) கொத்தாய் மலர்ந்த பூக்களிடத்தே உள்ளிருந்து தோன்றும் நறுமணத்தினைப்போன்று எவ்வுயிர்க்கும் உள்ளிருந்து தோன்றும் சிறப்பினை யுடையனாய் மாறாது நிலைபெற்றுள்ளான்" என்பது இதன் பொருளாகும்.

"கந்தழியாவது ஒருபற்றும் அற்று அருவாய்த்தானே நிற்கும் தத்துவங்கடந்த பொருள். ........... இதனை 'உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதருநாற்றம்போற் பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்' (திருவாசகம்) என அதனை உணர்ந்தோர் கூறியவாற்றான் உணர்க" (திருமுருகு..........நச். உரை) என்பர் நச்சினார்க்கினியர். இக்கருத்து 'துணரின் மலர்க்கந்தம் துன்னநின்றானே' எனவரும் இத்திருமந்திரத்தில் வேரூன்றியுள்ளமை காணலாம். இணர், துணர் - பூங்கொத்து. கந்தம் - மணம். துன்னுதல் - பிரிவின்றிச் சேர்தல்.

பொருள்களை ஆராய்ந்து பார்க்கும் அறிவுடைய ஆன்மாவின் உறையுளாகிய உடம்பின்கண்ணே உயிர்க்கு நற்பயன் விளைக்கும் அறிகருவிகளாகிய ஐம்பொறிகள் உள்ளன. அவை ஐந்தும் தம்மை நல்வழியிற் செலுத்தும் ஆசிரியனைப் பெறாமையால் சீவபோதமாகிய வெறி கொண்டு புலன்களின் வழியே உழல்கின்றன. அவை தீதொரீஇ நன்றின்பாற் செலுத்தவல்ல ஆசிரியனைப் பெற்று அவனது உபதேசத்தின்வழி தற்போதம் அடங்கப்பெறின், அவை ஐந்தும் சிவஞானமாகிய பாலினை உயிர்க்கு நிரம்பத் தருவன என்னும் அரியவுண்மையினை விளக்கும் விடுகதை போன்று அமைந்தது,

"பார்ப்பான் அகத்திலே பாற்பாசு ஐந்துண்டு
மேய்ப்பாரை யின்றிவெறித்துத் திரிவன

மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினாற்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாய்ச் சொரியுமே" (2883)

எனவரும் திருமந்திரமாகும். இதன்கண் பார்ப்பான் என்றது ஆன்மா. பசு - ஐம்பொறிகள். மேய்ப்பார் - குரு. வெறி- உலகப் பொருள்களிற் செல்லும் மருட்சி. பால் - நல்லுணர்வு.

வரையுறைமாட்சி என்பது தியான எல்லையாகிய மலையின் உச்சியில் உறைவோராகிய சிவஞானிகளின் மாண்பினையுணர்த்தும் பகுதியாகும். அப்பகுதியிலுள்ளது,

"உரையற்ற தொன்றையுரை செயும் ஊமர்காண்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யோனே" (2955)

எனவரும் திருமந்திரமாகும். "நால்வகை வாக்குக்களையும் கடந்து நின்ற ஒப்பற்ற பரம்பொருளை ஏதுக்களாலும் எடுத்துக்காட்டுக்களாலும் சொல்ல முற்படும் ஊமைகளே, கரைகாணாக் கடலாகவுள்ள அதனை எல்லை கண்டு கூற இயலுமோ? திரையடங்கிய நீர்நிலைபோன்று சித்தந் தெளிந்துள்ள சிவஞானிகளுக்குக் கட்டமைந்த சடையினனாகிய சிவபெருமான் களங்கமற வெளிப்பட்டிருந்தான்" என்பது இதன் பொருளாகும்.

"சொல்லும் இடமன்று சொல்லப் புகுமிடம்
எல்லை சிவனுக் கென் றுந் தீபற
என்றால் நாம் என்சொல்கோம் உந்தீபற" (29)

எனவரும் உய்யவந்த தேவநாயனார் வாய்மொழி இங்கு நினைத்தற்குரியதாகும்.

அயரா அன்பினால் அரன்கழல் அணைந்தோராகிய சீவன்முத்தர்களது இயல்பினை விளக்குவது,

"ஒழிந்தேன் பிறவி உறவென்னும் பாசங்
கழிந்தேன் கடவுளும் நானுமொன் றானேன்
அழிந்தாங் கினிவரும் ஆக்கமும் வேண்டேன்
செழுஞ் சார்புடைய சிவனைக் கண்டேனே" (2958)

எனவரும் திருமந்திரமாகும்.

எப்பொருட்குஞ் செழுமைநல்கும் சார்பாந் தன்மையையுடைய சிவபெருமானை அவனருளாற் கண்டுணரப் பெற்றேன். ஆதலால் பிறவிப் பிணியினை விட்டொழிந்தேன். உலகவுறவாகிய பாசப்பிணிப்பினை விட்டு விலகினேன் (எனது பசுபோதங் கழன்றமையால்) கடவுளும் நானும் எனப் பிரித்துணரவொண்ணாதபடி இறைவனோடு இரண்டறக் கலந்து ஒன்றானேன். ஆதலால் அங்கு அழியுந்தன்மையவாய் வரும் எத்தகைய செல்வங் களையுமே இனி வேண்டும் குறையுடையேனல்லேன் என்பது இதன்பொருள்.

செழுஞ்சார்புடைய சிவனைக் கண்டேன் (ஆதலாலே) பிறவி ஒழிந்தேன், உறவு என்னும் பாசம் கழிந்தேன். கடவுளும் நானும் ஒன்றானேன், ஆங்கு அழிந்து வரும் ஆக்கமும் இனி வேண்டேன் என இயையும், எல்லாப் பொருட்கும் பற்றுக் கோடாகிய இறைவனது சார்பு உலகத்துப் பிற சார்பு போலன்றி எக்காலத்தும் ஊக்கமும் ஆக்கமும் நல்கும் செழுமை வாய்ந்தது என்பார் 'செழுஞ் சார்புடைய சிவன்' என்றார். நான் என்றது உடம்புளிருக்கும் பொழுதே அரன்கழலணையும் பேறுபெற்ற ஆன்மாவை. கடவுளும் ஆன்மாவும் ஒன்றாதலாவது, உப்பானது தனது கடினத்தன்மை நீங்கி நீரோடு ஒன்றாய்க் கலத்தல் போல உயிர் தனது சகசமலமாகிய ஆணவமலங் கெட்டொழியக் கடவுளோடு இரண்டறக் கலந்து ஒன்றாதால். ஆங்கு என்றது, சீவன் முத்தர்க்கு அயலதாய் வேறுபட்ட உலகினை, அயரா அன்பின் அரன்கழலணைந்த திருமூல தேவநாயனார் தமது அருளனுபவத்தில் வைத்து அணைந்தோர் தன்மையினை விளக்குவதாக அமைந்தது இத்திருமந்திரப் பாடலாகும்.

திருமூலநாயனார் அருளிச் செய்த இத்திருமந்திர மாலையில் தெய்வப்புலவர் அருளிய திருக்குறளிலுள்ள கருத்துக்களும் சொற்றொடர்களும் பொன்னே போற் பொதிந்து வைக்கப்பெற்றுள்ளமை பன்னிரு திருமுறை வரலாறு இரண்டாம் பகுதியில் திருமந்திரமும் திருக்குறளும்

என்ற தலைப்பில் எடுத்துக்காட்டப் பெற்றன.[1] பன்னிரு திருமுறைகளில் ஒன்றாகிய திருமந்திரத் தொடர்களும் கருத்துக்களும் ஏனைய பதினொரு திருமுறைகளிலும் இடம் பெற்றுள்ளமை திருமந்திரமும் ஏனைய திருமுறைகளும் என்ற தலைப்பில் எடுத்துக் காட்டப்பெற்றது.[2]

### *திருமந்திரமும் மெய்கண்டநூல்களும்*

திருமூல தேவநாயனார் திருவாய் மலர்ந்தருளிய திருமந்திரமாலை என்னும் இப்பனுவல், தமிழகத்தில் தோன்றி வளர்ந்த சைவ சித்தாந்தத் தத்துவவுண்மைகளை விரித்து விளக்கும் சாத்திர நூலாகவும் சைவநெறியில் ஒழுகிச் சிவபரம்பொருளை மனமொழி மெய்களால் வாழ்த்தி வழிபடுதற்குச் சாதனமாகிய தோத்திர நூலாகவும் விளங்கும்தொன்மையும் சிறப்பும் வாய்ந்ததாகும். சைவ சித்தாந்தத் தத்துவவுண்மைகளை விளக்கும் நிலையிற் பிற்காலத்துத் தோன்றிய திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் சிவஞானபோதம் சிவஞான சித்தியார் முதலிய மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கிற்கும் முதல்நூலாகத் திகழ்வது தமிழாகமமாகிய இத்திருமந்திரமேயாகும். என்றும் மாறா வியல்பினதாகிய மெய்ப்பொருளை மாறுந்தன்மையவாகிய ஏனைய உலகப் பொருள்களினின்றும் பிரித்துக் காணும் மெய்யுணர்வினை வழங்கவல்லன மேற்குறித்த சைவ சித்தாந்த சாத்திரங்களாதலின் இவை மெய்கண்ட நூல்கள் எனச் சிறப்பித்துப் போற்றப் பெறுவனவாயின.

சிவஞானம் பெற்ற நல்லுயிர், தன் உடம்பையும் கருவி கரணங்களையும் ஏனைய தத்துவங்களையும் தன்னின் வேறாகப் பகுத்துணர்ந்து என்றும் மாறாதுள்ள சிவ பரம்பொருளே மெய்ப்பொருள் எனக் கண்டு தெளியுமாயின் அவ்வுயிர் மெய்கண்டது எனச் சிறப்பித்துப் பாராட்டப் பெறுவதாகும். இந்நுட்பம்,

---

1. க. வெள்ளைவாரணன், பன்னிரு திருமுறை வரலாறு இரண்டாம் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம், 1969, பக். 452-456.
2. மேலது, பக். 457-478.

"மெய்வாய்கண் மூக்குச் செவியென்னும் மெய்த்தோற்றத்
தவ்வாய அந்தக் கரணம் அகிலமும்
எவ்வா யுயிரும் இறையாட்ட ஆடலாற்
கைவா யிலாநிறை யெங்குமெய் கண்டதே" (2586)

எனவரும் திருமந்திரத்தால் உய்த்துணரப்படும்.

இத்திருமந்திரப்பொருளை அடியொற்றியமைந்தது,

"பன்னிறங் காட்டும் படிகம்போல்இந்திரியம்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து - பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா
மெய்கண்டான்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு"
(சிவஞானபோதம் சூ. 8)

எனவரும் சிவஞான போதவெண்பாவாகும்.

உயிர்தான் முன்னே செய்து கொள்ளப்பட்ட புண்ணியத்தின் மிகுதியால் தனக்கு உயிர்க்குயிராய் இதுகாறும் உள்நின்றுணர்த்திய பரம்பொருளே இப்பொழுது குருவடிவமுங் கொண்டு எழுந்தருளிவந்து சிவதீக்கை செய்து 'மன்னவ குமாரனாகிய நீ ஐம்பொறிகளாகிய வேடர் சூழலில் அகப்பட்டு வளர்ந்து நின்பெருந்தகைமையறியாது மயங்கி இடர்ப்பட்டாய், நின் பெருந்தகைமையாவது இவ் வியல்பினது' என்று அறிவுறுப்ப அறிந்த அளவிலேயே அவ்வேடர் சூழலை விட்டு நீங்கி வேறுபாடின்றி ஒன்றாந் தன்மையின் நிலைபெற்று அம்முதல்வன் திருவடிகளை அணையும் என்று இறைவன் குருவாய் வந்தருளும் முறைமையினைக் கூறுவது,

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே"

எனவரும் சிவஞானபோத எட்டாஞ் சூத்திரமாகும். உணர்த்த உணரும் இயல்பினையுடைய உயிர்கள் ஐம்பொறிகளால் மயக்கமுற்றுத் தமது இயல்பினை

அறியமாட்டா. படிகத்தின் வைத்த பல்வேறு வகைப்பட்ட நிறங்கள் அப்படிகவொளியைக் கீழ்ப்படுத்துத் தத்தம் இயல்பினையே விளக்கி நிற்குமாறு போல, அவ்வைம் பொறிகள் தாம் ஆன்ம சொரூபத்தைக் கீழ்ப்படுத்துத் தம்மாற் காட்டப்பட்ட விடயங்களின் அளவே அவ்வான்மாவுக்குக் காட்டி நிற்பனவாகலான் என ஏதுக்காட்டி நிறுவுவது, இவ்வெட்டாஞ்சூத்திரத்தின் மூன்றாம் அதிகரணமாகும். இந்திரியங்கள் அவ்வாறு தம்மாற் காட்டப்பட்ட விடயங் களையே காட்டி நிற்பனவாயின் இவ்விந்திரியங்கள் உள்ள போது இறைவன் குருவாய் வந்துணர்த்தினும் தன்னை யுணர்தல் இயலாதுபோலும் என ஐயுறுவாரை நோக்கித் தன்னையுணர்தற்கு உபாயம் கூறுவதாக அமைந்தது, 'பன்னிறங் காட்டும் படிகம் போல்' எனவரும் இவ்வுதாரண வெண்பாவாகும். "தன்னாற் சாரப்பட்ட பன்னிறங்களின் இயல்பே தன்பாற் காட்டி நிற்கும் பொதுவியல்புடைய படிகக்கல் போன்று, தன்னாற் சாரப்பட்ட இந்திரியங்களின் இயல்பையே சார்ந்ததன் வண்ணமாய்த் தன்மாட்டு விளக்கி நிற்கும் தனது பொதுவியல்பை முன்னர்ச் சிந்தித்தறிந்து கொண்டு பின்பு அந்நிறங்கள் படிகத்துக்கு வேறு என்று அறியுமாறுபோலப் பலவகையியல்புடைய பொதுவியல்பைச் செய்யும் ஐம்பொறிகளைத் தன்னின் வேறெனத் தெளிந்து அவற்றானாய பொதுவியல்பு பொய்யாயொழியுமாறு தனது சிறப்பியல்பை யுணர்ந்தானாயின் அவ் அசத்தாகிய பொறிகளுக்கு வேறாகிய சிவசத்தினது இயல்பு தன்னிடத்து விளங்கச் செய்யுமாகலின் அச்சிவசத்துக்கு அடிமையாவன்" என்பது இவ்வுதாரணவெண்பாவின் பொருளாகும். இவ்வெண்பாவிலுள்ள மெய்கண்டான் என்ற தொடர் மேற்குறித்த திருமந்திரத்திலுள்ள 'எங்கும் மெய்கண்டதே' என்ற தொடர்ப்பொருளைத் தன்னகத்துக்கொண்டுள்ளமை காணலாம்.

தேவர் முதலிய யாவராலும் அறிய வொண்ணாத சிவபரம்பொருள் மன்னுயிர்கட்கு அருள்புரிதல் வேண்டி ஆசிரியத் திருமேனி கொண்டு எழுந்தருளி வந்து உயிர்களைப் பாசப்பிணிப்பினை அகற்றி மெய்யுணர்வு அளித்தருளும் என்பது சிவநெறிச் செல்வர்களது

துணிபாகும். இக்கருத்து,

"குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென்பது குறித்தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே" (1581)

எனவரும் திருமந்திரத்தில் இடம் பெற்றுள்ளமை காணலாம். இவ்வுண்மையினை,

"அகளமா யாரும் அறிவரிதப் பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்ததென் றுந்தீபற" (திருவுந்தியார் 1)

எனவரும் பாடலில் திருவியலூர் உய்ய வந்த தேவநாயனார் விளக்கியுள்ளார். "தோற்றமில் காலமாகத் தூய்மைப் பொருளாய் எத்தகையோராலும் இன்னதன்மைத்தென அறியவொண்ணாததாய் உள்ள சிவமாகிய முழுமுதற் பொருள் நம் பொருட்டுத் திருமேனி கொண்டு குருவாக எழுந்தருளியது என்று உந்தி பறப்பாயாக. அறிதற்கரிய அம்முதற்பொருள் தானே வலியவந்து மெய்யுணர்வை வழங்கியருளியது என்று உந்தி பறப்பாயாக" என்பது இதன் பொருள். இதனை விரித்து விளக்கும் முறையில் அமைந்தது,

"அகளமயமாய் நின்ற அம்பலத்தெங்கூத்தன்
சகளமயம் போலுலகில் தங்கி - நிகளமாம்
ஆணவ மூல மலமகல ஆண்டான்காண்
மாணவ என்னுடனாய் வந்து" (4)

எனவரும் திருக்களிற்றுப்படியார் பாடலாகும். அகளம் - அருவம், என்றது, உயிர்க்குயிராய் நின்று அறிவிக்கும் பேரறிவினை. சகளம் - உருவம், என்றது, குருவாகி வந்து அறிவிக்கின்ற திருமேனியை, திருவுந்தியார் திருக்களிற்றுப் படியார் ஆகிய இவ்விரு நூல்களும் திருமூல நாயனார் அருளிய திருமந்திரத்திற் கூறப்படும் சிவாநுபவ வுண்மை களை விரித்துரைக்கும் அநுபூதி நூல்களாகும்.

திருவருள் ஞானம் பெற்ற நல்லுயிர்கள் தன்முனைப்பு

அற்றுச் சிவபரம்பொருளோடு பிரிவற ஒன்றிநிற்கும் பெற்றியினை விளக்குவது,

"வித்தினிலன்றி முளையில்லை யம்முளை
வித்தினிலன்றி வெளிப்படு மாறில்லை
வித்தும் முளையும் உடனன்றி வேறல்ல
அத்தன்மைத்தாகும் அரநெறி காணுமே" (1932,3192)

எனவரும் திருமந்திரமாகும்.

விதையினுள்ளே முளையென்று ஒருமுதல் வெளிப் படாது ஒன்றாய் அடங்கியிருத்தல் போன்று சிவஞானம் பெற்ற ஆன்மாக்களும் தாம் என்றதொரு முதன்மைகெடச் சிவபரம் பொருளிடத்திலே பிரிவற அடங்கியிருப்பார்கள் என்பது இதன் பொருளாகும். இதன் பொருளை விளக்கும் நிலையிலமைந்தது.

"வித்துமதன் அங்குரமும் போன்றிருக்கும் மெய்ஞ்ஞானம்
வித்துமதன் அங்குரமும் மெய்யுணரில் - வித்ததனிற்
காணாமை யாலதனைக் கைவிடுவர் கண்டவர்கள்
பேணாமை யாலற்றார் பேறு"

எனவரும் திருக்களிற்றுப்படியாராகும். "மெய்ப்பொரு ளாகிய இறைவனது திருவருள் ஞானம் விதையும் அதனிடத்தே முளைத்தெழுந்த முளையும் போன்று முறையே காரணமாகிய சிவம் மறைந்தும் காரியமாகிய ஞானம் வெளிப்பட்டும் இருக்கும். காரணமாகிய விதை யினையும் அதன் காரியமாகிய முளையினையும் மெய்ம்மை யாக உணருமிடத்து அம்முளையிடத்தே விதை வெளிப்படத் தோன்றாமையால் அவ்விதையின் உண்மையினையுணராது அதனை நெகிழவிடுவர் ஒருசாரார். வெளிப்பட விரிந்த முளையுண்மையைக் கண்டவர்களும் திருவருளாகிய அதனைப் பேணிப் போற்றாமையால் அதனாற் பெறுதற்குரிய சிவப்பேற்றை இழந்தவர்களாவர்" என்பது இதன் பொருளாகும். வித்து - விதை. அங்குரம் - முளை.

சைவ சித்தாந்தம் கூறும் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களின் இயல்பினை விளக்குவது,

"பதி பசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற் பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணுகாப் பசுபாசம்
பதியணுகிற் பசுபாசம் நிலாவே" (115)

எனவரும் திருமந்திரமாகும். "இறைவன், உயிர், தளை எனச் சொல்லப்படும் முப்பொருள்களுள் பதியாகிய இறையைப் போலவே உயிரும் தளையும் தோற்றமில் காலமாக உள்ள பொருள்களே. எனினும் பதியாகிய இறையைப் பசுவும் பாசமும் சென்று பற்றவல்லன அல்ல. பதியாகிய இறைவன் (உயிர்கள்மேல் வைத்த கருணையால்) அணுகுவானாயின் உயிரினிடத்துப் பசுத்துவமும் ஏனைப் பாசமும் நில்லாது நீங்குவனவாம்" என்பது இதன்பொருள்.

பதி - இறைவன். பசு - பாசத்தாற் பிணிக்கப்பட்டுள்ள உயிர். பாசம் என்பன உயிரின் அறிவை அனாதியே மறைத்துள்ள ஆணவம் கன்மம் மாயை என்னும் மூவகைப் பிணிப்புக்கள். அனாதி - இன்னகாலத்தில் தோன்றின எனத் தோற்றம் சொல்ல முடியாத காலம். பசு அறிவாகிய குறையுணர்வினாலும் பாச அறிவினாலும் தொடர வொண்ணாது அப்பாற்பட்டு விளக்குவதே பரம்பொருள் என்பது அறிவுறுத்துவார், 'பசு பாசம் பதியினைச் சென்று அணுகா' என்றார். இத்தொடரின் பொருளையே சிவஞானபோதம் ஒன்பதாஞ் சூத்திரத்து 'ஊனக்கண் பாசம் உணராப் பதியை' என்ற தொடரால் மெய்கண்டார் எடுத்தாண்டுள்ளார்.

இத்திருமந்திரப் பொருளைச் சிந்தித்து உணரும் முறையில் திருவதிகை மனவாசகம் கடந்தார் தம் ஆசிரியர் மெய்கண்ட தேவரை நோக்கி வினவும் முறையில் அமைந்தது,

"வாக்கு மனமிறந்த வான்கருணை யாளனுருத்
தாக்கறவே நிற்குந் தனிமுதல்வா - நீக்காப்
பதியினைப் போல் நித்தம் பசுபாசம் என்றாய்
கதியிடத்து மூன்றினையுங் காட்டு" (உண்மை. 49)

எனவரும் உண்மை விளக்கமாகும்.

"மனவாக்குக்களுக்கு எட்டாத அருளே வடிவாய் உலகத்திலே தோய்வற்று நிற்கும் ஒப்பற்ற தலைவனே, விட்டு நீங்காமல் இருக்கும் பதிப்பொருளைப்போல் பசுவும் பாசமும் நித்தியப்பொருள்களே என்று அருளிச் செய்தாய். முத்தியிலும் அம் மூன்று பொருள்களும் அழியாமல் நிற்கிற முறைமையை அடியேனுக்குக் காட்டியருள்வாயாக" என்பது இதன்பொருளாகும். இதன்கண் 'வாக்கு மனமிறந்த வான்கருணையாளன், உருத்தாக்கறவே நிற்குந் தனிமுதல்வா' என்பது, 'பசு பாசம் பதியினைச் சென்று அணுகா' என்ற இத் திருமந்திரத் தொடரையும், 'பதியினைப்போல் நித்தம் பசுபாசம் என்றாய்' என்பது 'பதிபசுபாசம் எனப் பகர் மூன்றிற் பதியினைப்போல் பசுபாசம் அனாதி' என்ற தொடரையும் அடியொற்றியமைந்த விளக்கமாகும்.

ஆன்மா தூலவுடம்பினை விட்டு நீங்கிச் செல்லு தற்குப் பாம்பு தன் சட்டையைக் கழற்றிப் புதியதொரு தோல் போர்த்துச் செல்லுதலும், புருடன் நனவுடம்பின் நீங்கிக் கனவுடம்பிற் செல்லுதலும், யோகிகள் தம் உடம்பு நீங்கி வேறோருடம்பிற் செல்லுதலும் உவமையாகும். இவ் வுண்மைகள்,

**"நாகமுடலுரிபோலும் நல்லண்டச**
**மாகநனாவிற் கனாமறந்தல்லது**
**போகலுமாகும் அரனருளாலேசென்**
**றேகுமிடஞ் சென்றிருபயனுண்ணுமே"** (2132)

**"உண்டு நரக சுவர்க்கத்தி லுள்ளன**
**கண்டு விடுஞ்சூக்கம் காரணமாச்செலப்**
**பண்டு தொடரப் பரகாய யோகிபோற்**
**பிண்ட மெடுக்கும் பிறப்பிறப்பெய்தியே"** (2133)

எனவரும் திருமந்திரப்பாடல்களில் இடம்பெற்றுள்ளமை காணலாம்.

குடம் உடைந்தவிடத்துக் குடஆகாயம் ஆகாயத் தொடு கூடுதல் என்றது, உயிர் சூக்குமவுடம்பை விட்டுச் செல்லுதற்கு உவமையாகும். இவ்வுவமைகளின் வேறு பாட்டினைப் புலப்படுத்தி உயிர் தூலம் சூக்குமம் ஆகிய

இருவேறுடம்புகளினின்றும் பிரிந்து செல்லுதலை விளக்குவதாக அமைந்தது,

> "அரவுதன் தோலுரிவும் அக்கனவும் வேறு
> பரகாயம் போய்வருமப் பண்பும் - பரவிற்
> குடாகாய ஆகாயக் கூத்தாட்டா மென்ப
> தடாதுள்ளம் போமாறது"
>
> (சிவஞானபோதம், வெண்பா 14)

எனவரும் சிவஞானபோத வெண்பாவாகும். உயிர் உடம்பை விட்டுப் போதற்கு இவ்விரு வேறு உவமைகள் ஆகமங்களிற் கூறப்படினும் அரவுதன் தோலுரிவு முதலியன தூல வுடம்பினை விட்டுப்போதற்கும் குடாகாயவுவமை சூக்கும வுடம்பை விட்டுப்போதற்கும் உவமையாக எடுத்தாளப் பெற்றன என இவற்றின் வேறுபாட்டினைத் தெளித்துணர்க என்பதாம்.

மாயையின் காரியமாய் உயிர்நிலைபெறுதற்கு இடனாகிய உடலினை 'மாயாபுரி' (திருமந்திரம் 2528) என்ற தொடரால் குறித்தார் திருமூலநாயனார். இத்திருமந்திரத் தொடரை யுளங்கொண்ட மெய்கண்டார் சிவஞானபோதம் மூன்றாஞ் சூத்திரத்தில் 'மாயாவியந்திரதனு' எனக் குறித்துள்ளார்.

உடம்பையே தான் என்று தவறாக எண்ணிக் கொண்டிருந்த நீ, குருவின் உபதேசத்தால் உயிராகிய நின்னை உடம்பின் வேறாக அறிவுடைப் பொருள் என்று தெரிந்து கொண்டாய் என மாணவனுக்கு அறிவுறுத்தும் முறையில் அமைந்தது,

> "உன்னை யறியாதுடலை முன்நானென்றாய்
> உன்னை யறிந்து துரியத் துறநின்றாய்" (2279)

எனவரும் திருமந்திரமாகும். இத்திருமந்திரத்தொடர்ப் பொருளை விளக்கும் முறையில் அமைந்தது,

> "எனதென்ற மாட்டின் எனதலா தென்னா
> துனதலா துன்கைகால் யாக்கை - எனதென்றும்

என்னறிவ தென்றும் உரைத்துநீ நிற்றிகாண்
என்னிலவை வேறாம் உணர்"
(சிவஞானபோதம் சூ. 3 அதி. 2)

எனவரும் வெண்பாவாகும். "அறிவு விளக்கம் பெறாத காலத்துப் பதி (ஊர்) மனைவி முதலிய புறப்பொருள்களைத் தனித்தனியே எனது எனது எனத் தற்கிழமைப் பொருள்களாகக் கூறிக்கொண்டு நின்றாற்போல, உனது அல்லாத உன்கை கால் உடம்புகளைத் தனித்தனியே எனது என்றும் அங்ஙனம் அறிந்த பாச அறிவினை என் அறிவு அது என்றும் தற்கிழமைப் பொருளாகக் கூறிக்கொண்டு நின்றாற்போல, நீ ஆன்மாவாகிய ஒரு பொருளாக வேறு நிற்கின்றாய். ஆராய்ந்து பார்ப்பாயாயின் அக் கை கால் முதலியன உயிராகிய உனக்கு வேறாவன என்று உணர்வாயாக" என்பது இதன் பொருளாகும். 'எனது உடல் என்றலின் ஆன்மா வுளது' என்னும் சிவஞானபோதம் மூன்றாஞ்சூத்திரம் இரண்டாம் அதிகரணத்திற்குரிய இவ்வெண்பா மேற்குறித்த திருமந்திரத்தொடர்ப் பொருளை இனிது விளக்கி நிற்றல் காணலாம்.

பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் அறியப்படுவதாய் ஒருநிலையில் நில்லாது அழிந்து மாறுந்தன்மையதாகிய பிரபஞ்சத்தை அசத்து எனவும், அழிவின்றி என்றும் உள்ளதாய்ப் பதிஞானம் ஒன்றினாலேயே அறியப்படும் முழுமுதற் கடவுளைச் சத்து எனவும் சிவசத்து எனவும், சத்தினைச் சார்ந்த நிலையிற் சத்தாகவும் அசத்தினைச் சார்ந்த நிலையில் அசத்தாகவும் நின்று சத்தும் அசத்துமாகிய அவ்விரு திறப்பொருள்களையும் அறியுந் தன்மைத்தாகிய ஆன்மாவைச் சதசத்து எனவும், அறிவேயுருவாகிய பரம் பொருளைச் சித்து எனவும் அறிவிலதாகிய பாசத்தை அசித்து எனவும் குறியிட்டு வழங்குதல் சைவசித்தாந்த நூன் மரபாகும்.

"சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்கண்டு
சித்தும் அசித்துஞ் சேர்வுறாமே நீத்த
சுத்தம் அசுத்தமும் தோய்வுறாமே நின்று
நித்தம் பரஞ்சுத்த சைவர்க்கு நேயமே" (1420)

"சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்கூடிச்
சித்தும் அசித்தும் சிவசத்ததாய் நிற்கும்
சுத்தம் அசுத்தம் தொடங்காத் துரியத்துச்
சுத்தரா மூன்றுடன் சொல்லற்ற வர்களே" (2328)

எனவரும் திருமந்திரப் பாடல்களில் மேற்குறித்த சைவ சித்தாந்தக் குறியீடுகளும் அவற்றின் விளக்கமும் இடம் பெற்றிருத்தல் காணலாம்.

மேற்குறித்த திருமூலர் திருமந்திரப் பாடல்களை யுளங்கொண்ட மெய்கண்டார், சத்தாவது இது, அசத்தாவது இது எனச் சத்தினையும் அசத்தினையும் வரையறுத்து உணர்த்தும் முறையிற் கூறியது,

"உணருரு அசத்தெனின் உணராதின்மையின்
இருதிறனல்லது சிவசத்தாமென
இரண்டு வகையின் இசைக்கும் மன்னுலகே" (சிவ.சூ. 6)

எனவரும் சிவஞானபோதம் ஆறாஞ்சூத்திரமாகும். உயிர்க்குயிராகிய பரம்பொருள் அளவைகளால் அறியப்படும் இயல்புடையதென்றால், அவ்வாறு அறியப்படும் உலகப்பொருள் போல அழிபொருளாய் முடியும் என்பார், 'உணர்உரு எனின் அசத்து' என்றார். அம்முதற்பொருள் எவ்வாற்றானும் அறியப்படாத பொருளென்றால் அது முயற்கோடு போல இல்பொருளாய் விடும் என்பார், 'உணராது எனின் இன்மையின்' என்றார். ஆதலால் உயிரறிவாற் சுட்டியறியப் படுதலும் ஒருவாற்றானும் அறியப்படாமையுமாகிய இவ்விரு பகுதியுமன்றிச் சுட்டுணர்வால் அறியப்படாமையும் சிவ ஞானத்தால் அறியப்படுதலும் ஆகிய இவ்விரண்டு வகையானும் சிவமாகிய சத்துப்பொருளாம் எனக்கூறுவர் மெய்யுணர்வில் நிலைபெற்ற சிவஞானிகள் என்பார், 'இருதிறன் அல்லது சிவசத்தாம் என இரண்டு வகையின் மன்னுலகு இசைக்கும்' என்றார் மெய்கண்டார். முதல்வனுக் குரிய சிறப்பிலக்கணம் கூறும் சிவஞானபோதம் ஆறாஞ் சூத்திரமாகிய இது,

"சத்தும் அசத்தும் எவ்வாறெனத் தானுன்னிச்
சித்தம் ஒடுக்கிச் சிவனருள் கைகாட்டப்

பத்தியின் ஞானம் பெறப்பணித் தானந்தச்
சத்தியில் இச்சைத் தருவோன் சற்சீடனே" (1697)

எனவரும் திருமந்திரப் பொருளையுளங்கொண்டு கூறியதாகும்.

"என்றும் மாறாதுள்ள மெய்ப்பொருளும் ஒருநிலையில் நில்லாது மாற்றமடையும் பொய்ப்பொருள்களும் எத்தன்மையன எனச் சிந்தித்துணர்ந்து, சித்தத்தை யுருகச் செய்து, சிவபெருமானது திருவருள் உய்யும் நெறியிதுவெனக் காட்டித் துணைசெய்ய, அம்முதல்வன் கைம்மாறு கருதாது செய்துவரும் உபகாரத்தை மறவாது கடைப்பிடித்துச் செய்யும் பேரன்பினாலே அதன் பயனாகிய சிவஞானம் கைவரப் பெறுதல் வேண்டி அம்முதல்வனைப் பணிந்து பேரானந்தத்தை வழங்கும் அம்முதல்வனது திருவருளிற் படிதற்குப் பெருவிருப்புடையோன் பரிபாகமுடைய நல்ல மாணாக்கனாவன்" என்பது இதன்பொருள்.

சத்து - சுட்டுணர்வால் அறியப்படாது சிவஞானம் ஒன்றினாலே அறிதற்குரியதாய் என்றும் மாறாதுள்ளதாகிய சிவம். அசத்து - சுட்டி அறியப்படுவதாய் அழியுந்தன்மையதாகிய உலகத்தொகுதி. சித்து - சித்தம், அம்முக்கெட்டுச் சித்து என நின்றது. உயிர்கட்கு ஞானத்தை நல்குவது தடையிலா ஞானமாகிய சிவசத்தியேயாதலின் ஞானம்பெற விழைவோன் சத்தியாகிய திருவருளைப் பெறுதற்குப் பெருவேட்கையுடையனாதல் வேண்டும் என்பார், 'சத்தியில் இச்சைத் தருவோன் சற்சீடனே' என்றார்.

ஆன்மா தானே எதனையும் தனித்து நின்று அறியும் அறிவுடையோன் அல்லன், ஆயினும் அறிவே இல்லாதவனும் அல்லன். தானே அறிய முயலும் அவ்வான்மாவின் அறிவு சத்துடனும் அசத்துடனும் கூடியறிவதானால் அவ்விருநிலையும் அரனாகிய சிவபெருமானது திருவருளாய் நின்று உதவிபுரிய ஆன்மாதானே அசத்தினைச் சார்ந்து அசத்தாய் அறிந்து பின் சத்தாகிய சிவத்துடன் கூடிச் சத்தாய் ஒன்றியுடனாம் என்று உணர்த்துவது,

"தானே அறியான், அறிவிலோன் தானல்லன்,
தானே அறிவான் அறிவுசத்து அசத்து என்று
ஆனால், இரண்டும் அரனருளாய் நிற்கத்
தானே யறிந்து சிவத்துடன் தங்குமே" (2329)

எனவரும் திருமந்திரமாகும். இதன்கண் 'தான்' என்றது ஆன்மாவை. உயிரிலக்கணம் உயர்த்துவதாகிய இத் திருமந்திரப் பொருளை அடியொற்றியமைந்தது,

"யாவையுஞ் சூனியம் சத்தெதிராகலிற்
சத்தே அறியாது, அசத்துஇலது அறியாது
இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா"

எனவரும் சிவஞானபோத ஏழாஞ்சூத்திரமாகும். "மாற்றம் மனங்கடந்த சிவத்தின் முன்னிலையில் உணருருவாகிய அசத்துப் பொருள்கள் யாவும் இப்பொருள்போற்பாழாம் ஆதலின் சத்தாகிய சிவம் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறிந்து நுகராது; அசத்துப் பொருளாகிய பிரபஞ்சம் அறிவில்லாத சடமாகலின் சிவத்தை அறிதல் செய்யாது. ஆதலால் (சொல்லொதொழிந்ததனால் உணரப்படுவதாகிய) பாரிசேட அளவையால் 'இருதிறனறிவுளது' உண்டென்பது பெறப் படுதலின் அதுவே சத்தாதற்றன்மையும் அசத்தாதற் றன்மையும் ஆகிய இரண்டுமின்றிச் சதசத்தாயுள்ள உயிராகும்" என்பது இச்சூத்திரத்தின் பொருளாகும். "இரண்டலா ஆன்மா இருதிறன் அறிவுளது என்றது, சத்தெதிர்நில்லாத அசத்தும் சத்தும் தம்முள் ஒன்றாய் நின்று அறியப்படாமையான் இருதிறனறிவுளது இரண்டலா ஆன்மாவேயாம், தம்முள் ஒன்றானொன்று அநுபவிக்கப் படாத ஞாயிற்றையும் விடயத்தையும் அநுபவிக்கும் கண்போலும் என அநுமானங்கூறிக் காண்க" என விளக்குவர் சிவஞானமுனிவர்.

"ஆன்மாவாகிய தான் என்றும் முதல்வனாகிய அவன் என்றும் சித்துப்பொருள் இரண்டென்பர் அறிஞர். தான் என்றும் அவனென்றும் பிரித்துணராதவாறு உயிரோடு முதல்வனுக்குள்ள அத்துவிதத்தொடர்பினையெண்ணித் தான் அவன் எனச் சிந்தித்துணரமாட்டார் கேவலநிலையில்

உள்ள ஆன்மாக்கள். ஆன்மா தான் என்னும் ஆன்மபோதம் இல்லையாக அவனே தானாக அடங்கிநிற்கும் நிலையே உயிர்களின் சுத்தாவத்தையாகும்" எனவுணர்த்துவது,

"தானென்றவ னென்றிரண் டென்பர் தத்துவம்
தானென்றவ னென்றிரண் டற்ற தன்மையைத்
தானென் றிரண்டுன்னார் கேவலத் தானவர்
தானின்றித் தானாகத் தத்துவ சுத்தமே" (2348)

எனவரும் திருமந்திரமாகும். இதன் நான்காமடியில் 'தானின்றி' என்பதிலுள்ள 'தான்' என்பது ஆன்ம போதத்தையும், 'தானாக' என்பதிலுள்ள 'தான்' என்பது முதல்வனாகிய அவனையும் குறித்து நின்றன.

ஆன்மாவாகிய தான் என்றும் முதல்வனாகிய அவன் என்றும் கூறப்படும் உண்மைப் பொருள்களுள் தான் அவன் என்னும் இரண்டினையும் ஆன்மாவாகிய தனக்குள்ளே கண்டு தான் என்ற சொல்லப்படும் ஆன்மாவாகிய பூவை முதல்வனாகிய அவனது திருவடியிற் சாத்தினால் அவ்வான்மா இரண்டறச் சிவத்துடன் கூடி ஒன்றாவதல்லது அந்நிலையில் நான் என்றும் அவனென்றும் பிரித்துணர முற்படுதல் வீடுபேறாகிய நற்பயனைத் தராது என அறிவுறுத்துவது,

"தானென் றவனென் றிரண்டாகுந் தத்துவம்
நானென் றவனென் றிரண்டுந் தனிற்கண்டு
தானென்ற பூவை யவனடி சாத்தினால்
நானென் றவனென்கை நல்லதொன்றன்றே" (1607)

எனவரும் திருமந்திரம் ஆகும்.

"அவனே தானே ஆகிய அந்நெறி
ஏக னாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே"

எனவரும் சிவஞானபோதம் பத்தாஞ் சூத்திரமாகும். "உயிர்க்குயிராகிய இறைவன், ஆன்மாக்கள் பாசப் பிணிப்புட்பட்ட கட்டுநிலையில் தான் என வேறு

தோன்றாது அவ்வான்மாவாய் ஒற்றித்து உயிர்க்குள் அடங்கி நின்றாற் போலப் பாசப்பிணிப்பின் நீங்கிச் சுத்தனாகிய ஆன்மா தன்முனைப்பற்று முதல்வனோடு அடங்கித் தன் செயலற அம்முதல்வன் செயல்வழி ஒழுகவே மலம் மாயை என்ற இரண்டினோடு வலிய கன்மமும் இல்லையா யொழியும்" என்பது இதன்பொருள்.

"தானென்ற வனென் றிரண்டுந் தனிற்கண்டு
தானென்ற பூவை அவனடி சாத்தினால்" (1607)

எனவரும் திருமந்திரத் தொடரைப் பின்பற்றியமைந்தது,

"தம்மிற் சிவலிங்கம் கண்டதனைத் தாம்வணங்கித்
தம்மன்பால் மஞ்சனநீர் தாமாட்டித் - தம்மையொரு
பூவாகப் பூவழியா மற்கொடுத்துப் பூசித்தால்
ஓவாமை யன்றே யுளன்" (44)

எனவரும் திருக்களிற்றுப்படியாராகும்.

ஞானகுரு தரிசனத்தால் உண்டாகும் பயன் இதுவென உணர்த்துவது,

"கருடன் உருவங் கருது மளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவின் உருவங் குறித்தஅப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே" (2659)

எனவரும் திருமந்திரமாகும். "மந்திரவுருவினதாகிய கருடனது வடிவினை மாந்திரிகன் தனது வடிவாக ஒன்றித் தியானிக்கு மளவிற் பெரிய நஞ்சு தீர்ந்து மரணபயங் கெட்டொழியுமாறு போன்று, குருவின் திருமேனியைக் கண்டு தியானித்த அப்பொழுதே மும்மலவழுக்கு தன்னை விட்டு நீங்க அம்மாணவன் சிவமாந்தன்மையினையடைந்து இன்புறுவன்" என்பது இதன்பொருளாகும்.

கருட தியானத்தால் விடம் நீங்க மரணபயந்தவிர்தல் போன்று குருவைத் தரிசித்துச் சிவமாகத் தியானிக்கும் பாவகத்தால் மும்மலம் நீங்கச், சிவனுடன் அத்துவிதமாந்

தன்மையைப் பெறுவன் என்பதாம். ஆதிபௌதிகம், ஆதி தைவிகம், ஆதியான்மிகம் எனக் கருடன் மூவகைப்படும். உலகத்திற் காணப்படும் கருடன் ஆதிபௌதிக கருடன். அதற்கு அதி தெய்வமாய் மாந்திரிகன் உள்ளத்தில் அதுபோல் வைத்துத் தியானிக்கப்படும் மந்திரவுருவாகிய கருடன் ஆதிதைவிக கருடன். அம்மந்திர உருவமே தானாகத் தன்னறிவு அதன் வயத்ததாம்படி உறைத்து நிற்குமாறு ஒன்றித் தியானிக்கும் பாவனை கருட பாவனை எனப்படும் அம்மந்திரம் இடமாக நின்று மாந்திரிகனுக்குப் பயன் கொடுப்பதாகிய சிவசத்தி ஆதியான்மிக கருடன் எனப்படும். சுட்டியறியப்பட்ட பிரபஞ்சத்தை, 'இது மெய்ப்பொரு ளன்று, இது மெய்ப்பொருளன்று' என இவ்வாறு ஒவ்வொன்றாக வைத்து நோக்கி இது மெய்ப்பொருளன்று எனக் கழித்து நீக்கி, அவ்வாறு கண்டு நீங்கிய ஆன்மாவாகிய தன்னறிவின் கண்ணே சுட்டுணர்வின்றி நின்ற கடவுளை யாராய்ந்து, 'அது நானானேன்' என்று ஒருவன் பாவிப்பானாயின், அப்பாவனையால் வேறன்றியுடனாய் விளங்கித் தோன்றும் முதல்வனது அருளால், தொன்மையே கூடிநின்ற தனது பொதுவியல்பைத் தான் விட்டு நீங்க வல்லனாவன். இவ்வாறு உயிர் தன்னுடன் வேறன்றித் தோன்றும் முதல்வனது அருளால், தான் பாசப்பிணிப்பி னின்றும் நீங்குதல், ஒள்ளிய கருட தியானத்தில் விளங்கித் தோன்றும் கருடனால் தியானிப்போனாகிய பாவகன் பாம்பின் விடத்தைத் தீர்த்துக் கொள்ளுமாறு போலாம்" என விளக்குவது,

> "கண்டத்தை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தாய்
> அண்டனை ஆன்மாவில் ஆய்ந்துணரப் - பண்டணைந்த
> ஊனத்தைத் தான்விடுமாறுத்தமனின் ஒண்கருட
> சானத்தில் தீர்விடம்போல் தான்"
>
> (சிவஞானபோதம் சூ. அதி. 2)

எனவரும் சிவஞானபோத உதாரணவெண்பாவாகும். சானம்- தியானம், வடமொழிச் சிதைவு. இவ்வெண்பா மேற்குறித்த திருமூலர் வாய்மொழியை அடியொற்றி யமைந்ததாகும்.

ஆன்மா, சிவனுக்கு உடைமையாதலை அஞ்செழுத்து உச்சரிக்கும் முறையில் வைத்து நோக்கித் தன் உடம்பினுள்ளே இதயம் பூசைத்தானமாகவும், உந்தி ஓமத் தானமாகவும் புருவநடு தியானத்தானமாகவும் கொண்டு புறம்பே பூசை செய்யும் முறைப்படி உள்ளத்தாமரையில் திருவைந்தெழுத்தாகிய திருமேனியில் அம்முதல்வனைத் தியானித்து, கொல்லாமை, ஐம்பொறியடக்கம், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் எண்வகை மலர்களால் அருச்சித்து, அத்திருமந்திரத்தினாலே, குண்டலித்தானமாகிய உந்தியிலே ஞான அனலையெழுப்பி, அதன்கண் விந்துத்தானத்து அமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனைநாடி இடைநாடியாகிய சுருக்குசுருவங்களால் சொரிந்து ஓமஞ்செய்து, விந்துத் தானமாகிய புருவநடுவிலே சிகாரயகார வகாரங்கள் மூன்றும் முறையே அதுவெனும் (தற்பதப்) பொருளும், நீயெனும் (துவம்பதப்) பொருளும், ஆகின்றாய் எனும் (அசிபதப்) பொருளும் ஆம்முறைநோக்கி அதனால் சிவோகம் பாவனை செய்வானாயின் அப் பாவனைக்கண் முதல்வன் விளங்கித் தோன்றுவன். அங்ஙனம் பாவிப்பவன் ஆண்டான் அடிமைத்திறத்தால் இறைவனும் அடிமையானவன். இவ்வுண்மையினை அறிவுறுத்துவது,

"அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தால் அர்ச்சித் திதயத்தில் - அஞ்செழுத்தால்
குண்டலியிற் செய்தோமம் கோதண்டஞ் சானிக்கில்
அண்டனாம் சேடனாம் அங்கு"

(சிவஞானபோதம், வெண்பா 59)

எனவரும் பாடலாகும். இறைவனைத் திருவைந்தெழுத்தின் துணையால் புருவத்தின் இடைவெளியாகிய விந்துத் தானத்திற் கண்டு வழிபடும் இம்முறை,

"நெற்றிக்கு நேரே புருவத்திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க வொளிவிடுமந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமனிருந்திடம்
சிற்றம்பலமென்று சேர்ந்து கொண்டேனே" (2770)

என முன்னர்க் காட்டிய திருமந்திரப் பாடலில் விளக்கப்

பெற்றுள்ளமை காணலாம்.

நெல்லுக்குத் தவிடும் உமியும் அநாதியாயிருந்தும் ஒருகாலத்திலே நீங்குந் தன்மைபோல, உயிர்களுக்கு மலம்மாயை கன்மம் என்னும் மும்மலங்களும் தொன்மையே யுள்ளன என்றும், அவை தத்தம் காரியத்தைச் செய்தல் முதல்வனது ஆணையால் என்றும், வீடுபெற்ற உயிர்களிடத்தில் அவை இல்லாதொழியினும் பாசப் பிணிப்புடைய உயிர்களிடத்திலே அம்மலங்கள் நீங்காது நிற்றலால் அவற்றின் உண்மைத் தன்மைக்கு அழிவில்லை யென்றும் அறிவுறுத்துவது,

> "நெல்லிற் குமியும் நிகழ்செம் பினிற்களிம்பும்
> சொல்லிற் புதிதன்று தொன்மையே - வல்லி
> மலகன்மம் அன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்
> அலர்சோகஞ் செய்கமலத் தாம்"
>
> (சிவஞானபோதம் சூத். 2 அதி. 2)

எனவரும் வெண்பாவாகும். "நெல்லின்கண் உமியும், செம்பின்கண் களிம்பும் எக்காலத்து உளவாயின என்று ஆராய்ந்து சொல்லுங்கால் அந்நெல்லும் செம்பும் உளவாயின அன்றே அவையுள்ளனவன்றி இடையேவந்தன அல்ல எனல் வேண்டும். அதுபோல மாயை, ஆணவம், கன்மம் என்னும் மும்மலங்களும் அநாதியேயுள்ளனவாம். முன்னேயுளதாகிய தாமரைப்பூ மலர்தலும் குவிதலும் கதிரவனாற் செய்யப்படுமாறு போல அவை தத்தங் காரியங்களைச் செய்தல் இறைவனது முன்னிலையினானே யாகும்" என்பது இதன் பொருளாகும். மாயை இறைவனுக்கு வைப்புச் சத்தியாதலால் வல்லி என்றார். மலம் - ஆணவம். சகசமலமாகிய ஆணவத்தின் இயல்பினை விளக்குவார் 'நிகழ் செம்பினிற் களிம்பு' என்றார். ஆணவமலமானது செம்பின் வெட்டுவாய் தோறும் கலந்துள்ள களிம்பினைப் போன்று அநாதியே உயிருடன் விரவி அதன் அறிவைத் தடைசெய்து நிற்றலின் அது 'களிம்பு' என்ற பெயராலும் வழங்கப்படும்.

'களிம்பறுத்தான் எங்கள் கண்ணுதல் நந்தி' (114) என வரும் திருமந்திரம் இப்பெயர் வழக்கத்தினை நன்கு

புலப்படுத்துவதாகும்.

"மூலமலத்தின் காரியம் மோகம், மதம் முதலாயின. இருவினையின் காரியம் இன்பதுன்பம் முதலாயின. மாயையின் காரியம் தனுகரணம் முதலாயின. 'வள்ளலால் ஆம்' எனவே திரோதான சத்தியது உண்மையும் பெற்றாம். அது, பாகம் வருவித்தற் பொருட்டு மலத்தின்வழி நின்று மோகம் முதலியவற்றைத் தொழிற்படுத்துவதாகிய சிவ சங்கற்பத்திற்கு ஏதுவாதல் பற்றி, மலம் என்று உபசரித்துக் கூறப்படும். இவ்வாறு மலம், கன்மம், மாயை, திரோதானம், மாயாகாரியம் என்னும் ஐவகைப் பாசமுங் கண்டுகொள்க" என விளக்குவர் சிவஞானமுனிவர்.

ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களுடன் ஆணவமலத்தைப் பரிபாகஞ் செய்யும் இறைவனது சத்தியாகிய திரோதான சத்தியையும் மாயையின் காரியங்க ளாகிய மாயேயத்தையும் சேர்த்து மலம் ஐந்து எனக் கூறும் மரவு திருமூலநாயனார் காலத்திலேயே நிலைபெற்றிருந்த தென்பது, 'மாறா மலம் ஐந்தால்' (திருமந்திரம் 2160) எனவும், 'நேரா மலம் ஐந்து' (திருமந்திரம் 2166) எனவும், 'வணங்கிடும் ஐம்மலம்' (திருமந்திரம் 2177) எனவும் 'ஐம்மலந் தான்விட்டு' (திருமந்திரம் 2207) எனவும், 'ஒத்துறுபாசம் மலம் ஐந்தோடாறாறு, தத்துவபேதம்' (திருமந்திரம் 2211) எனவும், 'நந்திபராவத்தை நாடச் சுடர்முனம், அந்தியிருள் போலும் ஐம்மலமாறுமே' (திருமந்திரம் 2293) எனவும் வரும் திருமந்திரப் பாடல்களால் இனிது புலனாகும். இங்குக் குறித்த ஐவகைமலங்களையும் விரித்து விளக்கும் முறையில் அமைந்தது,

"மோகமிக உயிர்கள்தொறும் உடனாய்நிற்கும்
மூல ஆணவம் ஒன்று, முயங்கி நின்று
பாகமிகவுதவு திரோதாயி ஒன்று
பகர்மாயை ஒன்று, படர்கன்மம் ஒன்று
தேகமுறு கரணமொடு புவனபோகச்
செயலாருமாமாயைத் திரட்சி ஒன்றென் (று)
ஆகமலம் ஐந்தென்பர், ஐந்தும் மாறா
தருளென்ப தரிதென்பர் அறிந்துளோரே" (32)

எனவரும் சிவப்பிரகாசச் செய்யுளாகும்.

ஆன்மா மலம் நசித்து இறைவனைச் சேர்ந்து இரண்டற்று ஒன்றும் முறையினை உணர்த்துவது,

"அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற்றுருச் செய்த அவ்வுரு
அப்பினிற் கூடிய தொன்றாகுமாறு போற்
செப்பினிற் சீவன் சிவத்துள் அடங்குமே" (136)

எனவரும் திருமந்திரமாகும். "(கடலிடத்தேயுள்ள) நீரின் மிகுந்த உவர்ப்பானது, கதிரவனது வெப்பத்தால் உப்பு எனப் பேர்பெற்று உருக்கொண்ட அது, மீண்டும் நீரிற்கலந்தபோது நீரேயாகுமாறு போல, முடிவாகச் சொல்லுமிடத்து ஆன்மா சிவத்துள் அடங்கும்" என்பது இதன்பொருள்.

அப்பு - நீர். கூர்மை - கடல் நீரிலுள் கரிப்புத்தன்மை,. நீரிடத்தே பொருந்தியுள்ள கரிப்புத் தன்மை கதிரவன் வெப்பத்தால் வேறு பிரிக்கப்பட்டு உப்பு என உருக்கொண்ட அது, மீண்டும் தண்ணீருடன் கூடியவழி அதனுடன் பிரிவின்றி அடங்குமாறு போலப் பாசத்தாற் பிணிக்கப் பட்டுள்ள கட்டு நிலையில் இறைவனது விரிவினில் பொதுவாக அடங்கிக்கிடந்த ஆன்மா, பாசப்பிணிப்பற்று வீட்டுநிலையில் சிறப்புநிலையிற் சிவத்துள் அடங்கி யொன்றாகும் என்பது இதன்பொருள்.

'அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால் உப்பெனப் பேர்பெற்று உருச் செய்த அவ்வுரு' என்பது, இறைவனருளால் உயிர் கருவி·கரணங்களைப் பெற்று உப்புடன் கூடிய நிலையையும், 'அவ்வுரு அப்பினிற் கூடிய தொன்றாதல்' என்பது மும்மலப் பிணிப்பின் நீங்கிய முத்தி நிலையையும் குறித்தற்கு அமைந்த உவமைகளாகும்.

பூரண அறிவு விளங்கி ஆன்மா இறைவன்வசமாய் ஒன்றுபட்டுக் கூடுங்கால், பண்டைய ஏகதேச அறிவுகெட்டுக் கூடுமோ? அன்றிக் கெடாது கூடுமோ? என ஐயந் தோன்றுதல் இயல்பே. ஏகதேச அறிவு கெட்டு இறைவனைக் கூடுமென்றால், அறிவாகிய உயிர்க்குணங்

கெடவே ஆன்மாவாகிய குணியும் கெடும் எனப்பட்டு அங்கு இருபொருள் ஒன்றாய்க் கூடியதென்றல் இயலாது. ஏகதேச அறிவு கெடாது கூடுமென்றால், ஏகதேச அறிவுகெடாத வழி வியாபகப் பொருள் விளங்குதலின்மையால் அவ்விரண்டும் ஒன்றாகக் கூடுமாறில்லை. மற்று எவ்வாறு கூடுமெனின், ஏகதேச அறிவினைச் செய்யும் ஆணவம் கன்மம் மாயை என்னும் மலங்கள் மட்டும் கெட்டொழியத் தண்ணீரைச் சேர்ந்த உப்புப்போல ஆன்மா இறைவன் திருவடியைத் தலைப்பட்டு இறைவனுக்கு அடிமையாம். அந்நிலையில் இறைவனது திருவடி உயிரைத் தன்து வியாபகத்துள் அடக்கிக் கொள்ளும் என அறிவுறுத்துவார், 'உப்பெனப் பேர்பெற்றுருச் செய்த அவ்வுரு, அப்பினிற் கூடிய தொன்றாகு மாறு போல், செப்பினிற் சீவன் சிவத்துள் அடங்குமே' என அருளிச் செய்தார் திருமூலநாயனார்.

இத்திருமந்திரப் பொருளை விரித்து விளக்கும் முறையில் அமைந்தது,

> **"நசித்தொன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்றா**
> **நசித்திலதேல் ஒன்றாவதில்லை - நசித்துமலம்**
> **அப்பணைந்த உப்பின் உளமணைந்து சேடமாம்**
> **கப்பின்றாம் ஈசன் கழல்"** (சிவ. 11 அதி. 2)

எனவரும் சிவஞான போத உதாரணவெண்பாவாகும்.

"அரன்கழல் செல்லுங்கால் ஆன்மா சகசமலங் கெட்டு ஒன்றுமோ கெடாதொன்றுமோ என வினவி னார்க்குக் கெட்டு ஒன்றும் என்றால் ஆன்மாவும் கெடு மாதலால் அவ்விடத்து ஒன்றமாட்டாது. சகசமலங் கெடாதாயின் ஆன்மாவும் சிவமும் இருபொருளாய் ஒன்றாமாறு இல்லை. ஆதலால் அருத்தாபத்தியளவையால் உப்பு தனது கடினத் தன்மை நீங்கி நீரின் ஒன்றாமாறுபோல ஆன்மாவும் தனது சகசமலம் கெட்டொழிய அரன்கழலை யொன்றி அதற்கு அடிமையாம். அங்ஙனம் அடிமைத் திறத்தால் ஒன்றாகிய ஆன்மாவுக்கு மீளப்பிரிதல் இல்லை" என்பது இதன்பொருளாகும்.

தன் கண்ணதாகிய கடினகுணம் நீங்கி நீரினைச்-

சேர்ந்து ஒன்றாகிய உப்பு, ஆன்மா மலம் நசித்து இறைவன் கழலில் ஒன்றுபடுதல் மாத்திரைக்கு உவமையாயிற்று. மலம் நசித்தலாவது ஆணவமலம் தனது மறைத்தற்சத்தி மடங்கிக் கீழ்ப்படுதல் மாத்திரையே பிறிதன்று என்பது,

"பொன்வாள்முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே யெங்குமாந்தன்மைபோல்"
(சிவ. சூ. 11 அதி. 2 வெண்பா 73)

என்னும் உவமையாற் புலனாம். இருபொருள் ஒன்றாய்க் கலந்து ஒன்றினுள் ஒன்று அடங்கி இரண்டுங்கெடாது ஒன்றாய்த் தோன்றுதற்கு அப்பணைந்த (நீரொடுகலந்த) உப்பு உவமை. பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களும் வியாபக வியாப்பியங்களாய் (விரிவும் விரிவின் அடங்கியனவுமாய்) நிற்கும் முறைமைக்குத் 'தண்கடல் நீர் உப்புப் போல்' என உவமை கூறுவர் மெய்கண்டார். உப்பானது தண்ணீரொடு கலத்தலன்றிக் கடலாகிய வெளியுடன் விரவாமைபோலப் பாசமும் ஆன்மாவாகிய பசுவைச் சார்தலன்றிக் கடவுளாகிய பதியைச் சார்தல் இல்லையென்பது இவ்வுவமையாற் புலனாகும். அறிவிற் சிறந்தோரும் அறிவற்று அயர்வோரும் ஆகிய இவர்கட்குஅன்றி, அறிவும் அறியாமையும் ஒருங்குடையார்க்குப் பயன்படும் நோக்கத்துடனேயே ஆசிரியர்கள் அறிவுநூல்களை அறிவுறுத்தியருள்வர் என்பது,

"அறிவிக்க வேண்டாம் அறிவற் றயர்வோர்க்கும்
அறிவிக்க வேண்டாம் அறிவிற் செறிவோர்க்கும்
அறிவுற் றறியாமை யெய்திநிற் போர்க்கே
அறிவிக்கத் தம்மறி வாரறி வோரே" (2327)

எனவரும் திருமந்திரமாகும். இத்திருமந்திரப் பொருளை அடியொற்றியமைந்தது,

"போதமிகுத் தோர்தொகுத்த பேதை மைக்கே
பொருந்தினோர் இவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல
ஏதுநெறி எனும்அவர்கட் கறிய முன்னாள்
இறைவன் அருள் நந்திதனக்கியம்ப"
(சித்தியார், ப்ரபக்கம்.10)

எனவரும் சிவஞானசித்தியார் திருவிருத்தமாகும்.

திருமூலநாயனார் திருமந்திரம் திருக்கூத்துத் தரிசனப் பகுதியில்,

"தேவர்கள் தானவர் சித்தர்வித்தி யாதரர்
மூவர்களாதி முப்பத்து மூவர்கள்
தாபதர் சத்தர் சமயஞ் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்மிறை யாடவே" (2731)

"தத்துவ மாடச் சதாசிவந் தானாடச்
சித்தமு மாடச் சிவத்தி தானாட
வைத்த சராசரமாட மறையாட
அத்தனு மாடினான் ஆனந்தக் கூத்தே" (2789)

எனவரும் திருப்பாடல்களில் இறைவன் திருவருளால் தாம்கண்டு மகிழ்ந்த ஆனந்தத் திருக்கூத்தின் இயல்பினைக் குறித்துள்ளமை காணலாம். இத்திருமந்திரப் பாடல்களை அடியொற்றிய கடவுள் வாழ்த்துப் பாடலாக அமைந்தது,

"ஆதிநடு அந்தமிலா அளவில் சோதி
அருண்ஞான மூர்த்தியாய் அகிலம் ஈன்ற
மாதினையும் ஒருபாகத் தடக்கி வானோர்
மகுட சூடாமணியாய் வையம்போற்றும்
பாதிமதியணி பவளச் சடைகள் தாழப்
படரொளியம் பலத்தாடும் பரனார் பாதத்
தாதுமலி தாமரைகள் சிரத்தே வைத்துத்
தளராத பேரன்பு வளரா நிற்பாம்"

(சித்தியார், பரபக்கம் 1)

எனவரும் சிவஞான சித்தியார் திருவிருத்தமாகும். "திருவம்பலத்து நிருத்தம் பண்ணுகையாவது, பூமிக்குச் சுழுமுனை நாடி சிதம்பரம் ஆதலால் அதில் ஆடுகை. அஜபாஸ்வர இபமாம் இரண்டக்கரமாகிய திருவடிகளால் ஆடுவதனால் உலகத்திற்கு உயிருமாய் நிற்பன் என்பது கருத்து. உயிர்களுக்குப் பலமாயிருப்பன் என்பது அஷ்ட மூர்த்தி வடிவாதலால். 'தானாடத் தசையாடும்' என்னும் பழ வார்த்தையும் இதனை நோக்கி எனக் கொள்க" என

விளக்கங்கூறுவர் சிவாக்கிரயோகியார்.

இறைவன் புறத்தே திருக்கோயிலுள் இருக்குந் திருமேனியும், நேயமலிந்த அடியார்களாகிய திருவேடமும் ஆதாரமாகக் கொண்டு நின்றும், அகத்தே உயிரை இடமாகக் கொண்டு நின்றும், இங்குள்ளார் செய்யும் பூசையினை ஏற்றருள்கின்றான் என்பது,

"தாபரத் துண்ணின் றருளவல் லான்சிவன்
மாபரத் துண்மை வழிபடு வாரில்லை
மாபரத் துண்மை வழிபடு வாளர்க்குப்
பூவகத் துண்ணின்ற பொற்கொடி யாமே" (1717)

"படமாடக் கோயிற் பகவற்கொன் றீயின்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடக் கோயிற் பகவற்க தாமே" (1857)

எனவரும் திருமந்திரப் பாடல்களால் அறியலாம். இவற்றை அடியொற்றி யமைந்தது,

"தாவர சங்கமங்கள் என்றிரண்டுருவில் நின்று
மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருணைவைப்பன்"
(118)

எனவரும் சிவஞான சித்தியார் திருவிருத்தமாகும்.

ஆன்மா அரசும் அமைச்சரும் போல அந்தக்கரணம் முதலிய மாயா கருவிகளைப் பற்றி உடன் நின்று அறியுங்கால் அரசன் போல் அவற்றுள் பலவற்றை விட்டுவிட்டுச் சென்று ஐவகை அவத்தைகளை (உணர்வுநிலைகளை) அடைவதாகும். அந்நிலையில் நனவு நிலையாகிய சாக்கிரத்தில் நுதல் இடமாக முப்பந்தைந்து கருவிகளும், கனவுநிலையில் கண்டம் இடமாக இருபத்தைந்து கருவிகளும், உறக்க நிலையில் நெஞ்சம் இடமாக மூன்று கருவிகளும், பேருறக்க நிலையில் கொப்பூழ் இடமாக இரண்டு கருவிகளும், துரியாதீதம் எனப்படும் உயிர்ப்படக்க நிலையில் மூலம் இடமாக ஒருகருவியும் நிற்கும் என்பர். உயிர் கருவிகளோடு

கூடி அறியும் நிலையில் உள்ள உணர்வு நிலைகளாகிய ஐந்து அவத்தைகளிலும் தொழிற்படுங் கருவிகளை

> "முப்பதோ டைந்தாய் முதல்விட்டங் கையைந்தாய்
> செப்பதின் மூன்றாய்த் திகழ்ந்திரண் டொன்றதாய்
> இப்பதி நின்ற இயல்பை யறிந்தவர்
> அப்பதி நின்றமை ஆய்ந்துகொள் ளீரே" (2143)

எனவரும் திருமந்திரத்தில் திருமூலர் தொகைப்படுத்திக் கூறியுள்ளார். இத்திருமந்திரப்பாடலை அடியொற்றி யமைந்தது

> "ஒன்றணையா மூலத் துயிரணையும் நாபியினில்
> சென்றணையும் சித்தம் இதயத்து - மன்றவே
> ஐயைந்தாம் நன்னுதலிற் கண்டத்தின் வாக்காதி
> மெய்யாதி விட்டகன்று வேறு" (வெண்பா 28)

எனவரும் சிவஞான போத உதாரண வெண்பாவாகும்.

"சாக்கிரத்தானம் எனப்படும் நெற்றியிலே ஞானேந்திரியம் கன்மேந்திரியம் எனப்படும் புற இந்திரியங்கள் பத்துடன் பொருந்திய இருபத்தைந்து கருவிகள் தொழிற்படும். சொப்பனத்தானம் எனப்படும் கண்டத்தில் மேற்கூறிய புறஇந்திரியம் பத்தும் நீங்கலாக இருபத்தைந்து கருவிகள் தொழிற்படும். சுழுத்தித் தானமாகிய இதயத்தின் கண்ணே முற்கூறியவற்றுள் இருபத்திரண்டு கருவிகளை விட்டு நீங்கி, சித்தம், புருட தத்துவம், பிராணவாயு ஆகிய மூன்று கருவிகள் தொழிற் படும். துரியத்தானமெனப்படும் உந்தியிலே புருடதத்துவத் தோடு பிராணவாயு என்னும் இரண்டுமே தொழிற்படும். இக்கருவிகள் ஒன்றும் அணையாத அதீதத் தானமெனப் படும் மூலாதாரத்திலே புருடன் ஒன்றுமே தொழிற்படும்.

தாம்கூடியும் குறைந்தும் வருதலால் ஆன்மா ஐவகை அவத்தையுறுதற்குக் காரணமாகிய முப்பத்தைந்து கருவிகளாவன. ஞானேந்திரியம் கன்மேந்திரியம் ஆகிய புற இந்திரியம் பத்தும், அவற்றிற்குரிய விடயங்கள் பத்தும், அவற்றினுக்கு உட்கருவியாகிய அந்தக் கரணங்கள் நான்கும்,

அவற்றோடுகூடி அவத்தையுறுவதாகிய புருடன் ஒன்றும், அங்ஙனம் ஆன்மா ஐவகை உணர்வுநிலைகளை அடைதற் குரிய வன்மைக்கு ஏதுவாய், அகங்காரத்தாற் செலுத்தப்படும் பிராணன் முதலிய வாயுக்கள் பத்தும் என இவை.

உயிரானது மேற்குறித்த உணர்வு நிலைகளாகிய காரிய அவத்தைகளை அடைதற்குக் காரணமாக உள்ளவை கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று நிலைகளாகும். இம்மூன்றையும், 'காரணாவத்தை' என வழங்குதல் மரபு. இவற்றுள் 'கேவலம்' என்பது உயிர் தனக்குரிய விழைவு, அறிவு, செயல் என்பவற்றின் நிகழ்ச்சி சிறிதும் இன்றி, மாயேயமாகிய கருவிகளைப் பெறாது தனித்துத் தன்னளவில் நிற்கும் நிலையாகும். 'சகலம்' என்பது ஆன்மா உடல் கருவிகள் முதலியவற்றோடுங் கூடி விழைவு அறிவு செயல் ஆகிய அவை ஒருசிறிது விளங்க நிற்கும் நிலை. 'சுத்தம்' என்பது ஆன்மா தன்னைப் பற்றிய ஐவகை மலங்களும் நீங்கி, சிவத்தோடு கூடி விழைவு அறிவு செயல்கள் எங்குமாய்ப் பரவி விளங்கும் நிலையாகும். இம்மூவகை நிலைகளையும் விளக்கும் முறையில் அமைந்தது.

> **"கேவல சகல சுத்தம் என்று மூன்றவத்தை ஆன்மா**
> **மேவுவன், கேவலம் தன்னுண்மை, மெய்**
> **பொறிகளெல்லாம்**
> **காவலன் கொடுத்தபோது சகலனாம், மலங்களெல்லாம்**
> **ஓவினபோது சுத்தம் உடையன் உற்பவந் துடைத்தே"**
> **(227)**

எனவரும் சிவஞான சித்தியார் திருவிருத்தமாகும். காரணாவத்தைகளாகிய இம்மூன்றையும் இவற்றின் காரியங்களாகிய அவத்தை வகைகளையும் திருமந்திரம் எட்டாந் தந்திரத்தில் 'கேவல சகல சுத்தம்' என்ற தலைப்பில் திருமூலர் வகுத்தும் விரித்தும் விளக்கியுள்ளமை ஆராய்ந்து உணரத் தகுவதாகும்.

ஆணவமலம் ஒன்றேயுடைய உயிர்களை விஞ்ஞான கலர் எனவும், ஆணவம் கன்மம் என்னும் இருமலமுடைய உயிர்களைப் பிரளயாகலர் எனவும், ஆணவம் கன்மம் மாயை

என்னும் மும்மலமுடைய உயிர்களைச் சகலர் எனவும் இவ்வாறு ஆன்மாக்களை மூவகையாகப் பகுத்துரைத்தல் சைவ சித்தாந்த நூன்மரபாகும். இம்மரபு,

"மெய்ஞ்ஞானந் தானே விளையும் விஞ்ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய் - மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்"

(சிவஞானபோதம் வெண்பா 47)

எனவும்,

"உரைதரும் இப்பசுவர்க்கம் உணரின் மூன்றாம்
உயரும் விஞ்ஞானகலர் பிரளயா கலர்சகலர்
நிரையின்மலம், மலங்கன்ம, மலங்கன்மம் மாயை
நிற்கும் முதலிருவர்க்கும் நிராதாரமாகிக்
கரையிலருட் பரன்துவிதா சத்திநி பாதத்தாற்
கழிப்பன்மலம், சகலர்க்குக் கன்மவொப்பில்
தரையிலாசான் மூர்த்தி ஆதாரமாகித்
தரித்தொழிப்பன் மலம் சதுர்த்தாசத்தி நிபாதத்தால்"

(சித்தியார், சுபக். 254)

எனவும்,

"மூவகை ஆருயிர் வர்க்கம் மூலமலத்தார், கன்ம
மூலமலத்தார், மூன்று முடையாரன்றே,
தீவகமாம் எனவுருவாய் வந்து நாதன்
திருநோக்கால் பரிசத்தால் திகழும் வாக்கால்
பாவனையால் மிகுநூலால் யோகப் பண்பால்
பரவிவரும் அவுத்திரியாற் பாசநாசம்
மேவ அருளுதவும், அவுத்திரியிரண்டு திறனாம்
வியன்கிரியை ஞானமென விளம்புமாறே"

(சிவப்பிரகாசம் 8)

எனவும் வரும் மெய்கண்ட நூல்களில் இடம் பெற்றுள்ளமை காணலாம். மூவகை ஆருயிர் வர்க்கம் ஆகிய இப்பிரிவு,

"ஆணவ மாகும் விஞ்ஞான கலருக்குப்
பேணிய மாயைப் பிரளயா கலராகும்
ஆணவ மாயையுங் கன்ம மூன்றுமே
காணுஞ் சகலர்க்குக் காட்டு மலங்களே" (2241)

"ஆணவத்தா ரொன் றறியாத கேவலர்
பேணிய மாயைப் பிரளயா கலராகும்
காணும் உருவினர் காணாமை காண்பவே
பூணுஞ் சகலர் முப்பாசமும் புக்கோரே" (2240)

எனவரும் திருமந்திரப் பாடல்களை அடியொற்றியதாகும். இத்திருமந்திரப் பாடல்களைக் கூர்ந்து நோக்குங்கால் ஆணவமலம் ஒன்றேயுடையவர் விஞ்ஞானகலர் எனவும், ஆணவம் மாயை என்னும் இருமலமுடையவர் பிரளயகலர் எனவும், ஆணவம் மாயைகன்மம் என்னும் மும்மல முடையவர் சகலர் எனவும் கூறும் கொள்கை திருமூலர் கருத்தாகுமோ என ஐயுற வேண்டியுளது. இவ்விரு பாடல் களின் பொருள்களும் மேலும் சிந்தித்தற்குரியன.

வேதம் சிவாகமம் என்னும் இருதிற நூல்களும் சிவபெருமானால் அருளிச் செய்யப் பெற்ற முதல் நூல்கள் எனவும், வேறுரைக்கும் எல்லா நூல்களும் இவற்றை முதலாகக் கொண்டு இயற்றப் பெற்ற வழிநூல்கள் எனவும், வேதம் உலகத்தார் உய்தற்பொருட்டுப் பொதுநூலாகவும், சிவாகமம் சத்திநிபாதர் உய்தற்பொருட்டுச் சிறப்புநூலாகவும் அருளிச் செய்யப்பெற்றன எனவும் அறிவுறுத்தும் முறையில் அமைந்தது,

"வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்
வேறுரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள்
ஆதிநூல் அநாதியமலன் தருநூல் இரண்டும்
ஆரணநூல் பொது, சைவம் அருஞ்சிறப்பு நூலாம்
நீதியினால் உலகர்க்கும் சத்தி நிபாதர்க்கும்
நிகழ்த்தியது, நீண்மறையினொழி பொருள் வேதாந்தத்
தீதில் பொருள்கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூல்
திகழ்பூர்வம், சிவாகமங்கள் சித்தாந்தமாகும்" (267)

எனவரும் சிவஞான சித்தியாராகும். இது,

"வேதமோ டாகமம் மெய்யாம் இறைவனூல்,
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக
நாதன் உரையிவை நாடில் இரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே" (2397)

எனவரும் திருமந்திரத்தையும்,

"உலகியல் வேதநூல் ஒழுக்க மென்பதும்
நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பம்"
(பெரிய. திருஞானசம்பந்தர்)

எனவும்,

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறை விளங்க"
(பெரிய. திருஞானசம்பந்தர், 1)

எனவும் வரும் திருத்தொண்டர் புராணத் தொடர்களையும் விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளமை அறியத் தகுவதாகும்.

வேதாந்தம் முதலிய ஆறு அந்தங்கள் (சமயதத்துவக் கொள்கைகள்) திருமூலர் காலத்தில் இந்நாட்டில் வழங்கின. எனினும் அவற்றுள் சைவசித்தாந்தக் கொள்கையே தனிச் சிறப்பு வாய்ந்ததாகத் தமிழ்மக்களாற் போற்றப்பெற்று வந்தது என்பது 'வேதத்தின் அந்தமும் மிக்க சித்தாந்தமும்' எனவும்

"சித்தாந்தத்தே சீவன் முத்தி சித்தித்தலால்
சித்தாந்தத்தே நிற்பர் முத்தி சித்தித்தவர்" (2394)

எனவும் வரும் திருமூலர் வாய்மொழிகளால் நன்கு தெளியப்படும்.

"சித்தாந்தத் தேசிவன்றன் திருக்கடைக்கண் சேர்த்திச்
செனனமொன்றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை யறுத்து

முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்ப னென்று
மொழிந்திடவும் உலகரெலாம் மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் விழுந்திடுவர் இதுவென்ன பிராந்தி"
(சித்தியார், சுபக். 268)

எனவரும் சிவஞானசித்தியார் மேற்குறித்த திருமந்திரப் பொருளையுணர்ந்து பயன்கொள்ளாத மக்களை நினைந்து இரங்கிக் கூறியதாதல் அறியத்தகுவதாகும்.

'தானமியாகந்தீர்த்தம்' (277) எனவரும் சிவஞான சித்தியாரில், 'அரன் முனிலாதொழியின் உற்பவித்து ஞான நெறியடைந்தடைவர் சிவனை' என்ற தொடர் சரியை முதலிய சிவபுண்ணியங்களைச் செய்தவர்கள் போகத்தில் விருப்புடையராயின், விசிட்டமான கன்மபரிபாகத்தாலே புரியட்டக வுடலையெடுத்துப் பொல்லாதென்ற சகலயோனி களைப் புசித்துத் தொலைத்தவாறே பிரளயாகலராய்ப் பின்பு விஞ்ஞானகலராய் ஞானநெறியைத் தலைப்பட்டுச் சிவனடியை அடைவார்கள் என்பதனை அறிவுறுத்துவ தாகும். இது,

"விஞ்ஞான கன்மத்தால் மெய்யட்டகங் கூடி
அஞ்ஞான கன்மத்தாற் சகலயோனிபுக்
கெஞ்ஞானமு மெய்தியிடையிட்டு மீண்டுபோய்
விஞ்ஞான ராய்ச் சிவமேவுவ துண்மையே" (499)

என்னும் திருமந்திரப்பாடலை உளங்கொண்டு கூறிய விளக்கமாகும்.

திருமூலர் காலத்தில் வேதம்வல்ல அந்தணர்களுக்குக் குடியிருப்பாக (ப்பிரமதேசமாக) அரசர்களால் ஊர்கள் தானஞ்செய்யப்பெற்றறன. அவ்வாறு அந்தணர்க்கு ஊர்களைத் தானமாகக் கொடுப்பது இம்மை மறுமையிற் பெரும்பயன் விளைக்கும் என்ற நம்பிக்கை மன்னர்கள் மனத்தில் வழிவழியாகத் தொடர்ந்து நிலைபெற்று வந்துள்ளமை நம் நாட்டிலுள்ள கல்வெட்டுக்களாலும் செப்புப்பட்டயங்களாலும் நன்கு புலனாகின்றது.

அதுபோலவே இறைவன் எழுந்தருளிய திக்கோயில்களைக் கட்டி முடித்தலும் இம்மை மறுமைகளிற் பெரும்பயன் விளைக்கும் சிறப்புடைய அறமாகக் கருதப்பட்டு வருகின்றது. இங்குக் குறிக்கப்பட்ட பேரறங்கள் எல்லாவற்றையும் விட மக்களது மனவிருளைப் போக்கித் தமது ஞானமெய்ந்நெறி யால் உலகிற்கு நற்பயன் விளைக்கும் சிவஞானிகட்கு ஒரு பகல் ஒருவேளையுணவளித்தலால் வரும் பயனுக்கு மேற்குறித்தவை யாவும் சிறிதும் ஒப்பாகமாட்டா என வற்புறுத்தும் நிலையில் அமைந்தது,

> "அகரம் ஆயிரம் அந்தணர்க்கீயி லென்
> சிகரம் ஆயிரம் செய்து முடிக்கிலென்
> பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
> நிகரில்லை யென்பது நிச்சயந் தானே" (1860)

எனவரும் திருமூலர் திருமந்திரமாகும்.

"அந்தணர் குடியருப்பூர்கள் ஆயிரம் அமைத்து அவற்றை அந்தணர்க்கீவதால் வரும் பயன்யாது? திருக் கோயில்கள் ஆயிரக்கணக்கினவாகக் கட்டி முடித்தலால் உளதாம் பயன் யாது? யாவரும் புகழ்ந்தேத்தும் சிவஞானி யாகிய அடியார் ஒருவர் ஒரு பகற்பொழுது உண்ண உணவளித்தலால் வரும் பயனுக்கு மேற்குறித்த அறப்பயன்கள் சிறிதும் ஒவ்வா என்பது உறுதி" என்பது இதன் பொருளாகும். இங்ஙனம் சிவஞானிகட்கு ஒன்றனையீதலால் வரும் பயனை அறிவுறுத்துவதாக அமைந்தது,

> "சிவஞானச் செயலுடையோர் கையில் தானம்
> திலமளவே செய்திடினும் நிலமலைபோல் திகழ்ந்து
> பவமாயக் கடலினழுந் தாதவகை யெடுத்துப்
> பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தை யறுக்கத்
> தவமாரும் பிறப்பொன்றிற் சாரப் பண்ணிச்
> சரியைகிரி யாயோகம் தன்னினும் சாராமே
> நவமாரும் தத்துவஞா னத்தை நல்கி
> நாதனடிக் கமலங்கள் நணுகுவிக்குந் தானே" (278)

எனவரும் சிவஞானசித்தியார் திருவிருத்தமாகும்.

குருவினாலன்றி ஞானம் பெறுதல் இயலாது என அறிவுறுத்துவது,

> "சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலச்
> சூரிய காந்தஞ் சூழ்பஞ்சைச் சுட்டிடா
> சூரியன் சந்நிதியிற் சுடுமாறு போல்
> ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே" (117)

எனவரும் திருமந்திரமாகும். "சூரியகாந்தக்கல்லும் அதனைச் சூழவைத்த பஞ்சும் போல் (உயிர்களின் மலத்தைச் சுட்டெரித்தற்குரிய சிவமும் அதனைப் பற்றாகப் பற்றியுள்ள ஆன்மாவும்) பிரிவறக்கூடிய இயைபுடையனவாயினும், சூரியகாந்தக்கல் தன்னகத்தேயுள்ள நெருப்பினால் தன்னைச் சூழவைத்துள்ள பஞ்சினைச் சுட்டெரித்தல் இல்லை. அத்தகைய சூரிய காந்தக்கல் ஞாயிற்றின் முன்னிலையைச் சார்ந்தபோது, அதனின்றும் தோன்றும் தீ பஞ்சினைச் சுட்டெரித்தல் போன்று, (இறைவன்) குருவாகத் தோன்றிய அந்நிலையில் வெளிப்பட்ட சிவஞானத்தீயினால் உயிரைச் சூழ்ந்துள்ள மலங்களாகிய பஞ்சுத் தொகுதி சுடப்பட்டு அழிந்தன" என்பது இதன் பொருளாகும்.

இறைவனை உயிர்க்குயிராகத் தன்னுள் கொண்ட பக்குவமுடைய ஆன்மாவுக்குச் சூரிய காந்தக்கல்லும், ஆன்மாவைப் பிணித்துள்ள மலங்களுக்குப் பஞ்சும், ஞானாசிரியன் முன்னிலையில் மாணாக்கனது அறிவின் கண்ணே சிவஞானம் வெளிப்பட்டு மலங்களையழித்தற்குச் சூரிய காந்தக்கல் சூரியன் முன்னிலையிற் பொருந்திய அளவில் அதன்கண் நின்று தீ வெளிப்பட்டுப் பஞ்சினைச் சுட்டெரித்தலும் உவமையாகும். இத்திருமந்திரப்பொருளை விரித்து விளக்கும் முறையில் அமைந்தது,

> "சூரிய காந்தக்கல்லி னிடத்தே செய்ய
> சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்
> ஆரியனாம் ஆசான்வந் தருளால் தோன்ற
> அடிஞானம் ஆன்மாவில் தோன்றும் தோன்றத்
> தூரியனாம் சிவன்தோன்றும் தானுந் தோன்றும்
> தொல்லுலக மெல்லாந்தன் னுள்ளே தோன்றும்

நேரியனாய்ப் பரியனுமாய் உயிர்க்குயிரா யெங்கும்
நின்றநிலை யெல்லாம்முன் நிகழ்ந்து தோன்றும்"
(சுபக். 280)

எனவரும் சிவஞான சித்தியார் திருவிருத்தமாகும்.

சிவனுடைய அருளிடமாக நின்று ஆன்மசுத்தி பண்ணினவர்கள், தத்துவம் முப்பத்தாறோடும் கூடி நிற்கும் பொழுதே அவற்றோடு கூடிச் சீவிப்பதுஞ் செய்யாமல் அறிவு குலைவதும் செய்யாமல் சிவத்துடன் ஒன்றிநிற்கும் நிலையே சாக்கிரத்தில் அதீதம் எனப்படும் தெளிவுநிலையாகும். இதனை அறிவிப்பது,

"பொற்புறு கருவியாவும் புணராமே, அறிவிலாமற்
சொற்பெறும் அதீதம் வந்து தோன்றுமே, தோன்றிநின்ற
சிற்பரமதனால் உள்ளச் செயலறுத்திட உதிக்கும்
தற்பரமாகி நிற்றல் சாக்கிராதீதந் தானே"      (8)

எனவரும் சிவப்பிரகாசச் செய்யுளாகும். இதன்கண் குறித்தவாறு தத்துவம் முப்பத்தாறும் நீங்கியதே முத்தி யென்பதற்கு

"முப்பதும் ஆறும் படிமுத்தி யேணியாய்
ஒப்பிலாப் பேரண்டத் துள்ளில் வெளிபுக்குச்
செப்ப வரிய சிவங்கண்டு தான்தெளிந்
தப்பரி சாகி அமர்ந்திருந் தாரே"      (126)

எனவரும் திருமந்திரத்தை உதாரணங்காட்டுவர் மதுரைச் சிவப்பிரகாசர். ஆன்மா ஆணவத்தால் மறைப்புண்டு அறியாமையாய்க் கிடப்பதுஞ்செய்யாமல், அகக்கரணம் புறக்கரணங்களோடுங்கூடிச் சகலனாய்ச் சத்தாதி விடயங்களோடும் கூடிச் சீவிப்பதுஞ் செய்யாமல் நின்ற இடமே சாக்கிராதீதம் என்பதற்கு,

"நினைப்பு மறப்பு மிலாத விடத்தே
வினைப்பற் றறுக்கும் விமல னிருப்பன்
வினைப்பற் றறுக்கும் விமலனை நாடி
நினைக்கப் புகிலவன் நீளிய னாமே"      (2970)

"இரவும் பகலு மிலாத விடத்தே
குரவஞ் செய்கின்ற குழலியை நாடி
அரவஞ் செய்யாதவ ளோடுஞ்சந் திக்கிற்
பரவஞ் செயாவகைப் பாலனு மாமே" (1134)

"நின்றவச் சாக்கிரந் துரியம தானால்
மன்றனும் அங்கே மணஞ்செயா நின்றிடும்
மன்றன் மணஞ்செயின் மாயையும் மாய்ந்திடும்
அன்றே யிவனும் அவனென லாமே" (2227)

என்னுந் திருமந்திரப் பாடல்களை அவ்வுரையாசிரியர் எடுத்துக் காட்டுவர். மேலான நிட்டையினைப் பெறுதற்குப் பக்குவமுடையவர்கள் ஆசாரியனிடத்திலே உண்மையைப் பெற்று அநுபவத்தில் அறிகிறதொழிய வெறும் நூலறிவினாலே அறிதல் இயலாது என்பதற்கு,

"காட்டுங் குறியுங் கடந்தவர் காரணம்
ஏட்டின் புறத்தில் எழுதிவைத் தென்பயன்
கூட்டுங் குருநந்தி கூட்டிடின் அல்லது
ஆட்டின் கழுத்தின் அதற்கறந் தற்றே" (2937)

என்னுந் திருமந்திரத்தை மேற்கோளாகக் காட்டுவர் மதுரைச் சிவப்பிரகாசர்.

தத்துவங்களும் ஆன்மாவும் தம்மிற் கூடிச் சீவிக்கும் முறைமையும், அவ்வாறு சீவிக்கும் பொழுதே அவையிரண்டும் பகல் விளக்குப்போலே தற்போதம் மழுங்கி நிற்க அருளொளி மேலிட்ட நிலையில் ஆன்மா அவ்வருளோடுங் கூடிச் சிவாநுபவத்தைப் பெறும் முறைமையும் அறிவுறுத்துவது,

"பற்றிடுங்கருவி யாவும்படர்ந்துணர் வளிக்குங்காலை
உற்றறிந்திடுவ தொன்றின் உணர்வினின் உண்மையாகும்
மற்றது பகல்விளக்கின் மாய்ந்திட வருவதுண்டேல்
பெற்றிடும் அதனை மாயப் பிறப்பினை யறுக்கலாமே"

எனவரும் சிவப்பிரகாசமாகும். பகல்விளக்குப்போல் என்றது ஆன்மா தற்போதம் கெட்டு நிற்றல். இதற்குப் பிரமாணம்--

திருவாசகத்தில்,

> "வான்கெட்டு மாருதமாய்ந்தழல் நீர் மண்கெடினுந்
> தான்கெட்டலின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்
> கூன்கெட்டுயிர் கெட்டுணர்வு கெட்டென்னுள்ளமும் போய்
> நான்கெட்டவா பாடித்தெள்ளேணங் கெட்டாமோ"

எனவும், திருமந்திரத்தில்

> "ஒத்திட்டிருக்க வுடம்போடுயிர்தான்
> செத்திட்டிருப்பர் சில சிவயோகிகள்" (121)

எனவும் கண்டு கொள்க என்பர் மதுரைச் சிவப்பிரகாசர்.

புலன்களையடக்கித் தவநெறியில் நின்று எல்லாப் பொருள்களும் ஒடுங்குதற்கு நிலைக்களமாகிய ஞேயத்தில் (பரம்பொருளில்) ஒன்றி நிற்போர் அடையும் பயன்களை யுணர்த்துவது,

> "ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்
> நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை
> இடும்பையு மில்லை இராப்பக லில்லை
> படும் பயனில்லை பற்றுவிட் டோர்க்கே" (1624)

எனவரும் திருமந்திரமாகும். "எல்லாப் பொருள்களும் ஒடுங்குதற்குக் காரணமான சிவபரம் பொருளினிடத்தே ஒன்றி நிலைபெற்ற தவச்செல்வர்களாகிய பெருமக்களது உள்ளமானது உலகில் நேரும் இடையூறுகளையெண்ணித் துளக்கமுறுவதில்லை. அந்நிலையில் அங்குக் கூற்றுவனும் அணுகுவதில்லை. துன்பமும் இல்லை, இரவு (மறப்பு) பகல் (நினைப்பு) என்ற வேற்றுமையில்லை, (யான் எனது என்னும் இருவகைப்) பற்றுக்களை விட்டொழித்தோராகிய அவர்கட்கு (இவ்வுலகிற் பிறரால்) அடையவேண்டிய பயன் எதுவும் இல்லை. (எனவே ஒன்றாலுங் குறைவின்றிப் பேரின்ப நிலையில் வாழ்வார்கள்) என்பது இதனால் உணர்த்தப்படும் பொருளாகும்.

இதன்கண் 'ஒடுங்கி' என்றது, உலகுயிர்களெல்லாம் ஒடுங்குதற்குக் காரணமாகிய சங்காரக் கடவுளை, சிவஞானபோதம் முதற்சூத்திரத்தில் 'அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின் தோற்றியதிதியே, ஒடுங்கி மலத்துளதாம்' எனச் சங்கார காரணனாகிய இறைவனை 'ஒடுங்கி' என்ற பெயராற் குறித்தார் மெய்கண்டார். 'ஒடுங்கி மலத்துளதாம்' என்ற தொடர்க்கு 'ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை' என அவர்தாமே உரை வரைந்திருப்பதால் 'ஒடுங்கி' என்பதனை எல்லாப்பொருள்களும் தன்கண் ஒடுங்குதற்கு நிலைக்களமானவன் என்ற பொருளில் சிவபெருமானைக் குறித்த பெயராகவே ஆண்டுள்ளார் என்பது நன்கு தெளியப்படும். இச்சூத்திரத்து 'அந்தம் ஆதி என்மனார் புலவர்' என அவர் கூறுமாறு சங்கார காரணனாகிய சிவபெருமானே உலகினை மீளவும் தோற்றுவிப்பவன் என்பது,

> "தொல்லூ ழிதடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தாற்
> பல்வயினுயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்
> போல்"

எனவரும் கலித்தொகைத் தொடர் கொண்டு முன்னர் வலியுறுத்தப்பட்டது. எனவே இறைவனைக் குறித்ததென மெய்கண்டார் சுட்டிய பெயர், 'ஒடுங்கிநிலை பெற்ற உத்தமர் உள்ளம்' என வரும் இத்திருமந்திரத்தில் முன்னரே இடம் பெற்றுள்ளமை இங்கு ஒப்பு நோக்கியுணரத்தகுவதாகும். 'ஒடுங்கி நிலைபெற்ற' என்பதற்கு 'ஒடுங்கியாகிய இறைவனிடத்தே ஒன்றி நிலைபெற்ற' எனப் பொருள் கொள்ளுதலே ஏற்புடையதாகும்.

> "அன்றிய பாச இருளும் அஞ்ஞானமும்
> சென்றிடும் ஞானச் சிவப்பிர காசத்தால்
> ஒன்று மிருசுடராமரு ணோதயந்
> துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே" (2001)

எனவரும் திருமந்திரப் பொருளை உளங்கொண்ட உமாபதி சிவாசாரியார் குருமுதல்வராகிய மெய்கண்டார் அருளிய சிவஞானபோதத்தையும் அதன்வழி நூலாகிய அவர்தம்

மாணவர் அருணந்தி சிவாசாரியார் அருளிய சிவஞான சித்தியையும் பின்பற்றிக் கருத்திலுறை திருவருளும் இறைவன் நூலுங்கலந்து தாம் இயற்றிய சார்பு நூலுக்குச் சிவப்பிரகாசம் எனப் பெயரிட்டுள்ளளமை இங்குக் குறிப்பிடத்தகுவதாகும்.

திருமந்திரத்திலிருந்தும் மெய்கண்ட நூல்களிலிருந்தும் இதுகாறும் எடுத்துக்காட்டிய ஒப்புமைப் பகுதிகளைக் கூர்ந்து நோக்குங்கால் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞானசித்தியார் உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன் முதலிய சைவசித்தாந்தச் சாத்திரங்கள் எல்லாவற்றுக்கும் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் பத்தாந்திருமுறையெனப் போற்றப்பெறும் திருமூலர் திருமந்திரமே முதல் நூலாகத் திகழும் தனிச் சிறப்புடையதென்பது நன்கு புலனாதல் காணலாம்.



# திருமுறைகளில் இடம்பெற்றுள்ள சைவ சித்தாந்த உண்மைகள்

## காரைக்காலம்மையார்

திருவருள் ஞானம் பெற்றவர் காரைக்காலம்மையார் "திருவருள் ஞானமாவது முதலிகள் மூவர் (தேவார ஆசிரியர் மூவர்) காரைக்காலம்மை முதலாயினோர்க்குண்டாகிய ஞானமென அறிக" என மதுரைச் சிவப்பிரகாசர் கூறுதலால் இவ்வுண்மை நன்கு தெளியப்படும். காரைக்காலம்மையார் இறைவனருளாற் பெற்ற திருவருள் ஞானத்தின் பயனாகத் திகழ்வன அவர் அருளிய மூத்த திருப்பதிகங்கள் இரண்டும் திருவிரட்டை மணிமாலையும் அற்புதத் திருவந்தாதியும் ஆகிய திருவருட்பனுவல்களாகும். அவற்றுள் அற்புதத் திருவந்தாதி யென்பது இறைவனருளால் தம் உள்ளத்துத் தோன்றிய சிவஞானத்தின் ஒருமைப்பாட்டினால் உமை யொரு கூறனாகிய இறைவனைப் பாடிப்போற்றியதாதலின் அப்பெயர்த்தாயிற்று. அற்புதம் - ஞானம். இந்நூல் ஓதுதற்கு இனிமையு. எளிமையும் உடையதாய் உணர்தற்கு அரிய சிவஞானத்து இயல்பினைத் தெளிவுபடுத்துவதாகும்.

காணப்படும் உலகம் காண்டற்கரிய கடவுளாகிய ஒருவனால் தோற்றுவிக்கப்பெற்ற உள்பொருளே என்பதும், 'யாது யாண்டு ஒடுங்கும் அஃது அதனில் உற்பத்தியாம், மண்ணிற் குடம்போலும்' என்னும் விட்டு நீங்காமை இயல்பினால் உலகினை ஒடுக்கிய இறைவனே உலகத்தை மீளத்தோற்றுவிப்பவனும் ஆவன் என்பதும் சைவசித்தாந்தக் கொள்கையாகும். இக்கொள்கை

"இறைவனே எவ்வுயிருந் தோற்றுவிப்பான் தோற்றி
இறைவனே யீண்டிறக்கஞ் செய்வான் - இறைவனே
எந்தாய் எனவிரங்கும் எங்கள்மேல் வெந்துயரம்
வந்தால் அது மாற்றுவான்" (அற்புதத்.5)

எனவரும் அற்புதத்திருவந்தாதியில் இடம் பெற்றுள்ளமை காணலாம். "(எப்பொருளிலும் நீக்கமறத் தங்கியிருத்தலால்) இறைவன் என்னும் காரணப் பெயருடைய கடவுளே மன்னுயிர்களுக்கு உடல் கருவி உலகு நுகர்பொருள்களைப் படைத்தளிப்பவன், அவற்றை மீண்டும் ஒடுக்குதலைச் செய்பவனும் அவ்விறைவனே. எம் தந்தையே எனப் போற்றி வழிபடும் உயிர்களாகிய எங்கள் மேல் பொறுத்தற்கரிய துன்பங்கள் வந்து வருத்துமாயின் அவற்றைப் போக்கி இவ்வுலகில் வாழச் செய்பவனும் அவ்விறைவனே" என்பது மேற்காட்டிய திருப்பாடலின் பொருளாகும்.

ஞானமே திருமேனியாகவுடைய இறைவன் நம்மால் அணுகமுடியாத பரவெளியிலுள்ளான் என்று சொல்லுவார் சொல்லுக. மேலும் தேவருலகத்துள்ளான் என்று சொல்லுவார் சொல்லுக. அப்பெருமான் எனது நெஞ்சமாகிய அணி இடத்தில் இருந்து அன்பர்கட்கு அருள் புரிகின்றான் என யான் உறுதியாகச் சொல்கின்றேன் என்பார்,

> "வானத்தா னென்பாரும் என்கமற் றும்பர்கோன்
> தானத்தான் என்பாரும் தாமென்க - ஞானத்தான்
> முன்னஞ்சத் தாலிருண்ட மெய்யொளிசேர் கண்டத்தான்
> என்னெஞ்சத் தானென்பன் யான்" (அற்புதத். 6)

என்று அருளிச் செய்தார் காரைக்காலம்மையார். இதனால் இறைவன் உயிர்தோறும் உயிர்க்குயிராய்க் கலந்துள்ள திறம் நன்கு புலப்படுத்தப் பெற்றமை காணலாம்.

உலகமெல்லாவற்றையும் ஆள்விப்பதும் உயிர்களின் பிறவி நோயைப் பொன்றக் கெடுப்பதும் ஈசனது திருவருளேயாகும். அத்திருவருளின் துணைகொண்டே மெய்ப்பொருளாகிய சிவபரம்பொருளைக் கண்டு வழிபடும் நற்பேறுடையனாயினேன். அடியேனுக்கு எக்காலத்தும் எல்லாப் பொருளாகவும் நின்று துணைபுரிவது அத்திருவருளேயாகும் என்பார்,

> "அருளே யுலகெலாம் ஆள்விப்ப தீசன்
> அருளே பிறப்பறுப்ப தானால் - அருளாலே

மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன்
எஞ்ஞான்றும்
எப்பொருளு மாவ தெனக்கு" (அற்புதத். 9)

என இறைவனோடு பிணிப்பின்றியுள்ள திருவருட்சத்தியே உலகுயிர்களை இயக்கி நிற்குந் திறத்தினை விரித்துரைத்தார்.

அவனருளே கண்ணாகக் கொண்டு தன்னைச் சிந்தித்துக் காண வல்ல தவச்செல்வர்களுக்கு அவர்களது உள்ளத்துள்ளே பேரொளிப் பிழம்பாகத் தோன்றி யருள்புரிதல் அருளாளனாகிய இறைவனது இயல்பாகும். அப்பெருமானைப் புறத்தே கண்டு மகிழ வேண்டுமென விரும்புவார்க்கும் அவர்கள் விரும்பிய வண்ணமே எதிர் தோன்றிக் காட்சியளிக்கவல்ல எளிமைத் தன்மைவாய்ந்த அருளாளன் அவன். அவனைக் கைதொழுது போற்றும் மெய்யடியார்களுக்கு அவனது திருவுருவத்தைக் காணுதல் இயலும் என்பது அம்மையாரது உள்ளத்துணிபாகும்.

"அறியும் இயல்புடைய ஆன்மாவேயாய் ஒற்றித்து நிற்பவனும் இறைவனாகிய அவனே. அங்ஙனம் உயிர்களோடு வேறறக் கலந்து நிற்பினும் உயிர்களாகிய அவற்றின் தன்மை தன்னைப் பற்றாதவாறு தான் அவற்றின் வேறாக நின்று அவ்வுயிர்களுக்குப் பொருளின் இயல்பினை உள்ளவாறு அறிவித்தருள்பவனும் அவனே. கண்களுக்குப் பொருள் களின் இயல்பினை உள்ளவாறு காட்டித் தானும் உடனிருந்து காணும் உயிரைப்போன்று, உயிர்களுக்குப் பொருளின் இயல்பினை உள்ளவாறு அறிவுறுத்தி அவற்றோடு பிரிப்பின்றி உயிர்க்குயிராய் உடனிருந்து அறிந்து உதவிசெய்பவனும் அவனே. எல்லாவற்றையும் இருந்தாங்கு அறிகின்ற மெய்யுணர்வே திருமேனியாகக் கொண்டு விளங்குபவனும் அவனே. விரிந்து ஒளிதரும் சுடர்ப்பொருள் களும் நிலனும் வானும் ஆகிய உலகப்பொருள்கள் எல்லா வற்றோடும் கலந்து நின்று உலகத்தை இயக்கி நிற்பவனும் அம்முதல்வனே" என உலகுயிர்களோடு இறைவனுக்குள்ள அத்துவிதத் தொடர்பினை விளக்குவது,

"அறிவானுந் தானே அறிவிப்பான் தானே
அறிவா யறிகின்றான் தானே - அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பார் ஆகாயம்
அப்பொருளுந் தானே யவன்" (அற்புதத். 20)

எனவரும் அற்புதத் திருவந்தாதியாகும்.

உயிரின் தூண்டுதலின்றித் தொழிற்படாத கண் ஒருருவத்தைக் காணுங்கால் உயிரினது உணர்வு எனவும் கண்ணொளியெனவும் பிரித்துணரவாராது இரண்டன் காட்சியும் ஒன்றனையொன்றுவிடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழுமாறு போல, முதல்வனது காட்டும் உதவியின்றி ஒன்றையும் தானே காணமாட்டாத உயிர், ஒருபொருளை அறியுங்காலும் முதல்வனது பேரறிவு உயிரறிவு எனப் பிரித்துணரவாராது வேறன்றி உடனாய்க் கலந்துநிற்ப முதல்வனும் அவ்வாறு உயிரோடு கலந்து நின்று உயிருக்குத் தான் அறிவித்ததொன்றனை அவ்வுயிர் அறிந்ததென்றும் அதனைச் செலுத்திநின்று தான் அறிந்ததென்றும் பகுத்தறிய வாராது இருவகையறிவும் ஒருங்கேநிகழுமாறு உயிர்கட்குச் செய்துவரும் இவ்வுதவியினைக் காணும் உபகாரம் என்பர் சைவ சித்தாந்திகள். இறைவன் உயிர்கட்குச் செய்யும் இவ்வுபகாரம் உயிர்களது பெத்தநிலையிலும் (கட்டு நிலையிலும்), வீட்டு நிலையிலும் (முத்தி நிலையிலும்) ஒருபெற்றித்தாய் நிகழுமாறு செய்யும் அத்துவித நிலையினை இத்திருவந்தாதி இனிது புலப்படுத்தல் அறியத்தகுவதாகும். 'அவையேதானேயாய்' (சிவ.சூ. 2) என மெய்கண்டாரும், 'உலகெலாமாகி வேறாய் உடனுமாய்' (சித்தியார்) என அருணந்தி சிவாசாரியாரும் கூறிய அத்துவிதவியல்பு இத் திருவந்தாதியில் இடம் பெற்றுள்ளமை கூர்ந்துணரத் தகுவதாகும்.

"அத்துவிதமாவது, பேதப்பொருள் இரண்டும் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்த விசேடம்..............உயிர் ஒன்றனையறிதல் முதல்வன் உடனின்றறிதலையின்றி அறிவித்தல் மாத்திரையான் அமையாதென்பது, 'தொண்ட னேன் நினையுமா நினையே' 'விரும்புமா விரும்பே' (திருவிசைப்பா) ............ இவ்வாறு முத்திநிலைபற்றியோதிய

திருவாக்குக்களாலும் அறிக. இவ்வியல்பு நோக்கியன்றே 'அறிவானுந்தானே அறிவிப்பான்தானே' என்றோதிய அம்மை, 'அறிவாய் அறிகின்றான் தானே' எனவும் ஓதியதூஉம் என்க. முன் 'அறிதல்' அறிவித்தற்பொருட்டு எனவும், பின் 'அறிவாயறிதல்' விடயத்தில் அழுந்துவித்தற் பொருட்டு எனவும் கொள்க" (சிவஞானபோதச் சிற்றுரை, சூ. 11) எனச் சிவஞான முனிவர் இத்திருப்பாடலுக்குக் கூறிய விளக்கம் ஆழ்ந்துணரத்தகுவதாகும்.

"அவனே யிருசுடர் தீயாகாச மாவான்
அவனே புவிபுனல் காற்றாவான் - அவனே
இயமானனாய் அட்டமூர்த்தியுமாய் ஞான
மயனாகி நின்றானும் வந்து" (21)

எனவரும் இப்பாடல் முன்னர்க் கூறியபடி இறைவன் உலகெலாமாகி வேறாய் உடனுமாய் நிற்கும் முறைமையினை விரித்துரைப்பதாகும். (முன்னைத் திருப்பாடலிற் கூறிய இயல்பினனாகிய) அவ்விறைவனே ஞாயிறு திங்கள் என்னும் இருசுடர்களாகவும் தீயாகவும் ஆகாயமாகவும் விளங்குபவன். அவனே நிலம், நீர், காற்று என்னும் இவையாவும் நிற்பவன். ஆன்மாவாகியும் (இரு சுடர் முதல் உயிர் ஈறாக எண்ணப்பட்ட) எண்பேருருவினனாகியும் ஞானமே திருமேனியாகத் திகழ்பவனாகி (அன்பர்க்கு) எளிவந்து அருள் செய்து நிற்பவனும் அவ்விறைவனே யாவன்" என்பது இதன் பொருளாகும்.

இயமானன் - வேள்வித்தலைவன், என்றது ஆன்மாவை. ஞானமேயாகிய தனது உண்மைத் திருமேனியே யன்றி உலகப் பொருள்கள் எல்லாவற்றோடும் அத்துவித மாய்க் கலந்து நிற்றலால் இருசுடர் முதலாகவுள்ள இவற்றையும் தனக்குரிய திருமேனியாகக் கொண்டுள்ளான் என்பது கருத்தாகலின் 'அட்டமூர்த்தியுமாய்' என்புழி உம்மை எச்சப் பொருளதாய் நின்றது. 'ஞானமயனாகி வந்து நின்றானும் அவனே' என இயைத்துரைக்க.

கி.பி. ஐந்து ஆறாம் நூற்றாண்டுகளில் நிலவிய அருளாசிரியர்கள் திருமூலநாயனார், காரைக்காலம்மையார்

காலத்தையடுத்துக் கி.பி. ஏழு எட்டாம் நூற்றாண்டுகளில் தோன்றிச் சிவநெறியினை வளர்த்த அருளாசிரியர்கள் சைவ சமய குரவர்கள் எனப் போற்றப்பெறும் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் மூவரும் எல்லாம் வல்ல இறைவனைப் பண்பொருந்தப் போற்றிப் பரவிய இன்னிசைச் செழும்பாடல்கள் தேவாரம் என்ற பெயரால் ஏழு திருமுறைகளாகப் பகுக்கப்பெற்றன என்பதும் அவற்றுள் ஆளுடையபிள்ளையாராகிய திருஞானசம்பந்தர் அருளிச் செய்த திருப்பதிகங்கள் ஒன்று, இரண்டு, மூன்றுஆம் திருமுறைகளாகவும், திருநாவுக்கரசர் அருளிய 'திருப் பதிகங்கள் நான்கு, ஐந்து, ஆறாம் திருமுறைகளாகவும், நம்பியாரூரராகிய சுந்தரர் அருளிய திருப்பதிகங்கள் ஏழாந்திருமுறையாகவும் வகுக்கப்பெற்றன என்பதும் மணிவாசகப்பெருமானாகிய திருவாதவூரடிகள் அருளிய திருவாசகம் திருச்சிற்றம்பலக்கோவை என்னுமிரு நூல்களும் எட்டாந்திருமுறையாக வகுக்கப்பெற்றன என்பதும் அறிஞர் பலரும் நன்கறிந்த செய்திகளாகும். இறைவனருள் பெற்ற செம்புலச் செல்வராகிய இந்நால்வரும் சிவபரம்பொருளைப் பரவிப் போற்றிய திருவருளிலக்கிய மாகிய இத்தோத்திரப் பாடல்களில் கடவுள், உயிர், உலகம் என்னும் முப்பொரு ளுண்மையும் அவற்றின் இலக்கணமும் மன்னுயிர்கள் இறைவனை வணங்கிப் பிறவிப் பிணிப்பி னின்றும் விடுபட்டு உய்தி பெறுதற்குரிய சாதனமும் இறைவன் திருவருளைப் பெற்றோர் அடையும் பேரின்ப நிலையாகிய வீடுபேற்றியல்பும் ஆகிய சைவசித்தாந்தத் தத்துவக் கொள்கைகள் இடம் பெற்றுள்ளன. திருவருள் ஞானம் பெற்ற பெருமக்கள் அருளிய சைவத் திருமுறை களாகிய இவ்வருள்நூல்களை அன்புடன் பயின்று சிவபரம் பொருளைச் சிந்தித்துப் போற்றும் சிவஞானச் செல்வர் களாகிய திருவியலூர் உய்வந்த தேவநாயனார் அவர்தம் மாணாக்கர்க்கு மாணாக்கராகிய திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார், மெய்கண்ட தேவநாயனார், அவர்தம் மாணாக்கர் அருணந்தி சிவாசாரியார், திருவதிகை மனவாசகங்கடந்தார், மறைஞான சம்பந்தர் மாணாக்கராகிய உமாபதி சிவாசாரியார் ஆகிய பெருமக்கள் அருளிய திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம் சிவஞானசித்தியார் முதலிய சைவசித்தாந்த

சாத்திரங்கள் பதினான்கும் சைவத்திருமுறைகளின் பயனாகத் தோன்றிய செந்தமிழ்த் தத்துவநூல்களாகும். திருமுறை களின் பயனாகத் தோன்றியனவே இச் சைவசித்தாந்த சாத்திரங்கள் என்பது திருமூலநாயனார் அருளிய திருமந்திரப் பொருளை இந்நூல்கள் எடுத்தாண்ட திறத்தினை விளக்கு மிடத்து நன்கு எடுத்துக்காட்டப்பெற்றது. அவ்வாறே தேவாரத் திருமுறைகளில் சைவ சித்தாந்தத் தத்துவக் கொள்கை வேரூன்றி விளங்குந் திறத்தை இங்கு ஒரு சிறிது நோக்குதல் ஏற்புடையதாகும்.

### தேவாரத் திருமுறைகளிற் சைவசித்தாந்தம்

மூவாதபேரன்பின் மூவர் முதலிகள் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்களில் அறிவுறுத்தப் பெறும் பொருள்கள் பற்றிச் சிவநெறிச் செல்வர் பலர் பலதிறமாகப் பகுத்துச் சிந்தித்துள்ளார்கள். வித்தகப்பாடல் முத்திறத் தடியரும் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத் திருப்பதிகங்கள் முழுவதனையும் நாடோறும் ஓதி மகிழ விரும்பிய சிவாலய முனிவர் என்பவர்க்குப் பொதியின் முனிவராகிய அகத்தியர், மூவர் திருப்பதிகங்களிலுமிருந்து இருபத்தைந்து பதிகங் களைத் திரட்டித்தந்து, அத்திருப்பதிகங்களை நாள்தோறும் பாராயணஞ் செய்வோர் மூவர் தேவாரப்பதிகங்கள் முழுவதனையும் ஓதிய பெரும்பயனைப் பெறுவர் என அறிவுறுத்தி மறைந்தருளினார் என்றதொரு வரலாறு செவிவழிச் செய்தியாக வழங்கப்பெற்று வருகின்றது. அகத்திய முனிவர் சிவாலய முனிவர் பொருட்டுத் திரட்டித் தந்த தேவாரப் பதிகங்கள் இருபத்தைந்தும் 'அகத்தியர் தேவாரத்திரட்டு' என்ற பெயருடன் பாராயணஞ் செய்யப் பெற்று வருவதனை அறிஞர் பலரும் நன்குணர்வர்.

அகத்தியர் தேவாரத்திரட்டில், தேவாரத் திருப்பதிகங் களின் திருவுள்ளக்கிடையாகக் குருவருள், திருவெண்ணீறு (பறையின் வரலாறு), அஞ்செழுத்துண்மை, கோயிற்றிறம், சிவனுருவம், திருவடி, அருச்சனை, அடிமைநிலை என்னும் எண்வகைப் பொருட் பகுதிகள் இடம் பெற்றுள்ளன.

இவையெட்டும்,

> "குருவருளும் வெண்ணீறெழுத்தஞ்சும் கோயில்
> அரனுருவும் என்தலை மேலாக்கும் - திருவடியும்
> சிட்டான அர்ச்சனையும் தொண்டும் சிவாலயர்க்கென்
> றிட்டார் அகத்தியனார் எட்டு"

எனவரும் வெண்பாவிற் குறிக்கப்பெற்றன. 'தோடு கூற்று பித்தா மூன்றும், பீடுடைத் தேசிகன் பேரருளாகும்' என வரும் அகத்தியத் தேவாரத் திரட்டின் சிறப்புப்பாயிரத்தைக் கூர்ந்து நோக்குங்கால் மூவரருளிய தேவாரத் திருப்பதிகங்கள் முழுவதனையும் மேற்குறித்த குருவருள் முதலிய எண்வகைப் பொருள்பற்றிப் பகுத்துணர்ந்து கொள்ளுதல் சிவநெறிச் செல்வர்கள் ஆராய்ந்து கண்ட பொருட்பாகுபாடாம் என்பது நன்கு தெளியப்படும்.

முற்குறித்த அகத்தியர் தேவாரத்திரட்டினைப் போன்று முழுப்பதிகங்களாகத் தொகுக்கப்படாமல், சைவ சித்தாந்தச் செம்பொருட்டுணிபினை இனிது விளக்கும் குறிப்புடைய தனித்தனிப் பாடல்களாக உமாபதி சிவாசாரி யாரால் தொகுக்கப்பெற்றது. 'திருமுறைத் திரட்டு' என்பதாகும். இது தேவார அருள்முறைத் திரட்டு எனவும் வழங்கப் பெறுகின்றது. சைவ சமய சந்தானகுரவருள் ஒருவராகிய உமாபதி சிவாசாரியார் கருத்திலுறை திருவருளும் இறைவனூலுங்கலந்து சிவப்பிரகாசம் திருவருட்பயன் முதலிய சைவசித்தாந்த சாத்திர நூல்களை இயற்றும் நிலையில், தாம்கூற எடுத்துக்கொண்ட சைவசமயத் தத்துவ நுண்பொருளுக்கு அரண்செய்யும் முறையில் முன்னூல் சான்றாகத் தொகுத்தளிக்கப்பட்ட சிறப்புடையது இத்திருமுறைத் திரட்டாகும். இச்செய்தி "முன்னூல் சான்று மருவுதிருமுறைத்திரட்டு வைத்தனன் மன்னுயிர்க்கே" எனவரும் ஞானதீக்கைத் திருவிருத்தத்தால் நன்கு விளங்கும்.

இத்திருமுறைத் திரட்டில் மூவர் தேவாரப் பதிகங்களிலிருந்து தொண்ணூற்றொன்பது திருப்பாடல்கள் தொகுக்கப்பெற்றுள்ளன. இவை 1) பதிமுதுநிலை, 2) உயிரவைநிலை, 3) இருண்மலநிலை, 4) அருளதுநிலை,

5) அருளுருநிலை, 6) அறியும்நெறி, 7) உயிர் விளக்கம், 8) இன்புறுநிலை, 9) அஞ்செழுத்தருள்நிலை, 10) அணைந்தோர் தன்மை எனப் பத்து அதிகாரங்களாகப் பகுக்கப் பெற்றுள்ளன. இப்பத்துத் தலைப்புக்களும் இவ்வாசிரியர் இயற்றிய திருவருட்பயன் என்ற நூலிலும் இம்முறையே அமைந்துள்ளன. இவ்வமைப்பினை நுணுகி நோக்குங்கால் திருவருட் பயன் என்பது, திருவருட்பனுவலாகிய தேவாரத் திருமுறையின் பயனாகச் சைவசித்தாந்தத் தத்துவவுண்மை களைச் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் நோக்கத்துடன் உமாபதி சிவாசாரியாரால் இயற்றப்பெற்ற சைவசித்தாந்த சாத்திரம் என்பது நன்கு தெளியப்படும்.

தேவாரத் திருப்பதிகங்களில் அறிவுறுத்தப்பெறும் நற்பொருள்களை நாள்தோறும் சிந்தித்துணரும் முறையில் தொகுக்கப்பெற்றுள்ள அகத்தியர் தேவாரத் திரட்டு, திருமுறைத் திரட்டு என்னும் இத்தொகுப்புக்களின் அமைப்பினைக் கூர்ந்து நோக்குங்கால், நம் முன்னோர்கள் தேவாரத் திருப்பதிகங்களின் பொருள் நலங்களைக் குருவருள் முதலிய எட்டு வகையாலும் பதிமுதுநிலை முதலிய எட்டிறந்த பலவகையானும் பகுத்து ஆராய்ந்துள்ளார்கள் என்பது நன்கு புலனாகின்றது. தேவாரத் திருப்பதிகங்கள், திருவாசகம் முதலிய சைவத் திருமுறைகளின் சாரமாக அமைந்தனவே சிவஞான போதம் முதலிய சாத்திரங்கள் ஆகும்.

சைவ சமய குரவராகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் சிவனடியே சிந்திக்கும் சிவஞானம் பெற்ற செம்புலச் செல்வர்கள் ஆதலால் அப்பெருமக்களைப் பண்டை நற்றவத்தால் தோன்றிப் பரமனைப் பத்தி பண்ணும் தொண்டர் எனவும் சிவாகமங்களிற் கூறப்பட்டபடி கால்முறையினன்றி இறைவன் தானே எளிவந்து அவர்களை ஆட்கொண்டு சிவகதியிற் சேர்த்தருளினன் எனவும் மெய்ந்நூல்கள் கூறும் கொள்கைகளால் வேறுபாடுடைய எல்லாச்சமயங்களாலும் வழிபடப்பெறும் இறைவன் மாதொருபாகனாகிய சிவபெருமானே எனத்தெளிந்து

சமயங்களிடையே காணப்படும் கொள்கை வேறுபாடுகளைக் கருதாமல் எவ்வுயிர்க்கும் இறைவன் ஒருவனே என்றுந் தெளிந்து வழிபடுதலொன்றே உலகமக்கள் உய்தி பெறுதற்குரிய நன்னெறியாகும் என்பது சைவசமய அருளாசிரியர்களின் துணிபாகும்.

> "எத்தவத்தோர்க்கும் இலக்காய்நின்ற எம்பெருமான்"
> (1-44-10)

> "எங்கேனும் யாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்
> கிங்கேயென்றருள் புரியும் எம்பெருமான்" (2-40-6)

என ஆளுடையபிள்ளையாரும்,

> "விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயஞ்செய்தே
> எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற்கேற்றதாகும்"

> "பாராழிவட்டத்தார் பரவியிட்ட
> பன்மலரும் நறும்புகையும் பரந்து தோன்றும்" (6-18-6)

> "ஆரொருவர் உள்குவாருள்ளத்துள்ளே
> அவ்வுருவாய் நிற்கின்ற அருளுந்தோன்றும்" (6-18-11)

என ஆளுடைய அரசரும்,

> "அறிவினான் மிக்க அறுவகைச் சமயம்
> அவ்வவர்க்கங்கே ஆரருள் புரிந்து"

என ஆளுடைய நம்பியும் அருளிய பொருளுரைகள் எல்லாச் சமயத்தாரும் தனித்தனியே செய்கின்ற வழிபாடுகள் அனைத்தும் உலக முதல்வனாகிய ஒருபெருங்கடவுளையே சென்று சார்கின்றன என்பதும் சமயங்கடந்த தனிமுதற் பொருளாகிய அவ்விறைவனே எல்லாச் சமயத்தார்க்கும் எளிவந்து அருள்சுரக்கும் பேரருள் முதல்வனாகத் திகழ்கின்றான் என்பதும் ஆகிய பேருண்மையினை நன்கு வற்புறுத்துகின்றன. மக்கள் தாம் தாம் போற்றும் தெய்வத் திருவுருவவேறுபாடுகளாலும் தாம் தாம் மேற்கொண்ட தத்துவக்கோட்பாடாகிய கொள்கை வேறுபாடுகளாலும் பிற்காலத்திற் சமயங்களிடையே பிணக்குக்கள் தோன்றி

மக்கள் வாழ்விலே குழப்பம் விளைவித்த நிலையில் சைவ சமய அருளாசிரியர்கள் அறிவுறுத்திய சமய ஒருமைப் பாட்டுணர்வினை மீண்டும் வலியுறுத்தும் நிலையில் அமைந்தது,

> "சென்றநெறியெல்லாம் செந்நெறியாம்படி
> நின்ற பரிசறிந்துந்தீபற
> நீசெயல் செய்யாதேயுந்தீபற" (37)

எனவரும் திருவுந்தியாராகும்.

இது தன்முனைப்பின்றித் திருவருள் வழி யொழுகினால் எல்லாநெறிகளும் நன்னெறியேயாகும் என வற்புறுத்துகின்றது. "உலக மக்கள் தத்தம் வினைக்கு ஈடாகச் சென்ற வழிகள் எல்லாம் செவ்விய நன்னெறிகளாக அமையும்படி உயிர்களின் உள்ளும்புறம்பும் இறைவன் உறுதுணையாய் நின்று அருள்புரியும் திருவருளின் திறத்தினை அறிந்து தெளிவாயாக. நீயாக எந்தச் செயலையும் தன்முனைப்பினாற் செய்தலைத் தவிர்வாயாக" என்பது இதன் பொருளாகும். இத்திருவுந்தியாரில் 'நெறி' என்றது உலக மக்கள் மேற்கொண்ட சமயநெறிகளைச் சென்ற நெறி யெல்லாம் செந்நெறியாம் படி நின்ற பரிசு என்றது மக்கள் கடைப்பிடித்தொழுகுகின்ற எல்லாச் சமயநெறிகளும் ஏணிப்படிகளாக அமைய இவையனைத்தும் முடிவில் தன்கண் வந்து சேரும்படி எல்லோரையும் செந்நெறியாகிய சிவநெறிக்கேயுரியராகத் திருத்திப் பணிகொண்டு அருள் புரியவல்ல இறைவன் தானொருவனே யென்னும்படி எச்சமயத்தார்க்கும் எவ்வுயிர்க்கும் ஒப்ப அருள்கூர்ந்து நிற்கும் இறைவனது பொதுமை நிலையினை,

> "ஆறு சமயத்தவரவரைத்
> தேற்றுந்தகையன தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே
> ஏற்றுந்தகையன இன்னம்பரான்றன் இணையடியே"
> (4-100-7)

எனவரும் அப்பர் அருண்மொழி இறைவனது இப்பொதுமை நிலையினை நன்கு புலப்படுத்தல் காணலாம். 'நீ செயல் செய்யாதே' என்றது, 'இறைவனது திருக்குறிப்புக்குமாறாக

நினது தற்போதத்தால் சிலசெயல்களைச் செய்யத் தொடங்கிப் பழிக்கு ஆளாகாதே' என அறிவுறுத்தியவாறு.

மேற்குறித்த திருவுந்தியாரின் பொருளை விரித் துரைப்பதாக அமைந்தது,

> "யாதேனுங் காரணத்தால் எவ்வுலகி லெத்திறமும்
> மாதேயும் பாகன் இலச்சினையே - யாதலினால்
> பேதமே செய்வாய் அபேதமே செய்திடுவாய்
> பேதாபேதஞ் செய்வாய்பின்" (82)

எனவரும் திருக்களிற்றுப்படியாராகும். "உலகப் பொருள் களில் யாதேனும் ஒன்றை ஆய்வுக்குரிய பொருளாகக் கொண்டு அதனதன் அமைப்புக்கும் இயக்கத்திற்கும் உரியதனை ஏதுவாகக் கொண்டு நோக்கினாலும் எல்லா வுலகங்களிலும் உள்ள எவ்வகைப் பொருள்களும் சத்தியுடன் கூடிய சிவனுடைய அடையாளமாகவே யமைந்திருத்தலால் (கடவுள் உயிர் உலகு என்னும் முப்பொரு ளுண்மையினை யுணரப் பெற்ற நீ) அழிந்துமாறும் இயல்பினதாகிய உலகமும், என்றும் அழியாவியல்பினதாகிய சிவமும் வேறு வேறு பொருள்கள் எனக் கொண்டாலும் கொள்க, உலகுயிர் களாய்க் கலந்து இயங்கும் நிலையில் எல்லாம் பிரமமே என அபேதமாகக் கொண்டாலும் கொள்க, அன்றி இவை சொல்லும் பொருளும்போல் ஒருவாற்றான் ஒன்றாதலும் ஒருவாற்றான் வேறாதலும் ஆகிய பேதாபேதப் பொரு ளெனக் கொண்டாலும் கொள்க (அது பற்றிக் கவலை யில்லை) என்பது இதனால் அறிவுறுத்தப்படும் பொருளாகும்.

மேற்கூறிய பேதம், அபேதம்,பேதாபேதம் என்னும் மூவகைகளுள் ஒன்றைக் கடைப்பிடித்து இறைவனை நினைந்து வழிபாடு செய்வாயானால் எல்லாம் ஆம் இறைவன் இம்மூவகையுள் ஒன்றில் நின்று உனக்கு அருள்சுரப்பதுடன் இம்முத்திறமும் ஒருங்கமைய உலகுயிர்களோடு ஒன்றாய் வேறாய் உடனாய் இங்ஙனம் இரண்டறக் கலந்து விளங்கும் இயல்பினையுடையான் அவ்விறைவன் என்னும் அத்துவித உண்மை பின்பு உனக்கு நன்கு புலனாகும் என்பார் 'பின்' என்றார். பின் என்பது எச்சமாய் நின்று, 'பின் உனக்கு

எல்லாம் விளங்கும்' என்னும் பொருளைத்தந்து நின்றது. எல்லாச் சமயத்தாராலும் மனமொழி மெய்களாற் சிந்தித்துத் துதித்து வழிபடப்பெறும் தெய்வம்ஒன்றே என்னும் இவ்வுண்மையினை வலியுறுத்தும் முறையில் அமைந்தது,

> "மனமது நினைய வாக்குவழுத்த மந்திரங்கள் சொல்ல
> இளமலர் கையிற் கொண்டங்கிச் சித்ததெய்வம் போற்றிச்
> சினமுதலகற்றி வாழுஞ் செயல் அறமானால் யார்க்கும்
> முனமொரு தெய்வம்எங்கும் செயற்கு முன்னிலையா
> மன்றே"

எனவரும் சிவஞான சித்தியார் திருவிருத்தமாகும்.

ஆன்மபோதங்கெட எல்லாம் வல்ல இறைவனைத் தியானிக்கும் இயல்புடைய பெரியோர்கள், இவ்வுலக வாழ்வில் கருவி கரணச் சேட்டைகளின் நீங்கிச் சிவபரம் பொருளின் அருட்செயலே தம்பால் விளங்கப்பெற்றுத் திகழும் தூய நிலை சீவன் முத்தி நிலை எனப்படும். இங்ஙனம் பசுகரணங்களெல்லாம் பதிகரணங்களாகப் பெற்ற செம்புலச் செல்வர்களாகிய இப்பெருமக்களைக் "காணுங்கரணங்களெல்லாம் பேரின்பமெனப்பேணும் அடியார்" எனப் போற்றுவர் பெரியோர்.

> "அறவே நின்னைச் சேர்ந்த அடியார் மற்றொன்றறியாதார்
> சிறவே செய்து வழிவந்து சிவனே நின்தாள் சேர்ந்தாரே"
> (திருவாசகம்)

என்றவாறு, விழிப்புநிலையிலேயே உலகப்பொருள்களில் தோய்வற்று மேல்நிலையில் நின்று தன்செயலறச் சிவமேதானாகத் திகழும் திருவருள் நலம் வாய்க்கப்பெற்ற இப்பெருமக்களை,

> "சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்தவர்கள் உலகிற்
> சருவ சங்க நிவிர்த்திவந்த தபோதனர்கள் இவர்கள்
> பாக்கியத்தைப் பகர்வதுவென் இம்மையிலேயுயிரின்
> பற்றறுத்துப் பரத்தையடை பராவுசிவர் அன்றோ"
> (சித்தியார், சூ. 8. விருத்தம் 85)

எனப்போற்றுவர் அருணந்தி சிவாசாரியார். பராவுதல்- சஞ்சரித்தல். பராவுசிவர் என்றது, மக்கள் வடிவினை மேற்கொண்டு உலகிற் சஞ்சரிக்கும் சிவபரம்பொருள் என்னும் கருத்தில் சிவஞானிகளுக்கு வழங்கும் பெயராகும்.

"நிராமய பராபர புராதன பரவுசிவராகவருளென்
நிராவுமெதிராயது பராநிலை புராணனமராதி பதியாம்"
(3. 6. 6)

எனவரும் ஆளுடையபிள்ளையார் தேவாரத்தில் இப்பெயர் இடம் பெற்றுள்ளமை காணலாம். பராவுசிவர் எனப் போற்றப்பெறும் இப்பெருமக்களை 'நடமாடுங்கோயில் நம்பர்' (திருமந்திரம் 1857) எனக் குறிப்பிடுவர் திருமூல நாயனார்.

இங்ஙனம் தன் செயல் என்பது ஒனறின்றி உயிர்முனைப் படங்கிச் சித்தம் சிவமாகப் பெற்ற மெய்யடியார்கள் இவ்வுலகிற் செய்யும் செயல் அனைத்தும் தவச்செயலாம் என்பதும், அவற்றை இறைவன் தன் செயலாகவே ஏன்றுகொண்டு அவரோடு ஒட்டி உடனாய் நின்று அருள்புரிவன் என்பதும்,

"எனதுரை தனதுரையாக"

எனவும்,

"உயிராவணமிருந்துற்று நோக்கி உள்ளக்கிழியின்
உருவெழுதி
உயிர் ஆவணஞ்செய்திட்டு உன்கைத்தந்தால்
உணரப்படுவாரொடொட்டிவாழ்தி" (6.25.1)

எனவும்,

"தொடர்ந்தென் சிந்தைத் தன்னுருவைத் தந்தவனை"

எனவும்,

"சித்தஞ்சிவ மாக்கிச்செய் தனவே தவமாக்கும்
அத்தன் (திருவாசகம்)

எனவும்,

"நற்செயலற்றிந்தநாமற்றபின்நாதன்
தன்செயல் தானேயென்றுந்தீபற
தன்னையே தந்தானென்றுந்தீபற" (திருவுந்தியார் 6)

எனவும் வரும் அருளனுபவமொழிகளால் இனிது விளங்கும்.

"ஆற்றின் வழியேசென்று கடலிற்கலந்து உவர்த் தன்மை பெற்ற நீரானது கடலோதத்தால் மீளவும் ஆற்று நீருடன் கலந்தபொழுது அந்நீரையும், உவர்ப்புச் சுவையுடையதாகச் செய்வது போன்று, சித்தம் சிவமாகப் பெற்ற ஞானிகளது உணர்வு, இறையருட்பெருக்கால் உலகிலேயே மீளவும் கலக்கநேரிட்டால் அக்கலப்பு, பாசப் பிணிப்புடைய மக்களுடைய மனமாயை கன்மங்களையும் நீக்கி நலஞ்செய்யும் ஆற்றலுடையது" என்பர் பெரியோர். இவ்வாறு சிவமாந்தன்மைப் பெருவாழ்வினைப்பெற்ற அருட்செல்வர்கள்பால் இறைவன் உடனாய் நின்று அவர்களைக் கொண்டு அருட்செயல் பல நிகழ்த்தியருள்வன் என்பதற்கு எடுத்துக்காட்டாகத் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர், மாணிக்கவாசகர் ஆகிய சைவ சமயகுரவர் நால்வரும் செய்தருளிய அற்புதங்களைத் திருக்களிற்றுப்படியார் 70, 71, 72, 73 ஆகிய பாடல்களில் விரித்துரைப்பர் திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார். சைவ சமய குரவராகிய இவர்கள் இவ்வுலக வாழ்வில் உயிர்கள் படுந்துயரங்களை எண்ணிய நிலையில் நம்ம னோருடைய மும்மலங்களையும் மாற்றும் அருமருந்தாகத் திருவாய்மலர்ந்தருளிய அருளுரைகளே தேவாரம் திருவாசகம் முதலிய அருள் நூல்களாகும்.

சிவஞானச் செல்வர்களாகிய இவர்கள், உலகமக்கள் அனைவரும் இறைவன் திருவருளைப் பெற்று உய்யும்படி சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளை அறிவுறுத்தி அந்நெறிகளில் ஒழுகிக் காட்டியுள்ளார்கள். அவற்றுட் சரியையாவது, திருக்கோயில் களில் அலகிடல், மெழுகல், மலர்கொய்து மாலை தொடுத்தல், இறைவனைப் புகழ்ந்து பாடுதல் முதலாக

உடம்பின் தொழில்களாக நிகழ்வது. இதன் இயல்பினை,

"துண்ணெனவிரும்பு சரியைத் தொழிலர் தோணிபுர மாமே"
(3.81.7)

"கீதத்தை மிகப்பாடும் அடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி" (2.43.5)

என ஞானசம்பந்தரும்,

"பெரும்புலர் காலைமாலை பித்தர்க்குப் பத்தராகி
அரும்பொடு மலர்கள் கொண்டங்கார் வைத்தே
யுள்ளேவைத்து
விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினாலிட வல்லார்க்குக்
கரும்பினிற்கட்டிபோல்வார் கடவூர்வீரட்டனாரே"
(4.31. 4)

"விளக்கினார் பெற்றவின்பம் மெழுக்கினாற் பதிற்றியாகும்
துளக்கில் நன்மலர்தொடுத்தால் தூயவிண்ணேறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின்மெய்ந்நெறிஞானமாகும்
அளப்பில கீதஞ்சொன்னார்க்கடிகள் தாம் அருளுமாறே"
(4.77.33)

"நிலைபெறுமாறெண்ணுதியேல் நெஞ்சேநீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்குப்
புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித்
தலையாரக்கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கராசய போற்றிபோற்றியென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதியென்றும்
ஆரூரா வென்றென்றே அலறாநில்லே" (6.31.3)

எனத் திருநாவுக்கரசரும் விளக்கியுள்ளமை காணலாம்.

கிரியையாவது, திருக்கோயிலில் எழுந்தருளிய சிவலிங்கத் திருவுருவாகிய அருவுருவத் திருமேனியே பொருளென்றுணர்ந்து புறத்தேயும் அகத்தேயும் பூசனை புரிந்து வழிபடுதலாகும். இதன் இயல்பினை,

"நறைமலிதரு மலரொடுமுகை நகுமலர்புகை மிகுவள
ரொளி
நிறைபுனல் கொடுதனை நினைவொடு நியதமும் வழிபடு
மடியவர்
குறைவிலபதம் அணைதரவருள் குணமுடை யிறையுறை
வனபதி
சிறைபுனலமர் சிவபுரமது நினைபவர் செயமகள்
தலைவரே" (1.21.4)

எனவும்,

"தடங்கொண்டதோர் தாமரைப்பூ முடிதன்மேற்
குடங்கொண்டடியார் குளிர்நீர் சுமந்தாட்ட" (1.32.3)

எனவும்,

"வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்குவேளூரே"
(2.43. 5)

எனவும் திருஞானசம்பந்தரும்,

"கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி யைம்புலனும் அகத்தடக்கி
எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே"
(4.7.3)

எனவும்,

"காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும் பாலாநிறைய நீரமையவாட்டிப்
பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே"
(4.76.4)

எனவும்,

"மறைகலந்த மந்திரமும் நீருங்கொண்டு

வழிபட்டார் வானாளக் கொடுத்தியன்றே"

எனவும் திருநாவுக்கரசரும்,

"அகத்தடிமை செய்யும் அந்தணன்தான்
அரிசிற்புனல் கொண்டுவந்தாட்டுகின்றான்" (7.9.6)

எனவும்,

"முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்"

எனவும் நம்பியாரூரரும் குறித்துள்ளமை காணலாம்,

யோகமாவது, இறைவனுக்குரிய உருவம், அருவம், அருவுருவம் என்னும் மூவகைத் திருமேனிகளுள் அருவத் திருவுருவமேயே பொருளென்றுணர்ந்து, இறைவனை உள்ளத்துள்ளே வைத்து வழிபடுதல். இதன் இயல்பினை,

"சினமலியறுபகை மிகுபொறி சிதைதருவகை வளிநிறுவிய
மனனுணர்வொடு மலர்மிசையெழுதருபொருள் நியதமும் உணர்பவர்
தனதெழிலுருவது கொடுவடை தகுபரனுறைவது நகர்மதில்
கனமருவிய சிவபுரநினைபவர் கலைமகள் தரநிகழ்வரே"
(1.21.5)

என ஞானசம்பந்தரும்,

"உடம்பெனு மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்துநோக்கில்
கடம்பர் காளைதாதை கழலடி காணலாமே" (4.75.4)

"உயிராவண மிருந்துற்று நோக்கி
உள்ளக் கிழியின் உருவெழுதி
உயிர் ஆவணம் செய்திட்டுன் கைத்தந்தால்
உணரப்படுவாரோ டொட்டிவாழ்தி" (6.25.1)

என நாவுக்கரசரும்,

"ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத்துள்ளே நின்ற
ஒண்பொருள்" (7.45.4)

"தேடுவன் தேடுவன் செம்மலர்ப்பாதங்கள் நாடொறும்
நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கைபிடித்து மகிழ்ந்துளே
ஆடுவன் ஆடுவன் ஆமாத்தூ ரெம் அடிகட்கே" (7.45.9)

"நாற்றானத் தொருவனை நானாயபரனை"

எனச் சுந்தரரும் தெளிவாகக் குறித்துள்ளார்கள்.

ஞானமாவது, மேற்குறித்த வண்ணம் உருவம், அருவுருவம், அருவம் ஆகிய மூன்று திருமேனிகளையும் முறையே வழிபட்டுவர ஆன்மாவின்கண் நிகழும் பக்குவ முதிர்ச்சியாலே உள்ளவாறு மெய்யுணர்வு விளங்கி, உலகெலாங் கடந்தும் உயிர்க்குயிராய் அணுத்தொறும் விரவியும் என்றும் ஒருபெற்றியதாயுள்ள உண்மையறிவு இன்பமே இறைவனது திருமேனியாம் என்றும் முற்குறித்த உருவம் அருவுருவம் அருவம் என்பன பருமைவழியே நுண்மையினையுணர்தல் என்னும் முறைப்படி ஞானத் திரளாய் நின்ற இறைவனை உணர்தற் பொருட்டும் வழிபடுதற் பொருட்டும் கொண்ட திருமேனிகளேயென்றும் உணர்ந்து, முன்னர்க்குறித்த உடம்பின்தொழில் மனத்தொழில் இரண்டினையும் கைவிட்டுக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடுதல் ஆகிய அறிவுத் தொழிலளவில் அமைந்து இறைவனை வழிபடுதலாகும். ஞானநன்னெறியாகிய இதனை,

"நுண்ணறிவால் வழிபாடு செய்யுங்காலுடையான்" (1.5.4)

"ஊனத்திருள் நீங்கிட வேண்டில்
ஞானப்பொருள் கொண்டடிபேணும்" (1.38.3)

என ஆளுடையபிள்ளையாரும்,

"ஞானத்தால் தொழுவார் சிவஞானிகள்
ஞானத்தால் தொழுவேனுனை நானலேன்

ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு
ஞானத்தாயுனை நானுந் தொழுவனே" (5.91.3)

என ஆளுடைய அரசரும்,

"நத்தார்புடை ஞானன்" (7. 80. 1)

"ஞானமூர்த்தி நட்டமாடி" (7. 81. 7)

என ஆளுடைய நம்பியும் குறித்துள்ளமை இங்கு மனங் கொளத்தகுவதாகும்.

"அறிதல் ஒப்புமையால் சரியை முதலிய நான்கும் ஞானமேயாம் எனவும், ஆயினும் 'அரும்பு மலர் காய் கனியாதல் போலச்' சோபான முறையாகிய தம்முள் வேறுபாட்டால் முறையே ஒன்றற்கு ஒன்று அதிகமாய், நான்காம் எண்ணு முறைமைக் கண் நின்ற ஞானமே முடிவாகிய ஞானமாம் எனவும் எனவே இந்நான்கினும் அறிவுநுணுகி வளரவளர, அறியாமையை விளைக்கும் மலமும் அம்முறையே தேய்ந்து தேய்ந்து வருதலின் அவற்றின் பயனாகிய சாலோகம் முதலிய நான்கும் முத்தியேயாம் எனவும் ஆயினும் அம்மலநீக்கமும் அவ்வாறு நிகழும் சோபான முறையானே அவை ஒன்றற்கு ஒன்று ஏற்றமாய், அவற்றுள் நான்காம் எண்ணுமுறைமைக்கண் நின்ற சாயுச்சியம் ஒன்றே முடிவாகிய முத்தியாம்" எனவும் கூறுவர் சிவஞானமுனிவர்.

இறைவனை அடைதற்குரிய இந்நால்வகை நெறிகளையும் முறையே, தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என வழங்குவர் சான்றோர். இந்நால்வகை நெறிகளையும் கடைப்பிடித்து ஒழுகுவோர் முறையே சாலோகம் (இறைவன் உலகினையடைதல்), சாமீபம் (இறைவனது அருகே இருத்தல்), சாரூபம் (இறைவனது உருவினைப் பெறுதல்) என்னும் பதமுத்தி யையும், சாயுச்சியம் (இறைவனுடன் இரண்டறக் கலத்தல்) என்னும் பரமுத்தியையும் அடைவர் எனமெய்ந்நூல்கள் கூறும். இங்குக்குறித்த நால்வகை மார்க்கங்களையும் முறையே மகன்மைநெறி, தொண்டுநெறி, தோழமை நெறி,

(இரண்டற) ஒன்றும்நெறி என வழங்குதல் பொருந்தும், நால்வகை நெறிகளின் இயல்பினையும் பயனையும் சிவஞான சித்தியார் எட்டாஞ்சூத்திரத்தில் வரும் 18 முதல் 22 வரை யுள்ள திருவிருத்தங்கள் விரித்துரைக்கின்றன.

மக்கள் விரும்பிச் செய்தற்குரிய வேள்விகள் கன்ம வேள்வி, தவவேள்வி, செபவேள்வி, தியானவேள்வி, ஞான வேள்வி என ஐந்தாகும். இவற்றுள் முற்கூறப்பட்ட நான்கும் போகத்தையூட்டுவன. ஓதல், ஓதுவித்தல், கேட்டல், கேட்பித்தல், சிந்தித்தல் என ஐவகையாகக் கூறப்படும் ஞான வேள்வி ஒன்றுமே உயிர்கட்கு வீடுபேற்றை அளிக்கவல்லது. இதனை,

"ஞானநூல்தனையோதல் ஓதுவித்தல்
நற்பொருளைக் கேட்பித்தல், தான்கேட்டல், நன்றா
ஈனமிலாப் பொருள் அதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவனடி அடைவிக்கும் எழில்ஞானபூசை
ஊனமிலாக் கன்மங்கள் தபம் செபங்கள் தியானம்
ஒன்றுக்கொன்று உயரும் இவை ஊட்டுவது போகம்
ஆனவையான் மேலான ஞானத்தால் அரனை
அருச்சிப்பர் வீடெய்த அறிந்தோர் எல்லாம்"

என்ற பாடலில் அருணந்தி சிவனார் அறிவுறுத்தியுள்ளார்.

"ஐவகையால் நினைவார்பால் அமர்ந்து தோன்றும்" (6.18.3)

எனவரும் நாவுக்கரசர் வாய்மொழி இங்கு நினைத்தற் குரியதாகும்.

மேற்குறித்த நால்வகை நெறிகளுள் தாதமார்க்கத்து இயல்பு திருநாவுக்கரசரிடத்தும், சற்புத்திர மார்க்கத்து இயல்பு திருஞானசம்பந்தரிடத்தும், சகமார்க்கத்தியல்பு நம்பியாரூரரிடத்தும் சன்மார்க்கத் திறம் மாணிக்கவாசக ரிடத்தும் அன்னோர் தம் வரலாற்று நிகழ்ச்சிகளில் வெளிப்பட்டு விளங்குதல் காணலாம்.

சரியை வழி நின்றவர் அப்பர் எனவும், கிரியை வழி

நின்றவர் சம்பந்தர் எனவும், யோக நெறி நின்றவர் சுந்தரர் எனவும், ஞானநெறி நின்றவர் மாணிக்கவாசகர் எனவும் கூறுதல் உண்டு. ஆயினும் சைவ சமய குரவராகிய இந்நால்வரும் எல்லாம் வல்ல இறைவனருளால் சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் கைவரப்பெற்று முதிர்ந்த ஞான நெறியில் நின்ற செம்புலச் செல்வர்களே என்பது சேக்கிழார் முதலிய அருளாசிரியர்களின் துணிபாகும்.

இறைவன் எல்லாமாய் அல்லதுமாய் நிற்கும் இயல்புடையவன் எனவும், அம் முதல்வன் நம்மனோர்க்கு அருள்செய்யும் பொருட்டு "மலைமகள் பாகமாக அருள் காரணத்தின் வருவார்" என்றபடி அருளே திருமேனியாக அவ்வப்பொழுது அடியார்கள் விரும்பிய திருமேனியினைக் கொண்டு தோன்றி அருள்புரிவன் எனவும் தேவாரம் கூறும். நின்ற திருத்தாண்டகம் முதலிய திருப்பதிகப்பாடல்கள் இறைவனது எல்லாம் ஆகிய நிலைமையையும் 'மண் ணல்லை விண்ணல்லை' என்பது முதலிய பாடல்கள் அவன் அல்லனாய் நிற்கும் நிலைமையையும் உணர்த்துவன. இறைவன் உருவம் அருவம் அருவுருவம் என்று சொல்லப் படும். மூவகையுள் ஒன்றிலும் அடங்காதவனாய் அப்பாற் பட்டு நிற்கும் இயல்பினன் ஆதலின் அம்முதல்வனை அம் மூவகையுள் அடக்கி உரைத்தல் பொருந்தாது என்பதனை 'எந்தையாரவர் எவ்வகையார் கொலோ' (3.54.3) எனவரும் தொடரில் ஞானசம்பந்தப் பிள்ளையார் குறிப்பிட்டுள்ளமை காணலாம்.

வேதம் பசுவாகவும், சிவாகமம் பாலாகவும், நால்வர் ஓது தமிழாகிய திருமுறைகள் நெய்யாகவும் அமைய அந்நெய்யின் உறுசுவையாக அமைந்ததே மெய்கண்டா ரருளிய சிவஞான போதமாகும்.

திருமுறைக்கும் சிவஞான போதத்திற்கும் உள்ள இத் தொடர்பினைப் விரித்துரைப்பது,

"வேதம்பசுஅதன்பால் மெய்யாகமம் நால்வர்
ஓதுதமிழ் அதனின் உள்ளுறு நெய் - போதமிகு

நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணை மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறன்"

எனவரும் பழம்பாடலாகும்.

கி.பி. 13 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த மெய்கண்டார் தமிழரின் தொன்மைச் சிவநெறியினை உணர்த்தும் முறையில் சிவாகமப் பொருளை விரித்துரைக்கும் 'சிவஞான போதம்' என்னும் தமிழ் முதல் நூலை இயற்றினார். "இந்நூல் சிவாகமங்களின் ஞானபாதப் பொருளை ஆராய்ந்து வரையறுத்து பொருள்துணிபு உணர்த்துதலின் 'சிவஞான போதம்' என்னும் பெயர்த்தாயிற்று என்பர் சிவஞான முனிவர். சிவஞான போதம் பன்னிரு சூத்திரங்களால் இயன்றது. கருத்தும் மேற்கோளும் ஏதுவும் உதாரணமும் ஒருங்குடையதாய்த் திகழும் இந்நூலின் முதல் மூன்று சூத்திரங்கள் பதி, பாசம், பசு என்னும் முப்பொருள்களின் உண்மைக்குப் பிரமாணங்கூறுவன. நான்கு ஐந்து ஆறாம் சூத்திரங்கள் முறையே பசு, பாசம், பதி ஆகிய முப்பொருள் களின் இலக்கணம் உணர்த்துவன. ஏழு எட்டு ஒன்பதாஞ் சூத்திரங்கள் பாசத்துட்பட்ட உயிர்கள் பாசத்தினை ஒழித்து சிவபரம் பொருளையடைதற்குரிய சாதனம் கூறுவன. பத்து, பதினொன்று, பன்னிரண்டாம் சூத்திரங்கள் பாசநீக்கமும் சிவப்பேறும் ஆகிய பயன் கூறுவன. இவ்வகையால் இந்நூல் பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயனியல் என நான்கு இயல்களை உடையதாயிற்று. இவற்றுள் முப் பொருள்களின் பொதுஇலக்கணம் உணர்த்தும் முன்னுள்ள ஆறு சூத்திரங்களும் 'பொது அதிகாரம்' எனவும், அவற்றின் சிறப்பிலக்கணம் உணர்த்தும் பின் ஆறு சூத்திரங்களும் 'உண்மை அதிகாரம்' எனவும் வழங்கப்பெறும். சைவத் திருமுறைகளில் பன்னிரண்டாந் திருமுறையாகத் திகழும் திருத்தொண்டர் புராணத்தில் போற்றப்பெறும் சிவனடியார் செய்திகளை உளங்கொண்டு திருத்தொண்டர் திருவேடத் தையும், திருக்கோயில்களையும் சிவனெனவே தொழுது போற்றும் சீவன் முத்தர்களின் இயல்பினை அறிவுறுத்தும் நிலையில் சிவஞான போதத்தின் பன்னிரண்டாம் சூத்திரம் அமைந்துள்ளமை குறிப்பிடத்தகுவதாகும்.

அவன் அவள் அது எனப் பகுத்துரைக்கப்படும் உலகத்தொகுதி தோன்றுதல், நிலைபெறுதல், ஒடுங்குதல் ஆகிய முத்தொழிலுடைமையால் அஃது ஒரு வினைமுதலால் தோற்றுவிக்கப்பெற்ற உள்பொருளே எனவும், உள்பொரு ளாகிய உலகம் உயிர்களின் மலத்தீர்வு காரணமாகத்தான் ஒடுங்குதற்குக் காரணமாகிய கடவுளாலேயே மீளவும் தோற்றுவிக்கப்பெற்று நிலைபெறுவதெனவும், உலகிற்கு அந்தத்தைச் செய்து ஒடுக்கும் கடவுளே அதனைத் தோற்றுவிக்கும் ஆதியும் ஆவான் எனவும் அறிவுறுத்துவது,

> "அவனவ ளதுவெனும் அவைமூ வினைமையின்
> தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
> அந்தம் ஆதி என்மனார் புலவர்"

எனவரும் சிவஞானபோத முதற்சூத்திரமாகும். அவன் அவள் அது எனப்பகுத்துரைக்கப்படும் உலகத்தொகுதி தோன்றுதல் நிலைபெறுதல் ஒடுங்குதல் ஆகிய முத்தொழிற் படுவதென்பதும் அங்ஙனம் உலகினை மூவுருவில் நின்று முத்தொழிற்படுத்தும் இறைவன் ஒருவனே என்பதும் ஆகிய உண்மைகளை,

> "புவம் வளிகனல் புனல் புவிகலையுரைமறை திரிகுண
> மமர்நெறி
> திவமலிதரு சுரர்முதலியர் திகழ்தரு முயிரவையவை தம
> பவமலி தொழிலது நினைவொடுபதும நன்மலரது மருவிய
> சிவனது சிவபுரம் நினைபவர் செழுநிலனினில் நிலை
> பெறுவரே" (1.21.1)

எனவும்,

> "மலைபல வளர்தரு புவியிடை மறைதருவழிமலி
> மனிதர்கள்
> நிலைமலிசுரர் முதலுலகுகள் நிலைபெறுவகை
> நினைவொடுமிகும்
> அலைகடல் நடுவறிதுயி லமரரியுருவியல் பரனுறைபதி
> சிலைமலிமதிள் சிவபுர நினைபவர் திருமகளொடு
> திகழ்வரே" (1.21.2)—

எனவும்,

"பழுதில கடல்புடை தழுவிய படிமுதலியவுலகுகள் மலி
குழுவிய சுரர்பிறர் மனிதர்கள் குலமலிதரு முயிரவை
யவை
முழுவது மழிவகை நினைவொடு முதலுருவியல்
பரனுறைபதி
செழுமணியணி சிவபுரநகர் தொழுமவர் புகழ்மிகு
முலகிலே" (1.21.3)

எனவும் வரும் திருப்பாடல்களில் திருஞானசம்பந்தர் அறிவுறுத்தியருள்கின்றார். இறைவன் ஒருவனேயாயினும் அம்முதல்வன் முத்தொழில்களைச் செய்யுமிடத்து அவ்வத் தொழிலுக்கு உரிய வகையிவ் மூவுருவில் நின்று இயற்றி யருள்கின்றான் என்பது திருமுறையாசிரியர் கருத்தாகும். இந்நுட்பம்,

"அரனென்கோ நான்முகன் என்கோ அரிய
பரனென்கோ பண்புணர மாட்டேன் - முரணழிய
தானவனைப் பாதத் தனிவிரலாற் செற்றானை
யானவனை எம்மானை யின்று" (அற்புதத். 18)

எனக் காரைக்காலம்மையாரும், 'படைத்தளிப்பழும் மூர்த்திகளாயினை' (திருவெழுகூற்றிருக்கை) எனச் சம்பந்தரும்,

"ஒருவனாய் உலகேத்த நின்றநாளோ
ஒருருவே மூவுருவ மானநாளோ"

என அப்பரடிகளும்,

"மூவுருத்தனதாம் மூலமுதற் கருவை"

என நம்பியாரூரரும்,

"அரியாகிக் காப்பான் அயனாய்ப் படைப்பான்
அரனாய் அழிப்பவனுந் தானே"
(திருக்கயிலாய ஞானவுலா)

எனச் சேரமான் பெருமாள் நாயனாரும்,

"ஆதிப்பிரானும்அணிமணிவண்ணனும்
ஆதிக்கமல மலர்மிசை மாயனும்
சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியில் ஒன்றெனார்
பேதித்துலகம் பிணங்குகின்றார்களே"

(திருமந்திரம் 104)

எனத் திருமூலதேவரும் அருளிய வாய்மொழிகளால் இனிது புலனாம்.

இனி ஒருவனாகிய இறைவன் தொழில்வகையால் மூவுருவினனாய் மூன்று பெயர்களில் வைத்துப் போற்றப் பெற்ற உண்மை நிலையினையுணராதார் ஒவ்வொரு தொழிலுக்கும் தனித்தனியே உரியவராக அயன் அரி அரன் என்னும் மூவரை வேறுபடக் கொண்டு வழிபடுவாராயினர். அங்ஙனம் வழிபடப்பெறும் "பிரமவிட்டுணு உருத்திரர் களிடத்து முதல்வனுடைய சத்திகள் பதிந்து நின்று செலுத்துதலால் அவருடைய உருவங்கள் முதல்வனுரு வோடு ஒப்ப வைத்துக் கூறப்படும். அவ்வாறு சத்திகளாற் செலுத்தப்படாது பிரமன் முதலியோரே படைப்பு முதலிய தொழில்களைச் செய்வரெனக் கூறின் முதல்வனொருவன் வேண்டுவதில்லை. ஆதலால் முதல்வனாகிய சிவனே ஐந்தொழில்களையுஞ் செய்வன். அவனது சத்திகளால் அதிட்டிக்க (செலுத்த)ப் பட்டுப் பிரமன் முதலியோர் ஒவ்வொரு தொழிலைச் செய்வர்" என்பது,

"அயன்றனை யாதியாக அரனுருவென்ப தென்னை
பயந்திடுஞ் சத்தியாதிபதிதலாற் படைப்புமூலம்
முயன்றனர் இவரேயாயின் முன்னவன் தன்னை முற்றும்
நயந்திடும் அவன் இவர்க்கு நண்ணுவதொரோ
வொன்றாமே"

(சித்தியார். சுபக். 80)

எனவரும் திருவிருத்தத்தால் இனிது விளங்கும்.

'உயிரணவமுழுவதும் அழிதருவகை நினைவொடு முதலுருவியல்பரன்' என அழிக்குங்கடவுளே முதலிற் படைக்குங்கடவுளும் ஆவன் என ஆளுடையபிள்ளையார் அருளிச் செய்ததனை யுளங்கொண்டு, உலகமெல்லா

வற்றுக்கும் அந்தத்தைச் செய்யும் மகாசங்காரக்கடவுளே ஒடுங்கியவுலகங்களை மீளத்தோற்றுவிக்கவும் செய்ய வல்லவன் என அறிவுறுத்துவார் 'அந்தம் ஆதி என்மனார் புலவர்' என்றார் மெய்கண்டார். 'அந்தம் ஆதி' என்பதற்குச் 'சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம்' என ஆசிரியர் பொருள் விரித்துரைப்பர்.

"அந்தம் ஆதி என்மனார் புலவர்" எனவரும் சிவஞானபோதத் தொடர் 'அந்தமும் ஆதியும் ஆகிய அண்ணலார்' (1. 35. 1) என ஆளுடைய பிள்ளையாரும், "அந்தமும் ஆதியும் ஆகி நின்றீர்" (4. 55. 2) என ஆளுடைய அரசரும் அருளிய திருப்பாடல் தொடர்களை யுளங் கொண்டு கூறியதாகும்.

உயிர்களின் நுகர்ச்சிக்கு நிலைக்களமாயுள்ள உலகம் என்றும் உள்ள பொருள் என்பதும் அதனைத் தோற்றுவித்து நிலைபெறச் செய்பவன் இறைவன் என்பதும்,

"தாயாகி வுலகங்களை நிலைபேறு செய்தலைவன்" (1.15.3) எனவரும் ஆளுடையபிள்ளையார் வாய்மொழியால் அறியப்படும்.

காரியமாகிய உலகத்திற்கு விதைபோன்று காரணமா யமைந்தது மாயை என்னும் சட்சத்தியாகும். அவ்விதையி னின்று முளைதோன்றுமாறு போன்று மாயையினின்றும் உலகம் தோன்றும். விதைக்கு நிலக்களமாயுள்ள நிலம் குளிர்ந்த வழியல்லது விதையினின்றும் முளைதோன்றாது. அது போல மாயை தனக்கு ஆதாரமாய் நின்று தோற்று விக்கும் இறைவனது சத்தி சங்கற்பித்தாலன்றி அம்மாயையி னின்றும் உலகம் தோன்றாது. ஆகவே மாயையின் ஒடுங்கிய உலகம் அதற்கு ஆதாரமாய் நின்ற இறைவன் சத்தியின் ஒடுங்கித் தோன்றியதேயாம் என்பார்,

> "வித்துண்டா மூலம் முளைத்தவா தாரகமாம்
> அத்தன்தாள் நிற்றல்" (சிவ. சூ 1, வெண்பா 3)

என்றார் மெய்கண்டார். இவ்வாறு உலகத்தொகுதியின் மூலம் இறைவனது திருவடியை யெனப்படும் சத்தியினை

ஆதாரமாகக் கொண்டுள்ளது என்பது,

"படிக்கொள் சேவடியான்"

என ஆளுடையபிள்ளையாரும்,

"முந்தாகி முன்னே முளைத்த அடி"

(திருவடித் திருத்தாண்டகம்)

"நடுவாயுலக நாடாயவடி"

என ஆளுடைய அரசரும் அருளிய அருண்மொழிகளால் நன்கு புலனாம். படி - உலகம். படிக்கொள் சேவடி - உலகங்களைத் தன்கண்ணே அடக்கிக் கொண்ட சிவந்த திருவடி என்றது இறைவனது சத்தியினை.

கிழங்கினின்றும் முளைத்த தாமரையை அக் கிழங்கிற்கு ஆதாரமாகிய சேற்றினின்றும் முளைத்தது (பங்கசம்) என்றாற்போல 'உலகு அவனுருவிற் றோன்றி யொடுங்கிடும்' (சித்தியார் 1. 32) என்பர் பெரியோர்.

வேண்டுதல் வேண்டாமையிலானாகிய இறைவன் படைப்பு முதலிய தொழில்களைச் செய்வானாயின் அத்தொழில் பற்றி விகாரமுறுவன் அல்லனோ என வினவு வாரை நோக்கி, கருவி கரணங்களால் வினைசெய்வாரே அவ் வினையால் விகாரப்படுவர். இறைவன் கருவி கரணங்களா லன்றிக் காலதத்துவம் போன்று ஒன்றினுந்தோய்வின்றி நினைவளவானே அத்தொழில்களைச் செய்ய வல்லானாத லின் அவற்றால் விகாரமடைதல் இல்லை என அறிவுறுத்துவது,

"நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தில்
தாக்காது நின்றுளத்திற் கண்டிறைவன் - ஆக்காதே
கண்டநனவுணர்விற் கண்ட கனவுணரக்
கண்டவனில் இற்றின்றாங்கட்டு" (சிவ. 1. 4)

எனவரும் உதாரண வெண்பாவாகும். "இறைவன் இறப்பு நிகழ்வு எதிர்வு முதலியனவாய் வேறுபட்டு எல்லாத் தொழிலும் செய்தும் தனக்கு விகாரமின்றி நிற்கும் காலம்

போல விகாரப்படாது நின்று உலகத்தைக் கரணத்தாற் படையாது உள்ளத்தாற் படைத்து அவ்வாறே காவாது காத்து அழியாது அழித்தலால் கனவிற் கண்டவற்றை நனவுணர்வில் அறிபவன் அவற்றால் தொடக்குண்டு விகாரம் அடையாதவாறு போலத் தொடக்குண்ணாத விகாரமின்றி நிற்பன் என்பது இதன் பொருளாகும். நோக்குதல் - காத்தல், நொடித்தல் - அழித்தல், ஆக்குதல் - படைத்தல். இவ்வுதாரணவெண்பா,

"நோக்காதே எவ்வளவும் நோக்கி னானை
நுணுக்காதே யாதொன்றும் நுணுகி னானை
ஆக்காதே யாதொன்றும் ஆக்கி னானை
அணுகாதா ரவர்தம்மை யணுகா தானைத்
தேக்காதே தெண்கடல்நஞ் சுண்டான் தன்னைத்
திருப்புன்கூர் மேவிய சிவ லோகனை
நீக்காத பேரொளிசேர் நீடூ ரானை
நீதனேன் என்னேநான் நினையா வாறே" (6. 11. 5)

எனவரும் திருத்தாண்டகத்தின் சொற்பொருளை அடியொற்றியமைந்துள்ளமை அறியத்தகுவதாகும். இதன்கண் 'நுணுகுதல்' என்றது பருமையுருவினதாகிய பிரபஞ்சத்தை நுண்ணுருவில் ஒடுக்குதலாகிய அழித்தற் றொழிலைக் குறித்துநின்றது.

உருவும் அருவும் என்னும் அவ்விரு கூற்றுப் பிரபஞ்சத்துள் ஒன்றாகாமல் அவற்றிற்கு அப்பாற்பட்டு வேறாய் விளங்குவது பரம்பொருள் என்பதனைப் புலப்படுத்துவார், 'ஒன்றலா ஒன்று' என அதனைக் குறித்தார் மெய்கண்டார். அதனால் உலகினை இயக்கும் பரம்பொருள் முற்றுணர்வும் அளவிலாற்றலும் பேரருளும் சுதந்திரமும் முதலிய உயர்வற வுயர்ந்த குணங்களுடையன் என்பது பெறப்படும். படவே இத்தன்மையனாய முதற்கடவுள் ஒருவனேயமையுமாகலின் வேறும் அத்தன்மையர் உண்டெனக் கொள்வது மிகையென்னும் குற்றமாம். அன்றியும் பொருட்குக்கூறும் இலக்கணத்துள் ஒருவாற்றானும் வேற்றுமையில்லாதபோது அங்ஙனம் ஒரே தன்மையதாகிய பொருள் ஒன்றாயிருத்தலன்றிப் பலவாக

வேறுபடுதல் இயலாது என்னும் கருத்தால் உலகு உயிர்களை இயக்கியருளும் முதல்வன் ஒருவனாகவேயிருத்தல் வேண்டும் என்பார் 'ஒன்றலா ஒன்று' (சிவ. சூ. 1 வெ.) என வரையறுத் தோதினார் மெய்கண்டார். 'ஒன்றலா ஒன்று' என இறைவனைக் குறித்து வழங்கப்பெற்ற இத்தொடர்,

"எந்தையாரவர் எவ்வகையார்கொலோ"

"ஒருவனாயுலகேத்த நின்றநாளோ" (6)

"ஒன்றும் நீ அல்லை" ( திருவாசகம்)

எனவரும் திருமுறைத் தொடர்களை அடியொற்றி யமைந்துள்ளமை காணலாம்.

ஒன்றலா ஒன்றாகிய அப்பரம்பொருள் போல் என்றும் அழிவின்றி நிலைபெற்றுள்ள உயிர்த்தொகுதி வீடுபேற்றின் கண்ணும் பலவாற்றானும் பரம்பொருளுக்கு மீளா அடிமையாகும் என்பார். 'அதனின் ஈறலா ஒன்று, பலவாறே தொழும்பாகும் அங்கு' என்றார் 'அங்கு' என்றது வீடுபேற்றுநிலையினை. தொழும்பு - அடிமை. பலவாறே தொழும்பு ஆதலாவது, இருள் நீங்கிய நிலையிலும் கண் ஞாயிற்றின் ஒளியையின்றியமையாதவாறு போல மலம் நீங்கிய முத்தி நிலையிலும் ஆன்ம அறிவுக்கு முதல்வனது துணை இன்றியமையாதவாறும் ஆன்மா, கண்படிகம் ஆகாசம் போலச் சார்ந்ததன் வண்ணமாயன்றி முதல்வன் போலத் தனித்து நிற்கும் ஆற்றல் இல்லாதவாறும், முதல்வன்போல் ஐந்தொழில் செய்யும் வினை முதலாம் உரிமையின்றிச் சிவாநுபவம் ஒன்றினுக்கே உரித்தாயவாறும் முதல்வனை நோக்கத்தூல அறிவாகலால் விளக்கொளியுள் கண்ணொளியடங்கி நிற்றல்போல முதல்வனது விரிவினுள் அடங்கி நிற்குமாறும் பற்றி முதல்வனுக்கு என்றும் அடிமை யாதலாம்.

"நாமார்க்குங் குடியல்லோம் ........................<br>
கோமாற்கே நாமென்னும் மீளா ஆளாய்க்<br>
கொய்ம்மலர்ச் சேவடியினையே குறுகினோமே"

என நாவுக்கரசரும்,

"மீளாவடிமையுமக் கேயாளாய்"

என நம்பியாரூரரும் அருளிய வாய்மொழிகள் ஆன்மா, கட்டுநிலையில் மட்டுமன்றி வீட்டு நிலையிலும் முதல்வனுக்கு அடிமையாதலை நன்கு புலப்படுத்தல் அறியத்தகுவதாகும்.

உலக முதல்வனாகிய இறைவன் கலப்பினால் உடம்பின் உயிர்போல் அவ்வுயிர்களேயாகியும், பொருட் டன்மையால் கண்ணின் அருக்கன்போல உயிர்களின் வேறாகியும், உயிர்க்குயிராதல் தன்மையால் கண்ணொளியின் உயிரறிவினையொத்து உயிர்களோடு உடனாகியும் இயைந்து நின்று, தன்னிற்பிரிவிலாச் சத்தியினால் ஊட்டப்பெறும் இருவினைகளால் அவ்வுயிர்கள் இறத்தலையும் பிறத்தலையும் புரியும்படி தனது திருவருளாணையிற் பிரிப்பின்றி ஒன்றாய் நிற்பன் என்னும் உண்மையினை யுணர்த்துவது,

"அவையே தானே யாயிருவினையிற்
போக்குவரவு புரிய ஆணையின்
நீக்கமின்றி நிற்குமன்றே" (சிவ. சூ. 2)

எனவரும் சிவஞான போத இரண்டாஞ் சூத்திரமாகும். உலகுயிர்களோடு இறைவனுக்குள்ள தொடர்பு பேதம், அபேதம், பேதாபேதம் என்னும் மூன்றிற்கும் அப்பாற் பட்டதாய், 'ஒன்றாகாமல் இரண்டாகாமல் ஒன்றுமிரண்டும் இன்றாகாமல்' இரண்டறக் கலந்து நிற்பதாகிய அத்துவித சம்பந்தம் என்பதனை அறிவுறுத்துவது இச்சூத்திரமாகும்.

முதல்வன், உடலும் உயிரும் போல் உலகெலாமாகி நிற்றலால் ஒன்றாகியும் கண்ணொளியும் கதிரவனொளி யும்போல் பொருட்டன்மையால் வேறுபட்டு நின்று அவற்றுக்கு விளக்கந்தருதலின் அவற்றின் வேறாகியும், கண் ஒருபொருளைக் காணும் நிலையில் உயிர் அதனொளியுடன் கலந்து நின்று பொருளைக்காட்டித் தானும் காணுமாறு போல முதல்வனும் உயிர்க்குயிராய்ப் பொருள்களை அறிவித்துத் தானும் உடனிருந்து அறிந்து உதவுதலால் உடனாகியும் இவ்வாறு கலந்து நின்று அருள்புரியும் அத்துவிதத் தொடர்புடையான் என்பது சைவசித்தாந்த

"மீளாவடிமையுமக் கேயாளாய்"

என நம்பியாரூரரும் அருளிய வாய்மொழிகள் ஆன்மா, கட்டுநிலையில் மட்டுமன்றி வீட்டு நிலையிலும் முதல்வனுக்கு அடிமையாதலை நன்கு புலப்படுத்தல் அறியத்தகுவதாகும்.

உலக முதல்வனாகிய இறைவன் கலப்பினால் உடம்பின் உயிர்போல் அவ்வுயிர்களேயாகியும், பொருட் டன்மையால் கண்ணின் அருக்கன்போல உயிர்களின் வேறாகியும், உயிர்க்குயிராதல் தன்மையால் கண்ணொளியின் உயிரறிவினையொத்து உயிர்களோடு உடனாகியும் இயைந்து நின்று, தன்னிற்பிரிவிலாச் சத்தியினால் ஊட்டப்பெறும் இருவினைகளால் அவ்வுயிர்கள் இறத்தலையும் பிறத்தலையும் புரியும்படி தனது திருவருளாணையிற் பிரிப்பின்றி ஒன்றாய் நிற்பன் என்னும் உண்மையினை யுணர்த்துவது,

"அவையே தானே யாயிருவினையிற்
போக்குவரவு புரிய ஆணையின்
நீக்கமின்றி நிற்குமன்றே" (சிவ. சூ. 2)

எனவரும் சிவஞான போத இரண்டாஞ் சூத்திரமாகும். உலகுயிர்களோடு இறைவனுக்குள்ள தொடர்பு பேதம், அபேதம், பேதாபேதம் என்னும் மூன்றிற்கும் அப்பாற் பட்டதாய், 'ஒன்றாகாமல் இரண்டாகாமல் ஒன்றுமிரண்டும் இன்றாகாமல்' இரண்டறக் கலந்து நிற்பதாகிய அத்துவித சம்பந்தம் என்பதனை அறிவுறுத்துவது இச்சூத்திரமாகும்.

முதல்வன், உடலும் உயிரும் போல் உலகெலாமாகி நிற்றலால் ஒன்றாகியும் கண்ணொளியும் கதிரவனொளி யும்போல் பொருட்டன்மையால் வேறுபட்டு நின்று அவற்றுக்கு விளக்கந்தருதலின் அவற்றின் வேறாகியும், கண் ஒருபொருளைக் காணும் நிலையில் உயிர் அதனொளியுடன் கலந்து நின்று பொருளைக்காட்டித் தானும் காணுமாறு போல முதல்வனும் உயிர்க்குயிராய்ப் பொருள்களை அறிவித்துத் தானும் உடனிருந்து அறிந்து உதவுதலால் உடனாகியும் இவ்வாறு கலந்து நின்று அருள்புரியும் அத்துவிதத் தொடர்புடையான் என்பது சைவசித்தாந்த

மெய்ந்நூல்கள் கூறும் இறைவனது இயல்பாகும். இவ்வியல்பினைத் தெளிவுபட அறிவுறுத்தும் நிலையில் அமைந்தது,

> "ஈறாய் முதலொன்றாயிரு பெண்ணாண் குணமூன்றாய்
> மாறாமறை நான்காய் வருபூதம் மவையைந்தாய்
> ஆறார் சுவையேழோசையோ டெட்டுத்திசை தானாய்
> வேறாயுடனானானிடம் வீழிம் மிழலையே" (1-11-2)

எனவரும் திருஞானசம்பந்தர் தேவாரமாகும். இத்திருப் பாடற்பொருளை உளங்கொண்டு சைவசித்தாந்தம் கூறும் உயிர்நிலைக் கொள்கையாகிய சுத்தாத்துவித உண்மையினை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது.

> "ஈறாகியங்கே முதலொன்றாய் ஈங்கிரண்டாய்
> மாறாத எண்வகையாய் மற்றிவற்றின் - வேறாய்
> உடனாயிருக்கும் உருவுடைமையென்றுங்
> கடனாயிருக்கின்றான் காண்" (86)

எனவரும் திருக்களிற்றுப்படியாராகும்.

"உலகெலாம் ஒடுங்கிய காலமாகிய அவ்விடத்து, முழுமுதற் பொருளாகிய சிவம் ஒன்றுமேயாகியும், மீண்டும் படைப்புக் காலமாகிய இவ்விடத்துச் சத்தியும் சிவமும் என இரண்டாகியும் எல்லாவற்றையும் சத்தியிடமாய் நின்று மாறுபடாத ஐம்பெரும் பூதம் ஞாயிறு திங்கள் ஆன்மா என்னும் எண்பேருருவினனாகியும் இங்குச் சொல்லப்பட்ட உலகுயிர்த்தொகுதியுடன் பிரிவறக் கூடியிருக்கு நிலையிலும் அவற்றின் தன்மை தன்னைப் பற்றாதவாறு அவற்றின் வேறாகியும், உயிர்க்குயிராய் உள்நின்றுஅறிவித்தும் அறிந்தும் உதவுதலால் உயிர்களோடு உடனாகியும் இவ்வாறு ஒன்றாய் வேறாய் உடனுமாயிருக்கும் தன் உண்மையினை எக் காலத்தும் தனக்குரிய முறைமையாகக் கொண்டிருக்கின்றான் அம் முதல்வன் அவனது இயல்பினை (மாணவனே) கண்டுணர்வாயாக" என்பது இதன்பொருளாகும். இதன்கண் 'ஈறாய் முதலொன்றாய்' என்றது வேறாதலையும், 'மாறாத எண்வகையாய்' என்றது ஒன்றாதலையும், 'உடனாயிருக்கும்

உருவுடைமை' என்றது உடனாதலையும் உணர்த்தி நின்றன.

இவ்வான்மாக்களுக்கு இருவினைமுதல்வனது ஆணையால்வரும் என்பார், 'ஆணையின் இருவினையின் போக்கு வரவு புரிய' என்றார். ஒருவன்தான் செய்தவினையின் பயனைத்தானே அனுபவித்தல் வேண்டும் என்னும் நியதியை

"முந்திச் செய்வினை இம்மைக்கண்வந்து
மூடுமாதலின்"

என்பதனால் நம்பியாரூரரும்,

"மெய்த்தன்னுறும் வினை"

என்பதனால் ஞானசம்பந்தரும் உடன்பட்டுக் கூறியுள்ளனர். அறிவிலதாகிய அவ்வினைதானே செய்தோனையடைந்து பயன்தருதல் இயலாது. விருப்பு வெறுப்புடைய உயிர்கள் தாமே தாம்செய்த வினைப்பயன்களை அறிந்து எடுத்துக் கொண்டு நுகர்ந்து கழிக்கும் பேரறிவும் நடுநிலையும் ஒருங்கு உடையன அல்ல. எனவே உயிர்கள் செய இருவினைப் பயன்களைச் செய்த உயிர்களே நுகரும்படி செய்பவன் நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவாகிய இறைவன் ஒருவனே என்பது சைவ சமயத்தின் துணிபாகும். இக்கொள்கை ஆசிரியர் தொல்காப்பியனார்க்கும் தெய்வப் புலவர் திருவள்ளுவர்க்கும் உடன்பாடென்பது முன்னர் விளக்கப்பெற்றது.

உயிர்கட்கு இருவினைப் பயன்களை ஊட்டும் இறைவன் தீவினைப்பயனை அருத்தும்போது, நோயாளர்களின் பிணிநீக்கும் மருத்துவன் நோய்தீர்க்கும் கசப்பு மருந்தினை வெல்லக்கட்டி முதலிய இனிய பொருளோடும் கலந்து அருத்துவது போன்று உயிர்கள் நுகர்தற்குரிய தீவினைப்பயனை இனிமையைத்தரும் நன்மையுடனே கூட்டி நுகரும்படி செய்விப்பான் என்பதும் உயிர்கள் செய்த பாவங்கள்தீர நல்வினையையும் தந்தருளுவான் என்பதும்,

"இனியன அல்லவற்றை இனிதாக நல்கும் இறைவன்"

"பண்டுநாம் செய்தவினைகள் பறையவோரருள் நெறிபயப்பார்"

"பாவங்கள் தீர்தர நல்வினை நல்கி"

எனவரும் ஆளுடைய பிள்ளையார் வாய்மொழியாலும்,

"வேம்பினொடு தீங்கரும்பு விரவியெனைத்தீற்றி"

எனவரும் நம்பியாரூரர் வாய்மொழியாலும் நன்கு விளங்கும்.

கடவுள், உயிர், உலகம் ஆகிய மூன்றும் என்றும் உள்ள பொருள்கள் எனவும், அம்மூன்றனுட் கடவுள் என்பது நிலைமாறாத முற்றறிவுடைய பொருள் எனவும், உயிர்கள் அறிவிக்க அறியும் தன்மையையுடையன எனவும், உலகம் ஒருநிலையில் நில்லாது மாறுதலடையும் உள்பொருள் எனவும் சைவ சித்தாந்தம் கூறும். இத்தகைய முப்பொரு ளுண்மை,

"கற்றுக்கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடையானுளன் நாமுளோம்
எற்றுக்கோ நமனார் முனிவுண்பதே"

என்ற திருக்குறுந்தொகையில் தெளிவாக உணர்த்தப்பட்டது. இறைவனுக்குத் தொண்டுபட்ட உயிர்களாகிய நாம் நமனால் முனியப்படும் எளிமையுடையோம் அல்லோம் என்பார் இதன் முதலிரண்டடிகளாலும் உலகின் உண்மை கூறி, மூன்றாமடியில் கடவுள், உயிர் என்னும் இவ்விரண்டின் உண்மையினை உணர்த்தியருள்கின்றார் திருநாவுக்கரசர். 'கற்றைச் செஞ்சடையான் உளன்' என்பதனை அடுத்துப் பல்லுயிர்களையும் தம்மோடு உளப்படுத்தி 'நாம் உளோம்' என்றது, ஞானமேயுருவாகிய அவ்விறைவனது சார்பினால் அவனுக்கு அடிமையாகிய நாமும் பொன்றாத பேரின்ப நிலையைப் பெறுதற்கு உரியராய் உள்ளோம்என அறிவுறுத்தியவாறாகும்.

மேற்குறித்த முப்பொருள்களுள் உயிரின் இலக்கணத்தைக் கூறவந்த திருநாவுக்கரசர், ஆணவ இருளால் மறைப்புண்டு அல்லற்படும் அவ்வுயிர்களைத் தன்னருளாகிய கைகொடுத்து ஏற்றி உய்வித்தருளும்

இறைவனது பெருங்கருணைத் திறத்தினையும் ஒருங்கு உணர்த்துவதாக அமைந்தது,

> "இருள்தரு துன்பப்படலம் மறைப்ப மெய்ஞ்ஞானமென்னும்
> பொருள்தரு கண்ணிழந் துண்பொருள் நாடிப்புகலிழந்த
> குருடருந்தம்மைப் பரவக் கொடுநரகக்குழிநின்
> றருள் தருகைகொடுத்தேற்றும் ஐயாறன் அடித்தலமே"

எனவரும் திருவிருத்தமாகும். "ஆணவ வல்லிருளால் உளதாகிய துன்பப்படலமானது, உயிரின் அறிவாகிய கண்ணொளியைத் தடைசெய்து மறைத்து நிற்றலால் மெய்யுணர்வாகிய கண்ணொளியையிழந்து நுகர்பொருளை நாடிப்பெறும்உபாயத்தினையிழந்து பிறவிக்குருடரும் தம்மைப் பரவியுய்திபெறும்படி கொடிய இருளுலகமாகிய நரகக்குழியினின்றும் தனது அருளாகிய கையினால் எடுத்து உய்யும்படி செய்தருளுவது ஐயாற்றிறைவரது திருவடியாகிய அருட்சத்தி என்பது இத்திருவிருத்தத்தின் பொருளாகும்.

உயிர்கட்கு ஊனத்தை விளைவிக்கும் இருள் என்பதொரு மலம் உண்டென்பதும், அவ்விருள் நீக்கத்திற்கு இறைவன் அறிவுறுத்தும் சிவஞானமாகிய பொருளையே துணையாகக் கொண்டு இறைவனது திருவருளைப் புகழ்ந்து போற்றி வழிபடுதல் இன்றியமையாதென்பதும்,

> "ஊனத்திருள் நீங்கிட வேண்டின்
> ஞானப்பொருள் கொண்டடி பேணும்" (1-38-3)

> "ஞானத்திரளாய் நின்ற பெருமான் நல்ல அடியார்மேல்
> ஊனத்திரளை நீக்கும் அதுவும் உண்மைப்பொருள்
> போலும்" (1-69-3)

எனத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் அருளிய தேவாரத்தால் நன்கு புலப்படுத்தப்பெற்றுள்ளமை காணலாம்.

ஆணவமாகிய இருள்நீங்க நோக்கும் ஞானநாட்டம் ஆன்மாக்களுக்கு இயல்பாக அமையவில்லையென்பதும் உயிர்களின் அகத்திருளை நீக்கி நற்பொருளையறிவுறுத்தி

இன்பம் அளிக்கவல்ல பேரருளும் பேரறிவும் பேராற்றலும் ஒருங்கேயுடைய இறைவன் ஒருவனே என்பதும் திருமுறையாசிரியர்கள் துணிபாகும். இந்நுட்பம்,

"இருளற நோக்கமாட்டாக் கொத்தையேன்" (4-69-1)

"இருளறுத்து நின்று, ஈசனென்பார்க்கெலாம்
அருள்கொடுத்திடும் ஆனைக்கா அண்ணலே" (5-41-8)

"இருளாயவுள்ளத்தின் இருளை நீக்கி" (6-54-4)

எனவரும் வாகீசர் வாய்மொழிகளால் இனிது விளங்கும். இங்ஙனம் உயிர்களின் அறிவினை அநாதியே மறைத்து நிற்பதாய் ஆன்மாக்களை அணுத்தன்மைப்படுத்தி நிற்கும் ஆணவமலமாகிய உள்மாசினையே தெய்வப்புலவர் திருவள்ளுவரும் சைவத் திருமுறையாசிரியர்களும் 'இருள்' என்ற சொல்லால் வழங்கியுள்ளனர். இந்நுட்பத்தினைத் தெளியவுணர்ந்த உமாபதி சிவாசாரியார் தாம் இயற்றிய திருவருட்பயனில் ஆணவம் என்ற பெயரால் வழங்கப்படும் மூலமலத்தின் இயல்பினை விரித்துரைக்கும் அதிகாரத்திற்கு 'இருள்மலநிலை' எனப் பெயரிட்டு வழங்கியுள்ளார்.

ஆணவமலம் என்பது, எண்ணிறந்த உயிர்கள் தோறும் கூடிநின்று அவற்றின் அறிவினை மறைத்தும் தான் ஒன்றாயிருப்பது, உயிர்களின் பக்குவமின்மை, பக்குவம் ஆகியவற்றுக்கு ஏற்ப அவரவர் இடங்களிலே மறைத்து நின்று அந்தந்த ஆன்மபோதங்களின் மீட்சியிலே நீங்குவதாயிருக்கிற தன் செயல்வகையாகிய எண்ணிறந்த ஆற்றல்களையுடையது, செறிந்த இருளும் வெளியென்று சொல்லும்படி இருளாய் நின்று உயிர்களுக்கு மிக்க மறைப்பினைச் செய்வது, செம்பினுடன் கூடியுள்ள களிம்பானது அந்தச் செம்பு உள்ள அன்றே அதனை மறைத்து உள்ளும் புறம்பும் கலந்து அதன்வெட்டுவாய்தோறும் நின்றாற்போல, உயிரறிவோடுங் கலந்து மறைத்து நிற்கிற அழியாத அனாதிமலமாய் உயிர் களின் விழைவு அறிவு செயல் என்னும் மூவகையாற்றலும் சிறிதும் நிகழாதபடி தடைசெய்து நிற்பதாகும். இதன் இயல்பினை,

"ஏகமாய்த் தம்கால எல்லைகளின் மீளும்
எண்ணரிய சத்தியதாய் இருளொளிர இருண்ட
மோகமாய்ச் செம்பினூறு களிம்பேய்ந்து நித்த
மூலமலமாய் அறிவு முழுதினையும் மறைக்கும்"

(சிவப். 20)

எனவரும் சிவப்பிரகாசத் திருவிருத்தத்துள் உமாபதி சிவாசாரியார் சுருக்கமும் தெளிவும் பொருந்த விளக்கியுள்ளார்.

எண்ணிறந்த சத்திகளால் எண்ணிறந்த உயிர்கள் தோறும் செம்பிற்களிம்பும் நெல்லின் உமியும் போலத் தோற்றமில் காலமாக விரவி நிற்பதொன்றாய், கேவல நிலையில் அவ்வுயிர்களின் அறிவொடு தொழிலைமறைத்து, சகலநிலையில் போகநுகர்ச்சிக்கு வினைமுதலாதல் தன்மையை நிகழ்த்தி, அறியாமை நிகழ்ச்சிக்குக் காரணமாய் நிற்பது ஆணவமலம் ஆகும். இது வியாபகமாகிய உயிரை அணுத்தன்மைப்படுத்து மறைப்பதாகலின் ஆணவம் என்னும் பெயருடையதாயிற்று. இது பாசப்பிணிப்பிற்கு மூலமாய் உயிரைப்பிணித்து நிற்றலின் பசுத்துவம் எனவும் வழங்கப் படும். உயிர்களை அறியாமையிருளிற் படுத்துமறைப்ப தாகலின் இதனை இருள் மலம் எனவழங்குதல் தமிழ் மரபு. இனி, கன்மம் என்பது ஆணவம் காரணமாக உயிர்க ளிடத்துத் தோன்றும் விருப்பினையுடையதாய்ப் போக நுகர்ச்சிக்கு ஏதுவாகி உயிரைப் பிறவியுட்படுத்துவதாகும். கன்ம மலமாகிய இதனது இயல்பு, "மொய்த்திருண்டு பந்தித்து நின்ற பழவினை" எனவரும் அப்பர்தேவாரத்தில் விளக்கப்பெற்றுள்ளமை காணலாம். "எண்ணரிய சத்தி யுடைய உயிர்களின் அறிவொடு தொழிலை ஆர்த்துப் பந்தித்து நிற்கும் இருள் மலத்தால் உளவாகிய பழவினை" என்பது இத்தொடரின் பொருளாகும். மாயை என்பது ஆடையிற் படிந்த அழுக்கினை உவர் மண்ணைக்கொண்டு கழுவுதல் போன்று உயிரினைப்பற்றிய ஆணவ அழுக்கினை அகற்றுதற்பொருட்டு இறைவனால் உயிர்களுக்குக் கொடுக்கப்பட்டு அவற்றிற்குச் சிறிது அறிவுநிகழ்ச்சியை விளைப்பதாகும்.

ஆணவம், கன்மம், மாயை என்னும் இம்மும் மலங்களின் இயல்பினையும் முறையே விளக்கும் நிலையில் அமைந்தது,

> "விளையாததொர் பரிசில்வரு பசுபாச வேதனையொண்
> தளையாயின தவிரவ்வருள் தலைவன்னது சார்பாம்"
>
> (1-12-2)

எனவரும் ஆளுடையபிள்ளையார் தேவாரமாகும். இதன்கண்,

1. விளையாததொர் பரிசில் வருபசு (வேதனை)
2. பாசவேதனை
3. ஒண்தளை

என மும்மலமும் முறையே குறிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் 'விளையாததொர் பரிசில் வரு பசு வேதனை' என்ற தொடர், புதிதாகத் தோன்றாததன்மையில் (அஃதாவது அநாதியே) உயிரைப் பற்றியுள்ள பசுத்துவம் எனப்படும் ஆணவ மலத்துன்பம் எனப்பொருள்படும். பாச வேதனை என்பது நல்வினை தீவினையாகிய இருவினைப் பிணிப்பால் உண்டாகிய துன்பம் ஈண்டுப் பாசம் என்றது கன்ம மலத்தையேயென்பது, 'வினையென்பாச மறைவிலே' என வரும் நாவுக்கரசர் வாய்மொழியாலும் 'இருவினைப்பாசம்' (பெரிய-நாவுக்) எனவரும் சேக்கிழார் வாய்மொழியாலும் நன்கு தெளியப்படும். 'ஒண்தளை' என்பது உயிர்கட்குச் சிறிது அறிவு நிகழ்ச்சியை (ஒட்பத்தை) விளைப்பதாய் உயிரைத் தளைத்துள்ள மாயையைக் குறிக்கும். மாயாமலம் உயிர்கட்கு விழைவு அறிவு செயல்களை விளக்குந்தன்மையது என்பதனை அருணந்தி சிவாசாரியார் தாம் இயற்றிய சிவஞான சித்தியாரில் ஆணவமலம் எனத் தனியே ஒரு மலமில்லை அது மாயாகாரியமே என்பார் கூற்றை மறுத்துரைக்குமிடத்து,

> "மலமெனவேறொன்றில்லை மாயாகாரியம் அது என்னின்,
> இலகுயிர்க்கு இச்சாஞானக்கிரியைகள் எழுப்பும் மாயை;
> விலகிடும்மலம் இவற்றை வேறுமன்றதுவேறாகி
> உலகுடல் கரணமாகி உதித்திடும் உணர்ந்துகொள்ளே"

எனவரும் திருவிருத்தத்தால் தெளிவாக விளக்கியுள்ளார். இதன்கண் 'இலகு உயிர்க்கு இச்சா ஞானக்கிரியைகள் எழுப்பும் மாயை' என்பது, மாயை உயிர்களுக்கு விழைவு அறிவு தொழில்களை எழுப்பும் தன்மையது என்பதனை விளக்கி நின்றது. 'விலகிடும் மலம் இவற்றை' என்பது, ஆணவமலம் உயிரின் விழைவு அறிவு செயல்களை மறைத்துத் தடைசெய்து நிற்கும் தன்மையது என்பதனைக் குறித்து நின்றது. "உயிரோடு ஒற்றித்து நின்று அறிவிச்சை செயல்களை மறைப்பதாகிய மலத்துக்கும் வேறு நின்று அவற்றை விளக்குவதாகிய மாயைக்கும் வேற்றுமை பெரிதாகலான் மாயையே மலம் என்பார் மதம்போலி" எனச் சிவஞானமுனிவர் ஆணவமலமும் மாயையும் தம்முள் வேறு என்பதனை நன்கு விளக்கியுள்ளார். இவ்விளக்கம் மாயை ஒண்தளை (அறிவு விளக்கத்தைத் தரும் தளை) ஆதலை நன்கு உறுதிப்படுத்துதல் காணலாம்.

'விளையாததொர்' எனத் தொடங்கும் ஞானசம்பந்தப்பிள்ளையார் தேவாரத்தில் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலத்தின் வைப்பு முறையும் அவற்றுள் ஒவ்வொன்றின் சிறப்பியல்புகளும் உரிய அடைமொழியுடன் சேர்த்து விளக்கப்பெற்றுள்ளன. 'விளையாததொர் பரிசில் வரு' என்ற தொடர் ஆணவமாகிய பசு வேதனைக்கும், ஒண்மை (புத்திகூர்மை)யைக் குறிக்கும் 'ஒண்' என்பது, உயிரைப் பற்றியுள்ள தளைகளுள் (கட்டுக்களுள்) ஒன்றாகிய மாயைக்கும் அடைமொழியாகிய அமைந்த நயம் வியந்து போற்றத் தகுவதாகும்.

உயிர்களைப் பிணித்துள்ள மும்மலங்களையும் நீக்கியருளவல்ல உயிர்த்துணையாவான் இறைவன் ஒருவனே என்னும் உண்மையினை,

> "இழிப்பரிய பசு பாசப் பிறப்பை நீக்கும்
> என் துணையே"

எனவரும் தொடரில் திருநாவுக்கரசர் தெளிவாகக் குறித்துள்ளார். இத்தொடரில் 'பசு' என்றது பசுத்துவமாகிய ஆணவமலத்தையும் 'பாசம்' என்றது கன்மமலத்தையும்

'பிறப்பு' என்றது மாயாகாரியத்தையும் குறித்து நின்றன. இத் தொடரையுளங்கொண்டு 'மலந்தாங்கிய பாசப்பிறப்பறுப்பீர்' (7-82-6) என இறைவனைப் போற்றினார் சுந்தரர்.

முப்பொருளுண்மையைக் குறிக்கும் பதி, பசு, பாசம் என்னும் பெயர்கள் தேவாரத் திருப்பதிகங்களில் இடம்பெற்றுள்ளன. இவ்வுண்மை,

'பாலனாம் விருத்தனாம் பசுபதிதானாம்' (1-76-3) எனவும், 'பசு பதியதன் மிசைவருசுபதி' எனவும், 'பாசமதறத்து' (3-79-10) எனவும் வரும் திருப்பதிகத் தொடர்களால் இனிது புலனாம்.

இவ்வான்மாக்கள் இருவினைகாரணமாக இறந்து பிறந்து வருந்தன்மையன என்பதனை,

"துறக்கப்படாத வுடைலைத் துறந்துவெந்தூ துவரோ
டிறப்பன் இறந்தால் இருவிசும்பேறுவன் ஏறிவந்து
பிறப்பன் பிறந்தநாற் பிறையணிவார் சடைப்பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கொலோவென்றென் உள்ளங்கிடந்து
மறுகிடுமே"

எனவரும் திருவிருத்தத்தில் திருநாவுக்கரசர் குறித்துள்ளமை காணலாம். இத்திருவிருத்தத்தை அடியொற்றியமைந்தது,

"கண்டநனவைக் கனவுணர்வின்தான் மறந்து
விண்பறந்தத்தூடு வினையினால் - கண்செவிகெட்
டுள்ளதே தோற்ற உளம் அணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற்றான்" (சிவ. சூ. 2, வெ. 13)

எனவரும் சிவஞானபோத உதாரண வெண்பாவாகும். "உயிரானது பூதசாரம் முதலிய உடம்பின்கட் பொருந்தித் துறக்க நிரயங்களிற்சென்று இருவினைப்பயனாகிய இன்பத் துன்பங்களை அநுபவித்துப் பின்னர் நனவின்கண் கண்டவற்றைக் கனாக்காணுங்காலத்து மறந்து அறிவு வேறுபட்டாற்போல முன்னைக் கண்செவி கெட்டவாறும், உள்ளதே தோற்ற அதனூடு விண்படர்ந்தவாறும் அங்கு அநுபவித்தவாறும் ஆகியவற்றை மறந்து, முன்னுடம்பு

இறக்குங்கால் அடுத்தவினை காட்டும் கதிநிமித்தம் பற்றி உயிர் அவாவியபடி மனம் செலுத்துதலால் அக்கதிக்கண் செல்லுதற்கு ஏதுவாய் எஞ்சி நின்ற புண்ணிய பாவ எச்சத்தால் சூக்குமதேக அளவாய்ச் சென்று அம்மனம் தள்ளியகதிக்கு அமைந்த கருவின்கண் விழும்" என்பது இதன் பொருளாகும். உயிர்கட்குப் படைப்புக்காலந்தொட்டுச் சங்காரகாலம் அளவும் நிலைபெற்றுள்ளது சூக்கும வுடம்பாதலின் அதனை 'உள்ளது' எனக்குறித்தார். என்றும் உள்ளதாகிய அந்நுண்ணுடம்பானது, பூதவுடம்பு பூதசார வுடம்பு, யாதனாவுடம்பு என்பவற்றுள் வேண்டியது ஒன்றனைத் தோற்று தன்மையது என்பார், 'உள்ளதே தோற்ற' என்றார்.

இருவினைகளைச் செய்தற்குரிய பூதவுடம்பு மண்ணுலகத்திற்கும் நல்வினைப் பயனாகிய இன்பத்தினை நுகர்தற்குரிய பூத சாரவுடம்பு விண்ணுலகத்திற்கும் தீவினைப் பயனாகிய துன்பத்தினை நுகர்தற்குரிய யாதனாவுடம்பு நிரயத்திற்கும் உரியன என்பர். முன்னுடம்பு இறக்குங்காலத்து மனம் எங்குச் சென்று பற்றியதோ அங்கு வந்து மீளப்பிறக்கும் என்பார் 'மனம் தள்ளக் கருவில் விழும்' என்றார். உள்ளதே தோற்ற என்றதனால் உடல் திரிவும் விண்படர்ந்து என்றதனால் இடத்திரிவும் கனவுணர்வின் மறந்து என்றதனால் அறிவுத்திரிவும் பெறப்பட்டன. வேதத்துட் கூறப்படும் பஞ்சாக்கினிவித்தையின் இயல்பு இங்கு உணர்த்தப்பட்டது என்றும், "ஆன்மாத் தூலவுடம்பின் நீங்கிய வழித் துறக்கமும், மேகமண்டலமும் நிலனும் தந்தையும் தாயும் என்னும் ஐந்து நிலைக்களத்தும் வைகித்தோன்றுதலின், இவ்வைந்தின் இடமும் அங்கி யாகவும், இவற்றின் எய்திய ஆன்மா ஆவுதியாகவும் தியானிப்பதொரு சாதகமாதலின் இது பஞ்சாக்கினி வித்தையெனப்பட்டது" என்றும் கூறுவர் சிவஞானமுனிவர்.

எல்லாவுலகத்துக்கும் தலைமையாய் எப்பொரு ளையும் அமைத்து இயக்கும் ஆற்றல் வாய்ந்த முழுமுதற் கடவுள் ஒன்றுதான் இருக்க முடியும் என்று உணர்ந்து அப்பரம்பொருளைச் சிவனெனவே தெளிந்து வழிபட்ட

செம்புலச் செல்வர்கள் தேவார ஆசிரியர்கள் ஆவர். ஒரு தெய்வவழிபாட்டினை அறிவுறுத்துஞ் சமயமே சிறந்தது என்பர் அறிவர். 'ஒன்றே குலனும் ஒருவனே தேவனும்' எனச் சாதிவேறுபாடற்ற தனிப்பெருஞ் சிவவழிபாட்டினையே திருமூலரும் அறிவுறுத்தியுள்ளார்.

"ஒருவன் கழல்அல்லாது எனது உள்ளம் உணராதே"

"கூத்தாநின் குரையார்கழலேயலாது
ஒத்தநாவெனக்கெந்தை பிரானிரே"

"அன்னே உன்னையல்லால் இனியாரை நினைக்கேனே"

எனத் தேவார ஆசிரியர் மூவரும் சிவபெருமான் ஒருவனையே போற்றியதுடன், தம் பாடல்களில் முருகன், விநாயகர் முதலிய கடவுளர்களைக் குறிக்க நேர்ந்த விடங்களில் தம்மால் வணங்கப்பெறும் சிவபெருமானால் தலையளிக்கப்பெற்ற சிறப்புடையவர்கள் என்ற அளவில் அத்தெய்வங்களைப் பாராட்டி, தாம் சிவபரம் பொருளைத் தவிர வேறு தெய்வங்களை நினையாத உறுதிப்பாடுடைய ராகத் திகழ்தல் காணலாம்.

திருஞானசம்பந்தர்க்குத் திருமணம் நிகழ்ந்தபோது அவர் தீவலஞ்செய்தலாகிய சடங்கினைச் செய்ய நேர்ந்த நிலையில் ஞானசம்பந்தர் 'யான் விருப்புறும் அங்கியாவார் விடையுயர்த்தவரே' என்னும் மெய்ம்மையினை யுரைத்துத் திருநல்லூர்ப்பெருமணக்கோயிலை வலம்வந்து சுற்றத்தா ரோடு பற்றறுத்து உய்ந்த செய்தி பெரிய புராணத்தில் விரித்துரைக்கப்பெற்றது.

காணப்பட்ட உடம்பாற் காணப்படாத உயிர்க்கு உண்மை கூறும் முறையில்,

"உடலிலங்கும் உயிர் உள்ளளவுந்தொழ
உள்ளத்துயர் போமே" (1-3-8)

என்று அருளிச் செய்தார் திருஞானசம்பந்தர். இக்கருத்தினை யுளங்கொண்ட மெய்கண்டார் தாம் இயற்றிய சிவஞான போதத்தில் உயிருண்மை கூறும் மூன்றாஞ்சூத்திரத்தில்

'மாயா இயந்திரதனுவினுள் ஆன்மா' உளது என ஏதுக்களால் எடுத்துரைத்து விளக்கினார்.

தங்குதற்குரிய குடிசை ஒன்றினை அமைக்க வேண்டு மானால், தூண்களாகக் கால்களை நட்டு இருபக்கத்தும் பக்க வாரைகளாகிய கைகளை ஏற்றி அவற்றின் மேற் சார்த்துக் கழிகளை வரிந்துகட்டி அதன்மேல் ஓலை முதலியவற்றால் கூரைவேய்ந்து மண்ணைக் குழைத்துச் சுவரெடுத்து நுழைவாயிலும் புழைக்கடைவாயிலும் என இரண்டு வாசல்களை அமைத்துப் பக்கங்களிற்காற்றுப் புகுந்து இயங்கக் காலதர்களை (சாலேகங்களை) அமைத்துக் கண்டோர் யாவரும் விரும்பித் தங்குதற்கேற்ற கவர்ச்சி யுடையதாகச் செய்து முடித்தல் இயல்பு. இங்ஙனமே அருளாளனாகிய இறைவனும் உயிர்களாகிய நாம் விரும்பித் தங்குதற்கேற்ற கவர்ச்சி வாய்ந்ததாக மக்கள் யாக்கையாகிய இவ்வுடம்பினை நமக்குப் படைத்து வழங்கியுள்ளான். இச்செய்தியினை,

> "கால்கொடுத்திரு கையேற்றிக் கழிநிரைத்திறைச்சி மேய்ந்து
> தோல்படுத் துதிர நீராற்சுவரெடுத் திரண்டுவாசல்
> ஏல்வுடைத்தா வமைத்தங்கேழு சாலேகம் பண்ணி
> மால்கொடுத்தாவி வைத்தார் மாமறைக்காடனாரே"
>
> (4-33-4)

எனவரும் திருநேரிசையில் திருநாவுக்கரசர் சுவைபொருந்தக் கூறியுள்ளார். உயர்திணை உயிர்களுக்கென அமைத்தளிக்கப் பட்ட யாக்கையாகிய இவ்வில்லம் அவ்வுயிருக்கு மட்டுமே யல்லாமல் ஐம்பொறிகள் தங்கி ஆட்சிபுரிதற்குரிய உரிமை இடமாகவும் அப்பொறிகளுக்கிடையே உயிர் ஒதுக்குக் குடியிருக்கவேண்டிய துச்சிலாகவும் (வாடகைவீடாகவும்) அமைந்து மக்கள் வாழ்வுக்குப் பல்வேறு துன்பங்களை விளைப்பதாயினும் இக்குடிசையிற்புகுந்த உயிரானது இதனை விட்டு வெளியேற விரும்பாததொரு கவர்ச்சியினை இதற்கு உண்டாக்கி இதன்கண் உயிர்களைக் குடியேற்றினான் இறைவன் என்பார், 'மால்கொடுத்து ஆவி வைத்தார் மாமறைக் காடனாரே' என்றார். இவ்வாறே ஞான

சம்பந்தரும்,

> "என்பினாற் கழிநிரைத் திறைச்சிமண்
> சுவரெறிந்திது நம்மில்லம்
> புண்புலால் நாறுதோல் போர்த்துப் பொல்
> லாமையால் முகடுகொண்டு
> முன்பெலாம் ஒன்பது வாய்தலால் குரம்பையின்
> மூழ்கிடாதே
> அன்பனாரூர் தொழுதுய்யலாம் மையல்கொண்டஞ்சல்
> நெஞ்சே" (2-79-8)

என யாக்கையின் அமைப்பினையும் அதனது நிலையாமை யினையும் நெஞ்சிற்கு அறிவுறுத்தியுள்ளார். இங்கு எடுத்துக்காட்டிய திருமுறைப்பாடல்களால் காணப்படும் உருவாகிய உடல் கருவிகளுக்கு வேறாக அருவாகியதோர் உயிருண்மை வலியுறுத்தப்பட்டமை காணலாம்.

ஆன்மா மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக் காரணங்கள் நான்கனுள் ஒன்றன்று. ஆயினும் தன்னை அனாதியே மறைத்துள்ள சகசமலமாகிய ஆணவமலம் காரணமாகப் பொருள்களை உணருந் தன்மையை இழந்தது. ஆதலால் நுண்ணர்வின்மையின் சூழ்ச்சித் துணைவராகிய அமைச்சரது உதவியை நாடிய அரசனைப் போன்று அந்தக் கரணங்களாகிய கருவிகளோடு கூடிநின்று நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படக்கம் என்னும் ஐவகையுணர்வு நிலைகளை யுடையதாயிற்று என்பார்,

> "அந்தக் கரணம் அவற்றின் ஒன்று அன்று, அவை
> சந்தித்தது ஆன்மா, சகசமலத்து உணராது
> அமைச்சு அரசு ஏய்ப்பநின்று, அஞ்சு அவத்தைத்தே"
> (சிவ. சூ. 4)

என்றார் மெய்கண்டார்.

'ஐம்புலன் நாலாம் அந்தக்கரணம்' (திருவெழு கூற்றிருக்கை) எனவரும் ஆளுடைய பிள்ளையார் அருளிச் செயலாலும், 'மனத்தொகைத் திருக்குறுந்தொகை,

சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை, உள்ளத்தொகைத் திருக்குறுந்தொகை' எனத் திருநாவுக்கரசர் அருளிய திருக் குறுந்தொகைகளின் அமைப்பாலும் அந்தக் கரணங்களின் வேறாயது ஆன்மா என்பதும் சகசமலத்தால் உணருந்தன்மை யிழந்த ஆன்மா அகக்கருவிகளாகிய அவற்றின் துணை கொண்டே அறியுந்தன்மையைப் பெற்றுப் பயனடைகின்றது என்பதும் உய்த்துணரப்படும்.

ஐம்பொறிகளாகிய வாயில்களும் அவற்றில் செல்லும் உணர்வுகளாகிய ஐம்புலன்களும் உயிராற் செலுத்தப் படுவனவாயினும் தம்மைச் செலுத்தும் உயிரை அறிந்து கொள்ளவல்லன அல்ல. அவற்றைப்போலவே தம்மை உள்நின்று செலுத்தும் தம்முணர்வின் தமியாகிய இறைவனை யுணரமாட்டா. அவ்வுயிர்கள் பொருள்களை அறிதல் என்பது, காந்தத்தைக் கண்ட இரும்பு அதன் முன்னிலை யளவிலே தொழிற்படுமாறு போல நினைவள வானே தூண்டிச் செலுத்தும் முதல்வனது திருவருள் முன்னிலை யாலே ஆகும் என்பது,

"விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாம்தம் முணர்வின்தமி அருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே" (சிவ. சூ 5)

எனவரும் சிவஞான போதச் சூத்திரத்தால் உணர்த்தப் பட்டது. இதனால் இறைவன் உயிர்களுக்குப் பொருள்களை அறிவிக்கும் உதவியாகிய காட்டும் உபகாரம் உணர்த்தப் பட்டது.

"பொறிப்புலன்களைப் போக்கறுத்துள்ளத்தை
நெறிப்படுத்து நினைந்தவர் சிந்தையுள்
அறிப்புறும் அமுதாயவன் ஏகம்பம்
குறிப்பினாற் சென்று கூடித்தொழுதுமே" (5-48-4)

எனவும்,

"கல்லாதனவெல்லாங் கற்பித்தானைக்
காணாதனவெல்லாங் காட்டினானை" (6-43-1)

எனவும்,

"காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக்காலே"

எனவும் வரும் அப்பர் அருள்மொழிகள் இறைவனது காட்டும் உபகாரத்தைப் புலப்படுத்துவனவாகும். இறைவனது சிறப்பியல்பாகிய சொரூப இலக்கணம் ஒன்றினையே சிறந்தெடுத்துக்கூறும் முறையில் அமைந்தது,

"கறையணி வேலிலர்போலுங் கபாலந் தரித்திலர்போலும்
மறையும் நவின்றிலர்போலும் மாசுணம் ஆர்த்திலர்போலும்
பறையுங் கரத்திலர்போலும் பாசம் பிடித்திலர்போலும்
பிறையுஞ் சடைக்கிலர் போலும் பிரமபுரம் அமர்ந்தாரே"
(2-65-1)

எனவரும் பிரமபுரத் திருப்பதிகமாகும். இறைவன் செய்தனவாகப் புராணங்களிற் கூறப்படும் செயல்கள் பலவற்றையும் தொகுத்துக் கூறி, இச்செயல்கள் யாவும் உலக முதல்வனாகிய அண்ணலாற் செய்யப்பட்டன அல்ல என மறுத்துரைக்கும் முறையில் இப்பதிகப்பாடல்கள் அமைந் திருத்தல் காணலாம். உலகப் பொருள்கள் ஒன்றினுந் தோய்வற நிற்கும் தன் உண்மை நிலையிற் 'சிவன்' எனத் திகழும் தனிமுதல்வன், முன்னர்க்கூறப்பட்ட படைத்தல் முதலிய தொழில்கள் எல்லாவற்றையும் தன் தொழிலாகக் கூடி நின்று செய்யும் நிலையினும் தான் அத்தொழில் பற்றி விருப்பு வெறுப்புக் கொள்ளாது அவற்றில் தோய்வற விளங்குதல் பற்றி இறைவன் செய்தனவாகப் புராணங்கள் கூறும் அச்செயல்கள் யாவும் ஏகதேச நிலையில் ஒன்றிற் கருத்திருத்திச் செய்யும் முறையில் அவனாற் செய்யப்பட்டன அல்ல என உலகமக்களுக்கு அறிவுறுத்தும் நிலையில் ஞானசம்பந்தர் இத்திருப்பதிகத்தை அருளிச் செய்துள்ளார். இந்நுட்பம்,

"பெண்ணுரு ஆணுரு வல்லாப்பிரமபுர நகர்மேய
அண்ணல் செய்யாதனவெல்லாம் அறிந்து
வகைவகையாலே
நண்ணிய ஞானசம்பந்தன் நவின்றனபத்தும் வல்லார்கள்
விண்ணவ ரோடினிதாக வீற்றிருப்பாரவர் தாமே" (2-68-11)

எனவரும் இதன் திருக்கடைக்காப்புச் செய்யுளால் இனிது புலனாதல் காணலாம்.

இத்திருப்பதிகப் பொருளை அடியொற்றி இறைவனது சொரூப இலக்கணத்தினை யுணர்த்துவது,

"சிவன் அருவுருவுமல்லன் சித்தினோடசித்து மல்லன்
பவமுதல் தொழில்களொன்றும் பண்ணிடுவானுமல்லன்
தவமுதல் யோகபோகந் தரிப்பவனல்லன்தானே
இவைபெற இயைந்தும் ஒன்றும் இயைந்திடா
இயல்பினானே" (சித்தியார் சுபக்கம்-89)

எனவரும் சிவஞானசித்தியார் திருவிருத்தமாகும். 'கறையணி வேலிலர் போலும்' எனவரும் திருப்பதிகத்திற்கு இது பொருள் என்பதனை மேற்குறித்த சித்தியார் திருவிருத்தத்தின் உரையில் மறைஞானதேசிகர் இத்தேவாரப்பாடலை மேற்கோளாக எடுத்துக்காட்டியுள்ளமையால் நன்குணர லாம்.

அணுமுதல் அண்ட முதலாய அனைத்தையும் ஆராய்ந்தறிந்தவர்களே யான் எனது என்னும் இருவகைப் பற்றும் நீத்த பெருமக்களாவர். இவர்கள் முத்தி யடைதற்குப் படிமுறையாகக் கொண்டவை முப்பத்தாறு தத்துவங்கள் என்பதும் இவற்றை முத்தியடைதற்குரிய ஏணிப்படியாகக் கொண்டு தத்துவங்கடந்த செம்பொருளாகிய சிவத்தினைக் கண்டு தெளிந்தவர்களே ஈறிலாப் பேரின்பமாகிய வீடுபேற்றினைப் பெற்றவராவர் என்பதும் அறிவுறுத்துவார்,

"சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித்தோர்
சத்தமுஞ் சத்தமுடிவுந் தம்முள் கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர்தம் முத்திமுதல் முப்பத்தாறே" (125)

"முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியாய்
ஒப்பிலா ஆனந்தத்துள் ளொளிபுக்குச்
செப்ப வரிய சிவங்கண்டு தான்தெளிந்
தப்பரிசாக அமர்ந்திருந் தாரே" (126)

என்றார் திருமூலநாயனார். முப்பத்தாறு தத்துவங்களாவன :

சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை எனச் சிவதத்துவம் ஐந்தும், காலம், நியதி, கலை, வித்தை, இராகம், புருடன், அசுத்தமாயை என வித்தியாதத்துவங்கள் ஏழும், நிலம், நீர், தீ வளி, விசும்பு என்னும் ஐம்பூதங்கள், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள், ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்னும் தன் மாத்திரைகள் ஐந்து, வாக்கு, கால், கை, எருவாய், கருவாய் என்னுந்தொழிற்கருவிகள் ஐந்து, மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அந்தக் கரணங்கள் நான்கு என ஆன்ம தத்துவங்கள் இருபத்து நான்கும் ஆக முப்பத்தாறு தத்துவங்களாகும்.

மேற்குறித்த தத்துவங்களின் காரியமாய் அமைந்தவை தாத்துவிகங்கள் என வழங்கப்பெறுவன. நிலத்தின் கூறாக மயிர், எலும்பு, தோல், நரம்பு, தசை என்னும் ஐந்தும் நீரின் கூறாக ஒடும்நீர், உதிரம், சுக்கிலம், மூளை, மச்சை என்னும் ஐந்தும் தீயின் கூறாக உணவு, உறக்கம், அச்சம், இணைவிழைச்சு, சோம்பல் என்னும் ஐந்தும் வளியின் கூறாக ஓட்டல், நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தல் என்னும் ஐந்தும், ஆகாயத்தின் கூறாக காமம், குரோதம், உலோபம், மோகம், மதம் என்னும் ஐந்தும் ஆக இருபத்தைந்தும் பூதகாரியங்களாகும். பிராணன் , அபானன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் என வாயுக்கள் பத்து.

இடைகலை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, அலம்புடை, புருஷன், குரு, சங்கினி என நாடிகள் பத்து.

சொல்லுதல், செல்லுதல், கொடுத்தல், விடுத்தல், இன்புறுதல் என வசனாதிகள் ஐந்து.

சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என வாக்குக்கள் நான்கு.

சத்துவம், இராசதம், தாமதம் எனக் குணங்கள் மூன்று. தைசதஅகங்காரம், வைகாரியகங்காரம், பூதாதி யகங்காரம் என அகங்காரங்கள் மூன்று. ஆக இவை அறுபதும் தாத்துவிகங்கள் எனப்படும்.

மேற்கூறப்பட்ட தத்துவம் முப்பத்தாறும் தாத்து விகங்கள் அறுபதும் ஆகத் தொண்ணூற்றாறும் அண்டத்தி லுள்ளவாறேயமைந்த பிண்டமாகிய உடம்பின்கண் விரவியுள்ளன என்பதும் இவை உடம்பினுள்வாழும் உயிர்க்கு உதவியாய் நிற்றலேயன்றி இடர்செய்தலும் உண்டென்பதும் உடல் சிதைந்தால் இவையனைத்தும் உடம்பினைவிட்டு ஓடுவன என்பதும்,

> "முப்பதும் முப்பதும் முப்பத்தறுவரும்
> செப்பமதிளுடைக் கோயிலுள் வாழ்பவர்
> செப்பமதிளுடைக் கோயில் சிதைந்தபின்
> ஒப்ப அனைவரும் ஓட்டெடுத்தார்களே"
>
> (திருமந்திரம் 154)

எனவரும் திருமந்திரத்தாற்புலனாம். இதன்கண் முப்பதும் முப்பதும் எனமுதற்கண் கூறப்பட்ட அறுபதும் தத்துவங் களின் காரியமாகிய தாத்துவிகங்களைக் குறித்தன. முப்பத்தறுவர் என்றது முப்பத்தாறு தத்துவங்களைக் குறித்தது. 'செப்பமதிளுடைக் கோயில்' என்றது மக்கள் யாக்கையினை 'உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான்' (திருமந்திரம்) என்பராதலின் உடம்பினைக் கோயில் என்றார்.

மேற்குறித்த முப்பத்தாறு தத்துவங்களும் அறுபது தாத்துவிகங்களும் ஆகத் தொண்ணூற்றாறும் கூடி உடம்புளே ஆட்சி செலுத்த அவற்றிடையே அகப்பட்டுத் தாம் வருந்தும் திறத்தினை,

> "முப்பதும் முப்பத்தாறும் முப்பது மிடுகுரம்பை
> அப்பர்போல் ஐவர்வந்து அதுதருகிது விடென்று
> ஒப்பவே நலியலுற்றால் உய்யுமாறறிய மாட்டேன்
> செப்பமே திகழுமேனி திருப்புகலூ ரனீரே" (4-54-3)

> "தொக்குநின்றைவர் தொண்ணூற்றறு வருந்துயக்கமெய்த
> மிக்கு நின்றிவர்கள் செய்யும் வேதனைக்கு அலந்து
> போனேன்" (4-67-5)

> "சாணிரு மருங்குநீண்ட சழக்குடைப் பதிக்குநாதர்
> வாணிகர் ஐவர் தொண்ணூற்றறுவரு மயக்கஞ்செய்து

பேணிய பதியினின்று பெயரும் போதறிய மாட்டேன்
சேணுயர் மாடநீடு திருக்கொண்டீச் சரத்துளானே"
(4-67-7)

எனவரும் பாடல்களில் திருநாவுக்கரசர் விரித்துக் கூறிய திறம் இங்கு நினைத்தற்குரியதாகும்.

இங்குக் குறித்த முப்பத்தாறு தத்துவங்களின் இயல்பினை மெய்கண்ட தேவர் மாணவருள் ஒருவராகிய திருவதிகை மனவாசகங்கடந்தார் தாம் இயற்றிய உண்மை விளக்கம் என்ற நூலில் விரித்துக் கூறியுள்ளமை இங்குக் குறிக்கத்தகுவதாகும்.

உயிர்கள் செய்யும் நலந்தீங்குகளையெல்லாம் அவ்வுயிர்களின் உள்ளத்துள்ளே நின்றறிந்து, நல்லன இவை தீயன இவை என்று உயிர்கட்கு அறிவுறுத்தி நல்வழிப் படுத்தும் இறைவனது இருப்பினை உணரப்பெறாது தம்மனம் போனபடி நடக்கும் உலகமக்களைத் திருத்தக் கருதிய திருநாவுக்கரசர், அன்னோரது செயலைத் தம்மேல் ஏறிட்டுக்கொண்டு, இறைவனை நோக்கித்தமது பேதைமை யினை வெளியிட்டுரைப்பதாக அமைந்தது,

'கள்ளனேன் கள்ளத்தொண்டாய்க் காலத்தைத்
கழித்துப்போக்கித்
தெள்ளியேனாகி நின்று தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவார் உள்கிற்றெல்லாம் உடனிருந்தறிதியென்று
வெள்கினேன் வெள்கிநானும் விலாவிறச்
சிரித்திட்டேனே" (4-75-3)

எனவரும் திருநேரிசையாகும். இத்திருப்பாடல் உயிர்க் குயிராய்க் கலந்து நிற்கும் இறைவனது உண்மையினை மக்களது அநுபவத்தில் வைத்து விளக்குந் தனிச் சிறப்புடையதாகும். திருத்தாண்டகத்தில்,

"நானேதும் அறியாமே என்னுள்நின்று
நல்லனவும் தீயனவும் காட்ட நின்றாய்"

என்பதும் இக்கருத்தினதேயாகும். உயிரது ஆராய்ச்சி

யறிவின்கண்ணும் உடனாய் நின்று உணர்த்துபவன் 'உள்ளங் கவர்கள்வனாகிய இறைவனே' என்பதனை 'உள்ளத்தின் கண்ணனாகிய கள்வன்தான்' (சிவ. சூ. 9 அதி. 2) எனவரும் தொடரினால் உணர்த்தினார் மெய்கண்டார்.

இங்ஙனம் இறைவன் உயிர்க்குயிராயிருக்கும் இறைவனது இருப்பினைத் தம் அனுபவத்தில் வைத்துணரும் பயிற்சியைப் பெறாது 'கடவுள் என்பதொருபொருள் இல்லை' என்று கூறித் திரியும் பாழ்ங்கொள்கையினரை நோக்கித் திருநாவுக்கரசர் கடவுள் உண்டென்னுந்தங் கொள்கையினை உறுதியுடன் அறிவுறுத்துவதாக அமைந்தது,

"அந்திவட்டத்திங்கட் கண்ணியன் ஐயாறமர்ந்துவந்தென்
புந்திவட்டத்திடைப் புக்கு நின்றானையும்
பொய்யென்பனோ
சிந்தி வட்டச்சடைக்கற்றையலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட்டத்தொடு கொன்றைவளாவிய நம்பனையே"
(4-98-2)

எனவரும் திருவிருத்தமாகும்.

நிலையற்ற இவ்வுலகினையே மெய்யெனநம்பி உலகமெலாம் இயக்கும் பேராற்றல் வாய்ந்த கடவுளையும் அம்முதல்வனது திருவருளாணையால் ஊட்டப்பெறும் இருவினைப்பயனையும் இல்லையென்று சாதித்துத் திரியும் உலகாயதவாதிகளை நோக்கி,

"நீங்கள் இவ்வுலக நடையொன்றையே மெய்யென நம்பிக் கடவுளும் இருவினைப் பயனும் இல்லையென்று பேசுதலை விட்டொழியுங்கள். உம்மால் நிலையுடையதாகப் பேசப்படும் இவ்வுலகியல் வாழ்வில் ஐம்பெரும் பூதங்களின் மாறுதலால் புயல், கடற்பெருக்கு, பூகம்பம் முதலிய அழிவுகள் பெரும் படைகளைப் போன்று திடீரென்று தோன்றி அல்லல் விளைப்பதனைக் காண்கின்றீர்கள். இவ்வாறு உலகிலே அவ்வப்பொழுது உயிர்களின் வாழ்வுக்குத் தடையாகவுளவாகும் இடையூறுகளை

யெல்லாம் நீக்கி மன்னுயிர்கட்கு அன்னையும் அத்தனுமாய் அருள்சுரந்து துணைநிற்பவன் ஆனைக்காவில் எழுந்தருளிய அண்ணலாகிய இறைவனே என்பதனை உணர்ந்து உய்திபெறுவீராக" என்றுஅறிவுறுத்துவதாக அமைந்தது,

"நடையை மெய்யென்று நாத்திகம் பேசாதே
படைகள் போல்வரும் பஞ்சமா பூதங்கள்
தடையொன்றின்றியே தன்னடைந்தார்க்கெலாம்
அடையநின்றிடும் ஆனைக்கா அண்ணலே" (5-31-6)

எனவரும் திருக்குறுந்தொகையாகும்.

புண்ணியபாவமாகிய இருவினைகளிலும் அவற்றின் பயன்களிலும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து அவற்றை நீக்கும் ஆன்மாவின் அறிவின்கண் அவ்விருவினைப் பயன்களும் சமம் என்னும் உணர்வு தோன்றிய நிலையில் இனிய திருவருளாகிய சத்திகுருவாக எழுந்தருளிப் பசுபோத குணங்களை நீக்கிச் சிவஞானத்தை உபதேசித்தருளும் எனவும் அங்ஙனம் குரு அருளிய சிவஞானத்தால் ஆன்மா தற்போதங்கெடப் பெற்றால் அத்தகைய ஆன்மா மும்மலங்களுங்கெட்டுச் சிவமே ஆவன் எனவும் உணர்த்துவது,

"இருவினை நேரொப்பில் இன்னருட்சத்தி
குருவெனவந்து குணம்பலநீக்கித்
தரும் அரன் ஞானத்தால் தன்செயலற்றால்
திரிமலந்தீர்ந்து சிவனவன் ஆமே" (1527)

எனவரும் திருமந்திரமாகும். உயிர்த்திருவருட்பதிவு பெற்றுக் குருவருளால் தூய்மைபெறும். இந்நிலையினை விளக்குவது,

"இருவினைச் செயல்கள் ஒப்பின் இன்னருட் சத்திதோயக்
குருவருள் பெற்று, ஞானயோகத்தைக் குறுகிமுன்வைத்
திரிமல மறுத்துப் பண்டைச் சிற்றறிவொழிந்து ஞானம்
பெருகி நாயகன்றன் பாதம் பெறுவது சுத்தமாமே" (230)

எனவரும் சிவஞான சித்தியாராகும்.

உயிர் தான் முன்னே செய்து கொள்ளப்பட்ட

புண்ணிய விசேடத்தால் தனக்கு உயிர்க்குயிராய் இதுகாறும் உள்நின்றுணர்த்தி வந்த பரம் பொருளே இப்பொழுது குரு வடிவமும் கொண்டு எழுந்தருளி வந்து சிவதீக்கை செய்து, 'மன்னவகுமாரனாகிய நீ, ஐம்பொறிகளாகிய வேடர் சூழலில் அகப்பட்டு நின் பெருந்தன்மையறியாது மயங்கி இடர்ப் பட்டாய், நின் பெருந்தன்மையான இவ்வியல்பினது என்று அறிவுறுப்ப அங்ஙனம் அறிந்த அளவிலேயே ஐம்பொறிக ளாகிய வேடரை விட்டுநீங்கி வேற்றுமையின்றி இரண்டற ஒன்றுந்தன்மையின் நிலைபெற்று அம்முதல்வன் திருவடி களை அணையும் என்பது,

> "ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
> தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்
> டன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே" (சிவ. சூ 8)

எனவரும் சிவஞானபோத எட்டாஞ் சூத்திரமாகும். இறைவனேஉயிர்கட்குக் குருவாகி எழுந்தருளி வந்து மெய்யுணர்வளிப்பன் என்னும் உண்மையினை,

> "குருவே சிவனெனக் கூறினன் நந்தி
> குருவே சிவமென்பது குறித்தோரார்
> குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
> குருவே யுரையுணர்வற்ற தோர் கோவே" (1581)

எனவரும் திருமந்திரத்தாலும்,

> "அருபரத்தொருவன் அவனியில் வந்து
> குருபரனாகி அருளிய பெருமையை"

எனவரும் திருவாசகத்தாலும் நன்குணரலாம்.

இறைவனது பேரானந்தப் பெருஞ்செல்வமுழுதும் தனக்கேயாகக் கொண்டு அநுபவிக்கும் சுதந்திரமுடைய ஆன்மாவை ஆறலைத்துக் கொண்டு சிறுமையுறுத்துதலும் விதி விலக்கை இழப்பித்து இழிதொழிலில் நிற்பித்தலும் பற்றி ஐம்பொறிகளை வேடர்களாக உருவகித்தல் மரபு. கூர் முள்ளுடைய ஐம்பொறிகளாகிய வேடர் சூழலினின்றும் தப்பி உய்திபெற வேண்டுமானால் இறைவனது திருவடி

நீழலில் மறைந்து நின்று அம்முதல்வன் அறிவுறுத்தியருளும் மெய்யுணர்வென்னும் படைக்கலங்களால் ஐம்புல வேடர்களை எய்துவெல்லலாம் என்பார்,

> "புள்ளுவர் ஐயர் வேடர் புனத்திடைப்புகுந்து நின்று
> துள்ளுவர் சூறைகொள்வர் தூநெறிவிளைய வொட்டார்
> முள்ளுடை யவர்கள் தம்மை முக்கணான்பாத நீழல்
> உள்ளிடை மறைந்து நின்றங்குணர்வினால் எய்யலாமே"

என அருளிச் செய்தார் திருநாவுக்கரசர்.

முன்னைத் தவத்தின் பயனாக இறைவனே குருவாக எழுந்தருளிவந்து ஞானத்தினையுணர்த்த உணர்ந்த உயிரானது, தன்னை ஐம்பொறிகளுக்கு வேறாகப் பகுத்துணர்ந்த அந்நிலையிலேயே பிறிது காரணம் வேண்டாது தனக்கு ஆதாரமாகிய முதல்வனுடைய திருவடியைத் தலைப்படுவதாகும். 'தவத்தினில் உணர்த்த விட்டு அன்னியமின்மையின் அரன்கழல் செலுமே' என்னும் மேற்கோளை வலியுறுத்தும் ஏதுவாக அமைந்தது, 'ஊசல் கயிறற்றால் தாய் தரையே யாந்துணையான்' எனவரும் சிவஞானபோதத் தொடராகும். இத்தொடரில் எடுத்தாளப் பெற்ற உவமையால், இவ்வான்மாவானது தன்னை ஐம்பொறிகளின் வேறு எனப்பிரித்துணரவே தமது முதல்வன் திருவடியை அணையும் என்ற மேற்கோளை நிலைநிறுத்தும் முறையில் இத்தொடர் அமைந்துள்ளது. இங்குக் குறிக்கப்பட்டுள்ள மேற்கோளும் ஏதுவும்,

> "உறுகயி றூசல்போல ஒன்றுவிட்டொன்று பற்றி
> மறுகயி றூசல்போல வந்துவந்துலவும் நெஞ்சம்
> பெறுகயி றூசல் போலப் பிறைபுல்கு சடையாய் பாதத்
> தறுகயி றூசலானேன் அதிகை வீரட்டனீரே" (4-26-4)

எனவரும் திருநேரிசையில் 'பிறைபுல்கு சடையாய் பாதத்து அறுகயி றூசலானேன்' எனவரும் தொடரை அடியொற்றி யமைந்துள்ளமை காணலாம்.

உயிர்களது குறையுணர்வாகிய பசு அறிவினை ஊனக்கண் எனவும் எல்லாம் வல்ல முதல்வனது

பேரறிவினை ஞானக்கண் எனவும் வழங்குதல் சைவ சித்தாந்த மரபாகும். இம்மரபு,

> "ஊனத் திருள்நீங்கிட வேண்டின்
> ஞானப் பொருள்கொண்டடி பேணும்"

எனவும்,

> "ஊனப்பேர் ஒழிய வைத்தார் ஓதியேயுணர வைத்தார்
> ஞானப்பேர் நவில வைத்தார்" (4-30-7)
>
> "கலை பயில்வோர் ஞானக்கண் ஆனான் கண்டாய்"
> (6-73-2)
>
> "அவனருளே கண்ணாகக் காணினல்லால்"

எனவும் வரும் திருமுறைத் தொடர்கள் இம்மரபினைப் புலப்படுத்தல் காணலாம்.

குறையுணர்வாகிய பசு அறிவாலும் பாச அறிவாலும் உணரப்படாத இறைவனை அவனது திருவடி ஞானத்தால் தன்னறிவின் கண்ணே ஆராய்ந்து தெளிக. அத்திருவடி ஞானத்தால் நிலம் முதல்நாதம் ஈறாகிய பாசத்தொகுதி பரந்து திரிதற்கண் மிக்க வேகமுடைய பேய்த்தேரின் இயல்பினதாய்க் கழிந்தொழிவது என்று அறிந்து நீங்கவே, அங்ஙனம் நீங்குதற்கு ஏதுவாகிய பதி (சிவ) ஞானம் பிறவித்துயராகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும், அவ்வாறு பாசத்தொடர்பினை நீங்கிச் சிவஞானத்தைப் பெற்று முழுமுதற்பொருளைக் கண்டகாட்சி நிலை குலையாமைப் பொருட்டுத் திருவைந்தெழுத்தினை விதிப்படி யுச்சரித்தல் வேண்டும் என அறிவுறுத்துவது,

> "ஊனக்கண் பாசம் உணராப் பதியை
> ஞானக் கண்ணினிற் சிந்தைநாடி,
> உராத்துணைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
> தண்ணிழலாம் பதி விதி என்னும் அஞ்செழுத்தே"

எனவரும் சிவஞானபோதம் ஒன்பதாஞ் சூத்திரமாகும். இறைவன் உயிரறிவாலும் கலையுணர்வாலும் அறியப் படாதவன் என்பது, "திருமாலும் நான்முகனும் தேடித்

தேடொணாத் தேவனை" (திருவங்கமாலை) எனவும், 'அரியானை' (6-1-1) எனவும், 'காண்டற்கரிய கடவுள் கண்டாய்' (6) எனவும் வரும் திருநாவுக்கரசர் வாய்மொழிக ளாலும், 'மாற்றமனங்கழிய நின்ற மறையோனே' எனவரும் திருவாசகத் தொடராலும், 'உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்' எனவரும் சேக்கிழார் வாய்மொழியாலும் நன்கு தெளியப்படும்.

இறைவன் திருவடியானது பிறவித்துயராகிய வெப்பத்தால் வாட்டமுற்று வந்தடைந்தோர்க்குக் குளிர்ந்த நீழலாய் வெளிப்பட்டு விளங்கும் என்பது,

"சுழலார்துயர்வெயிற் சுட்டிடும் போதடித் தொண்டர் துன்னும்
நிழலா வனஎன்றும் நீங்காப் பிறவி நிலைகெடுத்துக்
கழலா வினைகள் கழற்றுவ கால வனங்கடந்த
அழலா ரொளியன காண்க ஐயாறனடித்தலமே" (4-92-19)

எனவரும் திருநாவுக்கரசர் அருளிச் செயலால் நன்கு விளங்கும்.

உயிர் தூய்மையடைதற்குத் திருவைந்தெழுத்தினை விதிப்படி எண்ணுதல் வேண்டும் என்றார். ஈண்டு அஞ்செழுத்து என்றது முத்தி பஞ்சாக்கரத்தை என்பர் சிவஞான முனிவர்.

"உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன்
உனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாயநமவென்று நீறணிந்தேன்"
(4-94-6)

"அல்லலாக ஐம்பூதங்களாட்டினும்
வல்லவாறு சிவாயநமவென்று
நல்லமே வியநாதன் அடிதொழ
வெல்லவந்த வினைப்பகை வீடுமே" (5-43-6)

எனத் திருநாவுக்கரசரும்,

"நானேயோதவஞ் செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன்
தேனாயின்னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்

தானே வந்தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே"
(திருவாசகம்)

எனத் திருவாதவூரடிகளும் அருளிய பொருளுரைகள் இங்கு எண்ணத்தக்கனவாகும்.

ஆன்மா தன்னியல்பினை உள்ளவாறு அறிதற்கும் இறைவனது அருள் ஞானம் கைவரப்பெறுதல் வேண்டும் என அறிவுறுத்துவது,

"நானார் என்னுள்ளமார் ஞானங்களார் என்னையாரறிவார்
வானோர்பிரான் என்னையாண்டிலனேல்"
(திருக்கோத்தும்பி)

எனவரும் திருவாசகமாகும். இதன்பொருளை விரித்து விளக்கும் முறையில் அமைந்தது திருவெண்காட்டடிகள் அருளிய திருவிடை மருதூர் மும்மணிக்கோவையில் 'மேவிய புன்மயிர்த்தொகையோ' எனத்தொடங்கும் பதின்மூன்றாந் திருப்பாடலாகும். உயிர் எவ்வியல்பினது என ஆராயப் புகுந்து தத்துவசோதனை செய்து தம்மியல்பினை உணரப் பெறாது வருந்திய அடிகள், இறைவனது திருவருளையே கண்ணாகக் கொண்டு நோக்கிய நிலையில் உயிராகிய தம்மையும் உயிர்க்குயிராகிய இறைவனையும் உணரப்பெற்ற திறத்தை விரித்துரைப்பது இத்திருப்பாடலாகும். உடலிற் பொருந்திய மயிர்த்தொகுதியோ அதற்கிடமாய தோலின் பரப்போ, தோலினிடையே வைத்துப் பொதியப் பட்ட புண்ணோ புண்ணிடையூறும் உதிரப்புனலோ அவற்றிடையே கூறுசெய்து நிற்கும் எலும்போ, எலும்பிடை முடை நாற்றத்துடன் பொருந்திய மூளைவிழுதோ, வழுவழுப்புடையதாய் உள்ளேயொழுகும் வழும்போ, மெதுவாகச் சென்று ஊரும் புழுவாகிய கிருமிகளின் வரிசையோ, நீரிடையே வைத்த மலக்குவையோ, உடலுறுப்புக்களை இணைத்துக்கட்டிய நரம்பாகிய கயிறோ, உடற்குள் நின்று பிரியாது வருத்தும் பிணியோ தெரியாது இவற்றுள் இன்னதுயான் என்று அறிந்திலேன். ஆன்மா வாகிய என்னை மேற்கூறியவாறு உடற்பகுதிகள் எங்குந் தேடிப் பார்த்தேன்.

அவற்றுள் யாதிலும் என்னைக் காணப் பெற்றிலேன். இறைவனாகிய நினது திருவருள் எனக்குரியதாகக் கிடைத்தலால் வஞ்சனையைச் செய்யும் அறியாமைப் படலம் கீறித் தூயஞானக் கண்ணின் ஒளிகைவரப் பெற்றபின்னர் நின் அடியவனாகிய யானும் முதல்வனாகிய நினது பெருந்தன்மை யினையும் கண்டேன். கண்டவுடனே காண்பானாகிய என்னையும் கண்டேன் என்னைப்போலும் பிறரையுங் கண்டேன். வியத்தற்குரிய தன்மையென்னே! இறைவனாகிய நின்னைக் கண்டு நின்னருள் பெறாதமாந்தர் ஆன்மாவாகிய தம்மையுங்காண இயலாத தன்மையினராவர்" என்பது இத்திருப்பாடல் பொருளாகும்.

இதன்கண், "நின்னைக் காணாமாந்தர் தன்னையுங் காணாத் தன்மையோரே என ஓதியவாற்றான், ஏனைப்பசு பாசங்களும் சிவஞானத்தானன்றி அறியப்படாவென்பது போதரும்" எனவும், 'ஆன்மா பிறவுயிர்களைத் தனித்த முதலாய்ப் பிரித்தறியுமாறு இல்லையாயினும், சிவத்தைத் தரிசிக்கும் வழித்தான் அதுவாய் நின்று தன்னையறியுமாறு போலப் பிறவுயிர்களையும் அச்சிவத்தின் வண்ணமாய்க் கண்டறிதல் அமைவுடைத்தென்பது,

> 'என்னையுங்கண்டேன் பிறரையுங்கண்டேன்
> நின்னிலையனைத்தையுங் கண்டேன் என்னே
> நின்னைக் காணாமாந்தர்
> தன்னையுங் காணாத்தன்மையோரே'

என்பதனாற் புலனாம்" எனவும் சிவஞானமுனிவர் இத்திருப்பாடற்பொருளை இனிது விளக்கியுள்ளார்.

மேற்குறித்த திருவெண்காட்டடிகள் பாடலை அடியொற்றியமைந்து,

> "நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ
> தேடி எனையறியேன் தேர்ந்தவகை - நாடியரன்
> தன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார்
> என்னாமென அறிவார் இன்று" (வெ. 54)

எனவரும் சிவஞானபோத உதாரண வெண்பாவாகும்.

"நாடி, எலும்பு , நரம்பு முதலிய உடலுறுப்புக்களுள் உயிராகிய யான் ஆர்? என்று என்னைத்தேடிப் பார்த்தும் என்னைத் தெளிய அறிந்து கொண்டேனல்லேன். இவ்வாறு தம்மைப் பற்றி ஆராயந்தறிகின்ற ஆராய்ச்சியறிவின் கண்ணே இதனைத் தெளிவிப்பதாகிய அறிவு வேறு உண்டு என்று ஆராய்ந்து நோக்கி, அவ்வாறு நாடுங்கால் விளங்கித் தோன்றும் இறைவனது திருவடி ஞானத்தால் அம்முதல்வனையும் உணர்ந்து அவனது பேரறிவினுள்ளே தாம் அடங்கி நின்று அங்ஙனம் அறியும் பொருளாகிய தம்மையும் உணரும் பயிற்சி பெறாதார், உயிராகிய தம்மை எங்ஙனம் அறியவல்லார்" என்பது இதன் பொருளாகும். இப்பாடல் சிவரூபத்தால் ஆன்மதரிசனமும் சிவதரிசனத்தால் ஆன்ம சுத்தியும் ஆமாறுகூறிற்று என்பர் பெரியோர்.

தம்செயல் நீத்து இறைபணி நிற்பார்க்குப் பிராரத்த வினை (நுகர்வினை) உடலூழாய் நின்று வருத்தாது கழியும் என்றும், ஏனையோர்க்கு உயிரூழாய்த் தொடர்ந்து வருத்தும் என்றும் கூறுவர் சான்றோர். தம்பால் அடைக்கலமெனச் சார்ந்தவர்களை இடர் நீக்கிக் காப்பாற்றுதல் தலைமைக் குணமுடையார்க்குரிய கடமையாதலால் தன்னைச் சார்ந்து தன் அடித்தொழில்புரியும் அடியார்க்குளவாம் வினைத் துன்பங்களை நீக்கியும் ஏனையோர்க்கு அருத்தியும் நிற்றலால் இறைவன் நடுவுநிலைமையில்லான்போலும் என ஐயுறுவாரை நோக்கி அங்ஙனம் செய்தல் உலகியல் வழக்குக்குப் பொருந்தியதே என வற்புறுத்துவது,

"சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால்
நலமிலன் நாடொறும் நல்குவான் நலன்" (4-11-6)

எனவரும் திருநாவுக்கரசர் அருள்மொழிகளாகும். இதனை அடியொற்றியது,

"சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாய்ச் - சார்ந்தடியார்
தாந்தானாச் செய்து பிறர் தங்கள்வினை தான்கொடுத்தல்
ஆய்ந்தார்முன் செய்வினையும் ஆங்கு"

(சிவ. சூ. 10, வெ. 64)

எனவரும் சிவஞானபோத உதாரண வெண்பாவாகும். 'தன்னையடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர் தங் கடனாவதுதான்' என அப்பரடிகள் எடுத்தாண்ட பழமொழி இவ்வெண்பாவில் இடம் பெற்றுள்ளமை காணலாம்.

காணுந்தன்மையினையுடைய கண்ணுக்குப் புறப் பொருள்களைக் காட்டித் தானும் அதனுடன் கூடியிருந்து காணும் ஆன்மாவைப் போன்று இறைவனும் அறியுந் தன்மையதாகிய உயிர்களோடு கலந்து நின்று பொருள் காட்டும் உதவியினைப் புரிதலோடு அவ்வுயிருடன் கூடிக் காணும் உதவியினையும் புரிகின்றான் என்பதனை அறிவுறுத்துவது,

> "காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
> காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்
> அயரா அன்பின் அரன்கழல் செலுமே"

எனவரும் சிவஞானபோதப் பதினோராஞ் சூத்திரமாகும். இது,

> "உண்ணிலாப் புகுந்து நின்றங்
> குணர்வினுக்குணரக் கூறி" (4-25-8)

> "உள்ளத்தின் உள்ளிருந்தங் குறுதிகாட்டி" (4-5-6)

> "நானேதும் அறியாமே என்னுள் நின்று
> நல்லனவுந் தீயனவும் காட்டா நின்றாய்" (6-7)

எனக் காட்டும் உபகாரத்தையும்

> "உள்குவாருள் கிற்றெல்லாம் உடனிருந்தறிதி" (4-75-3)

எனக் காணும் உபகாரத்தையும் உணர்த்தும் நிலையில் திருநாவுக்கரசர் அருளிய தேவாரத் தொடர்களையும்,

> "அறிவானுந்தானே அறிவிப்பான்தானே
> அறிவாயறிகின்றான் தானே" (அற்புத.)

எனவரும் காரைக்காலம்மையார் வாய்மொழியையும் அடியொற்றியமைந்துள்ளமை அறியற்பாலதாகும்.

இறைவனடியார்கள் யாவராயினும் குலவேற்றுமை கருதாது அவர்களைச் சிவபெருமான் ஆகவே தெளிந்து வழிபடுதல் வேண்டும் என்பது திருமுறை ஆசிரியர்கள் உலகமக்களுக்கு அறிவுறுத்திய உறுதியுரையாகும். தெய்வம் உண்டெனத் தெளிந்தோர் அத்தெய்வத்தை வழிபடுதல் போலவே தெய்வமுண்டெனத் தெளிந்த அடியார்களையும் தெய்வமாகப் பேணிவழிபடுதல் வேண்டும் என்பார், "தெய்வந் தெளியின் தெளிந்தோர்ப் பேணுமின்" என அறிவுறுத்தினார் இளங்கோவடிகள்.

> "நலமிலராக நலமதுண்டாக நாடவர்நாடறிகின்ற
> குலமிலராகக் குலமதுண்டாகத் தவம்பணி குலச்சிறை"

எனக் குலச்சிறைநாயனார் சிவனடியார்களை வழிபட்ட திறத்தினை 'மங்கையர்க்கரசி' என்னும் திருப்பதிகத்தில் ஆளுடைய பிள்ளையார் விரித்துக் கூறியுள்ளார்.

> "எவரேனுந்தாமாக இலாடத்திட்ட
> திருநீறுஞ் சாதனமுங்கண்டால் உள்கி
> உவராதே அவரவரைக் கண்டபோதே
> உகந்தடிமைத் திறம்நினைந்தங்குவந்து நோக்கி
> இவர்தேவர் அவர்தேவர் என்று சொல்லி
> இரண்டாட்டா தொழிந்தீசன்திறமே பேணிக்
> கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே
> கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே" (6-61-3)

எனவரும் திருத்தாண்டகம் சிவனடியார்களைச் சிவன் எனவே தெளிந்து வழிபடும் முறையினை அறிவுறுத்து கின்றது. திருநாவுக்கரசர் அறிவுறுத்திய முறையில் சிவனடியார்களைச் சிவனெனவே தெளிந்து வழிபட்டவர் நம்பியாரூரர் என்பது,

> "துணிப்படும் உடையுஞ்சுண்ண வெண்ணீறும்
> தோற்றமும் சிந்தித்துக் காணில்
> மணிப்படு கண்டனை வாயினால் கூறி
> மனத்தினால் தொண்டனேன் நினைவேன்"

எனவரும் அவரது வாய்மொழியால் நன்கு விளங்கும்.

தேவார ஆசிரியர் மூவரும் இறைவன் கோயில் கொண்டெழுந்தருளிய திருத்தலங்கள்தோறும் சென்று திருக்கோயில்களைச் சிவனெனவே வழிபட்ட செய்தி அவர்கள் திருவாய்மலர்ந்தருளிய திருப்பதிகங்களாலும் அவர்களது வரலாறு கூறும் திருத்தொண்டர் புராணத் தாலும் நன்கு தெளியப்படும்.

> "தூய வெண்ணீறுதுதைந்த பொன்மேனியும் தாழ்வடமும்
> நாயகன் சேவடி தைவரு சிந்தையும் நைந்துருகிப்
> பாய்வது போலன்பு நீர்பொழிகண்ணும் பதிகச் செஞ்சொல்
> மேயசெவ்வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே"
>
> (பெரிய. திருநாவுக். 148)

எனத் திருநாவுக்கரசரது சிவவேடப் பொலிவினைச் சொல்லோவியஞ் செய்துகாட்டிய சேக்கிழாரடிகள், அப்பரது அருள்வேடத்தைக்கண்ட சிவஞானசம்பந்தர் தம் உள்ளக்கிழியிலே உருவெழுதி நெடுங்காலமாக வழிபடப் பெற்றுவந்த அடியார் திருவேடமே இப்பொழுது திருநாவுக்கரசராகப் புறத்தே எழுந்தருளியது என எண்ணித் திருநாவுக்கரசரைத்தொழுது மகிழ்ந்த செய்தியினை,

> "சிந்தையிடையறா அன்பும் திருமேனிதனிலசைவும்
> கந்தைமிகை யாங்கருத்தும் கையுழவாரப்படையும்
> வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற்பொலி திருநீறும்
> அந்தமிலாத் திருவேடத்தரசுமெதிர் வந்தணைய"
>
> "கண்டகவுணியக் கன்றும் கருத்திற்பரவு மெய்க்காதல்
> தொண்டர் திருவேடம் நேரேதோன்றிய தென்னத்
> தொழுதே"
>
> (பெரிய. சம்பந்தர். 270, 271)

எனவரும் பாடல்களில் விரித்துக் கூறியுள்ளார். இங்ஙனம் மெய்ஞ்ஞானம் கைவரப் பெற்ற சிவஞானிகள் அடியார் திருவேடத்தினையும் திருக்கோயிலையும் அரனெனவே கண்டுதொழுத வரலாற்றுச் செய்திகளை அடிப்படையாகக் கொண்டு சீவன் முத்தராகிய அணைந்தோர் தன்மையினை அறிவுறுத்துவதே சிவஞானபோதத்தில்,

"செம்மலர் நோன்றாள் சேரலொட்டா
அம்மலங்கழீஇ அன்பரொடுமரீஇ
மாலற நேயம் மலிந்தவர்வேடமும்
ஆலயந்தானும் அரனெனத் தொழுமே"

எனவரும் பன்னிரண்டாஞ் சூத்திரமாகும். பன்னிரண்டாந் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணத்திற் கூறப்படும் அடியார் செய்திகள் சிவஞானபோதம் பன்னிரண்டாஞ் சூத்திரப் பொருளுக்குரிய இலக்கியங்களாக அமைந்திருத் தலையுணர்வோர், பன்னிருதிருமுறைகளின் பயனாக அமைந்ததே மெய்கண்டார் இயற்றிய சிவஞானபோதம் என்னும் சைவசித்தாந்த சாத்திரம் என்னும் மெய்ம்மை யினைத் தெளிவாக உணர்வார்கள் என்பது திண்ணம்.

இடையறாப் பேரன்பால் சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சத்தராய் மெய்ம்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர்ததும்ப உள்ளங் கசிந்துருகிய அடியார்களுடனே இறைவன் பிரிவின்றி உடனாய் நிற்பன் என்பது,

"பண்ணிற்பொலிந்த வீணையர் பதினெண்கணமும்
உண்ணாநஞ்
சுண்ணப்பொலிந்த மிடற்றினால் உள்ளம் உருகில்
உடனாவர்" (2-111-4)

எனவும்,

"உயிராவணமிருந்துற்று நோக்கியுள்ளக் கிழியினுருவெழுதி
உயிர் ஆவணஞ் செய்திட்டு உன்கைத்தந்தார்
உணரப்படுவாரோடு ஒட்டி வாழ்தி" (6-25-1)

எனவும் வரும் திருமுறைத் தொடர்களால் இனிது விளங்கும். இத்தொடர்களை அடியொற்றியமைந்தது,

"உள்ள முருகிலுடனாவரல்லது
தெள்ளவரியரென்றுந் தீபற
சிற்பரச் செல்வரென்றுந்தீபற" (7)

எனவரும் திருவுந்தியாராகும். "மேலான ஞானப்பெருஞ்

செல்வத்தை வரையாது வழங்கவல்ல அருள்வள்ளலாகிய இறைவன், ஆன்மாக்களது உள்ளம் (தீயிற்பட்ட மெழுகு போன்று) உருகிய பக்குவநிலையினைப் பெற்றால் ஆன்மாவோடு ஒட்டி உடனாவர். உள்ளம் உருகப் பெறாத ஏனையோர் தமது சுட்டறிவினால் ஆராய்ந்தறிந்து கூடுதற்குரிய எளிமை நிலையினர் அல்லர்" என்பது இதன்பொருளாகும்.

அடியார்கள் தன்னை அன்பினாற்கருதத் தொடங்குதற்கு முன்னமேயே விரைந்து முன்னின்று அருள்புரியும் பேரருளாளன் இறைவன் என்பதனை,

> **"எம்பிரான் என்றதே கொண்டென்னுளே புகுந்து நின்றிங்**
> **கெம்பிரான் ஆட்ட ஆடி என்னுளே உழிதர்வேனை**
> **எம்பிரான் என்னைப் பின்னைத் தன்னுளே கரக்கு**
> **மென்றால்**
> **எம்பிரான் எண்ணினல்லால் என்செய்கேன் ஏழையேனே"**
> (4-76-3)

எனவும்,

> **"தன்னை முன்னம் நினைக்கத்தருவான்"**

எனவும் வரும் திருமுறைகளால் அறியலாம். இத்திருமுறைப் பொருளை விளக்கும் நிலையில் அமைந்தது,

> **"கருதுவதன் முன்னங்கருத்தழியப் பாயும்**
> **ஒருமகள் கேள்வனென்றுந்தீபற**
> **உன்ன அரியனென்றுந்தீபற"** (19)

எனவரும் திருவுந்தியாராகும்.

ஆன்மாவின் உள்ளத்திலே தோன்றாது நிற்றலால் கள்வன் எனப்படும் இறைவனது இருப்பினை உள்ளவாறு காணவல்லார்க்கு அக்கள்ளந்தீர்தலின் தம்மையும் முதல்வனையும் காணுதல் கூடும் என்பதும் அங்ஙனம் காணவல்லார்க்கு ஆறு அத்துவாக்கள் வழியாக ஈட்டப் பட்ட வினைக்குவியல் அனைத்தும் கவரப்பட்டு அவர்தம் வெளிக்கு வெளியாய்ப் பரமாகாசமாகி விடும் ஐம்புல வேடர்களாற் கவர்ந்து கொள்ளப்படாத வீடுபேறும்

எளிதாகக் கிடைக்கும் என அறிவுறுத்துவது,

"கள்ளரோடில்லமுடையார் கலந்திடில்
வெள்ள வெளியாம் என்றுந்தீபற
வீடும் எளிதாமென்றுந்தீபற" (23)

எனவரும் திருவுந்தியாராகும். இது,

"வெள்ளநீர்ச் சடையினார்தாம் வினவுவார்போல வந்தென்
உள்ளமே புகுந்து நின்றார்க் குறங்கு நான்புடைகள்
போந்து
கள்ளரோ புகுந்தீரென்னக் கலந்துதான் நோக்கிநக்கு
வெள்ளரோம் என்று நின்றார் விளங்கிளம் பிறையினாரே"
(4-75-9)

எனவரும் திருநேரிசைப் பொருளையுளங்கொண்டு கூறியதாகும். தோன்றாது நிற்றல் பற்றிக் கள்வர் என்றார். வெள்ளரோம் - வெட்டவெளியில் உள்ளோம். கலத்தல் ஆவது கள்ளராகிய இறைவரோடு இல்லமுடையாராகிய வினைக்குவியலை அப்புறப்படுத்தும் நிலையில் ஒன்றித் தொழில் புரிதல்.

சிவஞானிகள் உலகப் பொருள்களிற் கருத்தைச் செலுத்தாது உயிர்க்குயிராகிய இறைவனையே எக்காலத்துஞ் சார்ந்து நிற்றலின் இறைவனும் இவர்களுடைய வினைப் பயன்களைத் தானே ஒன்று கொள்வனாதலால் இவ்வடியார் களுடைய கருவி கரணங்களெல்லாம் சிவகரணங்களாக அமைய அந்நிலையில் அவர்கள் பெற்ற சிற்றின்பமும் பேரின்பமாக வந்து முடியும்

"சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலிமென்றோட்டடமுலை
ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத்தூர் ஐயன் அருளதே"
(7-45-4)

எனவரும் நம்பியாரூரர் அருளிச்செயலும்,

"தென்னாவலூ ராளி தேவர்பிரான் திருவருளால்
மின்னாருங் கொடிமருங்குற் பரவையெனும் மெல்லியல்
தன்

பொன்னாரு முலையோங்கற் புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் பயில்யோக பரம்பரையின் விரும்பினார்"

(பெரிய. தடுத். 181)

எனவரும் சேக்கிழார் நாயனார் வாய்மொழியும் உலகப் பொருள்களைப் பாராது சிவபரம் பொருளையே நோக்கிய செம்புலச் செல்வர்களுடைய கருவி கரணங்கள் சிவ கரணங்களாகத் தூய்மைபெற்ற நிலையில், அவர்கள் இவ்வுலகில் துய்த்த சிற்றின்பமும் பேரின்பமாக நிறைவுபெற்ற தன்மைக்குச் சிறந்த இலக்கியங்களாகத் திகழ்கின்றன. இவ்வுண்மையினைப் புலப்படுத்தும் நிலையில் அமைந்தது,

"பெற்ற சிற்றின்பமே பேரின்பமாமங்கே
முற்றவரும் பரிசுந்தீபற
முளையாது மாயையென்றுந்தீபற" (33)

எனவரும் திருவுந்தியாராகும்.

சிவயோக நெறியில் நிற்போர் பிராணவாயுவைப் புறத்தே போகாமல் ஒடுக்கி இறைவனது திருவருள் ஞானமாகிய விளக்கினையேற்றிப் புறத்தே செல்லும் இடைபிங்கலைகளின் வழிகளையடைத்து நன்புலன் ஒன்றி அகத்தே மேல்நோக்கிச்செல்லும் சுழுமுனை வழியினைத் திறந்து திருவைந்தெழுத்தின் துணைகொண்டு நாத தத்துவத்தில் நிலைபெற்ற சிவபரம்பொருளை ஆறாதாரங் களுக்கும் மேலான மீதானத்திலே கூடிநின்று உலக வாதனை களாலுளவாம் இடர்களை நீங்கி இன்புறுவர். இச்செய்தி,

"ஊனிலுயிர்ப்பை யொடுக்கியொண்சுடர்
ஞானவிளக்கினையேற்றி நன்புலத்து
ஏனைவழி திறந்தேத்துவார்கிட
ரான கெடுப்பன அஞ்செழுத்துமே" (3-22-3)

எனவரும் ஆளுடையபிள்ளையார் திருப்பாடலால் அறியப்படும்.

"உடம்பெனு மனையகத்துள் உள்ளமே தகளியாக
மடம்படு முணர்நெய்யட்டி உயிரெனுந் திரிமயக்கி

இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்துநோக்கில்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே" (4-75-4)

எனவும்,

"கழிப்பாலை மேயகபாலப்பனார்
வானிடத்தையூடறத்து வல்லைச் செல்லும்
வழிவைத் தார்க்கவ் வழியே போதும் நாமே" (6-22-3)

எனவும் வரும் திருநாவுக்கரசர் திருப்பாடல்கள் இச்சிவயோக நெறியினைக் குறித்து நிற்றலும், இதற்கு இலக்கணமாக

"நாலுகரணங்களு மொன்றாய் நல்லஅறிவு மேற்கொண்டு
காலும் பிரமநாடி வழிக்கருத்துச் செலுத்திக் கபாலநடு
ஏலவே முன்பயின்றநெறி எடுத்த மறைமூலந்திறப்ப
மூலமுதல் திருப்பாதம் அடைவார்கயிலை
முன்னடைந்தார்" (பெரிய. பெருமிழலை. 10)

எனப் பெருமிழலைக் குறும்பநாயனார் வரலாறு அமைந்துள்ளமையும், 'மனத்தகத்தான் தலைமேலான்' (6-8-5) எனவும், "ஓங்கினாரெமதுச்சியாரே' (2726-2) எனவரும் திருமுறைத் தொடர்களும் ஆறாதாரத்திற்கும் மேலாகிய மீதானத்தைக் குறித்தல் காணலாம். இத்தகைய சிவயோக நெறியினை விளக்குவது,

"நாலாய பூதமும் நாதமும் ஒன்றிடின்
நாலாம் நிலையாமென்றுந்தீபற
நாதற்கிட மதென்றுந்தீபற" (36)

எனவரும் திருவுந்தியாராகும். நாலாம்பூதமாகிய உயிர் விளியும் நாதமும் சேர்ந்து ஒன்றுமிடம் பிரமமந்திரம் எனப்படும் உச்சிப் பெருவெளியாகும். நாதவுருவினனாகிய இறைவன் எழுந்தருளியிருக்கும் மேலான இடமும் அம் முதல்வனை ஆன்மா கூடுதற்குரிய இடமும் அதுவேயாகும்.

அடியார்கள் இறைவனைத் தம் உடம்பினகத்தே வைத்து வழிபடும் போது அவர்களது உந்தித்தாமரை ஓமத்தானமாகவும் நெஞ்சத்தாமரை பூசைத்தானமாகவும்

நெற்றிக்கமலம் தியானத்தானமாகவும் அமைய அகப்பூசை யினை முறைப்படி செய்து இம் மூன்றிற்கும் மேலாய் மீதானம் எனப்படும் தலையினது உச்சியாகிய பிரமரந்திரப் பெருவெளியிலே தம்முயிரைச் செலுத்திக் கலந்து இன்புறும் நிலையில் நாலாந்தானமாகிய அவ்விடத்திலே ஆயிரவிதழ்த் தாமரையிலே அம்மையப்பராக இறைவர் எழுந்தருளி யிருப்பார் என்பார் 'தாரத்தின்.................நாற்றானத்தேயிருப்பர்' (திருக்களிற்றுப்படியார்-79) என்றார் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார். ஆறாதாரங்களாகிய மூன்று மண்டலங் களையும் கடந்து நாலாவது தானமாகத் திகழ்வது உச்சிப் பெருவெளியாதலின் அது நாற்றானம் என வழங்கப் பெறுவதாயிற்று. இப்பெயர் வழக்கம், 'நாற்றானத் தொருவனை நானாயபரனை' (7-38-4) எனச் சிவயோகியா ராகிய நம்பியாரூரர் பாடலில் நிலைபெற்றுள்ளமையும் இந்நிலையினை 'நாலாம் நிலத்தின் நடுவான பொருள்' (திருமந்திரம்-840) எனத் திருமூலநாயனார் குறித்துள்ள மையும் இங்கு ஒப்புநோக்கியுணரத்தக்கனவாகும்.



# திருவாதவூரடிகள் மேற்கொண்டொழுகிய சிவநெறிக் கொள்கை

சைவ சமய குரவர் எனப்போற்றப்பெறும் நால்வருள் காலமுறைப்படி நாலாமவராக வைத்து எண்ணப்பெறுபவர் திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகராவர். அடிகள் தமக்கு முன்னுள்ள திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய தேவார ஆசிரியர் மூவரும் அம்மூவர்க்கும் காலத்தால் முற்பட்ட திருமூலநாயனாரும் கொண்டொழுகிய சைவசித்தாந்தம் எனப்படும் சிவநெறிக் கொள்கையினையே மேற்கொண்டொழுகியவராவர். இச்செய்தி திருமந்திரமாலையிலும் மூவர் தேவாரப் பதிகங்களிலும் உள்ள தொடர்களும் கருத்துக்களும் அடிகள் அருளிய திருவாசகம் திருக்கோவையாகிய அருள்நூல்களில் அவ்வாறே எடுத்தாளப் பெற்றிருத்தலால் இனிது விளங்கும்.

திருவாசகத்தில் பதி பசு பாசம் என்னும் முப்பொருள் பேசப்பட்டுள்ளது. பதி - இறைவன், பசு - ஆன்மா, பாசம் - உயிர்களைப் பிணித்துள்ள ஆணவம் கன்மம் மாயைஎன்னும் மும்மலப்பிணிப்புக்கள். அவற்றுள் மாயையின் காரியமாகிய உடல் கருவி உலகுநுகர்பொருள் என்னும் மாயேயத்தையும், இறைவனது சத்திகளுள் ஒன்றாகிய திரோதாயி (மறைப்புச் சத்தி)யையும் வேறுபிரித்து எண்ணி மலங்கள் ஐந்து எனக் கூறுதலும் உண்டு. இவ்வாறு மும்மலம் எனவும் ஐம்மலம் எனவும் வழங்கும் சைவ சித்தாந்தக் குறியீடுகளும், இருவினையொப்பு முதலிய நுண்பொருள்களும் திருவாசகத்தில் இடம் பெற்றுள்ளன. இக்குறிப்புக்களை உற்றுநோக்குங்கால் திருவாதவூரடிகள் திருமூலர் அருளிய சைவசித்தாந்தத் தத்துவக்கொள்கைகளை மேற்கொண்டொழுகிய செம்புலச் செல்வர் என்பது நன்கு துணியப்படும்.

'ஒருவன் என்னும்ஒருவன் காண்க' (திருவண்டப் பகுதி) எனவரும் திருவாசகத்தொடர், உலகங்கள் எல்லாவற்றையும் இயக்கும் ஒப்பற்ற முழுமுதற்கடவுள்

ஒன்றே என்பதனை அறிவுறுத்துகின்றது. 'ஒருவனே தேவனும்' என்றார் திருமூலர். இங்ஙனம் ஒருவனாகிய முதல்வன் தனது ஒருமையில் சத்தியும் சிவமும் என இருமைத் தன்மையனாய் அம்மையப்பராக விருந்து உயிர்கட்கு அருள்புரியுந் திறத்தினை உணரப்பெற்ற மணிவாசகப் பெருந்தகையார் 'அம்மையே அப்பா ஒப்பிலாமணியே' என அம்முதல்வனை அழைத்துப் போற்றியதுடன் தாம்கண்ட தெய்வக்காட்சியினை,

> "தோலுநதுகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
> பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியுஞ்
> சூலமுந்தொக்க வளையுமுடைத் தொன்மைக்
> கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ"

எனவரும் திருப்பாடலில் புனைந்து போற்றியுள்ளார். சீர்காழிப்பதியில் பிரமதீர்த்தக்ரையில் நின்று கொண்டு திருத்தோணிச் சிகரம்பார்த்து 'அம்மே அப்பா' என அழுதருளிய கவுணியப்பிள்ளையார்க்கு இறைவன் அம்மையப்பராக விடைமேல் தோன்றிச் சிவஞானப்பாலை அருத்தியருளிய திருவருட்செயலும், இவ்வாறே திருத் தொண்டத்தொகையடியார் பலர்க்கும் இறைவன் அம்மையப்பராகத் தோன்றியருள்புரிந்த திருவருட் செயல் களும் திருத்தொண்டர் புராணத்தில் விரித்துரைக்கப் பெற்றுள்ளன. இவ்வுண்மையினை வற்புறுத்தும் நிலையில் அமைந்தது,

> "அம்மையப்பரே யுலகுக்கம்மையப்ப ரென்றறிக
> அம்மையப்பர் அப்பரிசே வந்தளிப்பர் - அம்மையப்பர்
> எல்லாவுலகுக்கும் அப்புறத்தார் இப்புறத்தும்
> அல்லால் போல்நிற்பர் அவர் (1)

எனவரும் திருக்களிற்றுப்படியார் மங்கலவாழ்த்துப் பாடலாகும்.

இறைவன் குருவாகத் திருமேனிகொண்டு எழுந்தருளிவந்து தம்மை ஆண்டு கொண்டருளிய திறத்தை,

> "அருபரத்தொருவன் அவனியில் வந்து

குருபரனாகி அருளிய பெருமையை"

எனவும்,

"புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனெனயானுந்தேறினன் காண்க"

எனவும்,

"பாசமாம் பற்றறத்துப் பாரிக்கும் ஆரியனே"

எனவும்,

"இது அவன் திருவுரு இவன் அவன் எனவே
எங்களை யாண்டுகொண்டிங் கெழுந்தருளும்
மதுவளர் பொழில் திருவுத்தரகோச
மங்கையுள்ளாய் திருப்பெருந்துறைமன்னா"
(திருப்பள்ளியெழுச்சி)

எனவும்,

"முன்னே எனையாண்ட பார்ப்பானே"

எனவும்,

"அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்கும்
தெரிக்கும் படித்தன்றி நின்ற சிவம் வந்துநம்மை
உருக்கும் பணிகொள்ளும் என்பது கேட்டுலகமெல்லாஞ்
சிரிக்குந் திறம்பாடித் தெள்ளேணம் கொட்டாமோ"

எனவும் வரும் திருவாசகச் செழும் பாடல்கள் திருவாதவூரடிகளுக்கு இறைவனே குருவாக எழுந்தருளிவந்து மெய்யுணர்வளித்த திறத்தினை விரித்துரைப்பனவாகும். இங்ஙனம் சிவமே குருவாக எழுந்தருளும் திருவருளின் திறத்தை வியந்து போற்றுவது,

"அகளமா யாரும் அறிவரிதப்பொருள்
சகளமாய் வந்ததென்றுந்தீபற
தானாகத் தந்ததென்றுந்தீபற" (1)

எனவரும் திருவுந்தியாராகும். "தோற்றமில் காலமாகத்

தூய்மைப்பொருளாய் எத்தகையோராலும் இன்ன தன்மைத்து என அறிய வொண்ணாததாயுள்ள சிவமாகிய அம்முழுமுதற் பொருளே நம்பொருட்டுத் திருமேனி கொண்டு குருவாக எழுந்தருளி வந்தது. அம்முதற்பொருள் தானே வலியவந்து மெய்யுணர்வை வழங்கியருளியது" என்பது இதன் பொருளாகும்.

அகளம் - அருவம், என்றது, உயிர்க்குயிராய் நின்று அறிவிக்கும் பேரறிவினை சகளம் - உருவம், என்றது, குருவாகி வந்து அறிவிக்கும் திருமேனியை, யாரும் அறிவரிது அப்பொருள் என்றது, தன்னைக் கூடினவர்களாலும் கூடாதவர்களாலும் இன்னதன்மையதென அறிய வொண்ணாத சிவபரம்பொருளை. தானாகத் தருதல் - பிறிது காரணமின்றித் தன் அருளே காரணமாக எளிவந்து வலியக் கொடுத்தல், 'தானாக' என்பதற்குச் 'சிவமேயாக' எனப் பொருளுரைத்தலும் உண்டு. தருதல் - ஞானத்தைத் தருதல்,

இறைவன் குருவாகத் திருமேனி கொண்டு எழுந்தருளி மெய்ப்பொருளை உபதேசித்தருளுதலாலேயே உபதேச பரம்பரையில் ஆகமப் பயிற்சியும் சமயவொழுக லாறுகளும் யோகம் முதலிய நெறிமுறைகளும் உலகத்து நிலைபெற்று வழங்கி வருகின்றன என இறைவன் குருவாய் எழுந்தருளுதலின் இன்றியமையாமையை விரித்துரைப்பது,

> "ஆகமங்கள் எங்கே அறுசமயந்தானெங்கே
> யோகங்களெங்கே யுணர்வெங்கே - பாகத்
> தருள்வடிவுந்தானுமா யாண்டிலனேலந்தப்
> பெருவடிவை யாரறிவார் பேசு" (5)

எனவரும் திருக்களிற்றுப்படியாராகும். இது,

> "நானும் என்சிந்தையும் நாயகனுக்கெவ்விடத்தோம்
> தானுந்தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல்"

எனவும்,

> "நானார் என்னுள்ளமார் ஞானங்களார் என்னை யாரறிவார்
> வானோர் பிரான் என்னை யண்டிலனேல்"

எனவும் வரும் திருவாதவூரடிகள் அனுபவமொழிகளை அடியொற்றியமைந்ததாகும்.

சிவானுபவம் இன்னதன்மைத்தெனச் சொல்லால் வெளியிட்டுரைக்கவொண்ணாதது என்பதனை,

"தடக்கையினெல்லிக் கனியெனக் காயினன்
சொல்லுவதறியேன் வாழிமுறையோ
தரியேன் நாயேன் தான்எனைச் செய்தது
தெரியேன்........... என்னிற்
கருணை வான்தேன்கலக்க
அருளொடு பராவ முதாக்கினன்" (திருவண்டப்பகுதி)

எனவருந்தொடரில் அதனையுணர்ந்தோராகிய மணிவாசப் பெருமான் குறித்துள்ளார். இக்குறிப்பினை அடியொற்றி யமைந்தது,

"எங்ஙனிருந்ததென் றெவ்வண்ணஞ் சொல்லுகேன்
அங்ஙனிருந்ததென்றுந்தீபற
அறியும் அறிவதன்றுந்தீபற" (4)

எனவரும் திருவுந்தியாராகும்.

சிவபூசனையில் ஈடுபட்டிருந்த சண்டீசப்பிள்ளையார் (சிவபூசைக்குரிய பாற்குடத்தைக் காலால் இடறிய எச்சதத்தனைக் கொல்லுதல்) ஐம்பெரும் பாதகங்களுள் ஒன்றான கொலையென்றும் அதனைச் செய்தல் பழியுடைய செயலாம் என்றும் சிறிதும் எண்ணிப் பாராமல், தன்னைப் பெற்றுவளர்த்த தந்தையும் தனக்கு மறைஓதுவித்த வேதியனும் குருவும் ஆகிய அவனுடைய இரண்டு கால் களையும் வெட்டி வீழ்த்திடக்கண்டு இறைவன் சண்டீச நாயனாரது வல்வினையின் திறத்தால் சிவமாந் தன்மைப் பெரும்பதத்தினை அவர்க்கு வழங்கியருளினார் என்னும் மெய்ம்மை நிகழ்ச்சியினைக் கண்டுணர்ந்தனையல்லவா என மாணவனை நோக்கி வல்வினையின் திறம் கூறுவதாக அமைந்தது,

"பாதகமென்றும் பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாளிரண்டும் - சேதிப்பக்

கண்டீசர் தாமாம் பரிசளித்தார் கண்டாயே
சண்டீசர் தன்செயலாற்றான்" (19)

எனவரும் திருக்களிற்றுப்படியாராகும். இது,

"தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டுஞ்
சேதிப்பஈசன் திருவருளாற்றேவர் தொழப்
பாதகமே சோறு பற்றியவாதோணோக்கம்" (திருவாசகம்)

எனவரும் திருவாசகப் பாடலை அடியொற்றி யமைந்துள்ளமை ஒப்புநோக்கியுணரத் தகுவதாகும்.

தன்னியல்பால் ஒருவனாகிய இறைவன் உயிர்க்குயிராய்ப் பொருள்கள்தோறும் நீக்கமறக் கலந்து நின்று உலகுயிர்களை இயக்கியருளுதலால் உலகிற் பல்வேறு வடிவினவாகவும் திகழ்கின்றான் என்பதனை,

"ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க" (சிவபுராணம்)

எனவருந்தொடரால் திருவாதவூரடிகள் அறிவுறுத்துவர். இத்தொடர்ப்பொருளை விரித்துரைக்கும் முறையில் அமைந்தது,

"ஏகனுமாகிய நேகனுமானவன்
நாதனு மானானென்றுந்தீபற
நம்மையே யாண்டானென்றுந்தீபற" (5)

எனவரும் திருவுந்தியாராகும்.

நிராதாரயோகத்தில் நிற்பார்க்கு நிகழும் திருவருள் அடையாளம் இதுவென உணர்த்துவது,

"திருச்சிலம்போசை ஒலிவழியே சென்று
நிருத்தனைக்கும்பிடென்றுந் தீபற
நேர்பட அங்கே நின்றுந்தீபற" (17)

எனவரும் திருவுந்தியாராகும். "அனவரத தாண்டவம் புரிந்தருளும் திருவடியில் உள்ள திருச்சிலம்பாகிய திருவருளினுடைய ஓசையொலி வழியே சென்று மீதானத்தே

ஆடல்புரியும் கூத்தப்பெருமானைக் கண்டு கும்பிடுவாயாக. அங்கே அப்பரம்பொருள் வெளிப்பட்டுத் தோன்ற ஐம்புல வழியாகிய சிறுநெறியிற் செல்லாது திருவருளாகிய செந்நெறியில் நிலைத்து நிற்பாயாக" என்பது இதன் பொருளாகும். இறைவன் திருவடியிலுள்ள சிலம்பும் அதன் கண் இருந்து தோன்றும் ஓசை ஒலியும் முறையே பரவிந்தும் பரநாதமும் ஆகும் என்பர். திருவடிச் சிலம்பொலி அகஞ் செவிக்குப் புலனாகும் நிலையில் ஓசை எனவும் உயிருணர் வுக்குப் புலனாகும் நிலையில் ஒலி எனவும் பெயர் பெறும். 'ஓசையொலியெலாம் ஆனாய் நீயே' எனப் போற்றுவர் தாண்டகவேந்தர். திருச்சிலம்போசை ஒலிவழியே சென்று நிருத்தனைக் கும்பிடுதலாவது, உலக ஆரவாரத்தினின்றும் நீங்கி அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்று ஐம்புலனும் அடக்கி ஞானமேயுருவாகத் திகழும் இறைவனைத் தமது நெஞ்சத்தாமரையினுட் சென்னியிலும் வைத்து வழிபடுதல். அங்ஙனம் வழிபடும் சிவயோகியர்க்குத் திருவருள் மயமான பத்துவகை நாதம் அகத்தே தோன்றும் எனவும் தற்போதங் கெடத் திருவருளின் ஓசையொலி வழியே கும்பிடுவார்க்குக் கூத்தப்பெருமான் நேர்படத் தோன்றியருள்வன் எனவும், இங்ஙனம் சிலம்பொலி கேட்டல் அவனருள் வழி நிற்போர்க்கே இயலும் ஏனையோர்க்கு இயலாது எனவும் அறிவுறுத்துவது,

> "மணிகடல் யானை வார்குழல் மேகம்
> மணிவண்டு தும்பி வளைபேரிகையாழ்
> தனித்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்
> பணிந்தவர்க் கல்லது பார்க்க வொண்ணாதே" (606)

எனவரும் திருமந்திரமாகும். "மணி, கடல், யானை இசை வளர்தற்கு இடனாகிய வேய்ங்குழல், மேகம், நீலமணி போலும் நிறமுடைய வண்டு, (தேன்நுகரும்) தும்பி, வளை (சங்கு) பேரிகை, யாழ் என மிகவும் நுண்ணியவாய் மெல்லிய வாய்த் தோன்றுகின்ற இப்பத்துவகை நாதங்களும் இறைவனைப் பணிந்து போற்றும் தியானநிலையிலுள்ள செம்புலச் செல்வர்க்கல்லது ஏனையோரால் செவிப் புலனாகக் கண்டுணர்தல் இயலாது" என்பது இத்திருமந்திரத்தின் பொருளாகும்.

'நன்மணிநாதம் முழுங்கியென் உள்ளுற நண்ணுவ
தாகாதே'

'வீணைமுரன்றெழும் ஓசையில் இன்பம் மிகுத்திடு
மாகாதே'

'சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை தழைப்பனவாகாதே'

என மணிவாசப் பெருமான் அருளிய திருவாசகத் தொடர்களும்

"தூங்கிருள் நடுநல்யாமத்தே
மழலை யாழ்சிலம்ப வந்தகம் புகுந்தோன்"

எனக் கருவூர்த்தேவர் அருளிய திருவிசைப்பாத் தொடரும் அப்பெருமக்களின் சிவயோக அனுபவத்தை நன்கு புலப் படுத்துவனவாகும். திருவாதவூரடிகள் திருச்சிலம்போசை யொலிவழியே சென்று நிருத்தனைக் கும்பிட்டுப் பெற்ற பேரின்ப நிலையை விரித்துரைக்கும் நிலையில் அமைந்தது,

"சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே
ஆராத ஆசையதாய் அடியேன் அகமகிழத்
தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடஞ்செய்
பேரானந்தம் பாடிப் பூவல்லி கொய்யாமோ"

எனவரும் திருவாசகமாகும்.

இத்தகைய சிவயோக நெறியில் ஒழுகித் திருச்சிலம் பொலி கேட்டவர் சேரமான் பெருமாள் நாயனார் ஆவர். இச்செய்தி,

"வாசத்திருமஞ்சனம் பள்ளித்தாமம் சாந்தம் மணித்தூபம்
தேசிற்பெருகுஞ் செழுந்தீபம் முதலாயினவும் திருவமுதும்
ஈசர்க்கேற்ற பரிசினால் அருச்சித்தருள எந்நாளும்
பூசைக்கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பினொலி
யளித்தார்" (பெரிய. கழறிற். 24)

எனவரும் சேக்கிழாரடிகள் வாய்மொழியால் இனிதுணரப்படும்.

மதுரையிற் குதிரைச் சேவகனாக எழுந்தருளிய

சிவபெருமான் வழங்கிய பேரானந்தமாகிய திருவருளின்பத்தைத் தூயதாமரை மலர்போலும் திருவாயிலிருந்து வெளிப்படும் அழகிய சொற்களால் திருவாசகப்பனுவலாக அருளிச்செய்து, வஞ்சனையை விளைக்கும் பிறவித் துன்பத்தை நாம் அறியாவண்ணம் நம்மனோர்க்கு நன்னெறி காட்டிய பெருந்தகையார் திருவாதவூரடிகள் ஆவர். இவ்வுண்மையை,

> "பாய்பரியோன்தந்த பரமானந்தப் பயனைத்
> தூய திரு வாய்மலராற் சொற்செய்து - மாயக்
> கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்
> திருவாதவூராளுந்தேன்"

எனவரும் திருக்களிற்றுப்படியார் விரித்துரைத்தல் காணலாம்.

"அதுவென்றும் இதுவென்றும் ஒருபொருளைச் சுட்டியறிதலின்றி எல்லாவற்றையும் ஒருங்கேயறியும் பேரறிவுப் பொருளாகிய அதுவே, இவ்வாறு ஆன்மாவின் பக்குவகாலத்து இத்தகைய மானிடவுருத்தாங்கிக் குருவாய் எழுந்தருளியது என்று உணர்வாயாக. அப்பரம்பொருள் எங்கும் விரிந்த ஞானமாகிய சடையையுடைய சிவபெருமானே எனத்தெளிய உணர்வாயாக" என அறிவுறுத்துவது,

> "அதுவிது வென்னாதனைத் தறிவாகும்
> அதுவிது வென்றறிந்துந் தீபற
> அவிழ்ந்த சடையானென்றுந் தீபற" (36)

எனவரும் திருவுந்தியாராகும். அனைத்தறிவாகும் அது என்றது சிவபரம்பொருளை. இரண்டாமடியில் இது என்றது குருவாக வந்த திருமேனியை. அதுவே இது என்புழி சிவமே குருவாக வந்தது என்னும் தேற்றேகாரம் வருவித்துரைக்கப் படும்.

> "அது பழச்சுவையென அமுதென அறிதற்
> கரிதென எளிதென அமரரும் அறியார்
> இது அவன்திருவுரு. இவன் அவன் எனவே

எங்களையாண்டு கொண்டிங்கெழுந்தருளும்
மதுவளர் பொழிற்றிருவுத்தரகோச
மங்கையுள்ளாய் திருப்பெருந்துறைமன்னா"

எனத் திருவாதவூரடிகள் தாம் அருளிய திருப்பள்ளி யெழுச்சியில் இறைவனே தமக்குக் குருவாய் எழுந்தருளிய திறத்தை வியந்து போற்றியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

இனி, 'சிவமானவாபாடி (திருத்தெள்ளேணம்) எனவும், 'சிவமாக்கி எனையாண்ட' (அச்சோப்பதிகம்) எனவும், 'சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றாம் திருப்பெருந்துறையுறை சிவனே' (கோயிற்றிருப் பதிகம்) எனவும் திருவாசகத்தில் வருந்தொடர்கள், அடிகள் காலத்துப் பரவிய மாயாவாதக் கொள்கையினை ஓரளவு தழுவி யமைந்தன என்பாருமுளர்.[1] இக்கருத்து ஒரு சிறிதும் பொருந்தாது என்பதனை ஆசிரியர் மறைமலையடிகளார் தாம் இயற்றிய 'மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும்' என்னும் ஆராய்ச்சி நூலில் தக்க காரணங்காட்டி விளக்கி யுள்ளார்கள். திருமந்திரம் முதலிய ஏனைய திருமுறைகளை யும் எட்டாந்திருமுறையாகிய திருவாசகம் ஆகிய பனுவல் களையும் ஒப்புநோக்கிப் பயில்வார்க்குச் சைவத்திருமுறைகள் பன்னிரண்டும் சைவசித்தாந்தச் செந்நெறியினைக் கடைப் பிடித்தொழுகிய அருளாளர் அருளிய பொருளுரைகள் என்பதும் பிற்காலத்தெழுந்த மெய்கண்ட சாத்திரங்கள் பதினான்கிற்கும் இத்திருமுறைகளே மூலநூல்கள் என்பதும் நன்கு புலனாகும்.

கடவுள், உயிர், உலகம் என்னும் இம்மூன்றும் என்றும் உள்ள பொருள்கள் என்பது சைவசித்தாந்தக் கொள்கை. 'பிரமம் ஒன்றே உள்பொருள், உலகம் வெறும் பொய்த்தோற்றமே' என்பது மாயாவாதக் கொள்கை. சிவனருள் பெற்ற திருவாதவூரடிகள் மாயாவாதக் கொள்கையினையும் அதனோடொத்த உலகாயதக்

1. வரலாற்றறிஞர் தஞ்சை கே. எஸ். ஸ்ரீநிவாசப்பிள்ளை அவர்கள் எழுதிய தமிழ் வரலாறு (நான்காம் பதிப்பு - பக்கம் 138,139)

கொள்கையினையும் அறவே வெறுத்து விலக்கியவர் என்பது,

> "மிண்டிய மாயா வாதமென்னுஞ்
> சண்ட மாருதஞ் சுழித்தடித்தா அர்த்து
> உலாகாயதனெனும் ஒண்டிறற் பாம்பின்
> கலாபே தத்த கடுவிடம் எய்தி" (போற்றித். 54-57)

எனவரும் திருவாசகத் தொடராடல் இனிது விளங்கும்.

உயிர்கள் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களாற் பிணிக்கப்பட்டுள்ளன என்னும் உண்மை,

> "ஆணவ மாயையுங் கன்மமு மாமலம்
> காணு முளைக்குத் தவிடுமி ஆன்மாவும்
> தாணுவை ஒவ்வாமல் தண்டுலமாய் நிற்கும்
> பேணுவாய் மற்றுநின்பாசம் பிரித்தே" (2192)

எனத்திருமந்திரத்திற் கூறப்பட்டிருத்தலால் ஆன்மாக்கள் மும்மலங்களாற் பிணிக்கப்பட்டிருத்தலால் இலக்கணத்தாற் பிரமப்பொருளின் வேறாவன என்னும் கருத்து தேவார ஆசிரியர் காலத்திற்கு முன்பே சைவநூல்களில் இடம் பெற்றுள்ளமை நன்கு புலனாகும். இம்மும்மலங்களைப் பற்றிய இயல்பு தேவாரத் திருப்பதிகங்களிலும் இடம் பெற்றுள்ளமை முன்னர் விரித்துரைக்கப்பட்டது.

உயிர்களின் அறிவை விளங்கவொட்டாது தடை செய்து நிற்றல் ஆணவமாகிய இருள்மலத்தின் செயல். எல்லாவுயிர்களும் மாயையின் காரியமாகிய உடல் கருவி உலகு நுகர்பொருள் என்பவற்றைப் பெற்று அவற்றின் உதவியால் அறியாமை சிறிது சிறிதாக நீங்க அறிவு விளக்கம் பெறுவன. இவ்வாறு உயிர்களின் அறிவு விளங்குதற்குக் கருவியாய் நின்று பயன்தருதல் மாயையின் செயலாகும். உயிர்கள் மலம்மாயை என்னும் இரண்டின் அகமாய் நின்று வினைசெய்யுங்கால் நல்வினை தீவினை என்னும் இரு வினைகள் நிகழ்வன. இவ்வினைகளால் உண்டாகும் பழக்கத்தை உயிர்களின் அறிவிற் பதியும்படி செய்தல் கன்ம மலத்தின் செயலாகும்.

ஆணவமலத்தால் அறியாமையும், மாயை கன்மங்களால் அவ்வறியாமை நீங்கி அறிவு விளங்கப் பெறுதலும் உயிர்கள்பால் இடையறாது நிகழ்வன. இவற்றுள் ஆணவ மலம் ஒன்றே செம்பிற்களிம்பு போன்று, உயிரோடு ஒற்றித்து அதன் விழைவு அறிவுசெயல் ஆகிய ஆற்றல்களை அநாதியே மறைத்து நிற்பது. மாயையும் கன்மமும் அம்மலநீக்கத்திற்கும் உயிர்களின் அறிவு விளக்கத்திற்கும் துணை செய்வனவாய் இடையேயொரு காலத்து வந்து சேர்ந்தனவாகும். மல நீக்கத்திற்குத் துணை செய்யும் இவையிரண்டும் ஆணவ மலத்தோடு உடன்நின்று அம்மலத்தின் சார்பினால் தாமும் ஒரோவொருகால் மயக்கத்தை விளைத்தல் பற்றி மலம் என்ற பெயரால் வழங்கப்படுவனவாயின. அறியாமையைச் செய்யும் மலத்தின் வன்மையை ஒடுக்கி உயிர்கட்கு அறிவினை விளங்கச் செய்தற்பொருட்டே எல்லாம் வல்ல இறைவன் பல வேறுடம்புகளையும், கருவிகளையும் அவை தங்குதற்குரிய பல்வேறு உலகங்களையும் அவை நுகர்தற்கேற்ற பல்வேறு நுகர்பொருள்களையும் மாயையென்னும் முதற்பொருளி னின்றும் படைத்து வழங்குகின்றான். இறைவனாற் படைத்தளிக்கப்படும் உடல், கருவி, உலக நுகர்பொருள்க ளாகிய இவை மாயை என்னும் முதற்பொருளின் காரியங்க ளாதலின் இவை மாயேயம் என வழங்கப்படும்.

இவ்வாறு இறைவன் உயிர்கட்கு உடல், கரணம், உலகு, நுகர்பொருள்களைப் படைத்து வழங்குதலின் நோக்கம், உயிர்கள் உலகநுகர்ச்சிகளால் நன்றுந்தீதும் கண்டு அறிவு விளங்கப்பெற்றுத் தம்மைப் பிணித்துள்ள பாசப் பிணிப்பினின்றும் விடுபட்டுப் பேரின்பவுருவினதாகிய சிவத்துடன் இரண்டறக்கலந்து தாமும் சிவமுமாய் நிலை பெயராப் பேரின்ப நிலையினைப் பெறுதற்பொருட்டேயாம்.

முதல்வன் திருவருளால் மாயை கன்மங்களின் உதவியினைப் பெற்றுச் சிறிது சிறிதாக அறியாமை தேய்ந்து, அம்முறையே அறிவு விளங்கப்பெற்ற உயிர்கள், தமக்குத் தோன்றாத் துணையாய் நின்று அருள்புரியும் உண்மை யறிவின்பவுருவினனாகிய சிவபரம்பொருளை அடைந்து அம்முதல்வனது திருவடியில் இரண்டறக்கலந்து

ஒன்றாதலிலேயே தமது நாட்டைத்தைச் செலுத்தி உலகியற்பொருள்களிலும் தம்மைச் சூழ்ந்துள்ள உற்றார் உறவினர் முதலியோரிடத்திலும் தம் உடம்பிலும் உயிராகிய தம்மிலும் செல்லும் உணர்வை மடித்துத் திருப்பித் தம் உயிருணர்வுக்கு உணர்வாய் விளங்கும் சிவபரம்பொருளிலே படியுமாறு செய்து, தாம் ஒருபொருள் உண்டென்பதனை மறந்து சிவமாகவே அமர்ந்திருப்பன என்பர் பெரியோர். இவ்வாறு உயிர்கள் மும்மலப் பிணிப்பினின்றும் நீங்கிச் செம்பொருளாகிய சிவத்தைத் தலைக்கூடிச் சிவமெனத் தாமென வேறின்றி இரண்டறக் கலத்தலையே திருவாத வூரடிகள் சிவமாதல் எனக் குறித்துள்ளார். ஆகவே மலம் மாயை என்னும் பாசங்களும், அவற்றோடு உடனாய் நிற்றல் பற்றிப் பசுவென வழங்கப்படும் உயிர்களும் இவை எல்லா வற்றையும் ஊடுருவி யாண்டும் நிறைந்து நின்றே ஒன்றினுந் தோய்வற விளங்கும் பதியாகிய சிவமும் என இம்மூன்றும் என்றும் உள்பொருள்களேயாமென்பதும், உயிர்கள் மலமாயை கன்மங்களின் பிணிப்பினின்றும் விடுபட்டுச் சிவத்தைத் தலைக்கூடுதல் என்பது, மும்மலங்களாற் கட்டுப்பட்டு அல்லற்படும் முன்னைய நிலையினின்றும் பெயர்ந்து என்றும் பேராவியற்கையாகிய பெருநிலையைப் பெற்றுப் பேரின்பவுருவாய் நிற்கும் அவ்வளவேயல்லது, அவ்வுயிர்கள் தம் பொருண்மைகெட்டு ஒன்றுமேயில்லாத வெறும் பாழாயொழிதல் அன்று என்பதும் சைவ சித்தாந்தத்தின் கொள்கைகளாகும்.

மணிவாசகப்பெருமான் திருவாய்மலர்ந்தருளிய திருவாசகப்பனுவலில் சைவ சித்தாந்த நுண்பொருள்கள் ஆங்காங்கே தெளிவாக விளக்கப்பெற்றுள்ளன. ஆன்மாவின் அகத்தே அறிவை மறைத்து நிற்கும் ஆணவமலமும் புறத்தே அவ்வுயிர்களின் கட்புலனை மறைத்து நிற்கும் இருளும் ஆணவமலத்தின் இருவேறு திறங்களாதலின், அதனை 'இருள்' எனவும், அஃது அறியாமையைச் செய்தலின் 'அஞ்ஞானம்' எனவும், உயிர்களின் அறிவு செயல் முதலியன வெளிப்பட ஒட்டாது அவற்றைக் கயிறுபோல இறுகப் பிணித்து நிற்றலின் 'பாசம்' எனவும், உயிர்கட்குக் கலக்கத்தை விளைவித்தலின் 'மலம்' எனவும், அம்மலத்தின்

முனைப்பால் உயிர்களிடத்தே நிகழும் வினைகள் கொடுமை யுடையனவாதலின் 'கடியவினை' எனவும் இவ்வாறு தொன்றுதொட்டு உயிர்களைப் பற்றிவருத்தும் பழைமை யுடையதாதல் பற்றிப் 'பழமலம்' எனவும், உயிர்கள் அடையும் எல்லாத் துன்பங்கட்கும் காரணமாதல் பற்றிப் 'பாசவேர்' எனவும், திருவாதவூரடிகள் ஆணவமலத்தின் இயல்பினை விளங்க அறிவுறுத்தியுள்ளார். இந்நுட்பம்,

'வல்வினையேன் தன்னை மறைந்திட மூடிய
மாயஇருளை' (சிவபுராணம்)

'அஞ்ஞானந்தன்னை அகல்விக்கும் நல்லறிவே'
(சிவபுராணம்)

'பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே' (சிவபுராணம்)

'என்னுடையிருளை ஏறத்துரந்தும்' (கீர்த்தித் திருவகவல்)

'அவன் வாங்கிய என்பாசத்திற்காரென்று'
(திருக்கோவை 109)

'பாசந்தனையறுத்து ஆண்டுகொண்டோன்'
(திருக்கோவை 115)

'கடலின் திரையதுபோல் வருகலக்கமல மறுத்து'
(உயிருண்ணிப்பத்து)

'கடிவினையகற்றிப் பழமலம் பற்றறுத்தாண்டவன்'
(திருப்பாண்டிப்பதிகம்)

'பாசவேர் அறுக்கும் பழம்பொருள்' (பிடித்தபத்து)

எனவரும் திருவாசகம், திருக்கோவைத் தொடர்களால் இனிது புலனாதல் காணலாம்.

ஆன்மாவை மறைத்துள்ள ஆணவமலத்தின் இயல்பினைக் கூறுமிடத்து அம்மலத்தின் ஆற்றலைக் கெடுத்து உயிர்கட்கு மெய்யுணர்வளித்து உய்வித்தருளும் சிவத்தின் இயல்பினை, 'அஞ்ஞானந்தன்னை அகல்விக்கும் நல்லறிவே' எனவும், 'மலம் அறுத்து எனதுடலும் எனதுயிரும் புகுந்து ஒழியா வண்ணம் நிறைந்தான்' எனவும், 'கழிவில் கருணை' எனவும், 'பல்பொருள்' எனவும், அவன்

தில்லையின் ஒளி' எனவும் வரும் தொடர்களில் அடிகள் உடன் வைத்துணர்த்தியுள்ளார். முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருளாகிய சிவம் என்றும் நல்லறிவுப் பொருளாகத் திகழ்தலும், மலத்தினின்றும் விடுபட்ட உயிர் தன் பொருட்டன்மை சிதையாதிருக்க அவ்வுயிரின்கண் சிவம் புலப்பட்டுத் தோன்றி உயிரின் உடல் கருவி கரணங்களை அகத்திட்டு விளங்குதலும், பேரருளாள னாகிய இறைவன் உயிர்களின் மலத்துயரினைத் துடைத்துத் தனது பேரருளின்பத்தை உயிர்கட்கு வழங்கும் திருவருட் குறிப்புடையனாகத் திகழ்தலும் அம்முதல்வன் தன்பால் அன்புடைய அடியார்கட்கு அருள்வழங்குதற் பொருட்டுத் தில்லைச் சிற்றம்பலமாகிய அருள்வெளியிலே ஒளியுருவின னாக நின்று ஆடல் புரிதலும் இங்கு எடுத்துக்காட்டிய திருவாசகத் தொடர்களால் இனிது விளங்கும்.

உயிரும் சிவமும் பொருட்டன்மையால் இருவேறு பொருள்களாதலும், ஆன்மாக்கள் தோற்றமில் காலமாகவே மும்மலப் பிணிப்புடையனவாயிருக்க, முற்றுணர்வும் பேரருளும் அளவிலாற்றலும் வரம்பிலின்பமும் உடையனாய் இயல்பாகவே பாசங்களின் நீங்கிய இறைவன், உயிர்களை மும்மலப் பிணிப்பினின்றும் விடுவித்து அவ்வுயிர்களைச் சிவமாகிய தன்னுடன் பிரிவின்றி ஒன்றும் வண்ணம், தனது அருளொளியில் அகத்திட்டுக் கொள்ளுதலும் மணிவாசகப் பெருமான் அருளிய திருவாசகப் பாடல்களால் நன்கு புலனாதலின், அடிகள் சைவ சித்தாந்த சமயத்தினராதல் நன்கு தெளியப்படும்

இறைவனது அருளுபகாரத்தால் மலப்பிணிப்பி னின்றும் நீங்கிய தூயஉயிர்கள்பால் முதற்பொருளாகிய சிவம் முனைத்துத் தோன்றிப் பக்குவமுடைய உயிர்களைத் தன்னுளடக்கித் தன்னையே காட்டி நிற்கும் என்பது,

> "சுத்தச் சிவனுரை தானதில் தோயாமல்
> முத்தர் பதப்பொருள் முத்திவித்தா மூலம்
> அத்தகை யான்மா அரனையடைந் தற்றார்
> சுத்த சிவமாவரே சத்தசைவரே" (1440)

எனவும்,

"அனாதி சிவனைம் மலமற்றப்பாலாய்
மனாதியடங்கத் தனைக்கண்டரனாய்த்
தனாதி மலங்கெடத் தத்துவாதீதம்
வினாவு நீர் பாலாதல் வேதாந்த வுண்மையே" (2401)

எனவும்,

"உயிரைப் பரனையுயர் சிவன்றன்னை
அயர்வற் றறிதொந்தத் தசியதனாற்
செயலற் றறிவாகியுஞ் சென்றடங்கி
அயர்வற்ற வேதாந்த சித்தாந்தமாமே" (2402)

எனவும் திருமூல நாயனாரும்,

"எம்பிரா னென்றதே கொண்டென்னுளே புகுந்துநின்றிங்
கெம்பிரான் ஆட்ட ஆடி என்னுளே யுழிதர்வேனை
எம்பிரான் என்னைப் பின்னைத் தன்னுளே கரக்கு
மென்றால்
எம்பிரா னென்னினல்லால் என்செய்கேன் ஏழையேனே"
(4-76-3)

எனவும்,

"தற்பரமாய்ச் சதாசிவமாய்த்
தானும்யானும் ஆகின்றதன்மையனை" (6-98-7)

எனவும்,

"என்னானாய் என்னானாய்" (6-95-7)

எனவும்,திருநாவுக்கரசு நாயனாரும்,

"திகழ்ந்த மெய்ப்பரம்பொருள்
சேர்வார் தாமே தானாகச் செயுமவன்" (1-126-7)

எனவும்,

"அப்பரிசிற் பதியான அணிகொள்
ஞானசம்பந்தன்" (1-54-11)

எனவும் ஆளுடைய பிள்ளையாரும்,

"நாற்றானத்தொருவனை நானாய பரனை" (7-38-4)

எனவும்,

"என்னவனாம் அரன்" (7-39-11)

எனவும் நம்பியாரூரரும் ஓதியவற்றால் நன்கு புலனாம். இத்திருமுறையாசிரியர்கள் அறிவுறுத்திய இவ்வுண்மை யினையே

"நானவனென் றோதினர்க்கு நாடுமுளம் உண்டாதல்
தானென வொன்றின்றியே தானதுவாய் - நானெனவொன்
றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடி வைத்
தில்லென்று தானாம் இறை" (சிவ. சூ. 10 வெ. 1)

எனவரும் வெண்பாவில் மெய்கண்ட தேவர் அறிவுறுத்தி யுள்ளார். திருமூலர் திருமந்திரத்தில் வேதாந்தம் என்றது உபநிடதங்களையே. மாயாவாதத்தை வேதாந்தம் என வழங்குதல் பிற்கால வழக்காகும்.

சிவபரம் பொருளின் திருவடியைச் சேர்தல் என்பது இறைவனது திருவருளிற் பதிதலாதலின் அதனைச் சிவமாதல் என வழங்குதலும் திருமூலநாயனார் காலந்தொட்டு வழங்கி வரும் சைவ சித்தாந்த மரபேயாகும். இவ்வுண்மை,

"ஒன்றும் இரண்டும் இலதுமாய் ஒன்றாக
நின்று சமய நிராகாரம் நீங்கியே
நின்று பராபரை நேயத்தைப் பாதத்தாற்
சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே" (1437)

எனவரும் திருமந்திரத்தாற் புலனாகும்.

ஆன்மா தன் பொருட்டன்மையழிந்து சிவம் ஒன்றாகியே ஒழியாமலும், சிவத்தின் வேறாய்த் தான் தனித்து நில்லாமலும், பாலொடு அளாவிய நீர், தன் உண்மை கெடாமல் பாலின் தன்மையதாய் அதனுடன் பிரிவறக் கலந்து ஒன்றாதல் போன்று, மலம் நீங்கித் தூயதாகித் தன் உண்மை கெடாமல் சிவத்துடன் இரண்டறக் கலந்து ஒன்றாதலையே சிவமாதல் எனச் சைவசித்தாந்த நூல்கள் கூறும் என்பது

மேற்குறித்த திருமந்திரப் பாடலில் விளக்கப்பெற்றுள்ளமை காணலாம்.

"ஆதித்தப் பிரகாசம் காட்டாகப் பிரபஞ்சரூபத்தைப் பற்றி நின்ற கண்ணானது அந்த உருவங்களைவிட்டு அந்தப் பிரகாசத்துக்கு முதலாயிருக்கிற ஆதித்தனைக் கண்டு பிரிவற நின்றாற்போல, ஆன்மாவும் அருளிடமாகக் கூடிநின்று சத்தாதிவிடயங்களைப் புசித்து நிற்கச் செய்தே அதனையும் விட்டு மனோவிகாரமும் அடங்கி அந்த அருளுக்கு முதலாயிருக்கிற சிவத்தோடும் அந்த அருள் காட்டாகச் சென்று கூடிப் பிரிவற்று இரண்டற நிற்கையால்" ஆன்மா அந்தச் சிவத்தோடுங் கூடிச் சிவமாய் நிற்கும் எனக் கூறி, அதற்குப் பிரமாணமாக,

> "அவமாய தேவர் அவகதியில் அழுந்தாமே
> பாவமாயங் காத்தென்னை யாண்டுகொண்ட பரஞ்சோதி
> நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம் ஒழிந்து
> சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ" (4)

எனவரும் திருவாசகத் திருப்பாட்லை எடுத்துக் காட்டுவர். மதுரைச் சிவப்பிரகாசர் "சிவமாய் என்றது ஆன்மா தற்போதமாய் நிற்பதுஞ் செய்யாமல் தான் என்கிற முதல் கெடுவதுஞ் செய்யாமல் தற்போதங்கெட்டு அந்தச் சிவத்தோடுங்கூடி இரண்டறநின்று அனுபவித்தது என அறிக. அப்படிச் 'சிவமாய்' என்ற சொல் அந்தச் சிவமாவதுஞ் செய்யாமற் பிரிந்து நிற்பதுஞ் செய்யாமல் நிற்கை என்பதற்குப் பிரமாணம் சங்கற்ப நிராகரணத்தில்,

> "ஆனாய் என்பதனைத்தும் அவ்வவை
> தானாகாமையைச் சாற்றிடும் என்க
> தாமே யெனுமித் தனியேகாரம்
> அழிந்திலர் அதுவே ஆய்த்திலர் அதுவிட்
> டொழிந்திலர் பிறிவிலரெனுமிவை யுணர்த்தும்"
>
> (சிவப். 80)

எனச் சிவமாதல் என்னுஞ் சொல்லுக்கு அவ்வாசிரியர் கூறும் உரைவிளக்கம் இங்கு உணரத் தகுவதாகும்.

ஆன்மா தன் முயற்சியாற் சிவமாதல் இயலாது சிவனது அருளாலேயே ஆன்மா சிவத்தோடுங்கூடி இரண்டற நிற்கும் என்பது சைவசித்தாந்த மெய்ந்நூல்களின் துணிபாகும்.

> "அவனிவனான தவனரு ளாலல்ல
> திவனவனாகா னென்றுந் தீபற
> என்றும் இவனேயென்றுந்தீபற"

எனவரும் திருவுந்தியார் இவ்வுண்மையினைத் தெளிவு படுத்துவதாகும். இங்கு 'அவன்' என்றது மாற்றமனங்கழிய நின்ற இறைவனை. 'இவன்' என்றது ஆன்மாவை. அம்முதல்வனாகிய சிவன் இவ்வான்மாவாகத் தான் பிரிவற நின்ற சிவமாகிய நிலை அம்முதல்வனது எல்லையற்ற அருள்காரணமாக வுளதாவதல்லது, ஆன்மாவாகிய இவன் சிவனாகிய முதல்வனாக மாட்டான். எக்காலத்தும் இவ்வான்மா சிவனுக்கு அடிமையாகவுள்ளவனே என்னும் உண்மையினைத் தெளிந்துணர்வாயாக என்பது, இத்திரு வுந்தியாரின் பொருளாகும். "சிவனவன் என் சிந்தையுள் நின்ற அதனால் அவனருளாலே அவன்தாள் வணங்கி" எனவரும் சிவபுரணத்தொடர் இங்குச் சிந்திக்கத் தகுவதாகும்.

வேதம் 'ஏகம்' என ஒன்றையே குறிப்பிடுதலால் முழு முதற்பொருள் ஒன்றே உள்ளது, ஏனைய உயிரும் உலகமும் வெறுந்தோற்றமே என்பர் ஒரு பொட்கொள்கையாளர். அன்னோர் கருதுமாறு முழுமுதற்பொருள் ஒன்றையே குறிக்க வேண்டின் அதனை 'ஏகம்' என்ற சொல்லினாலேயே கூறுதல் அமையும். இனி, இருபொருட் கொள்கையாளர் கருதுமாறு முழுமுதற்பொருளும் உயிரும் தனித்தனி வேறாய் நிற்பின் துவிதம் என்ற சொல்லாற் சொல்லலாம். அவ்வாறன்றி 'ஏகம்' எனக் குறித்த வேதம் ஏகம் அத்துவிதீயம் என அத்துவிதம் என்ற சொல்லாலும் இணைத்துக் கூறுகின்றது. வேதத்துள் வரும் அத்துவிதம் என்ற சொற் பொருளைக் கூர்ந்து நோக்குங்கால், இறைவன் ஒன்றாயும் இரண்டாயும் நில்லாமல் உயிர்களோடு பிரிப்பின்றி உடனாய் நிற்றலால் அங்ஙனம் இரண்டறக் கலந்து நிற்றலாகிய நிலையினை வடமொழியில் அத்துவிதம் என்ற சொல்லாற்

குறித்தனர் சான்றோர். உலகுயிர்களோடு இறைவனுக்குள்ள இத்தொடர்பினை 'இருமையின் ஒருமை' எனக் குறித்தருளுவர் ஆளுடையபிள்ளையார். "சாந்தம் சிவம் அத்வைதம் சதுர்த்தம் ஆன்மா" என்பது மாண்டூக்கிய உபநிடதம். அத்துவிதம் என்று சொல்லுக்கு ஏகம் (ஒன்று) என ஒருசாராரும், துவிதம் (இரண்டு) என மற்றொரு சாராரும் பொருள் கொண்டனர். "ஒன்றும் இரண்டும் ஆகா இரண்டற்ற தன்மை" என இதற்கு உண்மைப்பொருள் கண்டார் மெய்கண்டார். இங்ஙனம் ஒன்றெனலும் ஆகாமல் இரண்டெனலும் ஆகாமல், தூயநல்லுயிர்கள் சிவத்தோடு இரண்டறக் கலந்து சிவமாந் தன்மையாய் அடங்கி ஒன்றாகும் வீடு பேற்றின் நிலையே 'சிவமாதல்' என்னுந்தொடரால் அறிவுறுத்தப்பெறுகின்றதென்பது சைவ சித்தாந்த மெய்ந் நூற்கொள்கையாகும். இம்முடிபினைத் தெளிவுபடுத்தும் நிலையில் அமைந்ததே,

> "நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாமொழிந்து
> சிவமானவாபாடி"

எனவரும் திருவாசகத்தொடராகும். இறைவன் அருளாற் பெற்ற சிவஞானத்தால் உள்ளந்தெளிவடையாதவர்கள் இத்தகைய சிவமாந்தன்மைப் பெருவாழ்வைப் பெற மாட்டார்கள் என்பதனை,

> "தெளிவறியாதார் சிவமாகமாட்டார்" (1480)

எனவரும் திருமந்திரத்தொடரால் திருமூலதேவ நாயனார் அறிவுறுத்தியுள்ளமை இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும்.

> "நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
> புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து
> நின்றான்
> உலகேழெனத் திசை பத்தெனத்தான் ஒருவனுமே
> பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமே" (5)

எனவரும் திருப்பாடல், இறைவன் ஐம்பூதங்கள், ஞாயிறு, திங்கள், ஆன்மா ஆகிய எல்லாப்பொருள்களிலும் பிரிவின்றிக் கலந்து விளங்குந் திறத்தினை விரித்துரைப்பதாகும்.

இத்திருப்பாடலில் 'தான் ஒருவனுமே பலவாகி நின்றவா' என்ற தொடர் இறைவன் உலகுயிர்களாகிய பொருள் தோறும் யாண்டும் நீக்கமறக் கலந்து உடனாய் விளங்கும் இயல்பினைக் கூறுவதாகும். 'இறைவன் தன்னையன்றி வேறொருபொருளும் இல்லாதிருக்க, அவன் ஒருவனே உலகுயிர்களாகிய பல. பொருள்களுமாய்க் காணப்படு கின்றான்' என இத்தொடர்க்குப் பொருள் கொள்வாருமுளர். இப்பொருள் இத்திருவாசகத்தை அருளிச் செய்த திருவாதவூரடிகள் கருத்துக்குச் சிறிதும் ஒவ்வாததாகும்.

ஒருபொருளே பல பொருள்களாகத் தோற்ற மளித்தலும் ஒருபொருளே பல பொருள்களிலும் ஊடுருவிக் கலந்து நிற்றலும் தம்முள்மாறுபட்ட இருவேறு தன்மை களாகும். இவ்விரண்டினுள் இத்திருப்பாடலில் மணிவாசகப் பெருமான் குறித்தது, ஒருபொருளே தம்முள் வேறுபட்ட பல பொருள்களிலும் இரண்டறக் கலந்து நிற்கும் இயல்பினையே யாகும். இந்நுட்பம் எண்வகையாய் நின்றான் என்னாது, 'எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்' எனத் தாம் கூறும் பொருள் இனிது விளங்கத் திருவாதவூரடிகள் தெரித்து மொழிதலால் நன்கு உணரப்படும்.

'புணர்ந்து நிற்றல்' என்றது, ஒருபொருள், தான் அல்லாத மற்றொரு பொருளுடன் கூடி நிற்றலையே குறிக்கும். அங்ஙனம் அன்றி ஒரு பொருளே பலபொருள்க ளாய் விரிந்து தோன்றுதலையோ ஒன்று மற்றொன்றாகத் திரிந்து தோன்றுதலையோ அச்சொல் குறிப்பதன்றாம். ஒருடம்பினிற் கலந்து நிற்கும் உயிர், அவ்வுடம்பின் ஐம்பொறிகளினும் ஐம்புல உணர்வினைத் தோற்றுவித்தல் பற்றி உடம்போடு ஒன்றாய்க் கலந்திருப்பினும் உண்மையால் நோக்கும் வழி அவ்வுயிர் உடம்பின் வேறாதல் போன்று, முதல்வனாகிய இறைவனும் உலகுயிர்கள் எல்லாவற்றிலும் நீக்கமறக் கலந்து நின்று அவற்றை இயக்குதல் பற்றி அவை பலவுமாய் விரவி நிற்பினும் உண்மையில் அம்முதல்வன் அவற்றின் வேறாய்த் தான் ஒருவனே யாவன் என்னும் மெய்ம்மையினையே, 'தான் ஒருவனுமே பலவாகி நின்றவா' எனவரும் இத்தொடரில் அடிகள் தெளிவாக விளக்கியுள்ளார்.

'ஒருவனுமே' என்றமையால் 'ஒருவன் என்னும் ஒருவன்' ஆகிய இறைவனும் 'பல' எனவே அவனல்லாத உலகுயிர்களும், 'ஆகி' எனவே அவற்றோடு அத்துவிதமாய்க் கலந்து விளங்கும் இறைவனது தன்மையும் புலப்படுத்தப் பெற்றுள்ளமை காணலாம். இக்கருத்தினை

> "நள்ளுங் கீழுளும் மேலுளும் யாவுளும்
> எள்ளும் எண்ணெயும் போல் நின்ற எந்தையே"
> (திருவாசகம் திருச்சதகம் 46)

என முன்னரும் அடிகள் வற்புறுத்தியுள்ளமை இங்கு ஒப்பவைத்து உணர்தற்பாலதாகும்.

இறைவன் எல்லாப் பொருள்களுமாய்க் கலந்துள்ளான் என்று கூறிய அளவில் இறைவன் ஒருவனே உலகமாகவும் உயிர்களாகவும் விரிந்து தோன்றுகின்றான், அவனையன்றி வேறொரு பொருளும் இல்லை எனப் பிறர் பிறழவுணராதவாறு,

> "நிரந்த ஆகாயம் நீர்நிலந் தீ கால்ஆய்,
> அவையல்லையாய் ஆங்கே
> கரந்ததோர் உருவே"

எனவும்,

> "பெண்ணாகியாணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
> விண்ணாகி மண்ணாகி இத்தனையும் வேறாகி"

எனவும் அம்முதல்வன் கலப்பினால் ஒன்றாயும், பொருட்டன்மையால் வேறாயும் உயிர்க் குயிராதற்றன்மையால் உடனாயும் நிற்குந் திறத்தினைத் திருவாதவூரடிகள் விளக்கிய திறம் ஈண்டு நினைத்தற்குரியதாகும். இறைவன் கலப்பினால் உலகுயிர்களாக நிற்குந் திறத்தினை நின்ற திருத்தாண்டகத்திலும், பொருட்டன்மையால் அவற்றின் வேறாதலை 'விரிகதிர் ஞாயிறல்லர்', 'மண்ணல்லை விண்ணல்லை' முதலிய திருப்பாடல்களிலும் திருநாவுக்கரசர் அறிவுறுத்தியுள்ளமை முன்னர்க் கூறப்பட்டது.

விண்ணிற் கதிரவன் எழுந்த நிலையில் உலகிற்

புறவிருள் மறைந்துபோக, மக்கள் கண்ணின் ஒளி விளங்கப் பெற்று எதிர்ப்பட்ட எல்லாப் பொருள்களையும் காணப் பெறுதல் போன்று, ஆன்மாவுக்கு இறைவனது அருளொளி தோன்றிய அளவில் இதற்குமுன் அதனைப் பற்றியிருந்த ஆணவஇருள் நீங்கி மறைய, அவ்வருளொளியின் உதவியால் ஆன்மாவானது தன்னையும் தன் உயிர்க்குயிராய முதல்வனை யும் ஏனைய பொருள்களின் நிகழ்ச்சியினையும் உள்ளவாறு காணும் ஆற்றலைப் பெறுகின்றது. பளிங்கினில் விளங்கித் தோன்றிய மலர்களின் வடிவும் நிறமும் கதிரவன் வானின் உச்சியை அடையும்போது மெல்ல மெல்லக் குறைந்து உச்சிக்கு வந்த நிலையில் முற்றிலும் இல்லையாய் ஒழிதல் போன்று செழுஞ்சுடர் ஞாயிறாகிய இறைவனது அருள் விளக்கம் உயிரின்கண் பதியுந்தோறும் முன்னர் ஆன்மாவைச் சூழ்ந்திருந்த மாயை கன்மங்களின் சார்பும் அணுவணுவாய்த் தேய்ந்து பின்னர் அவ்வருளொளி ஆன்மாவை முற்றிலும் அகத்திட்டுக் கொண்ட நிலையில் அவற்றின் சார்பு ஆன்மாவை விட்டு முற்றிலும் இல்லையாய் ஒழிந்துபோம். இவ்வாறு மாயை கன்மங்களின் சார்பு முற்றுங்கெடச் சிவனொளியில் ஒன்றி நின்று காணும் தூய நல்லறிவினராகிய சிவஞானிகட்கு மெய்ப் பொருளாகிய சிவபரம் பொருளை யன்றி உயிராகிய தம்மைப்பற்றிய உணர்வும் ஏனைய உலகப் பொருள்களும் தோன்றாதொழியும். இவ்வுண்மையினை, ஐம்புலன் கையிகந்து சிவனருளில் திளைக்கும் செம்புலச் செல்வராகிய திருவாதவூரடிகள் தாம்பெற்ற சிவானுபவத்தில் வைத்து எடுத்துரைத்துப் போற்றுவதாக அமைந்தது,

"இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்
 தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
 நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
 திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை. அன்றியொன் றில்லை
 யாருன்னை யறியகிற் பாரே" (கோயிற் றிருப்பதிகம்7)

எனவரும் திருவாசகத் திருப்பாடலாகும்.

"நின்திருவருளைப் பெறும் வாய்ப்பினைப் பெற்ற இக்காலத்தே அடியேற்கு நின் திருவருளை வழங்கி, என்னை மறைத்துள்ள ஆணவ இருளை அகற்றிப் (பளிங்கனைய) என்னுள்ளத்தின்கண்ணே எழுந்து தோன்றும் கதிரவனைப் போன்று, (என் உள்ளும் புறம்புமாக யாண்டும் நிறைந்து) நிற்கும் நின் இயல்பினை (ச் சுட்டுணர்வினால் வேறாக வைத்துணரும்) நினைப்பு முற்றும் நீங்க (நின் அருளின் வண்ணமாய் ஒன்றியிருந்து) நினைப்பேனாயினேன். (அங்ஙனம் நினைத்த அளவிலே, என்னை அகத்திட்டுக் கொண்டு விளங்கும்) நின்னையன்றி (மாயாகாரியமாகிய பொருள்களுள்) ஒன்றும் இல்லையென்னும்படி உலகெலாம் ஆகியாண்டும் பரவிச் சென்று அணுவினும் மிக நுண்ணிய னாய் உலகுயிர்கள்தோறும் ஊடுருவி மறைந்து (இங்ஙனம் உள்ளும் புறம்புமாய் யாண்டும் நீக்கமற நிறைந்து) யாவும் ஒன்றாய்ப் பிரிவின்றி விளங்கும் திருப்பெருந்துறைப் பெருமானே, (நீ இவ்வாறு உலகெலாமாகி நிற்பினும் அவற்றின் தன்மை தனக்கு எய்தலின்றி அவற்றுள் ஒன்றினுந் தோய்வின்றியுள்ளாய். ஆதலால்) நீ அவற்றுள் ஒன்றும் ஆவாயல்லை. (உலகுயிர்கள் எல்லாவற்றிற்கும் ஆதாரமாகத் திகழ்வோன் நீயேயாதலின் நின்னையன்றி அவற்றுள் ஏதொன்றும் இல்லை. (மும்மலப் பிணிப்புற்று வருந்தும் இக் கட்டு நிலையில் நின்னைத் தம்மின் வேறாகக் காண்பார்க்கு அவர் காணும் காட்சியுள்ளாகவே நீ புலப்படாது மறைந்து நிற்றலின் அன்னோர் நின்னை உள்ளவாறு காணுதல் இயலாது. இனி நினது அருளாற் பாசப்பிணிப்பினின்றும் விடுபட்டு நின்னருள் வழி நின்று காணும் சிவஞானிகட்கு மீண்டுணர்தற்குக் கருவியாகிய சித்தவிருத்தியும் ஒடுங்குத லால் அந்நிலையில் நீ வேறு தாம் வேறாய்ப் பிரிந்து நின்று காணுதலும் இயல்வதன்று எனவே) யார்தாம் நின்னியல் பினை உள்ளவாறு உணரவல்லார்?"

என்பது இத்திருப்பாடலின் பொருளாகும். இதன்கண் "சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம்" எனவரும் தொடர், "நேரியனாய்ப் பிரியனுமாய்", உலகெலா மாகி வேறாய் உடனுமாய் நிற்கும் இறைவனது இயல்பினை உணர்த்துவதாகும். இந்நுட்பம்,

> "திரண்டாம் பயனெனுந் திருவருள்தெளியிற்
> சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றும்
> என்றிறையியற்கை யியம்புதல்"

எனத் திருவாதவூர் நயினார் கர்த்தாவினுடைய தன்மையை அருளிச் செய்தது எனவரும் உரைக்குறிப்பாலும் உய்த்துணரப்படும்.

இறைவனது திருவருளுக்கு உரியராகிய சிவஞானிகள் முதல்வனுடன் பிரிப்பின்றி ஒன்றியுடனாம் முத்திநிலையில் முதல்வனும் உளன், அம்முதல்வனோடு ஒன்றிச் சிவானந்தம் நுகரும் உயிரும் உளது, முன்னர் உயிரைப்பற்றி நின்று பின்னர் விலகிச் செயலற்று அடங்கிய மலமாயை கன்மங் களும் உள்ளன. முன்பெல்லாம் உயிரை இறுகப்பிணித்து நின்ற மும்மலப் பிணிப்பு அவ்வுயிரைவிட்டு நீங்கினமையால் உயிரானது முதல்வனது திருவருளில் மூழ்கி அவ்வருளே மேற்பட்டுத் தோன்றத்தான் அதன்கண் பிரிவற இயைந்து பேரின்பம் நுகர்ந்திருக்கும். அவ்வளவே அவ்வுயிரின் முன்னைய கட்டு நிலைக்கும் பின்னைய வீட்டு நிலைக்கும் இடையேயுள்ள வேறுபாடாகும்.

'இன்றெனக்கருளி' எனவரும் இத்திருவாசகத்தின் பொருள்நுட்பத்தையுணர்ந்து சிவஞானம் பெற்ற நல்லுயிர் தன்முனைப்படங்கி இறைவனது அருள்வழியடங்கி ஒற்றித்து நிற்கும் திறத்தினை அறிவுறுத்துவது,

> "அவனே தானேயாகிய அந்நெறி
> ஏக னாகி இறைபணி நிற்க
> மலமாயை தன்னொடு வல்வினை யின்றே" (சிவ.சூ 10)

எனவரும் சிவஞானபோதம் பத்தாஞ் சூத்திரமாகும். "இறைவன் உயிர்களின் கட்டுநிலையில் அவற்றோடுங்கூடி நின்று காரியப்படுத்தும்பொழுதே தானொரு முதல் இல்லை யெனும்படி தோன்றாமல் நின்று காரியப்படுத்தினாற் போன்று, உயிராகிய நீயும் சிவனது ஞானத்தினாலல்லவோ காரியப்பட்டு வருகிறோம் என்பதையுர்ந்து, ஆன்மபோதம் சீவியாமல் அருள் வழி அடங்கி நிற்பாயாக" என அறிவுறுத்து வது, இச்சூத்திரமாகும். உயிர் தன்னைப் பற்றியுள்ள மும்மலப்

பிணிப்பு அற்று நீங்கும்பொருட்டு அவற்றின் இயல்போடு ஒன்றுபட்டு நில்லாது சிவத்தின் இயல்போடு ஒன்றியிருந்து அதுவே தானாய் நிற்கும் பயிற்சியினை, இடையறாது மேற்கொள்ளுதல் வேண்டும். இடையறாது நிகழும் அப்பழக்கத்தினால், உயிரைப் பற்றியிருந்த மலத்தினியல்பு அதனை விட்டு நீங்க, உயிர் செம்பொருளாய சிவத்தின் இயல்பில் அடங்கி நிற்கும். மலம் அறுதற்பொருட்டுச் செயற்பாலதாய இப்பயிற்சியினை,

> "தானவனாகும் சமாதிகை கூடினால்
> ஆனமலமறும் அப்பசுத் தன்மைபோம்" (2320)

எனவரும் திருமந்திரத்தில் திருமூலநாயனார் அருளிச் செய்துள்ளார்.

இறைவன் திருவருளிலே உறைத்து நிற்பார்க்குப் புறத்தேயுள்ள புறப்பொருள்களைப் பற்றிய உணர்வும் தம்மோடு உடனாய் நிற்கும் உடம்பைப் பற்றிய உணர்வும் தமக்கு அகக்கருவிகளாயமைந்த மனம் முதலியவற்றைப் பற்றிய உணர்வும் உயிராகிய தான் ஒருபொருள் உண்டு என எண்ணுந் தன்னைப்பற்றிய உணர்வும் நிகழாத வண்ணம் அவையனைத்தும் மறக்கப்பட்டு மறைந்தொழிதல் இயல்பாதலின், இறைவன் திருவருளால் மலமாயை கன்மங்களின் பிணிப்பு நீங்கியபொழுதே அவற்றோடு உடனிகழும் இவ்வுணர்வுகளும் அணுவணுவாய்த் தேய்ந்து ஒழிவன என்னும் உண்மையினை,

> "வான்கெட்டு மாருதமாய்த் தழல்நீர் மண்கெடினுந்
> தான்கெட்டலின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு
> ஊன்கெட்டுயிர் கெட்டுணர்வு கெட்டென் உள்ளமும் போய்
> நான்கெட்ட வாபாடித்தெள்ளேணம் கொட்டாமோ"

எனவரும் திருவாசகத்தில் மணிவாசகப் பெருமான் தமது சிவானுபவத்தில் வைத்துத் தெளிய விளக்கியுள்ளார். பாசப்பிணிப்பினின்றும் விடுபட்டு இறைவனது திருவருளில் ஒன்றுபட்டுத் திளைத்தலாகிய முத்திநிலைக்கண் சிவானுபவம் ஆகிய இதனை,

"தானும் அழிந்து தனமும் அழிந்துநீ
டூனும் அழிந்து உயிரும் அழிந்துடன்
வானும் அழிந்து மனமும் அழிந்தபின்
நானும்அழிந்தமை நானறியேனே" (திருமந்திரம் 2951)

எனவும்,

"இருளும் வெளியும் இரண்டையும் மாற்றிப்
பொருளிற் பொருளாய்ப் பொருந்தவுள்ளாகி
அருளா லழித்திடும் அத்தனடிக்கே
உருளாத கன்மனம் உற்றுநின்றேனே" (திருமந்திரம் 2952)

எனவும் வரும் திருமந்திரப் பாடல்களில் திருமூலநாயனார் நன்கு விளக்கியுள்ளார்.

"பாசப் பிணிப்பினின்றும் நீங்கிய தூயஉயிர், இறைவனுடன் இரண்டறக் கலந்த நிலையில் இதற்குமுன் அதன்கண் நிகழ்ந்த புறப்பொருளுணர்வும் தன்னைப் பற்றிய உணர்வும் முற்றிலும் மறைந்தொழிய இறைவனது மெய்யுணர்வு மட்டுமே மேற்பட்டு விளங்கத் தன்னுணர்வு அதனுள் அடங்கி உரைவரம் பிகந்த சிவஞானமாகிய பேரின்ப வெள்ளத்திற் படிந்து இன்புறும். இவ்வின்பநிலையில் உயிரானது தன்பொருட்டன்மையிற் சிறிதும் கெடாதிருக்கும் என்பதனை,

"முத்திதனின் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தவனு போகத்தைத் துய்த்தலணு - மெத்தவே
இன்பங் கொடுத்தவிறை இத்தைவிளை வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொளப்பா" (உண்மை 50)

எனவரும் உண்மை விளக்கப்பாடலில் திருவதிகை மனவாசகங் கடந்தார் தெளிய விளக்கியுள்ளமை அறியத்தகுவதாகும்.

உலகநுகர்ச்சியிற் பதிந்த உணர்வோடு உள்ள உயிர்க்குச் சிவம் விளங்காது, சிவபோகத்தில் திளைக்கும் உணர்வோடு உள்ளம் கூடிய உயிர்க்கு உலகம் தோன்றாது. இவ்வாறு கட்டு நிலையிலும் வீட்டு நிலையிலும்

இருதிறப்பட்டுச் சார்ந்ததன் வண்ணமாதல் உயிரின் இயல்பாகும். புறப்பொருள் நோக்கினதாய உலகியல் நிலையும் பரமே பார்த்திருக்கும் அகப்பொருள் நோக்கும் ஆகிய இருவகை நோக்கினையும் உணர்த்தும் நிலையில் அமைந்தது,

> "மரத்தை மறைத்தது மாமத யானை
> மரத்தின் மறைந்தது மாமத யானை
> பரத்தை மறைந்தது பார்முதற் பூதம்
> பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே" (திருமந்திரம் 2290)

எனவரும் திருமூலர் வாய்மொழியாகும். ஆன்மாவானது சார்ந்ததன் வண்ணமாந்தன்மையது என்பதனை,

> "நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
> கினத்தியல்ப தாகும் அறிவு" (திருக்குறள் 452)

எனத் திருவள்ளுவனார் பொதுமுறையிலும்.

> "யாதொன்று பற்றின் அதன் இயல்பாய்நின்று
> பந்தமறும் பளிங்கனைய சித்துநீ" (ஆகாரபுவனம்-சிதம்பர)

எனத் தாயுமானார் சிறப்புமுறையிலும் வைத்து அறிவுறுத்தியுள்ளமை இங்கு நினைக்கத்தக்கதாகும்.

சிவவுணர்வாய் நிற்றல் என்பது மலமாயை கன்மங்களில் ஒன்றினிடத்தும் ஒருசிறிதும் நினைவுசெல்லாமல் உயிராகிய தன்னையும் நினையாமல் சுட்டுணர்வு நீங்கச் சிவம் ஒன்றையே நினைந்திருத்தல். இங்ஙனம் சிவவுணர்வில் தலைப்பட்டிருக்கும் உயிர் இறைவனது திருவடி ஞானத்தால் சிவமேபெறுந் திருவுடையதாகத் திகழுந்திறத்தினை,

> "திருவடி ஞானம் சிவமாக்குவிக்கும்" (திருமந்திரம் 1598)

எனவரும் தொடரில் திருமூலநாயனார் தெளிவாக விளக்கியுள்ளார்.

"தற்சேட்டைகெட நின்றதே சிவாநுபவம்" என்பதற்குப் பிரமாணம் தேவாரத்தில் "தன்னை மறந்தாள் தன்னாமங்கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன்

தாளே" என்பதும் திருவாசகத்திலும்.

"ஊன்கெட்டுயிர் கெட்டுணர்வு கெட்டென் உள்ளமும் போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ"

என்பதும் கண்டு கொள்க" எனச் சிவப்பிரகாசவுரையில் மதுரைச் சிவப்பிரகாசர் கூறும் விளக்கம் இங்கு உளங் கொளத் தக்கதாகும்.

இறைவனது திருவடியாகிய திருவருளே சிவஞான மாகும் என்பது, "சிக்கல் வெண்ணெய்ப் பெருமானடி, ஞானமாக நினைவார் வினையாயின நையுமே" எனவரும் ஆளுடைய பிள்ளையார்வாய்மொழியால் இனிது புலனாகும். இத்தகைய சிவஞானத்துள்ளே தம் அறிவானது அடங்கிச் சிவத்தோடு இரண்டறக் கலந்து காணும் இக்காட்சியினையே உபநிடதங்கள் 'சோகம் பாவனை' எனவும் சிவாகமமாகிய சித்தாந்த மாமறைகள் 'சிவோகம்பாவனை' எனவும் கூறுவன. இந்நுட்பம்,

"மன்னிய சோகமாம் மாமறையாளர்தம்
சென்னியதான சிவோகமாம் ஈதென்ன
அன்னது சித்தாந்த மாமறை ஆய்பொருள்
துன்னிய ஆகம நூலெனத் தோன்றுமே" (2403)

எனவரும் திருமந்திரத்தாற் புலனாம்.

இறைவன்பாற் செலுத்த வேண்டிய அன்பினையும் அதனாற் பெறும் பேற்றினையும் இல்லையாகச் செய்து தம்மைப் பிணித்துள்ள பசுத்தன்மை பாசத்தன்மைகளை அறுத்து இறைவன் தன்திருவடிக் கண்ணே தம்மைப் பிரிவறச் சேர்த்துக் கொண்டதனையும் அங்ஙனம் தமக்குத் திருவடி நல்கியதே தம்மைச் சிவமாக்கியாண்டமையாதலையும்,

"பத்திமையும் பரிசுமிலாப் பசுபாசம் அறுத்தருளிப்
பித்தனிவன் எனஎன்னை யாக்குவித்துப் பேராமே
சித்தமெனுந் திண்கயிற்றால் திருப்பாதங் கட்டுவித்த
வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே"

(கண்

எனவும்,

"முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே"
(அச்சோப்பதிகம் 1)

எனவும் வரும் திருப்பாடல்களில் மாணிக்கவாசகப் பெருமான் தெளிவாகக் குறித்துள்ளார்.

ஆன்மா இங்ஙனம் சிவத்தோடு ஒன்றியியைந்து சிவமாகிய நிலையிலும் இறைவனுக்குரிய ஐந்தொழிலியற்றல் முதலிய தொழிலினைச் செய்யாததாய் அம்முத்தி நிலையிலும் இறைவனுக்கு அடிமையாய்ச் சிவாநுபவம் ஆகிய நுகர்ச்சி யொன்றிற்கேயுரியதாம் என்பது, 'சிவமாக்கி' என்ற அளவி லமையாது 'எனையாண்ட' என அடிகள் விதந்து கூறும் சொற்குறிப்பால் இனிது புலனாம்.

"உம்பர்பிரான் உற்பத்தியாதிகளுக்குரியன்
உயிர்தானும் சிவாநுபவம் ஒன்றினுக்குமுரித்தே"
(சித்தியார் சுபக். 319)

எனவரும் அருணந்தி சிவாசாரியார் வாய்மொழி இங்கு ஒப்புநோக்கியுணர்தற்குரியதாகும்.

வேந்தர் பெருமானாக விளங்கிய ஐயடிகள் காடவர் கோன் நாயனார் சிவபெருமான் எழுந்தருளிய திருத்தலங் களைப் பணிந்து ஒவ்வொரு வெண்பாவினாற் பரவிப் போற்றி யுள்ளார். அங்ஙனம் இறைவன் கோயில் கொண்டருளிய தலங்களைப் பரவிப் பாடிய இனிய தமிழ் வெண்பாக்களின் தொகுதியே க்ஷேத்திரத் திருவெண்பா என்னும் பனுவலாகும். மறவாத பேரன்பினால் இறைவனது திருவருள் ஞானத்தால் சிவானந்த அநுபூதியைத் தலைப்பட்ட மெய்யடியார்கள் சிவவேடத்தையும் திருக்கோயில்களையும் சிவனெனவே தெளிந்து வழிபடுவர் என்பதற்குச் சிவாலயங்களமைந்த திருத்தலங்களைப் பாடிப் பரவிய ஐயடிகள் காடவர்கோன் நாயனார் சிறந்த இலக்கியமாகத் திகழ்கின்றார்.

உலகு உடல் கரணம் நுகர்பொருள் என்பவற்றை உயிர்களுக்குத் தந்து அவற்றைப் பிறப்பித்தற்கு முன்னரே தனது இச்சையாற்கொண்ட அருளாகிய திருமேனியைக் கொண்டவன் இறைவனாதலின், முதுமைக்கு முதல்வனாக வுள்ளவன் அவனே. பழமையையுடைய நான்மறைகளை அருளிய முதல்வனாகிய அவன் எழுகடல்களையுந் துறைகளாகக் கொண்ட ஏழுலகங்களுக்குத் தலைவ னாயினும் கயிலை மலையின் உச்சியில் விரும்பி வீற்றிருக் கின்றான். தன்னால் தோற்றுவிக்கப்பெற்ற உலகத்தை இடமாகக் கொண்டு எழுந்தருளியிருப்பினும் இவ்வுலகங்க ளெல்லாந் தன்னால் தோற்றுவிக்கப்படுதற்கு முன் தான் எல்லாவுயிர்களிடத்தும் கொண்ட நடுவுநிலைமையோடு கூடிய திருவருளாகிய தொன்மை இயல்பினின்றும் சிறிதும் வழுவாது யாண்டும் எல்லாவுயிர்களின் அகத்தும் ஒப்ப வீற்றிருந்து அருள்புரிதலால் இறைவன் என்னும் காரணப் பெயரையுடையவன். தன்வயத்தனாதல் முதலிய எண்குணங் களைத் தனக்கேயுரிமையாகக் கொண்டமையால் எல்லார்க்கும் நல்லருள் சுரக்கும் ஈசனாகத் திகழ்பவன். தன்னை இடைவிடாது நினைந்து போற்றும் மெய்யடியா ருள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு விரும்பி வீற்றிருப்பவன். நஞ்சுடைய பாம்பினையும் அணிகலனாக அணிந்துள்ளவன். இவ்வாறு காலம் இடம் பொருள் ஆகிய எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்டு விளங்கும் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை இவ்வரம்புகட்கு உட்பட்டு வழங்குஞ் சொற்களால் சொல்லிப் போற்றுதல் நம்மனோர்க்கு இயலாது என்பது,

> "முறைவனை மூப்புக்கு நான்மறைக்கும் முதலேழ்கடற்குந்
> துறைவனைச் சூழ்கயிலாயச் சிலம்பனைத் தொன்மை
> குன்றா
> இறைவனை எண்குணத்தீசனையேத்தினர் சித்தந்தம்பால்
> உறைவனைப் பாம்பணையாம் பின்னையென்சொல்லி
> யோதுவதே" (பொன்வண்ணத். 53)

எனவரும் பொன்வண்ணத்தந்தாதியாற் புலனாம். சேரமான் பெருமாள் நாயனார் 'சொலற்கரிய சூழலாய் விளங்கும்

இறைவனது இயல்பினை இத்திருப்பாடலால் விளக்கிய திறம் நினைந்து போற்றத்தகுவதாகும். இறைவன் தன்னை அன்பினால் நினைந்து போற்றும் மெய்யடியார்க்கு அருள்செய்தல் கருதி அவரவர் விரும்பிப் போற்றும் பல்வேறு திருவுருவங்கொண்டு தோன்றியருள்புரிவன் என்பதும், இங்ஙனம் பலவேறு திருவுருவங்களையுடையனாயினும் இறைவன் ஒருவனே என்பதும் உணர்த்துவார்,

"உருவு பலகொண்டுணர்வரிதாய் நிற்கும் ஒருவன்" (கைலைபாதி) என்றார் நக்கீரதேவர். 'தான் ஒருவனுமே பலவாகி நின்றவா' எனவரும் திருவாசகம் இங்கு நினைவுகூரத் தகுவதாகும்.

சொல்லும் பொருளும் போலவும் உடலும் உயிரும் போலவும் மலரும் மணமும் போலவும் எல்லாப் பொருள்களிலும் அத்துவிதமாய்க் கலந்து விளங்குகின்றான் என்பதும், எனினும் மக்கள் தம் ஐம்புலன்களாற் பற்றியுணர்தற்குரிய நிலையின்றி ஒன்றினுந் தோய்வின்றிப் புலனுணர்வுக்கு அப்பாற்பட்டுள்ளான் என்பதும் ஆகிய உண்மையினை,

"உரையும் பொருளும் உடலும் உயிரும்
விரையும் மலரும்போல் விம்மிப் - புரையின்றிச்
சென்றவா றோங்குந் திருக்கயிலை யெம்பெருமான்
நின்றவா றெங்கும் நிறைந்து" (கைலைபாதி)

எனவும்,

"நிறைந்தெங்கும் நீயேயாய் நின்றாலும் ஒன்றின்
மறைந்தைம்புலன் காணவாராய்" (கைலைபாதி)

எனவும் நக்கீரதேவர் விரித்துக் கூறியுள்ளார். ஒருபற்றும் அற்று அருவாய்த்தானே நிற்குந்தத்துவங்கடந்த பொருளாகிய இறைவனை,

"உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமல
ரெழுதருநாற்றம் போற்
பற்றலாவதோர் நிலையிலாப் பரம்பொருள்"

என மணிவாசகப் பெருமான் உணர்ந்து போற்றிய குறிப்பு மேற்குறித்த 'விரையும் மலரும் போல் விம்மி' என்ற தொடரில் இடம்பெற்றுள்ளமை காணலாம்.

பரணதேவநாயனார் பாடிய சிவபெருமான் திருவந்தாதியில், 'தத்துவத்தின் உட்பொருள்' எனவும், 'பெண் ஆண் அலியென்று பேச்சுக்கடந்த பெருவெளி' எனவும், 'சொல்லாயம் இன்றித் தூநெறிக்கட், சொல்லாய்ப் பரந்த சுடரொளி' எனவும், 'தாமேயவாறு சமய முதற் பொருளுந் - தாமேயவாறு தழைக்கின்றார்' எனவும், 'உருவு பல கொண்டொருவராய் நின்றார் - உருவு பலவாம் ஒருவர்' எனவும் வரும் தொடர்கள் முழுமுதற்பொருளாகிய இறை யியல்பினைத் தெளிவாக விளக்குவனவாகும்.

தமிழகத்துத் தோன்றி வழங்கும் தெய்வ வழிபாடுகள் எல்லாவற்றையும் தனக்கு அங்கமாகக் கொண்டு அவை யெல்லாவற்றோடும் தொடர்புடையதாய் மக்கள் அனைவர்க்கும் பொதுவாக விளங்குவது சிவ வழிபாடு என்பதனை,

> "வேந்துக்கமாக்கடற் சூரன்முன்னாள்பட வென்றிதந்த
> சேந்தற்குத்தாதை, இவ்வைய மளந்த தெய்வத்திகிரி
> ஏந்தற்கு மைத்துனத்தோழன் இன்றேன்மொழி வள்ளி
> யென்னும்
> கூந்தற் கொடிச்சிதன் மாமன்வெம்மால் விடைக்கொற்
> றவனே"

எனவும்,

> "கொற்றத் துப்பின் ஒற்றை யீன்ற
> துணங்கையஞ் செல்வத் தணங்கு தருமுதுகாட்டுப்
> பேய்முதிர் ஆயத்துப் பிணவின்கொழுந"

எனவும் வரும் சிவபெருமான் திருமும்மணிக்கோவைப் பாடல்களில் இளம்பெருமானடிகள் விளக்கியுள்ளமை இங்குக் குறிப்பிடத்தகுவதாகும்.

ஒலிக்குங் கடலிடத்தே நுரையும் அலையும்

சுழற்சியும் எல்லையற்ற நீர்த் திவலைகளும் பெருத்தும் சிறுத்தும் எண்ணிலவாய்த் தோன்றிமீளவும் அக்கடலிடத்தே அடங்குமாறு போன்று, இயங்குவன நிற்பனவாகிய உலகத்தொகுதி யனைத்தும் இறைவனிடத்தே தோன்றி மீளவும் அவனிடத்தே ஒடுங்குவன எனவும், தான் ஒன்றினுந் தோன்றாத; ஒன்றினும் ஒடுங்காத தனிமுதல்வனாகத் திகழ்வோன் இறைவன் எனவும் விளக்கப் போந்த திருவெண் காட்டடிகள்,

> "நுரையுந் திரையும் நொப்புறு கொட்பும்
> வரையில் சீகர வாரியும் குரைகடற்
> பெருத்துஞ் சிறத்தும் பிறங்குவ தோன்றி
> எண்ணில வாகி யிருங்கட லடங்குந்
> தன்மை போலச் சராசர மனைத்தும்
> நின்னிடைத் தோன்றி நின்னிடைய டங்கும்நீ
> ஒன்றினுந் தோன்றாய் ஒன்றினும் அடங்காய்"

என அம்பலத்தாடும் உம்பர் நாயகனைப் பரவிப் போற்றுகின்றார். உலகனைத்தும் இறைவன்பால் தோன்றி ஒடுங்குவன என்னும் கருத்தமைந்த இத்தொடரை ஆதாரமாகக் காட்டி உலகத் தொகுதிக்கு முதற்காரணமாகத் திகழ்வோன் இறைவனே என்பது திருவெண்காட்டடிகள் கருத்தெனக் கருதுவாரும் உளர். அன்னோர் கருதுமாறு இவ்வுலகத்தொகுதி இறைவனை முதற்காரணமாகக் கொண்டு தோன்றியிருக்குமானால் முதற்காரணத்தோடு ஒத்தகுணங்களே அதன் காரியத்திலும் உள்ளனவாதல் வேண்டும் என்னும் நியதிபற்றி இறைவனாகிய சித்துப் பொருளை முதற்காரணமாகக் கொண்டு தோன்றிய காரியமாகிய உலகமும் சித்துப் பொருளின் குணமாகிய அறிவினையுடையதாதல் வேண்டும். உலகம் அறிவற்ற சடப்பொருள் என்பது யாவர்க்கும் உடன்பாடாதலின், அறிவில் பொருளாகிய அது அறிவுடைப்பொருளாகிய இறைவனை முதற்காரணமாகக் கொண்டு தோன்றியதெனக் கூறுதல் பொருந்தாது, உலகத்தொகுதி மாயையாகிய உள்பொருளிலிருந்து இறைவனால் தோற்றுவிக்கப்பட்டு விரிந்து மீண்டும் அதன்கண் ஒடுங்கும் என்பதே திருமூல நாயனார் முதலிய திருமுறையாசிரியர்களின் துணிபாகும்.

நீரில் தோன்றி மீளவும் நீரில் ஒடுங்கும் நுரை, அலை, சுழல் முதலியவற்றை நீர்க்கு இடமாகிய கடலிலே தோன்றி யொடுங்குதல் போல எனத் திருவெண்காட்டடிகள் உவமையாக எடுத்தாளுதலால், இயக்குவன நிற்பனவாகிய உலகத்தொகுதிக்கு இறைவன் ஆதாரமாவதன்றி முதற் காரணமாகான் என்பதே திருவெண்காட்டடிகள் கருத்தென்பது இனிது புலனாகும். "நின்னிடைத் தோன்றி நின்னிடை யொடுங்கும்" என்றது, மாயைக்குத் தாரகம் ஆதல் பற்றி யென்றுணர்க. அக்கருத்து உணர்ந்துகோடற்கன்றே நீரிற்றோன்றியொடுங்கும் நுரை முதலியவற்றை நீர்க்கிட மாகிய கடலிற்றோன்றியொடுங்குதல் போல் என்று உவமை கூறினாராகலின், ஆண்டு ஆசங்கைக்கு இடமின்மையுணர்க (சிவஞான போதப் பேருரை, ஏழாம் சூத்திரம் இரண்டாம் அதிகரணம்) எனச் சிவஞான சுவாமிகள் இத்தொடர்ப் பொருளைத் தெளிவுபடுத்தினமை இங்கு நினைத்தற் குரியதாகும்.

இறைவனது திருவருளாகிய கண்ணின் உதவியைப் பெறுதற்கு முன், இல்லன உளவாய், உள்ளன காணாது தாம் அறியாமையாகிய இருளிலகப்பட்டு அல்லற்பட்ட தன்மை யையும், திருவருளாகிய ஞானநாட்டம் பெற்ற பின்னர் அசத்தாகிய உலகத்தொகுதி இல்லையாகிமறைய, இறைவனாகிய மெய்ப்பொருள் எங்குமாய் விளங்கித் தோன்றிய தன்மையினையும் திருக்கழுமல மும்மணிக் கோவையின் பத்தாம் பாடலில் திருவெண்காட்டடிகள் தெளிவாக விளக்கியுள்ளமை காணலாம்.

"இடைமருதினை இடமாகக் கொண்டு எழுந்தருளிய பெருமானே, அடியேன் பிறவிச் சுழலில் அகப்பட்டுத் தடுமாறும்போது யானுற்ற துன்பத்தினையும், என்னை யீன்றெடுக்கும் நிலையில் என்தாயுற்ற துன்பத்தினையும் உள்ளவாறு உணர்வோர் உயிர்க்குயிராகிய நின்னை யன்றியாருளர்? பெருகிய துன்பந்தருவதாகிய இப்பிறவிச் சுழலிற் பட்டு இனிப்பிறக்கும் வலியுடையேனல்லேன், நின்னை உறுதுணையாகப் பற்றிய வழிபடும் ஒருநெறியைத் தவிரப் பிறவிநோய் களைதற்குப் பிறிதொரு வழியும் இல்லை.

மீண்டுவாரா வழியருளும நின் திருவருள் நெறியில் ஒழுகுதற்கு விருப்பு வெறுப்பற்ற ஒருமை மனம் வேண்டும். ஐம்புலவேடர்களின் ஆணைவழிநின்று தானல்லாதவற்றைத் தானெனக் கருதும் மயக்க நிலையினையுடையது என்மனம். இம்மனத்தைக் கொண்டு நின்னை நினைந்து போற்றுதல் எங்ஙனம இயலும்? கல்லைத்தெப்பமாகக் கொண்டு கடலைக் கடக்க எண்ணிய பேதையர் என்னையன்றி வேறுயாருளர்? பிறவிப்பெருங்கடலை அடியேன் கடக்கவும் வேண்டும், அங்ஙனங்கடத்தற்கு உறுதுணையாக நின்னை நினைத்தலும் வேண்டும்." ஒரு நெறியில் நின்று நின்னை நினைந்து என இடை மருதீசனை நோக்கித் திருவெண் காட்டடிகள் வேண்டுவதாக அமைந்தது, திருவிடை மருதூர்மும்மணிக்கோவையின் நான்காம் பாடலாகும். இறைவனையுணர்ந்து போற்றுதற்கும் இறைவன் திருவருளே துணைபுரிதல் வேண்டும் என்னும் உண்மை இதனால் அறிவுறுத்தப்பெற்றமை காண்க.

எல்லாம் வல்ல முழு முதற்கடவுளாகச் சிவபெருமானை நினையாமலும் அம்முதல்வன் திருப்பெயராகிய திருவைந்தெழுத்தினை முறைப்படி ஓதாமலும், பச்சிலையும் நீருங்கொண்டு அம்முதல்வனை வணங்காமலும் வேறு யாராகவோ நினைக்கும் புறச் சமயத்தார் உள்ளத்திலும் இடை மருதீசன் பொன்னார் திருவடியே நண்ணி அருள் வழங்கும் என்பார்,

> "ஓராதேயஞ்செழுத்தும் உன்னாதே பச்சிலையும்
> நேராதே நீரும் நிரப்பாதே - யாராயோ
> எண்ணுவா ருள்ளத் திடைமருதர் பொற்பாதம்
> நண்ணுமா மென்னும்மது நாம்"

> "அன்றென்றும் ஆமென்றும் ஆறு சமயங்கள்
> ஒன்றொன்றோ டொவ்வா துரைத்தாலும் - என்றும்
> ஒருதனையே நோக்குவார் உள்ளத் திருக்கும்
> மருதனையே நோக்கி வரும்"

என்றார் திருவெண்காட்டடிகள். இப்பாடல்கள் எல்லாச் சமயத்தாராலும் வழிபடப்பெறும் பரம்பொருள் ஒன்றே

யென்னும் உண்மையினைத் தெளிவாக வற்புறுத்துதல் காணலாம்.

உடல்வன்மை படைத்தானொருவனால் முயன்று வீசி எறியப்பட்டு வானத்தின்கண் உயர்ந்து விரைந்து சென்றகல்லும், வலியில்லாதானொருவனால் மெதுவாக எறியப்பட்டுச் சென்ற கல்லும் நிலத்தின்கண்ணே ஒருசேர விழுதலைக் காண்கின்றோம். அதுபோலவே இறைவனது திருநாமமும் தன்னை ஓதுவாராது ஞானத்தின் வன்மை மென்மைகளால் மாறுபடாது தனக்கு ஆதாரமாகிய இறைவனருளால் ஈர்க்கப்பட்டு ஓதுவார் அனைவர்க்கும் ஒப்ப நலம்புரியும் சிறப்புடையது என்னும் உண்மையினை,

"வல்லா னொருவன் கைம்முயன் றெறியினும்
மாட்டா னொருவன் வாளா எறியினும்
நிலத்தின் வழாஅக் கல்லே போல்
நலத்தின் வழாஅர்நின் நாமம் நவின்றோரே"
(திருவிடைமருதூர் மும்மணிக்கோவை)

எனவரும் தொடரால் அடிகள் விளக்கிய திறம் வியந்து போற்றத்தக்கதாகும்.

எல்லாப் பொருள்களிலும் நீக்கமறக் கலந்து விளங்கும் இறைவனுக்கு உலகமே உருவமாதலின், அப்பேருருவினை விட்டு விலகி நிற்கும் பொருள்கள் உலகில் இல்லை. எனவே உலகப் பொருள்கள் யாவும் இறைவன் திருவுருவின் அவயவங்களாகவே கொள்ளத் தக்கன. திரிபுரம் எரித்தது, தக்கன் தலையரிந்தது, இந்திரனைத் தோள் நெரித்தது, பிரமன்தலையிலொன்றைக் கிள்ளியது, மன்மதனை எரித்தது, இராவணனை விரலால் அடர்த்தது, கூற்றுவனை யுதைத்தது முதலாக இறைவன் செய்த செயல்க ளெனப் போற்றப் பெறுவனவெல்லாம் இறைவன் உலகத்தை இயக்குங்கால் அவனது அருளினை ஏற்றுக் கொள்ளாதார் தம் வினைவயத்தால் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் எனக் கொள்வ தல்லது இறைவன்தானே தனக்குப் புகழுண்டாதல் வேண்டி விரும்பிச் செய்த வீரச்செயல்களென மெய்யுணர்வுடையோர் கொள்ளமாட்டார்கள் என்பதனை 'உருவாம் உலகுக்கு'

எனவரும் திருவொற்றியூர் ஒருபாவொருபது பாடலில் திருவெண்காட்டடிகள் தெளிவாக விளக்கியுள்ளார். இதனால் சிவபெருமானது உண்மையிலக்கணம் புலப்படுத்தப்பெற்றுள்ளமை அறியத்தகுவதாகும்.

மெய்ப்பொருளை யுணரமுற்பட்டு அறிவினால் உயர முயலும் நான்முகன் முதலாக ஆணவ இருளில் அகப்பட்டுப் பல்வேறு உடம்பினைப் பெற்றுழலும் ஏனைய உயிர்கள் ஈறாகவுள்ள எல்லாவுயிர்களும் உருவம், உணர்வு, பெருமை, ஆற்றல், செல்வம், வன்மை, செய்யும் தொழில்வகை, ஆகியவற்றால் வேறுபட்டனவாகி, வினைத்தொடக்கி னின்றும் நீங்காது ஒன்றையொன்றொவ்வாதனவாய்க் கூடி நிற்பது இவ்வுலகத் தொகுதி. இதன்கண் வாழும் உயிர்களின் ஒழுகலாறுகள், நிலைபெற்ற பெருங்கடலுள் உயர்ந்து தோன்றும் அலைகளைப் போன்று இறைவனாகிய முழுமுதற் பொருளை ஆதாரமாகக் கொண்டு தோன்றி, அப் பொருளினது வியாபகத்திடையே வளர்ந்து விரிந்தும் ஒடுங்கியும் இடம்பெயர்ந்தும் கலந்தும் ஒன்றிலும் தோய்வின்றி விளங்கும் அம்முதல்வனது இயல்பினை விளக்கி நிற்பன. இங்ஙனம் இறைவனது வியாபகத்துள்ளே இவ்வுலகந் தோன்றி நின்றொடுங்கித் தொழிற்படும் இயல்பினை இறைவனது திருவருள் ஞானம்பெற்ற பெரியோர்கள் அறிவதல்லது திருவருள் பெறாத ஏனையோர் அறிதல் இயலாது என்னும் உண்மையினை விரித்துரைப்பது 'பொருளுணர்ந்தோங்கிய' எனவரும் ஒருபாவொருபதின் ஐந்தாந்திருப்பாடலாகும்.

சிவபெருமானது திருக்கோலத்தில் அமைந்துள்ள தத்துவவுண்மைகளைப் புலப்படுத்தும் முறையில் அமைந்தது, திருவொற்றியூர் ஒருபாவொருபதில்,

"தூமதி சடைமிசை வைத்தது தூமதி
ஆமதி யானென அமைத்தவாறே
அறனுருவாகிய ஆனேறேறுதல்
இறைவன்யானென இயற்றுமாறே
அது அவள் அவனென நின்றமை யார்க்கும்
பொதுநிலை யானென வுணர்த்திய பொருளே

முக்கணன் என்பது முத்தீவேள்வியில்
தொக்க தென்னிடையென்பதோர் சுருக்கே
வேதமான்மறி யேந்துதல் மற்றதன்
நாதன் நானென நவிற்றுமாறே
மூவிலையொருதாட் சூல மேந்துதல்
மூவரும் யானென மொழிந்தவாறே
எண்வகை மூர்த்தி என்ட் திவ்வுலகினில்
உண்மையா னென உணர்த்தியவாறே"

எனவரும் ஆறாம் பாடலாகும். திருவெண்காட்டடிகள் இயற்றிய பனுவல்களில் அமைந்த பாடல்கள் யாவும் முன்னைத் திருமுறையாசிரியர்கள் அருளிய அருள் நூல்களை அடியொற்றியனவாய் சைவ சித்தாந்த வுண்மை களைத் தெளிய விளக்குவனவாக அமைந்துள்ளமை இங்குச் சிறப்பாகக் குறிக்கத்தகுவதாகும்.

திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார் திருவருள் பெற்ற நம்பியாண்டார் நம்பிகள் மூத்தபிள்ளையாரைக் குறித்து முதன்முதற் பாடிய இரட்டை மணிமாலையின் முதற்செய்யுள்

"என்னை நினைந்தடிமை கொண்டென் இடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான் - புன்னை
விரசுமகிழ் சோலை வியனாரை யூர்முக்கண்
அரசுமகிழ் அத்திமுகத் தான்"

என்பதாகும். இதன்கண் இறைவன் உயிர்கள் தன்னை நினையுமாறு நினைந்தாலன்றி அவ்வுயிர்கள் அம்முதல்வனை நினைக்குந் திறம்பெறமாட்டா என்னும் உண்மை வலியுறுத்தப் பெற்றுள்ளமை காணலாம். 'தன்னைமுன்னம் நினைக்கத் தருவான்' எனவரும் தேவாரத் தொடர் இங்கு ஒப்புநோக்கத்தக்கதாகும்.

உயிரையின்றி யமையாதகண், ஓர் உருவத்தைக் காணுங்கால், உயிரானது கண்ணுடன் பிரிப்பின்றிக் கலந்து நின்று, அவ்வுருவத்தைக் கண்ணுக்குக் காட்டித் தானும் உடனிருந்து காணுமாறுபோல, இறைவனை யின்றியமையாத

உயிரும், ஒருபொருளை அறியுங்கால் இறைவனது பேரறிவானது, உயிரறிவோடு பிரிப்பின்றிக் கலந்து நின்று அப்பொருளை உயிர்க்கு அறிவித்துத் தானும் அதனோடு உடனிருந்து அறிந்து உதவும்.

இங்ஙனம் இறைவன் உயிர்கட்குச் செய்யும் உதவி, உயிர்கள் பாசத்தாற் பிணிக்கப்பட்டுள்ள கட்டுநிலையிலும் பாசம் நீங்கி இன்புறும் முத்தி நிலையிலும் ஒப்ப நிகழும் என்பர். தீயானது ஒருபொருளில் தங்கிநின்று சுட்டு ஒன்று வித்தலாகிய தன் தொழிலை நிகழ்த்துமாறுபோல, இறைவனும் ஆன்மாக்களிடத்துப் பிரிப்பின்றித் தங்கி நின்றே அவற்றின் பாசங்களை அகற்றி அருள்புரிதலாகிய தன் தொழிலை நிகழ்த்துவன். இவ்வாறு உயிர்க்குயிராய் உடனின்று உதவிபுரியும் இறைவனது பெருங்கருணைத் திறத்தை யுணர்ந்து தம் செயலெல்லாவற்றையும் கைவிட்டு இறைவனை இடைவிடாதெண்ணி அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யாராகிய திருமாளிகைத்தேவர், உயிர்கட்குக் கருணையால் உபகரித்துவரும் இறைவனது உரிமையை நோக்குந்தோறும் அம்முதல்வன்பால் வைத்துள்ள பேரன்பு அடங்காது மீதூர்தலின் அப்பேரன்பே தானாக விளங்கித்தோன்றும் பேரானந்தத்தை நுகர்ந்து மகிழும் நிலையில் 'ஒளிவளர்விளக்கே' யெனத்தொடங்கும் திருவிசைப்பாத் திருப்பதிகத்தை உளங்குளிர்ந்து பாடியுள்ளார்.

இறைவனது பொருள்சேர் புகழை வாயாரப் பாடிப் போற்றுதற்கும் மனத்தால் நினைத்தற்கும் அம்முதல்வனுக்குத் தொண்டுபட்டு வணங்குதற்கும் அவனோடு ஒன்றி இன்புறுதற்கும் அவ்விறைவனது காட்டும் உபகாரமேயன்றி அம்முதல்வன் உயிரோடு ஒன்றித்துநின்று காணும் உபகாரமும் இன்றியமையாதது என்னும் இவ்வுண்மையை வற்புறுத்துவது 'ஒளிவளர்விளக்கே' எனத் தொடங்கும் இத் திருவிசைப்பாத் திருப்பதிகம் ஆகும்.

"காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே" (சிவ. சூ 11)

எனவரும் சிவஞானபோதச் சிற்றுரையுள், "உயிர் ஒன்றனை யறிதல், முதல்வன் உடனின்று அறிதலையின்றி அறிவித்தல் மாத்திரையான் அமையாது என்பது, 'தொண்டனேன் நினையுமா நினையே', 'விரும்புமா விரும்பே', 'தொடருமா தொடரே', 'நுகருமா நுகரே' என்றிவ்வாறு முத்திபற்றி யோதிய திருவாக்குக்களானும் அறிக" என மாதவச் சிவஞான முனிவர் குறித்துள்ளமை இங்கு உணர்ந்து இன்புறத் தகுவதாகும்.

'இணங்கிலாவீசன்' என்னும் முதற்குறிப்புடைய திருவிசைப்பாத் திருப்பதிகத்தில், சிவநெறியையும் சிவனடியார்களையும் இகழ்ந்துரைக்கும் பேய்மக்களைத் தம் கண்கள் காணா என்றும் வாய் அவரோடு உரையாடாது என்றும் திருமாளிகைத்தேவர் கூறியுள்ளார்.

"மறப்பித்துதம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை - அறப்பித்துப்
பத்தரினத்தாய்ப் பரனுணர்வினாலுணரும்
மெய்த்தவரை மேவாவினை"

(சிவஞானபோதம் - வெண்பா 75)

என மெய்கண்ட தேவர் அறிவுறுத்தருளிய சிவபத்தர் இலக்கணம் திருமாளிகைத் தேவர் அருளிய இத்திரு விசைப்பாப் பதிகத்தில் இடம்பெற்றுள்ளமை காண்க.

காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின காமுகரை வசீகரித்து இன்பஞ் செய்யுமாறுபோல அடியார் திருமேனியிற் காணப்படும் சிவசாதனமாகிய திருவெண்ணீற்றுத் திருவேடம் மெய்யுணர் வுடையாரை வசீகரித்து இன்பஞ்செய்யும் என்பதனை,

"சேலுங்கயலுந்திளைக்குங்கண்ணாரிளங்
கொங்கையிற் செங்குங்குமம்
போலும் பொடியணிமார்பிலங்குமென்று
புண்ணியர் போற்றிசைப்ப" (திருப்பல்லாண்டு)

எனவரும் திருப்பல்லாண்டில் சேந்தனார் குறித்துள்ளார்.

"காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடைசாந்து அணிகலன் முதலாயின காமுகரை வசீகரித்து இன்பஞ் செய்யுமாறு போல மெய்யுணர்வுடையாரைக் காட்சி மாத்திரையின் வசீகரித்து இன்பஞ்செய்தல் பற்றித் திருவேடத்தையும் சிவாலயத்தையும் என்று உபசரித்தார். அது 'சேலுங் கயலுந் திளைக்குங் கண்ணாரிளங் கொங்கையிற் செங் குங்குமம், போலும்பொடியணிமார்பிலங்குமென்று புண்ணியர் போற்றிசைப்ப' என்னுந் திருவாக்கானும்அறிக" (சிவஞானபோதச் சிற்றுரை, சூ. 12) எனச் சிவஞானமுனிவர் கூறும் விளக்கம் இங்கு எண்ணத்தகுவதாகும்.

தில்லைச்சிற்றம்பலவர் திருவருளால் 'உலகெலாம்' எனத் தோன்றிய அருள் மொழியினை முதலாகக் கொண்டு அருள்மொழித்தேவராகிய சேக்கிழாரடிகளால் அருளிச் செய்யப்பெற்றது திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணமாகும். பன்னிரண்டாந்திருமுறையாகிய இது,

"உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்"

என்னும் திருப்பாடலை முதலாகக் கொண்டு தொடங்குகின்றது. 'உயிர்கள் எல்லாவற்றாலும் மனத்தால் உணர்தற்கும் வாய்மொழிகளால் ஓதுதற்கும் அரியவனும், பிறைத்திங்கள் உலவுதற் கிடனாகிய கங்கை நீர் நிறைந்த சடையுடன் பொருந்திய திருமேனியையுடையவனும் அளவில்லாத பேரொளிப் பிழம்பாகத் திகழ்பவனும் ஞானமயமான தில்லைச் சிற்றம்பலத்திலே அருட்கூத்தியற்றுபவனும் ஆகிய இறைவனுடைய செந்தாமரை மலர்போலும் சிலம்பணிந்த திருவடியினை வாழ்த்தி வணங்குவாம்" என்பது இதன் பொருளாகும்

இச்செய்யுள் தெய்வவணக்கமும் செயப்படு பொருளும் எய்தவுரைக்குந் தற்சிறப்புப் பாயிரமாகவும் இந் நூலின்மங்கல வாழ்த்தாகவும் அமைந்துள்ளது. இதன்கண் 'உலகு எலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன், நிலவு உலாவிய

நீர்மலிவேணியன், அலகு இல்சோதியன் அம்பலத்து ஆடுவான்' என முழுமுதற்பொருளின் இலக்கணமாகிய பொருளியல்பு உரைத்தலும், 'மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்' என வாழ்த்தும் வணக்கமும் ஒருங்கு அமைந் திருத்தல் காணலாம். இங்கு 'உலகு' என்றது, உயிர்களை, உணர்தல் - மனத்தின் தொழில்; அஃது உயிரின் அறிவாகிய பசுஞானத்தினைக் குறித்தது. ஓதுதல் - வாக்கின் தொழில்; அது நூலறிவாகிய பாசஞானத்தினைக் குறித்தது. பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் உணர்தற்கு அரியவன் முழுமுதற்பொருளாகிய இறைவன் என்பது புலப்படுத்துவார், 'உலகு எலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்' என்றார் சேக்கிழார் நாயனார். இதனால் மாற்றமனங்கழிய நின்ற இறைவனது சொரூபலக்கணம் எனப்படும் உண்மையியல்பு உணர்த்தப்பட்டது.

வாக்குமனமிறந்த வான்கருணையாளனாகிய இறைவன் தன்னடியார்க்கு எளிவந்து அருள் புரியுங்கால் உருவத் திருமேனி தாங்கி எழுந்தருள்வன் என்பார் 'நிலவுலாவிய நீர்மலிவேணியன்' என்றார். அருமையில் எளிய அழகனாகிய அவன் எவ்வுயிர்க்கும் அருளுடையராய் வாழும் அறவோர் சிந்தையினையே கோயிலாகக் கொண்டு எழுந்தருளுவான் என்பார், 'அலகில் சோதியன்' என்றார். 'நினைப்பவர் மன்னங்கோயிலாகக் கொண்டவன்' எனவும், 'அந்தணர்தஞ்சிந்தையானை' எனவும், 'சிந்தைதனை மயக்கந் தீர்க்கும் ஏரொளியை' எனவும் 'தூண்டுசுடரனைய சோதி கண்டாய்' எனவும் வரும் அப்பர் அருள் மொழிகளும், 'ஏதுக்களாலும் எடுத்தமொழியாலு மிக்குச் சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி' என ஆளுடையபிள்ளையார் அருளுரையும், 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதி' எனவரும் திருவாதவூரடிகள் மணிவாசகமும் இங்கு நினைக்கத் தக்கனவாகும். அரியவன் என்றதனால் அருவமும், 'வேணியன்............அம்பலத்து ஆடுவான்' என்றதனால் உருவமும், 'அலகில்சோதியன்' என்றதனால் அருவுருவமும் என மூவகைத் திருமேனி களையும் ஒருங்குடையவன் இறைவன் எனப் புலப் படுத்தியவாறு,

திருத்தொண்டர்புராணத்தின் முதற்கண் உள்ள 'உலகெலாம்' எல்லாவுலகங்களிலும் வாழும் அவன் அவள் அதுவெனும் மன்னுயிர்த்தொகுதியைச் சுட்டி நின்றது. எனவே கடவுள்வாழ்த்தாக அமைந்த இத்திருப்பாடலில் கடவுள் உயிர் உலகு என்னும் முப்பொருள்களுள் உயிர்களின் உண்மையும் அவை உடம்புடன் உலவுதற்கிடனாகிய உலகினது உண்மையும் உடன் கூறினாராயிற்று. இறைவன் அருளிய 'உலகெலாம்' என்னும் இம்மறைமொழி 'அஞ்செழுத்து ஓதியேறினார் உய்ய உலகெலாம்' (பெரிய. சம்பந்தர் 216) என இந்நூலின் நடுவிலும், 'மன்றுளார் அடியாரவர் வான்புகழ், நின்றதெங்கும் நிலவியுலகெலாம்' (பெரிய. வெள்ளானை) என இந்நூலின் முடிவிலும் ஆசிரியரால் எடுத்தாளப் பெற்றுள்ளமை காணலாம்.

'அருமறை முதலில் நடுவினிற் கடையில் அன்பர்தஞ் சிந்தையில் அலர்ந்த, திருவளர்ஒளிசூழ் திருச்சிற்றம்பலம்' முன்தோன்றிய திருத்தொண்டர் புராணமாகிய இத் திருமுறையில் திருவைந்தெழுத்தின்பெருமையினையும் இறைவனது திருவருள் வண்ணமாகிய திருநீற்றின் சிறப்பினையும் சேக்கிழாரடிகள் ஆங்காங்கே குறித்துள்ளமை மனங்கொளத் தகுவதாகும்.

சைவசமயத்தில் இறைவனை யடைதற்குரிய வழிகளாகச் சரியை கிரியை யோகம் ஞானம் என நால்வகை நெறிகள் வகுக்கப் பெற்றுள்ளன. இந்நான்கினையும் ஏணிப் படிகளாகக் கொண்டு ஞான நெறியினைக் கடைப்பிடித் தொழுகும் சிவஞானிகளாகிய திருத்தொண்டர்கள் உலக மக்கள் உய்திபெறுதல் வேண்டி மேற்குறித்த நால்வகை நெறிகளுள் ஒன்றினைத் தமக்குச் சிறப்புடைய வாழ்க்கை நெறியாக மேற்கொண்டு வாழ்ந்து காட்டிய வரலாற்று நிகழ்ச்சிகளைச் சேக்கிழார் நாயனார் திருத்தொண்டர் புராணத்தில் விரித்துக் கூறியுள்ளார்.

"ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந்திரமாலை"
(பெரிய. திருமூலர் 26)

"நலஞ்சிறந்த ஞானயோகக் கிரியாசரியை யெலா
மலர்ந்த மொழித்திருமூலதேவர்" (பெரிய. திருமூலர் 28)

எனவரும் தொடர்களில் ஞானநெறியினை அடிப்படையாகக் கொண்டு நிகழும் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நால்வகை நெறிகளையும் குறித்துள்ளமை காண்க. இதனால் ஞானநெறியொன்றே ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என நான்காக வகுத்துரைக்கப்படும் என்பதும் உய்த்துணர வைத்தா ராயிற்று.

வேத சிவாகமங்களிலும், 'எனதுரையாக தனதுரை யாக' என்றபடி இறைவன் அருள்வழியடங்கி நின்ற திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், நம்பியாரூரர், திருவாதவூரடிகள் முதலிய சிவாநுபவச் செல்வர்கள் திருவாய்மலர்ந்தருளிய அருள்நூல்களாகிய திருமுறைகளிலும் நிரம்பிய பயிற்சியும் ஈடுபாடும் உடைய சேக்கிழார் நாயனார், வேத நெறி தழைத் தோங்க மிகு சைவத்துறை விளங்கத் தாம் இயற்றிய திருத் தொண்டர் புராணமாகிய செந்தமிழ்க் காப்பியத்தில் உலகியல் வேதநூலொழுக்கமாகிய வைதிக நெறியினையும், அதனினும் சிறப்புடையதாகத் தமிழ்ச் சான்றோர்களால் பேணி வளர்க்கப்பெற்று என்றும் நின்று நிலவும் பெருமை வாய்ந்த மெய்ந்நெறியாகிய சிவநெறியினையும் பொதுவும் சிறப்புமாகிய அந்நெறிகளில் வழுவாதொழுகிச் சிவபெருமான் திருவருளுக்குரியராகிய திருத்தொண்டர் களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளில் வைத்து இனிது விளக்கி யுள்ளார்.

தமிழகத்திற் சைவ சமயச் சான்றோர்களால் இறைவன் திருவருள் கொண்டு போற்றி வளர்க்கப்பெற்ற சைவ சித்தாந்தத் தத்துவ உண்மைகள் பல இத்திருத்தொண்டர் புராணத்தில் இலக்கியச் சுவையமைய நன்கு விளக்கப் பெற்றுள்ளமை காணலாம்.

கன்னிவேட்டைக்குச் சென்ற திண்ணனார் காளத்தி மலையினைக் கண்டு அம்மலைமேல் எழுந்தருளிய குடுமித் தேவரை வழிபடுதல் வேண்டுமென்னும் பெருவேட்கை யுடையராய் நாணனைத் துணையாகக் கொண்டு காளத்தி மலைமேல் ஏறிச் சென்ற அன்பின் திறத்தினை,

> "நாணனும் அன்பும் முன்பு நளிர்வரையேறத் தாமும்
> பேணுதத்துவங்கள் என்னும் பெருகு சோபானமேறி
> ஆணையாஞ் சிவத்தைச் சாரஅணைபவர் போல ஐயர்
> நீணிலை மலையையேறி நேர்படச் செல்லும் போதில்"
>
> (பெரிய. கண்ணப்ப .103)

எனவரும் பாடலில் ஆசிரியர் விளக்கியுள்ளார். "தம் தோழனாகிய நாணன் என்பவனும் தாம் குடுமித்தேவர்பால் வைத்த அன்பும் தமக்கு முன்னே குளிர்ச்சியுடைய மலையின் மேல் ஏறிச்செல்ல, உயிர்களைப் பேணிவளர்க்கும் தத்துவங்கள் என்னும் (அறிவு) பெருகும் படிகளை, அருளாகிய சத்தியுடன் பிரிவின்றியுள்ள சிவபரம் பொருளைச் சார அணைபவர்களாகிய சிவயோகிகளைப்போலத் திண்ணனாராகிய வேட்டுவத் தலைவர் நீண்ட நிலைமை யினையுடைய திருக்காளத்தி மலையின்மேல் ஏறிக் குடுமித் தேவரை நேர்படக் காணச்சென்றார்" என்ற செய்தி இச் செய்யுளிற் குறிக்கப்பெற்றது.

சுத்தம் அசுத்தம் என்னும் இருவகை மாயையி னின்றும் தோன்றிய நிலம் முதல் சிவம் ஈறாகவுள்ள தத்துவங்கள் முப்பத்தாறும், சகலநிலையில் உயிர்களின் அறிவு விழைவு செயல் என்பவற்றின் வளர்ச்சிக்குக் கருவியாய் அவ்வுயிரின் உணர்வு முதலியவற்றை வளர்த்தலின் 'பேணு தத்துவங்கள்' எனப்பட்டன. இவை எல்லாவுயிர்களுக்கும் போக நுகர்ச்சியைக் கொடுப்பனவாய் ஊழிக்காலம்வரை நிலைத்திருக்கும் உண்மைப்பொருள்களாதலின் தத்துவம் எனப் பெயர் பெற்றன. நிலமுதல் நாதமீறாகவுள்ள இத் தத்துவங்கள் அனைத்தையுங்கடந்து மேற்சென்று தத்துவங் கடந்த செம்பொருளாகிய இறைவனை அணைதற்கு இத் தத்துவங்கள் படிபோன்று மேன்மேல் விரிவுடையனவாக அமைதலின் 'தத்துவங்கள் என்னும் பெருகுசோபானம்' என்றார். சோபானம் - படி, சிவபரம் பொருளாகிய இறைவன் தனது அருளாகிய சத்தியுடன் நீக்கமின்றி நிற்றலால் சிவமும் சத்தியும் ஒருபொருளே என்பது உணர்த்துவார், 'ஆணையாம் சிவம்' என்றார். 'ஆணையின் நீக்கமின்றி நிற்குமன்றே' (சிவ. சூ. 2) எனவரும் சிவஞான போத

இரண்டாஞ் சூத்திரத்தொடர் மேற்குறித்த 'ஆணையாஞ் சிவத்தை' எனவரும் சேக்கிழார் வாய்மொழியை அடியொற்றி யமைந்ததாகும். புறப்பொருளை நோக்காது பேரறிவு மாத்திரமாய் நிற்கின்ற முழுமுதற்பொருளே சிவம் எனவும் அச்சிவம் உயிர்களுக்குப் பசுத்துவத்தை நீக்குவதிற் கொண்டுள்ள அருளே சத்தி எனவும் கூறப்படும். "தன்னை விளக்குவதூஉம் விடயங்களை விளக்குவதும் தானேயாகிய ஞாயிறு ஒன்று தானே விடயங்களை விளக்குழிக் கதிர் எனவும், தன்னை விளக்குழிக் கதிரோன் எனவும் தாதான்மியத்தால் இருதிறப்பட்டு இயைந்து நிற்கும் அது போலப் புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய்த் தன்னியல்பின் நிற்பதூஉம் புறப்பொருளை நோக்கி நின்றுணர்த்துவதூஉம் ஆகிய இரண்டியல்புடைய பேரறிவாகிய சைதன்னியம் ஒன்றே அங்ஙனம் புறப் பொருளை நோக்கி நிற்கும் நிலையிற் சத்தி எனவும், புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரமாய் நிற்கும் நிலையிற் சிவம் எனவும், தாதான்மியத்தான் இருதிறப்பட்டு இயைந்து நிற்கும் எனச் சிவஞானமுனிவர் கூறும் விளக்கம் இங்கு நோக்கத்தக்கதாகும். சிவயோகிகள் நிலமுதற் சிவமீறாகிய முப்பத்தாறு தத்துவங்களையும் படிமுறையானே ஏறிக்கடந்து சிவத்தை அணையுமாறு போலத் திண்ணனாரும் காளத்தி மலையிற் படிவழியே ஏறிச்சென்று குடுமித் தேவரைச் சார்ந்தார் எனச் சைவசித்தாந்தத் தத்துவ வுண்மையினை உவமையாகச் சேக்கிழார் எடுத்தாண்டுள்ள திறம் இங்கு ஒப்புநோக்கத் தகுவதாகும்.

ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களும் உயிர்களை அநாதியே பற்றியுள்ளன என்பதும், முற்றுணர்வும் வரம்பிலாற்றலும் பேரருளும் உடைய இறைவன் உயிர்களை அநாதியே பிணித்துள்ள மலப்பிணிப்பு நீங்க உயிர்களுக்கு உலகு உடல் கருவி நுகர்பொருள்கள் ஆகியவற்றைப் படைத்துக் கொடுத்து இவ்வுலகில் வாழ்வாங்கு வாழச் செய்து பாசப்பிணிப்பொழிந்து மீண்டும் பிறவாநெறியாகிய வீடுபேற்றினைத் தந்தருள்கின்றான் என்பதும், உயிர்கள் தம்மைப் பற்றியுள்ள பாசப்பிணிப்பு அகல அருளேயுருவாகிய ஈசனை அன்பினால் மறவாது வழிபடுதல் வேண்டுமென்பதும்

சைவ சித்தாந்த நூற்றுணிபாகும். இதனை,

"தொழுவார் தம் மும்மை
மாமலங்களற வீடருள்தில்லை மல்லலம் பதியின்"
(பெரிய. தடுத்தாட். 92)

எனவும்,

"தொல்லைவினை, ஆசுடைய மலமூன்றும் அணையவரும் பெரும்பிறவி
மாசுதனைவிடக் கழித்து" (பெரிய. திருக்குறிப்பு. 114)

எனவும்,

"மருள்பொழி மும்மலஞ் சிதைக்கும் வடிச்சூலம்"
(பெரிய. சிறுத்தொண்டர். 35)

எனவும் வரும் தொடர்களுள் ஆசிரியர் குறித்துள்ளார்.

மேற்குறித்த மும்மலங்களுடன் ஆணவமலத்துடன் கூடி நின்று அதனைக் கழலும் பக்குவமுடையதாகச் செய்யும் இறைவனது மறைப்புச் சத்தியாகிய திரோதமலத்தினையும் ஆன்மாக்களுக்குத் தனுகரணபுவன போகங்களாய்க் காரியப்படும் சுத்தமாயையின் திரட்சியாகிய சுத்த தத்துவங் களையும் கூட்டி மலம் ஐந்து எனப்பகுத்துரைக்கும் வழக்கும் உண்டென்பது,

"மலங்கள் ஐந்தாற் சுழல்வன் தயிரிற்பொரு மத்துறவே" (நீத்தல் விண்ணப்பம் 29) எனவரும் திருவாசகத் தொடரால் அறியப்படும்.

"தன்பரிசும் வினையிரண்டும் சாருமலம் மூன்றும் அற
அன்புப்பிழம்பாய்த் திரிவார்" (பெரிய. கண்ணப்பர் 154)

எனவும்,

"இருவினைப் பாசமும்மலக்கல் ஆர்த்தலின்
வருபவக்கடலில் வீழ்மாக்கள் ஏறிட
அருளுமெய் யஞ்செழுத் தரசையிக்கடல்
ஒருகல் மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ"
(பெரிய. திருநாவுக். 129)

எனவும் வரும் தொடர்களில் ஐவகை மலங்கள் குறிக்கப் பெற்றுள்ளமை உய்த்துணரத்தகுவதாகும்.

இருவினைகளைச் செய்கின்ற உயிர்களும் அவ்வுயிர் களாற் செய்யப்படும் நன்றுந் தீதுமாகிய வினைகளும், அவ்வினை காரணமாக உயிர்களைச் சேர்தற்குரிய இன்ப துன்பங்களாகிய நுகர்ச்சிகளும், உயிர்கள் செய்த வினைப்பயன்களைச் செய்த உயிர்களே நுகரும்படி நியமித்து நுகரச் செய்பவனாகிய இறைவனும் எனச் சைவசமயச் சான்றோர்களால் ஆராய்ந்து நிச்சயிக்கப்பட்ட பொருள்கள் நான்காகும். இவ்வுண்மையினை,

> "செய்வினையுஞ் செய்வானும் அதன்பயனுங்
> கொடுப்பானும்,
> மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள்
> எனக்கொண்டே
> இவ்வியல்பு சைவநெறியல்ல வற்றுக்கில்லையென
> உய்வகையாற் பொருள் சிவனென்றருளாலே
> உணர்ந்தறிந்தார்" (பெரிய. சாக்கிய. 5)

எனச் சாக்கியநாயனார் இறைவனருளால் உணர்ந்ததாகச் சேக்கிழார் அறிவுறுத்தியுள்ளார். அருண்மொழித்தேவர் சைவசமயத்தின் துணிபொருளாக அறிவுறுத்திய இப்பொருள் வகையினை,

> "செய்வானுஞ் செய்வினையும் சேர்பயனுஞ் சேர்ப்பானும்
> உய்வா னுளனென் றுணர்" (திருவருட்பயன் 43)

என உமாபதி சிவாசாரியார் எடுத்தாண்டுள்ளமை மனங் கொளத்தகுவதாகும். இதன்கண் 'செய்வான்' என்றது, உயிரினை. உயிர்களாற் செய்யப்படும் நன்றுந்தீதுமாகிய வினைகள், 'செய்வினையும்' எனப்பட்டது. 'சேர்பயன்' என்றது, தாம் செய்த நல்வினை தீவினைகள் காரணமாக உயிர்களைச் சேர்தற்குரிய இன்ப துன்பங்க ளாகிய நுகர்ச்சிகளை 'சேர்ப்பவன்' என்றது, உயிர்கள் செய்த இருவினைப் பயன்களைச் செய்த உயிர்களே நுகர்ந்து கழிக்கும்படி நியமித்து நுகரச் செய்பவனாகிய இறைவனை.

தாம் செய்த நல்வினை தீவினைகளின் பயனைத் தாமே அறிந்து எடுத்துக்கொண்டு நுகரும் உணர்வுவன்மையும் வினைப்பயன்களாகிய இன்ப துன்பங்களின் விருப்பு வெறுப்பற்ற தன்மையும் உயிர்களுக்கு இல்லை. செய்த வினைப்பயன்களைச் செய்த உயிர்களே நுகரும்படி சென்று சேரும் உணர்வு வினைக்கு இல்லை . எனவே உயிர்கள் செய்த வினைப்பயன்களை அவ்வவ்வுயிர்களே நுகர்ந்து கழிக்கும்படி வரையறுத்து நுகர்விப்பவன் இறைவன் என்பது சைவ சமயச் சான்றோர் துணிபாகும். உயிர்களுக்கு உலகு உடல் கருவி நுகர்பொருள்களைப் படைத்தளிப்பவன் இறைவன் ஆதலால் அம்முதல்வனே எல்லாப் பொருள் களையும் தனக்கு உடைமையாகக் கொண்டுள்ள உடையான் என்றும், உலகம் பொருள்கள் யாவும் அவனது உடைமை என்றும், உணர்வுடையனவாகிய உயிர்கள் ஆண்டவனாகிய அவனுக்கு அடிமை என்றும் உணர்ந்து அம்முதல்வனது திருவருள் வழி அடங்கி நடத்தலே மெய்யுணர்வுடையோர் செயலாகும். இதனை,

> "எப்பொருளும் ஆக்குவான் ஈசனேயெனு முணர்வும்
> அப்பொருள்தான் ஆளுடையான் அடியார்கள் எனுமறிவும்
> இப்படியால் இதுவன்றித் தம்மிசைவு கொண்டியலும்
> துப்புரவில்லார் துணிவு துகளாகச் சூழ்ந்தெழுந்தார்"
>
> (பெரிய. சம்பந்தர். 71)

எனவும்,

> "தம்மையுள்ள வாறறிந்தபின் சங்கரற் கடிமை
> மெய்ம்மையே செயும் விருப்புடன் மிக்கதோரன்பால்
> பொய்ம்மை நீங்கிய பொருளிதுவெனக்கொளும் பொற்பால்
> செம்மையேபுரி மனத்தினார் சிவநேசரென்பார்"
>
> (பெரிய. சம்பந்தர். 1085)

எனவும் வரும் திருப்பாடல்களில் சேக்கிழாரடிகள் தெளிவாக அறிவுறுத்தியுள்ளார். தம்மையுள்ளவாறறிந்தபின் என மேற்குறித்த பெரியபுராணச் செய்யுட்பொருளை அடியொற்றியமைந்தது,

> "தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
> எம்மையுடைமை யெமையிகழார் - தம்மை

உணரார் உணரார் உடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்"

எனவரும் சிவஞானபோத அவையடக்கச் செய்யுளாகும்.

உயிர்கட்கு இருவினையொப்பு உண்டாகிய நிலையில், ஆணவமலம் தனது ஆற்றல் தேய்தற்குரிய துணைக்காரணங்கள் எல்லாவற்றோடும் கூடுதலாகிய மலபரிபாகமும், மலபரிபாகம் காரணமாக அவ்வுயிரிடத்தே இறைவனது திருவருள் பதிதலாகிய சத்திநிபாதமும் உளவாகும். "ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்பும் ஆதல் இன்றிப் புண்ணியபாவம் இரண்டினும் அவற்றின் பயன்களினும் ஒப்ப உவர்ப்பு நிகழ்ந்து, விடுவோனது அறிவின்கண் அவ்விருவினையும் அவ்வாறு ஒப்ப நிகழ்தலே ஈண்டு இருவினையொப்பு என்பதற்குப் பொருள்" என்பர் சிவஞானமுனிவர். திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருக் கையினால் திருநீறுபூசப்பெற்ற கூன்பாண்டியன் முன்னை வினை நீங்கி இருவினையொப்பு உடையனாய் இறைவனை உள்ளவாறு அறியுந்தன்மையினைப் பெற்றான் என்பதனை,

"தென்னவன் மாறன்தானுஞ் சிரபுரத்தலைவர் தீண்டிப்
பொன்னவில் கொன்றையார் தந் திருநீறு பூசப்பெற்று
முன்னைவல் வினையும் நீங்கி முதல்வனையறியுந் தன்மை
துன்னினான் வினைகள் ஒத்துத்துலையென நிற்றலாலே"
(பெரிய. சம்பந்தர். 819)

எனவருஞ் செய்யுளில் சேக்கிழார் நாயனார் தெளிவாக விளக்கியுள்ளார்.

மலபரிபாகம் வருமளவும் மலத்திற்கு அநுகூலமாய் நின்று நடத்திய இறைவனது திரோதானசத்தி (மறைப்பாற்றல்) மலபரிபாகம் எய்தி நிலையில், கருணைமறமாகிய தனது செய்கைமாறிக் கருணையெனப்படும் முன்னைப் பராசத்தி யுருவாய் உயிர்கள் பாற்பதிதலே சத்திநிபாதம் எனப்படும். இறைவனது அருட்சத்தி பக்குவமுடைய உயிர்கள்பாற் பதிதலால் அவ்வுயிர்கள் பாசத்தொடர்பினின்றும் விலகி

இறைவனது திருவருளில் தோய்வன. இவ்வுண்மையினை,

> "திங்கள்சேர் சடையார்தம்மைச் சென்றவர் காணாமுன்னே
> அங்கணர் கருணைகூர்ந்த அருள்திரு நோக்கம் எய்தத்
> தங்கியபவத்தின் முன்னைச் சார்புவிட்டகல நீங்கிப்
> பொங்கிய ஒளியினீழல் பொருவிலன் புருவமானார்"
> (பெரிய. கண்ணப்பர். 104)

எனவும்,

> "அந்நிலையில் திருத்தோணி வீற்றிருந்தார் அருள்
> நோக்கால்
> முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க்கருள்
> புரிவான்
> பொன்மலை வல்லியுந்தாமும் பொருவிடைமேல்
> எழுந்தருளிச்
> சென்னியிளம் பிறைதிகழச் செழும்பொய்கை
> மருங்கணைந்தார்" (பெரிய. சம்பந்தர். 64)

எனவும் வரும் திருப்பாடல்களில் அருண்மொழித்தேவர் இனிது புலப்படுத்தியுள்ளார்.

தாள் தலை என்னும் இவ்விரு சொற்களும் புணருங்கால் நிலைமொழியீற்றில் நின்ற ளகரமும் வருமொழி முதலில் வந்த தகரமும் தம்மிற் பிரித்தறிய வொண்ணாதவாறு டகரமாகிய ஓரெழுத்தாக ஒன்றுபட்டு நிற்கும். அதுபோல ஆன்மாவும் சிவமும் அவை எனவும் தான் எனவும் வேறு பிரித்துணரவொண்ணாதவாறு அவையே தானேயாய்ப் பிரிவற ஒன்றாகிய நிலையில் ஆன்மாவின்கண் நிகழ்வதே சிவாநுபவம் ஆகும். இதனை அறிவுறுத்தும் முறையில் அமைந்தது,

> "தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்
> கூடலை நீ ஏகமெனக் கொள்" (74)

எனவரும் திருவருட்பயனாகும். இவ்விளக்கம்,

> "தங்கள் பெருமான் அடிநீழல்
> தலையாம் நிலைமை சார்வுற்றார்" (பெரிய. முருக. 13)

எனவரும் சேக்கிழார் வாய்மொழியினை அடியொற்றி யமைந்திருத்தல் காணலாம்.

ஆன்மா சிவத்தோடும் கூடும் நிலையில் ஒன்றாகி, ஆன்மாவென்னும் அப்பொருள் கெட்டழிவதுமில்லை, உயிரும் சிவமும் என இரண்டாகிப் பிரிந்து வேறுபடுவதும் இல்லை, இரண்டற்ற நிலையில் (அத்துவிதமாய்) நின்று அநுபவிக்கும் என்பதனை,

"ஒன்றாலும் ஒன்றா திரண்டாலும் ஓசையெழா
தென்றாலொன் றன்றிரண்டுமில்" (75)

எனவரும் திருவருட்பயனில் உமாபதி சிவம் இனிது விளக்கியுள்ளார். சைவ சித்தாந்தம் கூறும் முத்தி நிலை பற்றிய இவ்விளக்கம்,

"நண்ணரிய சிவானந்த ஞானவடிவேயாகி
அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்ட அரசமந்திருந்தார்"
(பெரிய. திருநாவுக். 427)

எனவும்,

"காதலியைக் கைப்பற்றிக் கொண்டுவலங் கொண்டருளித்
தீதகற்ற வந்தருளுந் திருஞான சம்பந்தர்
நாதனெழில் வளர்சோதி நண்ணியதனுட் புகுவார்
போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றி யுடனானார்"
(பெரிய. சம்பந்தர். 1253)

எனவும் அருண்மொழித்தேவர் கூறிய வீடுபேற்றியல்பினை விளக்கும் முறையில் அமைந்திருத்தல் காணலாம்.

இதுகாறும் எடுத்துக்காட்டியவற்றால் சைவத் திருமுறைகள் பன்னிரண்டினையும் சிவஞானபோதம் முதலிய மெய்கண்ட நூல்கள் பதினான்கினையும் ஒப்பு நோக்கி ஆராயுமிடத்து சிவஞானபோதம் முதலிய சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கும் பொதுவாக உலகப் பொதுமறையாகிய திருக்குறளையும் வேதசிவாகமக் கருத்துக்களையும் தழுவியனவாய்ச் சிறப்பாகச் சைவத்

திருமுறைகள் பன்னிரண்டினையும் மூல இலக்கியங்களாகக் கொண்டு அவற்றினின்றும் தெளிந்துணரப் பெற்ற தத்துவ வுண்மைகளை விரித்துரைக்கும் செந்தமிழ்த் தத்துவ நூல்களாகத் திகழ்கின்றமை இனிது புலனாகும்.





# தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 613 005

## 🕮 அண்மை வெளியீடுகள் (2002) 🕮

| | |
|---|---|
| பாரதி பற்றிய எதிர்கால ஆய்வு ரூ. | 20-00 |
| பாரதியின் கவித்துவம் | 20-00 |
| இரும்புத்தொழில் கலைச்சொல்லகராதி | 55-00 |
| சமூகவியல் மற்றும் மானிடவியல் கலைச்சொல் விளக்க அகராதி | 95-00 |
| தொழில் கலைச்சொல் அகராதி | 80-00 |
| மருத்துவக் கலைச்சொற்கள் | 80-00 |
| அருங்கலைச்சொல் அகரமுதலி | 600-00 |
| பெருஞ்சொல்லகராதி தொகுதி-4 | 250-00 |
| அம்மன் வழிபாட்டுச் சடங்குகளில் நாடகக் கூறுகள் | 110-00 |
| அறிவியல் களஞ்சியம் தொகுதி-12 | 500-00 |
| தம்மபதம் | 190-00 |
| உடற்கூறு - பகுதி 2 | 200-00 |
| இயந்திரவியல் இயந்திரப்பொறியியல் கலைச்சொற்கள் | 75-00 |
| மின்னியல் மற்றும் மின்னணுவியல் கலைச்சொற்கள் | 65-00 |
| திருமந்திரத்திற் காணும் சைவசமயக் கலைச்சொல் விளக்கம் | 80-00 |
| சைவ சித்தாந்த சாத்திர வரலாறு | 200-00 |
| சட்ட இயல் (மறுபதிப்பு) | 100-00 |
| வாழ்வியற் களஞ்சியம் -தொகுதி-3 (மறுபதிப்பு) | 700-00 |
| வாழ்வியற் களஞ்சியம் -தொகுதி-4 (மறுபதிப்பு) | 700-00 |
| தமிழில் பாலர்சபை நாடகங்கள் (மறுபதிப்பு) | 220-00 |
| கவிராச மார்க்கம் (தமிழாக்கம்) (மறுபதிப்பு) | 100-00 |
| தமிழ்நாட்டு மூலிகைகள் அறிவியல் ஆய்வு (மறுபதிப்பு) | 100-00 |
| பக்தி இலக்கியத்தில் சமுதாயப் பார்வை (மறுபதிப்பு) | 200-00 |
| பழந்தமிழகத்தில் இரும்புத் தொழில் (மறுபதிப்பு) | 120-00 |
| உயிரியல் கலைச்சொல் விளக்க அகராதி (மறுபதிப்பு) | 90-00 |

தொடர்பு முகவரி: இயக்குநர்(பொ.), பதிப்புத்துறை, ©04362 - 239221
தமிழ்ப் பல்கலைக்கழகம், (அரண்மனை வளாகம்), தஞ்சாவூர்-613 001.